# திருக்குறள் பரிமேலழகர் உரை



## அறத்துப்பால்

1. பாயிரவியல்



2. இல்லறவியல்

3.துறவறவியல்



4.ஊழியல்

# பொருட்பால்

1.அரசியல்

2.அங்கவியல்

3.ஒழிபியல்



## காமத்துப்பால்

1.களவியல் (ஏழு அதிகாரம்)

2.கற்பியல் (பதினெட்டு அதிகாரம்)



பார்க்க

# திருக்குறள் என்னும் முப்பால்

## பரிமேலழகர் உரை

## உரைச்சிறப்புப் பாயிரம்:

திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தங்
கருத்தமைதி தானே கருதி- விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனெனு
மன்னு முயர்நாமன் வந்து.

பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ- நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
றெரித்தவுரை யாமோ தெளி.

## நூல் உரைப்பாயிரம்

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்தமில் இன்பத்து அழிவில் வீடும், நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு.

அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. அவற்றுள் வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்.

அவற்றுள் அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்.

அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற் செல்வது. அது கடன்கோடன் முதற் பதினெட்டுப் பதத்ததாம்.

தண்டமாவது அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல்.

இவற்றுள் வழக்குந் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவதல்லது ஒழுக்கம் போல மக்களுயிர்க்கு உறுதி பயத்தற் சிறப்பிலவாகலானும், அவைதாம் நூலானேயன்றி உணர்வுமிகுதியானுந் தேயவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகள் ஒழித்து, எல்லார்க்கும் ஒத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்பு பற்றி இல்லறம் துறவறம் என இருவகை நிலையால் கூறப்பட்டது.

அவற்றுள் இல்லறமாவது, இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடும் செய்யப்படுவது ஆகலின், அதனை முதற்கண் கூறுவான் தொடங்கி,எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

# **1.** பாயிரவியல்



# **2.** இல்லறவியல்

## 3.துறவறவியல்



## 4.ஊழியல்

# திருக்குறள் பரிமேலழகர் உரை

# பிழைநீக்கிய மெய்ப்பதிப்பு

## அதிகாரம்: 01 கடவுள் வாழ்த்து

அதிகார முன்னுரை:

அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என அறிக. என்னை? சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டாகலான். அம்மூன்று பொருளையும் கூறலுற்றார்க்கு அம் மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினார் என உணர்க.

## திருக்குறள்: 01 (அகரமுதல)

அகர முதல எழுத்து எல்லாம் ஆதி

பகவன் முதற்றே உலகு.

தொடரமைப்பு: எழுத்து எல்லாம் அகர முதல, உலகு ஆதிபகவன் முதற்று.

பரிமேலழகர் உரை

இதன் பொருள்:

எழுத்து எல்லாம் அகர முதல = எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய முதலை உடையன;

உலகு ஆதி பகவன் முதற்று = அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலை உடைத்து.

பரிமேலழகர் உரை விளக்கம்:

இது தலைமை பற்றி வந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தான்அன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கை உணர்வான்அன்றி இயற்கை உணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க.

தமிழ் எழுத்துக்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி, 'எழுத்தெல்லாம்' என்றார்.

ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன் முடிபு.

உலகு என்றது, ஈண்டு உயிர்கள் மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின்,

'ஆதிபகவன் முதற்றே' என உலகின்மேல் வைத்துக்கூறினார். கூறினாரேனும்,உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க.

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது.

இப்பாட்டான் முதற்கடவுளது உண்மை கூறப்பட்டது.

# திருக்குறள்: 02 (கற்றதனால்)

கற்றதனால் ஆய பயன் என்கொல் வால் அறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.

## தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்.) கற்றதனால் ஆய பயன் என்கொல் = எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வி அறிவினாலாய பயன் யாது?

வால் அறிவன் நற்றாள் தொழாஅர் எனின் = மெய்யுணர்வினை உடையானது நல்ல தாள்களைத் தொழாராயின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

'எவன்' என்னும் வினாப்பெயர் 'என்' என்றாய் ஈண்டு இன்மை குறித்து நின்றது.

'கொல்' என்பது அசைநிலை.

பிறவிப்பிணிக்கு மருந்தாதலின் 'நற்றாள்' என்றார்.

ஆகமவறிவிற்குப் பயன் அவன் தாளைத் தொழுது பிறவியறுத்தல் என்பது இதனாற் கூறப்பட்டது.

## திருக்குறள்: 03 (மலர்மிசை)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (03) நிலம் மிசை நீடு வாழ்வார்.

### தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்.) மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார் = மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார்;
நிலமிசை நீடு வாழ்வார் = எல்லா உலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

அன்பான் நினைவாரது உள்ளக் கமலத்தின் கண்ணே அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், 'ஏகினான்' என இறந்த காலத்தாற் கூறினார்; என்னை?

"வாராக் காலத்து நிகழுங்காலத்து

மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள வென்மனார் புலவர்"[1] என்பது ஒத்தாகலின்.

இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர் பெயர்பற்றிப் பிறிதோர் கடவுட்கு ஏற்றுவாரும் உளர்.

சேர்தல்- இடைவிடாது நினைத்தல்.

1.தொல்காப்பியம்- வினையியல், 44.

# திருக்குறள் **04** **(**வேண்டுதல்**)**

வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க் வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
கியாண்டு மிடும்பை யில **(04)**
யாண்டும் இடும்பை இல.

## தொடரமைப்பு**:**

இதன்பொருள்

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு= ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியைச் சேர்ந்தார்க்கு;
யாண்டும் இடும்பை இல= எக்காலத்தும் பிறவித் துன்பங்கள் உளவாகா.

விளக்கம்

பிறவித்துன்பங்களாவன: தன்னைப்பற்றி வருவனவும், பிற

உயிர்களைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையான் வருந்துன்பங்கள். அடி சேர்ந்தார்க்கும் அவ்விரண்டும்[2] இன்மையின் அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின.

2. வேண்டுதலும் வேண்டாமையும்.

# திருக்குறள்: 05 (இருள்சேர்)

இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன் இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (05) பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு.

## தொடரமைப்பு:

### பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்.) இருள் சேர் இருவினையும் சேரா = மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை தீவினை என்னும் இரண்டுவினையும் உளவாகா;
இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு = இறைவனது மெய்மை சேர்ந்த புகழை விரும்பினார் இடத்து.

### பரிமேலழகர் உரை விளக்கம்:

இன்னதன்மைத்து என ஒருவராலும் கூறப்படாமையின் ' அவிச்சை' யை, இருள் என்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் 'இருவினையுஞ் சேரா' என்றும் கூறினார்.

இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையர் எனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே 'பொருள்சேர் புகழ்' எனப்பட்டது.
புரிதல்- எப்பொழுதும் சொல்லுதல்.

# திருக்குறள்:06 (பொறிவாயில்)

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்" **(06)**

பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்.

## தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை:

**(**இதன்பொருள்.**)** பொறி வாயில் ஐந்து அவித்தான் = மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகளை வழியாக உடைய ஐந்து அவாவினையும் அறுத்தானது;
பொய் தீர் ஒழுக்க நெறி நின்றார் = மெய்யான ஒழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார்;
நீடு வாழ்வார் = பிறப்பின்றி எக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கட் செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று.

ஒழுக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின், ஆண்டை ஆறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது, "கபிலரது பாட்டு" என்பது போல.

இவை நான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும், வாழ்த்தலும், அவன்நெறி நிற்றலும் செய்தார் வீடு பெறுவர் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 07 (தனக்குவமை)

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான் தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.( 0 7 )
மனக் கவலை மாற்றல் அரிது.

## தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் = ஒருவாற்றானும் தனக்கு நிகர்இல்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கல்லது;
மனக்கவலை மாற்றல் அரிது = மனத்தின்கண் நிகழும் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

"உறற்பால- தீண்டா விடுத லரிது" (நாலடியார்,109) என்றாற் போல ஈண்டு அருமை இன்மைமேல்

நின்றது.

தாள் சேராதார், பிறவிக்கு ஏதுவாகிய காம வெகுளி மயக்கங்களை மாற்ற மாட்டாமையின், பிறந்து அவற்றான் வரும் துன்பங்களுள் அழுந்துவர் என்பதாம்.

# திருக்குறள்: **08** (அறவாழி)

**"**அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்த லரிது**" (08)** பிற ஆழி நீந்தல் அரிது.

## தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை**:**

**(**இதன் பொருள்**)** அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் = அறக் கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது;
பிற ஆழி நீந்தல் அரிது = அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்**:**

அறம், பொருள், இன்பமென உடன் எண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் பிறவெனப்பட்டன.

பல்வேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்குவடிவாக உடையன் ஆதலின், 'அறவாழி அந்தணன்' என்றார். 'அறவாழி' என்பதைத் தருமசக்கரமாக்கி அதனையுடைய அந்தணன் என்று உரைப்பாரும் உளர்.

அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவர் ஆகலின், 'நீந்தலரிது' என்றார். இஃது ஏகதேச உருவகம்.

## திருக்குறள்: **09** (கோளில்)

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் கோள் இல் பொறியின் குணம் இலவே எண் குணத்தான்
றாளை வணங்காத் தலை."**(09)**
தாளை வணங்காத் தலை.

### தொடரமைப்பு:

பரிமேலழகர் உரை:

கோள் இல் பொறியின் குணம் இல = தத்தமக்கு ஏற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள் போலப் பயன் படுதலை உடையவல்ல;
எண்குணத்தான் தாளை வணங்காத் தலை = எண்வகைப்பட்ட குணங்களை உடையானது தாள்களை வணங்காத தலைகள்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

எண்குணங்களாவன: தன்வயத்தனாதல், தூயவுடம்பினன்ஆதல்,

இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும்உணர்தல், இயல்பாகவே பாசங்களின்நீங்குதல், பேரருள்உடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை எனஇவை. இவ்வாறு சைவ ஆகமத்துக் கூறப்பட்டது.

'அணிமா'வை முதலாக உடையன எனவும், 'கடையிலா அறிவை' முதலாக உடையன எனவும் உரைப்பாரும் உளர்.
காணாத கண் முதலியனபோல, வணங்காத தலைகள் பயனிலவெனத் தலைமேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், இனம் பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில என்பதூஉம் கொள்க.

இவை மூன்று பாட்டானும், அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலுஞ் செய்யாவழிப் படும்குற்றம் கூறப்பட்டது.

## திருக்குறள்: **10** (பிறவிப்)

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா: பிறவிப் பெரும் கடல் நீந்துவர் நீந்தார்
ரிறைவ னடிசேரா தார்: இறைவன் அடி சேராதார்.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) இறைவன் அடி (சேர்ந்தார்) பிறவிப் பெருங்கடல் நீந்துவர் = இறைவன் அடி என்னும் புணையைச்சேர்ந்தார் பிறவியாகிய பெரிய கடலை நீந்துவர்;
சேராதார் நீந்தார் = அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர்.

## தொடரமைப்பு:

பரிமேலழகர் உரைவிளக்கம்:

காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் 'பிறவிப்பெருங்கடல்' என்றார். 'சேர்ந்தார்' என்பது சொல்லெச்சம்.

உலகியல்பை நினையாது, இறைவன் அடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், அவ்வாறன்றி மாறி நினைப்பார்க்கு அஃது அறாமையும் ஆகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.

'தெய்வப்புலமைத் திருவள்ளுவர்' இயற்றிய திருக்குறள் அறத்துப்பால்
முதல் அதிகாரமாகிய 'கடவுள்வாழ்த்து'ம், 'பரிமேலழகர் உரை'யும் முற்றுப்பெற்றன.

# திருக்குறள் பரிமேலழகர் உரை

## பாயிரவியல்- அதிகாரம் 2.வான்சிறப்பு

அதிகார முன்னுரை:

அஃதாவது, அக்கடவுளது ஆணையான் உலகமும், அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும், நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## திருக்குறள்: 11 (வானின்று)

வானின் றுலகம் வழங்கி வருதலாற் வான் நின்று உலகம் வழங்கி வருதலால்

றானமிழ்த மென்றுணரற் பாற்று. தான் அமிழ்தம் என்று உணரற் பாற்று.

இதன் பொருள்:

வான் நின்று உலகம் வழங்கி வருதலால் = மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான்;

தான் அமிழ்தம் என்று உணரற்பாற்று = அம்மழைதான் உலகத்திற்கு அமிழ்தம் என்று உணரும் பான்மையை உடையது.

உரை விளக்கம்:

நிற்ப என்பது, நின்று எனத்திரிந்து நின்றது.

உலகம் என்றது ஈண்டு உயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது, பிறப்பு இடையறாமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப்பட்டு வருதல்.

அமிழ்தம் உண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை 'அமிழ்தம் என்று உணர்க' என்றார்.

# திருக்குறள்: 12 (துப்பார்க்கு)

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉமழை. துப்பு ஆயதூஉம் மழை.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி = உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி;
துப்பார்க்குத் துப்பு ஆயதூஉம் மழை = அவற்றை உண்கின்றார்க்குத் தானும் உணவாய் நிற்பதூஉம் மழை.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

தானும் உணவாதலாவது தண்ணீராய் உண்ணப்படுதல்.

சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃது ஒக்கும். இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கி வருதலுடையவாயின என்பதாம்.

## திருக்குறள்: **13** (விண்ணின்று)

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத் விண் இன்று பொய்ப்பின் விரி நீர் வியன் உலகத்து
துண்ணின் றுடற்றும் பசி." **(03)** உள் நின்று உடற்றும் பசி.

பரிமேலழகர் உரை**:**

**(**இதன் பொருள்**)** விண் இன்று பொய்ப்பின் = மழை வேண்டுங் காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின்;
விரிநீர் வியன் உலகத்துள் = கடலாற் சூழப்பட்ட அகன்ற உலகத்தின்கண்;
நின்று உடற்றும் பசி = நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

'

பரிமேலழகர் உரைவிளக்கம்**:**

கடலுடைத்தாயினும் அதனாற் பயனி்ல்லை என்பார் 'விரிநீர் வியனுலகத்'தென்றார்; உணவின்மையின் பசியான் உயிர்கள் இறக்கும் என்பதாம்.

## திருக்குறள்: 14 (ஏரினுழா)

"ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும் ஏரின் உழாஅர் உழவர் புயல் என்னும்
வாரி வளங்குன்றிக் கால்." **(04)** வாரி வளம் குன்றிக்கால்.

பரிமேலழகர் உரை:

உழவர் ஏரின் உழாஅர் = உழவர் ஏரான் உழுதலைச் செய்யார்; புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால் = மழை என்னும் வருவாய் தன்பயன் குன்றின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

'குன்றியக்கால்' என்பது குறைந்து நின்றது.

உணவின்மைக்குக் காரணம் கூறியவாறு.

## திருக்குறள்: 15 (கெடுப்பதூஉம்)

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை**(05)**
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) கெடுப்பதூஉம் = பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம்;
கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதூஉம் = அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப் பெய்து முன் கெடுத்தாற்போல எடுப்பதூஉம்;
எல்லாம் மழை = இவை எல்லாம் வல்லது மழை.

பரிமேலழகர் உரை விளக்கம்:

`மற்று` வினைமாற்றின்கண் வந்தது.

`ஆங்கு` என்பது மறுதலைத் தொழில் உவமத்தின்கண் வந்த உவமச்சொல்.

கேடும் ஆக்கமும் எய்துதற்கு உரியார் மக்கள் ஆதலின், `கெட்டார்க்கு` என்றார்.

`எல்லாம்` என்றது, அம்மக்கள் முயற்சி வேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கள் தாம் பலவாதல் நோக்கி.

வல்லது என்பது அவாய்நிலையான் வந்தது.

மழையினது ஆற்றல் கூறியவாறு.

# திருக்குறள்: 16 (விசும்பிற்)

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே விசும்பின்துளி வீழின் அல்லால் மற்று ஆங்கே
பசும்புற் றலைகாண் பரிது." பசும்புல்

தலை காண்பு அரிது.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்)விசும்பின் துளி வீழின் அல்லால் = மேகத்தின் துளி வீழின் காண்பதல்லது;
மற்று ஆங்கே பசும்புல் தலை காண்பு அரிது = வீழாதாயின், அப்பொழுதே பசும்புல்லினது தலையையும் காண்டல் அரிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

'விசும்பு' ஆகுபெயர்.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது.

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; ஓரறிவு உயிரும் இல்லை என்பதாம்.

## திருக்குறள்: 17 (நெடுங்கடலுந்)

"நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி நெடும் கடலும் தன் நீர்மை குன்றும் தடிந்து எழிலி
தானல்கா தாகி விடின்" **(07)**
தான் நல்காது ஆகி விடின்.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) நெடும் கடலும் தன் நீர்மை குன்றும் = அளவில்லாத கடலும் தன்னியல்பு குறையும்;

எழிலி தான் தடிந்து நல்காது ஆகி விடின் = மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட் பெய்யாது விடுமாயின்.

பரிமேலழகர் விளக்கம்:

உம்மை சிறப்பும்மை.

தன்னியல்பு குறைதாலாவது, நீர் வாழ் உயிர்கள் பிறவாமையும், மணிமுதலாயின படாமையும் ஆம்.

ஈண்டுக் 'குறைத்தல்' என்றது முகத்தலை. அது "கடல் குறை படுத்தநீர் கல் குறைபடவெறிந்து" (பரிபாடல்-20) என்பதானானும் அறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழை வேண்டும் என்பதாம்.

இவை ஏழு பாட்டானும் உலக நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.

# திருக்குறள்: 18 (சிறப்பொடு)

சிறப்பொடு பூசனை செல்லாது வானம் சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு." **(08)** வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது = தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவும் பூசையும் நடவாது?

வானம் வறக்குமேல் = மழை பெய்யாதாயின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

நைமித்திகத்தோடு கூடிய நித்தியம் என்றார் ஆகலின், 'செல்லாது' என்றார்.

உம்மை சிறப்பும்மை.

நித்தியத்தின் தாழ்வு தீரச் செய்யப்படுவது, நைமித்திகம் ஆதலின், அதனை முற்கூறினார்.

## திருக்குறள்: 19 (தானம்)

"தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம் தானம் தவம் இரண்டும் தங்கா வியன் உலகம்
வானம் வழங்கா தெனின்." **(09)** வானம் வழங்காது எனின்.

பரிமேலழகர் உரை:

(இதன்பொருள்) வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா = அகன்ற உலகின்கண் தானமும் தவமும் ஆகிய இரண்டு அறமும் உளவாகா;
வானம் வழங்காது எனின் = மழை பெய்யாதாயின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

'தான'மாவது, அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு

உவகையோடுங் கொடுத்தல்.

'தவ'மாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின.

பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின்மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன.

## திருக்குறள்: 20 (நீரின்றமையாது)

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும் நீர் இன்று அமையாது உலகு எனின் யார் யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு." **(10)** வான் இன்று அமையாது ஒழுக்கு.

'பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) யார்யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது = எவ்வகை மேம்பட்டார்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின்;
ஒழுக்கு வான் இன்று அமையாது = அந்நீர் இடையறாது ஒழுகும் ஒழுக்கும் வானையின்றி அமையாது.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

பொருள் இன்பங்களை உலகியல் என்றார், அவை இம்மைக்கண் ஆகலின்.

இடையறாது ஒழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல்.

நீர்இன்றி அமையாது உலகு என்பது, எல்லாரானும் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக்கும் வான் இன்று அமையாமை தெளியப்படுமென்பார் 'நீரின்றமையாதுலகு எனின்' என்றார்.

இதனை நீரையின்றி அமையாது உலகாயின், எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிரம்பாது என உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் அறம் பொருள் இன்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.

தெய்வப்புலமை திருவள்ளுவர் செய்த அறத்துப்பால் அதிகாரம் 'வான்சிறப்பும்' அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் முற்றும்.

# திருக்குறள் பரிமேலழகர் உரை

## மூன்றாவது அதிகாரம் நீத்தார் பெருமை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை:
அஃதாவது, முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வற முதற்பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவராகலின், இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள்: **21** (ஒழுக்கத்து)

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. **(01)** வேண்டும் பனுவல் துணிவு.
பரிமேலழகர் உரை:
**(**இதன் பொருள்**)** ஒழுக்கத்து நீத்தார் பெருமை = தத்தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை;
விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு = விழுமிய பொருள்கள்

பலவற்றுள்ளும் இதுவே விழுமிது எனவிரும்பும், நூல்களது துணிவு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

தமக்கு உரிய ஒழுக்கத்தின்கண்ணே நீன்று துறத்தலாவது, தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாது ஒழுக அறம் வளரும்; அறம் வளரப் பாவம் தேயும்; பாவந் தேய அறியாமை நீங்கும்; அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும், அழிதன்மாலையவாய இம்மை மறுமை இன்பங்களின் உவர்ப்பும், பிறவித்துன்பங்களும் தோன்றும்; அவை தோன்ற வீட்டின்கண் ஆசையுண்டாம்; அஃதுண்டாக, மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய 'எனது' என்பதும், அகப்பற்றாகிய 'யான்' என்பதும் விடும்; ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்து விடுதல் எனக் கொள்க.

பனுவல் எனப் பொதுப்படக் கூறியவதனான், ஒன்றையொன்று ஒவ்வாத சமயநூல்கள் எல்லாவற்றிற்கும் இஃது ஒத்த துணிவென்பது பெற்றாம்.

செய்தாரது துணிவு 'பனுவன்'மேல் ஏற்றப்பட்டது.

## திருக்குறள்: 22 (துறந்தார்)

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத் துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து

திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. **(02)** இறந்தாரை எண்ணிக் கொண்டற்று.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) துறந்தார் பெருமை துணைக் கூறின் = இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வளவு என்று எண்ணால் கூறி அறியலுறின், அளவுபடாமையான்;
வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டு அற்று = இவ்வுலகத்துப் பிறந்து இறந்தாரை எண்ணி இத்துணையார் என அறியலு◌ற்றாற் போலும்.
பரிமேலழகர் உரை விளக்கம்:

முடியாது என்பதாம். கொண்டால் என்னும் வினையெச்சம் கொண்டு எனத் திரிந்து நின்றது.

# திருக்குறள்: 23 (இருமைவகை)

இருமை வகை தெரிந்து
ஈண்டு அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு.

"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. **(03)**

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) இருமை வகை தெரிந்து = பிறப்பு வீடு என்னும் இரண்டனது துன்ப வின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்து அறிந்து;
ஈண்டு அறம் பூண்டார் பெருமை = அப்பிறப்பு அறுத்தற்கு

இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே;
உலகு பிறங்கிற்று = உலகின்கண் உயர்ந்தது.

பரிமேலழகர் உரை விளக்கம்:

"தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல 'இருமை' என்றது ஈண்டு எண்ணின்கண் நின்றது.

பிரிநிலை ஏகாரம் விகாரத்தால் தொக்கது.

இதனால், திகிரி உருட்டி உலகம் முழுதாண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது.

இவை மூன்று பாட்டானும், நீத்தார்பெருமையே எல்லாப் பெருமையினும் மிக்கது என்பது கூறப்பட்டது.

## திருக்குறள்: 24 (உரனென்னுந்)

உரன் என்னும் தோட்டியான்
ஓர் ஐந்தும் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கு
ஓர் வித்து.

"உரனென்னுந் தோட்டியானோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து." **(04)**

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் = திண்மை என்னும் தோட்டியால் பொறிகளாகிய யானை ஐந்தனையும் தத்தம் புலன்கள்மேற் செல்லாமற் காப்பான்; வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து = எல்லா நிலத்தினும் மிக்கது என்று சொல்லப்படும் வீட்டுநிலத்திற்கு ஓர் வித்தாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

இஃது ஏகதேச உருவகம்.

'திண்மை' ஈண்டு அறிவின் மேற்று.

அந்நிலத்திற் சென்று முளைத்தலின் 'வித்து' என்றார்; ஈண்டுப்பிறந்து இறந்து வரும் மகன்அல்லன் என்பதாம்.

# திருக்குறள்: 25 (ஐந்தவித்தான்)

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா // ஐந்து அவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
னிந்திரனே சாலுங் கரி. **(05)** // // இந்திரனே சாலும் கரி.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) ஐந்து அவித்தான் ஆற்றல் = புலன்களிற் செல்கின்ற அவா ஐந்தனையும் அடக்கினானது வலிக்கு;
அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி = அகன்ற வானத்துள்ளார் இறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று.

பரிமேலழகர் உரை விளக்கம்:

'ஐந்தும்' என்னும் முற்றும்மையும், 'ஆற்றற்கு' என்னும் நான்கன் உருபும் விகாரத்தால் தொக்கன.

தான் ஐந்தவியாது சாபம் எய்தி நின்று, அவித்தவன் ஆற்றல் உணர்த்தினான்ஆகலின் 'இந்திரனே சாலுங்கரி' என்றார்.

# திருக்குறள்: 26 (செயற்கரிய)

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் // // செயற்கு அரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். **(06)** / /// செயற்கு அரிய செய்கலாதார்.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) செயற்கரிய செய்வார் பெரியர் = ஒத்த பிறப்பினாராய மக்களுள் செய்தற்கு எளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செயவார் பெரியர்;
செயற்கரிய செய்கலாதார் சிறியர் = அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

செயற்கு எளியவாவன, மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலாயின.
செயற்கு அரியவாவன இயமம், நியமம் முதலாய எண்வகை யோக உறுப்புக்கள்.
நீரிற் பலகான் மூழ்கல் (புறப்பொருள் வெண்பா மாலை,

வாகைத்திணை, *14)* முதலாய "நாலிரு வழக்கிற் றாபத பக்கம்" என்பாரும் உளர்; அவை நியமத்துள்ளே அடங்கலின், நீத்தாரது பெருமைக்கு ஏலாமை அறிக.

# திருக்குறள்: 27 (சுவையொளி)

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் // // சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு." **(07)** // // வகை தெரிவான் கட்டே உலகு.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின் வகை = சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமும் என்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டையும்;
தெரிவான் கட்டே உலகு = ஆராய்வான் கண்ணதே உலகம்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

அவற்றின் கூறுபாடாவன பூதங்கட்கு முதலாகிய அவைதாம் ஐந்தும், அவற்றின் கண் தோன்றிய அப்பூதங்கள் ஐந்தும், அவற்றின் கூறாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆக இருபதுமாம்.

'வகைதெரிவான் கட்டு' என உடம்பொடுபுணர்ந்ததனால், தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றாம்.

தத்துவம் இருபத்தைந்தனையும் தெரிதலாவது, மூலப்பகுதி ஒன்றில் தோன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகாது எனவும், அதன்கண் தோன்றிய மானும், அதன்கண் தோன்றிய அகங்காரமும், அதன்கண் தோன்றிய தன்மாத்திரைகளும் ஆகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும், தங்கண் தோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலும் உடையவெனவும், அவற்றின்கண் தோன்றிய மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களுமாகிய பதினாறும் தங்கண் தோன்றுவன இன்மையின் விகுதியேயாவதல்லது பகுதியாகாவெனவும், புருடன் தான் ஒன்றில் தோன்றாமையானும் தன்கண் தோன்றுவன இன்மையானும், இரண்டும் அல்லவெனவும் சாங்கிய நூலுள் ஓதியவற்றான் ஆராய்தல்.

இவ்விருபத்தைந்துமல்லது உலகெனப் பிறிது ஒன்று இல்லையென உலகினது உண்மையறிதலின் அவனறிவின் கண்ணதாயிற்று.
இவை நான்கு பாட்டானும் பெருமைக்கு ஏது ஐந்தவித்தலும், யோகப்பயிற்சியும், தத்துவ உணர்வும் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: **28** (நிறைமொழி)

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து // // நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்." **(08)** / / / / மறை மொழி காட்டி விடும்.

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) நிறைமொழிமாந்தர் பெருமை = நிறைந்த மொழியினை உடைய துறந்தாரது பெருமையை;
நிலத்து மறைமொழி காட்டி விடும் = நிலவுலகத்தின் கண் அவர் ஆணையாகச் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

'நிறைமொழி' என்பது அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி.

'காட்டுதல்', பயனான் உணர்த்துதல்.

# திருக்குறள்: 29 (குணமென்னுங்)

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி // // குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது." **(09)** // // கணமேயும் காத்தல் அரிது.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி = துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவரது வெகுளி;
கணமேயும் காத்தல் அரிது = தான் உள்ளவளவு கணமேயாயினும், வெகுளப்பட்டாரால் தடுத்தல் அரிது.

பரிமேலழகர் உரை விளக்கம்:

சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்றாக

உருவகம் செய்தார். 'குணம்' சாதியொருமை.

அநாதியாய் வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கும் ஆகலின் 'கணமேயும்' என்றும், நிறைமொழி மாந்தர் ஆகலின் 'காத்தலரிது' என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் அவர் ஆணை கூறப்பட்டது.

# திருக்குறள்: 30 (அந்தணர்)

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் // அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்." **(10)** // // செந்தண்மை பூண்டு ஒழுகலான்.

பரிமேலழகர் உரை:

(இதன்பொருள்) எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் = எல்லா உயிர்கள்மேலும் செவ்விய தண்ணளியைப் பூண்டு ஒழுகலான்;
அந்தணர் என்போர் அறவோர் = அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தின் நின்றவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

'பூணுதல்' விரதமாகக் கோடல். அந்தணர் என்பது, அழகிய தட்பத்தினை உடையார் என ஏதுப்பெயர்ஆகலின், அஃது அவ்வருளுடையார்க்கு அன்றிச் செல்லாது என்பது கருத்து.

அவ்வாறு ஆணை உடையார் ஆயினும், உயிர்கள்மாட்டு அருளுடையார் என்பது இதனால் கூறப்பட்டது.

'தெய்வப்புலவர் திருவள்ளுவர்' இயற்றிய திருக்குறளின் அறத்துப்பால் 'நீத்தார்பெருமை' அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் முற்றும்.

# திருக்குறள் பரிமேழகர் உரை

# திருக்குறள் நான்காவது அதிகாரம் அறன்வலியுறுத்தல்

பரிமேலழகரின் அதிகார முன்னுரை**:**

அறன்வலியுறுத்தல்*:*

அஃதாவது,அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள், ஏனைப் பொருளும் இன்பமும் போலாது, அறன் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத்து என்பது கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்/ அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" *(*புறநானூறு- *31.)* என்றார் பிறரும்.

## திருக்குறள்**: 31 (**சிறப்பீனுஞ்**)**

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங் //// சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊங்கு
காக்க மெவனோ வுயிர்க்கு. **(01)** // // ஆக்கம் எவனோ உயிர்க்கு.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) சிறப்பு ஈனும் = வீடு பேற்றையும் தரும்;
செல்வமும் ஈனும் =துறக்கம் முதலிய செல்வத்தையும் தரும்:
உயிர்க்கு அறத்தின் ஊங்கு ஆக்கம் எவன் = ஆதலான் உயிர்கட்கு அறத்தின்மிக்க ஆக்கம் யாது?

பரிமேலழகர் உரை விளக்கம்:

எல்லாப்பேற்றினும் சிறந்தமையின் வீடு 'சிறப்பு' எனப்பட்டது.

ஆக்கந் தருவதனை 'ஆக்கம்' என்றார்.

ஆக்கம் 'மேன்மேலுயர்தல்'.

ஈண்டு 'உயிர்' என்றது மக்கள்உயிரை, சிறப்பம் செல்வமும் எய்தற்குரியது அதுவேயாகலின்.

இதனால் அறத்தின்மிக்க உறுதி இல்லையென்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 32 (அறத்தினூஉங்)

அறத்தினூஉங் காக்க முமில்லை யதனை // // அறத்தின்ஊஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்திலி னூங்கில்லை கேடு. **(02)** / / / / மறத்தலின் ஊங்கு இல்லை கேடு

பரிமேலழகர் உரை:

( இதன்பொருள்) அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை = ஒருவனுக்கு அறம் செய்தலின் மேற்பட்ட ஆக்கமும் இல்லை; அதனை மறத்தலின் ஊங்கு இல்லை கேடு = அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடும் இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்:

"அறத்தினூஉங் காக்கமு மில்லை" என மேற்சொல்லியதனையே அனுவதித்தார், அதனாற் கேடுவருதல் கூறுதற் பயன் நோக்கி.

இதனால் அது செய்யாவழிக் கேடுவருதல் கூறப்பட்டது.

# திருக்குறள்: 33 (ஒல்லும்)

ஒல்லும் வகையா னறவினை யோவாதே // ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்" // செல்லும் வாய் எல்லாம் செயல்

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) ஒல்லும் வகையான் = தத்தமக்கியலுந்திறத்தான்;
அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல் = அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃது எய்தும் இடத்தான்எல்லாம் செய்க.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

இயலுந்திறமாவது, இல்லறம் பொருளளவிற்கேற்பவும் துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவுஞ் செய்தல்.
ஓவாமை இடைவிடாமை.
எய்தும் இடமாவன மனம் வாக்குக் காயம் என்பன.
அவற்றாற் செய்யும் அறங்களாவன முறையே நற்சிந்தையும், நற்சொல்லும் நற்செயலும் எனவிவை.
இதனான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது.

# திருக்குறள்: **34 (**மனத்துக்கண்**)**

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற."

பரிமேலழகர் உரை

**(**இதன் பொருள்**)** மனத்துக்கண் மாசு இலன் ஆதல் = அவ்வாற்றான் அறஞ்செய்வான் தன் மனத்தின்கட் குற்றம் உடையனல்லனாக;
அனைத்து அறன் = அவ்வளவே அறமாவது;
பிற ஆகுல நீர = அஃதொழிந்த சொல்லும் வேடமும் அறமெனப்படா, ஆரவார நீர்மைய.

பரிமேலழகர் உரை விளக்கம்:

குற்றம் தீயன சிந்தித்தல்.
பிறர் அறிதல்வேண்டிச் செய்கின்றன வாகலின், ஆகுல நீர என்றார்.
மனத்து மாசுடையனாயவழி அதன்வழியவாகிய மொழி மெய்களாற் செய்வன பயனிலவென்பதூஉம் பெறப்பட்டது.

# திருக்குறள்: 35 (அழுக்காறவா)

"அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) அழுக்காறு = பிறர் ஆக்கம் பொறாமையும்;
அவா = புலன்கண்மேற் செல்கின்ற அவாவும்;
வெகுளி = அவை ஏதுவாகப் பிறர்பால் வரும் வெகுளியும்;
இன்னாச்சொல் = அதுபற்றிவரும் கடுஞ்சொல்லும் ஆகிய;
நான்கும் இழுக்கா இயன்றது அறம் = இந்நான்கினையும் கடிந்து இடையறாது நடந்தது அறமாவது.

பரிமேலழகர் உரை விளக்கம்:

இதனான் இவற்றோடு விரவியியன்றது அறமெனப்படாது என்பதூஉங் கொள்க.
இவை இரண்டுபாட்டானும் அறத்தினது இயல்பு கூறப்பட்டது.

# திருக்குறள்: 36 (அன்றறிவா)

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) அன்று அறிவாம் என்னாது அறம் செய்க =

யாம் இதுபொழுது இளையம் ஆகலின் இறக்குஞான்று செய்தும்எனக் கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க;
அது பொன்றுங்கால் பொன்றாத் துணை = அவ்வாறு செய்த அறம் இவ்வுடம்பினின்றும் உயிர் போங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

மற்று என்பது அசைநிலை.
பொன்றாத்துணை என்றார், செய்த உடம்பு அழியவும் உயிரோடு ஒன்றி ஏனையுடம்பினுஞ் சேறலின்.
இதனான் இவ்வியல்பிற்றாய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்க என்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 37 (அறத்தாறிது)

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) அறத்து ஆறு இது என வேண்டா = அறத்தின் பயன் இதுவென்று யாம் ஆகமவளவையான் உணர்த்தல் வேண்டா;
சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை = சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னானே உணரப்படும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்:

பயனை ஆறு என்றார், பின்னதாகலின்.
என என்னும் எச்சத்தாற் சொல்லாகிய ஆகமவளவையும், பொறுத்தானோடு ஊர்ந்தானிடை என்றதனாற் காட்சியளவையும் பெற்றாம்.
உணரப்படு்ம் என்பது சொல்லெச்சம்.
இதனாற் பொன்றாத்துணையாதல் தெளிவிக்கப்பட்டது.

# திருக்குறள்: 38 (வீழ்நாள்)

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) வீழ் நாள் படாமை நன்று ஆற்றின் = செய்யாது கழியும் நாள் உளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின்;
அஃது ஒருவன் வாழ் நாள் வழி அடைக்கும் கல் = அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும் வழியை வாராமலடைக்கும் கல்லாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்:

ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகை வினையும் உள்ளதுணையும், உயிர் யாக்கையோடுங்கூடி நின்று அவ்வினைகளது இருவகைப்பயனையும் நுகருமாகலான், அந்நாள் முழுவதும் வாழ்நாள் எனப்பட்டது.
குற்றங்கள் ஐந்தாவன: அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பன; இவற்றை வடநூ்லார் பஞ்சக்கிலேசம் என்பர்.

வினை இரண்டாவன, நல்வினை தீவினை என்பன.
பயன் இரண்டாவன, இன்பந் துன்பம் என்பன.
இதனான் அறம் வீடுபயக்கும் என்பது கூறப்பட்டது.

## திருக்குறள்: 39 (அறத்தான்)

"அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
"புறத்த புகழு மில.

பரிமேலழகர் உரை:

(இதன் பொருள்) அறத்தான் வருவதே இன்பம் = இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது;
மற்ற எல்லாம் புறத்த = அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம் இன்பமாயினுந் துன்பத்தினிடத்த;
புகழும் இல = அதுவேயுமன்றிப் புகழும் உடையனவல்ல.

பரிமேலழகர் உரை விளக்கம்:

ஆன் உருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண் வந்தது; தூங்கு கையா னோங்கு நடைய"(புறநானூறு, 22) என்புழிப்போல.
இனபம் காமநுகர்ச்சி; அஃதாமாறு காமத்துப்பாலின் முதற்கட் சொல்லுதும்.
இன்பத்திற் புறம் எனவே துன்பமாயிற்று.
பாவத்தான் வரும் பிறனில்விழைவு முதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றுமாயினும் பின் துன்பமாய் விளைதலின் புறத்த என்றார்.
அறத்தோடு வாராதன புகழுமில எனவே, வருவது புகழுடைத்தென்பது பெற்றாம்.

இதனான் அறஞ்செய்வாரே இம்மையின்பமும், புகழும் எய்துவர் என்பது கூறப்பட்டது.

## திருக்குறள்: 40 (செயற்பால)

"செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

பரிமேலழகர் உரை:

(இதன்பொருள்) ஒருவற்குச் செயற்பாலது அறனே = ஒருவனுக்குச் செய்தற் பான்மையது நல்வினையே;
உயற்பாலது பழியே = ஒழிதற்பான்மையது தீவினையே.

பரிமேலழகர் உரை விளக்கம்:

ஒரும் என்பன இரண்டும் அசைநிலை.
தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது.
பழிக்கப்படுவதனைப் பழி யென்றார். இதனாற் செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் செய்த அறன்வலியுறுத்தல் அதிகாரமும் அதற்குப்பரிமேலழகர் செய்த உரையும் முற்றும்.

திருக்குறள் பாயிரவியல் முற்றும்

# திருக்குறள் அறத்துப்பால்

# இல்லறவியல்

அதிகாரம் 05 இல்வாழ்க்கை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

இல்வாழ்க்கை:

அஃதாவது, இல்லாளோடு கூடிவாழ்தலினது சிறப்பு. இன்னிலை அறஞ்செய்தற்குரிய இருவகைநிலையுள் முதலாதலின், இஃது அறன்வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள்: 41 (இல்வாழ்வான்)

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) இல்வாழ்வான் என்பான் = இல்லறத்தோடு கூடி வாழ்வானென்று சொல்லப்படுவான்;

இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை = அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும்,
அவர் செல்லும் நல்லொழுக்க நெறிக்கண் நிலைபெற்ற துணையாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'இல்' லென்பது ஆகுபெயர்.

'என்பா' னெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது.

ஏனைமூவராவார், ஆசாரியனிடத்தினின் றோதுதலும் விரதங்காத்தலுமாகிய பிரமசரிய வொழுக்கத்தானும், இல்லைவிட்டு வனத்தின்கட் டீயொடுசென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யு மொழுக்கத்தானும், முற்றத்துறந்த யோகவொழுக்கத்தானுமென இவர்; இவருள் முன்னையிருவருரையும் பிறர்மதமேற்கொண்டு கூறினார்.இவர், இவ்வொழுக்கநெறிகளை முடியச்செல்லுமளவும் அச்செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய வுதவி அவ்வவ் நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான், 'நல்லாற்றின் நின்ற துணை' யென்றார்.

<> <>

# திருக்குறள் 42 (துறந்தார்க்குந்)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு

மில்வாழ்வா னென்பான் றுணை.

பரிமேலழகர் உரை

( இதன்பொருள்) துறந்தார்க்கும் = களைகணானவராற் றுறக்கப்பட்டார்க்கும்;

துவ்வாதவர்க்கும் = நல்கூர்ந்தார்க்கும்;

இறந்தார்க்கும் = ஒருவருமின்றித் தன்பால் வந்திறந்தார்க்கும்;

இல்வாழ்வான் என்பான் துணை = இல்வாழ்வானென்று சொல்லப்படுபவன் துணை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

துறந்தார்க்குப் பாவமொழிய அவர் களைகணாய் நின்று வேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க்கு உணவு முதலிய கொடுத்தலானும், இறந்தார்க்கு நீர்க்கடன் முதலியசெய்து நல்லுலகின்கட் செலுத்தலானும் துணை யென்றார்.

இவை யிரண்டுபாட்டானும் இன்னிலை எல்லாவுபகாரத்திற்கு முரித்தாதல் கூறப்பட்டது.

# திருக்குறள் 43 (தென்புலத்தார்)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற = பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென்று சொல்லப்பட்ட;
ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை = ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பிதிரராவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதி; அவர்க்கிடம் தென்றிசையாதலின், தென்புலத்தாரென்றார்.
தெய்வமென்றது சாதியொருமை.
விருந்தென்பது புதுமை; அஃது ஈண்டாகுபெயராய்ப் புதியராய் வந்தார்மேனின்றது; அவர் இருவகையர்: பண்டறிவுண்மையிற் குறித்துவந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாருமென.
ஒக்கல் சுற்றத்தார்.
எல்லாவறங்களும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின், தன்னை யோம்பலும் அறனாயிற்று.
'என்ற' வென்பது விகாரமாயிற்று.
'ஆங்கு' அசை.
ஐவகையும் அறஞ்செய்தற்கிடனாகலின் 'ஐம்புல' மென்றார்.
அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று, இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலானென்ப தறிக.

## திருக்குறள்: 44 (பழியஞ்சிப்)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் லெஞ்ஞான்று மில்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) பழி அஞ்சிப் பாத்து ஊண் வாழ்க்கை உடைத்தாயின் = பொருள் செய்யுங்கால் பாவத்தை யஞ்சி யீட்டி, அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினார்க்கும், தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவனில் வாழ்க்கை உடைத்தாயின்;

வழி எஞ்ஞான்றும் எஞ்சல் இல் = அவன் வழி உலகத் தெஞ்ஞான்றும் நிற்றலல்லது இறத்தலில்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பாவத்தான் வந்த பிறன்பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொருளுடையார் மேலும், பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சுமாகலின், பழியஞ்சி யென்றார்.

வாழ்வான துடைமை வாழ்க்கைமே லேற்றப்பட்டது.

# திருக்குறள்: 45 (அன்புமறனு)

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின் = ஒருவனில்வாழ்க்கை தன் றுணைவிமேற் செய்யத்தகும் அன்பினையும், பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத்தினையு முடைத்தாயின்;
அது பண்பும் பயனும் = அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நிரனிறை.

இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சொன்றாகாவழி இல்லறங் கடைபோகாமையின், அன்புடைமை பண்பாயிற்று, அறனுடைமை பயனாயிற்று.

இவை மூன்று பாட்டானும் இன்னிலையினின்றான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது.

# திருக்குறள்: 46 (அறத்தாற்றி)

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இல்வாழ்க்கை அறத்தாற்றின் ஆற்றின் = ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவானாயின்;

புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன் = அவன் அதற்குப் புறமாகிய நெறியிற் போய்ப்பெறும் பயன் யாது?

பரிமேலழகர் உரைவிளக்கம்

அறத்தா றென்பது பழியஞ்சிப் பகுத்துண்டலும், அன்புடையுமென மேற்சொல்லிய ஆறு.

புறத்தாறு இல்லைவிட்டு வனத்துச் செல்லு நிலை.

அந்நிலையின் இது பயனுடைத்தென்பார், 'போஒய்ப்பெறுவதெவ' னென்றார்.

# திருக்குறள்: 47 (இயல்பினா)

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வா ருளெல்லாந் தலை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இல்வாழ்க்கை இயல்பினான் வாழ்பவன் என்பான் = இல்வாழ்க்கைக்கணின்று அதற்குரிய இயல்போடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான்;

முயல்வாருள் எல்லாம் தலை = புலன்களைவிட முயல்வா ரெல்லாருள்ளும் மிக்கவன்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

முற்றத்துறந்தவர் விட்டமையின், 'முயல்வா' ரென்றது மூன்றா நிலையி னின்றாரை.

அந்நிலைதான் பலவகைப்படுதலின் 'எல்லாருள்ளு' மெனவும், முயலாதுவைத்துப் பயனெய்துதலின் தலை யெனவுங் கூறினார்.

# திருக்குறள்: 48 (ஆற்றி)

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை = தவஞ்செய்வாரையுந் தத்தநெறிக்கணொழுகப்பண்ணித் தானுந் தன்னறத்திற் றவறாத இல்வாழ்க்கை;

நோற்பாரின் நோன்மை உடைத்து = அத்தவஞ்செய்வார் நிலையினும் பொறை யுடைத்து.

பரிமேலழகர் உரை விளக்கம்

பசிமுதலிய விடையூறு நீக்கலின், 'ஆற்றினொழுக்கி' யென்றார்.

'நோற்பா' ரென்பது ஆகுபெயர்.

நோற்பார் நிலைக்கு அவர்தம்மை யுற்ற நோயல்லது இல்வாழ்வார் நிலைபோற் பிறரையுற்ற நோயும் பொறுத்தலின்மையின், 'நோற்பாரி' னோன்மை யுடைத்தென்றார்.

# திருக்குறள்: 49 (அறனெனப்)

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே = இருவகையறத்தினும் நூல்களான் அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே;
அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று = ஏனைத்துறவறமோவெனின், அதுவும் பிறனாற் பழிக்கப்படுவதில்லாயின் நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் பிரிக்கப்பட்டது துறவறமாகலின், அஃது என்னுஞ்சுட்டுப்பெயர் அதன்மேனின்றது.
பிறன்பழிப்ப தென்றது கூடாவொழுக்கத்தை.
துறவறம் மனத்தையும் பொறிகளையுயும் ஒறுத்தடக்கவல்ல அருமையுடைத்தாயவழியே அவற்றை யொறுக்க வேண்டாது ஐம்புலவின்பங்களாரத்துய்க்கும் எண்மையுடைய இல்வாழ்க்கையோடு அறமென ஒருங்கெண்ணப் படுவதென்றவாறாயி்ற்று.

இந்நான்கு பாட்டானும் இன்னிலையே பயனுடைத்தென இதன் சிறப்புக்கூறப்பட்டது.

<>

# திருக்குறள்: 50 (வையத்துள்)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) வாழ்வாங்கு வையத்துள் வாழ்பவன் = இல்லறத்தோடு கூடி வாழு மியல்பினால் வையத்தின்கண் வாழ்பவன்;

வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும் = வையத்தானே யெனினும் வானின்கணுறையுந் தேவருள் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப்படும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பின் றேவனாய் அவ்வறப்பயனுகர்தல் ஒருதலையாகலின், தெய்வத்துள் வைக்கப்படுமென்றார்.

இதனான் இன்னிலையது மறுமைப்பயன் கூறப்பட்டது.

இம்மைப்பயன் புகழ்; அதனையிறுதிக்கட் (அதிகாரம்: 24 புகழ்) கூறுப.

தெய்வப்புலவர் இயற்றிய திருக்குறளின் 'இல்வாழ்க்கை' அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் முற்றும்.

# அதிகாரம்: 06 வாழ்க்கைத்துணைநலம்

பரிமேலழகர் அதிகாரவிளக்கம்

வாழ்க்கைத்துணைநலம்:
அஃதாவது, அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

# திருக்குறள்: 51 (மனைத்தக்க)

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) மனைத்தக்க மாண்பு உடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள் = மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளை யுடையளாய்த் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத் தக்க வாழ்க்கையை யுடையாள்;
வாழ்க்கைத் துணை = அதற்குத் துணை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நற்குணங்களாவன: துறந்தார்ப்பேணலும்,விருந்தயர்தலும், வறியார்மாட்டருளுடைமையும் முதலாயின.
நற்செய்கைகளாவன: வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழி்ல் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின.
வருவாய்க்குத் தக்கவாழ்க்கையாவது முதலையறிந்து அதற்கியைய அழித்தல்.

இதனால் இவ்விரண்டு நன்மையுஞ்சிறந்தன வென்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 52 (மனைமாட்சி)

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் = மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவனில்லாளிடத் தில்லையாயின்;
வாழ்க்கை எனைமாட்சித்தாயினும் இல் = அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமை யுடைத்தாயினும் அஃதுடைத்தன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இல்லையென்றார் பயன்படாமையின்.

# திருக்குறள்: 53 (இல்லதென்)

இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இல்லவள் மாண்பு ஆனால் இல்லது என் = ஒருவனுக்கு இல்லாள் நற்குண நற்செய்கைய ளாயினக்கால் இல்லாததியாது?
இல்லவள் மாணாக்கடை = அவளன்னளல்லாக்கால் உள்ளது யாது?

பரிமேலழகர் உரைவிளக்கம்

மாண்பெனக் குணத்தின்பெயர் குணிமேனின்றது.

இவை யிரண்டுபாட்டானும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாளது மாட்சியே பிறவல்ல வென்பது பெறப்பட்டது.

# திருக்குறள்: 54 (பெண்ணிற்)

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) பெண்ணின் பெருந்தக்க யா உள =

ஒருவனெய்தும் பொருள்களுள் இல்லாளின் மேம்பட்ட பொருள்களியாவையுள;

கற்பு என்னும் திண்மை யுண்டாகப் பெறின் = அவண்மாட்டுக் கற்பென்னும் கலங்காநிலைமை யுண்டாகப்பெறின்?

பரிமேலழகர் உரைவிளக்கம்

கற்புடையாள்போல அறமுதலிய மூன்றற்கும் ஏதுவாவன பிறவின்மையின் யாவுள வென்றார்.

இதனாற் கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள்: 55 (தெய்வந்தொழா)

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழுது எழுவாள் பெய் என = பிறதெய்வந் தொழாது தன்றெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல;
மழை பெய்யும் = மழை பெய்யும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

தெய்வந் தொழுதற்கு மனந் தெளிவது துயிலெழுங் காலத்தாகலின்

'தொழுதெழுவா' ளென்றார். தொழாநின்று என்பது 'தொழு' தெனத் திரிந்து நின்றது.தெய்வந்தா னேவல் செய்யுமென்பதாம்.

இதனால் கற்புடையவளதாற்றல் கூறப்பட்டது.

# திருக்குறள்: 56 (தற்காத்து)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்): தற்காத்துத் தற்கொண்டான் பேணி = கற்பினின்றும் வழுவாமற் றன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவற்றாற் பேணி;
தகைசான்ற சொல் காத்து = இருவர் மாட்டும் நன்மையமைந்த புகழ் நீங்காமற் காத்து;
சோர்வு இலாள் பெண் = மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடியுடையாளே பெண்ணாவாள்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தன்மாட்டுப் புகழாவது, வாழுமூர் கற்பாற் றன்னைப் புகழ்வது.
சோர்வு = மறவி.

இதனால் தற்புகழ்தற் சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள்: 57 (சிறைகாக்கும்)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) மகளிர் சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் = மகளிரைத் தலைவர் சிறையாற் காக்குங் காவல் என்னபயனைச் செய்யும்?
நிறைகாக்கும் காப்பே தலை = அவர் தமது நிறையாற் காக்கும் காவலே தலையாய காவல்.

பரிமேலழகர் உரை விளக்கம்

சிறை - மதிலும் வாயில்காவலும் முதலாயின.
நிறை - நெஞ்சைக் கற்புநெறியினிறுத்தல்.
காவலிரண்டினும் நிறைக்காவலில்வழி ஏனைச்சிறைக்காவலாற் பயனில்லை யென்பார், 'நிறைகாக்குங் காப்பே தலை' யென்றார். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

இதனால் தற்காத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள்: 58 (பெற்றாற்)

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) பெண்டிர் பெற்றாற் பெறின் = பெண்டிர், தம்மையெய்திய கணவனை வழிபடுதல் பெறுவராயின்;
புத்தேளிர்வாழும் உலகு பெருஞ்சிறப்புப் பெறுவர் = புத்தேளிர் வாழுமுலகின்கண் அவராற் பெருஞ்சிறப்பினைப் பெறுவர்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'வழிபடுத' லென்பது சொல்லெச்சம்.

இதனால் தற்கொண்டாற் பேணிய மகளிர் புத்தேளிராற் பேணப்படுவரென்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 59 (புகழ்புரிந்)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) புகழ் புரிந்த இல் இலோர்க்கு = புகழை விரும்பிய இல்லாளை யில்லாதார்க்கு;
இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடை = தம்மை யிகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்கவேறு போல நடக்கும் பெருமிதநடை இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

புரிந்த வென்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற்றொக்கது. பெருமிதமுடையானுக்குச் சிங்கவேறு நடையா னுவமமாகலின் 'ஏறுபோ' லென்றார்.

இதனால் தகைசான்ற சொற்காவாவழிப்படுங் குற்றம் கூறப்பட்டது.

## திருக்குறள்: 60 (மங்கலமென்ப)

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) மங்கலம் என்ப மனைமாட்சி = ஒருவற்கு நன்மையென்று சொல்லுவர் அறிந்தோர் மனையாளது நற்குண நற்செய்கைகளை;
அதன் நன்கலம் (என்ப) நன்மக்கட் பேறு = அவைதமக்கு நல்லவணிகலமென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அறிந்தோரென்பது எஞ்சிநின்றது. மற்று அசைநிலை.

இதனால் வாழ்க்கைத்துணைக்கு ஆவதோரணிநலங் கூறி வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

தெய்வப்புலவர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் 'வாழ்க்கைத்துணைநலம்' எனும் அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் முற்றும்.

# அதிகாரம் 7.மக்கட்பேறு

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

மக்கட்பேறு:

அஃதாவது, இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாகவிறுக்கப்படூஉங் கடன் மூன்றனுள், முனிவர்கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும், தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின், அக்கடனிறுத்தல் பொருட்டு மக்களைப்பெறுதல். அதிகாரமுறைமை மேலே பெறப்பட்டது.

## திருக்குறள்: 61 (பெறுமவற்றுள்)

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) பெறுமவற்றுள் = ஒருவன் பெறும் பேறுகளுள்; அறிவு அறிந்த மக்கட்பேறு அல்ல பிற = அறிய வேண்டுவன அறிதற்குறிய மக்களைப் பெறுதலல்லது பிறபேறுகளை;

யாம் அறிவதில்லை = யாம் மதிப்பதில்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'அறிவ' தென்பது அறிதலைச்செய்வதென அத்தொழின்மேனின்றது. காரணமாகிய வுரிமை காரியமாகிய அறிதலைப் பயந்தே விடுமாதலான், அத்துணிவுபற்றி 'அறிந்த' வென இறந்தகாலத்தாற் கூறினார்.

'அறிவறிந்த' வென்றதனான், மக்களென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது.

இதனாற் புதல்வர்ப்பேற்றினது சிறப்புக்கூறப்பட்டது.

## திருக்குறள்: 62 (எழுபிறப்புந்)

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) எழுபிறப்பும் தீயவை தீண்டா = வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பேழின் கண்ணும் ஒருவனைத் துன்பங்கள் சென்றடையா;
பழிபிறங்காப் பண்புடை மக்கள் பெறின் = பிறராற் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புதல்வரைப் பெறுவானாயின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப் பெறுபவனாயி னென்றவாறாயிற்று.

பிறப்பேழாவன:
"ஊர்வ பதினொன்றா மொன்பது மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச்-சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த
வந்தமில்சீர்த் தாவரநா லைந்து."

தந்தை தாயர் தீவினை தேய்தற்பொருட்டு அவரை நோக்கிப் புதல்வர்செய்யுந்தான தருமங்கட்கு அவர் நற்குணங் காரணமாகலின், பண்பென்னும் காரணப்பெயர் காரியத்தின்மே னின்றது.

# திருக்குறள்: 63 (தம்பொருளென்)

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தம் மக்கள் தம்பொருள் என்ப = தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர்;
அவர்பொருள் தந்தம் வினையான் வரும் = அப்புதல்வர் செய்தபொருள் தம்மை நோக்கி அவர் செய்யும் நல்வினையானே தம்பால் வரும் ஆதலான்.

பரிமேலழகர் உரை விளக்கம்

தந்தம்வினை யென்புழித் தொக்குநின்ற ஆறாம்வேற்றுமை "முருகனது குறிஞ்சிநிலம்" என்புழிப்போல உரிமைப்பொருட்கண் வந்தது.
பொருள்செய்த மக்களைப்பொருளென உபசரித்தார்.
இவை யிரண்டுபாட்டானும் நன்மக்கட் பெற்றார் பெறும் மறுமைப்பயன் கூறப்பட்டது.

# திருக்குறள்: 64 (அமிழ்தினு)

அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அமிழ்தினும் ஆற்ற இனிதே = சுவையான் அமிழ்தத்தினும் மிக வினிமை யுடைத்து;
தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ் = தம் மக்களது சிறுகையா னளாவப்பட்ட சோறு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சிறுகையா னளாவலாவது #"இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும், நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தல்".

#(புறநானூறு- 188)

# திருக்குறள்: 65 (மக்கண்மெய்)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) உடற்கின்பம் மக்கள் மெய் தீண்டல் = ஒருவன் மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல்;
செவிக்கு இன்பம் அவர் சொல் கேட்டல் = செவிக்கின்பமாவது அவரது சொல்லைக் கேட்டல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'மற்று' வினைமாற்று.
மக்களது மழலைச் சொல்லேயன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாகலின், பொதுப்படச் சொல்லென்றார்.
'தீண்டல்' 'கேட்ட' லென்னுங் காரணப்பெயர்கள் ஈண்டுக் காரியங்களின் மேனின்றன.

# திருக்குறள்: 66 (குழலினிதி)

குழலினிதி யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) குழல் இனிது யாழ் இனிது என்ப = குழலிசை யினிது யாழிசை யினிதென்று சொல்லுவர்;
தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் = தம் புதல்வருடைய

குதலைச் சொற்களைக் கேளாதவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'குழல்' 'யாழ்' என்பன ஆகுபெயர். கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல் இனிதென்பரென்பது குறிப்பெச்சம்.
இனிமை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்புவகையானுங் கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் இம்மைப்பயன் கூறப்பட்டது.

# திருக்குறள்:67 (தந்தைமகற்)

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தந்தை மகற்கு ஆற்றும் நன்றி = தந்தை புதல்வனுக்குச் செய்யும் நன்மையாவது;
அவையத்து முந்தி இருப்பச் செயல் = கற்றாரவையின்கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல்.

பரிமேலழகர் உரை

பொருளுடையனாக்குதல் முதலாயின துன்பம் பயத்திலின் நன்மையாகாவென்பது கருத்து.

இதனால் தந்தை கடன் கூறப்பட்டது.

# திருக்குறள்: 68 (தம்மிற்றம்)

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

பரிமேலழகர் உரை

தம் மக்கள் அறிவுடைமை = தம் மக்களதறிவுடைமை;
மா நிலத்து மன் உயிர்க்கெல்லாம் தம்மின் இனிது = பெரிய நிலத்து மன்னாநின்ற உயிர்கட்கெல்லாம் தம்மினுமினிதாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஈண்டறிவென்றது இயல்பாகிய அறிவோடுகூடிய கல்வியறிவினை.
மன்னுயி ரென்றது ஈண்டறிவுடையார் மேனின்றது, அறிவுடைமை கண்டின்புறுதற்கு உரியார் அவராகலின்.

இதனால் தந்தையினும் அவையத்தா ருவப்பரென்பது கூறப்பட்டது.

# திருக்குறள்: 69 (ஈன்ற)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும் = தான் பெற்ற பொழுதை மகிழ்ச்சியினும் மிக மகிழும்;
தன்மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய் = தன்மகனைக் கல்வி கேள்விகளா னிறைந்தானென்று அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

கவானின்கட் கண்ட பொதுவுவகையினுஞ் சால்புடையனெனக் கேட்ட சிறப்புவகை பெரிதாகலின் பெரிதுவக்கு மெனவும், பெண்ணியல்பாற் றானாக வறியாமையிற் கேட்டதாயெனவுங் கூறினார். அறிவுடாயரென்பது வருவிக்கப்பட்டது. சான்றோரென்றற் குரியர் அவராகலின்.

தாயுவகைக்களவின்மையின் அஃதிதனாற் பிரித்துக் கூறப்பட்டது.

## திருக்குறள்: 70 (மகன்றந்தை)

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தந்தைக்கு மகன் ஆற்றும் உதவி = கல்வியுடையனாக்கிய தந்தைக்கு மகன் செய்யும் கைம்மாறாவது;
இவன்தந்தை என் நோற்றான்கொல் எனும் சொல் = தன்னறிவு மொழுக்கமுங் கண்டார் இவன்றந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவஞ் செய்தான்கொல்லோவென்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சொல் லென்பது நிகழ்த்துதலாகிய தன்காரணந் தோன்ற நின்றது. நிகழ்த்துதல் அங்ஙனஞ்சொல்லவொழுகல்.

இதனாற் புதல்வன் கடன் கூறப்பட்டது.

தெய்வப்புலவர் திருவள்ளுவர் அருளிய திருக்குறள் 'மக்கட்பேறு'$ அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் முற்றும்.

$'புதல்வரைப்பெறுதல்' என்பதும் பாடம்.

# இல்லறவியல்

# அதிகாரம்:8 அன்புடைமை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

அன்புடைமை:

அஃதாவது, அவ்வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண் மேல் அருள்பிறத்தலும் அன்பின் பயனாகலின், இதுவேண்டப்பட்டது. வாழ்க்கைத்துணைமேல் அன்பில்வழி இல்லற மினிது நடவாமை

"அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" (சிலப்பதிகாரம்-கொலைக்களக் காதை, வரிகள்:71-73) என்பதனாலும்,

அதனாலருள் பிறத்தல் "அருளென்னு மன்பீன் குழவி" (திருக்குறள் 757) என்பதனாலும் அறிக.

## திருக்குறள்: 71 (அன்பிற்கு)

'அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர் ( )'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் ஆர்வலர்

'புன்கணீர் பூசல் தரும். (01)'புன்கண் நீர் பூசல் தரும்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ = அன்பிற்கும் பிறரறியாமலடைத்து வைக்குந் தாழுளதோ?
ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும் = தம்மாலன்பு செய்யப்பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார்கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உண்ணின்று அன்பினை எல்லாருமறியத் தூற்றும் ஆகலான்.

பரிமேலழகர் உரை விளக்கம்

உம்மை சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை கண்ணீர்மேலேற்றப்பட்டது. காட்சியளவைக் கெய்தாதாயினும், அனுமான வளவையான் வெளிப்படுமென்பதாம்.

இதனான் அன்பினதுண்மை கூறப்பட்டது.

# திருக்குறள்: 72 (அன்பிலா)

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

பரிமேலழகர் உரை

இதன்பொருள்) அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர் =

அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கே யுரியர்;
அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர் = அன்பிலாதார் அவற்றானேயன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஆனுருபுகளும் பிரிநிலையேகாரமும் விகாரத்தாற் றொக்கன. என்பு ஆகுபெயர். என்புமுரிய ராதல்,

"தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
றபுதி யஞ்சிச் சீரை புக்கோன்" (புறநானூறு, 43) முதலாயினார்கட் காண்க.

# திருக்குறள்: 73 (அன்போடி)

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) ஆர் உயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு = பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடுண்டாகிய தொடர்ச்சியினை;
அன்போடு இயைந்த வழக்கு என்ப = அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பிறப்பினதருமை பிறந்தவுயிர் மேலேற்றப்பட்டது. 'இயைந்த' வென்பது உபசாரவழக்கு. 'வழக்கு' ஆகுபெயர். உடம்போடியைந்தல்லது அன்புசெய்யலாகாமையின், அது செய்தற்பொருட்டு இத்தொடர்ச்சி யுளதாயிற்றென்பதாம். ஆகவே இத்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமை யென்றாயிற்று.

# திருக்குறள்: 74 (அன்பீனு)

அன்பீனு மார்வமுடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) அன்பு ஆர்வமுடைமை ஈனும் = ஒருவனுக்குத் தொடர்புடையார்மாட்டுச் செய்தவன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்பமுடைமையைத் தரும்;
அது நண்பு என்னும் நாடாச் சிறப்பு ஈனும் = அவ்விருப்பமுடைமைதான் இவற்குப் பகையும் நொதுமலுமில்லையாய் யாவரும் நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'உடைமை' உடையனாந் தன்மை. யாவரும் நண்பாதல் எல்லாப் பொருளுமெய்துதற் கேதுவாகலின், அதனை 'நாடாச்சிற' ப்பென்றார்.

# திருக்குறள்: 75 (அன்புற்)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப = அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர்;
வையகத்து இன்புற்றார் எய்தும் சிறப்பு = இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கணின்று இன்பநுகர்ந்து அதன்மேல் துறக்கத்துச் சென்றெய்தும் பேரின்பத்தினை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

வழக்கு ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங் கூடி யின்புற்றார் தாஞ்செய்த வேள்வித் தொழிலாற் றேவராய் ஆண்டு மின்புறுவராகலின், 'இன்புற்றா ரெய்துஞ் சிற' ப்பென் றார். தவத்தாற் றுன்புற்றெய்துந் துறக்கவின்பத்தினை ஈண்டுமின்புற்றெய்துதல் அன்பானன்றியி ்ல்லை யென்பதாம்.

# திருக்குறள்: 76 (அறத்திற்கே)

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அன்பு சார்பு அறத்திற்கே என்ப அறியார் = அன்பு துணையாவது அறத்திற்கே யென்று சொல்லுவர் சிலரறியார்;
மறத்திற்கும் அஃதே துணை = ஏனைமறத்திற்கும் அவ்வன்பே துணையாவது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஒருவன் செய்த பகைமைபற்றி உள்ளத்து மறநிகழ்ந்துழி அவனை நட்பாகக் கருதி அவன்மேல் அன்புசெய்ய அது நீங்குமாகலின் மறத்தை நீக்குதற்குந் துணையாமென்பார், "மறத்திற்குமஃதே துணை" யென்றார், "துன்பத்திற் கியாரே துணையாவார்" (திருக்குறள், 1299) என்புழிப்போல.

இவையைந்து பாட்டானும் அன்பினது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள்: 77 (என்பிலதனை)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) என்பு இலதனை வெயில்போலக் காயும் = என்பில்லாத வுடம்பை வெயில் காய்ந்தாற்போலக் காயும்;
அன்பு இலதனை அறம் = அன்பில்லாதவுயிரை அறக்கடவுள்.

பரிமேலழகர் உரை

'என்பில' தென்றதனான் உடம்பென்பதூஉம், 'அன்பில'தென்றதனான் உயிரென்பதூஉம் பெற்றாம். வெறுப்பின்றி எங்குமொருதன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறு போல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற் கெடுமென்பதாம். அதனைக் 'காயு'மென வெயிலறங்களின் மேலேற்றினார், அவவற்றிற்கும் அவ்வியல்புண்மையின். இவ்வாறு "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" (நான்மணிக்கடிகை, 84) எனப் பிறருங் கூறினார்.

## திருக்குறள்: 78 (அன்பகத்)

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

பரிமேலழகர் உரை

இதன்பொருள்) அகத்து அன்பு இல்லா உயிர் வாழ்க்கை = மனத்தின்கணன்பி ் ல்லாத உயிர் இல்லறத்தோடு கூடி வாழ்தல்; வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று = வன்பாலின்கண் வற்றலாகிய மரந் தளிர்த்தாற்போலும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

கூடாதென்பதாம். வன்பால் வன்னிலம். வற்றலென்பது பால்விளங்கா வஃறிணைப்படர்க்கைப்பெயர்.

## திருக்குறள்: 79 (புறத்துறுப்)

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

பரிமேலழகர் உரை

இதன்பொருள்) யாக்கையகத்து உறுப்பு அன்பு இலவர்க்கு = யாக்கை யகத்தின்கணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடையரல்லாதார்க்கு;
புறத்து உறுப்பு எல்லாம் எவன்செய்யும் = ஏனைப் புறத்தின்கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ் செய்தற்கண் என்ன உதவியைச்செய்யும்?

பரிமேலழகர் உரைவிளக்கம்

'புறத்துறுப்பாவன', இடனும் பொருளும் ஏவல்செய்வாரு முதலாயின. துணையொடு கூடாதவழி அவற்றாற் பயனின்மையின், 'எவன்செய்யு' மென்றார். உறுப்புப் போறலின் 'உறுப்' பெனப்பட்டன. யாக்கையிற் கண் முதலிய உறுப்புக்களெல்லாம் என்னபயனைச்செய்யும் மனத்தின்கணுறுப்பாகிய அன்பிலாதார்க் கென்றுரைப்பாருமுளர். அதற்கு இல்லறத்தோடு யாதுமியைபில்லாமை யறிக.

## திருக்குறள்: 80 (அன்பின்)

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) அன்பின் வழியது உயிர்நிலை = அன்பு முதலாக அதன்வழி நின்ற உடம்பே உயிர்நின்ற உடம்பாவது;
அஃது இலார்க்கு உடம்பு என்பு தோல் போர்த்த = அவ்வன்பில்லாதார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலாற் போர்த்தனவாம்; உயி்ர்நின்றனவாகா.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இல்லறம் பயவாமையின் அன்னவாயின.

இவை நான்கு பாட்டானும் அன்பில்வழிப்படுங் குற்றம் கூறப்பட்டது.

தெய்வப்புலமைத்திருவள்ளுவர் செய்த 'அன்புடைமை' எனும் அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் செய்த உரையும் முற்றும்.

# இல்லறவியல்

## அதிகாரம்: **09.** விருந்தோம்பல்

பரிமேலழகரின் அதிகாரமுன்னுரை

விருந்தோம்பல்: அஃதாவது, இருவகை விருந்தினரையும் புறந்தருதல். தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வனவாகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கீதலன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறாகாத அன்புடை யிருவர் கூடியல்லது செய்யப்படாமையின், இஃது அன்புடைமையின் பின் வைக்கப்பட்டது.
{இருவகைவிருந்தினர் = குறித்துவந்தார், குறியாதுவந்தார்(பார்க்க: குறள், *43* பரிமேலழகர் உரை)
முன்னைய இரண்டு = தென்புலத்தார், தெய்வம்.
பின்னைய இரண்டு = ஒக்கல், தான்}

## திருக்குறள்: **81 (**இருந்தோம்பி**)**

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
இருந்து ஓம்பி இல் வாழ்வது எல்லாம் விருந்து ஓம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

வேளாண்மை செய்தல் பொருட்டு. (01)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் = மனைவியோடும் வனத்திற் செல்லாது இல்லின்கணிருந்து பொருள்களைப் போற்றிவாழுஞ் செய்கையெல்லாம்;
விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு = விருந்தினரைப்பேணி அவர்க்குபகாரஞ் செய்தற்பொருட்டு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

எனவே, வேளாண்மை செய்யாவழி இல்லின்கணிருத்தலும், பொருள்செய்தலுங் காரணமாக வருந் துன்பச் செய்கைகட் கெல்லாம் பயனில்லை யென்பதாம்.

# திருக்குறள்: 82 (விருந்துபுறத்)

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. (02)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) சாவா மருந்தெனினும் = உண்ணப்படும் பொருள் அமிர்தமேயெனினும்;
விருந்து புறத்ததாத் தான் உண்டல் = தன்னை நோக்கிவந்த விருந்து தன்னில்லின் புறத்ததாகத் தானே உண்டல்;
வேண்டற்பாற்று அன்று = விரும்புதன் முறைமை யுடைத்ன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சாவாமருந்து சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந்தின்றியே ஒருகாற் றானுண்டலைச் சாவா மருந்தென்பார் உளராயினும் அதனையொழிகவென் றுரைப்பினுமமையும்.
இவை யிரண்டு பாட்டானும் விருந்தோம்பலின் சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள்: **83** (வருவிருந்து)

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை = தன்னை நோக்கி வந்தவிருந்தை நாடோறும் புறந்தருவான தில்வாழ்க்கை;
பருவந்து பாழ்படுதல் இன்று = நல்குரவான் வருந்திக் கெடுதலில்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற் பொருடொலையாது மேன்மேற் கிளைக்கு மென்பதாம்.

# திருக்குறள் **84** (அகனமர்ந்து)

அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) செய்யாள் அகன் அமர்ந்து உறையும்= திருமகள் மனமகிழ்ந்து வாழாநிற்கும்;
முகன்அமர்ந்து நல் விருந்து ஓம்புவான் இல் = முகமினியனாய்த் தக்கவிருந்தினரைப் பேணுவானதில்லின்கண்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மனமகிழ்தற்குக் காரண்ம் தன் செல்வம் நல்வழிப்படுதல். தகுதி ஞானவொழுக்கங்களா னுயர்தல்.

பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு.

## திருக்குறள் 85 (வித்துமிடல்)

வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) விருந்தோம்பி மிச்சி்ல் மிசைவான் புலம் = முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்கு;
வித்தும் இடல் வேண்டுமோ = வித்திடுதலும் வேண்டுமோ? வேண்டா.

பரிமேலழகர் உரைவிளக்கம்

கொல் என்பது அசைநிலை. தானே விளையுமென்பது குறிப்பெச்சம்.

இவை மூன்று பாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது.

# திருக்குறள் 86 (செல்விருந்தோம்பி)

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு.

(இதன்பொருள்) செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்து இருப்பான் = தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக்கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ணவிருப்பான்;
வானத்தவர்க்கு நல் விருந்து = மறுபிறப்பிற் றேவனாய் வானினுள்ளார்க்கு நல்விருந்தாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

வருவிருந்தென்பது இடவழுவமைதி. நல்விருந்து எய்தா விருந்து.

இதனான் மறுமைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது.

# திருக்குறள்: 87 (இனைத்துணைத்)

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

(இதன்பொருள்) வேள்விப்பயன் இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை= விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இன்ன அளவிற்று என்பதோர் அளவுடைத்தன்று;
விருந்தின் துணைத்துணை= அதற்கு அவ்விருந்தின் தகுதியளவே அளவு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஐம்பெரு வேள்வியின் ஒன்றாகலின் 'வேள்வி' யென்றும், பொருள்அளவு "தான் சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால் வான் சிறிதாப் போர்த்து விடும்"(நாலடியார், 38) ஆதலின், 'இனைத்துணைத்தென்ப தொன்றில்லை` என்றுங் கூறினார்.
இதனான் இருமையும் பயத்தற்குக் காரணங் கூறப்பட்டது. (07)

# திருக்குறள் 88 (பரிந்தோம்பிப்)

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்

(இதன்பொருள்)

பரிந்து ஓம்பிப் பற்று அற்றேம் என்பர்= நிலையாப் பொருளை வருந்திக் காத்துப் பின் அதனை இழந்து இதுபொழுது யாம் பற்றுக்கோடு இலமாயினேம் என்று இரங்குவர்;

விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார்= அப்பொருளான் விருந்தினரையோம்பி வேள்விப் பயனையெய்தும் பொறியிலாதார்.

பரிமேலழகர் விளக்கம்

"ஈட்டிய வொண்பொருளைக், காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்" (நாலடியார்,280) ஆதலின், 'பரிந்தோம்பி' யென்றார். 'வேள்வி' ஆகுபெயர்.

# திருக்குறள் 89 (உடைமையுள்)

உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

(இதன்பொருள்)

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடைமை= உடைமைக்காலத்து இன்மையாவது விருந்தோம்பலை இகழும் பேதைமை;

மடவார்கண் உண்டு= அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது, பேதையர்மாட்டே உளதாம்.

பரிமேலழகர் விளக்கம்

' உடைமை' பொருளுடையனாந்தன்மை. பொருளாற் கொள்ளும் பயனை இழப்பித்து உடைமையை இன்மையாக்கலின், மடமையை 'இன்மை'யாக உபசரித்தார். பேதைமையான் வருந்தோம்பலை இகழிற் பொருள் நின்றவழியும் அதனாற் பயனில்லை என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் விருந்தோம்பாவழிப் படுங் குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் 90 (மோப்பக்)

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இதன்பொருள்)

அனிச்சம் மோப்பக் குழையும்= அனிச்சப்பூ மோந்துழியன்றிக் குழையாது;

விருந்து முகம் திரிந்து நோக்கக் குழையும்= விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'அனிச்சம்' ஆகுபெயர். சேய்மைக்கட் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முகம், இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீ்ண்டிய வழியல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியர் என்பதாம்.

இதனான் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது.

(தெய்வப்புலவர் திருவள்ளுவர் இயற்றிய விருந்தோம்பல் அதிகாரம் பரிமேலழகர் உரை முற்றியது.)

திருக்குறள் பத்தாவது அதிகாரம் இனியவை கூறல்.

## பரிமேலழகர் உரை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

அஃதாவது, மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல். இதுவும் விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதாகலின், விருந்தோம்பலின்பின் வைக்கப்பட்டது.

# திருக்குறள் **91** (இன்சொலா)

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(இதன்பொருள்)

இன்சொல்= இன்சொலாவன;

ஈரம் அளைஇப் படிறு இலவாம் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்= அன்போடு கலந்து வஞ்சனையிலவாய் இருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற்சொற்கள்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'ஆல்' அசைநிலை. அன்போடு கலத்தல்= அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை= வாய்மை. மெய்யுணர்ந்தார்

நெஞ்சிற்கெல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், 'செம்பொரு'ளெனப் பட்டது. இலவாஞ் சொ்லென இயையும். 'வாய்' என வேண்டாது கூறினார், தீய சொற் பயிலாவென்பது அறிவித்தற்கு.

இதனான் இன்சொற்கு இலக்கணங் கூறப்பட்டது.

# திருக்குறள் **92 (**அகனமர்ந்**)**

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

(இதன்பொருள்)

அகன் அமர்ந்து ஈதலின் நன்று= நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய பொருளைக் கொடுத்தலினும் நன்று;
முகன் அமர்ந்து இன்சொலன் ஆகப்பெறின்= கண்டபொழுதே முகம் இனியனாய் அதனோடு இனிய சொல்லையும் உடையனாகப் பெறின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இன்முகத்தோடு கூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத்தன்றித் தன்வயத்ததாயினும், அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாகவின்மையின், அதனினும் அரிதுஎன்னுங் கருத்தான், 'இன்சொலனாகப்பெறின்' என்றார்.

# திருக்குறள் 93 (முகத்தா)

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

(இதன்பொருள்)

முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி= கண்டபொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கி;

அகத்தான் ஆம் இன்சொலினதே அறம்= பின் நண்ணியவழி மனத்துடனாகிய இனிய சொற்களைச் சொல்லுதலின் கண்ணே அறம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'நோக்கி' என்னும் வினையெச்சம் இன்சொலெ‌ன அடையடுத்து நின்ற முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. ஈதலின் கண்ணதன்று என்றவாறு.

இவை இரண்டு பாட்டானும் இன்முகத்தோடுகூடிய இன்சொல் முன்னரே பிணித்து்க் கோடலின் விருந்தோம்புதற்கட் சிறந்ததென்பது கூறப்பட்டது.

# திருக்குறள் 94 (துன்புறூஉந்)

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

(இதன்பொருள்)

யார் மாட்டும் இன்பு உறூஉம் இன்சொலவர்க்கு= எல்லார் மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லை உடையார்க்கு; துன்பு உறூஉம் துவ்வாமை இல்லாகும்= துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லையாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நா முதலிய பொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமை யுடைமையின், 'துவ்வாமை' யென்றார். 'யார்மாட்டும்இன்புறூஉம் இன்சொலவர்க்கு'ப் பகையும் நொதுமலுமின்றி உள்ளது நண்பேயாம்; ஆகவே, அவர் எல்லாச் செல்வமும் எய்துவர் என்பது கருத்து.

# திருக்குறள் 95 (பணிவுடைய)

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(இதன்பொருள்)

ஒருவற்கு அணி பணிவு உடையன் இன்சொலனாதல்= ஒருவனுக்கு அணியாவது தன்னால் தாழப்படுவார்கண் தாழ்ச்சி உடையனாய் எல்லார்கண்ணும் இனிய சொல்லையும்

உடையனாதல்;
பிறஅல்ல= இவை யிரண்டுமன்றி மெய்க்கணியும் பிற அணிகள் அணியாகா.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இன்சொலனாதற்கு இனமாகலின், பணிவுடைமையும் உடன் கூறினார். 'மற்று' அசைநிலை. வேற்றுமை உடைமையாற் 'பிற' வெனவும், இவைபோலப் பேரழகு செய்யாமையின் அல்லவெனவுங் கூறினார்.
இவை இரண்டு பாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது.

# திருக்குறள் 96 (அல்லவை)

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(இதன்பொருள்)
நல்லவை நாடி இனிய சொலின்= பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ் சொற்களை மனத்தான் ஆராய்ந்து இனியவாக ஒருவன் சொல்லுமாயின்;
அல்லவை தேய அறம் பெருகும்= அவனுக்குப் பாவங்கள் தேய அறம் வளரும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தேய்தல் தன் பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலையின்றி மெலிதல். "தவத்தின்முன் நில்லாதாம் பாவம்" (நாலடியார், 51) என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலும் கடியவாகச் சொல்லின், அறனாகாது என்பதாம்.

இதனான் மறுமைப்பயன் கூறப்பட்டது.

# திருக்குறள் 97 (நயனீன்று)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(இதன் பொருள்)

நயன் ஈன்று நன்றி பயக்கும்= ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையும் உண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும்;
பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல்= பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப் பண்பின் நீங்காத சொல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நீதி உலகத்தோடு பொருந்துதல். 'பண்'பென்பது ஈண்டு அதிகாரத்தான் இனிமைமேல் நின்றது. தலைப்பிரிதல் ஒருசொல் நீர்மைத்து.

# திருக்குறள் **98 (**சிறுமையு**)**

சிறுமையு ணீங்கிய வின்சொல் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(இதன்பொருள்)

சிறுமையுள் நீங்கிய இன்சொல்= பொருளாற் பிறர்க்கு நோய் செய்யாத இனிய சொல்;

மறுமையும் இம்மையும் இன்பம் தரும்= ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மறுமையின்பம் பெரிதாகலின் முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவது, உலகம் தன்வயத்தது ஆகலான் நல்லன எய்தி இன்புறுதல்.

இவை இரண்டு பாட்டானும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது.

# திருக்குறள் **99 (**இன்சொலினி**)**

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(இதன்பொருள்)

இன்சொல் இனிது ஈன்றல் காண்பான்= பிறர்கூறும் இன்சொல் தனக்கின்பம் பயத்தலை அனுபவித்து அறிகின்றவன்;

வன்சொல் வழங்குவது எவன்கொல்= அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்லுவது என்ன பயன் கருதி?

பரிமேலழகர் உரைவிளக்கம்

இனிதென்றது வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொற் பிறர்க்கும் இன்னாதாகலின், அது கூறலாகாது என்பது கருத்து.

# திருக்குறள் 100 (இனியவுள)

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(இதன்பொருள்)

இனிய உளவாக இன்னாத கூறல்= அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக்கு உளவாயிருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும் இன்னாத சொற்களை ஒருவன் கூறல்;

கனி இருப்பக் காய் கவர்ந்தற்று= இனிய கனிகளும் தன் கைக்கண் உளவாயிருக்க அவற்றை நுகராது இன்னாத காய்களை நுகர்ந்ததனோடு ஒக்கும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'கூற'வென்தனால் சொற்கள் என்பது பெற்றாம். பொருளை விசேடித்துநின்ற பண்புகள் உவமைக்கண்ணும் சென்றன. `இனிய

கனிகள்' என்றது, ஔவையு◌ண்ட நெல்லிக்கனி போல அமிழ்தானவற்றை. 'இன்னாத காய்கள் என்றது காஞ்சிரங்காய்போல நஞ்சானவற்றை. கடுஞ்சொற்சொல்லுதல் முடிவில் தனக்கே இன்னாது என்பதாம்.

இவை இரண்டுபாட்டானும் இன்னாத கூறலின் குற்றங்கூறப்பட்டது.

## அதிகாரம் **11** செய்ந்நன்றி அறிதல்

# பரிமேலழகர் உரை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

அஃதாவது, தனக்குப் பிறர்செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்தியில் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின் அதனைப் பாதுகாத்துக் கடிதற் பொருட்டு, இஃது இனியவைகூறலின் பின் வைக்கப்பட்டது.

# திருக்குறள் **101 (**செய்யாமற்**)**

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்

வானகமு மாற்ற லரிது.

வானகமும் ஆற்றல் அரிது. (01)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்): செய்யாமல் செய்த உதவிக்கு= தனக்கு முன்னோர் உதவி செய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்த உதவிக்கு;

வையகமும் வானகமும் ஆற்றல் அரிது= மண்ணுலகும் விண்ணுலகுங் கைமாறாகக் கொடுத்தாலும் ஒத்தல்அரிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

கைம்மாறுகள் எல்லாம் காரணம் உடையவாகலின், காரணம் இல்லாத உதவிக்கு ஆற்றாவாயின.

'செய்யாமைச் செய்த உதவி'யென்று பாடமோதி, மறித்து உதவமாட்டாமை உள்ளவிடத்துச் செய்த உதவி என்று உரைப்பாரும் உளர்.

# திருக்குறள் 102 (காலத்தினாற்)

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு

காலத்தினால் செய்த நன்றி சிறிது எனினும்

ஞாலத்தின் மாணப் பெரிது.

ஞாலத்தின் மாணப் பெரிது. (02)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்): காலத்தினால் செய்த நன்றி= ஒருவனுக்கு இறுதிவந்த எல்லைக்கண் ஒருவன் செய்த உபகாரம்;

சிறிது எனினும் ஞாலத்தின் மாணப் பெரிது= தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினும்

மிகப் பெரிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அக்காலம் நோக்குதல்லது பொருள் நோக்கலாகாது என்பதாம். 'காலத்தினால்' என்பது வேற்றுமை மயக்கம்.

# திருக்குறள் **103** (பயன்றூக்கார்)

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி

பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்

னன்மை கடலிற் பெரிது.

நன்மை கடலில் பெரிது. (03)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்):

பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்= இவர்க்கு இதுசெய்தால் இன்னது பயக்கும் என்று ஆராய்தல் இலராய்ச் செய்த உதவியாகிய ஈரமுடைமையை ஆராயின்;

நன்மை கடலி்ற் பெரிது= அதன் நன்மை கடலினும் பெரிதாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

இவை மூன்றுபாட்டானும் முறையே காரணமின்றிச் செய்ததூஉம், காலத்தினாற் செய்ததூஉம், பயன்தூக்காராய்ச் செய்ததூஉம் அளவிலவாதல் கூறப்பட்டது.

# திருக்குறள் **104 (**திைனத்துணை**)**

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
    தினை துணை நன்றி செயினும் பனை துணையா
கொள்வர் பயன்றெரி வார்
    கொள்வர் பயன் தெரிவார். (04)

பரிமேலழகர் உரை

**(**இதன்பொருள்**):**

தினைத்துணை நன்றி செயினும்= தமக்குத்தினை அளவிற்றாய உபகாரத்தை ஒருவன் செய்தானாயினும்;

பனைத்துணையாக் கொள்வர் பயன் தெரிவார்= அதனை அவ்வளவிற்றாகக் கருதாது பனையளவிற்றாகக் கருதுவர் அக்கருத்தின் பயன் தெரிவார்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'தினை' 'பனை' என்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சில அளவை. அக்கருத்தின் பயனாவது அங்ஙனங் கருதுவார்க்கு வரும் பயன்.

# திருக்குறள் **105 (**உதவிவரைத்**)**

உதவி வரைத்தன் றுதவி யுதவி
    உதவி வரைத்து அன்று உதவி உதவி

செயப்பட்டார் சால்பின் வரைத்து.

செயப்பட்டார் சால்பின் வரைத்து (05)

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்):

உதவி உதவி வரைத்து அன்று= கைம்மாறான உதவி காரணத்தானும் பொருளானும் காலத்தானுமாகிய் மூவகையானும் முன்செய்த உதவியளவிற்றன்று;

உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து= அதனைச் செய்வித்துக் கொண்டவர்தம் அமைதி யளவிற்று.

பரிமேலழகர் உரை விளக்கம்

சால்பு எவ்வளவு பெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதாம் என்பார் 'சால்பின் வரைத்து' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் மூன்றும் அல்லாத உதவி மாத்திரமும், அறிவார்க்குச் செய்தவழிப் பெரிதாம் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் 106 (மறவற்க)

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க

மறவற்க மாசு அற்றார் கேண்மை துறவற்க

துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

துன்பத்துள் துப்பாயார் நட்பு. (06)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்):

துன்பத்துள் துப்பு ஆயார் நட்புத் துறவற்க= துன்பக்காலத்துத் தனக்குப் பற்றுக்கோடாயினாரது நட்பை விடாதொழிக;

மாசு அற்றார் கேண்மை மறவற்க= அறிவு ஒழுக்கங்களிற் குற்றம் அற்றாரது கேண்மையை மறவாது ஒழிக.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'கேண்மை' கேளாந்தன்மை. இம்மைக்குறுதி கூறுவார் மறுமைக்குறுதியும் உடன் கூறினார்.

# திருக்குறள் 107 (எழுமையெழு)

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்

எழுமை எழு பிறப்பும் உள்ளுவர் தம் கண்

விழுமந் துடைத்தவர் நட்பு.

விழுமம் துடைத்தவர் நட்பு (07)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்)

தங்கண் விழுமம் துடைத்தவர் நட்பு= தங்கண் எய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை;

எழுமை எழு பிறப்பும் உள்ளுவர்= எழுமையினையுடைய தம் எழுவகைப் பிறப்பினும் நினைப்பர் நல்லோர்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'எழுமை' யென்றது வினைப்பயன் தொடரும் ஏழு பிறப்பினை;

அது 'வளையாபதி'யுட் கண்டது. எழுவகைப்பிறப்பும் மேலே உரைத்தாம் (திருக்குறள்: 62). விரைவு தோன்ற 'துடைத்தவர்' என்றார். நினைத்தலாவது, துன்பந் துடைத்தலான் அவர்மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறுந் தொடர்ந்து, அன்புடையராதல்.

இவை இரண்டு பாட்டானும் நன்றி செய்தாரது நட்பு விடலாகாது என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் **108** (நன்றிமறப்பது)

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல

நன்றி மறப்பது நன்று அன்று நன்று அல்லது

தன்றே மறப்பது நன்று.

அன்றே மறப்பது நன்று (08)

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்)

நன்றி மறப்பது நன்று அன்று= ஒருவன் முன் செய்த நன்மையை மறப்பது ஒருவற்கு அறனன்று;

நன்றல்லது அன்றே மறப்பது நன்று= அவன் செய்த தீமையைச் செய்தபொழுதே மறப்பது அறன்.

பரிமேலழகர் உரை விளக்கம்

இரண்டும் ஒருவனாற் செய்யப்பட்டவழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு.

# திருக்குறள் 109 (கொன்றன்ன)

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
　　கொன்று அன்ன இன்னா செயினும் அவர் செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.
　　ஒன்று நன்று உள்ள கெடும் (09)

பரிமேலழகர் உரை
　　(இதன்பொருள்):
　　கொன்று அன்ன இன்னா செயினும்= தமக்கு முன்னொரு நன்மை செய்தவரு பின் கொன்றால் ஒத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும்;
　　அவர்செய்த நன்று ஒன்று உள்ளக் கெடும்= அவையெல்லாம் அவர்செய்த நன்மை ஒன்றினையும் நினைக்க இல்லையாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்
　　தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப்படுதலின் அவ்வொன்றுமே அவற்றையெல்லாங் கெடுக்கும் என்பதாம்.
　　இதனான் நன்றல்லது அன்றே மறக்குந் திறங்கூறப்பட்டது.

# திருக்குறள் 110 (எந்நன்றி)

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
　　எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் உய்வு இல்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (10)

திருக்குறள் பரிமேலழகர் உரை

(இதன்பொருள்):

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம்= பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தின் நீங்கும் வாயில் உண்டாம்;

செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வு இல்லை= ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃதில்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை அறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், குரவர்த்

தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல் (புறநானூறு-34).

இதனாற் செய்ந்நன்றி கோறலின் கொடுமை கூறப்பட்டது.

திருக்குறள் அறத்துப்பால்

இல்லறவியல்

அதிகாரம் 12.நடுவுநிலைமை

# பரிமேலழகர் உரை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

நடுவு நிலைமை :அஃதாவது, பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்பநிற்கு நிலைமை. இது நன்று செய்தார்மாட்டு அந்நன்றியினை நினைத்தவழிச் சிதையுமன்றே. அவ்விடத்துஞ் சிதையலாகாது என்றற்கு, செய்ந்நன்றியறிதலின்பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **111 (**தகுதியென**)**

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

தகுதி என ஒன்று நன்றே பகுதியான்
பால் பட்டு ஒழுக பெறின்.(01)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தகுதி என ஒன்று நன்றே- நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓர் அறமுமே நன்று;

பகுதியான் பாற்பட்டு ஒழுகப் பெறின்= பகை நொதுமல் நண்பு என்னும் பகுதிதோறும் தன் முறைமையை விடாது ஒழுகப்பெறின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தகுதியுடையதனைத் தகுதி என்றார். "ஊரானோர் தேவகுலம்" என்பது போலப் பகுதியான் என்புழி ஆறன் உருபு தோறும் என்பதன் பொருட்டாய் நின்றது. பெறின் என்பது, அவ்வொழுக்கத்து அருமை தோன்ற நின்றது.

இதனான் நடுவுநிலைமையது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் 112 (செப்பமுடையவன்)

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவு இன்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. (02)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

செப்பம் உடையவன் ஆக்கம்= நடுவுநிலைமையை உடையவனது செல்வம்;

சிதைவு இன்றி எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து= பிறர் செல்வம்போல் அழிவின்றி அவன் வழியின் உள்ளார்க்கும் வலியாதலை உடைத்து.

பரிமேலழகர் உரைவிளக்கம்

விகாரத்தால் தொக்க எச்ச உம்மையான் இறக்குந்துணையும் அவன் தனக்கும் ஏமாப்புடைத்து என்பது பெற்றாம். அறத்தொடு வருதலின் அன்னதாயிற்று. தான் இறந்து எஞ்சி நிற்பது ஆகலின், 'எச்சம்' என்றார்.

# திருக்குறள் **113 (**நன்றேதரினும்**)**

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

நன்றே தரினும் நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். (03)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

நன்றே தரினும்= தீங்கன்றி நன்மையே பயந்ததாயினும்;

நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை அன்றே ஒழிய விடல்= நடுவுநிற்றலை ஒழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே யொழிய விடுக.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நன்மை பயவாமையின், 'நன்றே தரினும்' என்றார். இகத்தலான் என்பது இகந்து எனத் திரிந்து நின்றது.

இவையிரண்டு பாட்டானும் முறையே நடுவுநிலைமையான் வந்த செல்வம் நன்மைபயத்தலும், ஏனைச்செல்வம் தீமைபயத்தலுங் கூறப்பட்டன.

# திருக்குறள் 114 (தக்கார்)

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

தக்கார் தகவு இலர் என்பது அவர்அவர்
எச்சத்தால் காணப்படும் (04)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

தக்கார் தகவிலர் என்பது= இவர் நடுவுநிலைமை யுடையர், இவர் நடுவு நிலைமையிலர் என்னும் விசேடம்;

அவர் அவர் எச்சத்தால் காணப்படும்= அவரவருடைய நன்மககளது உண்மையானும், இன்மையானும் அறியப்படும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

தக்கார்க்கு எச்சம் உண்டாதலும், தகவிலார்க்கு இல்லையாதலும் ஒருதலையாகலின், இருதிறததாரையும் அறிதற்கு அவை குறியாயின.

இதனால், தககாரையும் தகவிலாரையும் அறியுமாறு கூறப்பட்டது.

# திருக்குறள் 115 (கேடும் பெருக்கமும்)

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

கேடும் பெருக்கமும் இல் அல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி (05)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

கேடும் பெருக்கமும் இல் அல்ல= தீவினையாற் கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கு முன்னே அமைந்து

கிடந்தன;

நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கு அணி= அவ்வாற்றை அறிந்து அவை காரணமாக மனததின்கட் கோடாமையே அறிவான் அமைந்தார்க்கு அழகாவது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அவை காரணமாகக் கோடுதலாவது, அவை இப்பொழுது வருவனவாகக் கருதிக் கேடுவாராமையைக் குறித்தும் பெருக்கம் வருதலைக்குறித்தும் ஒருதலைக்கண்நிற்றல். அவற்றிற்குக் காரணம் பழவினையே; கோடுதலன்று என உண்மையுணர்ந்து நடுவுநிற்றல் சால்பினை யழகு செய்தலின், சான்றோர்க்கணி யென்றார்.

# திருக்குறள் 116 (கெடுவல்யான்

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்.

கெடுவல் யான் என்பது அறிக தன் நெஞ்சம்
நடுவு ஒரீஇ அல்ல செயின் (06)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தன் நெஞ்சம் நடுவு ஒரீஇ அல்ல செயின்= ஒருவன் தன்னெஞ்சம் நடுவுநிற்றலை யொழிந்து நடுவல்லவற்றைச் செய்ய நினைக்குமாயின்;

யான் கெடுவல் என்பது அறிக= அந்நினைவை யான் கெடக்கடவேன் என்று உணரும் உற்பாதமாக அறிக.

பரிமேலழகர் உரை விளககம்

நினைத்தலும் செய்தலோடு ஒக்கும் ஆகலின், செயின் என்றார்.

# திருக்குறள் 117 (கெடுவாக)

கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு

கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு(07)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

நடுவாக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு= நடுவாக நின்று அறததின்கண்ணே தங்கினவனது வறுமையை;

கெடுவாக வையாது உலகு= வறுமையென்று கருதார் உயர்ந்தோர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

கெடுவென்பது முதனிலைத்தொழிற்பெயர். செல்வம் என்று கொள்ளுவர் என்பது குறிப்பெச்சம்.

இவை மூன்று பாட்டானும் முறையே கேடும் பெருக்கமும் கோடுதலான் வாரா வென்பதூஉம், கொடுதல் கேட்டிற்கு ஏதுவாம் என்பதூஉம், கோடாதவன் தாழ்வு கேடுஅன்று என்பதூஉம் கூறப்பட்டன.

# திருக்குறள் 118 (சமன்செய்து)

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி (08)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல்= முன்னே தான்சமனாகநின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல
அமைந்து ஒருபால் கோடாமை சான்றோர்க்கு அணி= இலக்கணங்களான் அமைந்து ஒருபக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உவமையடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற் கோடாமையும் உவமைக்கண்ணும் கூட்டி, சான்றோர் சீர்தூக்கலாவது, தொடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறு உணர்தலாகவும், ஒருபாற் கோடாமையாவது, அவ்வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதலாகவும் உரைக்க. இலக்கணங்களான் அமைதல் இருவழியும் ஏற்பன கொள்க.

# திருக்குறள் 119 (சொற்கோட்ட)

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

சொல் கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உள் கோட்டம் இன்மை பெறின் (09)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

செப்பம் சொல் கோட்டம் இல்லது= நடுவுநிலைமையாவது, சொல்லின்கட் கோடுதல் இல்லாததாம்;

உள்கோட்டம் இன்மை ஒருதலையாப் பெறின்= அஃது அன்னதாவது, மனத்தின்கட் கோட்டம் இன்மையைத் திண்ணிதாகப் பெறின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'சொல்' ஊழான் அறுத்துச் சொல்லும் சொல். காரணம்பற்றி ஒருபாற் கோடாத மனத்தோடு கூடுமாயின், அறங்கிடந்தவாறு சொல்லுதல் நடுவுநிலைமையாம் எனவே, அதனோடு கூடாதாயின் அவ்வாறு சொல்லுதல் நடுவுநிலைமை அன்று என்பது பெறப்பட்டது.

# திருக்குறள் 120 (வாணிகஞ்)

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தம போல் செயின் (10)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பிறவும் தமபோல் பேணிச் செயின்= பிறர் பொருளையுந் தம் பொருள்போலப் பேணிச் செய்யின்;

வாணிகம் செய்வார்க்கு வாணிகம்= வாணிகஞ் செய்வார்க்கு நன்றாய வாணிகமாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பிறவுந் தமபோற் செய்தலாவது, கொள்வது மிகையுங் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்ப நாடிச் செய்தல்.

இப்பாட்டு மூன்றனுள், முன்னைய இரண்டும் அவையத்தாரை நோக்கின; ஏனையது வாணிகரை நோக்கிற்று, அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச்சிறந்தமையின்.

# இல்லறவியல்

# அதிகாரம் **13** அடக்கமுடைமை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

அஃதாவது, மெய், மொழி மனங்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்குத லுடையனாதல்.அஃது ஏதிலார் குற்றம்போல் தன் குற்றமும் காணும் நடுவுநிலைமையுடையாற்கு ஆதலின், இது நடுவுநிலைமையின்பின் வைக்கப்பட்டது.

# திருக்குறள் **121 (**அடக்தம்அமர**)**

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும்.

பரிமேலழகர் உரை **(**இதன்பொருள்**)**

அடக்கம் அமரருள் உய்க்கும்= ஒருவனை அடக்கமாகிய அறம் பின் தேவருலகத்து உய்க்கும்;

அடங்காமை ஆர் இருள் உய்த்து விடும்= அடங்காமையாகிய பாவம் தங்குதற்கரிய இருளின்கட் செலுத்தும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

இருள் என்பது ஓர் நரகவிசேடம்.

"எல்லாம், பொருளிற் பிறந்துவிடும்"(நான்மணிக்கடிகை-07) என்றாற் போல `உய்த்துவிடும் என்பது ஒருசொல்லாய் நின்றது.

# திருக்குறள் 122 (காக்க)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின் ஊஉங்கு இல்லை உயிர்க்கு

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை= உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை;

அடக்கத்தைப் பொருளாக் காக்க= ஆகலான் அவ் வடக்கத்தை உறுதிப்பொருளாகக் கொண்டு அழியாமற் காக்க.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உயிர் என்பது சாதிஒருமை. அஃது ஈண்டு மக்களுயிர்மேல் நின்றது; அறிந்தடங்கிப் பயன் கொள்வது அதுவேயாகலின்.

# திருக்குறள் 123 (செறிவறிந்து)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்

செறிவு அறிந்து சீர்மை பயக்கும் அறிவு அறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

அறிவு அறிந்து ஆற்றின் அடங்கப் பெறின்= அடங்குதலே நமக்கு அறிவாவது என்று அறிந்து நெறியானே ஒருவன் அடங்கப்பெறின்;

செறிவு அறிந்து சீர்மை பயக்கும்= அவ்வடக்கம் நல்லோரான் அறியப்பட்டு அவனுக்கு விழுப்பத்தைக் கொடுக்கும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இல்வாழ்வானுக்கு அடங்கு நெறியாவது, மெய்ம்முதன் மூன்றும் தன்வயத்தனாதல்.

# திருக்குறள் 124 (நிலையிற்)

நிலையிற் றிரியாது அடங்கியான றோற்ற
மலையினு மாணப் பெரிது

நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்= இல்வாழ்க்கையாகிய தன் நெறியின் வேறுபடாது நின்று அடங்கியவனது உயர்ச்சி;

மலையினும் மாணப் பெரிது= மலையின் உயர்ச்சியினும் மிகப் பெரிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'திரியாது அடங்குதல்' பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். மலை ஆகுபெயர்.

# திருக்குறள் 125 (எல்லார்க்கும்)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பணிதல் எல்லார்க்கும் நன்றாம்= பெருமிதம் இன்றி அடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றே யெனினும்;

அவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து= அவ்வெல்லாருள்ளுஞ் செல்வம் உடையார்க்கே வேறொரு செல்வமாஞ்சிறப்பினையுடைத்து.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பெருமிதத்தினைச் செய்யுங் கல்வியுங் குடிப்பிறப்பும் உடையார், அஃதின்றி அவை தம்மானே அடங்கியவழி அவ் அடக்கம் சிறந்து காட்டாதாகலின், 'செல்வர்க்கே செல்வந் தகைத்து' என்றார்.

செல்வத்தகைத்து என்பது மெலிந்து நின்றது. பொது என்பாரையும் உடம்பட்டுச் சிறப்பாதல் கூறியவாறு.

இவை ஐந்து பாட்டானும் பொதுவகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் 126 (ஒருமையுள்)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து

ஒருமையுள் ஆமை போல் ஐந்து அடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஆமைபோல் ஒருமையுள் ஐந்து அடக்கல் ஆற்றின்= ஆமைபோல ஒருவன் ஒருபிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்கவல்லனாயின்;

எழுமையும் ஏமாப்பு உடைத்து= அவ்வன்மை அவனுக்கு எழுபிற்ப்பின்கண்ணும் அரணாதலை உடைத்து.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஆமை ஐந்து உறுப்பினையும் இடர் புகுதாமல் அடக்குமாறுபோல இவனும் ஐம்பொறிகளையும் பாவம் புகுதாமல் அடக்கவேண்டும் என்பார் 'ஆமைபோல்` என்றார். ஒருமைக்கட் செய்த வினையின்பயன் எழுமையுந் தொடருமென்பது இதனான் அறிக. இதனான் மெய்யடக்கம் கூறப்பட்டது.

# திருக்குறள் 127 (யாகாவாராயினு)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு

யாகாவா ராயினும் நா காகக காவாக்கால்

சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு.

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

யாகாவாராயினும் நா காகக= தம்மாற் காக்கப்படுவன எல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும் நாவொன்றனையும் காக்க;

காவாக்கால் சொல் இழுக்குப்பட்டுச் சோகாப்பர்= அதனைக் காவாராயின் சொற்குற்றத்தின்கட் பட்டுத் தாமே துன்புறுவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

யாவென்பது அஃறிணைப் பன்மை வினாப்பெயர். அஃது ஈண்டு எஞ்சாமை உணரநின்றது. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. சொற்குற்றம் சொல்லின்கட் டோன்றும் குற்றம். அல்லாப்பர், செம்மாப்பர் என்பன போலச் சோகாப்பர் என்பது ஒருசொல்.

# திருக்குறள் 128 (ஒன்றானுந்)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்

ஒன்றானும் தீ சொல் பொருள் பயன் உண்டாயின்
நன்று ஆகாதாகி விடும்.

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒன்றானும் தீ சொல் பொருட்பயன் உண்டாயின்= தீயவாகிய சொற்களின் பொருள்களாற் பிறக்குவருந் துன்பம் ஒன்றாயினும் ஒருவன்பக்கல் உண்டாவதாயின்;

நன்று ஆகாதாகி விடும்= அவனுக்குப் பிற அறங்களால் உண்டான நன்மை தீதாய் விடும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தீய சொல்லாவன, தீங்குபயக்கும் பொய், குறளை, கடுஞ்சொல் என்பன. 'ஒருவன் நல்லதாகச் சொல்லும் சொற்களின் கண்ணே ஒன்றாயினும் தீச்சொற்படும் பொருளினது பயன் பிறர்க்கு உண்டாவதாயின்' என்று உரைப்பாரும் உளர் #.

#(இவ்வாறு கூறுபவர் மணக்குடவர்)

# திருக்குறள் 129 (தீயினாற்)

தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு

தீயினால் சுட்ட புண் உள் ஆறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தீயினால் சுட்ட புண் உள் ஆறும்= ஒருவனை யொருவன் தீயினால் சுட்ட புண் மெய்க்கண் கிடப்பினும் மனத்தின்கண் அப்பொழுதே ஆறும்;

நாவினால் சுட்ட வடு ஆறாது= அவவாறு அன்றி வெவ்வுரையை உடைய நாவினால் சுட்டவடு அதன்கண்ணும் எஞ்ஞான்றும் ஆறாது.

பரிமேலழகர் உரை விளக்கம்

ஆறிப்போதலால், தீயினாற் சுட்டதனைப் புண் என்றும், ஆறாது கிடத்தலால் நாவினாற் சுட்டதனை வடு என்றும் கூறினார். தீயும், வெவ்வுரையும் சுடுதல் தொழிலான் ஒக்குமாயினும், ஆறாமையால் தீயினும் வெவ்வுரை கொடிது என்பது

போதரலின், இது 'குறிப்பான் வந்த வேற்றுமை அலங்காரம்'.
இவை மூன்று பாட்டானும் மொழியடக்கம் கூறப்பட்டது.

# திருக்குறள் 130 (கதங்காத்து)

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து

கதம் காத்து கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம் பார்க்கும் ஆற்றின் நுழைந்து

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

கதம் காத்துக் கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி= மனத்தின்கண் வெகுளி தோன்றாமல் காத்துக் கலவியுடையனாய் அடங்குதலை வல்லவனது செவ்வியை;
அறம் பார்க்கும் ஆற்ிறன் நுழைந்து= அறக்கடவுள் பாராநிற்கும் அவனை அடையும்நெறியின்கண் சென்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அடங்குதல் மனம் புறத்துப் பரவாது அறத்தின்கண்ணே நிற்றல். 'செவ்வி' தன்குறை கூறுதற்கேற்ற மனமொழி முகங்கள் இனியனாம் காலம். இப்பெற்றியானை அறம் தானே சென்று அடையும் என்பதாம்.
இதனானே மனவடக்கம் கூறப்பட்டது.

# அதிகாரம் **14.** ஒழுக்கமுடைமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினை யுடையராதல். இது மெய்ம்முதலிய அடங்கினார்க்கல்லது முடியாதாகலின், அடக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

== திருக்குறள் 131 (ஒழுக்கம்) ==

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும் (01)

பரிமேலழகர் உரை(இதன்பொருள்): ஒழுக்கம் விழுப்பம் தரலான்= ஒழுக்கம் எல்லார்க்கும் சிறப்பினைத் தருதலான்; ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்= அவ்வொழுக்கம் உயிரினும் பாதுகாக்கப்படும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்: உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பம் தருதலின், பொதுப்படக் கூறினார். சுட்டுவருவிக்கப்பட்டது. அதனால் அவ்விழுப்பம் தருவதாயது ஒழுக்கம் என்பது பெற்றாம். உயிர் எல்லாப்பொருளினும் சிறந்ததாயினும் ஒழுக்கம்போல விழுப்பம் தாராமையின், 'உயிரினும் ஓம்பப்படும்' என்றார்.

# திருக்குறள் 132 (பரிந்தோம்பிக்)

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃ்தே துணை

பரிந்து ஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்து ஓம்பித்
தேரினும் அஃ்தே துணை

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒழுக்கம் ஓம்பிப் பரிந்து காக்க= ஒழுக்கத்தினை ஒன்றானும் அழிவுபடாமற் பேணி வருந்தியும் காக்க;
தெரிந்து ஓம்பித் தேரினும் துணை அஃ்தே= அறங்கள் பலவற்றையு்ம் ஆராய்ந்து இவற்றுள் இருமைக்கும் துணையாவது யாதென்று மனத்தை யொருக்கித் தேர்ந்தாலும் துணையாய் முடிவது அவ்வொழுக்கமே யாகலான்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'பரிந்தும்' என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. இவை இரண்டு பாட்டானும் ஒழுக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் 133 (ஒழுக்கமுடைமை)

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒழுக்கம் உடைமை குடிமை= எல்லார்க்கும் தத்தம் வருணத்திற்கு ஏற்ற ஒழுக்கமுடைமை குலனுடைமையாம்;

இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்= அவ்வொழுக்கத்தில் தவறுதல் அவ்வருணத்தில் தாழ்ந்த வருணமாய்விடும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும் ஒழுக்கமுடையாராக உயர்குலத்தவராகலின், குடிமையாம் என்றும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும், ஒழு்க்கத்தில் தவறத் தாழ்ந்த வருணத்தவராகலின் இழிந்த பிறப்பாய் விடும் என்றும் கூறினார். உள்வழிப்படும் குற்றத்தினும் இல்வழிப்படும் குற்றம் பெரிது என்றவாறு. பயன் இடையீடின்றி எய்துதலின், அவ்விரைவுபற்றி அவ்வேதுவாகிய வினைகளே பயனாக ஓதப்பட்டன.

# திருக்குறள் 134 (மறப்பினும்)

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்

மறப்பினும் ஓத்துக் கொளல் ஆகும் பார்ப்பான்
பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடு்ம்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஓத்து மறப்பினும் கொளல் ஆகும்= கற்ற வேதத்தினை மறந்தான் ஆயினும் அவ்வருணம் கெடாமையிற் பின்னும் அஃது ஓதிக் கொளலாம்;

பார்ப்பான் பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும்= அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கம் குன்றக் கெடும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மறந்தவழி இழிகுலத்தனாம் ஆகலின், மறக்கலாகாது என்னும் கருத்தான் 'மறப்பினும்' என்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின் இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்.

# திருக்குறள் 135 (அழுக்காறுடையான்)

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு

அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று= அழுக்காறு உடையான்மாட்டு ஆக்கம் இல்லாதாற்போல; ஒழுக்கம் இலான்கண் உயர்வு இல்லை= ஒழுக்கம் இல்லாதவன் மாட்டும் உயர்ச்சியில்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உவமையான் ஒழுக்கம் இல்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சியில்லை யென்பது பெற்றாம். என்னை? "கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்ற"மும் *(குறள்:166)* நல்கூர்தலின். 'உயர்வு' உயர்குலமாதல்.

## திருக்குறள் **136 (**ஒழுக்கத்தினொல்கார்**)**

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக்கு அறிந்து (06)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்= செய்தற்கு அருமை நோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார் மனவலியுடையார்;
இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து= அவ்விழுக்கத்தால் தமக்கு இழிகுலமாகிய குற்றம் உண்டாமாற்றை அறிந்து.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஒழுக்கத்திற் சுருக்கம் அதனை உடையார்மேல் ஏற்றப்பட்டது. கொண்ட விரதம் விடாமை பற்றி 'உரவோர்' என்றார்.

## திருக்குறள் **137 (**ஒழுக்கத்தினெய்துவர்**)**

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி (07)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர்= எல்லாரும் ஒழுக்கத்தானே

மேம்பாட்டை எய்துவர்;
இழுக்கத்தின் எய்தாப் பழி எய்துவர்= அதனினின்று இழுக்குதலானே தாம் எய்துதற்கு உரித்தல்லாத பழியை எய்துவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்
பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம் பற்றி உலகம் அடுக்கும் என்று கொள்ளுமாகலின், 'எய்தாப் பழி' எய்துவர் என்றார்.
இவை ஐந்துபாட்டானும் ஒழுக்கம் உள்வழிப்படுங்குணமும், இல்வழிப்படும் குற்றமும் கூறப்பட்டன.

# திருக்குறள் 138 (நன்றிக்கு)

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும் (08)

நன்றிக்கு வித்து ஆகும் நல் ஒழுக்கம் தீ ஒழுக்கம்
என்றும் இடும்பை தரும்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)
நல்லொழுக்கம் நன்றிக்கு வித்து ஆகும்= ஒருவனுக்கு நல்லொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்;
தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும்= தீய ஒழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினும் துன்பம் பயக்கும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்
'நன்றிக்கு வித்தாகும்' என்றதனால், தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும், 'இடும்பை தரும்' என்றதனால் நல்லொழுக்கம்

இன்பந் தருதலும் பெற்றாம். ஒன்றுநின்றே ஏனையதை முடிக்கும் ஆகலின், இதனாற் பின்விளைவு கூறப்பட்டது.

## திருக்குறள் 139 (ஒழுக்கமுடையவர்க்)

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல் (09)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

வழுக்கியும் தீய வாயால் சொலல்= மறந்துந் தீயசொற்களைத் தம் வாயாற் சொல்லும் தொழில்கள்;

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லா= ஒழுக்கம் உடையவர்க்கு முடியா.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தீயசொற்களாவன: பிறர்க்குத் தீங்குபயக்கும் பொய்ம் முதலியனவும், வருணத்திற்கு உரியஅல்லனவும் ஆம். அவற்றது பன்மையாற் சொல்லுதல் தொழில் பலவாயின. 'சொலல்' சாதியொருமை. சொல்லெனவே அமைந்திருக்க 'வாயால்' என வேண்டாது கூறினார். நல்லசொற்கள் பயின்றது எனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு. இதனை வடநூலார் 'தாற்பரியம்' என்ப.

## திருக்குறள் 140 (உலகத்தோடு)

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்

உலகத்தொடு ஒட்ட ஒழுகல் பல கற்றும்
கல்லார் அறிவிலாதார் (10)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார்= உலகத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதார்;

பல கற்றும் அறிவிலாதார்= பல நூல்களையுங் கற்றாராயினும் அறிவிலாதார்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'உலகத்தோடு பொருந்த ஒழுகுத'லாவது, உயர்ந்தோர் பலரும் ஒழுகியவாற்றான் ஒழுகுதல். அறநூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதன ஒழிந்து, சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு வருதலான், அவையும் அடங்க 'உலகத்தோ டொட்ட' வென்றுும், கல்விக்குப் பயன் அறிவும், அறிவிற்குப் பயன் ஒழுக்கமும் ஆகலின், அவ்வொழுகுதலைக் கல்லாதார் 'பல கற்றும் அறிவிலாதார்' என்றும் கூறினார். ஒழுகுதலைக் கற்றலாவது, அடிப்படுதல்.

இவை இரண்டு பாட்டானும், சொல்லானும், செயலானும் வரும் ஒழுக்கங்கள் எல்லாம் ஒருவாற்றாற் றொகுத்துக் கூறப்பட்டன.

# அதிகாரம் **15.** பிறனில் விழையாமை

# பரிமேலழகர் உரை

## அதிகார முன்னுரை

அஃதாவது, காம மயக்கத்தாற் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது, ஒழுக்கமுடையார் மாட்டே நிகழ்வதாகலின், 'ஒழுக்கமுடைமை'யின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **141 (**பிறன்பொருளாட்**)**

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்

பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம் பொருள் கண்டார்கண் இல் (01)

பரிமேலழகர் உரை **(**இதன் பொருள்**)**

பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை= பிறனுக்குப்

பொருளாந் தன்மையை உடையாளைக் காதலித்து ஒழுகுகின்ற அறியாமை;

ஞாலத்து அறம் பொருள் கண்டார்கண் இல்= ஞாலத்தின்கண் அறநூலையும் பொருள்நூலையும் ஆராய்ந்து அறிந்தார்மாட்டு இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

'பிறன் பொருள்' பிறனுடைமை. 'அறம், பொருள்' என்பன ஆகுபெயர். செவ்வெண்ணின் தொகை தொக்குநின்றது. இன்பம் ஒன்றையே நோக்கும் இன்பநூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் பரகீயம் (=பிறர்க்கு உரியது) என்று கூறுவாராகலின், 'அறம்பொருள் கண்டார்கண் இல்' என்றார். எனவே, அப்பேதைமை உடையார்மாட்டு அறமும் பொருளும் இல்லை யென்பது பெறப்பட்டது.

# திருக்குறள் **142** (அறன்கடை)

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்

அறன் கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல் (02)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

அறன் கடை நின்றாருள் எல்லாம்= காமம் காரணமாகப் பாவத்தின்கண் நின்றார் எல்லாருள்ளும்;

பிறன்கடை நின்றாரின் பேதையார் இல்= பிறன் இல்லாளைக் காதலித்து அவன் வாயிற்கண் சென்றுநின்றார் போலப்

பேதையார் இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

அறத்தின் நீக்கப்பட்டமையின், 'அறன்கடை' என்றார். அறன்கடை நின்ற பெண்வழிச்செல்வாரும், வரைவின் மகளிரோடும், இழிகுல மகளிரோடுங் கூடி இன்பநுகர்வாரும் போல அறமும் பொருளும் இழத்தலேயன்றிப் 'பிறன்கடை நின்றார்' அச்சத்தால் தாம்கருதிய இன்பமும் இழக்கின்றார் ஆகலின், 'பேதையார் இல்' என்றார்; எனவே இன்பமும் இல்லை என்பது பெறப்பட்டது.

# திருக்குறள் **143 (**விளிந்தாரின்**)**

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்

விளிந்தாரின் வேறு அல்லர் மன்ற தெளிந்தார் இல்
தீமை புரிந்து ஒழுகுவார் (03)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார்= தம்மை ஐயுறாதார் இல்லாள் கண்ணே பாவம் செய்தலை விரும்பி ஒழுகுவார்;
விளிந்தாரின் வேறு அல்லர்= உயிருடையவரேனும் இறந்தாரே யாவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அறம் பொருள் இன்பங்களாகிய பயன் உயிர் எய்தாமையின், 'விளிந்தாரின் வேறல்லர்' என்றும், அவர் தீமை புரிந்து ஒழுகுவது இல்லுடையவரது தெளிவுபற்றி யாகலின் 'தெளிந்தார் இல்' என்றும் கூறினார்.

# திருக்குறள் **144** (எனைத்துணையர்)

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்

எனைத் துணையர் ஆயினும் என்னாம் தினைத் துணையும்
தேரான் பிறன் இல் புகல் (04)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

எனைத் துணையர் ஆயினும் என்னாம்= எத்துணைப் பெருமைஉடையர் ஆயினும் ஒருவர்க்கு யாதாய் முடியும்;
தினைத் துணையும் தேரான் பிறன் இல் புகல்= காம மயக்கத்தால் தினையளவமு தம் பிழையை ஓராது பிறனுடைய இல்லின்கண் புகுதல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இந்திரன் போல எல்லாப் பெருமையும் இழந்து சிறுமை எய்தல் நோக்கி 'என்னாம்' என்றார். "என்னீர் அறியாதீர் போல விவை கூறின் நின்னீர வல்ல நெடுந்தகாய்" (பாலைக்கலி- *5)* என்புழிப்போல உயர்த்றகட் பன்மை ஒருமை மயங்கிற்று. 'தேரான் பிறன்' என்பதனைத் தம்மை ஐயுறாத பிறன் என்று உரைப்பாரும் உளர்.

# திருக்குறள் **145** (எளிதென)

எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி

எளிது என இல் இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி (05)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

எளிது என இல் இறப்பான்= எய்துதல் எளிது என்று கருதிப் பின்விளைவு கருதாது பிறன் இல்லின்கண் இறப்பான்;

விளியாது எஞ்ஞான்றும் நிற்கும் பழி எய்தும்= மாய்தலின்றி எஞ்ஞான்றும் நிலைநிற்கும் குடிப்பழியினை எய்தும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இல்லின்கண் இறத்தல், இல்லாள்கண் நெறிகடந்து சேறல். (ப

# திருக்குறள் **146** (பகைபாவம்)

பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்

பகை பாவம் அச்சம் பழி என நான்கும்
இகவாவாம் இல் இறப்பான் கண் (06)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

இல் இறப்பான்கண்= பிறன் இல்லாள்கண் நெறிகடந்து செல்வானிடத்து;

பகை பாவம் அச்சம் பழி என நான்கும் இகவாவாம்= பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும் நீங்காவாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

எனவே இருமையும் இழத்தல் பெற்றாம். இவை ஆறுபாட்டானும்

பிறனில் விழைவான்கட் குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் 147 (அறனியலான்)

அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்

அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறன் இயலாள்
பெண்மை நயவாதவன் (07)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

அறன் இயலான் இல்வாழ்வான் என்பான்= அறனாகிய இயல்போடு கூடி இல்வாழ்வான் என்று சொல்லப்படுவான்;
பிறன் இயலாள் பெண்மை நயவாதவன்= பிறனுக்குரிமை பூண்டு அவனுடைய இயல்பின்கண்ணே நிற்பாளது பெண்தன்மையை விரும்பாதவன்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஆன் உருபு இங்கு உடனிகழ்ச்சிக்கண் வந்தது. இல்லறம் செய்வான் எனப்படுவான் அவனே என்பதாம்.

# திருக்குறள் 148 (பிறன்மனைநோக்காத)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு

பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை சான்றோர்க்கு

அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு (08)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை= பிறன் மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை;

சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு= சால்புடையார்க்கு அறனுமாம், நிரம்பிய ஒழுக்கமுமாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின் அதனை அடக்கிய ஆண்மையைப் 'பேராண்மை' என்றார். 'ஒன்றோ' என்பது எண்ணிடைச்சொல்.

செய்தற்கு அரிய அறனும் ஒழுக்கமும் இதனைச் செய்யாமையே பயக்கும் என்பதாம்.

# திருக்குறள் **149** (நலக்குரியார்)

நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறர்க்குரியா டோடோயா தார்.

நலக்கு உரியார் யார் எனின் நாம நீர் வைப்பில்
பிறர்க்கு உரியாள் தோள் தோயாதார் (09)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

நாம நீர் வைப்பின்= அச்சந் தரும் கடலாற் சூழப்பட்ட உலகத்து;

நலக்கு உரியார் யார் எனின்= எல்லா நன்மைகளும் எய்துதுற்கு உரியார் யாவரெனின்; பிறற்கு உரியாள் தோள் தோயாதார்= பிறன் ஒருவனுக்கு உரிமையாகியாள் உடைய தோளைச்

சேராதார்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப்படாமையின் நாமநீர் என்றார். நலத்திற்கு என்பது நலக்கு எனக் குறைந்து நின்றது. உரிச்சொல் ஈறு திரிந்துநின்றது. இருமையினும் நன்மை எய்துவர் என்பதாம்.

('நாம்' என்றசொல் 'நாம' எனத் திரிந்து வந்தது- மெய்)

# திருக்குறள் 150 (அறன்வரையான்)

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று

அறன் வரையான் அல்ல செயினும் பிறன் வரையான்
பெண்மை நயவாமை நன்று (10)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

அறன் வரையான் அல்ல செயினும்= ஒருவன் அறத்தைத் தனக்கு உரித்தாகச் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும்;

பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று= அவனுக்குப் பிறன் எல்லைக்கண் நிற்பாளது பெண்மையை விரும்பாமை உண்டாயின் அது நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இக்குணமே மேம்பட்டுத் தோனறும் என்பதாம்.

இவை நான்கு பாட்டானும் பிறனில் விழையாதான்கட் குணம் கூறப்பட்டது.

## அதிகாரம் **16.** பொறையுடைமை

# பரிமேலழகர் உரை

## அதிகார முன்னுரை

அஃதாவது, காரணம்பற்றியாதல் மடமையானாதல் ஒருவன் தனக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தலை உடையராதல். நெறியின் நீங்கிய செய்தாரையும், பொறுக்கவேண்டும் என்றற்கு, இது பிறனில் விழையாமை யின்பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **151 (**அகழ்வாரைத்**)**

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை

அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (01)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

அகழ்வார்த் தாங்கும் நிலம்போல= தன்னை அகழ்வாரை வீழாமல் தாங்கும் நிலம்போல;
தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை= தம்மை அவமதிப்பாரைப் பொறுத்தல் தலையாய அறம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்: இகழ்தல் மிகையாயின செய்தலும், சொல்லுதலும்.

# திருக்குறள் 152 (பொறுத்தல்)

பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று (02)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

என்றும் இறப்பினைப் பொறுத்தல்- பொறை நன்று ஆதலால், தாம் ஒறுத்தற்கு இயன்ற காலத்தும் பிறர் செய்த மிகையைப் பொறுக்க;
அதனை மறத்தல் அதனினும் நன்று= அதனை உட்கொள்ளாது அப்பொழுதே மறத்தல் பெறின் அப்பொறையினும் நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மிகை யென்றது, மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலம் உட்கொள்ளப்படுதலின், மறத்தலை 'அதனினு நன்று' என்றார்.

# திருக்குறள் **153** (இன்மையுள்)

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை

இன்மையுள் இன்மை விருந்து ஒரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை (03)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

இன்மையுள் இன்மை விருந்து ஒரால்= ஒருவனுக்கு வறுமையுள் வைத்து வறுமையாவது, விருந்தினரை யேற்றுக்கொள்ளாது நீக்குதல்;
வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை= அதுபோல வன்மையுள் வைத்து வன்மையாவது, அறிவின்மையான் மிகைசெய்தாரைப் பொறுத்தல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இஃது எடுத்துக்காட்டுவமை. அறன்அல்லாத விருந்தொரால் பொருளுடைமை ஆகாதவாறு போல, 'மடவார்ப்பொறை'யும் மென்மையாகாதே வன்மையாம் என்பது கருத்து.

(வன்மை = வலிமை; மெய்)

# திருக்குறள் **154** (நிறையுடைமை)

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும் (04)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

நிறையுடைமை நீங்காமை வேண்டின்= ஒருவன் நிறையுடைமையை தன்கண் நின்று நீங்காமை வேண்டுவனாயின்; பொறையுடைமை போற்றி ஒழுகப் படும்= அவனாற் பொறையுடைமை தன்கண் அழியாமல் காத்து ஒழுகப்படும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பொறையுடைமையாற் கல்லது சால்பு இல்லை என்பது ஆயிற்று. இவை நான்கு பாட்டானும் பொறையுடைமையது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் 155 (ஒறுத்தாரை)

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து (05)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

ஒறுத்தாரை ஒன்றாக வையார்= பிறன் தமக்குத் தீங்கு செய்தவழிப் பொறாது அவனை ஒறுத்தாரை அறிவுடையார் ஒருபொருளாக மனத்துக் கொள்ளார்;

பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து வைப்பர்= அதனைப் பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து கொள்வர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஒறுத்தவர்தாமும் அத்தீங்கு செய்தவனோடு ஒத்தலின், 'ஒன்றாக வையார்' என்றார். பொதிந்து வைத்தல், சால்புடைமைபற்றி இடைவிடாது நினைத்தல்.

# திருக்குறள் **156** (ஒறுத்தார்க்கு)

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்

ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ் (06)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்= தமக்குத் தீங்கு செய்தவனை யொறுத்தார்க்கு உண்டாவது, அவ்வொரு நாளை இன்பமே;
பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ்= அதனைப் பொறுத்தார்க்கு 'உலகம்' அழியும் அளவும் புகழ் உண்டாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'ஒருநாளை யின்பம்' அந்நாளொன்றினும் கருதியது முடித்தேம் எனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றும் ஆதலின்,ஏற்புடை 'உலகு' என்னும் சொல் வருவிக்கப்பட்டது.

# திருக்குறள் **157** (திறனல்ல)

திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று

திறன் அல்ல தன் பிறர் செய்யினும் நோ நொந்து
அறன் அல்ல செய்யாமை நன்று (07)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

திறன் அல்ல தன் பிறர் செய்யினும்= செய்யத் தகாத கொடியவற்றைத் தன்கட் பிறர் செய்தாராயினும்;

நோ நொந்து அறன் அல்ல செய்யாமை நன்று= அவர்க்கு அதனால் வருந்துன்பத்திற்கு நொந்து தான அறன் அல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் ஒருவனு◌்க்கு நன்று.

பரிமேலழகர் உரை விளக்கம்

உம்மை சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது, "உம்மை யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்" (நாலடியார்-58) என்று பரிதல்.

# திருக்குறள் 158 (மிகுதியான்)

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம் தம்
தகுதியான் வென்று விடல் (08)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

மிகுதியான் மிக்கவை செய்தாரை= மனச் செருக்கால் தங்கண் தீயவற்றைச் செய்தாரை;

தாம் தம் தகுதியான் வென்று விடல்= தாம் தம்தகுதியான் வென்று விடல்= தாம் தம்முடைய பொறையான் வென்று விடுக.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தாமும் அவர்கண் தீயவற்றைச் செய்து தோலாது, பொறையான் அவரின் மேம்பட்டு வெல்க என்பதாம். இவை நான்கு பாட்டானும் பிறர் செய்தன பொறுத்தல் சொல்லப்பட்டது.

# திருக்குறள் 159 (துறந்தாரிற்)

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச் சொனோற்கிற் பவர்

துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார் வாய்
இன்னாச் சொல் நோற்கிற்பவர் (09)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

தூறந்தாரின் தூய்மை உடையர்= இல்வாழ்க்கைக்கண் நின்றேயும், துறந்தார்போலத் தூய்மை உடையார்;
இறந்தார் வாய் இன்னாச்சொல் நோற்கிற்பவர்= நெறியைக் கடந்தார் வாய் இன்னாத சொல்லைப் பொறுப்பவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தூய்மை மனமாசின்மை. 'வாய்' என வேண்டாது கூறினார், தீய சொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் இழிபு முடித்தற்கு.

# திருக்குறள் 160 (உண்ணாது)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்

> உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
> இன்னாச் சொல் நோற்பாரின் பின் (10)

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

உண்ணாது நோற்பார் பெரியர்= விரதங்களான் ஊணைத் தவிர்ந்து உற்ற நோயைப் பொறுப்பார் எல்லாரினும் பெரியர்;

பிறர் சொ்ல்லும் இன்னாச் சொல் நோற்பாரின் பின்= அவர் பெரியராவது, தம்மைப் பிறர்சொல்லும் இன்னாத சொல்லைப் பொறுப்பாரின் பின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பிறர் அறிவிலாதார். நோலாமைக்கு ஏதுவாகிய இருவகைப் பற்றோடு நின்றே நோற்றலின் 'இன்னாச் சொல் நோற்பாரிற் பின்' என்றார். இவை இரண்டு பாட்டானும் பிறர் மிகைக்கச் சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது.

# அதிகாரம் **17** அழுக்காறாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

இதனுள் அழுக்காறு என்பது ஒரு சொல். அதற்குப் பொருள் மேலே உரைத்தாம்.**(**குறள்-35)

அச்சொற் பின் அழுக்காற்றைச் செய்யாமை என்னும் பொருள்பட எதிர்மறை ஆகாரமும்**,** மகர ஐகார விகுதியும் பெற்று அழுக்காறாமை என நின்றது. இப்பொறாமையும் பொறைக்கு மறுதலை யாகலின்**,** இதனை விலக்குதற்கு இது பொறையுடைமையின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **161 (**ஒழுக்காறாக்**)**

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் நெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு

ஒழுக்காறாக் கொள்க ஒருவன் தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு (01)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

ஒருவன் தன் நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு= ஒருவன் தன் நெஞ்சத்தின்கண் அழுக்காறு என்னும் குற்றமில்லாத இயல்பினை;

ஒழுக்காறாக் கொள்க= தனக்கு ஓதிய ஒழுக்கநெறியாகக் கொள்க.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இயல்பு, அறிவோடு கூடிய தன்மை. அத்தன்மையும் நன்மை பயத்தலின், ஒழுக்க நெறிபோல உயிரினும் ஓம்புக என்பதாம்.

# திருக்குறள் **162** (விழுப்பேற்றின)

விழுப்பேற்றி னஃ்தொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னல்ல பெறின்

விழுப்பேற்றின் அஃ்து ஒப்பது இல்லை யார்மாட்டும்
அழுக்காற்றின் அல்ல பெறின் (01)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

யார் மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின்- யாவர்மாட்டும் அழுக்காற்றினின்று நீங்குதலை ஒருவன் பெறுமாயின்;

விழுப்பேற்றின் அஃ்து ஒப்பது இல்லை= மற்றவன் பெறும் சீரிய பேறுகளுள் அப்பேற்றினை ஒபபது இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

அழுக்காறு பகைவர் மாட்டும் ஒழிதற்பாற்று என்பார் யார்மாட்டும் என்றார். அன்மை வேறாதல். இவை இரண்டு பாட்டானும், அழுக்காறு இன்மையது குணம் கூறப்பட்டது.

# திருக்குறள் 163 (அறனாக்கம்)

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்

அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன் ஆக்கம்
பேணாது அழுக்கறுப்பான் (03)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான்= மறுமைக்கும் இம்மைக்கும் அறமும் செல்வமுமாகிய உறுப்புக்களைத் தனக்கு வேண்டாதான் என்று சொல்லப்படுவான்;

பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான்= பிறன் செல்வம் கண்டவழி அதற்கு உவவாது அழுக்காற்றைச் செய்வான்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அழுக்கறுத்தல் எனினும், அழுக்காறு எனினும் ஒக்கும். அழுக்காறு செய்யின் தனக்கே ஏதமாம் என்பதாம்.

# திருக்குறள் 164 (அழுக்காற்றின்)

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து (04)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அழுக்காற்றின் அல்லவை செய்யார்= அழுக்காறு ஏதுவாக அறன் அல்லவற்றைச் செய்யார் அறிவுடையார்;

இழுக்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து= அத் தீநெறியால் தமக்கு இருமையினும் துன்பம் வருதலை அறிந்து.

பரிமேலழகர் உரை விளக்கம்

அறன் அல்லவையாவன, செல்வம் கல்வி முதலியன உடையார்கண் தீங்கு நினைத்தலும், சொல்லுதலும், செய்தலும் ஆம்.

# திருக்குறள் 165 (அழுக்காறுடையார்க்)

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது

அழுக்காறு உடையார்க்கு அது சாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடு ஈன்பது (05)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது= அழுக்காறு பகைரை யொழிந்தும் கேடு பயப்பது ஒன்றாகலின்;

அழுக்காறு உடையார்க்கு அது சாலும்= அவ் வழுக்காறு உடையார்க்குப் பகைவர் வேணாடா, கேடு பயத்தற்கு அதுதானே அமையும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அதுவே என்னும் பிரிநிலை ஏகாரம் விகாரத்தால் தொக்கது.

# திருக்குறள் 166 (கொடுப்பதழுக்கறுப்)

கொடுப்ப தழுக்குறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும் (06)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம்= ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதன்கண் அழுக்காற்றைச் செய்வானது சுற்றம்;
உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்= உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதும் இன்றிக் கெடும்

பரிமேலழகர் உரைவிளக்கம்

கொடுப்பதன்கண் அழுக்கறுத்தலாவது, கொடுக்கப்படும் பொருள்களைப்பற்றிப் பொறாமை செய்தல். சுற்றம் கெடும் எனவே, அவன்கேடு சொல்லாமையே பெறப்பட்டது. பிறர்பேறு பொறாமை, தன்பேற்றையே அன்றித் தன் சுற்றத்தின் பேற்றையும் இழப்பிக்கும் என்பதாம்.

# திருக்குறள் 167 (அவ்வித்து)

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும் (07)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அழுக்காறு உடையானை= பிறர் ஆக்கம் கண்டவழிப் பொறமை உடையானை;

செய்யவள் அவ்வித்துத் தவ்வையைக் காட்டி விடும்= திருமகள் தானும் பொறாது தன் தவ்வைக்குக் காட்டி நீங்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'தவ்வை', மூததவள். 'தவ்வையைக் காட்டி' என்பது, "அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானோ" (கலித்தொகை, மருதம்-7) என்பது போல உருபுமயக்கம். மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையன் ஆயினானை யென்று உரைப்பாரும் உளர்.

# திருக்குறள் 168 (அழுக்காறென)

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்

அழு்ககாறு என ஒருபாவி திருச் செற்றுத்
தீயுழி உய்த்து விடும் (08)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அழுக்காறு என ஒரு பாவி= அழுக்காறு என்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி;

திருச் செற்றுத் தீயுழி உய்த்து விடும்= தன்னை உடையானை இம்மைக்கண் செல்வத்தைக் கெடுத்து, மறுமைக்கண் நரகத்தில் செலுத்தி விடும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பண்பிற்குப் பண்பி இல்லையேனும், தன்னை ஆக்கினானை

இருமையும் கெடுத்தற் கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் பாவி என்றார், கொடியானைப் பாவி என்னும் வழக்குண்மையின். இவை ஆறு பாட்டானும், அழுக்காறு உடைமையது குற்றம் கூறப்பட்டது.

## திருக்குறள் 169 (அவ்விய நெஞ்சத்தான்)

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும் (09)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்= கோட்டத்தினைப் பொருந்தியவனைப் பொருந்திய மனத்தை உடையவனது ஆக்கமும்;

செவ்வியான் கேடும் நினைக்கப்படும்= ஏனைச் செம்மையுடையவனது கேடும் உளவாயின் அவை ஆராயப்படும்

பரிமேலழகர் உரை விளக்கம்

'கோட்டம்', ஈண்டு அழுக்காறு. 'உளவாயின்' என்பது எஞ்சி நின்றது. ஆக்கக் கேடுகள் கோட்டமும் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையரால் இதற்கு ஏதுவாகிய பழவினை யாது என்று ஆராயப்படுதலின், 'நினைக்கப்படும்' என்றார். "இம்மைச் செய்தன் யானறி நல்வினை, உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்தித், திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" (சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை,வரிகள்: 91-93)என நினைக்கப்பட்டவாறு அறிக.

# திருக்குறள் **170** (அழுக்கற்றகன்றாரும்)

அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்

அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃது இல்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல் (10)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அழுக்கற்று அகன்றாரும் இல்லை= அழுக்காற்றைச்செய்து பெரியராயினாரும் இல்லை;

அஃது இல்லார் பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்= அச்செயலிலாதார் பெருக்கத்தின் நீங்கினாரும் இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

இவை இரண்டு பாட்டானும் கேடும் ஆக்கமும் வருதற்கு ஏது ஒருங்கு கூறப்பட்டது.

## அதிகாரம் **18** வெஃகாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, பிறர்க்குரிய பொருளை வெளவ்க் கருதாமை. பிறர் உடைமை க்ண்டவழிப் பொறாமையேயன்றி, அதனைத் தான் வெளவக் கருதுதலும் குற்றம் என்றற்கு இஃது அழுக்காறாமையின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **171 (**நடுவின்றி**)**

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்

நடுவு இன்றி நன் பொருள் வெஃகின் குடி பொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும் (01)

பரிமேலழகர் உரை**(**இதன் பொருள்**)**

நடுவு இன்றி நன் பொருள் வெஃகின்= பிறர்க்கு உரியன் கோடல் நமக்கு அறன் அன்று என்னும் நடுவுநிலைமை இன்றி அவர்

நன்பொருளை ஒருவன் வெஃகுமாயின்;

குடிபொன்றிக் குற்றமும் ஆங்கேதரும்= அவ் வெஃகுதல், அவன் குடியைக் கெடச்செய்து, பல குற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

குடியை வளரச்செய்து, பலநன்மையும் பயக்கும் இயல்புபற்றி, பொருள் வெஃகின் என்பார், 'நன்பொருள் வெஃகின்' என்றார். பொன்ற வென்பது, 'பொன்றி' எனத் திரிந்து நின்றது. 'செய்து' என்பது சொல்லெச்சம்.

## திருக்குறள் **172 (**படுபயன்**)**

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்

படு பயன் வெஃகி்ப் பழிப்படுவ செய்யார்
நடுவு அன்மை நாணுபவர் (2)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

படு பயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்= பிறர் பொருளை வௌவினால் தமக்கு வரும் பயனை விரும்பி, அது வௌவுதற்குப் பழியி்ன்கண்ணே படுஞ்செய்ல்களைச் செய்யார்;

நடுவு அன்மை நாணுபவர்= நடுவுநிலைமை யன்மையை அஞ்சுபவர்

பரிமேலழகர் உரைவிளக்கம்

நடுவு, ஒருவன் பொருட்குப் பிறன் உரியனல்லன் என்னும் நடுவு.

# திருக்குறள் 173 (சிற்றின்பம்)

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்

சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டுபவர் (03)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யாரே= பிறர்பால் வெளவிய பொருளால் தாம் எய்தும் நிலையில்லாத இன்பத்தை விரும்பி அவர்மாட்டு அறனல்லாத செயல்களைச் செய்யார்;
மற்றின்பம் வேண்டுபவர்= அறத்தான் வரும் நிலையுடைய இன்பத்தைக் காதலிப்பவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பாவத்தான் வருதலின் அப்பொழுதே அழியும் என்பார், 'சிற்றின்பம்' என்றார். மற்றை இன்பம் என்பது, 'மற்றின்பம்' என நின்றது.

# திருக்குறள் 174 (இலமென்று)

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்

இலம் என்று வெஃகுதல் செய்யார் புலம் வென்ற
புன்மை இல் காட்சியவர் (04)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

இலம் என்று வெஃகுதல் செய்யார்= யாம் வறியம் என்று கருதி அது தீர்தற் பொருட்டுப் பிறர் பொருளை விரும்புதல் செய்யார்;
புலம் வென்ற புன்மையில் காட்சியவர்= ஐம்புலன்களையும் வென்ற குற்றம் இல்லாத காட்சியினை உடையார்.

பரிமேலழகர் உரை விளக்கம்

வெல்லுதல் பாவநெறிக்கண் செல்லவிடாமை. புலம் வென்ற புன்மையில் காட்சியவர்க்கு வறுமை யின்மையின் வெஃகுதலும் இல்லையாயிற்று. புன்மையில் காட்சி பொருள்களைத் திரிபின்றி உணர்தல்.

## திருக்குறள் 175 (அஃகியகன்ற)

அஃகி யகன்ற வறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்

அஃகி அகன்ற அறிவு என்னாம் யார் மாட்டும்
வெஃகி வெறிய செயின் (05)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அஃகி அகன்ற அறிவு என் ஆம்= நுண்ணிதாய் எல்லா நூல்களினும் சென்ற தம்மறிவு என்னபயத்ததாம்?
வெஃகி யார்மாட்டும் வெறிய செயின்= பொருளை விரும்பி யாவர்மாட்டும் அறிவொடு படாத செயல்களை அறிவுடையார் செய்வாராயின்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'யார்மாட்டும் வெறிய செய்த'லாவது, தக்கார்மாட்டும் தகாதார்

மாட்டும் இழிந்தனவும் கடியனவும் முதலியன செய்தல். அறிவிற்குப் பயன் அவை செய்யாமை யாகலின் 'அறிவென்னாம்' என்றார்.

# திருக்குறள் **176 (**அருள்வெஃகி**)**

அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்

அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள் வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும் **(06)**

பரிமேலழகர் உரை**(**இதன் பொருள்**)**

அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான்= அருளாகிய அறத்தை விரும்பி அதற்கு வழியாகிய இல்லறத்தின்கண் நின்றவன்**;**
பொருள் வெஃகி பொல்லாத சூழக் கெடும்= பிறர் பொருளை அவாவி அதனை வருவிக்கும் குற்றநெறிகளை எண்ணக் கெடும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

இல்லற நெறியால் அறிவு முதிர்ந்துழியல்லது துறக்கப் படாமையின்**,** அதனைத் துறவறத்திற்கு ஆறு என்றார். கெடுதல் இரண்டறமும் சேரவிழத்தல். சூழ்ந்த துணையானே கெடும் எனவே**,** செய்தாற் கெடுதல் சொல்லாமலேயே பெறப்பட்டது.

# திருக்குறள் **177 (**வேண்டற்க**)**

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்

மாண்டற் கரிதாம் பயன்

> வேண்டற்க வெஃகி ஆம் ஆக்கம் விளை வயின்
> மாண்டற்கு அரிதாம் பயன் (07)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க= பிறர் பொருளை அவாவிக்கொண்டு அதனால் ஆகின்ற ஆக்கத்தை விரும்பாது ஒழிக;

விளைவயின் பயன் மாண்டற்கு அரிதாம்= பின் அனுபவிக்குங்கால் அவ்வாக்கத்தின் பயன் நன்றாதல் இல்லை ஆகலான்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'விளை' என்பது முதனிலைத் தொழிற்பெயர். இவை ஏழு பாட்டானும் வெஃகுதலின் குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் 178 (அஃகாமை)

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்

> அஃகாமை செல்வத்திற்கு யாது எனின் வெஃகாமை
> வேண்டும் பிறன் கைப் பொருள் (08)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

செல்வத்திற்கு அஃகாமை யாதுஎனின்= சுருங்கன்மாலைத்தாகிய செல்வத்திற்குச் சுருங்காமைக் காரணம் யாதென்று ஒருவன் ஆராயின்;

பிறன் வேண்டும் கைப்பொருள் வெஃகாமை= அது பிறன் வேண்டும் கைப்பொருளைத் தான் வேண்டாமையாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அஃகாமை ஆகுபெயர். வெஃகாதான் செல்வம் அஃகாதென்பதாயிற்று.

# திருக்குறள் **179** (அறனறிந்து)

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு

அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன் அறிந்து ஆங்கே திரு (09)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்= இஃது அறன் என்று அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரை;

திரு திறன் அறிந்து ஆங்கே சேரும்= திருமகள் தான் அடைதற்கு ஆம்கூற்றினை அறிந்து அக்கூற்றானே சென்று அடையும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அடைதற்காங் கூறு காலமும், இடனும், செவ்வியும் முதலாயின. இவை இரண்டு பாட்டானும், வெஃகாமையின் குணம் கூறப்பட்டது.

# திருக்குறள் **180** (இறலீனுமெண்)

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு

இறல் ஈனும் எண்ணாது வெஃகின் விறல் ஈனும்
வேண்டாமை என்னும் செருக்கு (10)

பரிமேலழகர் உரை(இதன் பொருள்)

எண்ணாது வெஃகின் இறல் ஈனும்= பின் விளைவது அறியாது ஒருவன் பிறன் பொருளை வெளவக் கருதின் அக்கருத்து அவனுக்கு இறுதியைப் பயக்கும்;
வேண்டாமை என்னும் செருக்கு விறல் ஈனும்= அப்பொருளை வேண்டாமை என்னும் செல்வம் வெற்றியைப் பயக்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பகையும், பாவமும் பெருக்கலின் 'இறலீனும்' என்றும், அப்பொருளை வேண்டி உழல்வோர் யாவரயும் கீழ்ப்படுத்தலின் 'விறலீனும்' என்றும் கூறினார். 'செருக்கு', ஆகுபெயர். இதனால் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன. (இருமை= வெஃகுதலின் குற்றமும், வெஃகாமையின் குணமும் ஆகிய இரண்டு- மெய்)
வேண்டாமை யென்னும் செருக்கு விறல் ஈனும்= வேண்டாமை என்னும் செல்வம் வெற்றியைப் பயக்கும்.

## அதிகாரம் **19** புறங்கூறாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, காணாதவழிப் பிறரை இகழ்ந்து உரையாமை. மொழிக்குற்றம் மனக்குற்றமடியாக வருதலான் இஃது அழுக்காறாமை வெஃகாமைகளின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **181 (**அறங்கூறா**)**

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது

அறம் கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது (01)

பரிமேலழகர் உரை **(**இதன்பொருள்**)**

ஒருவன் அறம் கூறான் அல்ல செயினும்= ஒருவன் அறனென்று சொல்லுவதும் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும்;

புறங்கூறான் என்றல் இனிது= பிறனைப் புறங்கூறானென்று உலகத்தாரால் சொல்லப்படுதல் நன்று.

பரிமேலழகர் உரை விளக்கம்

புறங்கூறாமை அக்குற்றங்களான் இழிக்கப்படாது மேற்பட்டுத் தோன்றும் என்பதாம். இதனால் அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது.

# திருக்குறள் 182 (அறனழீஇ)

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை

அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன் அழீஇப் பொய்த்து நகை (02)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே= அறன் என்பது ஒன்றுஇல்லை என அழித்துச் சொல்லி அதன்மேற் பாவங்களைச் செய்தலினும் தீமையுடைத்து;

புறன் அழீஇப் பொய்த்து நகை= ஒருவனைக் காணாத வழி இகழ்ந்துரையால் அழித்துச் சொல்லிக் கண்டவழி அவனோடு பொய்த்து நகுதல்

பரிமேலழகர் உரைவிளக்கம்

உறழ்ச்சி நிரல்நிறைவகையாற் கொள்க. அழித்தல்= ஒளியைக் கோறல்.

# திருக்குறள் 183 (புறங்கூறிப்)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்

புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின் சாதல்
அறம் கூறும் ஆக்கம் தரும் (03)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலின்= பிறனைக் காணாதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கு இனியனாகப் பொய்த்து ஒருவன் உயிர்வாழ்தலின்;

சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும்= அது செய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பின் புறங்கூறிப் பொய்த்தல் ஒழிதலின், சாதல் ஆக்கந்தரும் என்றார். ஆக்கம் அஃது ஒழிந்தார் மறுமைக்கண் எய்தும் பயன். அறம் ஆகுபெயர். தரும் என்பது இடவழுவமைதி.

# திருக்குறள் 184 (கண்ணின்று)

கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்

கண் நின்று கண் அறச் சொல்லினும் சொல்லற்க
முன் இன்று பின் நோக்காச் சொல் (04)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

கண் நின்று கண் அறச் சொல்லினும்= ஒருவன் எதிரே நின்று கண்ணோட்டம் அறச் சொன்னான் ஆயினும்;

முன் இன்று பின் நோக்காச் சொல் சொல்லற்க= அவன் எதிரின்றிப் பின் வரும் குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லாது ஒழிக.

பரிமேலழகர் உரை விளக்கம்

பின் ஆகுபெயர். சொல்வான் தொழில் சொல்லின்மேல் ஏற்றப்பட்டது.

# திருக்குறள் 185 (அறஞ்சொல்லு)

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்

அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையால் காணப்படும் (05)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை= புறஞ்சொல்லுவான் ஒருவன் அறனை நன்று என்று சொல்லினும், அது தன் மனத்தானாய்ச் சொல்லுகின்றான் அல்லன் என்பது;

புறஞ்சொல்லும் புன்மையால் காணப் படும்= அவன் புறஞ்சொல்லுதற்குக் காரணமான மனப்புன்மையானே அறியப்படும்.

பரிமேலழலகர் உரை விளக்கம்

மனந்தீது ஆதலின் அச்சொல் கொள்ளப் படாது என்பதாம்.

# திருக்குறள் 186 (பிறன்பழி)

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்

பிறன் பழி கூறுவான் தன் பழியுள்ளும்
திறன் தெரிந்து கூறப்படும் (06)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பிறன் பழி கூறுவான்= பிறன் ஒருவன் பழியை அவன் புறத்துக் கூறும் அவன்;

தன் பழியுள்ளும் திறன் தெரிந்து கூறப்படும்= தன் பழி பலவற்றுள்ளும் உளையும்திறம் உடையவற்றைத் தெரிந்து அவனாற் கூறப்படும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

புறத்து என்பது அதிகாரத்தாற் பெற்றாம். இது வருகின்றவற்றிற்கும் ஒக்கும். 'திறன்' ஆகுபெயர். தன்னைப் புறங்கூறியவாறு கேட்டான், அக்கூறியாற்கு அவ்வளவன்றி அவனிறந்து பட்டு உளையுந் திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரே கூறுமாகலின் 'திறன் தெரிந்து கூறப்படும்' என்றார்.

# திருக்குறள் 187 (பகச்சொல்லி)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்

பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச் சொல்லி

நட்பு ஆடல் தேற்றாதவர் (07)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்= தம்மை விட்டு நீங்குமாற்றாற் புறங்கூறித் தம் கேளிரையும் பிரியப் பண்ணுவர்;
நகச் சொல்லி நட்பாடல் தேற்றாதவர்= கூடி மகிழுமாறு இனிய சொற்களைச் சொல்லி அயலாரோடு நட்பாடலை அறியாதார்.

பரிமேலழகர் உரை விளக்கம்

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கேளிரையும் பிரிப்பர் என்ற கருத்தான், அயலாரோடும் என்பது வருவித்து உரைக்கப்பட்டது. அறிதல் தமக்குறுதி என்று அறிதல். "கடியு- மிடந் தேற்றாள் சோர்ந்தனள் கை" (கலித்தொகை, மருதம்- 27) என்புழிப் போலத் தேற்றாமை தன்வினையாய் நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவர் என்பது கருத்து.

# திருக்குறள் 188 (துன்னியார்)

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு (08)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்= தம்மொடு செறிந்தாரது குற்றத்தையும் அவர் புறத்துத் தூற்றும் இயல்பினையுடையார்;
ஏதிலார் மாட்டு என்னை கொல்- அயலார்மாட்டுச் செவது யாதுகொல்லோ!

பரிமேலழகர் உரை விளக்கம்

தூறறுதல் பலரும் அறியப் பரப்புதல். அதனிற் கொடியது பிறிது ஒன்று காணாமையின், என்னைகொல் என்றார். செய்வது என்பது சொல்லெச்சம். என்னர்கொல் என்று பாடம் ஓதி, எவ்வியல்பினராவர் என்றுரைப்பாரும் உளர்.

# திருக்குறள் 189 (அறனோக்கி)

அறனோக்கி யாற்றுங்கோல் வையம் புறனோக்கிப்
புன்சொல் லுரைப்பான் பொறை

அறன் நோக்கி ஆற்றும்கொல் வையம் புறன் நோக்கிப்
புன் சொல் உரைப்பான் பொறை (09)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

புறன் நோக்கிப் புன் சொல் உரைப்பான் பொறை= பிறர் நீங்கின அளவு பார்த்து அவர் பழித்துரையை உரைப்பானது உடல்பாரத்தை;

வையம் அறன் நோக்கி ஆற்றும் கொல்- நிலம் இக்கொடியது பொறுத்தலே எனக்கு அறமாவது எனக் கருதிப் பொறுக்கின்றது போலும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கு அரிது என்னும் கருத்தால், 'அறன்நோக்கி ஆற்றும்கொல்' என்றார். இவை ஐந்து பாட்டானும் புறங்கூறுவார்க்கு எய்தும் குறறம் கூறப்பட்டது.

# திருக்குறள் 190 (ஏதிலார்)

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு

ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கிற்பின்
தீது உண்டோ மன்னும் உயிர்க்கு (10)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கிற்பின்= ஏதிலாரைப் புறங் கூறுவார் அதற்கு அவர்குற்றம் காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தம்குற்றத்தையும் காணவல்லர் ஆயின்;

மன்னும் உயிர்க்குத் தீது உண்டோ= அவர் நிலைபேறு உடைய உயிர்க்கு வருவதொரு துன்பம் உண்டோ?

பரிமேலழகர் உரை விளக்கம்

நடுவுநின்று ஒப்பக்காண்டல் அருமை நோக்கிக் 'காண்கிற்பின்' என்றும், கண்டவழி ஒழிதலிற் பாவம் இன்றாம் ஆகவே, வரும் பிறவிகளினும் துன்பம் இல்லை என்பது நோக்கி, உயிர்க்குத் 'தீதுண்டோ' என்றும் கூறினார்.இதனால் புறங்கூற்றொழிதற்கு உபாயம் கூறப்பட்டது.

# அதிகாரம் **20** பயனில சொல்லாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள், ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என வாக்கின்கண் நிகழும் பாவம் நான்கனுள், பொய் துறந்தார்க்கு அல்லது ஒருதலையாகக் கடியலாகாமையின், அஃதொழித்து இல் வாழ்வாரால் கடியப்படும் ஏனை மூன்றனுள், கடுஞ்சொல் இனியவை கூறலானும், குறளை புறங்கூறாமையானும் விலக்கி நின்ற பயனில்சொல் இதனான் விலக்குகின்றார்ஆகலின், இது புறங்கூறாமையின் பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் **191 (**பல்லார்முனிய**)**

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்

பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும் (01)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான்= அறிவுடையார் பலருங் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுவான்;

எல்லாரும் எள்ளப் படும்= எல்லாரானும் இகழப் படும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அறிவுடையார் பலரும் வெறுப்பவே, ஒழிந்தாரானும் இகழப்படுதலின், எல்லாரும் எள்ளப்படும் என்றார். மூன்றனுருபு விகாரத்தால் தொக்கது.

# திருக்குறள் **192** (பயனிலபல்லார்)

பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது

பயன் இல பல்லார் முன் சொல்லல் நயன் இல
நட்டார்கண் செய்தலின் தீது (02)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பயன் இல பல்லார்முன் சொல்லல்= பயனிலவாகிய சொற்களை அறிவுடையார் பலர் முன்பே ஒருவன் சொல்லுதல்;

நயன் இல நல்லார்கண் செய்தலின் தீது= விருப்பமிலவாகிய செயல்களைத் தன் நட்டார்மாட்டுச் செய்தலினும் தீது.

பரிமேலழகர் உரை விளக்கம்

'விருப்பமில', வெறுப்பன. இச்சொல் அச்சயலினும் மிக இகழற்பாடு பயக்கும் என்பதாம்.

# திருக்குறள் 193 (நயனில)

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை

நயன் இலன் என்பது சொல்லும் பயன் இல
பாரித்து உரைக்கும் உரை (03)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பயன் இல பாரித்து உரைக்கும் உரை= பயனிலவாகிய பொருள்களை ஒருவன் விரித்துரைக்கும் உரைதானே;
நயன் இலன் என்பது சொல்லும்= இவன் நீதி இலன் என்பதனை உரைக்கும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உரையால் இவன் நயனிலன் என்பது அறியலாம் என்பார், அதனை உரைமேல் ஏற்றி உரை சொல்லும் என்றார்.

# திருக்குறள் 194 (நயன்சாரா)

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாரா
பண்பில்சொற் பல்லா ரகத்து

நயன் சாரா நன்மையின் நீக்கும் பயன் சாரா

பணிபில் சொல் பல்லார் அகத்து (04)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பயன் சாராப் பண்பு இல் சொல் பல்லார் அகத்து= பயனொடு படாத பண்பில் சொற்களை ஒருவன் பலரிடைச் சொல்லுமாயின்;
நயன் சாரா நன்மையின் நீக்கும்= அவை அவர் மாட்டு நீதியொடுபடாவாய், அவனை நற்குணங்களின் நீக்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'பண்பு' இனிமையும், மெய்ம்மையும் முதலாய சொற்குணங்கள். 'சொல்லுமாயின்' என்பதும், 'அவர்மாட்டு' என்பதும், எச்சமாக வருவிக்கப் பட்டன.

# திருக்குறள் 195 (சீர்மை)

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயன் இல
நீர்மை உடையார் சொலின் (05)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பயன் இல நீர்மை உடையார் சொலின்= பயனிலவாகிய சொற்களை இனியநீர்மையுடையார் சொல்லுவாராயின்;
சீர்மை சிறப்பொடு நீங்கும்= அவரது விழுப்பமும் அதனால் வரும் நன்கு மதிக்கற்பாடும் உடனே நீங்கும்

பரிமேலழகர் உரை விளக்கம்

'நீர்மை', நீரின்தன்மை. 'சொலின்' என்பது சொல்லாமையை

விளக்கிற்று.

## திருக்குறள் **196** (பயனில்சொற்)

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்

பயன் இல சொல் பாராட்டுவானை மகன் எனல்
மக்கள் பதடி எனல் (06)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல்= பயனி்ல்லாத சொற்களைப் பலகாலும் சொல்லுவானை மகனென்று சொல்லற்க; மக்கட் பதடி எனல்= மக்களுள் பதர் என்று சொல்லுக.

பரிமேலழகர் உரை விளக்கம்

'அல்' விகுதி வியங்கோள்; முன் எதிர்மறையினும், பின் உடம்பாட்டினும் வந்தது. அறிவென்னும் உள்ளீடு இன்மையின், 'மக்கள் பதடி' என்றார். இவை ஆறுபாட்டானும், பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றம் கூறப்பட்டது.

## திருக்குறள் **197** (நயனில)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று

நயன் இல சொல்லினும் சொல்லுக சான்றோர்

பயன் இல சொல்லாமை நன்று (07)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

நயன் இல சான்றோர் சொல்லினும் சொல்லுக= நீதியொடு படாத சொற்களைச் சான்றோர் சொன்னாராயினும் அஃதுஅமையும்;

பயன் இல சொல்லாமை நன்று= அவர் பயன்இலவற்றைச் சொல்லாமை பெறின், அது நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'சொல்லினும்' எனவே, சொல்லாமை பெறப்பட்டது. 'நயனில'வற்றினும், 'பயனில' தீய என்பதாம்.

# திருக்குறள் 198 (அரும்பயன்)

அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்

அரும் பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும் பயன் இல்லாத சொல் (08)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

அரும் பயன் ஆயும் அறிவினார்= அறிதற்கரிய பயன்களை ஆராயவல்ல அறிவினை உடையார்;

பெரும் பயன் இல்லாத சொல் சொல்லார்= மிக்க பயனுடைய அல்லாத சொற்களைச் சொல்லார்.

பரிமேலழகர் உரை விளக்கம்

அறிதற்கரிய பயன்களாவன: வீடுபேறும், மேற்கதிச்செலவும் முதலாயின. 'பெரும்பயன் இல்லாத' எனவே, பயன் சிறிது

உடையனவும் ஒழிக்கப்பட்டன.

## திருக்குறள் 199 (பொருடீர்ந்த)

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்

பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள் தீர்ந்த
மாசு அறு காட்சியவர்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்= பயனின் நீங்கிய சொற்களை மறந்தும் சொல்லார்;
மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்= மயக்கத்தின் நீங்கிய தூய அறிவினை உடையார்.

பரிமேலழகர் உரை விளக்கம்

தூயஅறிவு= மெய்யறிவு. 'மருள்தீர்ந்த' என்னும் பெயரெச்சம், 'காட்சியவர்' என்னும் குறிப்புப்பெயர் கொண்டது. இவை மூன்று பாட்டானும், பயனில சொல்லாமையின் குணம் கூறப்பட்டது.

## திருக்குறள் 200 (சொல்லுக)

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்

சொல்லுக சொல்லின் பயன் உடைய சொல்லற்க

சொல்லின் பயன் இலாச் சொல் (10)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

சொல்லின் பயன் உடைய சொல்லுக= சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்லுக;

சொல்லின் பயன் இலாச் சொல் சொல்லற்க= சொற்களில் பயனில்லாத சொற்களைச் சொல்லற்க.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சொல்லின் என்பது இருவழியும் மிகையாயினும்,, சொற்பொருட் பின்வருநிலை என்னும் அணிநோக்கி வந்தது, "வைகலும் வைகல் வரக்கண்டும்" (நாலடியார், *39)* என்பதுபோல. இதனால் சொல்லப் படுவனவும், படாதனவும் நியமிக்கப் பட்டன.

# அதிகாரம் 21 தீவினையச்சம்

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனால், மெய்யின்கண் நிகழும் பாவங்கள் எல்லாம் தொகுத்து விலக்குகின்றார்ஆகலின், இது பயனிலசொல்லாமையின்பின் வைக்கப் பட்டது.

## திருக்குறள் 201 (தீவினையார்)

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு

தீ வினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீ வினை என்னும் செருக்கு (01)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தீவினை என்னும் செருக்கு= தீவினை என்று சொல்லப்படும் மயக்கத்தை;

தீவினையார் அஞ்சார்= முன்செய்த தீவினையுடையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்= அஃது இலராகிய சீரியார் அஞ்சுவர்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'தீவினையென்னும் செருக்கு' எனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. மேல்தொட்டுச் செய்து கைவந்தமையான் 'அஞ்சார்' என்றும், செய்துஅறியாமையான் 'அஞ்சுவர்' என்றும் கூறினார்.

# திருக்குறள் 202 (தீயவை)

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும் (02)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தீயவை தீய பயத்தலால்= தனக்கு இன்பம் பயத்தலைக் கருதிச் செய்யும் தீவினைகள் பின் அஃது ஒழித்துத் துன்பமே பயத்தலான்;
தீயவை தீயினும் அஞ்சப் படும்= அத்தன்மையாகிய தீவினைகள் ஒருவனால் தீயினும் அஞ்சப்படும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பிறிதொரு காலத்தும், பிறிதொரு தேயத்தும், பிறிதோருடம்பினும் சென்று சுடுதல் தீக்கு இன்மையின், 'தீயினும் அஞ்சப் படுவது' ஆயிற்று.

# திருக்குறள் **203 (**அறிவினுள்**)**

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்

அறிவினுள் எல்லாம் தலை என்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல் (03)

பரிமேலழகர் உரை **(**இதன்பொருள்**)**

அறிவினுள் எல்லாம் தலை என்ப= தமக்கு உறுதி நாடும் அறிவுகள் எல்லாவற்றுள்ளும் தலையாய அறிவு என்று சொல்லுவர் நல்லோர்;

செறுவார்க்கும் தீய செய்யா விடல்= தம்மைச் செறுவார்மாட்டும் தீவினைகளைச் செய்யாது விடுதலை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

விடுதற்குக் காரணமாகிய அறிவை 'விடல்' என்றும், செயத்தக்குழியும் செய்யாது ஒழியவே, தமக்குத் துன்பம் வாராது என உய்த்து உணர்தலின், அதனை 'அறிவினுள் எல்லாந் தலை' என்றும் கூறினார். 'செய்யாது' என்பது கடைக்குறைந்து நின்றது. இவை மூன்று பாட்டானும், தீவினைக்கு அஞ்சவேண்டும் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் **204 (**மறந்தும்பிறன்**)**

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு

மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழின்
அறம் சூடும் சூழ்ந்தவன் கேடு (04)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

பிறன் கேடு மறந்தும் சூழற்க= ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாது ஒழிக;

சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும்= எண்ணுவனாயின், தனக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'கேடு' என்பது ஆகுபெயர். சூழ்கின்ற பொழுதே தானும் உடன் சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படும் என்பது பெறப்பட்டது. அறக்கடவுள் எண்ணுதலாவது, அவன் கெடத் தான்நீங்க நினைத்தல். தீவினை எண்ணலும் ஆகாது என்பதாம்.

# திருக்குறள் 205 (இலனென்று)

இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து

இலன் என்று தீயவே செய்யற்க செய்யின்
இலன் ஆகும் மற்றும் பெயர்த்து (05)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

இலன் என்று தீயவை செய்யற்க= யான் வறியன் என்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளை ஒருவன் செய்யாது ஒழிக;

செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும்= செய்வானாயின், பெயர்த்தும் வறியன் ஆம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அத்தீவினையால் பிறவிதோறும் இலனாம் என்பதாம். 'அன்' விகுதி முன் தனித் தன்மையினும், பின் படர்க்கை ஒருமையினும் வந்தது. தனித்தன்மை "உளனாவென் னுயிரை யுண்டு" (கலித்தொகை,குறிஞ்சி,22) என்பதானானும் அறிக. மற்று அசைநிலை. 'இலம்' (மணக்குடவர்) என்று பாடம் ஒதுவாரும் உளர். 'பொருளான் வறியன் எனக் கருதித் தீயவை செய்யற்க, செய்யின் அப்பொருளேயன்றி நற்குண நற்செய்கைகளானும் வறியனாம்' என்று உரைப்பாரும் உளர்.

# திருக்குறள் **206** (தீப்பாலதான்)

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்

தீப் பால தான் பிறர்கண் செய்யற்க நோய்ப் பால
தன்னை அடல் வேண்டாதான் (06)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

நோய்ப்பால தன்னை அடல்வேண்டாதான்= துன்பம் செய்யும் கூற்றவாகிய பாவங்கள் தன்னைப் பின்வந்து வருத்துதலை வேண்டாதவன்;

தீப்பால தான் பிறர்கண் செய்யற்க= தீமைக்கூற்றவாகிய வினைகளைத் தான் பிறர்மாட்டுச் செய்யாது ஒழிக.

பரிமேலழகர் உரை விளக்கம்

செய்யின் அப்பாவங்களால் அடுதல் ஒருதலை என்பதாம்.

# திருக்குறள் 207 (எனைப்பகை)

எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்

எனைப் பகை உற்றாரும் உய்வர் வினைப் பகை
வீயாது பின் சென்று அடும் (07)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

எனைப் பகை உற்றாரும் உய்வர்= எத்துணைப்பெரிய பகையுடையாரும் அதனை ஒருவாற்றால் தப்புவர்;
வினைப் பகை வீயாது சென்று அடும்= அவ்வாறுஅன்றித் தீவினையாகிய பகை நீங்காது புக்குழிப் புக்குக் கொல்லும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

"வீயாது- உடம்பொடு நின்ற உயிருமில்லை" என்புழியும், வீயாமை நீங்காமைக்கண் வந்தது.

# திருக்குறள் 208 (தீயவை செய்தார்)

தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று

தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை
வீயாது அடி உறைந்தற்று (08)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தீயவை செய்தார் கெடுதல்= பிறர்க்குத் தீவினைகளைச் செய்தார்

தாம் கெடுதல் எத்தன்மைத்து எனின்;

நிழல் தன்னை வீயாது அடிஉறைந்தற்று= ஒருவன் நிழல் நெடிதாகப் போயும், அவன்தன்னை விடாது வந்து அடியின்கண் தங்கிய தன்மைத்து.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இவ்வுவமையைத் தன் காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றிநின்று, அதுவந்துழி உருப்பதாய தீவினையைச் செய்தார், பின்அதனால் கெடுதற்கு உவமையாக்கி உரைப்பாரும் உளர்.

அஃது உரையன்று என்பதற்கு அடிஉறைந்த நிழல் தன்னை வீந்தற்று என்னாது, 'வீயாது அடியுறைந்தற்று' என்ற பாடமே கரியாயிற்று. மேல், 'வீயாது பின் சென்று அடும்' என்றார், ஈண்டு அதனை உவமையான் விளக்கினார்.

# திருக்குறள் 209 (தன்னைத்தான்)

தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்

தன்னைத் தான் காதலன் ஆயின் எனைத்து ஒன்றும்
துன்னற்க தீவினைப் பால் (09)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

தன்னைத் தான் காதலன் ஆயின்= ஒருவன், தன்னைத் தான் காதல் செய்தல் உடையனாயின்;

தீவினைப்பால் எனைத்து ஒன்றும் துன்னற்க= தீவினையாகிய பகுதி, எத்துணையும் சிறியதொன்றாயினும் பிறர்மாட்டுச்

செய்யாது ஒழிக.

பரிமேலழகர் உரை விளக்கம்

நல்வினை தீவினை என வினைப்பகுதி இரண்டாகலின் 'தீவினைப்பால்' என்றார். பிறர்மாட்டுச் செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத்தல் விளக்கினார்ஆகலின், 'தன்னைத் தான் காதலன்ஆயின்' என்றார். இவை ஆறுபாட்டானும் பிறர்க்குத் தீவினை செய்யில் தாம் கெடுவார் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் **210** (அருங்கேடன்)

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்

அரும் கேடன் என்பது அறிக மருங்கு ஓடித்
தீ வினை செய்யான் எனின் (10)

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

மருங்கு ஓடித் தீவினை செய்யான் எனின்= ஒருவன் செந்நெறிக்கண் செல்லாது, கொடுநெறி◌்க்கண் சென்று பிறர்மாட்டுத் தீவினைகளைச் செய்யானாயின்;
அருங்கேடன் என்பது அறிக= அவன் அரிதாகிய கேட்டையுடையன் என்பது அறிக.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அருமை- இன்மை; அருங்கேடன் என்பதனைச் "சென்று சேக்கல்லாப் புள்ள உள்ளில், என்றூழ் வியன்குளம்" ◌ென்பது போலக் கொள்க. 'ஓடி' என்னும் வினையெச்சம், 'செய்யான்'

எனும் எதிர்மறைவினையுட் செய்தலோடு முடிந்தது. இதனால் தீவினை செய்யாதவன் கேடிலன் என்பது கூறப்பட்டது.

# அதிகாரம் 22 ஒப்புரவறிதல்

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, உலகநடையினை அறிந்து செய்தல். உலகநடை வேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யுந்தன்மைத்து ஆகலின், ஒப்புரவு அறிதல் என்றார். மேல் மனமொழிமெய்களால் தவிரத்தகுவன கூறினார். இனிச் செய்யத்தகுவனவற்றுள் எஞ்சிநின்றன கூறுகின்றார் ஆகலின், இது தீவினையச்சத்தின்பின் வைக்கப்பட்டது.

## திருக்குறள் 211 (கைம்மாறு)

கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரி மாட்டு
என் ஆற்றும் கொல்லோ உலகு.

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

மாரிமாட்டு உலகு என் ஆற்றும்= தமக்கு நீர் உதவுகின்ற மேகங்களினிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யாநின்றன?
கடப்பாடு கைம்மாறு வேண்டா= ஆகலான், அம்மேகங்கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவனவல்ல.

பரிமேலழகர் உரைவிளக்கம்

என்னாற்றும் என்ற வினா யாதும் ஆற்றா என்பது தோன்ற நிற்றலின், அது வருவித்துரைக்கப்படும். தவிருந் தன்மைய அல்ல என்பது கடப்பாடு என்னும் பெயரானே பெறப்பட்டது. செய்வாரது வேண்டாமையைச் செய்யப்படுவனமேல் ஏற்றினார்.

# திருக்குறள் **212** (தாளாற்றித்)

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு

தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தல் பொருட்டு.

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

தக்கார்க்கு= தகுதியுடையார்க்கு ஆயின்;
தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம்= முயறலைச் செய்து ஈட்டிய பொருள் முழுதும்;
வேளாண்மை செய்தல் பொருட்டு= ஒப்புரவு செய்தற் பயத்தவாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

பிறர்க்கு உதவாதார் பொருள் போலத் தாமே உண்டற்

பொருட்டும், வைத்து இழத்தற்பொருட்டும் அன்று என்பதாயிற்று.

# திருக்குறள் **213** (புத்தேளுலகத்து)

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

புத்தேள் உலகத்தும் ஈண்டும்= தேவர் உலகத்தும் இவ்வுலகத்தும்; ஒப்புரவின் நல்ல பிற பெறல் அரிது= ஒப்புரவு போல நல்லன பிற செயல்களைப் பெறுதல் அரிது.

பரிமேலழகர் உரை விளக்கம்

ஈவாரும் ஏற்பாரும் இன்றி எல்லாரும் ஒருதன்மையர் ஆதலான் புத்தேள் உலகத்து அரிது ஆயிற்று; யாவர்க்கும் ஒப்பது இதுபோல் பிறிதுஒன்று இன்மையின், இவ்வுலகத்து அரிதாயிற்று. பெறற்கரிது என்று பாடம்ஓதிப் பெறுதற்குக் காரணம்அரிது என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் **214** (ஒத்ததறிவான்)

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்

ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

உயிர்வாழ்வான் ஒத்தது அறிவான்= உயிரோடுகூடி வாழ்வானாவான் உலகநடையினை அறிந்து செய்வான்;
மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்= அஃதறிந்து செய்யாதவன், உயிருடையனேயாயினும், செத்தாருள் ஒருவனாகக் கருதப்படும் என்றவாறு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உயிரின் அறிவும் செயலும் காணாமையின், செத்தாருள் வைக்கப்படும் என்றார்.
இதனால் உலகநடைவழு, வேதநடைவழுப்போலத் தீர்திறன் உடைத்தன்று என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் 215 (ஊருணிநீர்)

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு

ஊர் உணி நீர் நிறைந்து அற்றே உலகு அவாம்
பேர் அறிவாளன் திரு

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

உலகு அவாம் பேரறிவாளன் திரு= உலகநடையை விரும்பிச் செய்யும் பேரறிவினையுடையவனது செல்வம்;
ஊருணி நீர் நிறைந்தற்று= ஊரின் வாழ்வார் தண்ணீர் உண்ணுங்குளம் நீர் நிறைந்தாற் போலும் என்றவாறு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

நிறைதல் என்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றப்பட்டது. பாழ்போகாது நெடிது நின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவும் என்பதாம்.

# திருக்குறள் 216 (பயன்மரம்)

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்

பயன் மரம் உள் ஊர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன் உடையான்கண் படின்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

செல்வம் நயன்உடையான்கண் படின்= செல்வம் ஒப்புரவு செய்வான்கண்ணே படுமாயின்;
பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்= அது பயன்படு மரம் ஊர்நடுவே பழுத்தாற் போலும், என்றவாறு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின், அதனையே நயன் என்றார். எல்லார்க்கும் எளிதில் பயன் கொடு்க்கும் என்பதாம்.

# திருக்குறள் 217 (மருந்தாகித்)

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்

பெருந்தகை யான்கட் படின்

மருந்து ஆகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெரும் தகையான் கண் படின்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

செல்வம் பெருந்தகையான் கண் படின்= செல்வம் ஒப்புரவு செய்யும் பெரிய தலைமை உடையான்கண்ணே படுமாயின்;
மருந்து ஆகித் தப்பா மரத்து அற்று= அஃது எல்லா உறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் தப்பாத மரத்தை ஒக்கும், என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்

தப்புதலாவது= கோடற்கரிய இடங்களின் நின்றாதல், மறைந்து நின்றாதல், காலத்தான் வேறுபட்டாதல் பயன்படாமை. தன்குறை நோக்காது எல்லார் வருத்தமும் தீர்க்கும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது.

## திருக்குறள் **218** (இடனில் பருவத்தும்)

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்

இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடன் அறி காட்சியவர்

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்= செல்வம் சுருங்கிய

காலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தளரார்;
கடன் அறி காட்சியவர்= தாம் செய்யத் தகுவனவற்றை அறிந்து இயற்கை அறிவுடையார், என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்
பிறவெல்லாம் ஒழியினும், இஃது ஒழியார் என்பதாம்.

# திருக்குறள் **219** **(**நயனுடையான்**)**

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு

நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும் நீர
செய்யாது அமைகலா ஆறு

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)
நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல்= ஒப்புரவு செய்தலை உடையான் நல்கூர்ந்தான் ஆதலாவது;
செயும் நீர செய்யாது அமைகலா ஆறு= தவிராது செய்யும் நீர்மையை உடைய அவ் ஒப்புரவுகளைச் செய்யப்பெறாது வருந்துகின்ற இயல்பாம், என்றவாறு.

பரிமேலழகர் உரைவிளக்கம்
தான் நுகர்வன நுகரப்பெறாமை அன்று என்பதாம்.

இவை இரண்டுபாட்டானும் வறுமையான் ஒப்புரவு ஒழிதற்பாற்று அன்று என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் 220 (ஒப்புரவினால்)

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து

ஒப்புரவினால் வரும் கேடு எனின் அஃது ஒருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து

பரிமேலழகர் உரை (இதன்பொருள்)

ஒப்புரவினால் வரும் கேடு எனின்= ஒப்புரவு செய்தலான், ஒருவனுக்குப் பொருட்கேடு வரும் என்பார் உளராயின்;
அஃது ஒருவன் விற்றுக்கோள் தக்கது உடைத்து= அக்கேடுதன்னை விற்றாயினும் கொள்ளும் தகுதியை உடைத்து, என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்

தன்னை விற்றுக் கொள்ளப்படுவதொரு பொருள் இல்லையன்றே; இஃதாயின் அதுவும் செய்யப்படும் என்றது, புகழ் பயத்தல் நோக்கி.

இதனால் ஒப்புரவினால் கெடுவது கேடுஅன்று என்பது கூறப்பட்டது.

திருவள்ளுவர் இயற்றிய முப்பால் நூலின் ஒப்புரவறிதல் அதிகாரத்திற்குப் பரிமேலழகர் வரைந்த உரை முற்றுப்பெற்றது

# 23. ஈகை

அதிகார முன்னுரை

அஃதாவது, வறியராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். இது மறுமை நோக்கியது ஆகலின், இம்மை நோக்கிய ஒப்புரவுஅறிதலின் பின் வைக்கப்பட்டது.

# குறள்: 221 (வறியார்க்கொன்)

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து (01)

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்று எல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து.

பரிமேலழகர் உரை

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை= ஒரு பொருளும் இல்லாதார்க்கு அவர் வேண்டியது ஒன்றைக் கொடுபபதே பிறர்க்குக் கொடுததலாவது;

மற்று எல்லாம்குறியெதிர்ப்பை நீரது உடைத்து= அஃது ஒழிந்த எல்லாக் கொடையும் குறியெதிர்ப்பைக் கொடுக்கும் நீர்மையை உடைத்து.

பரிமேலழகர் உரை விளக்கம்

வறியவர் அல்லாதார்க்கு ஒரு பயன் நோக்கிக் கொடுப்பன. 'குறியெதிர்ப்பா'வது அளவு குறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது. 'நீரது' என்புழி 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. பின்னும் தன்பால் வருதலின் குறியெதிர்ப்பை 'நீரது உடைத்து' என்றார்.

# குறள்: 222 (நல்லாறெனினுங்)

நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று (02)

நல் ஆறு எனினும் கொளல் தீது மேல் உலகம்
இல் எனினும் ஈதலே நன்று.

பரிமேலழகர் உரை

கொளல் நல் ஆறு எனினும் தீது= ஏற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறி என்பார் உளராயினும் அது தீது;
மேல் உலகம் இல் எனினும் ஈதலே நன்று= ஈந்தார்க்கு அவ்வுலகு எய்துதல் இல்லை என்பார் உளராயினும் ஈதலே நன்று.

பரிமேலழகர் உரை விளககம்

எனினும் என்பது இருவழியும் அங்ஙனம் கூறுவார் இன்மை விளக்கி நின்றது. பிரிநிலை ஏகாரத்தால் பிற அறங்களின் ஈதல் சிறந்தது என்பது பெற்றாம். நல்லது கூறுவார் தீயதும் உடன் கூறினார்.

# குறள்: 223 (இலனென்னும்)

இலனென்னு மெவ்வ முரையாமை யீதற்
குலனுடையான் கண்ணே யுள (03)

இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன் உடையான் கண்ணே உள.

பரிமேலழகர் உரை

இலன் என்னும் எவ்வம் உரையாமை= யான் வறியன் என்று இரப்பான் சொல்லும் இளிவரவைத் தான் பிறர்கண் சொல்லாமையும்;
ஈதல்= அதனைத் தன்கண் சொன்னார்க்கு மாற்றாது ஈதலும்,
உள குலன் உடையான் கணணே= இவை இரண்டும் உளவாவன குடிப்பிறந்தான் கண்ணே.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மேல் 'தீது' என்றது ஒழிதற்கும், 'நன்று' என்றது செய்தற்கும் உரியவனை உணர்த்தியவாறு. இனி, 'இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்' என்பதற்கு அவ்விளிவரவை ஒருவன் தனக்குச்சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தல் எனவும், அதனைப்பின்னும் பிறன்ஒருவன்பால் சென்று அவன் உரையாவகையால் கொடுத்தல் எனவும், "யான் இதுபொழுது பொருளுடையவன் அல்லேன்", எனக் கரப்பார் சொல்லும் இளிவரவைச் சொல்லாது கொடுத்தல் எனவும் உரைப்பாருமுளர். அவர் 'ஈதல்' என்பதனைப் பொருட்பன்மை பற்றி வந்த பன்மையாக உரைப்பர்.

# குறள்:224 (இன்னாதிரக்கப்)

இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு (04)

இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன் முகம் காணும் அளவு.

பரிமேலழகர் உரை

இரக்கப் படுதல் இனனாது= இரத்தலேயன்றி இரக்கப்படுதலும் இனிது அன்று;
இரந்தவர் இன் முகம் காணும் அளவு= ஒரு பொருளை இரந்தவர் அது பெற்றதனால் இனிதாகிய அவர் முகங் காணும் அளவும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

எச்ச உம்மையும், முற்றும்மையும் விகாரத்தால் தொக்கன. இரக்கப்படுதல்- இரப்பார்க்கு ஈவல் என்றுஇருத்தல். அதனை 'இன்னாது' என்றது, "எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈயாமை (நாலடியார், 145) கூடுங்கொல்லோ" எனனும் அச்சம் நோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல் வேண்டும் என்பது பெறப்பட்டது.

# குறள்: 225 (ஆற்றுவாராற்றல்)

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின் (05)

ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

பரிமேலழகர் உரை

ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்= தவத்தான் வலியார்க்கு வலியாவது, தம்மையுற்ற பசியைப் பொறுத்தல்.
அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்= அவ்வலிதான் அங்ஙனம் பொறுத்தற்கு அரிய பசியை ஈகையான் ஒழிப்பாரது வலிக்குப்பின்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதார் ஆற்றலின், தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பார் ஆற்றல் நன்று என்பதாம்.

# குறள்: 226 (அற்றாரழி)

அற்றா ரழிபசி தீர்த்தலஃ தோருவன்
பெற்றான் பொருள்வைப் புழி (06)

அற்றார் அழி பசி தீர்த்தல் அஃது ஒருவன்
பெற்றான் பொருள் வைப்புழி.

பரிமேலழகர் உரை

அற்றார் அழி பசி தீர்த்தல்= வறியாரது மிக்க பசியை அறன் நோக்கித் தீர்க்க;

பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி அஃது= பொருள் பெற்றான் ஒருவன் அதனைத் தனக்கு உதவ வைக்கும் இடம் அவ்வறம் ஆகலான்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

எல்லா நன்மைகளும் அழிய வருதலின் 'அழிபசி' என்றார். 'அறம் நோக்கி' என்பது எஞ்ச நின்றது. அற்றார் அழிபசி தீர்த்த பொருள் பின் தனக்கே வந்து உதவும் என்பதாம்.

# குறள்: 227 (பாத்தூண்)

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது (07)

பாத்து ஊண் மரீஇயவனைப் பசி என்னும்
தீப் பிணி தீண்டல் அரிது

பரிமேலழகர் உரை

பாத்து ஊண் மரீஇயவனை= எஞ்ஞான்றும் பகுத்து உண்டல் பயி்ன்றவனை;

பசி என்னும் தீப் பிணி தீண்டல் அரிது= பசி என்று சொல்லப்படும் தீய நோய் தீண்டல் இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

இவ்வுடம்பின் நின்று ஞான ஒழுக்கங்களை அழித்து, அதனால்வரும் உடம்புகட்கும் துன்பம் செய்தலின், 'தீப்பிணி' எனப்பட்டது. தனக்கு மருத்துவன் தான் ஆகலின் பசிப்பிணி அணுகாது என்பதாம்.

இவை ஆறு பாட்டானும் ஈதலின் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள்: 228 (ஈத்துவக்கும்)

ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர் (08)

ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல் தாம் உடைமை
வைத்து இழக்கும் வன்கணவர்.

பரிமேலழகர் உரை

தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர்= தாம் உடைய பொருளை ஈயாது வைத்துப் பின் இழந்துபோம் அருளிலாதார்; ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல்= வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து, அவர் உவத்தலான் அருளுடையார் எய்தும் இன்பத்தினைக் கண்டறியார் கொல்லோ?

பரிமேலழகர் உரைவிளக்கம்

'உவக்கும்' என்பது காரணத்தின்கண் வந்த பெயரெச்சம். அஃது 'இன்பம்' என்னும் காரியப்பெயர் கொண்டது. அறிந்தாராயின்,

தாமும் அவ்வின்பத்தை எய்துவதல்லது வைத்து இழவார் என்பது கருத்து.

# குறள்: 229 (இரத்தலின்)

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல் (09)

இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

பரிமேலழகர் உரை

நிரப்பிய தாமே தமியர் உணல்= பொருட்குறை நிரப்பவேண்டி வறியார்க்கு ஈயாது தாமே தனித்து உண்டல்;
இரத்தலின் இன்னாது மன்ற= ஒருவர்க்குப் பிறர்பால் சென்று இரத்தலினும் இன்னாது ஒருதலையாக.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பொருட்குறை நிரப்புதலாவது, ஒரோ எண்களைக் குறித்து அத்துணை ஈட்டுதும் என ஈட்டத்தையே மேற்கொண்டு இவறிக் கூட்டுதல். தனித்தல், பிறரை ஒழித்தல். இரத்தற்கு உள்ளது அப்பொழுதை இளிவரவே, பின் நல்குரவு இல்லை. தமியர் உண்டற்கு அவை இரண்டும் உளவாம் ஆகலின், 'இரத்தலின் இன்னாது' என்றார். 'நிரப்பிய' என்பதற்குத் 'தேடிய உணவுகளை' என்று உரைப்பாரும் உளர்.

# குறள்: 230 (சாதலின்)

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை (10)

சாதலின் இன்னாதது இல்லை இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை.

பரிமேலழகர் உரை

சாதலின் இன்னாதது இல்லை= ஒருவற்குச் சாதல்போல இன்னாதது ஒன்று இல்லை;

அதூஉம் ஈதல் இயையாக்கடை இனிது= அத்தன்மைத்தாகிய சாதலும், வறியார்க்கு ஒன்று ஈதல் முடியாதவழி இனிது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான் 'இனிது' எனறார்.

இவை மூன்றுபாட்டானும் ஈயாமையின் குற்றம் கூறப்பட்டது.

# **24.** புகழ்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அதாவது, இல்வாழ்க்கை முதல் ஈகை யீறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு, இம்மைப் பயனாகிய இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி. இது பெரும்பான்மையும் ஈதல் பற்றி வருதலின், அதன்பின் வைக்கப்பட்டது.

# குறள்**: 231 (**ஈதலிசைபட**)**

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு (01)

ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

பரிமேலழகர் உரை

ஈதல்= வறியார்க்கு ஈக; இசைபட வாழ்தல்= அதனால் புகழ்

உண்டாக வாழ்க; அது அல்லது ஊதியம் உயிர்க்கு இல்லை= அப்புகழ் அல்லது மக்கள் உயிர்க்குப் பயன் பிறிது ஒன்று இல்லை ஆகலான்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இசைபட வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை முதலிய காரணங்களும் உளவேனும், "உணவின் பிண்டம் உண்டி முதற்று" (புறநானூறு, 18) ஆகலின், ஈதல் சிறந்தது என்பதற்கு ஞாபகமாக ஈதல் என்றார். உயிர்க்கு என்பது, பொதுப்படக் கூறினாரேனும் விலங்கு உயிர்கட்கு ஏலாமையின் மக்களுயிர்மேல் நின்றது.

# குறள்: 232 (உரைப்பார்)

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ் (02)

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று
ஈவார் மேல் நிற்கும் புகழ்.

பரிமேலழகர் உரை

உரைப்பார் உரைப்பவை எல்லாம்= உலகத்து ஒன்று உரைப்பார் உரைப்பன எல்லாம்; இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ்= வறுமையான் இரப்பார்க்கு அவர் வேண்டியது ஒன்றை ஈவார்கண் நிற்கும் புகழாம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

புகழ்தான் 'உரையும் பாட்டும்' என இருவகைப்படும். (புறநானூறு, 27). அவற்றுள் 'உரைப்பார் உரைப்பவை' என எல்லார்க்கும் உரிய வழக்கினையே எடு்த்தாராயினும், இனம்பற்றிப் புலவர்க்கே உரிய செய்யுளும் கொள்ளப்படும்; படவே, 'பாடுவார் பாடுவன எல்லாம் புகழாம்' என்பது பெற்றாம். ஈதற்காரணம் சிறந்தமை இதனுள்ளும் காண்க. இதனைப் 'பிறர்மேலும் நிற்கும்' என்பார், 'தாம் எல்லாம் சொல்லுக, புகழ் ஈவார்மேல் நிற்கும்' என்று உரைப்பாரும் உளர். அது புகழது சிறப்பு நோக்காமை அறிக.

# குறள்: 233 (ஒன்றாவுலகத்)

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றி்ல் (03)

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்
பொன்றாது நிற்பது ஒன்று இல்.

பரிமேலழகர் உரை

ஒன்றா உயர்ந்த புகழ் அல்லால்= தனக்கு இணையின்றாக ஓங்கிய புகழல்லது; உலகத்துப் பொன்றாது நிற்பது ஒன்று இல்= இலகத்து இறவாது நிற்பது பிறிதொன்று இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இணை ஒன்றாக ஓங்குதலாவது, கொடுத்தற்கு அரிய உயிர் உறுப்புப் பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால்

தன்னொடு ஒப்பது இன்றித் தானே உயர்தல். அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவது என்பதாம். இனி, ஒன்றா என்பதற்கு ஒருவார்த்தையாகச் சொல்லின் எனவும், ஒருதலையாகப் பொன்றாது நிற்பது எனவும் உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள்: 234 (நிலவரை)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு (04)

நிலவரை நீள் புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

பரிமேலழகர் உரை

நிலவரை நீள் புகழ் ஆற்றின்= ஒருவன் நிலஎல்லைக்கண்ணே பொன்றாது நிற்கும் புகழைச்செய்யுமாயின்; புத்தேள் உலகு புலவரைப்போற்றாது= புத்தேள் உலகம் அவனையல்லது தன்னை எய்திநின்ற ஞானிகளைப் பேணாது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

புகழ் உடம்பான் இவ்வுலகும், புத்தேள் உடம்பான் அவ்வுலகும் ஒருங்கே எய்தாமையின், 'புலவரைப் போற்றாது' என்றார். அவன் இரண்டு உலகும் ஒருங்கு எய்துதல், "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவன் ஏவா வான ஊர்தி, எய்துப

என்ப தம் செய்வினை முடித்து" (புறநானூறு, 27) எனப் பிறராலும் சொல்லப்பட்டது.

# குறள்: 235 (நத்தம்போற்)

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது (05).

நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது.

பரிமேலழகர் உரை

நத்தம் ஆகும் கேடும்= புகழுடம்பிற்கு ஆக்கமாகும் கேடும்; உளது ஆகும் சாக்காடும்= புகழுடம்பு உளதாகும் சாக்காடும்; வித்தகர்க்கு அல்லால் அரிது= சதுரப்பாடுடையார்க்கு அல்லது இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

'நந்து' என்னும் தொழிற்பெயர், விகாரத்துடன் 'நத்து' என்றாய்ப் பின் 'அம்' என்னும் பகுதிப்பொருள் விகுதி பெற்று, 'நத்தம்' என்றாயிற்று. 'போல்' என்பது, ஈண்டு உரையசை. 'ஆகும்' என்பதனை முன்னுங் கூட்டி, 'அரிது' என்பதனைத் தனித்தனி ?கூட்டி உரைக்க. ஆக்கமாகும் கேடாவது, புகழ் உடம்பு செல்வம் எய்தப் பூத உடம்பு நல்கூர்தல். உளதாகும் சாக்காடாவது, புகழ் உடம்பு நிற்கப் பூதஉடம்பு இறத்தல். நிலையாதனவற்றான் நிலையின எய்துவார் வித்தகர் ஆகலின்,

'வித்தகர்க்கல்லால் அரிது' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் புகழ் உடையார் எய்தும் மேன்மை கூறப்பட்டது.

# குறள்: 236 (தோன்றிற்)

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று (236)

தோன்றின் புகழொடு தோன்றுக அஃது இல்லார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

பரிமேலழகர் உரை

தோன்றின் புகழொடு தோன்றுக= மக்களாய்ப்பிறக்கின் புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அஃது இலார் தோன்றலின் தோன்றாமை நன்று= அக்குணம் இல்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'புகழ்' ஈண்டு ஆகுபெயர். 'அஃது இலார்' என்றமையின், மக்களாய் என்பதூஉம், மக்களாய்ப் பிறவாமை என்ற அருத்தாபத்தியான் விலங்காய்ப் பிறத்தல் என்பதூஉம் பெற்றாம். இகழ்வார் இன்மையின் 'நன்று' என்று.

# குறள்: 237 (புகழ்பட)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன் (237)

புகழ்பட வாழாதார் தம் நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன்.

பரிமேலழகர் உரை

புகழ்பட வாழாதார்= தமக்குப் புகழுண்டாக வாழ மாட்டாதார்; தம் நோவார்= அதுபற்றிப்பிறர் இகழ்ந்தவழி இவ்விகழ்ச்சி நம்மாட்டாமையான் வந்தது என்று தம்மை நோவாதே; தம்மை இகழ்வாரை நோவது எவன்= தம்மை இகழ்வாரை நோவது என்கருதி.

பரிமேலழகர் உரைவிளக்கம்

புகழ்பட வாழலாயிருக்க அது மாட்டாத குற்றம் பற்றிப் பிறர் இகழ்தல் ஒருதலையாகலின், 'இகழ்வாரை' என்றார்.

# குறள்: 238 (வசையென்ப)

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின் (08)

வசை என்ப வையத்தார்க்கு எல்லாம் இசை என்னும்
எச்சம் பெறாஅ விடின்.

பரிமேலழகர் உரை

இசை என்னும் எச்சம் பெறா விடின்= புகழ் என்னும் எச்சம் பெறலாயிருக்க அது பெறாது ஒழிவராயின்; வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப= வையகத்தோர்க்கு எல்லாம் அதுதானே வசை என்று சொல்லுவர் நல்லோர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

எச்சம் என்றார், செய்தவர் இறந்து போகத் தான் இறவாது நிற்றலின், இகழப்படுதற்குப் பிறிதொரு குற்றம் வேண்டா என்பது கருத்து.

# குறள்: 239 (வசையிலா)

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம் (09)

வசை இலா வண் பயன் குன்றும் இசை இலா
யாக்கை பொறுத்த நிலம்.

பரிமேலழகர் உரை

இசை இலா யாக்கை பொறுத்த நிலம்= புகழ் இல்லாத உடம்பைச் சுமந்த நிலம்; வசை இலா வண் பயன் குன்றும்= பழிப்பு இல்லாத வளப்பத்தை உடைய விளையுள் குன்றும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உயிர் உண்டாயினும் அதனாற் பயன் கொள்ளாமையின், 'யாக்கை' எனவும், அது நிலத்திற்குப் பொறையாகலின், 'பொறுத்த' எனவும் கூறினார். விளையுள் குன்றுதற்கு ஏது, பாவ யாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு. 'குன்றும்' என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது.

இவை நான்கு பாட்டானும், புகழ் இல்லாரது தாழ்வு கூறப்பட்டது.

# குறள்: 240 (வசையொழிய)

வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர் (10)

வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் இசை ஒழிய
வாழ்வாரே வாழாதவர்.

பரிமேலழகர் உரை

வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்= தம்மாட்டு வசை உண்டாகாமல் வாழ்வாரே உயிர் வாழ்வாராவார்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர்= புகழ் உண்டாகாமல் வாழ்வாரே இறந்தவர் ஆவர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

வசையொழிதலாவது, 'இசை என்னும் எச்சம்' பெறுதல் ஆயினமையின், இசையொழிதலாவது 'வசை' பெறுதல்

ஆயி்ற்று. மேல் 'இசையிலா யாக்கை'(குறள், 239) என்றதனை விளக்கியவாறு.

இதனான் இவ்விரண்டும் உடன் கூறப்பட்டன.

மறுமைப் பயன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என மேலே கூறப்பட்டது. படவே, இல்லறத்திற்கு இவ்வுலகில் புகழும், தேவர் உலகில் போகமும் பயன் என்பது பெற்றாம்.

இனி, மனு முதலிய அறநூல்களால் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்கள் எல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற்றுள்ளே அடங்கும்; அஃது அறிந்து அடக்கிக் கொள்க, யாம் உரைப்பின் பெருகும்.

திருக்குறள் அறத்துப்பால் 'இல்லறவியல்' முற்றும்

# 3. துறவறவியல்

பரிமேலழகர்தம் இயல் முன்னுரை

இனி, முறையானே துறவறம் கூறிய தொடங்கினார். துறவறமாவது, மேற்கூறிய இல்லறத்தின் வழுவாது ஒழுகி, அறவுடையராய்ப்? பிறப்பினை அஞ்சி, வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரிய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து, அந்தக்கரணங்கள்

தூயவாதற்பொருட்டு, அவராற் காக்கப்படும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமும் என இருவகைப்படும்.

## விரதம்

அவற்றுள், விரங்களாவன, இன்னஅறம் செய்வல் எனவும், இன்ன பாவம் ஒழிவல் எனவும், தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வன. அவைதாம் வரம்பில ஆகலின், பெருகும் என்று அஞ்சி, அவைதம்முளே பலவற்றையும் அகப்படுத்து நிற்கும் சிறப்புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான் தொடங்கி, முதற்கண் 'அருளுடைமை' கூறுகின்றார்.

## அதிகாரம்: 25. அருளுடைமை

பரிமேலழகரின் அதிகார முன்னுரை

அஃதாவது, தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வாதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமை போல இது துறவறத்திற்குச் சிறந்தமையின் முன்கூறப்பட்டது.

# குறள்: 241 (அருட்செல்வஞ்)

அருட்செல்வஞ் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள (01).

அருள் செல்வம் செல்வத்துள் செல்வம் பொருள் செல்வம்
பூரியார் கண்ணும் உள.

*[அருஞ்சொற் பொருள்: பூரியார்- இழிந்தவர்கள்; கண்ணும்- இடத்தும்.]*

பரிமேலழகர் உரை

செல்வத்துள் செல்வம் அருட் செல்வம்= செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட செல்வமாவது, அருளான்வரும் செல்வம்; பொருள்செல்வம் பூரியார் கண்ணும் உள= அஃது ஒழிந்த பொருளான்வரும் செல்வங்கள், இழிந்தார்கண்ணும் உளவாம் ஆகலான்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அருளான்வரும் செல்வமாவது, உயிர்களை ஓம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணே அல்லது இல்லாத

அருட்செல்வமே சிறப்புடைய செல்வம்; ஏனை நீசர்கண்ணும் உளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பு இல என்பதாம்.

# குறள்: 242 (நல்லாற்றான்)

நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றான்
றேரினு மஃ்தே துணை (02)

நல் ஆற்றான் நாடி அருள் ஆள்க பல் ஆற்றான்
தேரினும் அஃ்தே துணை.

*[அருஞ்சொற்பொருள்:* ஆறு> ஆற்றான்- நல்லநெறி, வழி; அருள்ஆள்க- அருள்வழி நிற்க, அதாவது அருளுடையவனாக விளங்குக. தேரினும்- ஆராய்ந்து பார்த்தாலும், தேர்>தேரின்>தேரினும்.*]*``

பரிமேலழகர் உரை

நல் ஆற்றான் நாடி அருள் ஆள்க= அளவைகளானும், பொருந்துமாற்றானும் நன்றான நெறியிலே நின்று, 'நமக்குத் துணையாம் அறம் யாது' என்று ஆராய்ந்து அருளுடையராக; பல் ஆற்றான் தேரினும் துணை அஃ்தே= ஒன்றையொன்று ஒவ்வாத சமயநெறிகள் எல்லாவற்றானும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறிது இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அளவைகளாவன, பொறிகளான் காணும் 'காட்சி'யும், குறிகளான்

உய்த்துணரும் 'அனுமான'மும், கருத்தா மொழி ஆகிய 'ஆகம'மும் என மூன்று. ஒப்புப்பற்றி உணரும் 'உவமை'யும், இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்று உணரும் 'அருத்தாபத்தி'யும், உண்மைக்கு மாறாய 'இன்மை'யும் என இவற்றைக் கூட்டி, ஆறு என்பாரும் உளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்று என்றலே கருத்து. பொருந்தும் ஆறாவது, 'இது கூடும் இது கூடாது' எனத் தன்கண்ணே தோன்றுவது. இதனை வடநூலார் 'உத்தி' என்ப. 'ஆற்றான்' என்பது, வேற்றுமை மயக்கம். ஒன்றையொன்று ஒவ்வாமையாவது, மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும் தம்முள் மாறுகோடல். அன்னவாயினும், அருள்துணை என்றற்கண் ஒக்கும் என்பதாம். உயிரைவிட்டு நீங்காது இருமையினும் உதவலின் துணை என்றார்.

இவை இரண்டு பாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள்: 243 (அருள்சேர்ந்த)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல் (03)

அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள் சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

*[அருஞ்சொற்பொருள்: இருள்சேர்ந்த- இருள்நிரம்பிய; இன்னா உலகம்- துன்ப உலகம் அதாவது நரகம்.]*

பரிமேலழகர் உரை

இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்= இருள்செறிந்த துன்ப உலகத்துள் சென்று புகுதல்; அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை- அருள் செறிந்த நெஞ்சினை உடையார்க்கு இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இருள் செறிந்த துன்ப உலகம் என்றது, திணிந்த இருளை உடைத்தாய்த் தன்கண் புக்கார்க்குத் துன்பம் செய்வதொரு நரகத்தை. அது கீழுலகத்துள் ஓர் இடம் ஆகலின், உலகம் எனப்பட்டது.

# குறள்: **244** (மன்னுயிரோம்பி)

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை (04)

மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு இல் என்ப
தன் உயிர் அஞ்சும் வினை.

பரிமேலழகர் உரை

மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு= நிலைபேறுடைய உயிர்களைப் பேணி அவற்றின்கண் அருளுடையனாவானுக்கு; தன் உயிர் அஞ்சும் வினை இல் என்ப= தன் உயிர் அஞ்சுதற்கு ஏதுவாகிய தீவினைகள் உளவாகா என்று சொல்லுவர் அறிந்தோர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உயிர்கள் எல்லாம் நித்தம் ஆகலின், 'மன் உயிர்' என்றார். 'அஞ்சுதல்', துன்பம் நோக்கி அஞ்சுதல். அன்ன அறத்தினோன், கொலை முதலிய பாவங்கள் செய்யான்; எனவே, மறுமைக்கண் நரகம் புகாமைக்கு ஏது கூறியவாயிற்று.

# குறள்: 245 (அல்லல்அருளாள்)

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி (05)

அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை வளி வழங்கு
மல்லல் மா ஞாலம் கரி.

பரிமேலழகர் உரை

அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை= அருள் உடையோர்க்கு இம்மையினும் ஒரு து்னபம் உண்டாகாது; வளிவழங்கும் மல்லல் மா ஞாலம் கரி= அதற்குக் காற்று இயங்குகின்ற வளப்பத்தை உடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'சான்று' ஆவார், தாம் கண்டு தேறிய பொருளைக் காணாதார்க்குத் தேற்றுதற்கு உரியவர்; அருள் ஆள்வார்க்கு அல்லல் உண்டாக ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவரும் கண்டறிவார் இன்மையின், இன்மை முகத்தான் ஞாலத்தார் யாவரும் சான்று என்பார், 'வளி வழங்கு ம்ல்லல் ஞாலம் கரி' என்றார். எனவே, இம்மைக்கண்

என்பது பெற்றாம். 'ஞாலம்' ஆகுபெயர்.

இவை மூன்று பாட்டானும், அத்துணையுடையார்க்கு இருமையினும் துன்பம் இல்லாமை கூறப்பட்டது.

# குறள்: 246 (பொருணீங்கிப்)

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார் (06)

பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள் நீங்கி
அல்லவை செய்து ஒழுகுவார்.

பரிமேலழகர் உரை: அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார்= உயிர்கள் மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படும் கொடுமைகளைச் செய்து ஒழுகுவாரை; பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர்= முன்னும் உறுதிப் பொருளைச் செய்யாது தாம் துன்புறுகின்றமையை மறந்தவர் என்று சொல்லுவர் நல்லோர்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உறுதிப்பொருள், அறம்; துன்புறுதல், பிறவித்துன்பம் மூன்றனையும் அனுபவித்தல். மறந்திலராயின், அவ்வாறு ஒழுகார் என்பது கருத்து.

# குறள்: 247 (அருளில்லார்க்)

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு (07).

அருள் இல்லார்க்கு அவ் உலகம் இல்லை பொருள் இல்லார்க்கு
இவ் உலகம் இல்லாகி ஆங்கு.

பரிமேலழகர் உரை

அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை= உயிர்கள் மேல் அருள் இல்லாதார்க்கு வீட்டுலகத்து இன்பம் இல்லை; பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு= பொருள் இல்லாதார்க்கு இவ்வுலகத்து இன்பம் இல்லையாயினாற் போல.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அவ்வுலகம் , இவ்வுலகம் என்பன ஆகுபெயர்கள். இவ்வுலகத்து இன்பங்கட்குப் பொருள் காரணம் ஆயினாற் போல, அவ்வுலகத்து இன்பங்கட்கு அருள் காரணம் என்பதாயிற்று.

# குறள்: 248 (பொருளற்றார்)

பொருளற்றார் பூப்பரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது (08)

பொருள் அற்றார் பூப்பர் ஒருகால் அருள் அற்றார்
அற்றார் மற்று ஆதல் அரிது.

பரிமேலழகர் உரை

பொருள் அற்றார் ஒருகால் பூப்பர்= ஊழான் வறியராயினார் அது நீங்கிப் பின் ஒருகாலத்துச் செல்வத்தால் பொலிவர்; அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது= அவ்வாறு அன்றி அருள் இலாதார் பாவம் அறாமையின் அழிந்தாரே, பின் ஒருகாலத்தும் ஆதல் இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மற்று வினைமாற்றின்கண் வந்தது. மேல் பொருள் இன்மையொடு ஒருவாற்றான் ஒப்புமை கூறினார் ஆகலின், அது மறுத்துப் பிற ஆற்றான் அதனினும் கொடியது என்பது கூறியவாறு.

# குறள்: 249 (தெருளாதான்)

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டாற்றா றேரி
னருளாதான் செய்யு மறம் (09)

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டு அற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

பரிமேலழகர் உரை

அருளாதான் செய்யும் அறம் தேரின்= உயிர்கள் மாட்டு அருள் செய்யாதவன் செய்யும் அறத்தை ஆராயின்; தெருளாதான் மெய்ப் பொருள் கண்டற்று= ஞானம் இல்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளை உணர்ந்தாற் போலும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மெய்ப்பொருள்- மெய்நூலில் சொல்லும் பொருள். நிலைபெற்ற ஞானம் இல்லாதவன் இடையே மெய்ப்பொருளை உணர்ந்தால் அதனைத் தன் ஞானம் இன்மையால் தானே அழித்துவிடும்.

அதுபோல அருளாதான் இடையே அறஞ்செய்தால் அதனைத் தன் அருளாமையால் தானே அழித்துவிடும் என்பதாயிற்று. ஆகவே பிற அறங்கட்கெல்லாம் அருளுடைமை மூலம் என்பது பெற்றாம்.

இவை நான்கு பாட்டானும், அத் துணை இல்லாதார்க்கு வரும் குற்றம் கூறப்பட்டது.

# குறள்: 250 (வலியார்முன்)

வலியார்முன் றன்னை நினைக்க தான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து (10).

வலியார் முன் தன்னை நினைக்க தான் தன்னின்
மெலியார் மேல் செல்லும் இடத்து.

பரிமேலழகர் உரை

வலியார் முன் தன்னை நினைக்க= தன்னின் வலியார் தன்னை நலிய வரும்பொழுது, அவர்முன் தான் அஞ்சி நிற்கும் நிலையினை நினைக்க; தான் தன்னின் மெலியார்மேல் செல்லுமிடத்து= அருள் இல்லாதவன் தன்னின் எளியார்மேல் தான் நலியச் செல்லும் பொழுது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'மெலியார்' எனச் சிறப்புடைய உயர்திணைமேல் கூறினாராயினும், ஏனைய அஃறிணையும் கொள்ளப்படும். அதனை நினைக்கவே, இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சம் ஆம் என்று அறிந்து, அதன்மேல் அருளுடையன் ஆம் என்பது கருத்து.

இதனால், அருள் பிறத்தற்கு உபாயம் கூறப்பட்டது.

# அதிகாரம் **26.** புலான் மறுத்தல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, ஊன் உண்டலை ஒழித்தல். கொலைப்பாவத்தைப் பின்னும் உளது ஆக்கலின் அதற்குக் காரணம் ஆதலையும், முன்னும் அதனால் வருதலின் அதன் காரியம் ஆதலையும் ஒருங்குடைத்தாய ஊன் உண்டல் அருளுடையார்க்கு இயைவது அன்று ஆதலின் அதனை விலக்குதற்கு இஃது அருளுடைமையின் பின் வைக்கப்பட்டது.

# குறள்**: 251 (**தன்னூன்**)**

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள் (01).

தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.

பரிமேலழகர் உரை

தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான்= தன் உடம்பை வீக்குதற்பொருட்டுத் தான் பிறிதோர் உயிரின்

உடம்பைத் தின்பவன்; எங்ஙனம் ஆளும் அருள்= எவ்வகையான் நடத்தும் அருளினை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பயன் இலாத ஊன் பெருக்கலைப் பயன் எனக் கருதி, இக்கொடுமை செய்வானே அறிவிலாத கொடியோன் என்றவாறு ஆயிற்று. 'எங்ஙனம் ஆளும் அருள்' என்பது, ஆளான் என்பது பயப்ப நின்ற இகழ்ச்சிக் குறி ்ப்பு.

# குறள்: 252 (பொருளாட்சி)

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு (02)

பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை அருள் ஆட்சி
ஆங்கு இல்லை ஊன் தின்பவர்க்கு.

பரிமேலழகர் உரை

பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை= பொருளால் பயன் கோடல் அதனைப் பாதுகாவாதார்க்கு இல்லை; ஆங்கு அருள் ஆட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை= அது போல அருளால் பயன் கோடல் ஊன் தின்பவர்க்கு இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பொருட்பயன் இழத்தற்குக் காரணம் காவாமை போல, அருட்பயன் இழத்தற்கு ஊன் தின்னல் காரணம் என்பதாயிற்று.

ஊன்தின்றார் ஆயினும், உயிர்கட்கு ஒரு தீங்கும் நினையாதார்க்கு அருள் ஆள்தற்கு இழுக்கு இல்லை என்பாரை மறுத்து, அஃது உண்டு

என்பது இவை இரண்டு பாட்டானும் கூறப்பட்டது.

## குறள்: 253 (படைகொண்டார்

படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்ற
னுடற்சுவை யுண்டார் மனம் (3)

படை கொண்டார் நெஞ்சம்போல் நன்று ஊக்காது ஒன்றன்
உடல் சுவை உண்டார் மனம்.

பரிமேலழகர் உரை

படை கொண்டார் நெஞ்சம் போல்= கொலைக் கருவியைத் தம் கையில் கொண்டவர் மனம் அதனால் செய்யும் கொலையையே நோக்குவது அல்லது, அருளை நோக்காதவாறு போல; ஒன்றன் உடல்சுவை உண்டார் மனம் நன்று ஊக்காது= பிறிதோர் உயிரின் உடலைச் சுவைபட உண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவதுஅல்லது அருளை நோக்காது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சுவைபட உண்டல்- காயங்களான் இனிய சுவைத்து ஆக்கி உண்டல். இதனான் ஊன் தின்றார் மனம் தீங்குநினைத்தல் உவம அளவையால் சாதித்து, மேலது வலியுறுத்தப்பட்டது.

## குறள்: 254 (அருளல்லதி)

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல் (04)

அருள் அல்லது யாது எனில் கொல்லாமை கோறல்
பொருள் அல்லது அவ்வூன் தினல்.

பரிமேலழகர் உரை

அருள் யாது எனின் கொல்லாமை= அருள்யாது எனின், கொல்லாமை; அல்லது (யாதெனின்) கோறல்= அருள் அல்லது யாது எனின் கோறல்; அவ்வூன் தினல் பொருள் அல்லது= ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத் தின்கை பாவம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உபசாரவழக்கால் 'கொல்லாமை', 'கோறல்' ஆகிய காரியங்களை 'அருள்', 'அல்லது' எனக் காரணங்கள்ஆக்கியும், 'ஊன்தின்கை' ஆகிய காரணத்தைப் பாவம் எனக் காரியமாக்கியும் கூறினார். அருள்அல்லது- கொடுமை. சிறப்புப் பற்றி அறமும் பொருள் எனப்படுதலின், பாவம் 'பொருள்அல்லது' எனப்பட்டது. 'கோறல்' என முன்நின்றமையின், 'அவ்வூன்' என்றார். இனி, இதனை இவ்வாறன்றி 'அருளல்லது' என்பதனை ஒன்றாக்கி, 'கொல்லாமை கோறல்' என்பதற்குக் கொல்லாமை என்னும் விரதத்தை அழித்தல் என்று உரைப்பாரும் உளர்.

# குறள்: 255 (உண்ணாமை

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு (05)

உண்ணாமை உள்ளது உயிர் நிலை ஊன் உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.

பரிமேலழகர் உரை

உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது= ஒருசார் உயிர் உடம்பின்கண்ணே நிற்றல் ஊன் உண்ணாமை என்கின்ற அறத்தின்கண்ணது; உண்ண= ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனை உண்ணுமாயின்; அளறு அண்ணாத்தல் செய்யாது= அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ்வதற்கு அங்காவாது.

பரிமேலழகர் உரைவிளக்கம்

உண்ணப்படும் விலங்குகள் அதனால் தேய்ந்து சிலவாக, ஏனைய பலவாய் வருதலின், உண்ணாமை உள்ளது உயிர்நிலை என்றார். உண்ணின் என்பது, உண்ண எனத்திரிந்து நின்றது.ஊன் உண்டவன் அப்பாவத்தான் நெடுங்காலம் நிரயத்துள் அழுந்தும் என்பதாம்.

கொலைப்பாவம் கொன்றார்மேல் நிற்றலின் பின் ஊன் உண்பார்க்குப் பாவமில்லை என்பாரை மறுத்து, அஃது உண்டு என்பது இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது.

## குறள்: 256 (தினற்பொருட்டால்)

தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில் (06).

தினல் பொருட்டால் கொல்லாது உலகு எனின் யாரும்
விலைப் பொருட்டால் ஊன் தருவார் இல்.

பரிமேலழகர் உரை

தினல்பொருட்டால் = பேதைமை காரணமாக அல்லது, ஊன் தின்கை காரணமாக; உலகு கொல்லாது எனின்= உலகம்

கொல்லாதாயின்; விலைப் பொருட்டால் ஊன் தருவார் யாரும் இல்= பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'உலகு' என்பது, ஈண்டு உயிர்ப்பன்மை மேல் நின்றது. பின்நிகழும் 'தின்கை' முன்நிகழும் கொலைக்குக் காரணம் ஆகாமையின், தின்பார்க்குக் காரணத்தான் வரும் 'பாவம் இல்லை' என்ற வாதியை நோக்கி, அருத்தாபத்தி அளவையால் காரணமாதல் சாதித்தமையின் இதனான் மேலது வலியுறுத்தப்பட்டது.

# குறள்: 257 (உண்ணாமைவேண்டும்)

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின் (07)

பரிமேலழகர் உரை

புலாஅல் பிறிது ஒன்றன் புண்= புலாலாவது, பிறிதோர் உடம்பின் புண்; அது உணர்வார்ப்பெறின்= அது தூய்து அன்மை அறிவாரைப் பெறின்; உண்ணாமை வேண்டும்= அதனை உண்ணாது ஒழியல் வேண்டும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அஃது என்னல் வேண்டும்- ஆய்தம் விகாரத்தால் தொக்கது. அம்மெய்ம்மை உணராமையின், அதனை உண்கின்றார் என்பதாம்.

பொருந்தும் ஆற்றானும், புலால் உண்டல் இழிந்தது என்பது இதனான் கூறப்பட்டது.

# குறள்: 258 (செயிரின்)

செயிரின் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரின் றலைப்பிரிந்த வூன் (08).

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

பரிமேலழகர் உரை

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார்= மயக்கம் ஆகிய குற்றத்தின் நீங்கிய அறிவினை உடையார்; உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார்= ஓர் உயிரின் நீங்கி வந்த ஊனை உண்ணார்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

'தலைப்பிரிவு' எனபது ஒருசொல். பிணம் என ஊனின் மெய்ம்மை தானே உணர்தலின் 'உண்ணார்' என்றார்.

# குறள்: 259 (அவிசொரிந்)

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று (259).

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணாமை நன்று.

பரிமேலழகர் உரை

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின்= தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்வி வேட்டலினும்; ஒன்றன்

உயிர் செகுத்து உண்ணாமை நன்று= ஒருவிலங்கின் உயிரைப் போக்கி அது நின்ற ஊனை உண்ணாமை நன்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அவ்வேள்விகளான் வரும் பயனினும் இவ்விரதத்தான் வரும் பயனே பெரிது என்பதாம்.

# குறள்: 260 (கொல்லான்)

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும் (10).

கொல்லான் புலாலை மறுத்தானைக் கை கூப்பி
எல்லா உயிரும் தொழும்.

பரிமேலழகர் உரை

கொல்லான் புலாலை மறுத்தானை= ஓர் உயிரையும் கொல்லாதவனுமாய்ப் புலாலையும் உண்ணாதவனை; எல்லா உயிரும் கை கூப்பித் தொழும்= எல்லா உயிரும் கை குவித்துத் தொழும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

இவ்விரண்டு அறமும் ஒருங்கு உடையார்க்கல்லது, ஒன்றே உடையார்க்கு அதனால் பயன் இல்லை ஆதலின், கொல்லாமையும் உடன்கூறினார். இப்பேரருள் உடையான், மறுமைக்கண் தேவரின் மிக்கான்ஆம் என அப்பயனது பெருமை கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும், ஊன் உண்ணாமையது உயர்ச்சி

## அதிகாரம் **27.** தவம்

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களை ஓம்புதல். புலால் மறுத்து உயிர்கள்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது ஆகலின், இது புலால் மறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள்**: 261 (**உற்றநோய்**)**

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு (01)

உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தவத்திற்கு உரு= தவத்தின் வடிவு: உற்றநோய் நோன்றல்= உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும்; உயிர்க்கு உறுகண் செய்யாமை= தாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமையும்; அற்றே= ஆகிய அவ்வளவிற்று.

பரிமேலழகர் உரைவிளக்கம்

மற்றுள்ளன எல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின், 'அற்றே' எனத் தேற்றேகாரம் கொடு◌்த்தார். 'தவத்திற்கு உரு அற்று' என்பது "யானையது கோடு கூரிது" என்பதனை, யானைக்குக் கோடு கூரிது என்றாற் போல ஆறாவதன் பொருட்கண் நான்காவது வந்த மயக்கம்.

இதனான் தவத்தது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள்: 262 (தவமுந்)

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது (02).

தவமும் தவம் உடையார்க்கு ஆகும் அவம் அதனை
அஃது இலார் மேற்கொள்வது.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தவமும் தவம் உடையார்க்கு ஆகும்= பயனே அன்றித் தவந்தானும் உண்டாவது முன்தவம் உடையார்க்கே; அதனை அஃது இலார் மேற்கொள்வது அவம்= ஆகலான் அத்தவத்தை அம்முன்தவம் இல்லாதார் முயல்வது பயன் இல்

முயற்சியாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

பரிசயத்தால் அறிவும் ஆற்றலும் உடையராய், முடிவு போக்கலின் 'தவம் உடையார்க்கு ஆகும்' என்றும், அஃது இல்லாதார்க்கு அவை இன்மையின் முடிவு போகாமையின், 'அவம்' ஆம் என்றும் கூறினார்.

## குறள்: 263 (துறந்தவர்க்குத்)

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொ்ன்
மற்றை யவர்க டவம் (243).

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார் கொல்
மற்றையவர்கள் தவம்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) மற்றையவர்கள்= இல்லறத்தையே பற்றி நிற்பார்; துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி= துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை விரும்பி; தவம் மறந்தார்கொல்= தாந்தாம் செய்யும் தானத்தின்மேல் விருப்பம் மிகுதியான் 'மறந்தார் பொலும்'.

பரிமேலழகர் உரைவிளக்கம்

துப்புரவு அனுபவிக்கப்படுவன. வேண்டிய வேண்டியாங்கெய்தற் பயத்ததாகலின் யாவராலும் செய்யப்படுவதாய தவத்தைத் தான் செய்யுந் தானத்தின்மேல் விருப்பம் மிகுதியான் 'மறந்தார் போலும்'. எனவே, தானத்தில் தவம் மிக்கதென்பது பெற்றாம்.

# குறள்: 264 (ஒன்னார்த்)

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும் (04).

ஒன்னாரைத் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.

பரிமேலழகர் உரை: (இதன்பொருள்) ஒன்னார்த் தெறலும்= தம் மறத்திற்குப் பகையாய் அழிவு செய்தாரைக் கெடுத்தலும்; உவந்தாரை ஆக்கலும்= அதனை உவந்தாரை உயர்த்தலும் ஆகிய இவ்விரண்டையும்; எண்ணின் தவத்தான் வரும்= தவம்செய்வார் நினைப்பாராயின் அவர் தவவலியான் அவை அவர்க்கு உளவாம்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

முற்றத் துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமையின், தவத்திற்கு ஏற்றி உரைக்கப்பட்டது. 'எண்ணின்' என்றதனான், அவர்க்கு அவை எண்ணாமை இயல்பு என்பது பெற்றாம். ஒன்னார் பெரியராயினும், உவந்தார் சிறியராயினும், கேடும் ஆக்கமும் நினைத்த துணையானே வந்து நிற்கும் எனத் தவம் செய்வார் மேலிட்டுத் தவத்தினது ஆற்றல் கூறியவாறு.

# குறள்: 265 (வேண்டியவேண்டி)

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும் (265).

வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்

ஈண்டு முயலப் படும்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) வேண்டிய வேண்டியாஙகு எய்தலால்= முயன்றால் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால்; செய்தவம் ஈண்டு முயலப்படும்= செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

ஈண்டு என்பதனான் மறுமைக்கண் என்பது பெற்றாம். $மேற்கதி-வீடுபேறுகள். தவத்தானன்றி எய்தப்படா என்பதாம். இவை நான்கு பாட்டானும் தவத்தது சிறப்புக் கூறப்பட்டது.

$இந்திரன் முதலிய இறையவர் பதங்கள்.

# குறள்: 266 (தவஞ்செய்வார்)

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு (06).

தவம் செய்வார் தம் கருமம் செய்வார் மற்று அல்லார்
அவம் செய்வார் ஆசையுள் பட்டு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தம்கருமம் செய்வார் தவம் செய்வார்= தம் கருமம் செய்வாராவார் துறந்து தவத்தைச் செய்வார்; மற்று அல்லார் ஆசையுள் பட்டு அவம் செய்வார்= அவரை ஒழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின்கண் ஆசையாகிய வலையுள் பட்டுத் தமக்குக்கேடு செய்வார்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

அநித்தமாய், மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேறாய உடற்கு வருத்தம் வரும் என்றொழியாது, தவத்தினைச் செய்யப் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர், ஞானம் பிறந்து வீடு பெறும் ஆகலின், தவம் செய்வாரைத் 'தங்கருமஞ் செய்வார்' என்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவியும் துன்புறத்தக்க பாவம் செய்துகோடலின், அல்லாதாரை 'அவஞ்செய்வார்' என்றும் கூறினார். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது.

# குறள்:267 (சுடச்சுடரும்)

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு (07).

சுடச் சுடரும் பொன் போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) சுடச்சுடரும் பொன்போல்= தீயின்கண் ஓடும் பொன்னுக்கு அது சுடச்சுடத் தன்னோடு கலந்த குற்றம் நீங்கி ஒளிமிகுமாறு போல; நோற்கிற்பவர்க்குத் துன்பம் சுடச் சுட ஒளிவிடும்= தவஞ்செய்ய வல்லார்க்கு அதனான் வருந் துன்பம் வருத்த வருத்தந் தம்மொடு கலந்த பாவ நீங்கி ஞானம்மிகும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சுடச்சுடரும் பொன்போல் என்றாராயினும், கருத்து நோக்கி

இவ்வாறு உரைக்கப்பட்டது. ஒளி போலப் பொருள்களை விளக்கலின் ஒளி என்றார்.

# குறள்: 268 (தன்னுயிர்)

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும் (08)

தன் உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய
மன் உயிர் எல்லாம் தொழும்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) தன் உயிர் தான் அறப் பெற்றானை= தன் உயிரைத் தான் தனக்குரித்தாகப் பெற்றவனை; ஏனைய மன்னுயிர் எல்லாம் தொழும்= அது பெறாதனவாகிய மன்னுயிர்கள் எல்லாம் தொழும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

தனக்குரித்தாதல், தவமாகிய தன்கருமம் செய்தல். அதனினூங்குப் பெறுதற்கு அரியது இன்மையின், 'பெற்றானை' என்றார். 'அது பெறாதன' என்றது, ஆசையுட்பட்டு அவம் செய்யும் உயிர்களை. சாபமும் அருளும் ஆகிய இரண்டு ஆற்றலும் உடைமையின், 'தொழும்' என்றார்.

# குறள்: 269 (கூற்றங்)

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி

னாற்ற றலைப்பட் டவர்க்கு (09).

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்டவர்க்கு.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) கூற்றம் குதித்தலும் கைகூடும்= கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம்; நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு= தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப்பட்டார்க்கு.

பரிமேலழகர் உரைவிளக்கம்

சிறப்பும்மை அது கூடாமை விளக்கிற்று; 'மன்னுயிர் எல்லாம் தோழு'தலேயன்றி, இதுவுங் கைகூடும் என எச்சவும்மையாக உரைப்பினும் அமையும். 'ஆற்றல்' சாப அருள்கள். இவை நான்குபாட்டானும் தவம் செய்வாரது உயர்ச்சி கூறப்பட்டது.

# குறள்: 270 (இலர்பலராகிய)

இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர் (10)

இலர் பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர் பலர் நோலாதவர்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) இலர் பலராகிய காரணம்= உலகத்துச் செல்வர் சிலராக நல்கூர்வார் பலராதற்குக் காரணம் யாதெனில்; நோற்பார் சிலர் நோலாதார் பலர்= அது தவம் செய்வார் சிலராக அது

செய்யாதார் பலராதல்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

செல்வம் நல்குரவு என்பன ஈண்டு அறிவினது உண்மை இன்மைகளையும் குறித்துநின்றன. என்னை? "நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை- பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்"¶ என்றார் ஆகலின். நோற்பார் சிலர் எனக் காரணம் கூறினமையான் காரியம் வருவித்து உரைக்கப்பட்டது. தவம் செய்யாதார்க்கு இம்மை யின்பமும் இல்லை என இதனால் அவரது தாழ்வு கூறப்பட்டது.

¶நாலடியார்-251

# அதிகாரம் **28.** கூடாவொழுக்கம்

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, தாம் விட்ட காம இன்பத்தை உரன் இன்மையிற் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டுநின்று, தவத்தோடு பொருந்தாததாய தீய ஒழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

## குறள்**: 271 (**வஞ்சமனத்தான்**)**

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும் (01).

வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

பரிமேலழகர் உரை

**(**இதன்பொருள்**)** வஞ்ச மனத்தான் படிற்றுஒழுக்கம்= வஞ்சம் பொருந்திய மனத்தை உடையவனது மறைந்த ஒழுக்கத்தை**;**

பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்= உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்கள் ஐந்தும் கண்டு த்ம்முள்ளே நகும்.

பரிமேலழகர் உரைவிளக்கம்

காமம் தன்கண்ணே தோன்றி நலியாநிற்கவும், அதனது இன்மை கூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் 'வஞ்சமனம்' என்றும், அந்நலிவு பொறுக்கமாட்டாது ஒழுகும் களவொழுக்கத்தைப் 'படிற்றொழுக்கம்' என்றும், உலகத்துக் களவுடையார் பிறர் அறியாமற் செய்வனவற்றிற்கு ஐம்பெரும் பூதங்கள் சான்று ஆகலின், அவ்வொழுக்கத்தையும் அதன் மறைக்கின்றவாற்றையும் அறிந்து, அவன் அறியாமல் தம்முள்ளே நகுதலின் 'அகத்தே நகும்' என்றும் கூறினார். செய்த குற்றம் மறையாதாகலின், அவ்வொழுக்கம் ஆகாது என்பது கருத்து.

# குறள்: 272 (வானுயர்)

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின் (02)

வான் உயர் தோற்றம் எவன் செய்யும் தன் நெஞ்சம்
தான் அறி குற்றம் படின்.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) வான் உயர் தோற்றம் எவன் செய்யும்= ஒருவனுக்கு வான்போல் உயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும்? ; தான் அறி குற்றம் தன் நெஞ்சம் படின்= தான் குற்றம் என்று அறிந்த அதன்கண்ணே தன் நெஞ்சு தாழுமாயின்.

பரிமேலழகர் உரை விளக்கம்

'வானுயர் தோற்றம்' என்பது "வான்றோய் குடி" என்றாற் போல இலக்கணை வழக்கு. அறியாது செய்த குற்றமல்லது அறிந்து வைத்துச் செய்த குற்றம் கழுவப்படாமையின், நெஞ்சு குற்றத்ததாயே விடும்; விடவே, நின்ற வேடமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலே அல்லது வேறு பயனில்லை என்பதாம்.

## குறள்: 273 (வலியில்நிலைமை)

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று (03)

வலி இல் நிலைமையான் வல் உருவம் பெற்றம்
புலியின் தோல் போர்த்து மேய்ந்து அற்று.

பரிமேலழகர் உரை

(இதன்பொருள்) வலி இல் நிலைமையான் வல் உருவம்= மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினை உடையான் வலியுடையார் வேடத்தைக் கொண்டு தான் அதன் வழிப்படுதல் ; பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று= பசு, காவலர் கடியாமல் புலியின் தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற் போலும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

இல்பொருள் உவமை. 'வலியில் நிலைமையான்' என்ற அடையானும், 'மேய்ந்தற்று' என்னும் தொழில் உவமையானும், வல்லுருவத்தோடு மனவழிப்படுதல் என்பது பெற்றாம். காவலர் கடியாமை, புலி புல் தின்னாது என்பதனானும், அச்சத்தானும்

ஆம்; ஆகவே, வல்லருவம் கோடற்குப் பயன், அன்ன காரணங்களான் உலகத்தார் அயிராமை ஆயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லாளையும் துறந்து, வலியும் இன்றிப் பிறர் அயிராத வல்லுருவமும் கொண்டுநின்றவன் மனவழிப்படுதலாவது, தன் மனம் ஓடியவழியே ஓடி மறைந்து, பிறர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ்வாறாதல், பெற்றம் தனக்குரிய புல்லைவிட்டுப் பிறர்க்குரிய 'பைங்கூழை மேய்ந்தாற் போலும்' என்ற உவமையான் அறிக.

# குறள்: 274 (தவமறைந்)

தவமறைந் தல்லவை செய்தல் புதன் மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ் தற்று (04)

தவம் மறைந்து அல்லவை செய்தல் புதல் மறைந்து
வேட்டுவன் புள் சிமிழ்த்தற்று.

பரிமேலழகர உரை

(இதன் பொருள்) தவம் மறைந்து அல்லவை செய்தல்= அவ் வலியில் நிலைமையான், தவவேடத்தின்கண்ணே மறைந்து நின்று தவம் அல்லவற்றைச் செய்தல் ; வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்தற்று= வேட்டுவன் புதலின்கண்ணே மறைந்துநின்று புட்களைப் பிணித்தாற் போலும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

தவம் ஆகுபெயர். தவம் அல்லவற்றைச் செய்தலாவது, பிறர்க்குரிய மகளிரைத் தன்வயத்த தாக்குதல். இதுவும் இத்தொழில் உவமையான் அறிக.

# குறள்: 275 (பற்றற்றேம்)

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும் (275)

பற்று அற்றேம் என்பார் படிற்று ஒழுக்கம் எற்று எற்று என்று
ஏதம் பலவும் தரும்.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) பற்று அற்றேம் என்பார் படிற்றொழுக்கம்= தம்மைப் பிறர் நன்கு மதித்தற் பொருட்டு, 'யாம் பற்றற்றேம்' என்று சொல்வாரது மறைந்த ஒழுக்கம்; எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும்= அப்பொழுது இனிதுபோலத் தோன்றுமாயினும், பின் 'என் செய்தேம் என்செய்தேம்' என்று தாமே இரங்கும்வகை, அவர்க்குப் பல துன்பங்களையும் கொடுக்கும்.

பரிமேலழகர் உரை விளக்கம்

சொல்லளவுஅல்லது பற்று அறாமையின், 'பற்றுஅற்றேம்' என்பார் என்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய இன்பத்தின் பொருட்டுப் பெரிதாய் நெடுங்காலம் நிற்பதாய பாவத்தைச் செய்வார் அதன் விளைவின்கண், `அந்தோ வினையே என்று அழுவர்'¶ ஆகலின் 'எற்றெற்று'என்றும் கூறினார்.

இவை ஐந்து பாட்டானும் கூடாஒழுக்கத்தின் இழுக்கம் கூறப்பட்டது.

¶(சீவகசிந்தாமணி-முத்திஇலம்பகம்)

# குறள்: 276 (நெஞ்சிற்)

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வண்கணா ரில் (06)

நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சி்த்து
வாழ்வாரின் வண்கணார் இல்.

பரிமேலழகர் உரை

நெஞ்சின் துறவார்= நெஞ்சாற் பற்று அறாதுவைத்து; துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின்= பறறற்றார் போன்று தானம் செய்வாரை வஞ்சித்து வாழும் அவர்போல்; வண்கணார் இல்= வன்கண்மையை உடையார் உலகத்தில் இல்லை.

பரிமேலழகர் உரை விளக்கம்

`தானஞ் செய்வாரை வஞ்சித்த'லாவது யாம் மறுமைக்கட் டேவராதற்பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்னது ஈதும் என்று அறியாது ஈந்தாரை அதுகொண்டு இழிபிறப்பினராக்குதல், அவர் இழிபிறப்பினராதல்,

"அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முந்நீர்த்
தடங்கட னடுவுட் தீவு பலவுள வவற்றுட் டோன்றி
யுடம்பொடு முகங்க கொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மனன ரேறே"$

$(சீவக சிந்தாமணி, முத்தியிலம்பகம்-244) என்பதனான் அறிக. தமக்கு ஆவன செய்தார்க்கு ஆகாதன விளைத்தலின், "வண்கணாரில்" லென்றார்.

# குறள்:277 (புறங்குன்றி)

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து(07)

புறம் குன்றி கண்டு அனையரேனும் அகம் குன்றி
மூக்கின் கரியார் உடைத்து.

பரிமேலழகர் உரை

(இதன் பொருள்) குன்றிப் புறம் கண்டு அனையரேனும்= குன்றியின் புறம்போல வேடத்தாற் செம்மை உடையராயினும்; குன்றி மூக்கின் அகம் கரியார் உடைத்து= அதன் மூக்குப்போல மனம் இருண்டிருப்பாரை உடைத்து உலகம்.

பரிமேலழகர் உரை விளக்கம்

குன்றி ஆகுபெயர். செம்மை கருமை என்பன பொருள்களின் நிறத்தை விட்டுச் செப்பத்தினும் அறியாமையினும் சென்றனவாயினும், பண்பால் ஒத்தலின், இவை பண்புவமை; "கூழின் மலிமனம் போலிரு ளாநின்ற கோகிலமே"‡ என்பதும் அது.

‡திருச்சிற்றம்பலக்கோவையார்-322

# குறள்: 278 (மனத்தது)

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர் (08)

மனத்தது மாசு ஆக மாண்டார் நீர் ஆடி
மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்.

பரிமேலழகர் உரை (இதன் பொருள்)

மாசு மனத்தது ஆக= மாசு தம் மனத்தின்கண்ணதாக; மாண்டார் நீர் ஆடி= பிறர்க்குத் தவத்தான் மாட்சிமைஉடையராய் நீரின் மூழ்கிக் காட்டி; மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்= தாம் அதன்கண்ணே மறைந்து செல்லும் மாந்தர் உலகத்துப் பலர்.

பரிமேலழகர் உரை விளக்கம்

மாசு காம வெகுளி மயக்கங்கள். அவை போதற்கன்றி மாண்டா ரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், அத்தொழிலை அவர் மறைதற்கு இடன்ஆக்கினார். இனி 'மாண்டார்நீராடி' என்பதற்கு 'மாட்சிமைப்பட்டாரது நீர்மையை உடையராய்'£ என உரைப்பாருமுளர்.

( £ மணக்குடவர்) இவை மூன்று பாட்டானும் அவ்வொழுக்கம் உடையாரது குற்றமும், அவரையறிந்து நீக்கல் வேண்டும் என்பதும் கூறப்பட்டன.

# குறள்: 279 (கணைகொடிது)

கணைகொடிதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல் (279)

கணை கொடிது யாழ் கோடு செவ்விது ஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல்.

இதன்பொருள்

கணை கொடிது யாழ் கோடு செவ்விது= அம்பு வடிவாற் செவ்விதாயினும், செயலாற் கொடியது; யாழ் கோட்டால் வளைந்ததாயினும், செயலாற் செவ்விது. ஆங்கு அன்ன

வினைபடு பாலால் கொளல்= அவ்வகையே தவஞ்செய்வோரையுங் கொடியர் செவ்வியர் என்பது, வடிவாற் கொள்ளாது, அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்து கொள்க.

உரை விளக்கம்

கணைக்குச் செயல் கொலை. யாழுக்குச் செயல் இசையாலின்பம் பயத்தல். அவ்வகையே செயல் பாவமாயிற் 'கொடியர்' எனவும், அறமாயிற் 'செவ்வியர்' எனவும் கொள்க என்பதாம்.

இதனான் அவரை அறியுமாறு கூறப்பட்டது.

## குறள்: **280 (**மழித்தலு**)**

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின் (10)

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

இதன் பொருள்

மழிததலும் நீட்டலும் வேண்டா= தவஞ் செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலுஞ் சடையாக்கலுமாகிய வேடமும் வேண்டா; உலகம் பழித்தது ஒழித்து விடின்= உயர்ந்தோர் தவத்திற்கு ஆகாது என்று குற்றங் கூறிய ஒழுக்கத்தைக் கடிந்துவிடின்.

உரை விளக்கம்

பறித்தலும் மழித்தலுள் அடங்கும். 'மழித்தல்' என்பதே தலைமயிரை உணர்த்தலின், அது கூறாராயினார்.

இதனாற் கூடாவொழுக்கம் இல்லாதார்க்கு 'வேடமும் வேண்டா' என அவரது சிறப்புக் கூறப்பட்டது.

## துறவறவியல்

## அதிகாரம் **29.**கள்ளாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, பிறர் உடைமையாய் இருப்ப தியாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக்கருதாமை. கருதுதலும் செயதலோடு ஒத்தலின், 'கள்ளாமை' என்றார்.இல்வாழ்வார்க்காயின் தமரொடு விளையாட்டு வகையால் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை அங்ஙனங் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்காயின் அதனைக் கருதிய வழியும் பெரியதோர் இழுக்காம் ஆகலின், இது துறவறமாயிற்று. புறத்துப் போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற் பாலதாய அவர்மனம் அஃதொழிந்து புறத்தே போந்து பஃறலைப்பட்டு உடம்பின் பொருட்டுப் பொருளை நோக்குதலேயன்றி, அது தன்னையும் வஞ்சித்துக் கொள்ளக் கருதுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதல் அறிக. இவ்வாறு வாய்மை முதற் கொல்லாமை யீறாக நான்கதிகாரத்திற்கும் ஒக்கும். பொருள்பற்றி

நிகழும் குற்றத்தை விலக்குகின்றது ஆகலின், இது காமம் பற்றி நிகழ்வதாய கூடாஒழுக்கத்தின் பின் வைக்கப்பட்டது.

# குறள்: 281 (எள்ளாமை)

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு (01)

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றுும்
கள்ளாமை காக்க தன் நெஞ்சு.

இதன்பொருள்

எள்ளாமை வேண்டுவான் என்பான்= வீட்டினை இகழாது விரும்புவான் இவன் என்று தவத்தோரான் நன்கு மதிக்கப்படுவான்;

எனைத்தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க= யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாவகை தன் நெஞ்சினைக் காக்க.

உரைவிளக்கம்

எள்ளாது என்னும் எதிர்மறைவினையெச்சம் 'எள்ளாமை' எனத் திரிந்து நின்றது. 'வீட்டினை யிகழ்த'லாவது, காட்சியே அளவையாவது என்றும், நிலம் நீர் தீ வளி யெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட்டு அழியும் என்றும், இறந்தவுயிர் பின் பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப்படுவன என்றும் சொல்லும் உலோகாயத முதலிய

மயக்கநூல்களைத் தெளிந்து, அவற்றிற்கேற்ப ஒழுகுதல். ஞானத்திற்கு ஏதுவாய மெய்நநூற் பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக் கொள்ளின், அதுவும் களவாம் ஆகலின், 'எனைத்தொன்றும்' என்றார். நெஞ்சு கள்ளாமறகாக்க எனவே, துறந்தார்க்கு விலககப்பட்ட கள்ளுதல், கள்ளக் கருதுதல் என்பது பெற்றாம்.

## குறள்: 282 (உள்ளத்தால்)

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல் (02)

உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.

பரிமேலழகர் உரை

உள்ளத்தால் உள்ளலும் தீதே= குற்றங்களைத் தந் நெஞ்சாற் கருதுதலும் துறந்தார்க்குப் பாவம்; பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல்= ஆதலால், பிறனொருவன் பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக் கொள்வேம் என்று கருதற்க.

உரைவிளக்கம்

'உள்ளத்தால்' எனவேண்டாது கூறினார், அவர் உள்ளம் ஏனையார் உள்ளம்போலாது சிறப்புடைத்து என்பது முடித்தற்கு. 'உள்ளலும்' என்பது இழிவுசிறப்பும்மை. அல்விகுதி வியங்கோள் எதிர்மறைக்கண் வந்தது.

இவை இரண்டுபாட்டானும் இந்நடைக்குக் களவாவது இஃதுஎன்பதூஉம் இது கடியப்படுவது என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள்: 283 (களவினால்)

களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும் (03)

களவினால் ஆகிய ஆக்கம் அளவு இறந்து
ஆவது போலக் கெடு ் ம்.

பரிமேலழகர் உரை

களவினால் ஆகிய ஆக்கம்= களவினால் உளதாகிய பொருள்; ஆவது போல அளவு இறந்து கெடும்= வளர்வது போலத் தோன்றித் தன் எல்லையைக் கடந்து கெடும்.

உரைவிளககம்

ஆக்கத்திற்கு ஏதுவாகலின் 'ஆக்கம்' எனப்பட்டது. 'எல்லையைக் கடந்து கெடுத'லாவது, தான் போங்காற் பாவத்தையும் பழியையும் நிறுத்திச் செய்த அறத்தையும் உடன் கொண்டுபோதல். அளவறிந்து என்று பாடம்ஓதி, அவர் பயன் கொள்ளும் அளவறிந்து அவ்வளவிற்கு உதவாது கெடும் என்று உரைப்பாரும் உளர்.

# குறள்: 284 (களவின்கட்)

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும் (04)

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

இதன்பொருள்

களவின்கண் கன்றிய காதல்= பிறர்பொருளை வஞ்சித்துக் கோடற்கண்ணே மிக்கவேட்கை; விளைவின்கண் வீயா விழுமம் தரும்= அப்பொழுது இனிதுபோலத்தோன்றித் தான் பயன் கொடுக்கும்பொழுது தொலையாத இடும்பையைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்

கன்றுதலான் எஞ்ஞான்றும் அக்களவையே பயில்வித்து அதனால் பாவமும் பழியும் பயந்தே விடுதலின், வீயா விழுமந் தரும் என்றார்.

இவை இரண்டுபாட்டானும் அவை கடியப்படுதற்குக் காரணம் கூறப்பட்டது.

## குறள்: 285 (அருள்கருதி)

அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில் (05)

அருள் கருதி அன்புடையர் ஆதல் பொருள் கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார் கண் இல்.

இதன் பொருள்

அருள் கருதி அன்பு உடையர் ஆதல்= அருளினது உயர்ச்சியை அறிந்து அதன்மேல் அன்புடையராய் ஒழுகுதல்; பொருள் கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார் கண் இல்= பிறர் பொருளை வஞ்சி ்த்துக் கொள்ளக் கருதி அவரது சோர்வு பார்ப்பார் மாட்டு உண்டாகாது.

உரைவிளக்கம்

தமக்குரிய பொருளையும், அதனது குற்றம் நோக்கித் துறந்து போந்தவர், பின் பிறர்க்குரிய பொருளை நன்கு மதித்து அதனை வஞ்சித்துக் கோடற்கு அவரது சோர்வு பார்க்கும் மருட்சியரானால், அவர்மாட்டு, உயிர்கண்மேல் அருள்செய்தல் நமக்கு உறுதி என்றுஅறிந்து அவ்வருளின் வழுவாது ஒழுகும் தெருட்சி கூடாது என்பதாம்.

# குறள்: 286 (அளவின்கண்)

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர் (06)

அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காதலவர்.

இதன்பொருள்

அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார்- உயிர் முதலியவற்றை அளத்தலாகிய நெறியின்கண் நின்று அதற்கு ஏற்ப ஒழு்கமாட்டார்; களவின்கண் கன்றிய காதலவர்= களவின்கண்ணே மிக் வேட்கையை உடையார்.

உரைவிளக்கம்

'உயிர் முதலியவற்றை அளத்த'லாவது, காட்சி முதலாகச்சொல்லப்பட்ட அளவைகளான் உயி்ர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வருகின்ற நல்வினை தீவினைக் குற்ற விளைவுகளையும், அவற்றான் அது நாற்கதியுட் பிறந்து இறந்து வருதலையும், அது செய்யாமல்

அவற்றைக் கெடுத்தற்கு உபாயமாகிய யோக ஞானங்களையும் அவற்றான் அஃது எய்தும் வீட்டினையும் அளந்து உள்ளவாறு அறிதல். இதனை ஆருகதர் தருமத்தியானம் என்ப. 'அதற்கேற்ப ஒழுகுத'லாவது அவ்வளக்கப்பட்டனவற்றுள் தீயனவற்றின் நீங்கி நல்லனவற்றின் வழி நிற்றல்.

# குறள்: 287 (களவென்னுங்)

களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில் (07)

களவு என்னும் கார் அறிவு ஆண்மை அளவு என்னும்
ஆற்றல் புரிந்தார் கண் இல்.

இதன்பொருள்

களவு என்னும் காரறிவாண்மை= களவென்று சொல்லப்படுகின்ற இருண்ட அறிவினை உடையராதல்; அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல்= உயிர் முதலியவற்றை அளத்தல் என்னும் பெருமையை விரும்பினார்கண் இல்லை.

உரைவிளக்கம்

இருள்-மயக்கம். காரியத்தைக் காரணமாக உபசரித்துக் களவென்னும் காரறிவாண்மை என்றும், காரணத்தைக் காரியமாக்கி அளவென்னும் ஆற்றல் என்றும் கூறினார்.

களவுந் துறவும், இருளும் ஒளியும்போலத் தம்முள் மாறாகலின், ஒருங்கு நில்லா என்பது இவை மூன்று பாட்டானும் கூறப்பட்டது.

# குறள்: 288 (அளவறிந்தார்)

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு (08)

அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம் போல நிற்கும்
களவு அறிந்தார் நெஞ்சில் கரவு.

இதன்பொருள்

அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்= அவ்வளத்தலையே பயின்றவர் நெஞ்சத்து அறம் நிலைபெற்றாற் போல நிலைபெறும்; களவு அறிந்தார் நெஞ்சில் கரவு= களவையே பயின்றவர் நெஞ்சத்து வஞ்சனை.

உரைவிளக்கம்

உயிர் முதலியவற்றை அறந்தறிந்தார்க்குத் துறவறம் சலியாது நிற்கும் என்பது இவ்வுவமையாற் பெற்றாம்.
களவோடு மாறின்றி நிற்பது இதனாற் கூறப்பட்டது.

# குறள்: 289 (அளவல்ல)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர் (09)

அளவு அல்ல செய்து ஆங்கே வீவர் களவு அல்ல
மற்றைய தேற்றாதவர்.

இதன்பொருள்

அளவு அல்ல செய்தாங்கே வீவர்= அவ்வளவல்லாத தீய நினைவுகளை நினைத்தபொழுதே கெடுவர்; களவு அல்ல மற்றைய தேற்றாதவர்= களவல்லாத பிறவற்றை அறியாதவர்.

உரைவிளக்கம்

தீய நினைவுகளாவன, பொருளுடையாரை வஞ்சிக்குமாறும், அவ் வஞ்சனையால் அது கொள்ளுமாறும், கொண்டவதனால் தாம் புலன்களை நுகருமாறும் முதலாயின. நினைத்தலுஞ் செய்தலோடு ஒக்கும் ஆகலிற் 'செய்'தென்றும், அஃது உள்ள அறங்களைப் போக்கிக் கரந்த சொற் செயல்களைப் புகுவித்து அப்பொழுதே கெடுக்குமாகலின் 'ஆங்கே வீவர்' என்றும் கூறினார். 'மற்றைய'வாவன, துறந்தார்க்கு உணவாக ஓதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும், இல்வாழ்வார் செய்யும் தானங்களுமாம். தேற்றாமை, அவற்றையே நுகர்ந்து அவ்வளவான் நிறைந்திருத்தலை அறியாமை.
இதனாற் கள்வார் கெடுமாறு கூறப்பட்டது.

# குறள்: 290 (கள்வார்க்குத்)

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு (10)

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு.

இதன்பொருள்

கள்வார்க்கு உயிர்நிலை தள்ளும்= களவினைப் பயில்வார்க்குத் தம்மின் வேறல்லாத உடம்புந் தவறும்; கள்ளார்க்குப் புத்தேள்

உலகு தள்ளாது= அது செய்யாதார்க்கு நெடுஞ்சேணதாகிய புத்தேள் உலகும் தவறாது.

உரைவிளக்கம்

உயிர் நிற்றற்கு இடனாகலின், 'உயிர்நிலை' எனப்பட்டது. சிறப்பும்மைகள் இரண்டும் விகாரத்தால் தொக்கன. இம்மையினும் அரசனால் ஒறுக்கப்படுதலின் 'உயிர்நிலையும் தள்ளும்' என்றும், மறுமையினும் தேவராதல் கூடுதலின் 'புத்தேள் உலகும் தள்ளாது' என்றும் கூறினார். "மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து"[1] என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாதல் அறிக.இதற்குப் பிறவாறு உரைப்பாரும் உளர்.

இதனான் இருவர் பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

1.திருக்குறள்,596.

துறவறவியல்

அதிகாரம் **30.**வாய்மை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, மெய்யினது தன்மை. பெரும்பான்மையும் காமமும் பொருளும்பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், இது கூடாவொழுக்கம், கள்ளாமைகளின்பின் வைக்கப்பட்டது.

## குறள்**: 291 (**வாய்மையெனப்படுவது**)**

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல் (01)

வாய்மை எனப்படுவது யாது எனின் யாது ஒன்றும்
தீமை இலாத சொலல்.

இதன்பொருள்

வாய்மை எனப்படுவது யாது எனின்= மெய்ம்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதுயாதென்று வினவின்; தீமை யாது ஒன்றும் இலாத சொலல்= அது பிறிதோர் உயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல்.

உரைவிளக்கம்

தீமை யாதொன்றும் இலாதவென இயையும். எனப்படுவதென்பது, ஊரெனப்படுவது உறையூர்" எ்றாற் போல நின்றது. இதனான் நிகழ்ந்தது கூறல் என்பது நீக்கப்பட்டது. அதுதானும், தீங்கு பயவாதாயின் மெய்ம்மையாம்; பயப்பிப்பிற் பொய்ம்மையாம் என்பது கருத்து.

# குறள்: 292 (பொய்ம்மையும்)

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின் (02)

பொய்மையும் வாய்மை இடத்த புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

இதன்பொருள்

புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின்= பிறர்க்கும் குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்குமாயின்; பொய்ம்மையும் வாய்மை இடத்த=

பொய்ம்மைச் சொற்களும் மெய்ம்மைச் சொற்களின்பாலவாம்.

உரைவிளக்கம்

'குற்றம் தீர்ந்த நன்மை' அறம்; அதனைப்பயத்தலாவது, கேடாதல்

சாக்காடாதல் எய்த நின்றதோர் உயி்ர் அச்சொற்களின் பொய்ம்மையானே அதனின் நீங்கி இன்புறுதல். நிகழாதது கூறலும், நன்மை பயவாதாயிற் பொய்ம்மையாம்; பயப்பின் மெய்ம்மையாம் என்பது கருத்து.

இவை இரண்டு பாட்டானும் தீங்குபயவாத நிகழ்ந்தது கூறலும், நன்மைபயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மை எனவும், நன்மை பயவாத நிகழாததுகூறலும், தீங்கு பயக்கும் நிகழ்ந்ததுகூறலும் பொய்ம்மை எனவும் அவற்றது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள்: 293 (தன்னெஞ்சறிவது)

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும் (03)

தன் நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்த பின்
தன் நெஞ்சே தன்னைச் சுடும்.

இதன்பொருள்

தன்நெஞ்சு அறிவது பொய்யற்க= ஒருவன் தன் நெஞ்சு அறிவது ஒன்றனைப் பிறர் அறிந்திலர் என்று பொய்யாது ஒழிக; பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்= பொய்த்தான் ஆயின், அதனை அறிந்த தன் நெஞ்சே அப்பாவத்தின் கரியாய் நின்று, தன்னை அதன் பயனாய துன்பத்தை எய்துவிக்கும்.

உரைவிளக்கம்

நெஞ்சு கரியாதல்,
"கண்டவரில்லென வுலகத்துள் உணராதார்
தங்காது தகைவி்னறித் தாஞ்செய்யும் வினைகளுள்

நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்"[1] என்பதானானும் அறிக.

பொய் மறையாமையின், அது கூறலாகாது என்பது இதனாற் பெறப்பட்டது.

1.கலித்தொகை, நெய்தல்-8.

# குறள்: 294 (உள்ளத்தாற்)

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன் (04)

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

இதன்பொருள்

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின்= ஒருவன் தன் உள்ளத்திற்கு ஏற்பப் பொய்கூறாது ஒழுகுவான் ஆயின்; உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்= அவன் உயர்ந்தோர் உள்ளத்தி்ன்கண் எல்லாம் உளனாம்.

உரைவிளக்கம்

உள்ளத்தால் என்பது வேற்றுமை மயக்கம். 'பொய் கூறாது ஒழுகுதலாவது, மெய்கூறி ஒழுகுதல். அவனது அறத்தினது அருமை நோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பர் என்பதாம்.

இதனான் இம்மைப்பயன் கூறப்பட்டது.

# குறள்: 295 (மனத்தொடு)

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ் செய்வாரிற் றலை (05)

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை.

இதன்பொருள்

மனத்தொடு வாய்மை மொழியின்= ஒருவன் தன் மனத்தொடு பொருந்த வாய்மையைச் சொல்வானாயின்; தவத்தொடு தானம் செய்வாரின் தலை= அவன், தவமும் தானமும் ஒருங்குசெய்வாரினும் சிறப்புடையன்.

உரைவிளக்கம்

'மனத்தொடு பொருந்துதல்' மனத்திற்கு ஏறுதல். புறமாகிய மெய்யாற் செய்யும் அவற்றினும் அகமாகிய மன மொழிகளாற் செய்வது பயனுடைத்து என்பதாம்.

# குறள்: 296 (பொய்யாமை)

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும். (06)

பொய்யாமை அன்ன புகழ் இல்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.

இதன்பொருள்

பொய்யாமை அன்ன புகழ் இல்லை= ஒருவனுக்கு இம்மைக்குப் பொய்யாமை ஒத்த புகழ்க்காரணமில்லை; எய்யாமை எல்லா அறமும் தரும்= மறுமைக்கு மெய்வருந்தாமல் அவனுக்கு எல்லா அறங்களையும் தானே கொடுக்கும்.

உரைவிளக்கம்

'புகழ்'- ஈண்டு ஆகுபெயர். இல்லறத்திற்குப் பொருள் கூட்டல் முதலியவற்றாலும், துறவறத்திற்கு உண்ணாமை முதலியவற்றாலும், வருந்தல் வேண்டுமன்றே, அவ்வருத்தங்கள் புகுதாமல் அவ்விருவகைப்பயனையும் தானே தரும் என்பார், 'எயயாமை எல்லாவறமுந் தரும்' என்றார்.

# குறள்: 297 (பொய்யாமைபொய்)

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று (07)

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற
செய்யாமை செய்யாமை நன்று.

இதன்பொருள்

பொய்யாமை பொய்யாமை ஆற்றின்= ஒருவன் பொய்யாமையே பொய்யாமையே செய்யவல்லவனாயின்;
பிற அறம் செய்யாமை செய்யாமை நன்று= அவன் பிற அறங்களைச்செய்யாமையே செய்யாமையே நன்று.

உரைவிளக்கம்

அடுக்கு இரண்டனுள், முதலது இடைவிடாமை மேற்று; ஏனையது துணிவின் மேற்று. பல அறங்களையும் மேற்கொண்டு செய்தற்கு

அருமையாற் சில தவறிற் குற்றப்படுதலின், அவை எல்லாவற்றின் பயனையுந் தானே தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நன்று என்பார், 'செயயாமை செய்யாமை நன்'றென்றார். இதனை, இவ்வாறுஅன்றிப் பொய்யாமையைப் பொய்யாமற் செய்யிற் பிற அறம் செய்கை நன்று எனப் பொழிப்பாககிப் பொய்கூறிற் பிறஅறஞ் செய்கை நன்றுஆகாது என்பது, அதனால் போந்த பொருளாக்கி உரைப்பாரும் உளர்[2].

பிறவறங்கள் எல்லாந் தரும் பயனைத் தானே தரும் ஆற்றல் உடைத்து என மறுமைப்பயனது மிகுதி இவை மூன்றுபாட்டானும் கூறப்பட்டது.

2.மணக்குடவர்.

# குறள்: 298 (புறந்தூய்மை)

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும் (8)

புறம் தூய்மை நீரான் அமையும் அகம் தூய்மை
வாய்மையான் காணப் படும்.

இதன்பொருள்

புறம் தூய்மை நீரான் அமையும்= ஒருவனுக்கு உடம்பு தூய்தாந்தன்மை நீரானே உண்டாம்; அகம் தூய்மை வாய்மையான் காண்ப் படும்= அதுபோல, மனம் தூய்தாம் தன்மை வாய்மையான் உண்டாம்.

உரைவிளக்கம்

காணப்படுவது உள்ளதாகலின் உண்டாம் என்று உரைக்கப்பட்டது. உடம்பு தூய்தாதல் வாலாமை நீங்குதல். மனம் தூய்தாதல் மெய்யுணர்தல். புறந்தூய்மைக்கு நீர்அல்லது காரணம் இல்லை என்றவாறாயிற்று.

இதனானே துறந்தார்க்கு இரண்டு தூய்மையும் வேண்டும் என்பது பெற்றாம்.

# குறள்: 299 (எல்லாவிளக்கும்)

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு (9)

எல்லா விளக்கும் விளக்கு அல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

இதன்பொருள்

எல்லா விளக்கும் விளக்கு அல்ல= புறத்திருள் கடியும் உலகத்தார் விளக்குகளெல்லாம் விளக்கு ஆகா; சான்றோர்க்கு விளக்கு பொய்யா விளக்கே= துறவான் அமைந்தார்க்கு விளக்காவது மனத்து இருள்கடியும் பொய்யாமையாகிய விளக்கே.

உரைவிளக்கம்

உலகத்தார் விளக்காவன: ஞாயிறு, திங்கள், தீ என்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின், 'பொய்யா விளக்கே விளக்கு' என்றார். அவ்விருளாவது அறியாமை. பொய்யாத விளக்கு என்பது குறைந்து நின்றது. பொய் கூறமையாகிய விளக்கு என்றவாறு. இனி, இதற்குக் கல்வி முதலியவற்றான் வரும் விளக்கம் எல்லாம் விளக்கம் அல்ல; அமைந்தார்க்கு

விளக்கமாவது, பொய்யாமையான் வரும் விளக்கமே என்று உரைப்பாரும் உளர்[3].

3.மணக்குடவர்

# குறள்: 300 (யாமெய்யாக்)

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற (10)

யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்து ஒன்றும்
வாய்மையின் நல்ல பிற.

இதன்பொருள்

யாம் மெய்யாக் கண்டவற்றுள்= யாம் மெய்ந்நூல்களாகக் கண்டநூல்களுள்; எனைத்தொன்றும் வாய்மையின் நல்ல பிற இல்லை= யாதொரு தன்மையானும் வாய்மையின் மிக்கனவாகச் சொல்லப்பட்ட பிற அறங்கள் இல்லை.

உரைவிளக்கம்

மெய்யுணர்த்துவனவற்றை 'மெய்' என்றார். அவையாவன: தங்கண் மயக்கம் இன்மையின், பொருள்களை உள்ளவாறு உணர வல்லராய்க் காம வெகுளிகளின்மையின், அவற்றை உணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய இறைவர், அருளான் உலகத்தார் உறுதி எய்துதற் பொருட்டுக் கூறிய ஆகமங்கள். அவை எல்லாவற்றினும் இஃது ஒப்ப முடிந்தது என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், இவ்வறத்தினது தலைமை கூறப்பட்டது.

திருக்குறள் அறத்துப்பால்

# துறவறவியல்

## அதிகாரம்: 31.வெகுளாமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன்மாட்டு உளதாயவிடத்தும் அதனைச் செய்யாமை. இது பொய்ம்மை பற்றி நிகழ்வதாய வெகுளியை விலக்கலின், வாய்மையின் பின் வைக்கப்பட்டது.

## குறள்: 301 (செல்லிடத்துக்)

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கிலென் காவாக்கா லென் (01)

செல் இடத்துக் காப்பான் சினம் காப்பான் அல் இடத்துக்
காக்கின் என் காவாக்கால் என்.

இதன்பொருள்

சினம் செல் இடத்துக் காப்பான் காப்பான்= தன் சினம் பலிக்கும் இடத்து அதனை எழாமல் தடுப்பானே அருளால் தடுப்பான் ஆவான்; அல் இடத்துக் காக்கின் என் காவாக்கால் என்= ஏனைப் பலியாத இடத்து அதனைத்தடுத்தால் என், தடாது ஒழிந்தால் என்?

உரைவிளக்கம்

'செல்லிடம்' 'அல்லிடம்' என்றது, தவத்தான் தன்னின் மெலியாரையும் வலியாரையும். வலியார்மேல் காவா வழியும், அதனான் அவர்க்கு வருவதோர் தீங்கு இன்மையிற் காத்த வழியும் அறனில்லை என்பார், 'காக்கினென் காவாக்காலென்' என்றார்.

இதனான் வெகுளாமைக்கு இடம் கூறப்பட்டது.

# குறள்: 302 (செல்லாவிடத்துச்)

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற (02)

செல்லா இடத்துச் சினம் தீது செல் இடத்தும்
இல் அதனின் தீய பிற.

இதன்பொருள்

சினம் செல்லா இடத்துத் தீது= ஒருவன் வெகுளி தன்னின் வலியார்மேல் எழின் தனக்கே தீதாம்; செல் இடத்தும் அதனின்

தீய பிற இல்= மற்றை எளியார்மேல் எழினும் அதனின் தீயன பிற இல்லை.

உரை விளக்கம்

'செல்லாஇடத்துச் சினம்' பயப்பது இம்மைக்கண் அவரான் வரும் ஏதமே; ஏனையது, இம்மைக்கண் பழியும் மறுமைக்கண் பாவமும் பயத்தலின் அதனின் தீயன 'பிறஇல்லை' என்றார். ஓரிடத்தும் ஆகாது என்பதாம்.

# குறள்: 303 (மறத்தல்)

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும் (03)

மறத்தல் வெகுளியை யார் மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.

இதன்பொருள்

யார்மாட்டும் வெகுளியை மறத்தல்= யாவர் மாட்டும் வெகுளியை ஒழிக; தீய பிறத்தல் அதனான் வரும்= ஒருவர்க்குத் தீயன வெல்லாம் உளவாதல் அதனான் வரும் ஆகலான்.

உரை விளக்கம்

வலியார், ஒப்பார், மெலியார் என்னும் மூவர்மாட்டும் ஆகாமையின் 'யார்மாட்டும்' என்றும், மனத்தாற் துறத்தார்க்கு ஆகாதனவாகிய தீ்ச்சிந்தைகள் எல்லாவற்றையும் பிறப்பித்தலின் 'தீய பிறத்தல் அதனான் வரும்' என்றும் கூறினார்.

# குறள்: 304 (நகையும்)

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற (04)

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.

உரைவிளக்கம்: நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்= துறந்தார்க்கு அருளான் உளவாய முகத்தின்கண் நகையையும் மனத்தின்கண் உவகையையும் கொன்று கொண்டு எழுகின்ற சினமே அல்லது; பிற பகையும் உளவோ= அதனிற் பிறவாய பகைகளும் உளவோ? இல்லை.

உரைவிளக்கம்: துறவாற் புறப்பகை இலராயினும், உட்பகையாய் நின்று அருள் முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித் துன்பமும் எய்துவித்தலான், அவர்க்குச் சினத்தின் மிக்க பகையில்லையாயிற்று.
இவை மூன்று பாட்டானும் வெகுளியது தீங்கு கூறப்பட்டது.

# குறள்: 305 (தன்னைத்தான்)

தன்னைத்தான் காக்கிற் சினங் காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம் (05)

தன்னைத் தான் காக்கின் சினம் காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

இதன்பொருள்

தன்னைத் தான் காக்கின் சினம் காக்க= தன்னைத் தான் துன்பம் எய்தாமல் காக்க நினைத்தான்ஆயின், தன்மனத்துச் சினம் வாராமற் காக்க; காவாக்கால் சினம் தன்னையே கொல்லும்= காவானாயின், அச்சினம் தன்னையை கெடுக்கும் கடும் துன்பங்களை எய்துவிக்கும்.

உரை விளக்கம்

"வேண்டிய வேண்டியாங்கு எய்தற்[1]" பயத்ததாய தவத்தைப் பிறர்மேல் சாபம் விடுதற்காக இழந்து, அத்தவத் துன்பத்தோடு பிணைய பிறவித்துன்பமும் ஒருங்கு எய்துதலின், தன்னையே கொல்லும் என்றார். "கொல்லச் சுரப்பதாங் கீழ்[2]" என்புழிப்போலக் கொலைச்சொல் ஈண்டுத் துன்பமிகுதி உணர்த்தி நின்றது.

[1]. திருக்குறள்- 265.
[2]. நாலடியார்- 279.

# குறள்: 306 (சினமென்னும்)

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும் (06)

சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம் என்னும்
ஏமப் புணையைச் சுடும்.

இதன்பொருள்

சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி= சினம் என்னும் நெருப்பு;

இனம் என்னும் ஏமப் புணையைச் சுடும்= தனக்கு இனமானவரையே அன்றி, அவர்க்கு இனமாகிய ஏமப்புணையைச் சுடும்.

உரைவிளக்கம்

'சேர்ந்தாரைக் கொல்லி' என்பது ஏதுப்பெயர்; தான் சேர்ந்த இடத்தைக் கொல்லும் தொழிலது என்றவாறு. 'சேர்ந்தாரை' என உயர்திணைப் பன்மைமேல் வைத்து ஏனை நான்குபாலும் தம் கருத்தோடுகூடிய பொருள் ஆற்றலாற் கொண்டார், ஈண்டு உருவகம் செய்கின்றது துறந்தார் சினத்தையே யாகலின். சினம் என்னும் நெருப்பு என்ற விதப்பு,[3] உலகத்து நெருப்புச் சுடுவது, தான் சேர்ந்தவிடத்தையே இந்நெருப்புச் சேராதவிடத்தையுஞ் சுடும் என்னும் வேற்றுமை தோன்ற நின்றது. ஈண்டு இனம் என்றது முற்றத் துறந்து தவஞானங்களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதிமொழிகளை இனியவாகச் சொல்லுவாரை. உருவகநோக்கிச் 'சுடும்' என்னும் தொழில் கொடுத்தாராயினும், அகற்றும் என்பது பொருளாகக் கொள்க. 'ஏமப்புணை' ஏமத்தை உபதேசிக்கும் புணை. 'இனமென்னும் ஏமப்புணை' என்ற ஏகதேசஉருவகத்தால் பிறவிக் கடலுள் அழுந்தாமல் வீடு என்னும் கரையேற்றுகின்ற என வருவித்துரைக்க. எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. தன்னையும் வீழ்த்து, எடுப்பாரையும் அகற்றும் என்பதாம்.

[3]. வேண்டியதொன்றை முடித்தற்கு வேண்டாததொன்றைக் கூறுதல்.

## குறள்: 307 (சினத்தைப்பொருள்)

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று (07)

சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு
நிலத்து அறைந்தான் கை பிழையாது அற்று.

இதன்பொருள்

சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு= சினத்தைத் தன் ஆற்றல் உணர்த்துவதோர் குணம் என்று தன்கட் கொண்டவன் அவ்வாற்றல் இழத்தல்; நிலத்து அறைந்தான் கை பிழையாது அற்று= நிலத்தின்கண் அறைந்தவன் கை அந்நிலத்தை உறுதல் தப்பாதவாறு போலத் தப்பாது.

உரைவிளக்கம்

வைசேடிகர்[4] பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப் பொருள் என்றாற் போல ஈண்டுக் 'குணம்' 'பொருள்' எனப்பட்டது. 'பிழையாததற்று' என்பது குறைந்து நின்றது.

இவை மூன்று பாட்டானும் வெகுண்டார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

[4].விசேஷம் என்னும் பதார்த்தத்தை (கணாதரது நியாய மதத்தை)அங்கீகரித்தவர் வைசேடிகர்.

.

# குறள்: 308 (இணரெரி)

இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்

புணரின் வெகுளாமை நன்று (08)

இணர் எரி தோய்வு அன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

இதன்பொருள்

இணர் எரி தோய்வு அன்ன இன்னா செயினும்= பலசுடரை உடைத்தாய பேரெரிவந்து தோய்ந்தால் ஒத்த இன்னாதவற்றை ஒருவன் செய்தான் ஆயினும்; வெகுளாமை புணரின் நன்று= அவனை வெகுளாமை ஒருவற்குக் கூடுமாயின் அது நன்று.

உரைவிளக்கம்

இன்னாமையின் மிகுதி தோன்ற 'இணர்எரி' என்றும், அதனை மேன் மேலும் செய்தல் தோன்ற 'இன்னா'வென்றும், அச்செயல் முனிவரையும் வெகுள்விக்கும் என்பது தோன்றப் 'புணரின்' என்றும் கூறினார்.

இதனான் வெகுளாமையது நன்மை கூறப்பட்டது.

# குறள்: 309 (உள்ளியதெல்லா)

உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தா
ளுள்ளான் வெகுளி யெனின் (09)

உள்ளியது எல்லாம் உடன் எய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

இதன்பொருள்

உள்ளத்தால் வெகுளி உள்ளான் எனின்= தவஞ்செய்யும் அவன், தன் மனத்தால் வெகுளியை ஒருகாலும் நினையான் ஆயின்;

உள்ளியது எல்லாம் உடன் எய்தும்= தான் கருதிய பேறுஎல்லாம் ஒருங்கே பெறும்.

உரைவிளக்கம்

'உள்ளத்தால்' என வேண்டாது கூறியவதனான், அருளுடை உள்ளம்என்பது முடிந்தது. அதனன் உள்ளாமையாவது, அவ்வருளாகிய பகையை வளர்த்து அதனான் முற்றக் கடிதல். இம்மை மறுமை வீடு என்பன வேறுவேறு திறத்தனவாயினும், அவையெல்லாம் இவ்வொன்றானே எய்தும் என்பார், 'உள்ளியதெல்லாம் உடன் எய்தும்' என்றார்.

இதனான் வெகுளாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

# குறள்: 310 (இறந்தார்)

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை (10)

இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

இதன்பொருள்

இறந்தார் இறந்தார் அனையர்= சினத்தின்கண்ணே மிக்கார், உயிருடையர் ஆயினும், செத்தாரோடு ஒப்பர்; சினத்தைத் துறந்தார் துறந்தார் துணை= சினத்தைத் துறந்தார் சாதல்தன்மையர் ஆயினும், அதனை ஒழிந்தார் அளவினர்.

உரைவிளக்கம்

மிக்க சினத்தை உடையார்க்கு ஞானம் எய்துதற்குரிய உயிர் நின்றதாயினும் கலக்கத்தான் அஃதுஎய்தாமை ஒருதலையாகலின்

அவரை 'இறந்தாரனையர்' என்றும், சினத்தை விட்டார்க்குச் சாக்காடு எய்துதுற்குரிய யாக்கை நின்றதாயினும், ஞானத்தான் வீடு பெறுதல் ஒருதலையாகலின், அவரை வீடுபெற்றாரோடு ஒப்பர் என்று◌ும் கூறினார்.

இதனான் அவ்விருவரது பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

# துறவறவியல்

# அதிகாரம் **32.**இன்னாசெய்யாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, தனக்கு ஒருபயன் நோக்கியாதல், செற்றம்பற்றியாதல் சோர்வானாதல் ஒருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னாசெய்தல் வெகுளி யொழியவும் நிகழும்என்பது அறிவித்தற்கு இது வெகுளாமையின் பின் வைக்கப்பட்டது.

# குறள்**: 311 (**சிறப்பீனுஞ்**)**

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள் (01)

சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கு இன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள்.

இதன்பொருள்

சிறப்பு ஈனும் செல்வம் பெறினும்= யோகமாகிய சிறப்புத் தரும்

அணிமா முதலிய செல்வங்களைப் பிறர்க்கு இன்னா செய்து பெறலாமாயினும்; பிறர்க்கு இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள்= அதனைச் செய்யாமை ஆகமங்கள் கூறியவாற்றான் மனம் தூயாரது துணிவு.

உரைவிளக்கம்

'உம்'மை பெறாமை மேற்று. சிறப்புடையதனைச் 'சிறப்'பென்றும், அதன் பயிற்சியான் வாயுவை வென்று எய்தப்படுதலின், எட்டுச் சித்திகளையும் 'சிறப்பீனும் செல்வம்' என்றும், காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றங்கள் அற்றமையான் 'மாசற்றார்' என்றும் கூறினார்.

இதனால் தமக்கொரு பயனோக்கிச் செய்தல் விலக்கப்பட்டது.

# குறள்: 312 (கறுத்தின்னா)

கறுத்தின்னா செய்த வக்கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள் (02)

கறுத்து இன்னா செய்த அக் கண்ணும் மறுத்து இன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள்.

இதன்பொருள்

கறுத்து இன்னா செய்த அக்கண்ணும்= தம்மேல் செற்றங்கொண்டு ஒருவன் இன்னாதவற்றைச் செய்தவிடத்தும்; மறுத்து இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள்= மீண்டு தாம் அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமையும் அவரது துணிவு.

உரைவிளக்கம்

இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

அவ்வின்னாதவற்றை உட்கொள்ளாது விடுதல் செயற்பால தென்பதாம்.

## குறள்: 213 (செய்யாமற்)

செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும் (03)

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.

இதன்பொருள்
செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்= தான் முன்பு ஓர் இன்னாமை செய்யாதிருக்கத் தன்மேற் செற்றம் கொண்டவர்க்கும் இன்னாதவற்றைத் துறந்தவன் செய்யுமாயின்; உய்யா விழுமம் தரும்= அச்செயல் அவனுக்குக் கடக்கமுடியாத இடும்பையைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்
அவ்விடும்பையாவது, தவமிழந்து பழியும் பாவமும் எய்தல்.

## குறள்: 314 (இன்னாசெய்தாரை)

இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல் (04)

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண

நன் நயம் செய்து விடல்.

இதன்பொருள்

இன்னா செய்தாரை ஒறுத்தல்= தமக்கு இன்னாதவற்றைச் செய்தாரைத் துறந்தார் ஒறுத்தலாவது; அவர் நாண நனனயம் செய்து விடல்= அவர் தாமே நாணுமாறு அவர்க்கு இனிய உவகைகளைச் செய்து அவ்விரண்டனையும் மறத்தல்.

உரைவிளக்கம்

மறவாவழிப் பின்னும் வந்து கிளைக்குமாகலின், மறக்கற் பாலவாயின. அவரைவெல்லும் உபாயம் கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் செற்றம்பற்றிச் செய்தல் விலக்கப்பட்டது.

# குறள்: 315 (அறிவினான்)

அறிவினானாகுவ துண்டோ பிறிதினோய்
தநநோய்போற் போற்றாக் கடை (05)

அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின் நோய்
தம் நோய் போல் போற்றாக் கடை.

இதன்பொருள்

அறிவினான் ஆகுவது உண்டோ= துறந்தார்க்கு உயிர் முதலியவற்றை உள்ளவாறு அறிந்த அறிவினான் ஆவதொரு பயனுண்டோ? பிறிதின் நோய் தந்நோய் போல் போற்றாக் கடை= பிறிதோர் உயிருக்கு வரும் இன்னாதவற்றைத் தம்முயிர்க்கு வந்தன போலக் குறிக்கொண்டு காவாவிடத்து.

உரைவிளக்கம்

குறிக்கொண்டு காத்தலாவது நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலிய தந்தொழில்களானும் பிறவாற்றானும் உயிர்கள் உறுவனவற்றை முன்னே அறிந்து உறாமற் காத்தல். இது பெரும்பான்மையும் அஃறிணைக்கண் நுண்ணிய உடம்புடையவற்றைப் பற்றி வருதலிற் பொதுப்படப் 'பிறிதின்நோய்' என்றும், மறப்பான் அது துன்புறினும் நமக்கின்னா செய்தலாம் என்று அறிந்து காத்தல் வேண்டுமாகலின் அது செய்யாவழி 'அறிவினான் ஆகுவதுண்டோ' என்றும் கூறினார்.

இதனாற் சோர்வாற் செய்தல் விலக்கப்பட்டது.

# குறள்: 316 (இன்னாவெனத்)

இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல் (06)

இன்னா எனத் தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன் கண் செயல்.

இதன்பொருள்

இன்னா எனத் தான் உணர்ந்தவை= இவை மக்கட்கு இன்னாதன என அனுமானத்தாற் தான் அறிந்தவற்றை; பிறன்கண் துன்னாமை வேண்டும்= பிறன்மாட்டுச் செய்தலை மேவாமை துறந்தவனுக்கு வேண்டும்.

உரைவிளக்கம்

இன்பத்துன்பங்கள் உயிர்க்குணமாகலின், அவை காட்சியளவையான் அறியப்படாமை அறிக. அறமும் பாவமும்

உளவாவது மனம் உளனாயவழியாகலான், உணர்ந்தவை என்றார்.

# குறள்: 317 (எனைத்தானும்)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை (07)

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான் ஆம்
மாணா செய்யாமை தலை.

இதன்பொருள்

மனத்தான் ஆம் மாணா= மனத்தோடு உளவாகின்ற இன்னாத செயல்களை; எஞ்ஞான்றும் யார்க்கும் எனைத்தானும் செய்யாமை தலை= எக்காலத்தும் யாவர்க்கும் சிறிதாயினும் செய்யாமை தலையாய அறம்.

உரைவிளக்கம்

ஈண்டு மனத்தான் ஆகாதவழிப் பாவமில்லை என்பது பெற்றாம். ஆற்றல் உண்டாய காலத்தும் ஆகாமையின் 'எஞ்ஞான்றும்' என்றும், எளியார்க்கும் ஆகாமையின் 'யார்க்கும்' என்றும், செயல்சிறிதாயினும் பாவம் பெரிதாகலின் 'எனைத்தானும்' என்றும் கூறினார்.

# குறள்: 318 (தன்னுயிர்க்கு)

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ

மன்னுயிர்க் கின்னா செயல் (08)

பதப்பிரிப்பு

தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என் கொலோ
மன் உயிர்க்கு இன்னா செயல்.

இதன்பொருள்

தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான்= பிறர்செய்யும் இன்னாதன தனனுயிர்க்கு இன்னாவாம் தன்மையை அனுபவித்து அறிகின்றவன்; மன் உயிர்க்கு இன்னா செயல் என்கொல்= நிலைபேறுடைய பிறவுயிர்கட்குத் தான் அவற்றைச் செய்தல் என்ன காரணத்தான்!

உரைவிளக்கம்

இவ்வாறே இவை பிற உயிர்க்கும் இன்னா என்பது அனுமானத்தான் அறிந்து வைத்துச் செய்கின்ற இப்பாவம் கழுவப்படாமையின், இன்னாதன யான் வருந்தப் பின்னே வந்து வருத்தும் என்பது ஆகமத்தானும் அறிந்து ஒழியற்பாலன என்பது தோன்றத் 'தான்' என்றும், அத்தன்மையான் ஒழியாமைக்குக் காரணம் மயக்கம் என்பது தோன்ற 'என்கோலோ' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் பொதுவகையான் விலக்கப்பட்டது.

# குறள்: 319 (பிறர்க்கின்னா)

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் தமக்கின்னா
பிற்பகற் றாமே வரும் (09)

பதப்பிரிப்பு

பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும்.

இதன்பொருள்

பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின்= துறந்தவர் பிறர்க்கு இன்னாதனவற்றை ஒருபகலது முற்கூற்றின்கட் செய்வாராயின்; தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும்= தமக்கு இன்னாதன அதன் பிற்கூற்றின்கண் அவர் செய்யாமல் தாமே வரும்.

உரைவிளக்கம்

'முற்பகல்' 'பிற்பகல்' என்பன பின்முன்னாகத்தொக்க ஆறாம் வேற்றுமைத்தொகை. தவம் அழிதலின் அங்ஙனம் கடிதினும் எளிதினும் வரும்; அதனான் அவை செய்யற்க என்பதாம். இனித் 'தானே வரும்' என்பது பாடாமாயின், அச்செயல் தானே தமக்கு இன்னாதனவாய் வரும் என உபசார வழக்காக்கி, ஆக்கம் வருவித்து உரைக்க.

# குறள்: 320 (நோயெல்லாம்)

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர் (10)

பதப்பிரிப்பு

நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்
நோய் இன்மை வேண்டுபவர்.

இதன்பொருள்

நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்= இன்னாதன எல்லாம் பிறிதோர் உயிர்க்கு இன்னாதன செய்தார் மேலவாம்; நோயின்மை வேண்டுபவர் நோய் செய்யார்= அதனால் தம் உயிர்க்கு இன்னாதன வேண்டாதார் பிறிதோர் உயிர்க்கு இன்னாதன செய்யார்.

உரைவிளக்கம்

உயிர்நிலத்து வினைவித்து இட்டார்க்கு விளைவும் அதுவே[1]யாகலின், நோயெல்லா நோய்செய்தார் மேலவாம் என்றார். இது சொற்பொருட் பின்வருநிலை.

இவை இரண்டு பாட்டானும் அது செய்தார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

[1].சீவக சிந்தாமணி, முத்தியிலம்பகம்-164.

# துறவறவியல்

# அதிகாரம் **33.**கொல்லாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது ஐயறிவுடையன் முதல் ஓரறிவுடையன ஈறாய உயிர்களைச் சோர்ந்துங் கொல்லுதலைச் செய்யாமை. இது மேற்கூறிய அறங்கள் எல்லாவற்றினும் சிறப்புடைத்தாய்க் கூறாதவறங்களையும் அகபபடுத்து நிற்றலின் இறுதிக்கண் வைக்கப்பட்டது.

## குறள்**: 321 (**அறவினையாதெனிற்**)**

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும் (01)

பதப்பிரிப்பு

அறவினை யாது எனில் கொல்லாமை கோறல்
பிற வினை எல்லாம் தரும்.

இதன்பொருள்

அறவினை யாது எனின் கொல்லாமை= அறங்கள் எல்லாமாகிய செய்கை யாதுஎன்று வினவின், அஃது ஒருயிரையும் கொல்லாமையாம்; கோறல் பிறவினை எல்லாம் தரும்= அவற்றைக் கொல்லுதல் பாவச்செய்கைகள் எல்லாவற்றையும் தானே தரும் ஆதலான்.

உரைவிளக்கம்

'அறம்' சாதியொருமை. விலக்கியதொழிதலும் அறஞ்செய்தலாம் ஆகலின், கொல்லாமையை 'அறவினை' என்றார். ஈண்டுப் 'பிறவினை' என்றது அவற்றின் விளைவை. கொலைப்பாவம் விளைக்கும் துன்பம், ஏனைப் பாவங்கள் எல்லாம் கூடியும் விளைக்கமாட்டா என்பதாம். கொல்லாமைதானே பிற அறங்கள் எல்லாவற்றின் பயனையும் தரும் என்று மேற்கோள் கூறி, அதற்குஏது எதிர்மறை முகத்தாற் கூறியவாறாயிற்று.

## குறள்: 322 (பகுத்துண்டு)

பகுத்துண்டு பலலுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை (02)

பதப்பிரிப்பு

பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

இதன்பொருள்

பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல்= உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்துக் கொடுத்து உண்டு ஐவகைஉயிர்களையும்

ஓம்புதல்; நூலோர் தொகுததவற்றுள் எல்லாம் தலை= அறநூல் உடையார் துறந்தார்க்குத் தொகுத்த அறங்கள்எல்லாவற்றினும் தலையாய அறம்.

உரைவிளக்கம்

பல்லுயிரும் என்னும் முற்றும்மை. விகாரத்தாற் தொக்கது. 'ஓம்புதல்' சோர்ந்தும் கொலைவாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப் பகுத்துண்டல் இன்றியமையா உறுப்பாகலின், அச்சிறப்புத் தோன்ற, அதனை இறந்தகால வினையெச்சத்தாற் கூறினார். எல்லாநூல்களினும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கு இயல்புஆகலின், ஈண்டும் பொதுப்பட 'நூலோர்' என்றும், அவர் எல்லோர்க்கும் ஒப்பமுடிதலான் இது 'தலை'யாயஅறம் என்றும் கூறினார்.

# குறள்: 323 (ஒன்றாகநல்லது)

ஒன்றாக நல்லது கொல்லாமை மறறதன்
பின்சாரப் பொய்யாமை நன்று (03)

பதப்பிரிப்பு

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்று அதன்
பின் சாரப் பொய்யாமை நன்று.

இதன்பொருள்

ஒன்றாக நல்லது கொல்லாமை= நூலோர் தொகுத்த அறங்களுள் தன்னோடு இணைப்பது இன்றித் தானேயாக நல்லது கொல்லாமை; பொய்யாமை அதன் பின்சார நன்று= அஃது ஒழிந்தால் பொய்யாமை அதன்பின்னே நிற்க நன்று.

உரைவிளக்கம்

நூலோர் தொகுத்த அறங்கள் என்பது, அதிகாரத்தான் வந்தது. அதிகாரம் கொல்லாமையாயினும் மேற் 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின்' எனவும், 'யாம் மெய்யாக் கண்டவற்றுளில்லை' எனவும், கூறினார் ஆகலின், இரண்டறத்துள்ளும் யாது சிறந்தது என்று ஐயம் நிகழும்அன்றே, அது நிகழாமைப் பொருட்டு, ஈண்டு 'அதன்பின்சாரப் பொய்யாமை நன்று' என்றென்றார், முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்து ஆகலின். 'அதனைப் பின்சார நன்று' என்றது, நன்மை பயக்கும்வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும் இதனைப்பற்ற அது திரிந்து வருதலான் என உணர்க.

இவை மூன்று பாட்டானும் இவ்வறத்தினது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள்: 324 (நல்லாறு)

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி (04)

பதப்பிரிப்பு

நல் ஆறு எனப்படுவது யாது எனின் யாது ஒன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

இதன்பொருள்

நல் ஆறு எனப்படுவது யாது எனின்= மேற்கதி வீடுபேறுகட்கு நல்ல நெறி என்று சொல்லப்படுவது யாதென்று வினவின்; யாதொன்றும் கொல்லாமை சூழும் நெறி= அஃது யாதோர் உயிரையும் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்கக் கருதும்

நெறி.

உரைவிளக்கம்

யாதொன்றும் என்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல் வழுவாமற் காத்தல். இதனால், இவ்வறத்தினையுடையதே நன்னெறி என்பது கூறப்பட்டது.

# குறள்: 325 (நிலையஞ்சி)

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

பதப்பிரிப்பு

நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலை அஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

இதன்பொருள்

நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம்= பிறப்புநின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு மனைவாழ்க்கையைத் துறந்தார் எல்லாருள்ளும்; கொலை அஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை= கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் உயர்ந்தவன்.

உரைவிளக்கம்

பிறப்பு நின்ற நிலையாவது, இயங்குவ நிற்ப என்னும் இருவகைப் பிறப்பினும் இன்பம் என்பது ஒன்றுஇன்றி உள்ளனவெல்லாம் துன்பமேயாய நிலைமை. துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபாட்டாற் பலவாம் ஆகலின், நீ்த்தாருள் எல்லாம் என்றார்.

இதனால் இவ்வறம் மறவாதவன் உயர்ச்சி கூறப்பட்டது.

# குறள்: 226 (கொல்லாமைமேற்)

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று (06)

பதப்பிரிப்பு

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ் நாள்மேல்
செல்லாது உயிர் உண்ணும் கூற்று.

இதன்பொருள்

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ் நாள்மேல்= கொல்லாமையை விரதமாக மேற்கொண்டு ஒழுகுவானது வாழ்நாளின்மேல்; உயிர் உண்ணும் கூற்றுச் செல்லாது= உயிர் உண்ணும் கூற்றுச் செல்லாது.

உரைவிளக்கம்

மிகப்பெரிய அறம் செய்தாரும், மிகப்பெரிய பாவம் செய்தாரும் முறையானன்றி இம்மை தன்னுள்ளே அவற்றின் பயன் அனுபவிப்பர் என்னும் அறநூல் துணிவுபற்றி, இப்பேரறம் செய்தான்தானும் கொல்லப்படான்; படானாகவே, அடியிற்கட்டிய வாழ்நாள் இடையூறு இன்றி எய்தும் என்பார், 'வாழ்நாள்மேல் கூற்றுச் செல்லாது' என்றார்; செல்லாதுஆகவே, காலம் நீட்டிக்கும்; நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடுபெறும் என்பது கருத்து.

இதனான் அவர்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

# குறள்: 327 (தன்னுயிர்)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை (07)

பதப்பிரிப்பு

தன் உயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது
இன் உயிர் நீக்கும் வினை.

இதன்பொருள்

தன் உயி்ர் நீப்பினும்= அது செய்யாவழித் தன் உயி்ர் உடம்பின் நீங்கிப் போம் ஆயினும்; தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை செய்யற்க= தான் பிறிதோர் இன்னுயிரை அதன் உடம்பின் நீக்கும் தொழிலைச் செய்யற்க.

உரைவிளக்கம்

தன்னை அது கொல்லினும் தான் அதனைக்கொல்லற்க என்றது, பாவம் கொலையுண்டவழி்த்தேய்தலும், கொன்றவழி வளர்தலும் நோக்கி. இனித் தன்னுயிர் நீப்பினும் என்பதற்குச் சாந்தியாகச் செய்யாதவழித் தன்னுயி்ர் போமாயினும் என்றுரைப்பாரும் உளர். பிறசெய்தலும் ஆகாமையின் அஃது உரையன்மை அறிக.

# குறள்: 328 (நன்றாகுமாக்கம்)

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை (08)

பதப்பிரிப்பு

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் சான்றோர்க்குக்
கொன்று ஆகும் ஆக்கம் கடை.

இதன்பொருள்

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும்= தேவர் பொருட்டு வேள்விக்கட் கொன்றால் இன்பமிகும் செல்வம் பெரிதாம் என்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும்; சான்றோர்க்குக் கொன்று ஆகும் ஆக்கம் கடை= துறவான் அமைந்தார்க்கு ஒருயிரைக் கொல்லவருஞ் செல்வம் கடை.

உரைவிளக்கம்

இன்பமிகுஞ் செல்வமாவது தாமுந் தேவராய்த் துறக்கத்துச் சென்றெய்துஞ்செல்வம். அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கு ஏதுவாகலானும், வீடாகிய ஈறுஇல் இன்பம் எய்துவார்க்குக் கடை எனப்பட்டது. துறக்கம் எய்துவார்க்கு ஆமாயினும் வீடு எய்துவார்க்கு ஆகாது என்றமையின், விதி விலக்குக்கள் தம்முள் மலையாமை விலக்கியவாறாயிற்று. இஃது இல்லறமன்மைக்குக் காரணம்.

இவை இரண்டு பாட்டானும் கொலையது குற்றம் கூறப்பட்டது.

# குறள்: 329 (கொலைவினையரா)

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து (09)

பதப்பிரிப்பு

கொலை வினையர் ஆகிய மாக்கள் புலை வினையர்

புன்மை தெரிவார் அகத்து.

இதன்பொருள்

கொலை வினையர் ஆகிய மாக்கள்= கொலைத்தொழிலை யுடையராகிய மாந்தர்; புன்மை தெரிவார் அகத்துப் புலை வினையர்= அத்தொழிலின் கீழ்மையை அறியாத நெஞ்சத்தர் ஆயினும், அறிவார் நெஞ்சத்துப் புலைத்தொழிலினர்.

உரைவிளக்கம்

கொலைவினையர் என்றதனான், வேள்விக்கட் கொலையன்மை அறிக. புலைவினையர் என்றது தொழிலாற் புலையர் என்றவாறு. இம்மைக்கட் கீழ்மை எய்துவர் என்பதாம்.

# குறள்: 330 (உயிருடம்பி)

உயிருடம்பி னீ்க்கியாரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர் (10)

பதப்பிரிப்பு

உயிர் உடம்பின் நீக்கியார் என்ப செயிர் உடம்பின்
செல்லாத் தீ வாழ்க்கையவர்.

இதன்பொருள்

செயிர் உடம்பின் செல்லாத் தீவாழ்க்கையவர்= நோக்கலாகா நோய்உடம்புடனே வறுமைகூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினை உடையாரை; உயிர் உடம்பின் நீக்கியார் என்ப= இவர் முற்பிறப்பின்கண் உயிர்களை அவை நின்றவுடம்பினின்று நீக்கினவர் என்று சொல்லுவார் வினை விளைவுகளை அறிந்தோர்.

உரைவிளக்கம்

செல்லாவாழ்க்கை தீவாழ்க்கை எனக்கூட்டுக. "செயிருடம்பினராதல் அக்கேபோ லங்கை யொழிய விரலமுகித் - துக்கத் தொழுநோ யெழுபவே"[1] என்பதனானும் அறிக. மறுமைக்கண் இவையும் எய்துவர் என்பதாம்.

இவை யிரண்டு பாட்டானும் கொல்வார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

அருளுடைமை முதற் கொல்லாமை யீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களுும் அடங்கும்; அஃதறிந்து அடக்கிக் கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

[1]. நாலடியார், 123.

# பரிமேலழகர் உரை

# ஞானம்

இனி அவற்றின் பயனாகிய ஞானங்கூறிய தொடங்கினார். ஞானமாவது வீடுபயக்கும் உணர்வு. அது நிலையாமை முதல் அவாவறுத்தல் இறுதியாக நான்கதிகாரத்துள் அடக்கப்பட்டது.

## அதிகாரம் **34.**நிலையாமை

அதிகார முன்னுரை

அவற்றுள் நிலையாமையாவது தோற்றமுடையன யாவும் நிலையுதல் இலவாந்தன்மை. மயங்கியவழிப் பேய்தேரிற் புனல்போலத் தோன்றி, மெய்யுணர்ந்தவழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய்என்பாரும், நிலைவேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்கும்என்பாரும், ஒருவாற்றான் வேறுபடுதலும், ஒருவாற்றான் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கே உடைய என்பாரும் எனப் பொருட்பெற்றி கூறுவார் பலதிறத்தராவர்; எல்லார்க்கும் நிலையாமை உடம்பாடாகலின், இஃது உணர்ந்துழியல்லது

பொருள்களிற் பற்று விடாதாகலின், இஃது முன் வைக்கப்பட்டது.

## குறள்: 331 (நில்லாதவற்றை)

நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை (01)

பதப்பிரிப்பு

நில்லாதவற்றை நிலையின என்று உணரும்
புல் அறிவு ஆண்மை கடை.

இதன்பொருள்

நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை= நிலையுதல் இலவாகிய் பொருள்களை நிலையுதல் உடையவென்று கருதுகின்ற புல்லறிவினை உடையராதல்; கடை= துறந்தார்க்கு இழிபு.

உரைவிளக்கம்

தோற்றம் உடையவற்றைக் கேடுஇலவென்று கருதும் புலலறிவால், அவற்றின் மேற் பற்றுச்செய்தல் பிறவித் துன்பத்திற்கு ஏதுவாகலின், அது வீடு எய்துவார்க்கு இழுக்கு என்பது இதனால் கூறப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச்செய்வது சிற்றின்பத்துக்கு ஏதுவாகிய செல்வத்தின்கண்ணும் அதனை அனுபவிக்கும் யாக்கையின் கண்ணுமாகலின், வருகின்ற பாட்டுக்களான் அவற்றது நிலையாமையை விதந்து கூறுப.

# குறள்: 332 (கூத்தாட்டவைக்)

கூத்தாட்டவைக் குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று (02)

பதப்பிரிப்பு

கூத்துஆட்டு அவைக் குழாத்து அற்றே பெரும் செல்வம்
போக்கும் அது விளிந்து அற்று.

இதன்பொருள்

பெருஞ்செல்வம் கூத்தாட்டு அவை குழாத்தற்று= ஒருவன்மாட்டுப் பெரியசெல்வம் வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர்குழாம் வந்தாற்போலும்; போக்கும் அது விளி்ந்துஅற்று= அதனது போக்கும் அக்கூத்தாட்டு முடிந்தவழி அக்குழாம் போயினாற் போலும்.

உரைவிளக்கம்

'பெருஞ்செல்வம்' எனவே, துறக்கச் செல்வமும் அடங்கிற்று. 'போக்கும்' என்ற எச்சவும்மையான், வருதல் என்பது பெற்றாம். அக்குழாங் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின்கண் பல்திறத்தால் தானே (பஃறிறத்தாற்றானே) வந்து, அக்காரணம் போயவழித் தானும் போமாறு போல, செல்வமும் ஒருவன் நல்வினை காரணமாக அவன்மாட்டுப் பஃறிறத்தாற்றானே வந்து, அக்காரணம் போயவழித் தானும் போம் என்றதாயிற்று.

# குறள்: 333 (அற்கா)

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா

லற்குப வாங்கே செயல்.

பதப்பிரிப்பு

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அது பெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

இதன்பொருள்

அற்கா இயல்பிற்றுச் செல்வம்= நில்லாத இயல்பினை உடைத்துச் செல்வம்; அது பெற்றால் அற்குப ஆங்கே செயல்= அதனைப்பெற்றால், அதனால் செய்யப்படும் அறங்களை அப்பெற்றபொழுதே செய்க.

உரைவிளக்கம்

அல்கா என்பது திரிந்துநின்றது. ஊழ்உள்ளவழியல்லது துறந்தாரால் பெறப்படாமையின் 'அது பெற்றால்' என்றும், அஃதில்வழி நில்லாமையின் 'ஆங்கே' என்றும் கூறினார். அதனால் செய்யப்படும் அறங்களாவன, பயன்நோக்காது செய்யப்படும் கடவுட் பூசையும், தானமும் முதலாயின. அவை ஞானவேதுவாய் வீடு பயத்தலின், அவற்றை அற்குப என்றும், செயல் என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் செல்வநிலையாமை கூறப்பட்டது.

# குறள்: 334 (நாளென)

நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வாற் பெறின் (04)

பதப்பிரிப்பு

நாள் என ஒன்று போல் காட்டி உயி்ர் ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்.

இதன்பொருள்

நாள் என ஒன்றுபோல் காட்டி ஈரும் வாளது உயிர்= அறுக்கப்படுவதொரு காலவரையறைபோலத் தன்னைக் காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளினது வாயது உயி்ர்; உணர்வார்ப் பெறின்= அஃது உணர்வாரைப் பெறின்.

உரைவிளக்கம்

காலம் என்னும் அருவப்பொருள் உலகியல் நடத்தற்பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபாடாமையின், "நாளென ஒன்றுபோற் காட்டி" என்றும், அதுதன்னை வாள்என்று உணரமாட்டாதார் நமக்குப்பொழுது போகாநின்றதென்று இன்புறுமாறு நாளாய் மயக்கலிற் 'காட்டி' யென்றும், இடைவிடாது ஈர்தலான் வாளின்வாயது என்றும், அஃது ஈர்கின்றமையை உணர்வார் அரியராகலின் 'உணர்வார்ப் பெறின்' என்றும் கூறினார். 'உயிர்' என்னும் சாதியொருமைப்பெயர் ஈண்டு உடம்பின்மேன் நின்றது, ஈரப்படுவது அதுவேயாகலின். 'வாள்' என்பது ஆகுபெயர். இனி இதனை நாளென்பதொரு பொருள்போலத் தோன்றி உயிரையீர்வதொரு வாளாம் என்று உரைப்பாரும்உளர். 'என'வென்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும், 'ஒன்று போற்காட்டி' என்பதற்கு ஒருபொருட் சிறப்பின்மையானும் 'அது' வென்பது குற்றியலுகரம் அன்மையானும், அஃதுரையன்மை அறிக.

# குறள்: 335 (நாச்செற்று)

நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும் (05)

பதப்பிரிப்பு

நா செற்று விக்குள் மேல்வாரா முன் நல்வினை
மேல்சென்று செய்யப் படும்.

இதன்பொருள்

ஈரச்செற்று விக்குள் மேல்வாராமுன்= உரையாடா வண்ணம் நாவையடக்கி விக்குள் எழுவதற்கு முன்னே; நல்வினை மேற்சென்று செய்யப்படும்= வீட்டிற்கு ஏதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும்.

உரைவிளக்கம்

மேனோக்கி வருதல் ஒருதலையாகலானும், வந்துழிச் செய்தலே அன்றிச் சொல்லலும் ஆகாமையானும் 'வாராமுன்' என்றும், அதுதான் இன்னபொழுது வரும் என்பது இன்மையின் 'மேற்சென்று' என்றும் கூறினார். மேற்சேறல்- மண்டுதல்.

நல்வினை செய்யுமாற்றின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு.

## குறள்: 336 (நெருநல்உளன்)

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு (06)

பதப்பிரிப்பு

நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்னும்
பெருமை உடைத்து இவ் உலகு.

இதன்பொருள்

ஒருவன் நெருநல் உளன் இன்று இல்லை என்னும் பெருமை உடைத்து= ஒருவன் நெருநல் உளனாயினான், அவனே இன்று இல்லையாயினான் என்று சொல்லும் நிலையாமை மிகுதி உடைத்து; இவ்வுலகு= இவ்வுலகம்.

உரைவிளக்கம்

ஈண்டு உண்மை பிறத்தலையும், இன்மை இறத்தலையும் உணர்த்தி நின்றன. அவை பெண்பாற்கும் உளவாயினும், சிறப்புப்பற்றி ஆண் பாற்கே கூறினார். இந்நிலையாமையே உலகின் மிக்கது என்பதாம்.

# குறள்:**337** (ஒருபொழுதும்)

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல (07)

பதப்பிரிப்பு

ஒரு பொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

இதன்பொருள்

ஒரு பொழுதும் வாழ்வது அறியார்= ஒருபொழுது அளவும் தம்முடம்பும் உயிரும் இயைந்திருத்தலைத் தெளியமாட்டார்; கோடியும் அல்ல பல கருதுப= மாட்டாது வைத்தும்,

கோடியளவுமன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினையாநிற்பர் அறிவிலாதார்.

உரைவிளக்கம்

இழிவுசிறப்பும்மையாற் 'பொழுது' என்பது ஈண்டுக் கணத்தின்மேல் நின்றது. காரணமாகிய வினையின் அளவே வாழ்தற்கும் அளவாகலின், அஃது அறியப்படாதாயிற்று. பலவாய நினைவுகளாவன: பொறிகளான் நுகரப்படும் இன்பங்கள் தமக்கு உரியவாமாறும், அதற்குப் பொருள் துணைக்காரணம் ஆமாறும், அது தம் முயற்சிகளான் வருமாறும், அவற்றைத் தாம் முயலுமாறும், அவற்றிற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், நீக்கி அப்பொருள் கடைக்கூட்டுமாறும், அதனைப் பிறர் கொள்ளாமற் காக்குமாறும், அதனான் நட்டாரை ஆக்குமாறும், நள்ளாரை அழிக்குமாறும், தாம் அவ்வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலாரது இயல்பின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. இனிக் 'கருதுப' என்பதனை அஃறிணைப் பன்மைப் பெயராக்கி உரைப்பாரும்உளர்.

# குறள்: 338 (குடம்பை)

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு (08)

பதப்பிரிப்பு

குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்து அற்றே
உடம்பொடு உயிர் இடை நட்பு.

இதன்பொருள்

குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்று= முன் தனியாத முட்டை தனித்துக்கிடப்ப அதன்உள் இருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்மைத்து; உடம்பொடு உயிர்இடை நட்பு= உடம்பிற்கும் உயிர்க்கும் உளதாய நட்பு.

உரைவிளக்கம்

'தனித்தொழிய' என்றதனான், முன் தனியாமை பெற்றாம். அஃதாவது, கருவும் தானும் ஒன்றாய்ப்பிறந்து, வேறாந்துணையும் அதற்கு ஆதாரமாய் நிற்றல்; அதனால் அஃது உடம்பிற்கு உவமையாயிற்று. அதனுள் வேற்றுமையின்றி நின்றே பின் புகாமற் போகலின், 'புள்' உயிர்க்கு உவமையாயிற்று. முட்டையுட் பிறப்பன பிறவும் உளவேனும், புள்ளையே கூறினார், பறந்துபோதல் தொழிலான் உயிரோடு ஒப்புமை எய்துவது அதுவேயாகலின். 'நட்பு' என்பது ஈண்டுக் குறிப்புமொழியாய் நட்பின்றிப்போதல் உணர்த்தி நின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முள் மாறாகலின், வினைவயத்தாற் கூடியதல்லது நட்புஇல என்பது அறிக. இனிக் 'குடம்பை' என்பதற்குக் கூடு என்பாரும் உளர்[1]. அது புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுதல் உடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை அறிக.

[1]. மணக்குடவர்.

# குறள்: 339 (உறங்குவது)

உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி

விழி◌ப்பது போலும் பிறப்பு (09)

பதப்பிரிப்பு

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

இதன்பொருள்

சாக்காடு உறங்குவது போலும்= ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோடு ஒக்கும்; பிறப்பு உறங்கி விழிப்பது போலும்= அதன்பின் பிறப்பு வருதல் உறங்கி விழித்தல் வருதலோடு ஒக்கும்.

உரைவிளக்கம்

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறிமாறி வருகின்றாற் போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறிமாறி வரும் என்பது கருத்து[2]. நிலையாமையே நிலைபெற்றவாறு அறிவித்தற்குப் பிறப்பும் உடன்கூறப்பட்டது.

[2]மணிமேகலை, 17ஆம் காதை,வரி: 86-87..

# குறள்: 340 (புக்கில்அமைந்தன்று)

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு (10)

பதப்பிரிப்பு

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பின்உள்

துச்சில் இருந்த உயிர்க்கு.

இதன்பொருள்

உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு= வாதமுதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒதுக்கிருந்தே போந்த உயிர்க்கு; புக்கில் அமைந்தின்று கொல்லோ= எஞ்ஞான்றும் இருப்பதோர் இல் இதுகாறும் அமைந்தில்லைபோலும்!

உரைவிளக்கம்

அந்நோய்கள் இருக்கவமைந்த ஞான்று இருந்தும், வெகுண்ட ஞான்று போயும், ஓருடம்பினும் நிலைபெறாது வருதலால், 'துச்சில்இருந்த' என்றார். பின் புறப்படாது புக்கேவிடும் இல் அமைந்ததாயின், பிறர் இல்களுள் ஒதுக்கிராது என்பதாம்; ஆகவே உயிரோடு கூடிநிற்பதோர் உடம்பும் இல்லையென்பது பெறப்பட்டது.

இவை ஏழுபாட்டானும், முறையே யாக்கைகட்கு வரைந்த நாள் கழிகின்றவாறும், கழிந்தால் உளதாய நிலையாமையும், அவை ஒரோவழிப் பிறந்தவளவிலே இறத்தலும், ஒருகணமாயினும் நிற்கும் என்பது தெளியப்படாமையும், உயிர் நீங்கியவழிக் கிடக்குமாறும், அவற்றிற்குப் பிறப்பும் இறப்பும் மாறிமாறி வருமாறும், அவைதாம் உயிர்க்கு உரியஅன்மையும் என்று, இவ்வாற்றால் யாக்கை நிலையாமை கூறியவாறு கண்டுகொள்க.

# துறவறவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **35.**துறவு

அதிகாரமுன்னுரை

அஃதாவது, புறமாகிய செல்வத்தின் கணணும் அகமாகிய யாக்கையின்கணணும் உளதாம் பற்றினை அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள்**: 341 (**யாதனின்**)**

யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன் (01)

பதப்பிரிப்பு**:** யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்.

இதன்பொருள்

யாதனின் யாதனின் நீங்கியான்= ஒருவன் யாதொருபொருளின் யாதொருபொருளின் நீங்கினான்; அதனின் அதனின் நோதல் இலன்= அவன் அப்பொருளால் அப்பொருளால் துன்பம் எய்துதல் இலன்.

உரைவிளக்கம்

அடுக்குக்கள் பன்மை குறித்து நின்றன. நீங்குதல்= துறத்தல். ஈண்டுத் 'துன்பம்' என்றது இம்மைக்கண் அவற்றைத் தேடுதலானும், காத்தலானும், இழத்தலானும் வருவனவும், மறுமைக்கட் பாவத்தான் வருவனவுமாகிய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப் பொருளையும் ஒருங்கே விடுதல் தலை. அஃதன்றி ஒரோவொன்றாக விடினும் அவற்றான் வரும் துன்பம் இலனாம் என்பது கருத்து.

# குறள்:**342** (வேண்டின் உண்டாக)

வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல (02)

பதப்பிரிப்பு

வேண்டின் உண்டாகத் துறக்க துறந்த பின்
ஈண்டு இயற்பால பல.

இதன்பொருள்

துறந்தபின் ஈண்டு இயற்பால பல= எல்லாப் பொருள்களையும் துறந்தால் ஒருவர்க்கு இம்மைக்கண்ணே உளவாம் முறைமையயுடைய இன்பங்கள் பல; வேண்டின் உண்டாகத் துறக்க= அவ்வின்பங்களைவேண்டின் அவற்றைக் காலம் பெறத்

துறக்க.

உரைவிளக்கம்

அவ்வின்பங்களாவன, அப்பொருள்கள் காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும், அவை நன்னெறி்க்கட் சேறலானும் வருவன. இளமைக்கண் துறந்தான் அவற்றை நெடுங்காலம் எய்துமாகலின், 'உண்டாகத் துறக்க' என்றார். 'இன்பங்கள்' என்பதும் 'காலம் என்பதும்' வருவிக்கப்பட்டன. இம்மைக்கண் துன்பங்கள் இலவாதலேயன்றி இன்பங்கள் உளவாதலும் உண்டு என்பதாம்.

# குறள்: 343 (அடல்வேண்டும்)

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு (03)

பதப்பிரிப்பு

அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

இதன்பொருள்

ஐந்தன் புலத்தை அடல் வேண்டும்= வீடு எய்துவார்க்குச் செவி முதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசை முதலிய ஐம்புலன்களையும் கெடுத்தல் வேண்டும்; வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும்= கெடுக்குங்கால் அவற்றை நுகர்தற் பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் ஒருங்கே விடுதல் வேண்டும்.

உரைவிளக்கம்

'புலம்' என்றது அவற்றை நுகர்தலை. அது மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானுமன்றி வாராத பொருள்கள் மேலல்லது வீட்டுநெறியாகிய யோகஞானங்களிற் செலுத்தாமையின், அதனை 'அடல்வேண்டும்' என்றும், அஃது அப்பொருள்கள்மேல் செலலின் அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின், 'வேண்டியவெல்லாம் ஒருங்கு விடல்வேண்டும்' என்றும் கூறினார்.

# குறள்: 344 (இயல்பாகும்)

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து (04)

பதப்பிரிப்பு

இயல்பு ஆகும் நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை
மயல் ஆகும் மற்றும் பெயர்த்து.

இதன்பொருள்

ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பாகும்= பற்றப் படுவது ஒருபொருளும் இல்லாமை தவம் செய்வார்க்கு இயல்பாம்; உடைமை பெயர்த்து மற்றும் மயலாகும்= அஃதன்றி, ஒன்றாயினும் உடைமை அத்தவத்தைப் போக்குதலான், மீண்டும் மயங்குதற்கு ஏதுவாம்.

உரைவிளக்கம்

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'நோன்பு' என்பதூஉம் 'மயல்' என்பதூஉம் ஆகுபெயர். 'பெயர்த்தலான்' என்பது திரிந்து நின்றது. நோன்பைப் பெயர்த்தலான் என வேற்றுமைப் படுத்துக்

கூட்டுக. எல்லாப் பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாத வழியும், அது சார்பாக விட்டனவெல்லாம் மீண்டு வந்து தவத்திற்கு இடையீடாய் மனக்கலக்கம் செய்யும் என்பது கருத்து.
இவை நான்குபாட்டானும், எனது என்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது.

## குறள்: 345 (மற்றுந்தொடர்ப்பாடு)

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை (05)

பதப்பிரிப்பு

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பு அறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.

இதன்பொருள்

பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை= பிறப்பு அறுத்தலை மேற்கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய உடம்பும் மிகையாம்; மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்= ஆனபின் அதற்கு மேலே இயைபு இல்லனவும் சில தொடர்ப்பாடு உளவாதல் என்னாம்!

உரைவிளக்கம்

'உடம்பு' என்ற பொதுமையான், உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப்படும். அவற்றுள் அருவுடம்பாவது பத்துவகை இந்திரிய உணர்வோடும், ஐவகை வாயுக்களோடும், காமவினை விளைவுகளோடும் கூடிய மனம்; இது நுண்ணுடம்பு எனவும்படும். இதன்கண் பற்று நிலையாமை உணர்ந்ததுணையான் விடாமையின், விடுதற்கு உபாயம்

முன்னர்க் கூறுப[1]. இவ்வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை உணர்ந்து இவற்றானாய கட்டினை இறைப்பொழுதும் பொறாது வீட்டின்கண்ணே விரைதலின், 'உடம்புமிகை' என்றார். இன்பத்துன்பங்களான் உயிரோடு ஒற்றுமை எய்துதலின், இவ்வுடம்புகளும் 'யான்' எனப்படும்.
இதனான் அகப்பற்று விடுதல் கூறப்பட்டது.

[1]. குறள், 350.

# குறள்: 346 (யானெனதென்னும்)

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும் (06)

பதப்பிரிப்பு

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

இதன்பொருள்

யான் எனது என்னும் செருுகக அறுப்பான்= தான் அல்லாத உடம்பை யான் என்றும், தன்னோடு இயைபில்லாத பொருளை எனது என்றும் கருதி அவற்றின்கண் பற்றுச் செய்தற்கு ஏதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான்; வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்= வானோர்க்கும் எய்தற்கு அரிய வீட்டுலகத்தை எய்தும்.

உரைவிளக்கம்

மயக்கம்- அறியாமை. அதனைக் கெடுத்தலாவது தேசிகர்பாற் பெற்ற உறுதிமொழிகளானும், யோகப்பயிற்சியானும் அவை

யான் எனது அன்மை தெளிந்து, அவற்றின்கண் பற்றை விடுதல். சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

இதனான் இவ்விருவகைப் ப்றறினையும் விட்டார்க்கே வீடுளது என்பது கூறப்பட்டது.

# குறள்: 347 (பற்றிவிடாஅ)

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு (07)

பதப்பிரிப்பு

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅதவர்க்கு.

இதன்பொருள்

பற்றினைப் பற்றி விடாஅதவர்க்கு= இருவகைப் பற்றினையும் இறுகப்பற்றி விடாதாரை; இடும்பைகள் பற்றி விடாஅ= பிறவித்துன்பங்கள் இறுகப்பற்றி விடா.

உரைவிளக்கம்

இறுகப்பற்றுதல்= காதல்கூர்தல். விடாதவர்க்கு என்பது வேற்றுமைமயக்கம்.

இதனால் இவை விடாதவர்க்கு வீடில்லை என்பது கூறப்பட்டது.

# குறள்: 348 (தலைப்பட்டார்)

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் (08)

பதப்பிரிப்பு

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர்.

இதன்பொருள்

தீரத்துறந்தார் தலைப்பட்டார்= முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; மற்றையவர் மயங்கி வலைப்பட்டார்= அங்ஙனம் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார்.

உரைவிளக்கம்

'முற்றத்துறத்த'லாவது, பொருள்களையும் இருவகை உடம்பினையும் உவர்த்துப் பற்றற விடுதல். அங்ஙனம் துறவாமையாவது, அவற்றுள் யாதானும் ஒன்றின்கண் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றித் 'தலைப்பட்டார்' என்றும், பொய்ந்நெறி கண்டே பிறப்பு வலையுள் அகப்படுதலின் 'மயங்கி' என்றும் கூறினார்.9

# குறள்: 349 (பற்றற்ற)

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும் (09)

பதப்பிரிப்பு

பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும் மற்று
நிலையாமை காணப்படும்.

இதன்பொருள்

பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்= ஒருவன் இருவகைப்பற்றும் அற்றபொழுதே, அப்பற்றுஅறுதி அவன் பிறப்பை அறுக்கும்; மற்று நிலையாமை காணப்படும்= அவை அறாதபொழுது அவற்றால் பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை காணப்படும்.

உரைவிளக்கம்

காரணமற்ற பொழுதே காரியமும் அற்றதாம் முறைமைபற்றி, 'பற்றற்ற கண்ணே' என்றார்; "அற்றது பற்றெனில்- உற்றது வீடு[2]" என்பதூஉம் அதுபற்றி வந்தது.

இவையிரண்டுபாட்டானும் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

[2]. திருவாய்மொழி, 2-ஆம் திருப்பதிகம், 5.

# குறள்: 350 (பற்றுக)

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு (10)

பதப்பிரிப்பு

பற்றுக பற்று அற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

இதன்பொருள்

பற்று அற்றான் பற்றினைப் பற்றுக= எல்லாப் பொருளையும் பற்றிநின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவே

நன்னெறியென்று மனத்துட் கொள்க; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு= கொண்டு, அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற் செய்க, விடாது வந்த பற்று விடுதற்கு.

உரைவிளக்கம்

கடவுள் வாழ்த்திற்கு ஏற்ப ஈண்டும் பொதுவகையான் 'பற்றற்றான்' என்றார். 'பற்றற்றான் பற்று' என்புழி, ஆறாவது செய்யுட்கிழமைக்கண் வந்தது. ஆண்டுப் பற்று' என்றது பற்றப்படுவதனை. 'அதன்கண் உபாயம்' என்றது தியானசமாதிகளை. 'விடாது வந்த பற்று' என்றது, அநாதியாய் வரும் உடம்பிற் பற்றினை. அப்பற்று விடுதற்கு உபாயம் இதனால் கூறப்பட்டது.

# துறவறவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **36** மெய்யுணர்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களான்அன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் தத்துவஞானம் என்ப. இதுவும் 'பற்றற்றான் பற்றினைப்' பற்றியவழி உளதாவதாகலின், அக்காரண ஒற்றுமை பற்றித் துறவின்பின் வைக்கப்பட்டது.

## குறள்**: 351 (**பொருளல்லவற்றைப்**)**

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு (01)

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும்
மருளான் ஆம் மாணாப் பிறப்பு

இதன்பொருள்

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் ஆம்= மெய்ப்பொருள் அல்லவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் விபரீத உணர்வானே உளதாம்; மாணாப் பிறப்பு= இன்பம் இல்லாத பிறப்பு.

விளக்கம்

அவ்விபரீத உணர்வாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையவும் சொல்லும் மயக்க நூல் வழக்குக்களை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல். குற்றியை மகன் என்றும், இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன ஒருபொருட்கிளவி. நரகர், விலங்கு, மக்கள் தேவர் என்னும் நால்வகைப் பிறப்பினும் உள்ளது துன்பமேயாகலின் 'மாணாப்பிறப்பு' என்றார். இதனாற் 'பிறப்புத்' துன்பம் என்பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சை என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள்: 352 (இருணீங்கி)

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு (02)

இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி
மாசு அறு காட்சியவர்க்கு.

இதன்பொருள்

மருள் நீங்கி மாசு அறு காட்சியவர்க்கு= அவிச்சையின் நீங்கி

மெய்யுணர்வு உடையராயினார்க்கு; இருுள் நீங்கி இன்பம் பயக்கும்= அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும்.

விளக்கம்

'இருள்' நரகம்; அஃது ஆகுபெயராய்க் காரணத்தின்மேனின்றது. 'நீங்கி' எனத் தொடைநோக்கி மெலிந்து நின்றது; நீங்க வென்பதன் திரிபு எனினும் அமையும். 'மருணீங்கி' என்னும் வினையெச்சம் 'காட்சியவர்' என்னும் குறிப்புவினைப்பெயர் கொண்டது. 'மாசறு காட்சி' என்றது, கேவல உணர்வினை. இதனால் வீடாவது நிரதிசயவின்பம் என்பதூஉம், அதற்கு நிமித்த காரணம் கேவலப்பொருள் என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள்: 353 (ஐயத்தின்)

ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து (03)

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து.

இதன்பொருள்

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு= ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந்தார்க்கு; வையத்தின் வானம் நணியது உடைத்து= எய்திநின்ற நிலவுலகத்தினும் எய்தக்கடவதாகிய வீட்டுலகம் நணித்தாதல் உடைத்து.

விளக்கம்

'ஐய'மாவது பலதலையாய உணர்வு. அஃதாவது, மறுபிறப்பும்,

இருவினைப்பயனும், கடவுளும் உளவோ இலவோ என ஒன்றில் துணிவு பிறவாது நிற்றல்; பேய்த்தேரோ புனலோ, கயிறோ அரவோ எனத் துணியாது நிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர்மதம் களைந்து தம்மதம் நிறுத்தல் எல்லாச் சமயநூல்கட்கும் இயல்பாகலின், அவை கூறுகின்ற பொருள்களுள் யாது மெய்யென நிகழும் ஐயத்தினை யோக முதிர்ச்சி யுடையார் தம் அனுபவத்தான் நீக்கி மெய்யுணர்வர் ஆகலின், அவரை 'ஐயத்தின்நீங்கித் தெளிந்தார்' என்றும், அவர்க்கு அவ்வனுபவ உணர்வு அடிப்பட்டு வரவரப் பண்டை உலகியலுணர்வு தூர்ந்து வருமாகலின், அதனைப் பயன்மேலிட்டு 'வையத்தின் வான நணியதுடைத்து' என்றும் கூறினார்; கூறவே ஐயவுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப்பட்டது.

# குறள்: 354 (ஐயுணர்வெய்தியக்)

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு (04)

ஐஉணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே
மெய் உணர்வு இல்லாதவர்க்கு.

இதன்பொருள்

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே= செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகிய உணர்வு அவற்றை விட்டுத் தம் வயத்தாய வழியும், அதனாற் பயன் இல்லையேயாம்; மெய்யுணர்வு இல்லாதவர்க்கு= மெய்யினையுணர்தல் இல்லாதார்க்கு.

விளக்கம்

'ஐந்தாகிய உணர்வு' மனம். அஃது எய்துதலாவது மடங்கி ஒருதலைப்பட்டுத் தாரணைக்கண் நிற்றல். அங்ஙனம் நின்றவழியும் வீடு பயவாமையின் 'பயம்இன்று' என்றார். சிறப்பும்மை எய்துதற்கு அருமை விளக்கிநின்றது.

இவையிரண்டு பாட்டானும் மெய்யுணர்வு உடையார்க்கே வீடுளது என மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது.

## குறள்: 355 (எப்பொருளெத்தன்மைத்தாயினும்)

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு (05)

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

இதன்பொருள்

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்= யாதொரு பொருள் யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும்; அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு= அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது, அப்பொருளின்கண்நின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது.

விளக்கம்

பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது என்றவாறாயிற்று. அஃதாவது, கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றவழி அரசன் என்பதோர்

சாதியும், சேரமான் என்பதோர் குடியும், வேழ நோக்கினையுடையான் என்பதோர் வடிவும், சேயென்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறை என்பதோர் சிறப்புப் பெயரும், ஒருபொருளின்கண் கற்பனையாகலின், அவ்வாறுஉணராது நிலமுதல் உயிர் ஈறாய தத்துவங்களின் தொகுதி என உணர்ந்து, அவற்றை நிலம்முதலாகத் தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு சென்றால், காரண காரியங்கள் இரண்டுமன்றி முடிவாய் நிற்பதனை உணர்தலாம். 'எப்பொரு'ளென்ற பொதுமையான், இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறே உணரப்படும்.
இதனான் மெய்யுணர்வினது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள்: 356 (கற்றீண்டு)

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி (06)

கற்று ஈண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி.

இதன்பொருள்
ஈண்டுக் கற்று மெய்ப்பொருள் கண்டார்= இம் மக்கட் பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனான் மெய்ப்பொருளை உணர்ந்தவர்; மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர்= மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர்.

விளக்கம்

'கற்று' என்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், 'ஈண்டு' என்றதனால் வீடுபேற்றிற்குரிய மக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்றாம். 'ஈண்டு வாரா நெறி' வீட்டுநெறி. விட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று. அவை கேள்வி, விமரிசம், பாவனை என்பன. அவற்றுட் கேள்வி இதனாற் கூறப்பட்டது.

# குறள்: 357 (ஓர்த்துள்ள)

ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு (07)

ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு.

இதன்பொருள்

உள்ளம் ஒருதலையா ஓர்த்து உள்ளது உணரின்= அங்ஙனங் கேட்ட உபதேசமொழிப்பொருளை ஒருவன் உள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானும் தெளிய ஆராய்ந்து, அதனான் முதற்பொருளை உணருமாயின்; பேர்த்துப் பிறப்பு உள்ள வேண்டா= அவனுக்கு மாறிப் பிறப்புள்ளதாக நினைக்கவேண்டா.

விளக்கம்

ஒருதலையா வோர்த்து என இயையும். அளவைகளும் பொருந்துமாறும் மேலே உரைத்தாம் (242 ஆம் குறளுரை). இதனால் விமரிசம் கூறப்பட்டது.

# குறள்: 358 (பிறப்பென்னும்)

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு (358)

> பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்
> செம்பொருள் காண்பது அறிவு.

இதன்பொருள்

பிறப்பு என்னும் பேதைமை நீங்க= பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட; சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு= வீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்விய பொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது.

விளக்கம்

'பிறப்பென்னும் பேதைமை' எனவும், 'சிறப்பு என்னும் செம்பொருள்' எனவும், காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக் குற்றங்களுள் அவிச்சை ஏனைய நான்கிற்கும் காரணமாதலுடைமையின், அச்சிறப்புப்பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக் கூறினார். எல்லாப்பொருளினும் சிறந்ததாகலால் வீடு 'சிறப்பு' எனப்பட்டது. தோற்றக் கேடுகள் இன்மையின் நித்தமாய், நோன்மையாற் தன்னையொன்றுங் கலத்தலின்மையிற் தூய்தாய்த், தான் எல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல் பற்றி, அதனைச் செம்பொருள் என்றார். மேல் 'மெய்ப்பொருள்'(குறள், 355) எனவும், 'உள்ளது'(குறள், 357) எனவும் கூறியதூஉம் இதுபற்றி என உணர்க. அதனைக் காண்கையாவது, உயிர் தன் அவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல்; இதனைச்

சமாதியெனவும், சுக்கிலத்தியானம் (சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம்-483) எனவும் கூறுப. உயிர் உடம்பின் நீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லா ஆகமங்கட்கும் துணிபாகலின், வீடு எய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளையே பாவித்தல் வேண்டுதலான் அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க உபாயம் இல்லையென்பது அறிக.

இதனாற் பாவனை கூறப்பட்டது.

# குறள்: 359 (சார்புணர்ந்து)

சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் (09)

சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்று அழித்துச்
சார் தரா சார்தரு நோய்.

இதன்பொருள்

சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின்= ஒருவன் எல்லாப்பொருட்கும் சார்பாய அச்செம்பொருளை உணர்ந்து இருவகைப் பற்றும் அற ஒழுகவல்லனாயின்; சார்தரும் நோய் அழித்து மற்றுச் சார்தரா= அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வொழுக்கங்களை அழித்துப் பின்சாரமாட்டா.

விளக்கம்

ஆகுபெயராற் சாரும் இடத்தையும், சார்வனவற்றையும் 'சார்பு' என்றார். ஈண்டு 'ஒழுக்கம்' என்றது யோகநெறி ஒழுகுதலை. அஃது இயமம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனவொருக்கம், தாரணை, தியானம், சமாதியென எண்வகைப்படும். அவற்றின் பரப்பெல்லாம் ஈண்டு உரைப்பிற் பெருகும்; யோகநூல்களுட் காண்க. 'மற்றுச் சார்தரா' என இயையும். சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும், பிறந்தஉடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னும் அனுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன. அவை விளக்கின்முன் இருள்போல் ஞானயோகங்களின் முன்னர்க் கெடுதலான், 'அழித்துச் சார்தரா' என்றார். இதனை ஆருகதர் உவர்ப்பென்ப. பிறப்பிற்குக் காரணமாகலான், நல்வினைபபயனும் 'நோய்' எனப்பட்டது. மேன் மூன்று உபாயத்தானும் பரம்பொருளை உணரப் பிறப்பு அறும் என்றார். அஃதறும்வழிக் கிடந்த துன்பங்கள் எல்லாம் என்செய்யும் என்னும் கடாவை ஆசங்கித்து அவை ஞான யோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சாரமாட்டாமையானும் வேறுசார்பின்மையானும் கெட்டுவிடும் என்பது இதனாற் கூறப்பட்டது.

# குறள்: 360 (காமம்வெகுளி)

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய் (10)

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக் கெடும் நோய்.

இதன்பொருள்

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட= ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சை என்னும் இக்குற்றங்கள் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலான்; நோய்கெடும்= அவற்றின் காரியமாய வினைபபயன்கள் உளவாகா.

விளக்கம்

அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிதுவேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமும் என வடநூலார் குற்றம் ஐந்து என்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான், மூன்று என்றார். இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றும் காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத்துய் போலுமாகலின், அம்மிகுதி தோன்ற 'இவை மூன்றன் நாமம் கெட' என்றார். இழிவுச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'கெட' என்பது எச்சத்திரிவு. 'நோய்' என்பது சாதியொருமை. காரணமாய அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களுமில்லை என்பது இதனாற் கூறப்பட்டது. முன்கிடந்த துன்பங்களும், மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனாகலின், இவை இரண்டு பாட்டும் இவ்வதிகாரத்தவாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்தஉடம்பும் அதுகொண்ட வின்ப்பயனுமே என்பது பெற்றாம்.

# துறவறவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **37** அவாவறுத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றைமையின், வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கள்மேற் பழைய பயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாமாகலின், அதனை இடைவிடாது மெய்ப்பொருள் உணர்வான் அறுத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள்**: 361 (**அவாவென்ப**)**

அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து (01)

அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பு ஈனும் வித்து.

இதன்பொருள்

எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பு ஈனும் வித்து= எல்லா உயிர்கட்கும் எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்து; அவா என்ப= அவா என்று சொல்லுவர் நூலோர்.

விளக்கம்

உடம்பு நீங்கிப்போங்காலத்து அடுத்தவினையும், அதுகாட்டும் கதிநிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும், உயிரின்கண் முறையே வந்து உதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கண் கொண்டு செல்லுமாகலான், அதனைப் 'பிறப்பீனும் வித்து' என்றும், கதிவயத்தான் உளதாய அவ்வுயிர் வேறுபாட்டினும் அவை தன்மைதிரியும் உறசர்ப்பிணி அவசர்ப்பிணி என்னும் காலவேறுபாட்டினும் அது வித்தாதல் வேறுபடாமையின் 'எல்லாஉயிர்க்கும் எஞ்ஞான்றும்' என்றும், இஃது எல்லாச்சமயங்கட்கும் ஒத்தலான் 'என்ப' என்றும் கூறினார். இதனால் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது.

# குறள்: 362 (வேண்டுங்கால்)

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும் (02)

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றுஅது
வேண்டாமை வேண்ட வரும்.

இதன்பொருள்

வேண்டுங்கால் பிறவாமை வேண்டும்= பிறப்புத்துன்பமாதல் அறிந்தவன் ஒன்றை வேண்டிற் பிறவாமையை வேண்டும்; அது வேண்டாமை வேண்ட வரும்= அப்பிறவாமைதான் ஒரு பொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானேயுண்டாம்.

விளக்கம்

அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களால் துன்பமுற்று வருகின்றமையை உணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின் கண்ணேயாகலிற் பிறவாமையை 'வேண்டும்' என்றும், ஈண்டைச் சிற்றின்பம் கருதி ஒருபொருளை அவாவின் அது பிறப்பீனும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின் அது 'வேண்டாமை வேண்ட வரும்' என்றும் கூறினார். பிறவாமையின் சிறப்புக் கூறிப் பின் அது வரும்வழி கூறத்தொடங்குகின்றமையின் 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது.

# குறள்: 363 (வேண்டாமையன்ன)

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டுமஃதொப்ப தில் (03)

வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை
ஆண்டும் அஃது ஒப்பது இல்.

இதன்பொருள்

வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை= ஒரு பொருளையும் அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம்

காணப்படுகின்ற இவ்வுலகின்கண் இல்லை; ஆண்டும் அஃது ஒப்பது இல்= இனி அவ்வளவேயன்று, கேட்கப்படுகின்ற துறக்கத்தின்கண்ணும் அதனை ஒப்பதில்லை.

விளக்கம்

மக்கள்செல்வமும் தேவர்செல்வமும் மேன்மேல்நோக்கக் கீழாதல் உடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை 'விழுச்செல்வம்' என்றும், அதற்கு இரண்டு உலகினும் ஒப்பது இன்மையின் 'அஃதொப்பதில்லை' என்னும் கூறினார். ஆகமஅளவை போலாது காட்சி அளவையான் எல்லாரானும் தெளியப்படுதலின், மக்கள் செல்வம் வகுத்து முற்கூறப்பட்டது.

பிறவாமைக்கு வழியாமெனவும், விழுச்செல்வமாம் எனவும் வேண்டாமையின் சிறப்பு இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது.

# குறள்: 364 (தூஉய்மை)

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும் (04)

தூஉய்மை என்பது அவா இன்மை மற்று அது
வாஅய்மை வேண்ட வரும்.

இதன்பொருள்

தூஉய்மை என்பது அவாவின்மை= ஒருவர்க்கு வீடு என்று சொல்லப்படுவது அவாஇல்லாமை; அது வாய்மை வேண்ட வரும்= அவ்வவாஇல்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாம்.

விளக்கம்

வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாகலின், அதனைத் 'தூய்மை' என்றும், காரணத்தைக் காரியமாக உபசரித்துத் 'தூய்மையென்பது அவாவின்மை' என்றும், மெய்ம்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மை என்றும் கூறினார். 'மற்று' மேலையதுபோல வினைமாற்றின்கண் வந்தது. 'வேண்டுதல்', இடைவிடாது பாவித்தல். அவாவறுத்தல், வீட்டிற்குப் பரம்பரையான் அன்றி நேரே ஏது என்பதூஉம் அது வரும் வழியும் இதனால் கூறப்பட்டன.

# குறள்: 365 (அற்றவர்)

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர் (05)

அற்றவர் என்பார் அவா அற்றார் மற்றையர்
அற்றாக அற்றது இலர்.

இதன்பொருள்

அற்றவர் என்பார் அவா அற்றார்= பிறவி அற்றவர் என்று சொல்லப்படுவார் அதற்கு நேரே ஏதுவாகிய அவா அற்றவர்கள்; மற்றையார் அற்றாக அற்றது இலர்= பிற ஏதுக்கள் அற்று அஃது ஒன்றும் அறாதவர்கள், அவற்றால் சில துன்பங்கள் அற்றதல்லது அவர்போல் பிறவியற்றிலர்.

விளக்கம்

இதனால் அவாவறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும், எதிர்மறை முகத்தானும் கூறப்பட்டது.

# குறள்: 366 (அஞ்சுவதோரும்)

அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா (06)

அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனை
வஞ்சிப்பது ஓரும் அவா.

இதன்பொருள்

ஒருவனை வஞ்சிப்பது அவா= மெய்யுணர்தல் ஈறாகிய காரணங்கள் எல்லாம் எய்தி அவற்றான் வீடு எய்தற்பாலனாய ஒருவனை மறவிவழியாற் புகுந்து பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக் கெடுக்கவல்லது அவா; அஞ்சுவதே அறன்= ஆகலான், அவ்வவாவை அஞ்சி ் க் காப்பதே துறவறமாவது.

விளக்கம்

'ஓரு'மென்பது அசைநிலை. அநாதியாய்ப் போந்த அவா, ஒரோவழி வாய்மைவேண்டலை யொழிந்து பராக்காற் காவானாயின் அஃதிடமாக அவன் அறியாமற் புகுந்து பழைய இயற்கையாய் நின்று பிறப்பினை உண்டாக்குதலான், அதனை 'வஞ்சிப்பது' என்றார். காத்தலாவது, வாய்மைவேண்டலை இடைவிடாது பயின்று அது செய்யாமற் பரிகரித்தல். இதனால் அவாவின் குற்றமும், அதனைக் காப்பதே அறம் என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள்: 367 (அவாவினை)

அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை

தான்வேண்டு மாற்றான் வரும் (07)

அவாவினை ஆற்ற அறுப்பின் தவா வினை
தான் வேண்டும் ஆற்றான் வரும்.

இதன்பொருள்

அவாவினை அற்ற அறுப்பின்= ஒருவன் அவாவினை அஞ்சித் துவரக்கெடுக்க வல்லனாயின்; தவா வினை தான் வேண்டும் ஆற்றான் வரும்= அவனுக்குக் கெடாமைக்கு ஏதுவாகிய வினை தான் விரும்புநெறியானே உண்டாம்.

விளக்கம்

கெடாமை பிறவித்துன்பங்களால் அழியாமை. அதற்கு ஏதுவாகிய வினையென்றது, மேற்சொல்லிய துறவறங்களை. 'வினை' சாதியொருமை. 'தான் விரும்புநெறி' மெய்வருந்தா நெறி. அவாவினை முற்றஅறுத்தானுக்கு வேறு அறம் செய்யவேண்டா; செய்தன எல்லாம் அறமாம் என்பது கருத்து.
இதனால் அவாவறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள்:368 (அவாவி் ல்லார்க்)

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும் (08)

அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃது உண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

இதன்பொருள்

அவா இல்லார்க்குத் துன்பம் இல்லாகும்= அவா இல்லாதார்க்கு

வரக்கடவதொரு துன்பமுமில்லை; அஃது உண்டேல் தவாஅது மேன்மேல் வரும்= ஒருவற்குப் பிற காரணங்கள் எல்லாம் இன்றி அஃதுஒன்றும் உண்டாயின், அதனானே எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும்.

விளக்கம்

உடம்பு முகந்துநின்ற துன்பம் முன்பே செய்துகொண்டதாகலின், ஈண்டுத் 'துன்பம்' என்றது இதுபொழுது அவாவாற் செய்து கொள்வனவற்றை. 'தவாஅது மேன்மேல் வரும்' என்றதனான் மூவகைத் துன்பங்களுமென்பது பெற்றாம்.

இதனான் அவாவே துன்பத்திற்குக் காரணம் என்பது கூறப்பட்டது.

# குறள்: 369 (இன்பமிடை)

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின் (09)

இன்பம் இடையறாது ஈண்டும் அவா என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

இதன்பொருள்

அவா என்னும் துன்பத்துள் துன்பங் கெடின்= அவாவென்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவற்குக் கெடுமாயின்; ஈண்டும் இன்பம் இடையறாது= அவன் வீடுபெற்ற வழியேயன்றி உடம்போடு நின்றவழியும் இன்பம் இடையறாது.

விளக்கம்

துன்பத்துள் துன்பம் ஏனைத்துன்பங்கள் எல்லாம் இன்பமாக வருந்துன்பம். விளைவின்கண்ணேயன்றித் தோற்றத்தின்கண்ணும்

துன்பம் ஆகலின், இவ்வாறு கூறப்பட்டது. காரணத்தைக் காரியமாக உபசரித்து 'அவாவென்னுந் துன்பத்துள் துன்பம்' என்றும், அது கெட்டார்க்கு மனந் தடுமாறாது நிரம்பி நிற்றலான், 'ஈண்டும் இன்பம் இடையறாது' என்றும் கூறினார். இனி, 'ஈண்டும்' என்பதற்குப் பெருகும் என்பாரும் உளர்[1].
இதனான் அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்பொடு நின்றே எய்துவர் என்பது கூறப்பட்டது.

1.மணக்குடவர்.

# குறள்: 370 (ஆராவியற்கை)

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும் (10)

ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

இதன்பொருள்

ஆரா இயற்கை அவா நீப்பின்= ஒருகாலும் நிரம்பாத இயல்பினை உடைய அவாவினை ஒருவன் நீக்குமாயின்; அந்நிலையே பேரா இயற்கை தரும்= அந்நீப்பு அவனுக்கு அப்பொழுதே எஞ்ஞான்றும் ஒரு நிலையனாம் இயல்பைக் கொடுக்கும்.

விளக்கம்

நிரம்பாமையாவது, தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின் வேண்டாதனவாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல். அவ்வளர்ச்சிக்கு அளவின்மையின், நீத்தலே தக்கது என்பது

கருத்து. களிப்புக் கவற்சிகளும், பிறப்புப் பிணிமூப்பிறப்புக்களும் முதலாயினவின்றி உயிர் நிரதிசயவின்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் 'பேராவியற்கை' என்றும், அஃது அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலையாகலின் 'அந்நிலையே தரும்' என்றும் கூறினார்.

"நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரிய மெல்லாமீர்த்து
ஒன்றாய்க் கிடந்த வரும்பெரும்பாழ் உலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு மதுவே வீடு வீடாமே"[2]

என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது. இந்நிலைமை யுடையவனை வடநூலார் சீவன்முத்தன் என்ப.

இதனால் வீடாவது இதுவென்பதூஉம், அஃது அவாவறுத்தார்க்கு அப்பொழுதே உளதாம் என்பதூஉம் கூறப்பட்டன.

2.திருவாய்மொழி, 78ஆம் திருப்பதிகம்- 6

துறவறவியல் முற்றிற்று

# ஊழியல்

## பரிமேலழகர் உரை

இயல்முன்னுரை

இவ்வாற்றான் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தற்சிறப்புடைத்தாய அறம் கூறினார்; இனிப் பொருளும் இன்பமும் கூறுவார், அவற்றின் முதற்காரணமாய ஊழின்வலி கூறுகின்றார்.

## அதிகாரம் **38** ஊழ்

அதிகார முன்னுரை

அஃதாவது, இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒருபொருட்கிளவி. இது பொருள் இன்பங்கள் இரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும், மேற்கூறிய அறத்தோடு இயைபுடைமையானும் அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

# குறள்: 371 (ஆகூழாற்)

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி (01)

ஆகு ஊழால் தோன்றும் அசைவு இன்மை கைப்பொருள்
போகு ஊழால் தோன்றும் மடி.

இதன்பொருள்

கைப்பொருள் ஆகு ஊழால் அசைவுஇன்மை தோன்றும்= ஒருவற்குக் கைப்பொருள் ஆதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சி உண்டாம்; போகு ஊழால் மடி தோன்றும்= அஃது அழிதற்குக் காரணம் ஆகிய ஊழான் மடி உண்டாம்.

விளக்கம்

ஆகூழ், போகூழ் என்னும் வினைத்தொகைகள் எதிர்காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. அசைவு-மடி. பொருளின் ஆக்கவழிவுகட்குத் துணைக்காரணமாகிய முயற்சி மடிகளையும் தானே தோற்றுவிக்கும் என்பது கருத்து.

# குறள்: 372 (பேதைப்படுக்கும்)

பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை (02)

பேதைப் படுக்கும் இழவு ஊழ் அறிவு அகற்றும்
ஆகல் ஊழ் உற்றக் கடை.

இதன்பொருள்

இழவு ஊழ் (உற்றக்கடை) அறிவு பேதைப் படுக்கும்= ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும் கைப்பொருள் இழத்தற்கு ஏதுவாகிய ஊழ் வந்துற்றவிடத்து அஃது அதனைப் பேதையாக்கும்; ஆகல் ஊழ் உற்றக்கடை அகற்றும்= இனி அவன் அறிவு சுருங்கியிருப்பினும் கைப்பொருளாதற்கு ஏதுவாகிய ஊழ் வந்துற்றவிடத்து அஃது அதனை விரிக்கும்.

விளக்கம்

கைப்பொருள் என்பது அதிகாரத்தான் வந்தது. இழவூழ் ஆகலூழ் என்பன இரண்டும் வேற்றுமைத்தொகை. உற்றக்கடை என்பது முன்னும் கூட்டப்பட்டது. இயற்கையானாய அறிவையும் வேறுபடு◌்க்கும் என்பதாம்.

# குறள் **373** **(**நுண்ணியநூல்**)**

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும் **(03)**

நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றும் தன்
உண்மை அறிவே மிகும்.

இதன்பொருள்

நுண்ணிய நூல் பல கற்பினும்= பேதைப்படுக்கும் ஊழ்உடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றையும் கற்றானாயினும்; மற்றும் தன் உண்மை அறிவே மிகும்= அவனுக்குப் பின்னும் தன் ஊழான் ஆகிய பேதைமை உணர்வே மேற்படும்.

விளக்கம்

பொருளின் உண்மை நூலின்மேல் ஏற்றப்பட்டது. மேற்படுதல் கல்வியறிவைப் பின் இரங்குதற்குஆக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். "காதன் மிக்குழிக் கற்றவும் கைகொடா- வாதல் கண்ணகத்து அஞ்சனம் போலுமால்"[1] என்பதும் அது. செயற்கையான் ஆய அறிவையும் கீழ்ப்படுத்தும் என்பதாம்.

1. சீவகசிந்தாமணி, கனகமாலையார் இலம்பகம்-76.

# குறள் **374** **(**இருவேறுலகத்து**)**

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய லராதலும் வேறு **(**04**)**

இரு வேறு உலகத்து இயற்கை திரு வேறு
தெள்ளியர் ஆதலும் வேறு.

இதன்பொருள்

உலகத்து இயற்கை இரு வேறு= உலகத்து ஊழினாய இயற்கை இரண்டு கூறு; திருவேறு தெள்ளியர் ஆதலும் வேறு= ஆதலாற் செல்வமுடையர் ஆதலும் வேறு, அறிவுடையர் ஆதலும் வேறு.

விளக்கம்

செல்வத்தினைப் படைத்தலும் காத்தலும் பயன்கோடலும் அறிவுடையார்க்கு அல்லது இயலா அன்றே; அவ்வாறன்றி அறிவுடையார் வறியர் ஆகவும், ஏனையார் செல்வர் ஆகவும் காண்டலான், அறிவுடையார் ஆதற்கு ஆகும் ஊழ் செல்வம் உடையார்க்கு ஆகாது; செல்வம் உடையர் ஆதற்கு ஆகும் ஊழ்,

அறிவுடையர் ஆதற்கு ஆகாது என்று ஆயிற்று. ஆகவே செல்வம் செய்யுங்கால் அறிவாகிய துணைக்காரணமும் வேண்டா என்பது பெற்றாம்.

# குறள் 375 (நல்லவையெல்லாம்)

நல்லவை யெல்லாந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு (05)

நல்லவை எல்லாம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

இதன்பொருள்

செல்வம் செயற்கு= செல்வத்தை ஆக்குதற்கு; நல்லவை எல்லாம் தீயவாம்= நல்லவை எல்லாம் தீயவாய் அழிக்கும்; தீயவும் நல்லவாம்= அதுவே அன்றித் தீயவை தாமும் நல்லவாய் ஆக்கும், ஊழ்வயத்தான்.

விளக்கம்

நல்லவை, தீயவை என்பன காலமும், இடனும், கருவியும், தொழிலும் முதலாயவற்றை. ஊழான் என்பது அதிகாரத்தாற் பெற்றாம்.

அழிக்கும் ஊழ் உற்றவழிக் காலம் முதலிய நல்லவாயினும் அழியும்; ஆக்கும் ஊழ் உற்றவழி, அவை தீயவாயினும் ஆகும் என்பதாயிற்று. ஆகவே, காலம் முதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுக்கும் என்பது பெற்றாம்.

# குறள் 376 (பரியினும்)

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம (06)

பரியினும் ஆகாவாம் பால் அல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

இதன்பொருள்

பால் அல்ல பரியினும் ஆகாவாம்= தமக்கு ஊழ் அல்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் தம்மிடத்து நில்லாவாம்; தம உய்த்துச் சொரியினும் போகா= ஊழால் தமவாய பொருள்கள் புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும், தம்மை விட்டுப் போகா.

விளக்கம்

பொருள்களின் நிலையும் போக்கும் ஊழினால் ஆவதல்லது காப்பு இகழ்ச்சிகளான் ஆகா என்பதாம்.

இவை ஆறு பாட்டானும் பொருட்குக் காரணமாய ஊழின் வலி கூறப்பட்டது.

# குறள் 377 (வகுத்தான்)

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது (7)

வகுத்தான் வகுத்த வகை அல்லால் கோடி

தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

இதன்பொருள்

கோடி தொகுத்தார்க்கும்= ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத்தார்க்கும்; வகுத்தான் வகுத்த வகையல்லால் துய்த்தல் அரிது= தெய்வம் வகுத்த வகையான் அல்லது நுகர்தல் உண்டாகாது.

விளக்கம்

ஒருயிர் செய்த வினையின் பயன் பிறிதோர் உயிரின்கட் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின் வகுத்தான் என்றார். "இசைத்தலும் உரிய வேறிடத் தான"[2] என்பதனான் உயர்திணை ஆயிற்று. படையாதார்க்கே அன்றிப் படைத்தார்க்கும்[3]என்றமையால், உம்மை எச்ச உம்மை. வெறும் முயற்சிக[4]ளாற் பொருள்களைப் படைத்தலல்லது நுகர்தலாகாது; அதற்கு ஊழ் வேண்டும் என்பதாயிற்று.

2. தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம்-56.

3. 'தொகாதார்க்கே அன்றித் தொகுத்தார்க்கும்'- என்றும் பாடம்.

4. இலக்கணக்கொத்து, வினையியல்- பதினேழாம் சூத்திரவுரை.

# குறள் **378** (துறப்பார்மற்)

துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின் (08)

துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற் பால
ஊட்டா கழியும் எனின்.

இதன்பொருள்

துப்புரவு இல்லார் துறப்பார்= வறுமையான் நுகர்ச்சி இல்லாதார் துறக்கும் கருத்துடையர் ஆவர்; உறற்பால ஊட்டா கழியும் எனின்= ஊழ்கள் உறுதற்பாலவாய துன்பங்களை உறுவியாது ஒழியுமாயின்.

விளக்கம்

துறப்பார் என்பது ஆர் ஈற்று எதிர்கால முற்றுச்சொல். தம்மால் விடப்பெறுவன தாமே விடப்பெற்று வைத்தும் கருத்து வேற்பாட்டால் துன்பம் உறுகின்றது ஊழின் வலியான் என்பது எஞ்சி நிற்றலின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

## குறள்: 379 (நன்றாங்கால்)

நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன் (09)

நன்று ஆம் கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லல் படுவது எவன்.

இதன்பொருள்

நன்று ஆங்கால் நல்லவாக் காண்பவர்= நல்வினை விளையுங்கால் அதன் விளைவாய இன்பங்களைத் துடைக்கும் திறன் நாடாது இவை நல்லவென்று இயைந்து அனுபவிப்பார்; அன்று ஆங்கால் அல்லற்படுவது எவன்= ஏனைத் தீவினை விளையுங்கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வாறு அனுபவியாது துடைக்குந் திறன் நாடி அல்லல் உழப்பது என் கருதி?

விளக்கம்

தாமே முன்செய்து கொண்டமையானும், ஊட்டாது கழியாமையானும், இரண்டும் இயைந்து அனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந்து அனுபவித்து ஏனையதற்கு அது செய்யாது வருந்துதல் அறிவன்று என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் இன்பத்துன்பங்கட்குக் காரணமாய ஊழின்வலி கூறப்பட்டது.

# குறள் **380** **(**ஊழிற்பெருவலி**)**

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும் (10)

ஊழிற் பெருவலி யா உள மற்று ஒன்று
சூழினும் தான் முந்துறும்.

இதன்பொருள்

மற்றுஒன்று சூழினும் தான் முந்துறும்= தன்னை விலக்குதற் பொருட்டுத் தனக்கு மறுதலை ஆவதோர் உபாயத்தைச் சூழினும், தான் அவ்வுபாயமேயானும் பிறிதொன்றானும் வழியாக வந்து அச்சூழ்ச்சியின் முற்பட்டு நிற்கும்; ஊழிற் பெருவலி யா உள= அதனால் ஊழ்போல மிக்க வலியுடையன யாவை யுள?

விளக்கம்

பெருவலி ஆகுபெயர். சூழ்தல் பலருடனும் பழுதற எண்ணுதல். செய்தற்கே அன்றுச் சூழ்தற்கும் அவதி கொடாது என்றமையின், உம்மை எச்சவும்மை. எல்லாம் வழியாக வருதல் உடைமையின், ஊழே வலியது என்பதாம்.

இதனான் அவ்விருவகை ஊழின் வலியும் பொதுவாகக் கூறப்பட்டது.

ஊழியல் முற்றிற்று

அறத்துப்பால் முற்றிற்று

# திருக்குறள் பொருட்பால்

## திருக்குறள் பரிமேலழகர் உரை/பொருட்பால்/இயல் **1.**அரசியல்

# திருக்குறள் பரிமேலழகர் உரை/பொருட்பால்/2.அங்கவியல்

## திருக்குறள் பரிமேலழகர் உரை/பொருட்பால்/3.ஒழிபியல்

# 1. அரசியல்

பரிமேலழகரின் 'இயல்' முன்னுரை:

இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருள் இன்பங்களுள், இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் எடுத்துக்கொண்டார். அது, தன் துணைக்காரணமாய 'அரசநீதி' கூறவே அடங்கும். அரசநீதியாவது, காவலை நடாத்தும் முறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூவகைப்படுத்து, மலர்தலை உலகிற்கு உயிர் எனச்சிறந்த அரசனது இயல்பு இருபத்தைந்து அதிகாரத்தான் கூறுவான் தொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

## அதிகாரம்: 39 இறைமாட்சி

பரிமேலழகரின் அதிகார முன்னுரை:

அஃதாவது, அவன்தன் நற்குண நற்செய்கைகள். உலகபாலர் உருவாய் நின்று உலகம் காத்தலின், 'இறை` என்றார். "திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனே யென்னும்" (திருவாய்மொழி, பதிகம் *34:* பாசுரம். *08)* என்று பெரியாரும் பணித்தார்.

# திருக்குறள்: 381 (படைகுடி)

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு // // படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்
முடையா னரசரு ளேறு. (01) // // உடையான் அரசருள் ஏறு.

பரிமேலழகர் உரை::

படைகுடிகூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான்= படையும், குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணும் என்று சொல்லப்பட்ட ஆறு அங்கஙகளையும் உடையவன்;
அரசருள் ஏறு= அரசருள் ஏறு போல்வான் என்றவாறு.

பரிமேலழகர் விளக்கம்:

ஈண்டுக் 'குடி' என்றது, அதனையுடைய நாட்டினை. 'கூழ்' என்றது, அதற்கு ஏதுவாய பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பதே முறையாயினும் ஈண்டுச் செய்யுள் நோக்கிப் பிறழவைத்தார், 'ஆறும் உடையான்' என்றதனால். அவற்றுள் ஒன்று இல்வழியும், அரசநீதி செல்லாது என்பது பெற்றாம். வடநூலார் இவற்றிற்கு 'அங்கம்' எனப் பெயர் கொடுத்ததூஉம் அது நோக்கி. 'ஏறு' என்பது உபசார வழக்கு.

இதனால், அரசற்கு அங்கமாவன இவை என்பதூஉம், இவை முற்றும் உடைமையே அவன் வெற்றிக்கு ஏது என்பதூஉம் கூறப்பட்டன.

# திருக்குறள்: 382 (அஞ்சாமை)

அஞ்சாமை யீகையறி வூக்க மிந்நான்கு // அஞ்சாமை ஈகை அறிவு

ஊக்கம் இந்நான்கும்
மெஞ்சாமை வேந்தற் கியல்பு. (02) // எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.

பரிமேலழகர் உரை:

வேந்தற்கு இயல்பு- அரசனுக்கு இயல்பாவது;
அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை- திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமும் என்னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல் என்றவாறு.

பரிமேலழகர் விளக்கம்:

ஊக்கம், வினை செய்தற்கண் மனஎழுச்சி. இவற்றுள் அறிவு ஆறு அங்கத்திற்கும் உரித்து; ஈகை படைக்குரித்து; ஏனைய வினைக்கு உரிய. உயிர்க்குணங்களுள் ஒன்று தோன்ற ஏனைய அடங்கி வரும்; அவற்றுள் இவை அடங்கின், அரசற்குக் கெடுவன பலவாமாகலின், இவை எப்போதும் தோன்றிநிற்றல் வேண்டும் என்பார், 'எஞ்சாமை வேந்தற்கு இயல்பு' என்றார்.

# திருக்குறள்: 383 (தூங்காமை)

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும் // தூங்காமை கல்வி துணிவு உடைமை இம் மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு. (03) // // நீங்கா நிலன் ஆள்பவற்கு.

பரிமேலழகர் உரை

நிலன் ஆள்பவற்கு- நிலத்தினை ஆளும் திருவுடையாற்கு;

தூங்காமை கல்வி துணிவுடைமை இம் மூன்றும் நீங்கா- அக்காரியங்களில் விரைவுடைமையும், அவை அறிதற்கு ஏற்ற கல்வி உடைமையும், ஆண்மை உடைமையும் ஆகிய இம்மூன்று குணமும் ஒருகாலும் நீங்கா என்றவாறு.

பரிமேலழகர் விளக்கம்:

கல்வியது கூறுபாடு முன்னர்க் கூறப்படும். ஆண்மையாவது, ஒன்றனையும் பாராது கடிதிற் செய்வது ஆதலின் அஃது ஈண்டு உபசார வழக்கால் துணிவு எனப்பட்டது.உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இவற்றுள் கல்வி ஆறங்கத்திற்கும் உரித்து; ஏனைய வினைக்கு உரிய; 'நீங்கா' என்பதற்கு மேல் எஞ்சாமைக்கு உரைத்தாங்கு உரைக்க.

# திருக்குறள்: 384 (அறனிழுக்கா)

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா / / அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன் இழுக்கா
மான முடைய தரசு.(04) // // மானம் உடையது அரசு.

பரிமேலழகர் உரை:

அறன் இழுக்காது = தனக்கு ஓதிய அறத்தின் வழுவாது ஒழுகி;
அல்லவை நீக்கி = அறன் அல்லவை தன் நாட்டின் கண்ணும் நிகழாமல் கடிந்து;
மறன் இழுக்கா மானம் உடையது அரசு = வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினை உடையான் அரசன் என்றவாறு.

பரிமேலழகர் விளக்கம்:

அவ்வறமாவது, ஓதல் வேட்டல் ஈதல் என்னும் பொதுத்தொழிலினும், படைக்கலம் பயிறல், பல்லுயிர் ஓம்பல், பகைத்திறம் தெறுதல் என்னும் சிறப்புத்தொழிலினும் வழுவாது நிற்றல். "மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"(புறநானூறு- 55) என்பதனால், இவ்வறம் பொருட்குக் காரணமாதல் அறிக. அல்லவை, கொலை களவு முதலாயின. குற்றமாய மானத்தின் நீக்குதற்கு, 'மறன் இழுக்கா மானம்' என்றார். அஃதாவது,

"வீறின்மையின் விலங்காம்என மதவேழமும் எறியான்
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சில்என்(று) எறியான்
மாறன்மையின் மறம்வாடும்என்(று) இளையாரையும் எறியான்
ஆறன்மையின் முதியாரையும் எறியான்அயில் உழவன்" (சீவக சிந்தாமணி-2261) எனவும்,

"அழியுநர் புறக்கொடை அயில்வேல் ஓச்சான்"(புறப்பொருள் வெண்பா மாலை- 55) எனவும் சொல்லப்படுவது.
அரசு-அரசனது தன்மை; அஃது உபசாரவழக்கால் அவன்றன் மேல் நின்றது.

# திருக்குறள்: 385 (இயற்றலும்)

"இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த // "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு". (05) // // வகுத்தலும் வல்லது அரசு".

பரிமேலழகர் உரை:

இயற்றலும் = தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன்மேல் உளவாக்கலும்:

ஈட்டலும் = அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித் தொகுத்தலும்;
காத்தலும் = தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும்;
காத்த வகுத்தலும் = காத்தவற்றை அறம் பொருள் இன்பங்களின் பொருட்டு விடுத்தலும்;
வல்லது அரசு = வல்லவனே அரசன் என்றவாறு.

பரிமேலழகர் விளக்கம்:
ஈட்டல், காத்தல், வகுத்தல் என்றவற்றிற்கு ஏற்ப இயற்றல் என்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.
பொருள்களாவன: மணி, பொன், நெல் முதலாயின.
அவை வரும் வழிகளாவன: பகைவரை அழித்தலும், திறை கோடலும், தன் நாடு தலையளித்தலும் முதலாயின.
பிறர் என்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினாரை.
கடவுளர், அந்தணர், வறியோர் என்றிவர்க்கும், புகழிற்கும் கொடுத்தலை அறப்பொருட்டாகவும்,
யானை குதிரை படை நாடு அரண் என்று இவற்றிற்கும், பகையொடு கூடலின் பிரிக்கப்படுவார்க்கும், தன்னிற் பிரிதலின் கூட்டப்படுவார்க்கும் கொடுத்தலைப் பொருட் பொருட்டாகவும்,
மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா முதலிய செய்தற்கும், ஐம்புலன்களான் நுகர்வனவற்றிற்கும் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவும் கொள்க.

இயற்றல் முதலிய தவறாமற் செய்தல் அரிதாகலின், 'வல்லது' என்றார்.

இவை நான்கு பாட்டானும் மாட்சியே கூறப்பட்டது.

## திருக்குறள்: **386 (**காட்சிக்கெளியன்**)**

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல் // காட்சிக்கு எளியன் கடும் சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். (6) // // மீ கூறும் மன்னன் நிலம்.

பரிமேலழகர் உரை:

காட்சிக்கு எளியன்= முறைவேண்டினார்க்கும் குறைவேண்டினார்க்கும் காண்டற்கு எளியனாய்;
கடுஞ்சொல்லன் அல்லனேல்= யாவர்மாட்டும் கடுஞ்சொல்லன் அல்லனுமாயின்;
மன்னன் நிலம் மீக்கூறும்= அம்மன்னனது நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்த்துக்கூறும் 'உலகம்' என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

முறைவேண்டினார், வலியரால் நலிவெய்தினார்.

குறைவேண்டினார், வறுமையுற்று இரந்தார்.

காண்டற்கு எளிமையாவது, பேரத்தாணிக்கண் அந்தணர், சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல்.

கடுஞ்சொல், கேள்வியினும் வினையினும் கடியவாய சொல்.

நிலத்தை மீக்கூறும் எனவே, மன்னனை மீக்கூறுதல் சொல்லவேண்டாவாயிற்று.

மீக்கூறுதல், இவன் காக்கின்ற நாடு பசிபிணி பகை முதலிய இன்றி, யாவர்க்கும் பேரின்பம் தருதலின் தேவருலகினும் நன்று என்றல்.

'உலகம்' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

# திருக்குறள்: 387 (இன்சொலால்)

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்/ இன்சொலால் ஈத்துஅளிக்க வல்லாற்கு தன்சொலால்
றான்கண் டனைத்திவ் வுலகு. (07) // // தான் கண்டனைத்து இவ் உலகு.

பரிமேலழகர் உரை:

இன்சொலால் ஈத்து அளிக்க வல்லாற்கு= இனிய சொல்லுடனே ஈதலைச் செய்து அளிக்கவல்ல அரசனுக்கு;
இவ்வுலகு தன் சொலால் தான் கண்டனைத்து= இவ்வுலகம் தன் புகழோடு மேவித் தான் கருதிய அளவிற்றாம் என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

இன்சொல், கேள்வியினும் வினையினும் இனியவாய சொல்;

ஈதல், வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல்;

அளித்தல், தன் பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமல் காத்தல்;

இவை அரியவாகலின் 'வல்லாற்கு' என்றும், அவன் மண் முழுதும் ஆளுமாகலின் 'இவ்வுலகு' என்றும் கூறினார்.

கருதிய அளவிற்றாதல், கருதிய பொருள் எல்லாம் சுரத்தல்.

## திருக்குறள்: 388 (முறைசெய்து)

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட் // முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
கிறையென்று வைக்கப் படும். (08) // / / / / இறை என்று வைக்கப்படும்.

பரிமேலழகர் உரை:

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன்= தான் முறைசெய்து, பிறர் நலியாமல் காத்தலையும் செய்யும் அரசன்;
மக்கட்கு இறை என்று வைக்கப்படும்= பிறப்பான் மகனேயாயினும் செயலான் மக்கட்குக் கடவுள் என்று வேறு வைக்கப்படும் என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

முறை, அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறி.

பிறர், என்றது மேற் சொல்லியாரை.

வேறுவைத்தல், மக்களிற் பிரித்து உயர்த்து வைத்தல்.

## திருக்குறள்: 389 (செவிகைப்ப)

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்/ செவி கைப்ப சொல்பொறுக்கும்பண்புஉடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. (09) // // கவிகை கீழ் தங்கும் உலகு.

பரிமேலழகர் உரை:

சொல் செவி கைப்பப் பொறுக்கும் பண்பு உடை வேந்தன்= இடிக்கும் துணையாயினார் சொற்களைத் தன் செவி பொறாதாகவும், விளைவு நோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது;
கவிகைக் கீழ்த் தங்கும் உலகு= குடை நிழற்கண்ணே தங்கும் உலகம் என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

செவிகைப்ப என்பதற்கேற்ப இடிக்கும் துணையார் என்பது வருவிக்கப்பட்டது.

நாவின்புலத்தைச் செவிமேல் ஏற்றிக் கைப்ப என்றார்.

பண்புடைமை விசேட உணர்வினன் ஆதல்.

அறநீதிகளில் தவறாமையின் மண்முழுதும் தானே ஆளும் என்பதாம்.

## திருக்குறள்: 390 (கொடையளி)

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும் // // கொடை அளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி". (390) // / / உடையானாம் வேந்தர்க்கு ஒளி.

பரிமேலழகர் உரை:

கொடை= வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும்;
அளி= யாவர்க்கும் தலையளி செய்தலும்;
செங்கோல்= முறை செய்தலும்;
குடி ஓம்பல்= தளர்ந்த குடிகளைப் பேணலும் ஆகிய;
நான்கும் உடையான்= இந்நான்கு செயலையும் உடையவன்;
வேந்தர்க்கு ஒளியாம்= வேந்தர்க்கு எல்லாம் விளக்காம் என்றவாறு.

பரிமேலழகர் உரை விளக்கம்:

தலையளி, முகமலர்ந்து இனிய கூறல்.

செவ்விய கோல் போறலின் செங்கோல் எனப்பட்டது.

குடியோம்பல் என எடுத்துக் கூறினமையால் தளர்ச்சி பெற்றாம்; அஃதாவது, ஆறில் ஒன்றாய பொருள்தன்னையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளல் வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல் வேண்டின் இழத்தலுமாம்.
சாதி முழுதும் விளக்கலின், விளக்கு என்றார். ஒளி ஆகுபெயர்.

இவை ஐந்து பாட்டானும் மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன.

திருக்குறள் என்றழைக்கப்பெறும் முப்பால் நூலின், பொருட்பால் இறைமாட்சி அதிகாரமும், அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையும் முற்றுப்பெற்றன.

# பொருட்பால்

## 1.அரசியல்

## அதிகாரம் 40. கல்வி

அதிகார முன்னுரை

அஃதாவது, அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன அறநூலும், நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கலம் என்று இவற்றின் நூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனாயக்கால் தன்னுயிர்க்கே யன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் நோக்கி, இஃது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதிபயத்தல் சிறப்புடைமையின் பொதுப்படக் கூறுகின்றார். மேல் 'தூங்காமை கல்வி'[1] எனத்தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃது இறைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

1.குறள்- 383.

## குறள் 391 (கற்க)

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக (01)

கற்க கசடு அறக் கற்பவை கற்ற பின்
நிற்க அதற்குத் தக.

இதன்பொருள்

கற்பவை கசடறக் கற்க= ஒருவன் கற்கப்படு நூல்களைப் பழுதறக் கற்க; கற்றபின் அதற்குத் தக நிற்க= அங்ஙனங் கற்றால்அக்கல்விக்குத்தக அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்க.

விளக்கம்

'கற்பவை' என்றதனான், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் உணர்த்துவன அன்றிப் பிறபொருள் உணர்த்துவன சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு ஆகா என்பது பெற்றாம். 'கசடறக்கற்ற'லாவது, விபரீத ஐயங்களை நீக்கி, மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல். 'நிற்ற'லாவது இல்வாழ்வுழிக்
"கருமமும் உள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்"[1] தலினும், துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும் வழுவாமை.
சிறப்புடை மகற்காயிற் கற்றல்வேண்டும் என்பதூஉம், அவனாற் கற்கப்படு நூல்களும், அவற்றைக் கற்குமாறும், கற்றதனாற் பயனும் இதனாற் கூறப்பட்டன.

1.நாலடியார்-250.

# குறள் 392 (எண்ணென்ப)

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு (02)

எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும்
கண் என்ப வாழும் உயிர்க்கு.

இதன்பொருள்

எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும்= அறியாதார் எண்ணென்று சொல்லுவனவும் மற்றை எழுத்து என்று சொல்லுவனுமாகிய கலைகள் இரண்டினையும்; வாழும் உயிர்க்குக் கண் என்ப= அறிந்தார் சிறப்புடை உயிர்கட்குக் கண் என்று சொல்லுவர்

விளக்கம்

'எண்'ணென்பது கணிதம். அது கருவியுஞ் செய்கையும் என இருவகைப்படும். அவை ஏரம்ப முதலிய நூல்களுட் காண்க. 'எழுத்'தெனவே, அதனோடு ஒற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ்விருதிறமும், அறமுதற் பொருளைக் காண்டற்குக் கருவியாகலின் 'கண்'ணெனப்பட்டன. அவை கருவியாதல்,

"ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி
நீதி வழுவா நிலைமையவான்- மாதே
அறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்
திறமாமோ எண்ணிறந்தாற் செப்பு";
"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்- மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

இவற்றான் அறிக.

'என்ப' வென்பவற்றுள், முன்னைய இரண்டும் அஃறிணைப் பன்மைப் பெயர்; பின்னது உயர்திணைப் பன்மைவினை. 'அறியாதார்', 'அறிந்தார்' என்பன வருவிக்கப்பட்டன. 'சிறப்புடையுயிர்' என்றது, மக்கள் உயிருள்ளும் உணர்வு மிகுதி உடையதனை.

இதனால் கற்கப்படும் நூல்கட்குக் கருவியாவனவும் அவற்றது இன்றியமையாமையும் கூறப்பட்டன.

# குறள் 393 (கண்ணுடையர்)

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர் (03)

கண் உடையர் என்பவர் கற்றோர் முகத்து இரண்டு
புண் உடையர் கல்லாதவர்.

இதன்பொருள்

கண் உடையர் என்பவர் கற்றோர்= கண்ணுடையர் என்று உயர்த்துச் சொல்லப்படுவார் கற்றவரே; கல்லாதவர் முகத்து இரண்டு புண் உடையர்= மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையர், கண்ணிலர்.

விளக்கம்

தேயம் இடையிட்டவற்றையும் காலம் இடையிட்டவற்றையும் காணும் ஞானக்கண் உடைமையிற் கற்றாரைக் 'கண்ணுடையர்' என்றும், அஃதின்றி நோய் முதலியவற்றால் துன்பம் செய்யும் ஊனக்கண்ணே உடைமையின் கல்லாதவரைப் 'புண்ணுடையர்' என்றும் கூறினார். மேற் கண்ணன்மை உணரநின்ற

ஊனக்கண்ணின் மெய்ம்மை கூறியவாற்றான், பொருள்நூல்களையும் கருவிநூல்களையும் கற்றாரது உயர்வும் கல்லாரது இழிவும் இதனால் தொகுத்துக் கூறப்பட்டன.

# குறள் **394 (**உவப்பத்**)**

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில் (04)

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

இதன்பொருள்

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே= யாவரையும் அவர் உவக்குமாறு தலைப்பெய்து, இனி அவரை யாம் எங்ஙனங் கூடுதும் என நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்து; புலவர் தொழில்= கற்றறிந்தாரது தொழில்.

விளக்கம்

தாம் நல்வழி ஒழுகல், பிறர்க்கு உறுதிகூறல் என்பன இரண்டும் தொழில் என ஒன்றாய் அடங்குதலின், 'அத்தன்மைத்து' என்றார். 'அத்தன்மை', அப்பயனைத் தருந்தன்மை. நல்லொழுக்கம் காண்டலானும், தமக்கு மதுரமும் உறுதியுமாய கூற்றுக்கள் நிகர்வுஎதிர்வுகளின் இன்பம் பயத்தாலானும், கற்றார்மாட்டு எல்லாரும் அன்புடையராவர் என்பதாம்.

இதனால் கற்றாரது உயர்வு வகுத்துக் கூறப்பட்டது.

# குறள் **395 (**உடையார்முன்**)**

உடையார்முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர் (05)

உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லாதவர்.

இதன்பொருள்

உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்= "பிற்றைநிலைமுனியாது கற்றல் நன்று"[2] ஆதலான், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறு போலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்று நின்றும் கற்றார் தலையாயினார்; கல்லாதவர் கடையரே= அந்நிலைக்கு நாணிக் கல்லாதவர் எஞ்ஞான்றும் இழிந்தாரேயாவர்.

விளக்கம்

'உடையார்', 'இல்லார்' என்பன, உலகவழக்கு. 'ஏக்கறுதல்' ஆசையால் தாழ்தல். 'கடையர்' என்றதனான், அதன் மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது. பொய்யாய மானம் நோக்கி மெய்யாய கல்வியிழந்தார், பின்னொருஞான்றும் அறிவுடையர் ஆகாமையின், 'கடையரே' என்றார்.

இதனான் கற்றாரது உயர்வும், க்ல்லாரது இழிவும் கூறப்பட்டன.

2.புறநானூறு-183.

# குறள் **396 (**தொட்டனைத்**)**

தொட்டனைத்தூறும் மணற்கேணி மாந்தர்க்கு
கற்றனைத்தூறும் அறிவு **(06)**

தொட்ட அனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்
கற்ற அனைத்து ஊறும் அறிவு

இதன் பொருள்

தொட்ட அனைத்து ஊறும் = தோண்டிய அவ்வளவிற்கு சுரக்கும் (நீர்), மணற்கேணி மாந்தர்க்கு = மணல் கிணறு மக்களுக்கு,
கற்ற அனைத்து ஊறும் அறிவு = (அதுபோன்றே) கல்வி கற்ற அவ்வளவிற்கு சுரக்கும் அறிவு

அதாவது, "மணற்கேணி எவ்வளவுக்கெவ்வளவு தோண்டுகிறோமோ அவ்வளவிற்கு நீர் சுரப்பதுபோல, மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு கல்வி கற்க முயற்சி எடுக்கின்றனறோ அம்முயற்சிக்கேற்ப கல்வி அறிவும் சுரக்கும்" என்பதாக பெறப்படும்.

விளக்கம் (பரிமேலழகர் உரைப்படி)

மணற்கேணி தொட்ட அனைத்து ஊறும் - மணலின்கண் கேணி தோண்டிய அளவிற்றாக ஊறும், மாந்தற்கு அறிவு கற்றனைத்து ஊறும் - அதுபோல மக்கட்கு அறிவு கற்ற அளவிற்றாக ஊறும்.
(ஈண்டுக் 'கேணி' என்றது, அதற்கண் நீரை. 'அளவிற்றாக' என்றது, அதன் அளவும் செல்ல என்றவாறு. சிறிது கற்ற துணையான் அமையாது, மேன்மேல் கற்றல் வேண்டும் என்பதாம். இஃது ஊழ் மாறு கொள்ளாவழியாகலின், மேல் 'உண்மை அறிவே மிகும்' (குறள் .373) என்றதனோடு மலையாமை அறிக.)

(பரிமேலழகர் உரைக்கு நன்றி: குறள் திறன் வலைத்தளம்)

கல்லுதல் என்றால் தோண்டுதல் என்றும் கல்வி கற்றல் என்றும் பொருள்படும் தமிழினிமை இக்குறளில் பொதிந்தமையை காலிங்கர் எடுத்துரைக்கிறார்.

> மேன்மேலும் கல்வி கற்பதன் வாயிலாகவே அறிவு மாட்சிமை பெற இயலும் என்பதை உணர்த்துவது இக்குறளாகும்.

மேலும்

இங்கு குறிப்பாக "மணற்கேணி"யுடன் ஒப்பிட்டமைக்கு காரணம், மண் கேணியை போல் அல்லாமல் மணல் கேணி மணல் சரிந்தே தூர்ந்து போகும் தன்மை கொண்டது. அந்த தூரை மண்ட மண்ட வாரி நீக்கினால் மட்டுமே ஊறிய நீர் அந்த கேணியில் மிஞ்சும். அதுபோல அறிவு அழியாமல் நிலைத்து வளர கற்பது தொடர்ந்து நிகழ்ந்துகொண்டே இருக்கவேண்டும்.

# குறள் **397** **(**யாதானு**)**

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு (07)

> யாதானும் நாடு ஆமால் ஊர்ஆமால் என் ஒருவன்
> சாம் துணையும் கல்லாத ஆறு.

இதன்பொருள்

> யாதானும் நாடாம் ஊராம்= கற்றவனுக்குத் தன்நாடும் தன் ஊருமேஅன்றி, யாதானும் ஒருநாடும் நாடாம், யாதானும் ஓர் ஊரும் ஊராம்; ஒருவன் சாம்துணையும் கல்லாதவாறு என்=

இங்ஙனமாயின் ஒருவன் தான் இறக்கும் அளவும், கல்லாது கழிகின்றது என்கருதி?

விளக்கம்

உயிரோடு சேறலின் 'சாந்துணையும்' என்றார். பிறர் நாடுகளும் ஊர்களும் தமபோல உற்றுப் பொருட்கொடையும், பூசையும் உவந்து செய்தற்கு ஏதுவாகலின் கல்விபோலச் சிறந்தது பிறிதுஇல்லை, அதனையே எப்பொழுதும் செய்க என்பதாம்.

# குறள் 398 (ஒருமைக்கட்)

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து (08)

ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து.

இதன்பொருள்

ஒருவற்கு= ஒருவனுக்கு; தான் ஒருமைக்கண் கற்ற கல்வி= தான் ஒருபிறப்பின்கண் கற்ற கல்வி; எழுமையும் ஏமாப்பு உடைத்து= எழுபிறப்பினும் சென்று உதவுதலை உடைத்து.

விளக்கம்

வினைகள் போல உயிரின்கண் கிடந்து அது புக்குழிப் புகுமாகலின், எழுமையும் ஏமாப்புடைத்து என்றார். எழுமை மேலே கூறப்பட்டது.[3] உதவுதல் நன்னெறிக்கண் உய்த்தல்.

3. 62ஆம் குறளுரை.

# குறள் 399 (தாமின்புறவது)

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார் (09)

தாம் இன்பு உறுவது உலகு இன்புறக் கண்டு
காமுறுவர் கற்று அறிந்தார்.

இதன்பொருள்

தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு= தாம் இன்புறுவதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகம் இன்புறுதலால் அச்சிறப்பு நோக்கி; கற்றறிந்தார் காமுறுவர்= கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர்.

விளக்கம்

'தாம்இன்புறுத'லாவது, நிகழ்வின்கட் சொற்பொருள்களின் சுவைநுகர்வானும், புகழ் பொருள் பூசைபெறுதலானும், எதிர்வின்கண் அறம் வீடு பயத்தலானும், அதனான் இடையறாத இன்பம் எய்துதல். 'உலகுஇன்புறுத'லாவது, இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதன வெல்லாம் அறியப்பெற்றோம் என்றும், "யாண்டு பலவாக நரையில"[4]மாயினேம் என்று உவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தல் என்று இவற்றால் துன்புறுதலு◌ம், பலரையும் பகையாக்கலும் உடைத்தென அறிந்து, அதனைக் காமுறாமையிற் 'கற்றறிந்தார்' என்றும், கரும்பு அயிறற்குக் கூலிபோலத் தாம் இன்புறுவதற்கு, உலகுஇன்புறுதல் பிறவாற்றான் இன்மையின் அதனையே 'காமுறுவர்' என்றும் கூறினார்.

4.புறநானூறு-191.

# குறள் **400** **(**கேடில்விழுச்செல்வம்**)**

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை (10)

கேடு இல் விழுச் செல்வம் கல்வி ஒருவற்கு
மாடு அல்ல மற்றையவை.

இதன்பொருள்

ஒருவற்குக் கேடு இல் விழுச்செல்வம் கல்வி= ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வமாவது கல்வி; மற்றையவை மாடு அல்ல= அஃது ஒழிந்த மணியும் பொன்னும் முதலாயின செல்வம் அல்ல.

விளக்கம்

அழிவின்மையாவது[4] தாயத்தார் கள்வர் வலியர் அரசர் என்று இவராற் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை தக்கார்கண்ணே நிற்றல். மணி, பொன் முதலியவற்றிற்கு இவ்விரண்டும் இன்மையின், அவற்றை மாடல்ல என்றார்.

இவை ஐந்து பாட்டானும் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது.

நாலடியார்-134.

# திருக்குறள் பொருட்பால்

## **1.** அரசியல்

## அதிகாரம் **41.**கல்லாமை

அதிகார முன்னுரை

அஃதாவது, கற்றலைச் செய்யாமை. என்றது அதனினாய இழிபினை. கல்விச்சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறியதுணையான் முற்றுப்பெறாமை நோக்கி, எதிர்மறை முகத்தானுங் கூறுகின்றதாகலின் இது கல்வியின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **401 (**அரங்கின்றி**)**

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கோளல் (01)

அரங்கு இன்றி வட்டு ஆடி அற்றே நிரம்பிய
நூல் இன்றிக் கோட்டி கொளல்.

இதன்பொருள்

அரங்கு இன்றி வட்டு ஆடியயற்றே- அரங்கினையிழையாது வட்டாடினாற்போலும்;
நிரம்பிய நூலின்றிக் கோட்டி கொளல்= தான் நிரம்புதற்கு ஏதுவாகிய நூல்களைக் கல்லாது ஒருவன் அவையின்கண் ஒன்றினைச் சொல்லுதல்.

விளக்கம்

'அரங்கு' வகுத்த தானம். 'வட்டா'டல் உண்டையுருட்டல்.
இவை,

"கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்-
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்"[1]

-என்பதனான் அறிக. 'நிரம்பு'தல் அறியவேண்டுவன எல்லாம் அறிதல்.
'கோட்டி' என்பது ஈண்டு ஆகுபெயர்;

"புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி"[2]

-என்புழிப்போல. சொல்லும் பொருளும் நெறிப்படா என்பதாம்.

1. நற்றிணை-3.

2. நாலடியார்-155.

# குறள் **402 (**கல்லாதான்**)**

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு

மில்லாதாள் பெண்காமுற் றற்று (02)

> கல்லாதான் சொல் காமுறுதல் முலை இரண்டும்
> இல்லாதாள் பெண் காமுற்று அற்று.

இதன்பொருள்

கல்லாதான் சொல் காமுறுதல்= கல்வி இல்லாதான் ஒருவன் அவையின்கண் ஒன்று சொல்லுதலை அவாவுதல்;
முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்றற்று= இயல்பாகவே முலையிரண்டும் இல்லாதாள் ஒருத்தி பெண்மையை அவாவினாற் போலும்.

விளக்கம்

"இனைத்தென வறிந்த சினை"[3] யாகலின், தொகையொடு முற்றும்மை கொடுத்தார்; சிறிதும் இல்லாதாள் என்பதாம். அவாவியவழிக் கடைபோகாது, போகினும் நகை விளைக்கும் என்பதாயிற்று.

3. தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம்- 33.

# குறள் 403 (கல்லாதவரு)

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின் (03)

> கல்லாதவரும் நனி நல்லர் கற்றார் முன்
> சொல்லாது இருக்கப் பெறின்.

இதன்பொருள்

கல்லாதவரும் நனி நல்லர்= கல்லாதாரும் மிக நல்லர் ஆவர்;
கற்றார்முன் சொல்லாது இருக்கப்பெறின்= தாமே தம்மை அறிந்து, கற்றார் அவையின்கண் ஒன்றனையும் சொல்லாது இருத்தல் கூடுமாயின்.

விளக்கம்

உம்மை இழிவு சிறப்பும்மை. தம்மைத் தாம் அறியாமையின் அது கூடாது என்பார், 'பெறின்' என்றும், கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத்தாமையானும், பின் கல்வியை விரும்புவர் ஆகலானும், 'நனிநல்லர்' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும், கல்லாதார் அவைக்கட் சொல்லுதற்குரியர் அன்மை கூறப்பட்டது.

# குறள் **404** (கல்லாதான்)

கல்லாதா னொட்பங் கழிய நன்றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார் (04)

கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடையார்.

இதன்பொருள்

கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்= கல்லாதவனது ஒண்மை ஒரோவழி மிக நன்றாய் இருப்பினும்;
அறிவுடையார் கொள்ளார்= அறிவுடையார் அதனை ஒண்மையாகக் கொள்ளார்.

விளக்கம்

ஒண்மை= அறிவுடைமை. அது நன்றாகாது, ஆயிற்றாயினும் ஏரல் எழுத்துப்[4] போல்வதோர் விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடையார் அதனை மதியார் என்பதாம்.

4. ஏரல்= நத்தை. அது மணலில் செல்லும்போது தன்னையறியாமல் செய்யும் எழுத்து- வரி- வடிவம். நத்தை மணலில் செல்லும்போது 'அ' எனும் எழுத்துவடிவில் கீறல் விழுந்தால், அதனைப்பார்த்து 'நத்தை/அதாவது ஏரல்- 'அ' என்ற எழுத்தை எழுதிவிட்டது' என்று எவரும் கூறமாட்டார்கள்.

# குறள் 405 (கல்லாஒருவன்)

கல்லா வொருவன் றகைமை றலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும் (05)

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல் ஆடச் சோர்வு படும்.

இதன்பொருள்

கல்லா ஒருவன் தகைமை= நூல்களைக் கல்லாத ஒருவன் யான் அறிவுடையேன் எனத் தன்னை மதிக்கும் மதி ப்பு;
தலைப்பெய்து சொல்லாடச் சோர்வுபடும்= அவற்றைக் கற்றவன் கண்டு உரையாடக் கெடும்.

விளக்கம்

கற்றவன் என்பது வருவிக்கப்பட்டது. யாதானும் ஓர் வார்த்தை சொல்லுந் துணையுமே நிற்பது, சொல்லியவழி வழுப்படுதலின், அழிந்துவிடும் என்பதாம்.
இவை இரண்டுபாட்டானும் கல்லாரது இயற்கையறிவின் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **406 (**உளரென்னு**)**

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர் (06)

உளர் என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர் அனையர் கல்லாதவர்.

இதன்பொருள்

கல்லாதவர்= கல்லாதவர்;
உளர் என்னும் மாத்திரையர் அல்லால்= காணப்படுதலான் இலரல்லர் உளர் என்று சிலர் சொல்லும் அளவினர் ஆதலன்றி;
பயவாக் களர் அனையர்= தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் விளையாத களர்நிலத்தோடு ஒப்பர்.

விளக்கம்

களர் தானும் பேணர்பாடு அழிந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாதது போலத் தாமும் நன்கு மதிக்கற்பாடு அழிந்து, பிறர்க்கும் அறிவு முதலிய உதவார் என்பதாம்.
இதனால் கல்லாரது பயன்படாமை கூறப்பட்டது.

# குறள் **407 (**நுண்மாண்**)**

நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று (07)

நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்
மண் மாண் புனை பாவை அற்று.

இதன்பொருள்

நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்= நுண்ணிதாய் மாட்சிமைப்பட்டுப் பல நூல்களினும் சென்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும்;

மண் மாண் புனைபாவை அற்று= சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும் போலும்.

விளக்கம்

அறிவிற்கு மாட்சிமையாவது, பொருள்களைக் கடிதில் காண்டலும் மறவாமையும் முதலாயின. பாவை ஆகுபெயர்.

"உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலு மரிது"[5] ஆகலான் எழில் நலங்களும் ஒரு பயனே எனினும், நூலறிவில்வழிச் சிறப்பில என்பதாம்.

இதனான் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது.

5. சீவக சிந்தாமணி, முத்தியிலம்பகம்-154.

# குறள் **408 (**நல்லார்கட்**)**

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு (08)

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

இதன்பொருள்

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே= கற்றார்மாட்டு நின்ற வறுமையினும் இன்னாது;

கல்லார்கண் பட்ட திரு= கல்லாதார்மாட்டு நின்ற செல்வம்.

விளக்கம்

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தத்தம் நிலையினன்றி மாறி நிற்றலால் தாம் இடுக்கட் படுதலும், உலகிற்குத் துன்பம் செய்தலும் இரண்டிற்கும் ஒக்குமாயினும், திரு கல்லாரைக் கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலான், வறுமையினுந் திரு 'இன்னாது' என்றார்.

இதனால் அவர் திருவின் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **409** **(**மேற்பிறந்தாராயினும்**)**

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு (09)

மேல் பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப் பிறந்தும்
கற்றார் அனைத்து இலர் பாடு.

இதன்பொருள்

கல்லாதார் மேற்பிறந்தார் ஆயினும்= கல்லாதார் உயர்ந்த சாதிக்கண் பிறந்தாராயினும்;

கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்துப் பாடு இலர்= தாழ்ந்த சாதிக்கண் பிறந்துவைத்தும் கற்றாரது பெருமை அளவிற்றாய பெருமை இலர்.

விளக்கம்

உடலோடு ஒழியும் சாதி உயர்ச்சியினும் உயிரோடு செல்லும் கல்வி[6] உயர்ச்சி சிறப்புடைத்து என்பதாம்.

இதனால் அவர் சாதியுணர்ச்சியால் பயனின்மை கூறப்பட்டது.

6. குறள்-398.

# குறள் **410 (**விலங்கொடு**)**

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர் (10)

விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்
கற்றாரோடு ஏனையவர்.

இதன்பொருள்

விலங்கொடு மக்கள் அனையர்= விலங்கோடு நோக்க மக்களை எத்துணை நன்மையுடையார் அத்துணைத் தீமையுடையர்;
இலங்கு நூல் கற்றாரோடு ஏனையவர்= விளங்கிய நூலைக் கற்றாரோடு நோக்கக் கல்லாதவர்.

விளக்கம்

'விலங்கு', 'நூல்' சாதிப்பெயர். விளங்குதல்=மேம்படுதல். விலங்கின் மக்கட்கு ஏற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்றார் கண்ணே யாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பினர் அல்லர் என்பதாம். மயக்க நிரனிறை.
இதனால் அவர் மக்கட்பிறப்பாற் பயன் எய்தாமை கூறப்பட்டது.

கல்லாமை அதிகாரத்திற்குப் பரிமேலழகர் எழுதிய உரை முற்றுப்பெற்றது

# திருக்குறள் பொருட்பால்

## அரசியல் அதிகாரம் **42.** கேள்வி

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனினாய அறிவை வலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனை உண்டாக்குதலானும் இது கல்வி, கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **411 (**செல்வத்துட்**)**

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை (01)

செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.

இதன்பொருள்

செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்= ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான் வருஞ் செல்வம்;
அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை= அச்செல்வம் பிற செல்வங்கள் எல்லாவற்றினுந் தலையாகலான்.

விளக்கம்

செவியான் வருஞ் செல்வம் கேள்வியான் எல்லாப் பொருளையும் அறிதல். பிறசெல்வங்கள் பொருளான் வருவன. அவை நிலையாவாகலானும், துன்ப விளைவினவாகலானும், இது 'தலை'யாயிற்று. அவற்றை யொழித்து இதனையே செய்க என்புது குறிப்பெச்சம்.

# குறள் **412 (**செவிக்குணவு**)**

செவிக்குண வில்லாத போழ்து சிறிது செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும் **(02)** வயிற்றுக்கும் ஈயப் படும்

இதன்பொருள்

செவிக்கு உணவு இல்லாத போழ்து= செவிக்கு உணவாகிய கேள்வி இல்லாத பொழுது;
வயிற்றுககும் சிறிது ஈயப்படும்= வயிற்றுக்குஞ் சிறிது உணவு இடப்படும்.

விளக்கம்

சுவை மிகுதியும் பிற்பயத்தலுமுடைய கேள்வியுள்ளபொழுது வெறுக்கப்படுதலான் இல்லாத போழ்து என்றும், பெரிதாய வழித் தேடல் துன்பமேயன்றி நோயும் காமமும் பெருகுதலாற் சிறிது என்றும், அதுதானும் பின்னிருந்து கேட்டற் பொருட்டாகலான் ஈயப்படும் என்றும் கூறினார். ஈதல் வயிற்றது இழிவு தோன்ற நின்றது.

இவை யிரண்டு பாட்டானும் கேள்வியது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **413** (செவியுணவிற்)

செவியுணவிற் கேள்வி யுடையாரவியுணவி செவியுணவின் கேள்வி உடையார் அவி உணவின்
னான்றாரோ டொப்பர் நிலத்து **(03)**
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து.

இதன்பொருள்

செவி உணவின் கேள்வி உடையார்= செவி உணவாகிய கேள்வியனை உடையார்;

நிலத்து அவி உணவின் ஆன்றாரோடு ஒப்பர்= நிலத்தின்கண்ணராயினும் அவி உணவினை யுடைய தேவரோடு ஒப்பர்.

விளக்கம்

'செவியுணவு' செவியால் உண்ணும் உணவு. அல்வழிக்கண் வந்த இன்சாரியையது னகரம் வலிந்து நின்றது. அவியாகிய உணவு தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுப்பன. அறிவான் நிறைந்தமையான் 'ஆன்றார்' என்றும், துன்பம் அறியாமையால்

'தேவரோடொப்பர்' என்றும் கூறினார்.
இதனால் அதனை உடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **414 (**கற்றிலனாயினுங்**)**

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற் கற்றிலன் ஆயினும் கேட்க அஃது ஒருவற்கு
கொற்கத்தி னூற்றாந் துணை **(04)** ஒற்கத்தின் ஊற்றாம் துணை.

இதன்பொருள்

கற்றிலன் ஆயினும் கேட்க= உறுதி நூல்களைத் தான் கற்றிலன் ஆயினும்**,** அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்க**;**

அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை= அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி வந்துழிப் பற்றுக்கோடாந் துணையாகலான்.

விளக்கம்

உம்மை கற்கவேண்டும் என்பதுபட நின்றது. 'தளர்ச்சி' வறுமையானாதல் அறிவின்மையானாதல் இடுக்கட்பட்டுழி மனந் தளர்தல். அதனைக்கேள்வியானாய அறிவு நீக்குமாகலின்**,** 'ஊற்றாந் துணை' என்றார். ஊன்று என்னும் ஆகுபெயரின் னகரம் திரிந்து நின்றது.

# குறள் **415 (**இழுக்கலுடையுழி**)**

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே இழுக்கல் உடையுழி ஊற்றுக் கோல் அற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல் **(05)** ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல்.

இதன்பொருள்

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே= வழுக்குதலையுடைய சேற்றுநிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல் போல் உதவும்;
ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்= காவற் சாகாடு உகைப்பார்க்கு ஒழுக்கமுடையார் வாயிற்சொற்கள்.

விளக்கம்

அவாய்நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப்பட்டது. ஊற்றாகிய கோல்போல் உதவுதல் தளர்ந்துழி அதனை நீக்குதல். கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின் அவர் வாய்ச்சொல் கேட்கப்படாதென்பது தோன்ற 'ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்' என்றார். 'வாய்' என்பது தீச்சொல் அறியாமையாகிய சிறப்புணரநின்றது. அவற்றைக்கேட்க எனபது குறிப்பெச்சம்.

# குறள் **416 (**எனைத்தானு**)**

எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
மான்ற பெருமை தரும் **(06)** ஆன்ற பெருமை தரும்.

இதன்பொருள்

எனைத்தானும் நல்லவை கேட்க= ஒருவன் சிறிதாயினும் உறுதிப்பொருள்களைக் கேட்க;
அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்= அக்கேள்வி அத்துணையாயினும் நிறைந்த பெருமையை தரும் ஆகலான்.

விளக்கம்

'எனைத்து', 'அனைத்து' என்பன, கேட்கும் பொருண்மேலும் காலத்தின்மேலும் நின்றன. அக்கேள்வி மழைத்துளிபோல வந்து ஈண்டி எல்லா அறிவுகளையும் உளவாக்கலின், சிறிது என்று இகழற்க என்பதாம்.

# குறள் **417 (**பிழைத்துணர்ந்தும்**)**

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா
ரிழைத்துணர்ந் பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்து உணர்ந்து
தீண்டிய கேள்வி யவர் **(07)**
ஈண்டிய கேள்வியவர்.

இதன்பொருள்

பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார்= பிறழ உணர்ந்தவழியும் தமக்குப் பேதைமை பயக்கும் சொற்களைச் சொல்லார்;
இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வியவர்= பொருள்களைத் தாமும் நுண்ணிதாக ஆராய்ந்து அறிந்து அதன்மேலும் ஈணடிய கேள்வியினை யுடையார்.

விளக்கம்

'பிழைப்ப' என்பது திரிந்துநின்றது. 'பேதைமை' ஆகுபெயர். 'ஈண்டுதல்' பலவாற்றான் வந்து நிறைதல். பொருள்களின் மெய்ம்மையத் தாமும் அறிந்து அறிந்தாரோடு ஒப்பிப்பதும் செய்தார் தாமதகுணத்தான் மயங்கினாராயினும், அவ்வாறல்லது சொல்லார் என்பதாம்.

இவை நான்கு பாட்டானும் கேட்டார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

# குறள் **418** (கேட்பினுங் கேளாத்)

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற் கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
றோட்கப் படாத செவி **(08)** தோட்கப் படாத செவி.

இதன்பொருள்

கேட்பினும் கேளாத் தகையவே= தம் புலமாய ஓசை மாத்திரத்தைக் கேட்குமாயினும் செவிடாம் தன்மையவேயாம்;
கேள்வியால் தோட்கப்படாத செவி= கேள்வியால் துளைக்கப்படாத செவிகள்.

விளக்கம்

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஓசை மாத்திரத்தான் உறுதி எய்தாமையிற் 'கேளாத் தகைய' என்றும், மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலிற் கேள்வியைக் கருவியாக்கியும் கூறினார். பழைய துளை துளையன்று என்பதாம்.

# குறள் **419 (**நுணங்கியகேள்விய**)**

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயின ராத லரிது **(09)** வாயினர் ஆதல் அரிது.

இதன்பொருள்

நுணங்கிய கேள்வியர் அல்லார்= நுண்ணிதாகிய கேள்வியுடையர் அல்லாதார்**;**
வணங்கிய வாயினர் ஆதல் அரிது= பணிந்த மொழியினை உடையராதல் கூடாது.

விளக்கம்

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேல் ஏற்றப்பட்டது. 'வாய்' ஆகுபெயர். பணிந்தமொழி பணிவைப்புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர்வின்மையால் தம்மை வியந்து கூறுவர் என்பதாம். அல்லால் என்பதூஉம் பாடம்.

# குறள் **420 (**செவியிற்சுவை**)**

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க செவியின் சுவை உணரா மாக்கள்
ளவியினும் வாழினு மென் **(10)**
அவியினும் வாழினும் என்.

இதன்பொருள்

செவியிற் சுவை உணரா வாய் உணர்வின் மாக்கள்= செவியான்

நுகரப்படும் சுவைகளை உணராத வாயுணர்வினையுடைய மாந்தர்;

அவியினும் வாழினும் என்= சாவினும் வாழினும் உலகிற்கு வருவுது என்னை?

விளக்கம்

செவியான் நுகரப்படும் சுவைகளாவன: சொற்சுவையு ்ம பொருட்சுவையும். அவற்றுட் சொற்சுவை குணம், அலங்காரமென இருவகைத்து.பொருட்சுவை காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தம் என ஒன்பது வகைத்து. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். 'வாயுணர்வு' என்பது இடைப்பதங்கள் தொக்குநின்ற மூன்றாம் வேற்றுமைத்தொகை; அது வாயான் நுகரப்படும் சுவைகளை உணரும் உணர்வென விரியும். அவை கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என ஆறாம். செத்தால் இழப்பதும், வாழ்ந்தாற் பெறுவதும் இன்மையின் இரண்டும் ஒக்கும் என்பதாம். வாயுணவின் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் கேளாதவழிப்படும் குற்றம் கூறப்பட்டது.

கேள்வி அதிகாரப் பரிமேலழகர் உரை முற்றும்

# பொருட்பால்- அரசியல்- அதிகாரம் **43.** அறிவுடைமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, கல்வி கேள்விகளினாய அறிவோடு உண்மை அறிவுடையனாதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **421 (**அறிவற்றங்**)**

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு அறிவு அற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
முள்ளழிக்க லாகா வரண் **(04)** உள் அழிக்கல் ஆகா அரண்.

இதன்பொருள்

அறிவு அற்றங் காக்கும் கருவி= அரசர்க்கு அறிவென்பது இறுதிவாராமற் காக்கும் கருவியாம்;

செறுவார்க்கும் அழிக்கலாகா உள் அரணும் ஆம்= அதுவேயுமன்றிப் பகைவர்க்கு அழிக்காலாகாத உள்அரணுமாம்.

விளக்கம்

காத்தல் முன்னறிந்து பரிகரிததல். உள்ளரண் உள்ளாய அரண்; உள்புக்கு அழிக்கலாகா அரண் என்றுமாம்.

இதனான் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது.

## குறள் **422** (**சென்றவிடத்தாற்**)

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ சென்ற இடத்தால் செல விடா தீது ஒரீஇ

நன்றின்பா லுய்ப்ப தறிவு **(02)** நன்றின் பால் உய்ப்பது அறிவு.

இதன்பொருள்**:** சென்ற இடத்தால் செல விடா= மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது;

தீது ஒரீஇ நன்றின் பால் உய்ப்பது அறிவு= அப்புலத்தின் நன்மைதீமைகளை ஆராய்ந்து தீயதனின் நீக்கி நல்லதன்கட் செலுத்துவது அறிவு.

விளக்கம்**:** வினைக்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனப்புலம் ஐந்தாயினும், ஒரு காலத்து ஒன்றின்கணல்லது செல்லாமையின், 'இடத்தால்' என்றார். 'விடாது' என்பது கடைக்குறைந்து நின்றது. குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல வேறாக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது 'அறிவு' என்றார், அஃது உயிர்க்குணம்ஆகலின்.

## குறள் 423 (எப்பொருள்யார்)

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண் எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண் பதறிவு**(03)**
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

இதன்பொருள்**:**

எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும்= யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும்;
அப்பொருள் மெய்ப்பொரு்ள் காண்பது அறிவு= அப்பொருளின் மெய்யாய பயனைக் காணவல்லது அறிவு.

விளக்கம்**:**

குணங்கண் மூன்றும் மாறி மாறி வருதல் யார்க்கும் உண்மையின், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும், உறுதிப்பொருள் பகைவர் வாயினும், கெடுபொருள் நட்டார் வாயினும் ஒரோவழிக் கேட்கப்படுதலான், 'எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும்' என்றார். அடு்க்குப் பன்மை பற்றி வந்தது. 'வாய்' என்பது, அவர் அப்பொருளின்கட் பயிலாமை உணரநின்றது. மெய்யாதல்- நிலைபெறுதல். சொல்வாரது இயல்பு நோக்காது, அப்பொருளின் பயன்நோக்கிக் கொள்ளுதல் ஒழிதல் செய்வது அறிவு என்பதாம்.

## குறள் 424 (எண்பொருளவாக)

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய் எண் பொருளவாகச் செலச் சொல்லித் தான் பிறர் வாய்
நுண்பொருள் காண்ப தறிவு **(04)**
நுண் பொருள் காண்பது அறிவு.

இதன்பொருள்:
தான் எண் பொருளவாகச் செலச் சொல்லி= தான் சொல்லும் சொற்களை அரிய பொருளவாயினும் கேட்பார்க்கு எளிய பொருளவாமாறு சொல்லி;
பிறர் வாய் நுண்பொருள் காண்பது அறிவு= பிறர் வாய்க் கேட்கும் சொற்களின் நுண்ணிய பொருள் காண அரிதாயினும், அதனைக் காண வல்லது அறிவு.

விளக்கம்
உடையவன் தொழில் அறிவின்மேல் ஏற்றப்பட்டது. சொல்வன வழுவின்றி இனிது விளங்கச் சொல்லுக என்பார் சொன்மேல் வைத்தும், கேட்பன வழுவினும் இனிது விளங்கா வாயினும் பயனைக் கொண்டொழிக என்பார் பொருண்மேல் வைத்தும் கூறினார்.

## குறள் **425** (உலகந்தழீஇய)

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங் உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலு மில்ல தறிவு **(05)** கூம்பலும் இல்லது அறிவு.

இதன்பொருள்:

உலகம் தழீஇயது ஒட்பம்= உலகத்தை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்;
மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு= அந்நட்பின்கண் முன் மலர்தலும், பின் கூம்புதலும் இன்றி ஒருநிலையனாவது அறிவாம்.

விளக்கம்:
'தழீஇயது', 'இல்லது' என்பன அவ்வத் தொழின்மேல் நின்றன. உலகம் என்பது ஈண்டு உயர்ந்தோரை. அவரோடு கயப்பூப் போல வேறுபடாது, கோட்டுப்பூப் போல ஒரு நிலையே நட்பாயினான், எல்லாவின்பமும் எய்தும் ஆகலின், அதனை 'அறிவு' என்றார். காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன. இதனைச் செல்வத்தின் மலர்தலும், நல்குரவிற் கூம்பலும் இல்லதென்று உரைப்பாரும் உளர்.

## குறள் **426** **(**எவ்வதுறைவது**)**

எவ்வ துறைவ துலக முலகத்தோ எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
டவ்வ துறைவ தறிவு **(06)** அவ்வது உறைவது அறிவு.

இதன்பொருள்:
உலகம் எவ்வது உறைவது= உலகம் யாதொருவாற்றான் ஒழுகுவதாயிற்று;
உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு= அவ்வுலகத்தோடு மேவித் தானும் அவ்வாற்றான் ஒழுகுவது அரசனுக்கு அறிவு.

விளக்கம்
உலகத்தை எல்லாம் யான் நியமித்தலான் என்னை நியமிப்பார் இல்லையெனக் கருதித் தான் நினைந்தவாறே ஒழுகிற் பாவமும் பழியும் ஆகலான், அவ்வாறு ஒழுகுதல் அறிவன்று என விலக்கியவாறாயிற்று.
இவை ஐந்து பாட்டானும் அதனது இலக்கணம் கூறப்பட்டது.

## குறள் **427** (அறிவுடையாராவ)

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா அறிவு உடையார் ஆவது அறிவார் அறிவிலார்
ரஃதறி கல்லா தவர் **(07)** அஃது அறிகல்லாதவர்.

இதன்பொருள்**:**
அறிவுடையார் ஆவது அறிவார்= அறிவுடையராவார் வரக்கடவதனை முன் அறியவல்லார்;
அறிவிலார் அஃது அறிகல்லாதவர்= அறிவிலராவார் அதனை முன்னறிய மாட்டாதார்.

விளக்கம்**:**
'முன்னறிதல்' முன்னே எண்ணியறிதல். 'அஃதறிகல்லாமை'யாவது வந்தாலறிதல். இனி, 'ஆவதறிவார்' என்பதற்குத் தமக்கு நன்மையறிவார் என்று உரைப்பாருமுளர்.

## குறள் **428** (அஞ்சுவது)

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
தஞ்ச லறிவார் தொழில் **(08)** அஞ்சல் அறிவார் தொழில்.

இதன்பொருள்:
அஞ்சுவது அஞ்சாமை பேதைமை- அஞ்சப்படுவதனை அஞ்சாமை பேதைமையாம்; அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்- அவ்வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார் தொழிலாம்.

விளக்கம்:
பாவமும் பழியும் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதிபற்றி 'அஞ்சுவது' என்றார். 'அஞ்சாமை', எண்ணாது செய்து நிற்றல். 'அஞ்சுதல்' எண்ணி◌த் தவிர்தல். அதுகாரியமன்று என்று இகழப்படாதென்பார் 'அறிவார் தொழில்'[1] என்றார். அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டு அஞ்சவேண்டும்இடம் கூறியவாறு.
இவை இரண்டு பாட்டானும் அதனை உடையாரது இலக்கணம் கூறப்பட்டது.

1.குறள், 382..

## குறள் **429** (எதிரதாக்)

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை

யதிர வருவதோர் நோய் **(09)** அதிர வருவது ஓர் நோய்.

இதன்பொருள்:
எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு= வரக்கடவதாகிய அதனை முன் அறிந்து காக்கவல்ல அறிவினை உடையார்க்கு;
அதிரவருவது ஓர் நோய்- அவர் நடுங்க வருவதொரு துன்பமும் இல்லை.

விளக்கம்:
'நோய்' என வருகின்றமையின், வாளா 'எதிரதா' என்றார். இதனால் காக்கலாம் காலம் உணர்த்தப்பட்டது. 'காத்தல்' அதன் காரணத்தை விலக்குதல். அவர்க்குத் துன்பமின்மை இதனால் கூறப்பட்டது.

## குறள் **430** (அறிவுடையார்)

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா அறிவு உடையார் எல்லாம் உடையார்
ரென்னுடைய ரேனு மிலர் **(10).** அறிவு இலார் என் உடையரேனும் இலர்.

இதன்பொருள்:
அறிவுடையார் எல்லாம் உடையார்- அறிவுடையார் பிறிதொன்றும் இலராயினும், எல்லாம் உடையராவார்;
அறிவிலார் என்னுடையரேனும் இலர்= அறிவிலாதார் எல்லாம் உடையராயினும், ஒன்றும் இலராவார்.

விளக்கம்:

எல்லாம் அறிவாற் படைக்கவும், காக்கவும்படுதலின் அஃதுடையாரை 'எல்லாம் உடையார்' என்றும், அவையெல்லாம் முன்னே அமைந்து கிடப்பினும் அழியாமற் காத்தற்குந் தெய்வத்தான் அழிவுவந்துழிப் படைத்தற்குங் கருவியுடையர் அன்மையின் அஃது இல்லாதாரை 'என்னுடையரேனும் இலர்' என்றும் கூறினார். என்னும் என்புழி உம்மை விகாரத்தால் தொக்கது.

இதனான் அவரது உடைமையும், ஏனையாரது இன்மையும் செல்வங்கள் கூறப்பட்டன.

# பொருட்பால் அரசியல்- அதிகாரம் **44.**குற்றம் கடிதல்

## பரிமேலழகர் உரை

அதிகாரமுன்னுரை**:**

அஃதாவது**,** காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் மானம் உவகை மதன் என்னப்பட்ட குற்றங்கள் ஆறனையும் அரசன் தன்கண்நிகழாமற் கடிதல். இவற்றை வடநூலார் பகை வர்க்கம் என்ப. இவை குற்றம் என்றுஅறிதலும்**,** கடிதலும் அறிவுடையார்க்கல்லது கூடாமையின்**,** அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **431 (**செருக்கும்**)**

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார் செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து **(01)** பெருக்கம் பெருமித நீர்த்து.

இதன்பொருள்**:**செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம்= மதமும் வெகுளியும் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம்;
பெருமித நீர்த்து= மேம்பாட்டு நீர்மையினை உடைத்து.

விளக்கம்**:** மதம் செல்வக்களிப்பு. சிறியோர் செயலாகலின் அளவிறந்த காமம் சிறுமை எனப்பட்டது. இவை நீதியல்லன செய்வித்தலான், இவற்றைக் கடிந்தார் செல்வம் நல்வழிப்பாடும், நிலைபேறுமுடைமையின் மதிப்புடைத்து என்பதாம். மிகுதிபற்றி இவை முற்கூறப்பட்டன.

## குறள் **432 (**இவறலு மாண்பிறந்த**)**

இவறலு மாண்பிறந்த மானமு மாணா இவறலும் மாண்பு இறந்த மானமும் மாணா
வுவகையு மேத மிறைக்கு **(02)** உவகையு ம் ஏதம் இறைக்கு.

இதன்பொருள்**:** இவறலும்= வேண்டும்வழிப் பொருள் கொடாமையும்; மாண்பு இறந்த மானமும்= நன்மையின் நீங்கிய மானமும்; மாணா உவகையும்= அளவிறந்த உவகையும்; இறைக்கு ஏதம்= அரசனுக்குக் குற்றம்.

விளக்கம்**:** மாட்சியான மானத்தின் நீக்குதற்கு 'மாண்பிறந்த மானம்' என்றார். அஃதாவது, "அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தாய் என்றிவ"[1]ரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. அளவிறந்த உவகையாவது

கழிகண்ணோட்டம்; பிறரும் "சினனே காமங் கழிகண்ணோட்டம்" என்று இவற்றை "அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும் தீது"[2] என்றார்.

இவை யிரண்டு பாட்டானும் குற்றங்களாவன இவையென்பது கூறப்பட்டது.

**1.**புறப்பொருள் வெண்பா மாலை, பாடாண்-**33.**
**2.**பதிற்றுப்பத்து-**22.**

## குறள் 433 (தினைத்துணையாங்)

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
தினைத் துணையாம் குற்றம் வரினும் பனைத் துணையாக்
கொள்வர் பழிநாணு வார் **(03)**
கொள்வர் பழி நாணுவார்.

இதன்பொருள்**:** பழி நாணுவார்= பழியை அஞ்சுவார்; தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத் துணையாக் கொள்வர்= தங்கண் திணையளவாம் குற்றம் வந்ததாயினும் அதனை அவ்வளவாகவன்றிப் பனையின் அளவாகக் கொள்வர்.

விளக்கம்**:** 'குற்றம்' சாதிப்பெயர். தமக்கு ஏலாமையிற் சிறிதென்று பொறார்; பெரிதாகக் கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமற் காப்பர் என்பதாம்.

## குறள் 434 (குற்றமே)

குற்றமே காக்க பொருளாக் குற்றமே குற்றமே காக்க பொருளாக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை அற்றம் தரூஉம் பகை.

இதன்பொருள்: அற்றம் தரூஉம் பகை குற்றமே= தனக்கு இறுதி பயக்கும் பகை குற்றமே; குற்றமே பொருளாக் காக்க= ஆகலான், அக்குற்றம் தன்கண் வராமையே பயனாகக் கொண்டு காக்க வேண்டும்.

விளக்கம்: இவைபற்றியல்லது, பகைவர் அற்றம் தாராமையின் இவையே பகையாவனவென்னும் வடநூலார் மதம் பற்றிக் 'குற்றமே யற்றந் தரூஉம் பகை' என்றும், இவற்றது இன்மையே குணங்களது உண்மையாகக் கொண்டென்பார் 'பொருளாக' என்றும் கூறினார். 'குற்றமே காக்க' என்பது, "அரும்பண்பினால் தீமை காக்க" என்பதுபோல நின்றது.

## குறள் **435** (வருமுன்னர்க்)

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர் வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை எரி முன்னர்
வைத்தூறு போலக் கெடும் **(05)** வைத் தூறு போலக் கெடும்.

இதன்பொருள்:
வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை= குற்றம் வரக் கடவதாகின்ற முற்காலத்திலே அதனைக் காவாத அரசன் வாழ்க்கை; எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்= அது வந்தால் எரி முகத்து நின்ற வைக்குவை போல அழிந்துவிடும்.

விளக்கம்:
'குற்றம்' என்பது அதிகாரத்தான் வந்தது. 'முன்னர்' என்றதன் ஈற்றது பகுதிப்பொருள் விகுதி. 'வரும்' என்னும் பெயரெச்சம் 'முன்னர்' என்னும் காலப்பெயர் கொண்டது; அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றம் சிறிதாயினும் அதனாற் பெரிய செல்வம் அழிந்தே விடும் என்பது உவமையாற் பெற்றாம்.

## குறள் **436 (**தன்குற்ற**)**

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி தன் குற்றம் நீங்கிப் பிறர் குற்றம் காண்கில் பின்
னென்குற்ற மாகு மிறைக்கு **(06)** என் குற்றம் ஆகும் இறைக்கு.

இதன்பொருள்:
தன் குற்றம் நீங்கிப் பிறர் குற்றம் காண்கிற் பின்= முன்னர்த் தன் குற்றத்தைக் கண்டு கடிந்து பின்னர்ப் பிறர் குற்றம் காணவல்லனாயின்; இறைக்கு ஆகும் குற்றம் என்= அரசனுக்கு ஆகக்கடவ குற்றம் யாது?

விளக்கம்:
அரசனுக்குத் தன் குற்றம் கடியாவழியே பிறர் குற்றம் கடிதல் குற்றமாவது; கடிந்தவழி முறை செய்தலாம் என்பார், 'என் குற்றமாகும்' என்றார்; எனவே, தன் குற்றங் கடிந்தவனே முறைசெய்தற்குரியவன் என்பதாயிற்று.
இவை நான்கு பாட்டானும் அவற்றது கடிதற்பாடு பொதுவகையால் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

# குறள் **437** **(**செயற்பால**)**

செயற்பால செய்யா திவறியான் செல்வ செயல் பால செய்யாது இவறியான் செல்வம்
முயற்பால தன்றிக் கெடும் **(07)** உயற்பாலது அன்றிக் கெடும்.

இதன்பொருள்:
செயற்பால செய்யாது இவறியான் செல்வம்= பொருளால் தனக்குச் செய்துகொள்ளப்படுமவற்றைச் செய்துகொள்ளாது அதன்கட் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம்; உயற்பாலதன்றிக் கெடும்= பின் உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும்.

விளக்கம்:
'செயற்பால'வாவன: அறம் பொருள் இன்பங்கள். பொருளாற் பொருள் செயதலாவது- பெருக்குதல்;

அது,

"பொன்னி னாகும் பொருபடை யப்படை-
தன்னி னாகுந் தரணி தரணியிற்-
பின்னை யாகும் பெரும்பொருள் அப்பொருள்
துன்னுங் காலைத் துன்னாதன இல்லையே"[3] என்பதனான் அறிக. அறம் செய்யாமையானும், பொருள் பெருக்காமையானும் 'உயற்பாலதன்றி' யென்றும், இன்பப் பயன் கொள்ளாமையிற் 'கெடும்' என்றும் கூறினார். 'உயற்பாலதின்றி' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

## குறள் **438 (**பற்றுள்ளமென்னும்**)**

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு பற்று உள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
மெண்ணப் படுவதொன் றன்று **(438)** எண்ணப் படுவது ஒன்று அன்று.

இதன்பொருள்**:**
பற்றுள்ளம் என்னும் இவறன்மை= பொருளைவிடத் தகுமிடத்து விடாது பற்றுதலைச் செய்யும் உள்ளமாகிய உலோபத்தினது தன்மை; எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று= குற்றத்தன்மைகள் எல்லாவற்றுள்ளும் வைத்து எண்ணப்படுவது ஒன்றன்று, மிக்கது.

விளக்கம்**:**
இவறலது தன்மையாவது, குணங்களெல்லாம் ஒருங்கு உளவாயினும் அவற்றைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்படவல்ல இயல்பு; ஒழிந்தன அதுமாட்டாமையின், 'எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்றன்று' என்றார். எவற்றுள்ளும் என்பது இடைக்குறைந்து நின்றது.
இவை இரண்டு பாட்டானும் உலோபத்தின் தீமை கூறப்பட்டது.

## குறள் **439 (**வியவற்க**)**

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை **(09)** நன்றி பயவா வினை.

இதன்பொருள்: எஞ்ஞான்றும் தன்னை வியவற்க= தான் இறப்ப உயர்ந்த ஞான்றும் மதத்தால் தன்னை நன்கு மதியாது ஒழிக; நன்றி பயவா வினை நயவற்க= தனக்கு நன்மை பயவா வினைகளை மானத்தால் விரும்பாது ஒழிக.

விளக்கம்:
தன்னை வியந்துழி இடமும் காலமும் வலியும் அறியப்படாமையானும், அறனும் பொருளும் இகழப்படுதலானும், 'எஞ்ஞான்றும் வியவற்க' என்றும், கருதியது முடித்தேவிடுவல் என்று அறம் பொருள் இன்பங்கள் பயவா வினைகளை நயப்பின் அவற்றாற் பாவமும் பழியும் கேடும் வருமாகலின், அவற்றை 'நயவற்க' என்றும் கூறினார்.
இதனான் மத, மானங்களின் தீமை கூறப்பட்டது.

## குறள் **440 (**காதலகாதல்**)**

காதல காத லறியாமை யுய்க்கிற்பின் காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
னேதில வேதிலார் நூல் **(10)** ஏதில ஏதிலார் நூல்.

இதன்பொருள்: காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்= தான காதலித்த பொருள்களை அவர் அக்காதலறியாமல் அனுபவிக்கவல்லனாயின்; ஏதிலார் நூல் ஏதில= பகைவர் தன்னை வஞ்சித்தற்கு எண்ணும் எண்ணம் பழுதாம்.

விளக்கம்:
அறிந்தவழி அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பாராகலின், அறியாமல் உய்த்தால் வாயில் இன்மையின் வஞ்சிக்கப்படான்

என்பதாம். காமம் வெகுளி, உவகை என்பன முற்றக் கடியும் குற்றம் அன்மையின், இதனாற் பெரும்பான்மைத்தாகிய காமம் நுகருமாறு கூறி, ஏனைச் சிறுபான்மையவற்றிற்குப் பொதுவகை விலக்கினையே கொண்டொழிந்தார்.

# பொருட்பால் அரசியல்- அதிகாரம் 45.பெரியாரைத்துணைக்கோடல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, மூவிரு குற்றமும் முறைமையிற் கடிதலிற் காவற் சாகாடு உகைத்தற்கு உரியனாய அரசன், தீநெறி விலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். பேரறிவுடையராவார், அரசர்கட்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர்.

# குறள் 441 (அறனறிந்து மூத்த)

அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மைஅறன் அறிந்து மூத்த அறிவு உடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல் **(01)**திறன் அறிந்து தேர்ந்து கொளல்.

இதன்பொருள்: அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை= அறத்தினது நுண்மையை அறிந்து தன்னின் மூத்த

அறிவுடையாரது கேண்மையை;
தேர்ந்து திறன் அறிந்து கொளல்= அரசன் அதனது அருமையை ஓர்ந்து, கொள்ளும் திறமறிந்து கொள்க.

விளக்கம்:
அறநுண்மை நூலானே அன்றி உய்த்துணர்வானும் அறியவேண்டுதலின், 'அறனறிந்து' என்றார். மூத்தல்' அறிவானும், சீலத்தானும், காலத்தானும் முதிர்தல். 'அறிவுடையார்' நீதியையும், உலகியலையும் அறிதலை உடையார். 'திறனறி'தலாவது, நன்கு மதித்தல், உயரச்செய்தல், அவர்வரைநிற்றல் என்பன முதலாக அவர் பிணிப்புண்ணும் திறனறிந்து செய்தல்.

# குறள் 442 (உற்றநோய்)

உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்உற்ற நோய் நீக்கி உறாஅமை முன் காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல் **(02)** பெற்றியார்ப் பேணிக் கொளல்.

இதன்பொருள்: உற்ற நோய் நீக்கி= தெய்வத்தானாக, மக்களானாகத் தனக்கு வந்த துன்பங்களை நீக்குமாறு அறிந்து நீக்கி; உறாஅமை முன் காக்கும் பெற்றியார்= பின் அப்பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையினை உடையாரை; பேணிக் கொளல்= அரசன் அவர் உவப்பன செய்து துணையாகக் கொள்க.

விளக்கம்: தெய்வத்தான் வரும் துன்பங்களாவன:

மழையினதின்மை மிகுதிகளானும், காற்றுத் தீப் பிணி என்று இவற்றானும் வருவன. அவை கடவுளரையும், தக்கோரையும் நோக்கிச் செய்யும் சாந்திகளான் நீக்கப்படும். மக்களான் வரும் துன்பங்களாவன: பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் என்று இவர்களான் வருவன. அவை சாம பேத தான தண்டங்களாகிய நால்வகை உபாயத்துள் ஏற்றதனான் நீக்கப்படும். 'முற்காத்த'லாவது, தெய்வத்தான் வருவனவற்றை உற்பாதங்களான் அறிந்து அச்சாந்திகளாற் காத்தலும், மக்களான் வருவனவற்றை அவர் குணம், இங்கிதம், ஆகாரம், செயல் என்பவற்றான் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாற் காத்தலுமாம். ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையும் கூறியவாறாயிற்று. இங்கிதம்- குறிப்பான் நிகழும் உறுப்பின் தொழில். ஆகாரம்- குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. உவப்பன- நன்கு மதித்தன்முதலியன.
இவை இரண்டு பாட்டானும், பெரியாரது இலக்கணமும் அவரைத் துணையாகக் கொடல் வேண்டும் என்பதூஉம் கொள்ளுமாறும் கூறப்பட்டன.

# குறள் **443** (அரியவற்றுள்)

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்பேணித் தமராக் கொளல்.

இதன்பொருள்: பெரியாரைப் பேணி்த் தமராக் கொளல்= அப்பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து தமக்குச் சிறந்தாராகக் கொள்ளுதல்;
அரியவற்றுள் எல்லாம் அரிது= அரசர்க்கு அரிய பேறுகள்

எல்லாவற்றுள்ளும் அரிது.

விளக்கம்: உலகத்து அரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப்பேறு சிறந்தது என்றது, இதனால் அவையெல்லாம் உளவாதல் நோக்கி.

# குறள் **444(**தம்மிற்பெரியார்**)**

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல் தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை **(04)** வன்மையுள் எல்லாம் தலை.

இதன்பொருள்: தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்= அறிவு முதலியவற்றால் தம்மின் மிக்கார் தமக்குச் சிறந்தாராகத் தாம் அவர்வழி நின்று ஒழுகுதல்;
வன்மையுள் எல்லாம் தலை= அரசர்க்கு எல்லா வலியுடைமையினும் தலை.

விளக்கம்: பொருள் படை அரண்களாகிய வலியினும் இத் துணைவலி சிறந்ததென்றது, இவர் அவற்றான் நீக்கப்படாத தெய்வத்துன்பம் முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின்.

# குறள் **445(**சூழ்வார்**)**

சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன் சூழ்வார் கண்ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் **(05)**சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

இதன்பொருள்: சூழ்வார்கண்ணாக ஒழுகலான்= தன்பாரம் அமைச்சரைக் கண்ணாகக் கொண்டு நடத்தலான்; மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்= அரசன் அத்தன்மையராய அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க.

விளக்கம்: இரண்டாவது விகாரத்தால் தொக்கது. தானே சூழவல்லனாயினும், அளவிறந்த தொழில்களான் ஆகுலம் எய்தும் அரசன்பாரம் அதுவே தொழிலாய அமைச்சரான் அல்லது இனிது நடவாமைபற்றி, அவரைக் 'கண்ணாக'க் கூறினார். ஆராய்தல் அமைச்சியலுட் சொல்லப்படும் இலக்கணத்தினர் என்பதனை ஆராய்தல்.
இவை மூன்று பாட்டானும் பெரியாரைத் துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **446(**தக்காரினத்**)**

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச் தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில் **(06)** செற்றார் செயக்கிடந்தது இல்.

இதன்பொருள்:
தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானை= தக்காராகிய இனத்தை உடையனாய்த் தானும் அறிந்தொழுக வல்ல அரசனை; செற்றார் செயக்கிடந்தது இல்= பகைவர் செய்யக்கிடந்ததொரு துன்பமும் இல்லை.

விளக்கம்:
'தக்கார்' அறிவு ஒழுக்கங்களாற் தகுதியுடையார். 'ஒழுகுதல்'

அறநீதிகளின் நெறி வழுவாமல் நடத்தல். வஞ்சித்தல், கூடினரைப் பிரித்தல், வேறுபகை விளைத்தல் என்று இவற்றானும், வலியானும் பகைவர்செய்யும் துன்பங்கள் பலதிறத்தவாயினும், தானும் அறிந்து அறிவார் சொல்லுங் கொண்டு ஒழுகுவான்கண் அவற்றுள் ஒன்றும் வாராது என்பார், 'செற்றார் செயக்கிடந்தது இல்' என்றார்.

# குறள் **447(இடிக்குந்)**

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர் **(07)** கெடுக்கும் தகைமையவர்.

இதன்பொருள்**:**
இடிக்கும் துணையாரை ஆள்வாரை= தீயன கண்டால் நெருங்கிச் சொல்லும் துணையாம் தன்மையை உடையாரை இவர் நமக்குச் சிறந்நார் என்று ஆளும் அரசரை;
கெடுக்கும் தகைமையவர் யார்= கெடுக்கும் பெருமையுடைய பகைவர் உலகத்து யாவர்?

விளக்கம்**:**
தீயன, பாவங்களும் நீதியல்லனவும். துணையாந் தன்மையாவது, தமக்கு அவை இன்மையும், அரசன்கண் அன்புடைமையுமாம். அத்தன்மை உடையார் நெறியின் நீங்கவிடாமையின், அவரை ஆளும் அரசர் ஒருவரானும் கெடுக்கப்படார் என்பதாம். 'நெருங்கிச் சொல்லும் அளவினோரை' என்று உரைப்பாரும் உளர்.
இவை இரண்டு பாட்டானும் அதன்பயன் கூறப்பட்டது.

# குறள் **448(**இடிப்பாரை**)**

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன் இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும் (08) கெடுப்பார் இலானும் கெடும்.

இதன்பொருள்**:**
இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்= கழறுதற்கு உரியாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையின் காவலற்ற அரசன்**;**
கெடுப்பார் இலானும் கெடும்= பகையாய்க் கெடுப்பார் இல்லையாயினும் தானே கெடும்.

விளக்கம்**:**
'இல்லாத', 'ஏமரா' என்பன பெயரெச்ச அடுக்கு. கெடுப்பார் உளராவர் என்பது தோன்ற**,** 'இலானும்' என்றார். தானே கெடுதலாவது**,** பாகன் இல்லாத யானைபோல நெறியல்லா நெறிச் சென்று கெடுதல்.

# குறள் **449(**முதலிலார்க்**)**

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ் முதல் இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை **(09)** சார்பு இலார்க்கு இல்லை நிலை.

இதன்பொருள்**:**
முதல் இலார்க்கு ஊதியம் இல்லை= முதற்பொருள் இல்லாத வணிகர்க்கு அதனால் வரும் ஊதியம் இல்லையாம்**;**
மதலையாம் சார்பு இலார்க்கு நிலை இல்லை= அதுபோலத்

தம்மைத் தாங்குவதாந் துணை இல்லாத அரசர்க்கு அதனான் வரும் நிலையில்லை.

விளக்கம்:
முதலைப் பெற்றே இலாபம் பெறவேண்டுமாறு போலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெற வேண்டும் என்பதாம். 'நிலை' அரசர் பாரத்தோடு சலியாது நிற்றல்.

# குறள் **450**(பல்லார்பகை)

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல் **(10)**

இதன்பொருள்:

பல்லார் பகை கொளலின் பத்து அடுத்த தீமைத்தே= தான் தனியனாய்வைத்துப் பலரோடும் பகை கொள்ளுதலிற் பதிற்றுமடங்கு தீமை உடைத்து;
நல்லார் தொடர் கைவிடல்= அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளாது ஒழிதல்.

விளக்கம்:
பலர் பகையாயக்கால் "மொதி முள்ளொடு முட்பகை கண்டிடல்-பேது செய்து பிளந்திடல்"[1] என்பவை யல்லது ஒருங்கு வினையாக் குறித்துச் செய்தாலும் ஒருவாற்றான் உய்தல் கூடும்; நல்லார் தொடர் கைவிட்டால் ஒருவாற்றான் உய்தல்கூடாமையின், இது செய்தல் அதனினும் தீது என்பதாம்.
இவை மூ்ன்று பாட்டானும் அது செய்யாவழிப்படும் குற்றம்

# அதிகார முன்னுரை

அஃதாவது சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது, "நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை என்போ"[1]ரும், விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையும் கெடுக்கும் இயல்பிற்றாய அதனைப் பொருந்திற் பெரியாரைத் துணைக்கோடல் பயனின்று என்பது உணர்த்தற்கு இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

# குறள் **451 (**சிற்றினமஞ்சும்**)**

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான் சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும் **(01).** சுற்றமாச் சூழ்ந்து விடும்.

இதன்பொருள்

பெருமை சிற்றினம் அஞ்சும்= பெரியோர் இயல்பு சிறிய இனத்தை அஞ்சாநிற்கும்;
சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்து விடும்= ஏனைச் சிறியோர் இயல்பு அது சேர்ந்தபொழுது அதனைத் தனக்குச் சுற்றமாக எண்ணித் துணியும்.

விளக்கம்

தத்தம் அறிவு திரியுமாறும் அதனால் தக்கு வரும் துன்பமும் நோக்கலின் அறிவுடையார் அஞ்சுவர் என்றும் அறிவொற்றுமையால் பிறிது நோக்காமையின் அறிவிலாதார் தமக்குச் சுற்றமாகத் துணிவர் என்றும் கூறினார். பொருளின் தொழில்கள் பண்பின்மேல் நின்றன.
இதனால், சிறியவினம் பெரியோர்க்கு ஆகாது என்பது கூறப்பட்டது.

# குறள் **452** (நிலத்தியல்பா)

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க் நிலத்து இயல்பான் நீர் திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
கினத்தியல்ப தாகு மறிவு **(02).** இனத்து இயல்பதாகும் அறிவு.

இதன்பொருள்

நிலத்து இயல்பான் நீர் திரிந்து அற்றாகும்= தான் சேர்ந்த நிலத்தினது இயல்பானே நீர் தன் தன்மை திரிந்து அந்நிலத்தின் தன்மைத்தாம்;

மாந்தர்க்கு இனத்து இயல்பு அறிவு அதாகும்= அதுபோல மாந்தர்க்குத் தாம் சேர்ந்த இனத்தினது இயல்பானே அறிவும் தன் தன்மைதிரிந்து அவ்வினத்தின் தன்மைத்தாம்.

விளக்கம்

எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கண் தன்தன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்தவழி நிறம், சுவை முதலிய பண்புகள் திரிந்தாற்போலத் தனிநிலைக்கண் தன் தன்மைத்தாய அறிவு பிறவினத்தோடு சேர்ந்தவழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியும்என இதனால் அதனது காரணம் கூறப்பட்டது.

# குறள் **453** (மனத்தானாம்)

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா மனத்தான் ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தான் ஆம்
மின்னா னெனப்படுஞ்சொல் **(03)** இன்னான் எனப்படும் சொல்.

இதன்பொருள்

மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம்= மாந்தர்க்குப் பொதுஉணர்வு தம் மனம் காரணமாக உண்டாம்;
இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம்= இவன் இத்தன்மையன் என்று உலகத்தாரால் சொல்லப்படும் சொல், இனம் காரணமாக உண்டாம்.

விளக்கம்

இயற்கையாய புலன் உணர்வு மாத்திரத்திற்கு இனம் வேண்டாமையின், அதனை 'மனத்தானாம்' என்றும், செயற்கையாய விசேடவுணர்வு பற்றி நல்லன் என்றாகத் தீயன் என்றாக நிகழும் சொற்கு, இனம் வேண்டுதலின் அதனை 'இனத்தானாம்' என்றும் கூறினார். உவமை அளவை கொள்ளாது அத்திரிபும் மனத்தானாம் என்பாரை நோக்கி இதனான் அது மறுத்துக்கூறப்பட்டது.

## குறள் **454 (**மனத்துளது**)**

மனத்துளது போலக் காட்டி யொருவற் மனத்து உளது போல் காட்டி ஒருவற்கு
கினத்துள தாகு மறிவு **(04)** இனத்து உளது ஆகும் அறிவு.

இதன்பொருள்

அறிவு= அவ்விசேட உணர்வு; ஒருவற்கு மனத்து உளது போலக்காட்டி= ஒருவற்கு மனத்தி◌ன்கண்ணே உளதாவது போலத் தன்னைப் புலப்படுத்தி; இனத்து உளதாகும்= அவன் சேர்ந்த இனத்தின்கண்ணே உளதாம்.

விளக்கம்

மெய்ம்மை நோக்காமுன் மனத்துளது போன்று காட்டியும்,பின் நோக்கியவழிப் பயின்ற இனத்து உளதாயும் இருத்தலின், காட்டி என இறந்தகாலத்தால் கூறினார். விசேட உணர்வுதானும் மனத்தின்கண்ணே அன்றே உளதாவது என்பார் நோக்கி, ஆண்டுப்புலப்படும் துணையே உள்ளது, அதற்கு மூலம் இன்னதென்பது இதனால் கூறப்பட்டது.

## குறள் **455 (**மனந்தூய்மை**)**

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
மினந்தூய்மை தூவா வரும் **(05).** இனம்

தூய்மை தூவா வரும்.

இதன்பொருள்

மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்= அவ்விசேட உணர்வு புலப்படுதற்கு இடனாய மனம் தூயனாதல்தன்மையும் செய்யும் வினை தூயனாதல் தன்மையுமாகிய இரண்டும்;
இனம் தூய்மை தூவா வரும்= ஒருவற்கு இனம் தூயனாதல்தன்மை பற்றுக்கோடாக உளவாம்.

விளக்கம்

மனம் தூயனாதலாவது, விசேடஉணர்வு புலப்படுமாறு இயற்கையாய் அறியாமையி ன் நீங்குதல். செய் வினை தூயனாதலாவது, மொழி மெய்களால் செய்யும் நல்வினை உடையனாதல். தூவென்பது அப்பொருட்டாதல், "தூவறத் துறந்தாரை" என்பதனானும் அறிக. ஒருவன் இனம் தூயனாகவே அதனோடு பயிற்சிவயத்தான் மனம் தூயனாய் அதன்கண் விசேடஉணர்வு புலப்பட்டு அதனால் சொல்லும் செயலும் தூயனாம் என இதனால் இனத்துள்ளவாமாறு கூறப்ப்டது.

# குறள் **456 (**மனந்தூயார்க்கு**)**

மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்கு மனம்
தூயார்க்கு எச்சம் நன்று ஆகும் இனம் தூயார்க்கு
கில்லைநன் றாகா வினை **(06)** இல்லை
நன்று ஆகா வினை.

இதன்பொருள்: மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்= மனம் தூயராயினார்க்கு மக்கட்பேறு நன்றாகும்;
இனம் தூயார்க்கு நன்று ஆகா வினை இல்லை= இனம் தூயர் ஆயினார்க்கு நன்றாகாத வினை யாதொன்றும் இல்லை.

விளக்கம்

காரியம் காரணத்தின் வேறுபடாமையின் எச்ச நன்றாகும் என்றும், நல்லினத்தோடு எண்ணிச் செயல்படுதலின் எல்லாவினையும் நல்லவாம் என்றும் கூறினார்.

## குறள் **457 (**மனநலமன்னு**)**

மனநல மன்னுயிர்க் காக்க மினநல மன நலம் மன் உயிர்க்கு ஆக்கம் இனநலம்
மெல்லாப் புகழுந் தரும் **(07).** எல்லாப் புகழும் தரும்.

இதன்பொருள்

மன் உயிர்க்கு மனநலம் ஆக்கம் தரும்= நிலைபெற்ற உயிர்கட்கு மனத்தது நன்மை செல்வத்தைக் கொடுக்கும்;
இனநலம் எல்லாப் புகழும் தரும்= இனத்தது நன்மை அதனோடு எல்லாப் புகழையும் கொடுக்கும்.

விளக்கம்

'மன்னுயிர்' என்றது, ஈண்டு உயர்திணைமேல் நின்றது. 'தரும்' என்னும் இடவழுவமைதிச் சொல் முன்னும் கூட்டப்பட்டது.

உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. மனம் நன்றாதல்தானே அறமாகலின், அதனை 'ஆக்கம் தரும்' என்றும், புகழ்கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாகலின் 'இனநலம் எல்லாப் புகழும் தரும்' என்றும் கூறினார், மேல் மனநன்மை, இனநன்மை பற்றி வரும் என்பதனை உட்கொண்டு.

அஃது இயல்பாகவே உடையார்க்கு அவ்வின் நன்மை வேண்டா என்பாரை நோக்கி, அதுவேயன்றி அத்தன்மைய பலவற்றையும் தரும் என அவர்க்கும் அதுவேண்டும் என்பது இவ்விரண்டுபாட்டானும் கூறப்பட்டது.

## குறள் **458 (**மனநலநன்கு**)**

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க் மன நலம் நன்கு உடையர் ஆயினும் சான்றோர்க்கு

கினநல மேமாப் புடைத்து **(08)** இன நலம் ஏமாப்பு உடைத்து.

இதன்பொருள்

மன நலம் நன்கு உடையராயினும்= மனநன்மையை முன்னை நல்வினையால் தாமே உடையராயினும்;

சான்றோர்க்கு இன நலம் ஏமாப்பு உடைத்து= அமைந்தார்க்கு இனநன்மை அதற்கு வலிமையாதலை உடைத்து.

விளக்கம்

'நன்கால்' என்னும் மூன்றன் உருபு விகாரத்தால் தொக்கது.

அந்நல்வினை உள்வழியும், மனநலத்தை வளர்த்து வருதலின், அதற்கு ஏமாப்புடைத்து ஆயிற்று.

## குறள் **459** (மனநலத்தின்)

மனநலத்தி னாகு மறுமைமற் றஃது மன நலத்தின் ஆகும் மறுமை மற்று அஃது
மினநலத்தி னேமாப் புடைத்து **(09).** இன நலத்தின் ஏமாப்பு உடைத்து.

இதன்பொருள்

மன நலத்தின் மறுமை ஆகும்= ஒருவற்கு மனநன்மையானே மறுமை இன்பம் உண்டாம்;
மற்று அஃதும் இன நலத்தின் ஏமாப்பு உடைத்து= அதற்கு அச் சிறப்புத்தானும் இனநன்மையான் வலி பெறுதலை உடைத்து.

விளக்கம்

'மனநலத்தின் ஆகும் மறுமை' என்றது, மறுமை பயப்பது மனநன்மைதானே பிறிதொன்றன்று என்னும் மதத்தை உடம்பட்டுக் கூறியவாறு. 'மற்று' வினைமாற்று. உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை. ஒரோவழித் தாமத குணத்தான் மனநலம் திரியினும், நல்லினம் ஒப்ப நிறுத்தி மறுமை பயப்பிக்கும் என நிலைபெறச்செயயுமாறு கூறப்பட்டது.
இவை ஐந்து பாட்டானும் சிற்றினம் சேராமையது சிறப்பு நல்லினம் சேர்தலாகிய எதிர்மறை முகத்தால் கூறியவாறு அறிக.

# குறள் **460 (**நல்லினத்தி**)**

நல்லினத்தி னூங்குத் துணையில்லை தீயினத்தி நல் இனத்தின் ஊங்குத் துணை இல்லை தீ இனத்தின்
னல்லற் படுப்பதூஉ மில் **(10).**
அல்லல் படுப்பதூஉம் இல்.

இதன்பொருள்

நல்இனத்தின் ஊங்குத் துணையும் இல்லை= ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையும் இல்லை;
தீயினத்தின் ஊங்கு அல்லல் படுப்பதூஉம் இல்= தீய இனத்தின் மிக்க பகையும் இல்லை.

விளக்கம்

ஐந்தன் உருபுகள் உறழ்பொருளின்கண் வந்தன. 'ஊங்கு' என்பது பின்னும் கூட்டி உம்மை மாற்றி உரைக்கப்பட்டது. நல்லினம் அறியாமையின் நீக்கித் துயருறாமல் காத்தலின் அதனைத் துணை என்றும், தீயினம் அறிவின் நீக்கித் துயர் உறுவித்தலின் அதனைப் பகையென்றும் கீறினார். அல்லற்படுப்பது என்பது ஏதுப்பெயர்.
இதனான் விதி எதிர்மறைகள் உடன் கூறப்பட்டன.

# பொருட்பால்- 1.அரசியல்- அதிகாரம் 47.தெரிந்துசெயல்வகை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, அரசன் தான்செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந்திறம். அச்செயல் பெரியாரைத்துணைக்கோடல் பயனுடைத்தாய வழி அவரோடும் செய்யப்படுவதாகலின் இது சிற்றினஞ்சேராமையின்பின் வைக்கப்பட்டது.

## குறள் 461 (அழிவதூஉ)

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழி பயக்கும்
மூதியமுஞ் சூழ்ந்து விடல் (01). ஊதியமும் சூழ்ந்து விடல்.

இதன்பொருள்

அழிவதூஉம்= வினைசெய்யுங்கால் அப்பொழுது அதனால்

அழிவதனையும்;

ஆவதூஉம்= அழிந்தால் பின்ஆவதனையும்;

ஆகி வழிபயக்கும் ஊதியமும்= ஆய்நின்று பிற்பொழுது தரும் ஊதியத்தையும்;

சூழ்ந்து செயல்= சீர்தூக்கி உறுவதாயிற் செய்க.

விளக்கம்

உறுவதாவது, நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு, எதிர்வினும் அது வளர்ந்துவருதல். அழிவதின்மையின், எதிர்வின்கண் வரும் ஆக்கத்தை 'ஊதியம்' என்றார். எனவே, அவ்வூதியம் பெறின் நிகழ்வின்கண் அழிவதும் ஆவதும் தம்முள் ஒத்தாலும், ஒழிதற்பாற்று என்பது பெற்றாம். இரண்டு காலத்தினும் பயனுடைமை தெரிந்து செய்க என்பதாம்.

# குறள் **462** (தெரிந்தவினத்)

தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு
கரும்பொருள் யாதொன்று மில் **(02)** அரும் பொருள் யாது ஒன்றும் இல்.

இதன்பொருள்

தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு= தாம் தெரிந்துகொண்ட இனத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின் தாமேயும் எண்ணி்ச்செய்து முடிக்கவல்ல அரசர்க்கு;

அரும்பொருள் யாதொன்றும் இல்= எய்துதற்கரிய பொருள் யாது ஒன்றும் இல்லை.

விளக்கம்

ஆராயப்படுவன எல்லாம் ஆராய்ந்துபோன 'இனம்' என்றுமாம். 'செய்வார்க்கு' என்றதனால், வினையென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. வினையாவது மேற்சேறன் முதல் வேறல் ஈறாய தொழில். பொருள்கட்கு ஏதுவாய அதனில் தவறாமையின், அரிய பொருள்களெல்லாம் எளிதின் எய்துவர் என்பதாம். அது செய்யுமாறும் கூறப்பட்டன.

# குறள் **463** (ஆக்கங்கருதி)

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய் வினை
யூக்கா ரறிவுடை யார் **(03** ஊக்கார் அறிவுடையார்.

இதன்பொருள்

ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை= மேல்எய்தக்கடவ ஊதியத்தினை நோக்கி முன் எய்திநின்ற முதல்தன்னையும் இழத்தற்கு ஏதுவாய செய்வினையை;
அறிவுடையார் ஊக்கார்= அறிவுடையார் மேற்கொள்ளார்.

விளக்கம்

'கருதி' யென்னும் வினையெச்சம் 'இழக்கு'மென்னும் பெயரெச்சவினை கொண்டது. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ஆக்கமேயன்றி முதலையு மிழக்கும் வினைகளாவன, வலியும் காலமும் இடனுமறியாது பிறர் மண்கொள்வான்சென்று தம்மண்ணுமிழத்தல் போல்வன. முன்செய்துபோந்த வினையாயினும் என்பார், 'செய்வினை' யென்றார்.

# குறள் **464 (**தெளிவிலதனை**)**

தெளிவிலதனைத் தொடங்கா ரிளிவென்னு தெளிவு இலதனைத் தொடங்கார் இளிவு என்னும்

மேதப்பா டஞ்சு பவர் **(04)** ஏதப்பாடு அஞ்சுபவர்

இதன்பொருள்

தெளிவு இலதனைத் தொடங்கார் = இனத்தொடும் தனித்தும் ஆராய்ந்து துணிதலில்லாத வினையைத் தொடங்கார்;

இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர்= தமக்கு இளிவரவு என்னும் குற்றம் உண்டாதலை அஞ்சுவார்.

விளக்கம்

தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின், 'தொடங்கார்' என்றார். இளிவரவு அவ்வினையாற் பின் அழிவு எய்தியவழி அதன்மேலும், அறிவும் மானமும் இலர் என்று உலகத்தார் இகழும் இகழ்ச்சி. அஃதுண்டாதல் ஒருதலையாகலின், தெளிவு உள்வழித் தொடங்குக என்பதாம்.

# குறள் **465 (**வகையறச்**)**

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப் வகை அறச் சூழாது எழுதல் பகைவரைப்

பாத்திப் படுப்பதோ ராறு. **(05)** பாத்திப் படுப்பது ஓர் ஆறு.

இதன்பொருள்

வகை அறச் சூழாது எழுதல்= சென்றால் நிகழும் திறங்களையெல்லாம் முற்ற எண்ணாது சில எண்ணிய துணையானே அரசன் பகைவர் மேற் செல்லுதல்;
பகைவரைப் பாத்திப் படுப்பது ஓர் ஆறு= அவரை வளரும் நிலத்திலே நிலைபெறச் செய்வதொரு நெறியாம்.

விளக்கம்

அத்திறங்களாவன: வலி, காலம், இடன் என்று இவற்றால் தனக்கும் பகைவர்க்கும் உளவாம் நிலைமைகளும், வினை தொடங்குமாறும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனால் பெறும் பயனும் முதலாயின. அவற்றுள் சில எஞ்சினும் பகைவர்க்கு இடனாம்ஆகலான், முற்றுப்பெற எண்ணவேண்டும் என்பதாம்.

இவைமூன்று பாட்டானும் ஒழியத்தகும் வினையும், ஒழியாவழிப்படும் இழுக்கும் கூறப்பட்டன.

# குறள் **466 (**செய்தக்க**)**

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க செய் தக்க அல்ல செயக் கெடும் செய் தக்க
செய்யாமை யானுங் கெடும். **(06)**
செய்யாமையானும் கெடும்.

இதன்பொருள்

செய்தக்க அல்ல செயக் கெடும்= அரசன் தன் வினைகளுட் செய்யத்தக்கன அல்லவற்றைச் செய்தலாற் கெடும்;

செய் தக்க செய்யாமையானும் கெடும்= இனி, அதனானே யன்றிச் செய்யத்தக்கனவற்றைச் செய்யாமைதன்னானுங் கெடும்.

விளக்கம்

செய்யத்தக்கன அல்லவாவன: பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறியதாயினவும், ஐயமாயினவும், பின் துயர் விளைப்பனவும் என இவை. செய்யத்தக்கவாவன: அவற்றின் மறுதலையாயின. இச்செய்தல், செய்யாமைகளான், அறிவு ஆண்மை பெருமை என்னும் மூவகையாற்றலுள் பொருள், படை என இருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனாம் ஆகலான், இரண்டும் கேட்டிற்கு ஏதுவாயின.

இதனால், செய்வன செய்து ஒழிவன ஒழிக என இருவகையனவும் உடன் கூறப்பட்டன.

# குறள் 467 (எண்ணித்)

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி எண்ணித் துணிக கருமம் துணிந்த பின்

னெண்ணுவ மென்ப திழுக்கு. **(07)** எண்ணுவம் என்பது இழுக்கு.

இதன்பொருள்

கருமம் எண்ணித் துணிக= செய்யத்தக்க கருமமும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் தொடங்குக;

துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு= தொடங்கி வைத்துப் பின் எண்ணக் கடவேம் என்றொழிதல் குற்றம்ஆதலான்.

விளக்கம்

துணிவுபற்றி நிகழ்தலின், 'துணிவு' எனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உபாயம் என்பது அவாய்நிலையான் வந்தது. அது, கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என நால்வகைப்படும். இவற்றை வடநூலார், தான சாம பேத தண்டம் என்ப. அவற்றுள், முன்னைய இரண்டும் ஐவகைய; ஏனைய மூவகைய. அவ்வகைகள் எல்லாம் ஈண்டு உரைப்பிற் பெருகும். இவ்வுபாயம் எல்லாம் எண்ணாது தொடங்கின் அவ்வினை மாற்றானால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையின் ஒழிதலாகாமையானும், அரசன்துயர் உறுதலின் அவ்வெண்ணாமையை 'இழுக்கு' என்றார். செய்வனவற்றையும், உபாயம் அறிந்தே தொடங்குக வென்பதாம்.

# குறள் **468** (ஆற்றின்)

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று
போற்றினும் பொத்துப் படும்.( 0 8 ) போற்றினும் பொத்துப் படும்.

இதன்பொருள்

ஆற்றின் வருந்தா வருத்தம்= முடியும் உபாயத்தால் கருமத்தை முயலாத முயற்சி;
பலர் நின்று போற்றினும் பொத்துப்படும்= துணைவர் பலர்நின்று புரைபடாமல் காப்பினும் புரைபடும்.

விளக்கம்

முடியும் உபாயத்தான் முயறலாவது, கொடுத்தலைப் பொருள் நசையாளன்கண்ணும், இன்சொல்லைச் செப்பமுடையான்

கண்ணும், மடியாளன், பிறரோடு பொருதுநொந்தவன் என இவர்கண்ணும், வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், தன்பகுதியோடு பொருந்தான் என இவர்கண்ணும், ஒறுத்தலை இவற்றின் வாராவழி இவர்கண்ணும், தேறப்படாத கீழ்மகன்கண்ணும் செய்து வெல்லுமாற்றான் முயறல். புரைபடுதல்- கருதிய நன்மையன்றிக் கருதாத தீமைபயத்தல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு.

# குறள் **469** (நன்றாற்றலுள்)

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர் நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு அவர் அவர்

பண்பறிந் தாற்றாக் கடை. பண்பு அறிந்து ஆற்றாக் கடை.

இதன்பொருள்

நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு= வேற்று வேந்தர்மாட்டு நன்றான உபாயஞ் செய்தற்கண்ணுங் குற்றமுண்டாம்;
அவரவர் பண்பு அறிந்து ஆற்றாக் கடை= அவரவர் குணங்களை ஆராய்ந்து அறிந்து அவற்றிற்கு இயையச் செய்யாவிடின்.

விளக்கம்

நன்றான உபாயமாவது, கொடுத்தலும் இன்சொற்சொல்லுதலும் ஆம், அவை யாவர்கண்ணும் இனியவாதற் சிறப்புடைமையின். உம்மை சிறப்பும்மை. அவற்றை 'அவரவர் பண்பறிந்துஆற்றா'மையாவது, அவற்றிற்கு உரியரல்லாதார்கண்ணே செய்தல். 'தவறு' அவ்வினை முடியாமை.

# குறள் 470 (எள்ளாத)

எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும் தம்மொடு

கொள்ளாத கொள்ளா வுலகு
கொள்ளாத கொள்ளாது உலகு.

இதன்பொருள்

தம்மொடு கொள்ளாத உலகு கொள்ளாது= அரசர் வினைமுடித்தற்பொருட்டுத் தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்வாராயின் உலகந் தம்மை இகழாநிற்கும்; எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும்= ஆகலான் அஃது இகழா உபாயங்களை நாடிச்செய்க.

விளக்கம்

'தம்' என்பது ஆகுபெயர். தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது: தாம் வலியராய் வைத்து மெலிந்தார்க்குரிய கொடுத்தன் முதலிய மூன்றனைச் செய்தலும், மெலியராய் வைத்து வலியார்க்குரிய ஒறுத்தலைச் செய்தலுமாம். இவையிரண்டும் அறிவிலார் செய்வனவாகலின், 'உலகங்கொள்ளா'தென்றார். அஃது எள்ளாதன செய்தலாவது, அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட்கு ஏற்பச்செய்தல். மேல் (பார்க்க:குறள்468) இடவகையான் உரிமைகூறிய உபாயங்கட்கு வினைமுதல் வகையான் உரிமைகூறியவாறு.

இவை நான்கு பாட்டானும் செய்வனவற்றிற்கு உபாயமும் அதனது உரிமையுங் கூறப்பட்டன.

# பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 48. வலியறிதல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

அஃதாவது, அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந்தறிதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் 471 (வினைவலியுந்)

வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்வினை வலியும் தன் வலியும் மாற்றான் வலியும்

துணைவலியுந் தூக்கிச் செயல். **(01)**துணை வலியும் தூக்கிச் செயல்.

இதன் பொருள்

வினை வலியும்= தான் செய்யக் கருதிய வினைவலியையும்; தன் வலியும்= அதனைச்செய்து முடிக்கும் தன் வலியையும்; மாற்றான் வலியும்= அதனை விலக்கலுறும் மாற்றான் வலியையும்; துணை

வலியையும்= இருவர்க்கும் துணையாவார் வலியையும்; தூக்கிச் செயல்= சீர்தூக்கித் தன் வலி மிகுமாயின் அவ்வினையைச் செய்க.

விளக்கம்

இந்நால் வகை வலியுள் 'வினைவலி' அரண்முற்றலும், கோடலும் முதலிய தொழிலானும், ஏனைய மூவகை ஆற்றலானும் கூறுபடுத்துத் தூக்கப்படும். 'தன்வலி' மிகவின்கட் செய்க என்ற விதியால், தோற்றல் ஒருதலையாய குறைவின்கண்ணும், வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிக என்பது பெற்றாம்.

# குறள் **472** (ஒல்வதறிந்து)

ஒல்வதறிவ தறிந்ததன் கட்டங்கிச்ஒல்வது அறிந்து அதன்கண் தங்கிச்

செல்வார்க்குச் செல்லாத தில். **(02)**செல்வார்க்குச் செல்லாதது இல்.

இதன் பொருள்

ஒல்வது அறிவது அறிந்து= தமக்கியலும் வினையையும் அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து; அதன்கண் தங்கிச் செல்வார்க்கு= எப்பொழுதும் மன மொழி மெய்களை அதன்கண் வைத்துப் பகைமேற் செல்லும் அரசர்க்கு; செல்லாதது இல்= முடியாத பொருள் இல்லை.

விளக்கம்

'ஒல்வது' எனவே வினைவலி முதலாய மூன்றும் அடங்குதலின், ஈண்டு 'அறிவது' என்றது துணைவலியே யாயிற்று. எல்லாப் பொருளும் எய்துவர் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் வலியின் பகுதியும் அஃதறிந்து

மேற்செல்வார் எய்தும் பயனும் கூறப்பட்டன.

# குறள் **473 (**உடைத்தம்**)**

உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கிஉடைத்தம் வலி அறியார் ஊக்கத்தின் ஊக்கி

'யிடைக்கண் முரிந்தார் பலர். ***(03)***இடைக்கண் முரிந்தார் பலர்.

இதன் பொருள்

உடைத் தம் வலி அறியார்= கருத்தாவாதலை உடைய தம் வலியின் அளவு அறியாதே; ஊக்கத்தின் ஊக்கி= மன எழுச்சியால் தம்மின் வலியாரோடு வினை செய்தலைத் தொடங்கி; இடைக்கண் முரிந்தார் பலர்= அவர் அடர்த்தலான் அது செய்து முடிக்கப்பெறாது இடையே கெட்ட அரசர் உலகத்துப் பலர்.

விளக்கம்

உடைய என்பது, அவாய் நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. மூவகை ஆற்றலுள்ளுஞ் சிறப்புடைய அறிவுடையோர் சிலராதலின், 'முரிந்தார் பலர்' என்றார். அதனால் தம் வலியறிந்தே தொடங்குக என்பது எஞ்சிநின்றது.

# குறள்**: 474 (**அமைந்தாங்**)**

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னைஅமைந்து ஆங்கு ஒழுகான் அளவு அறியான் தன்னை

வியந்தான் விரைந்து கெடும் **(04).**வியந்தான் விரைந்து கெடும்.

இதன்பொருள்

ஆங்கு அமைந்து ஒழுகான்= அயல் வேந்தரோடு பொருந்தி ஒழுகுவதுஞ் செய்யாது; அளவு அறியான்= தன் வலியளவு அறிவதுஞ்செய்யாது; தன்னை வியந்தான்= தன்னை வியந்து அவரோடு பகைத்த அரசன்; விரைந்து கெடும்= விரையக் கெடும்.

விளக்கம்

காரியத்தைக் காரணமாக உபசரித்து 'வியந்தான்' என்றார். விரைய என்பது திரிந்து நின்றது. நட்பாய் ஒழுகுதல், வலியறிந்து பகைத்தல் என்னும் இரண்டனுள் ஒன்றன்றே அயல்வேந்தரோடு செய்ற்பாலது; இவையன்றித் தான் மெலியனாய் வைத்து அவரோடு பகைகொண்டானுக்கு ஒருபொழுதும் நிலையின்மையின், 'விரைந்துகெடும்' என்றார்.

இவை இரண்டுபாட்டானும் தன் வலியறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் **475** **(**பீலிபெய்**)**

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்பீலி பெய் சாகாடும் அச்சு இறும் அப்பண்டம்

சால மிகுத்துப் பெயின் **(05).**சால மிகுத்துப் பெயின்.

இதன் பொருள்

பீலி பெய் சாகாடும் அச்சு இறும்= பீலி ஏற்றிய சகடமும் அச்சு முரியும்; அப்பண்டம் சால மிகுத்துப் பெயின்= அப் பீலியை அது

பொறுக்கும் அளவின்றி மிகுத்து ஏற்றின்.

விளக்கம்

உம்மை சாகாட்டது வலிச்சிறப்பேயன்றிப் பீலியது நொய்ம்மைச் சிறப்புத் தோன்ற நின்றது. 'இறும்' என்னும் சினைவினை முதன்மேன் நின்றது. எளியர் என்று பலரோடு பகைகொள்வான், தான் வலியனே ஆயினும் அவர் தொக்கவழி வலியழியும் என்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம்; இதனை நுவலா நுவற்சி என்பாரும், ஒட்டு என்பாரும் உளர். ஒருவன் தொகுவார் பலரோடு பகைகொள்ளற்க என்றமையின், இதனான் மாற்றான் வலியும் அவன் துணைவலியும் அறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் **476** (நுனிக்கொம்பர்)

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கிநுனிக் கொம்பர் ஏறினார் அஃது இறந்து ஊக்கின்

னுயிர்க்கிறுதி யாகி விடும். **(06)**உயிர்க்கு இறுதி ஆகி விடும்.

இதன்பொருள்

கொம்பர் நுனி ஏறினார் அஃது இறந்து ஊக்கின்= ஒரு மரக்கோட்டினது நுனிக்கண்ணே ஏறிநின்றார் தம் ஊக்கத்தால் அவ்வளவினைக் கடந்து மேலும் ஏற ஊக்குவராயின்; உயிர்க்கு இறுதி ஆகி விடும்= அவ்வூக்கம் அவர் உயிர்க்கு இறுதியாய் முடியும்.

உரைவிளக்கம்

'நுனிக்கொம்பர்' என்பது கடைக்கண் என்பது போலப்

பின்முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத்தொகை. பன்மை அறிவின்மைபற்றி இழித்தற்கண் வந்தது. இறுதிக்கு ஏதுவாவதனை 'இறுதி' என்றார். பகைமேற் செல்வான் தொடங்கித் தன்னாற் செல்லலாம் அளவுஞ் சென்றுநின்றான், பின் அவ்வளவின் நில்லாது மனவெழுச்சியான் மேலுஞ் செல்லுமாயின், அவ்வெழுச்சி வினைமுடிவிற்கு ஏதுவாகாது அவன் உயிர்முடிவிற்கு ஏதுவாம் என்னும் பொருள்தோன்ற நின்றமையின், இதுவும் மேலை அலங்காரம்.

அளவறிந்து நிற்றல் வேண்டும் என்றமையின், இதனால் வினைவலி அறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் **477** (ஆற்றின்)

ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்ஆற்றின் அளவு அறிந்து ஈக அது பொருள்

போற்றி வழங்கு நெறி. **(07)**போற்றி வழங்கும் நெறி.

இதன்பொருள்

ஆற்றின் அளவு அறிந்து ஈக= ஈயும் நெறியானே தமக்குள்ள பொருளின் எல்லையை அறிந்து அதற்கு ஏற்ப ஈக; அது பொருள் போற்றி வழங்கும் நெறி= அங்ஙனம் ஈதல் பொருளைப் பேணிக்கொண்டு ஒழுகும் நெறியாம்.

உரைவிளக்கம்

ஈயும் நெறி மேல் இறைமாட்சியுள் "வகுத்தலும் வல்லதரசு" (பார்க்க: *385*-ஆம் குறளுரை) என்புழி உரைத்தாம். எல்லைக்கேற்ப ஈதலாவது, ஒன்றான எல்லையை நான்கு

கூறாக்கி, அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி, ஒன்றனை மேல் இடர்வந்துழி அது நீக்குதற்பொருட்டு வைப்பாக்கி, நின்றவொன்றனை ஈதல்; பிறரும் "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" *(பார்க்க: திரிகடுகம்-21)* என்றார். பேணிக்கொண்டொழுகுதல் ஒருவரோடு நட்பிலாத அதனைத் தம்மோடு நட்பு உண்டாக்கிக் கொண்டு ஒழுகுதல். முதலிற் செலவு சுருங்கிற் பொருள் ஒருகாலும் நீங்காது என்பதாம்.

# குறள் **478** **(**ஆகாறளவு**)**

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லைஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும் கேடு இல்லை

போகா றகலாக் கடை. **(08)**போகு ஆறு அகலாக் கடை.

இதன்பொருள்

ஆகு ஆறு அளவு இட்டிதாயினும் கேடு இல்லை= அரசர்க்குப் பொருள் வருகின்ற நெறியளவு சிறிதாயிற்றானும் அதனாற் கேடில்லையாம்; போகு ஆறு அகலாக் கடை= போகின்ற நெறியளவு அதனிற் பெருகாதாயின்.

உரைவிளக்கம்

'இட்டிது' எனவும், 'அகலாது' எனவும் வந்த பண்பின் தொழில்கள் பொருள்மேல் நின்றன. பொருள் என்பது அதிகாரத்தான் வருவித்து, அளவு என்பது பின்னும் கூட்டி உரைக்கப்பட்டன. முதலும் செலவும் தம்முள் ஒப்பினும் கேடில்லை என்பதாம்.

# குறள் **479** **(**அளவறிந்து**)**

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோலஅளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை உள போல

வில்லாகித் தோன்றாக் கெடும். **(09)**இல்லாகித் தோன்றாக் கெடும்.

இதன்பொருள்

அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை= தனக்கு உள்ள பொருளின் எல்லையை அறிந்து அதற்கு ஏற்ப வாழமாட்டாதான் வாழ்க்கைகள்; உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும்= உள்ளனபோலத் தோன்றி, மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத்தோற்றமும் இன்றிக் கெட்டுவிடும்.

உரைவிளக்கம்

அவ்வெல்லைக்கேற்ப வாழ்தலாவது, அதனிற் சுருக்கக் கூடாதாயின் ஒப்பவாயினும் ஈத்தும் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்திற் கேடு வெளிப்படாமையின், 'உளபோல', 'தோன்றா' என்றார். முதலிற் செலவு மிக்கால் வரும் ஏதங் *(*பார்க்க*:* நல்வழி-*25)* கூறியவாறு.

# குறள் **480** **(**உளவரை**)**

உளவரை தூக்காத வொப்புர வாண்மைஉள வரை தூக்காத ஒப்புரவு ஆண்மை

வளவரை வல்லைக் கெடும். **(10)**வள வரை வல்லைக் கெடும்.

இதன்பொருள்

உள வரை தூக்காத ஒப்புரவு ஆண்மை= தனக்குள்ள அளவு தூக்காமைக்கு ஏதுவாய ஒப்புரவாண்மையால்; வள வரை வல்லைக் கெடும்= ஒருவன் செல்வத்தின் எல்லை விரையக்

கெடும்.

உரைவிளக்கம்

ஒப்புரவே ஆயினும் மிகலாகாது என்றமையான் இதுவுமது.*(479 ஆம் குறளிற் கூறியதுபோன்று)*

இவை நான்கு பாட்டானும் மூவகை ஆற்றலுள் பெருமையின் பகுதியாய பொருள்வலியறிதல் சிறப்பு நோக்கி வகுத்துக் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 49. காலமறிதல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, வலியான் மிகுதியுடையனாய்ப் பகைமேற் சேறலுற்ற அரசன் அச்செலவிற்கு ஏற்ற காலத்தினை அறிதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் 481 (பகல்வெல்லுங்)

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்பகல் வெல்லும் கூகையைக் காக்கை இகல் வெல்லும்

'வேந்தர்க்கு வேண்டும் பொழுது.*(01)*'வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

இதன்பொருள்

கூகையைக் காக்கை பகல்வெல்லும்= தன்னின் வலிதாய கூகையைக் காக்கை பகற்பொழுதின்கண் வெல்லாநிற்கும்; இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது= அதுபோலப் பகைவரது இகலை வெல்லக் கருதும் அரசர்க்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாதது.

உரைவிளக்கம்

எடுத்துக்காட்டு உவமை. காலமல்லாவழி வலியாற் பயனி்ல்லையென்பது விளக்கிநின்றது. இனிக் காலமாவது, வெம்மையும் குளிர்ச்சியும் தம்முள் ஒத்து நோய்செய்யாது, தண்ணீரும் உணவும் உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினதாம். இதனாற் காலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **482 (**பருவத்தோ**)**

பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்

தீராமை யார்க்குங் கயிறு. **(02)** தீராமை ஆர்க்கும் கயிறு.

இதன்பொருள்

பருவத்தோடு ஒட்ட ஒழுகல்= அரசன் காலத்தோடு பொருந்த வினைசெய்து ஒழுகுதல்; திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு= ஒருவர்கண்ணும் நில்லாது நீங்கும் செல்வத்தைத் தன்கண் நீங்காமற் பிணிக்கும் கயிறாம்.

உரைவிளக்கம்

காலத்தோடு பொருந்துதல் காலம் தப்பாமல் செய்தல். 'தீராமை'

என்றதனால், தீர்தன்மாலையது என்பது பெற்றாம். வினை வாய்த்துவருதலான், அதனின் ஆகும் செல்வம் எஞ்ஞான்றும் நீங்காது என்பதாம்.

# குறள் **483** (அருவினை)

அருவினை யென்ப வுளவோ கருவியாற்அருவினை என்ப உளவோ கருவியான்

கால மறிந்து செயின். **(03)**காலம் அறிந்து செயி்ன.

இதன்பொருள்

அரசரால் செய்தற்கு அரிய வினைகளென்று சொல்லப்படுவன உளவோ; கருவியான் காலம் அறிந்து செயின்= அவற்றை முடித்தற்காம் கருவிகளுடனே செய்தற்காம் காலம் அறிந்து செய்வாராயின்.

உரைவிளக்கம்

கருவிகளாவன: மூவகையாற்றலும், நால்வகை உபாயங்களும்ஆம்; அவை உளவாயவழியும் காலம் வேண்டும் என்பது அறிவித்தற்குக் 'கருவியான்' என்றார். எல்லாவினையும் எளிதில் முடியும் என்பதாம்.

# குறள் **484** (ஞாலங்)

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்ஞாலம் கருதினும் கைகூடும் காலம்

கருதி யிடத்தாற் செயின். **(04)**கருதி இடத்தான் செயின்.

இதன்பொருள்

ஞாலம் கருதினும் கைகூடும்= ஒருவன் ஞாலம் முழுதும் தானே ஆளக் கருதினான் ஆயினும், அஃது அவன் கையகத்ததாம்; காலம் கருதி இடத்தான் செயின்= அதற்குச் செய்யும் வினையைக் காலமறிந்து இடத்தோடு பொருந்தச் செய்வானாயின்.

உரைவிளக்கம்

இடத்தான் என்பதற்கு, மேற் கருவியான் என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க. கைகூடாதனவும், கைகூடும் என்பதாம். :

இவைமூன்று பாட்டானும் காலமறிதற் பயன் கூறப்பட்டது.

## குறள் 485 (காலங்கருதி)

காலங் கருதி யிருப்பர் கலங்காதுகாலம் கருதி இருப்பர் கலங்காது

'ஞாலங் கருது பவர். *(05)'*ஞாலம் கருதுபவர்.

இதன்பொருள்

கலங்காது ஞாலம் கருதுபவர்= தப்பாது ஞாலமெல்லாம் கொள்ளக்கருதும் அரசர்; காலம் கருதி இருப்பர்= தம் வலிமிகுமாயினும், அது கருதாது, அதற்கேற்ற காலத்தையே கருதி அது வருந்துணையும் பகைமேற் செல்லார்.

உரைவிளக்கம்

'தப்பாமை' கருதியவழியே கொள்ளுதல். வலிமிகுதி 'காலங் கருதி' என்பதனாற் பெற்றாம். அது கருதாது செல்லின்,

இருவகைப் பெருமையும் தேய்ந்து வருத்தமும் உறுவாராகலின், 'இருப்பர்' என்றார். இருத்தலாவது, நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரிதல், கூட்டல் என்னும் அறுவகைக் குணங்களுள் மேற்செலவிற்கு மாறாயது. இதனால் காலம் வாராவழிச் செய்வது கூறப்பட்டது.

# குறள் **486** (ஊக்கமுடையான்)

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொரு தகர்

தாக்கற்குப் பேருந் தகைத்து. **(06)**தாக்கற்குப் பேருந் தகைத்து.

இதன்பொருள்

ஊக்கம் உடையான் ஒடு்க்கம்= வலிமிகுதி உடைய அரசன் பகைமேற் செலலாது காலம் பார்த்து இருக்கின்ற இருப்பு; பொரு தகர் தாக்கற்குப் பேரும் தகைத்து= பொருகின்ற தகர், தன்பகைகெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குந் தன்மைத்து.

உரைவிளக்கம்

உவமைக்கண் 'தாக்கற்கு' என்றதனால், பொருளினும் வென்றி எய்தற்பொருட்டு என்பது கொள்க. இதனால் அவ்விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **487** (பொள்ளென)

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்பொள் என ஆங்கே புறம் வேரார் காலம் பார்த்து

துள்வேர்ப்ப ரொள்ளி யவர். **(07)**உள் வேர்ப்பர் ஒள்ளியவர்.

இதன்பொருள்

ஒள்ளியவர்= அறிவுடைய அரசர்; ஆங்கே பொள் எனப் புறம் வேரார்= பகைவர் மிகை செய்தபொழுதே அவர் அறியப் புறத்து வெகுளார்; காலம் பார்த்து உள் வேர்ப்பர்= தாம் அவரை வெல்லுதற்கு ஏற்ற காலத்தினை அறிந்து அது வரும் துணையும் உள்ளே வெகுள்வர்.

உரைவிளக்கம்

'பொள்ளென' என்பது குறிப்புமொழி. 'வேரார்', 'வேர்ப்பர்' எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். அறிய வெகுண்டுழித் தம்மைக் காப்பார் ஆகலிற் 'புறம் வேரார்' என்றும், வெகுளி ஒழிந்துழிப் பின்னும் மிகைசெய்யாமல் அடக்குதல் கூடாமையின் 'உள்வேர்ப்பர்' என்றும் கூறினார்.

# குறள் **488 (**செறுநரைக்**)**

செறுநரைக் காணிற் சுமக்க விறுவரைசெறுநரைக் காணின் சுமக்க இறுவரை

காணிற் கிழக்காந் தலை. **(08)**காணின் கிழக்காம் தலை.

இதன்பொருள்

செறுநரைக் காணின் சுமக்க= தாம் வெல்லக்கருதிய அரசர், பகைவர்க்கு இறுதிக்காலம் வருந்துணையும் அவரைக்கண்டால் பணிக; இறுவரை காணின் தலை கிழக்காம்= பணியவே,

அக்காலம் வந்திறும்வழி அவர் தகைவின்றி இறுவர்.

உரைவிளக்கம்

பகைமை ஒழியும் வரை மிகவும் தாழ்க என்பார் 'சுமக்க' என்றும், அங்ஙனம் தாழவே அவர் தம்மைக் காத்தல்இகழ்வார், ஆகலின் தப்பாமற் கெடுவர் என்பார், அவர் தலை, கீழாம் என்றும் கூறினார். தலைமேற்கொண்டதொரு பொருளைத் தள்ளுங்கால் அது தன் தலைகீழாக விழுமாகலின், அவ்வியல்பு பெறப்பட்டது.

இவையிரண்டு பாட்டானும் இருக்கும்வழிப் பகைமை தோன்றமல் இருக்க என்பது கூறப்பட்டது.

# குறள் **489** (எய்தற்கு)

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையேஎய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே

செய்தற் கரிய செயல். **(09)**செய்தற்கு அரிய செயல்.

இதன்பொருள்

எய்தற்கு அரியது இயைந்தக்கால்= பகையை வெல்லக் கருதும் அரசர் தம்மால் எய்துதற்குஅரிய காலம் வந்து கூடியக்கால்; அந்நிலையே செய்தற்கு அரிய செயல்= அது கழிவதற்கு முன்பே, அது கூடாவழித் தம்மால் செய்தற்கு அரிய வினைகளைச் செய்க.

உரைவிளக்கம்

ஆற்றல் முதலியவற்றால் செய்துகொள்ளப்படாமையின் 'எய்தற்கரிய' என்றும், அது தானே வந்துஇயைதல் அரிதாகலின், 'இயைந்தக்கால்' என்றும், இயைந்தவழிப் பின் நில்லாது

ஒடுதலின், 'அந்நிலையே' என்றும், அது பெறாவழிச் செய்யப்படாமையின் 'செய்தற்கரிய' என்றும் கூறினார்.

இதனால் காலம் வந்துழி விரைந்து செய்க என்பது கூறப்பட்டது.

## குறள் **490 (**கொக்கொக்க**)**

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து மற்று அதன்

குத்தொக்க சீர்த்த விடத்து. **(10)** குத்து ஒக்க சீர்த்த இடத்து.

இதன்பொருள்

கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க= ஒருவினைமேல் செல்லாது இருக்கும் காலத்துக் கொக்கு இருக்குமாறுபோல இருக்க; மற்றுச் சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க= மற்றைச் செல்லும் காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமல் செய்து முடிக்க.

உரைவிளக்கம்

மீன் கோடற்கு இருக்கும்வழி, அது வருந்துணையும் முன்னறிந்து தப்பாமற்பொருட்டு உயிர் இல்லது போன்று இருக்கும் ஆகலானும், எய்தியவழிப் பின்தப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும், இருப்பிற்கும் செயலிற்கும் கொக்கு உவமையாயிற்று. 'கொக்கொக்க' என்றார் ஆயினும் அது கூம்புமாறு போலக் கூம்புக என்றும், 'குத்தொக்க' என்றாராயினும், அது குத்துமாறு போலக் குத்துகவென்றும் உரைக்கப்படும், இது தொழிலுவமம் ஆகலின். உவமை முகத்தால் இருப்பிற்கும் செயலிற்கும் இலக்கணம் கூறியவாறாயிற்று.

# திருக்குறள்- பொருட்பால் **1.** அரசியல்- அதிகாரம் **50.** இடனறிதல்

## பரிமேலழகர் உரை

அதிகாரமுன்னுரை**:** அஃதாவது**,** வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **491 (**தொடங்கற்க**)**

'தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று'தொடங்கற்க எவ் வினையும் எள்ளற்க முற்றும்

'மிடங்கண்ட பின்னல் லது. *(01)'*இடம் கண்டபின் அல்லது.

இதன்பொருள்

முற்றும் இடம் கண்டபின் அல்லது= பகைவரை முற்றுதற்கு ஆவதோர் இடம் பெற்றபின் அல்லது; எவ்வினையும் தொடங்கற்க= அவர்மாட்டு யாதொரு வினையும் தொடங்காது ஒழிக; எள்ளற்க= அவரைச் சிறியர் என்று இகழாது ஒழிக.

உரைவிளக்கம்

முற்றுதல்- வளைத்தல். அதற்கு ஆம் இடமாவது, வாயில்களானும், நூழைகளானும் அவர் புகலொடு போக்கொழியும்வகை அரணினைச் சூழ்ந்து, ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள் நலிவிலாத பல படையிருப்பிற்கும், மதிலும் அகழும் முதலிய அரண் செய்யப்பட்ட அரசிருப்பிற்கும் ஏற்ற நிலக்கிடக்கையும், நீரும் உடையது. அதுபெற்றால் இரண்டும் செய்க என்பதாம்.

## குறள் **492** (முரண்சேர்ந்த)

'முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா'முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் அரண் சேர்ந்து ஆம்

'மாக்கம் பலவுந் தரும். *(02)'*ஆக்கம் பலவும் தரும்.

இதன்பொருள்

முரண்சேர்ந்த மொய்ம்பினவர்க்கும்= மாறுபாட்டோடு கூடிய வலியினை உடையார்க்கும்; அரண்சேர்ந்து ஆம் ஆக்கம் பலவும் தரும்= அரணைச் சேர்ந்தாகின்ற ஆக்கம் பல பயன்களையும் கொடுக்கும்.

உரைவிளக்கம்

'மாறுபாடா'வது, ஞாலம் பொதுவெனப் பொறா அரசர் மனத்தின்கண் நிகழ்வதாகலானும், வலியுடைமை கூறிய அதனாலும் இது பகைமேற் சென்ற அரசர்மேற்றாயிற்று. உம்மை சிறப்பும்மை. அரண் சேராத ஆக்கமும் உண்மையின், ஈண்டு ஆக்கம் விசேடிக்கப்பட்டது. 'ஆக்கம்' என்றது அதற்கு ஏதுவாய முற்றினை. அது கொடுக்கும் பயன்களாவன: பகைவரால் தமக்கு நலிவின்மையும், தாம் நிலைபெற்று நின்று அவரை நலிதலும்

முதலாயின.

# குறள் **493** (ஆற்றாரும்)

'ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து'ஆற்றாரும் ஆற்றி அடுப இடன் அறிந்து

'போற்றார்கட் போற்றிச் செயின். *(03)*'போற்றார் கண் போற்றிச் செயின்.

இதன்பொருள்

ஆற்றாரும் ஆற்றி அடுப= வலியர் அல்லாதாரும், வலியராய் வெல்வர்; இடன் அறிந்து போற்றிப் போற்றார்கண் செயின்= அதற்கு ஏற்ற இடத்தினை அறிந்து தம்மைக் காத்துப் பகைவர்மாட்டு வினைசெய்வராயின்.

உரைவிளக்கம்

வினை என்பதூஉம், தம்மை என்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. காத்தல், பகைவரான் நலிவு வாராமல் அரணானும் படையானும் காத்தல். இவ்வாற்றான், வினைசெய்வராயின் மேற்சொல்லிய (குறள்: 492) வலியின்றியும் வெல்வர் என்பதாம்.

# குறள் **494** (எண்ணியார்)

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்துஎண்ணியார் எண்ணம் இழப்பர் இடன் அறிந்து

'துன்னியார் துன்னிச் செயின். *(04)'*துன்னியார் துன்னிச் செயின்.

இதன்பொருள்

இடன் அறிந்து துன்னியார்= தாம் வினைசெய்தற்கு ஏற்ற இடத்தினை அறிந்து சென்ற அரசர்; துன்னிச் செயின்= அரணைப் பொருந்திநின்று அதனைச் செய்வராயின்; எண்ணியார் எண்ணம் இழப்பர்= அவரை வெல்வதாக எண்ணியிருந்த பகைவர் அவ்வெண்ணத்தினை இழப்பர்.

உரைவிளக்கம்

அரண் என்பது அவாய்நிலையான் வந்தது. எண்ணம் என்றது, எண்ணப்பட்ட தம் வெற்றியை. அதனை இழப்பர் என்றார், அவர் வினைசெய்யாமல் தம்மைக் காத்தமையின். இதனால் அவர் பகைவர் தோற்பர் என்பதாயிற்று.

இவை நான்கு பாட்டானும், பகைவர் அரணின் புறத்து இறுப்பார் அதற்கு ஆம் இடம் அறிதல் கூறப்பட்டது.

# குறள் **495** (நெடும்புனலுள்)

'நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி'நெடும் புனலுள் வெல்லும் முதலை அடும் புனலின்

'னீங்கி னதனைப் பிற. *(05)'*நீங்கின் அதனைப் பிற.

இதன்பொருள்

முதலை நெடும்புனலுள் பிற வெல்லும்= முதலை ஆழமுடைய நீரின்கண் ஆயின் பிறவற்றை எல்லாம் தான் வெல்லாநிற்கும்; புனலின் நீங்கின் அதனைப் பிற அடும்= அப்புனலின்

நீங்குமாயின் அதனைப் பிறவெல்லாம் வெல்லாநிற்கும்.

உரைவிளக்கம்

எனவே, எல்லாரும் தந்நிலத்து வலியர் என்பது கூறப்பட்டது. 'பிற' என்பது, முன்னும் கூட்டப்பட்டது. நிலைப்படா நீரின்கண் பிறவெல்லாம் நிற்றல் ஆற்றாமையின் அவையெல்லாம் முதலைக்கு எளியவாம்; அவை இயங்குதற்கு உரிய நிலத்தின்கண், அஃது இயங்கல் ஆற்றாமையின் அஃது அவற்றிற்கு எல்லாம் எளிதாம் என்றது, மேற்செல்லும் அரசர் பகைவர் நிற்றலாற்றா இடன் அறிந்து செல்வராயின், அவர் தமக்கு எளியராவர்; அன்றித் தாம் நிற்கலாற்றா விடத்துச் செல்வராயின், அவர்க்கு எளியராவர் என்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம். அவரை அவர் நிற்றல் ஆற்றாவிடத்துச் சென்று வெல்க என்பதாம்.

# குறள் **496** (கடலோடா)

'கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு'கடல் ஓடா கால் வல் நெடும் தேர் கடல் ஓடும்

'நாவாயு மோடா நிலத்து. *(06)*'நாவாயும் ஓடா நிலத்து.

இதன்பொருள்

கால் வல் நெடுந்தேர்= நிலத்தின்கண் ஓடும் கால் வலிய நெடிய தேர்கள் கடலின்கண் ஓடமாட்டா; கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா= இனி, அக்கடலின்கண் ஓடும் நாவாய்கள் தாமும், நிலத்தின்கண் ஓடமாட்டா.

உரைவிளக்கம்

'கடலோடா' என்ற மறுதலையடையான், நிலத்துஓடும் என்பது வருவிக்கப்பட்டது. 'கால்வல் நெடுந்தேர்' என்பது, ஓடுதற்கு ஏற்ற காலும், பெருமையும் உடையவாயினும் என்பதுபட நின்றது. மேற்சென்றார் பகைவரிடங்களை அறிந்து, அவற்றிற்கு ஏற்ற கருவிகளான் வினைசெய்க என்பது தோன்ற நின்றமையின். இதுவும் மேலை அலங்காரம் ஆயிற்று.

# குறள் **497** (அஞ்சாமை)

'அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை'அஞ்சாமை அல்லால் துணை வேண்டா எஞ்சாமை

'யெண்ணி யிடத்தாற் செயின். *(07)*'எண்ணி இடத்தான் செயின்.

இதன்பொருள்

எஞ்சாமை எண்ணி இடத்தான் செயின்= பகையிடத்து வினைசெய்யும் திறங்களை எல்லாம் ஒழியாது எண்ணி அவற்றை அரசர் இடத்தொடு பொருந்தச் செய்வராயின்; அஞ்சாமை அல்லால் துணை வேண்டா= அச்செயற்குத் தம் திண்மையல்லது பிறிதொரு துணை வேண்டுவதில்லை.

உரைவிளக்கம்

திண்ணியராய் நின்று செய்து முடித்தலே வேண்டுவதல்லது 'துணைவேண்டா' என்றார், அவ்வினை தவறுதற்கு ஏதுவின்மையின்.

இவை மூன்று பாட்டானும், வினைசெய்தற்குஆம் இடனறிதல் கூறப்பட்டது.

# குறள் **498** (சிறுபடை)

'சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா'சிறு படையான் செல் இடம் சேரின் உறு படையான்

'னூக்க மழிந்து விடும். *(08)*'ஊக்கம் அழிந்து விடும்.

இதன்பொருள்

உறுபடையான்= பெரும்படையுடைய அரசன்; சிறுபடையான் செல் இடம் சேரின்= ஏனைச் சிறுபடை உடையானை அழித்தல் கருதி, அவன் புகலைச் சென்று சாருமாயின்; ஊக்கம் அழிந்து விடும்= அவனால் தன்பெருமை அழியும்.

உரைவிளக்கம்

'செல்லிடம்' அவனுக்குச் செல்லுமிடம். 'அழிந்துவிடும்' என்பது எழுந்திரு்க்கும் என்றாற்போல ஒருசொல். ஊக்கத்தின் அழிவு, உடையான்மேல் ஏற்றப்பட்டது. தன்படைப்பெருமை நோக்கி இடன் நோக்காது செல்வனாயின், அஃது, அப்படைக்கு ஒருங்கு சென்று வினைசெயல் ஆகாமையானாகப் பயிற்சியின்மையானாகப் பெருமையாற் பயனின்றித் தான் அழிந்துவிடும் என்பதாம்.

# குறள் **499** (சிறைநலனுஞ்)

சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்தசிறை நிலனும் சீரும் இலர் எனினும் மாந்தர்

'ருறைநிலத்தோ டொட்ட லரிது. *(09)*'உறை நிலத்தோடு ஒட்டல் அரிது.

இதன்பொருள்

சிறை நலனும் சீரும் இலர் எனினும்= அரண் அழித்தற்கு, அருமையும் பெருமையுமாகிய ஆற்றலும் உடையர் அல்லராயினும்; மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது= வினைக்குரிய மாந்தரை அவர் உறைகின்ற நிலத்தின்கண் சென்று தாக்குதல் அரிது.

உரைவிளக்கம்

'நிலத்தோடு' என்பது வேற்றுமை மயக்கம். ஆண்மையுடையாரைச் சிறுமை நோக்கி இருப்பின்கண் சென்று தாக்கின், அவர் அது விட்டுப்போதல் துணிவினதுஅன்றிச் சாதல் துணிவினராவர்; ஆகவே, அவர்க்குப் பெரும்படை உடையும் என்பதாம்.

# குறள் **500** (காலாழ்)

'காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா'கால் ஆழ் களரின் நரி அடும் கண் அஞ்சா

'வேலாண் முகத்த களிறு. *(10)*'வேல் ஆள் முகத்த களிறு.

இதன்பொருள்

கண் அஞ்சா வேல்ஆள் முகத்த களிறு= பாகர்க்கு அடங்காவுமாய், வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறுகளை; கால் ஆழ் களரின் நரி அடும்= அவை, கால்ஆழும் இயல்பிற்றாய சேற்றுநிலத்துப்பட்டுழி நரி கொல்லும்.

உரைவிளக்கம்

'முகம்' ஆகுபெயர். ஆண்மையும், பெருமையும் உடையாரும்

தமக்கு ஏலா நிலத்துசசெல்லின் அவற்றாற் பயனின்றி மிகவும் எளியரால் அழிவர் என்பது தோன்ற நின்றமையின், இதுவும் அவ்வலங்காரம். 'வேலாழ் முகத்த' என்று பாடம் ஓதுவாருமுளர். வேற்படை குளித்த முகத்தவாயின், அதுவும் நரி அடுதற்கு ஏதுவாய் முடிதலின், அது பாடமன்மை அறிக.

இவை மூன்றுபாட்டானும், பகைவரைச் சார்தலாகா இடனும், சார்ந்துழிப்படும் இழுக்கும் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **51.** தெரிந்துதெளிதல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:** அஃதாவது**,** அமைச்சர் முதலாயினாரைப் பிறப்பு குணம் அறிவு என்பனவற்றையும்**,** செயலையும் காட்சி கருத்து ஆகமம் என்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளிதல். வலிமுதன் மூன்றும் அறிந்து பகைமேற் செல்வானுக்குத் தானே வினையுற்றுச் செய்தற்பொருட்டும்**,** அறைபோகாமற் பொருட்டும் இது வேண்டுதலின்**,** அவற்றின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **501 (**அறம்பொரு**)**

அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்அறம் பொருள் இன்பம் உயிர் அச்சம் நான்கின்

'திறந்தெரிந்து தேறப் படும். *(01)'*திறம் தெரிந்து தேறப் படும்.

இதன்பொருள்

அறம் பொருள் இன்பம் உயிர் அச்சம்= அரசனால் தெளியப்படுவான்ஒருவன்**,** அறமும் பொருளும் இன்பமும் உயிர்ப்பொருட்டான் வரும் அச்சமும் என்னும்; நான்கின் திறம்

தெரிந்து தேறப்படும்- உபதை நான்கின் திறத்தான் மனவியல்பு ஆராய்ந்தால் பின்பு தெளியப்படும்.

உரைவிளக்கம்

அவற்றுள், அற உபாதையாவது: புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரால் இவ்வரசன் அறவோன் அன்மையின் இவனைப்போக்கி அறனும் உரிமையும் உடையான் ஒருவனை வைத்தற்கு எண்ணினம்; இதுதான் யாவர்க்கும் இயைந்தது; நின் கருத்து என்னை? எனச் சூளுறவோடு சொல்லுவித்தல்.

பொருள் உபாதையாவது: சேனைத்தலைவனையும், அவனோடு இயைந்தாரையும் விட்டு, அவரான் இவ்வரசன் வேறன்மாலையன் ஆகலின் இவனைப்போக்கிக் கொடையும் உரிமையும் உடையான் ஒருவனை வைத்தற்கு எண்ணினம்; இதுதான் யாவர்க்கும் இயைந்தது; நின்கருத்து என்னை? எனச் சூளுறவோடு சொல்லுவித்தல்.

இன்ப உபாதையாவது: தொன்றுதொட்டு உரிமையொடு பயின்றாள் ஒரு தவமுதுமகளை விட்டு, அவளால், உரிமையுள் இன்னாள் நின்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்க வேண்டுமென்று என்னை விடுத்தாள்; அவளைக் கூடுவையாயின், நினக்குப் பேரின்பமேயன்றிப் பெரும் பொருளும் கைகூடுமெனச் சூளுறவோடு சொல்லுவித்தல்.

அச்ச உபாதையாவது: ஒரு நிமித்தத்தின் மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவன் இல்லின்கண் அழைப்பித்து, இவர் அறைபோவான் எண்ணற்குக் குழீஇயினார் என்று தான்காவல்செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின், அதனை நாம் முற்படச் செய்து, நமக்கு இனிய அரசன் ஒருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கும் இயைந்தது; நின்கருத்து என்னை? எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இந்நான்கினும் திரிபு இலனாயவழி எதிர்காலத்துந் திரிபிலன்

எனக் கருத்தளவையால் தெளியப்படும் என்பதாம். இவ்வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவர் ஓதியது அறியாது, பிறர் எல்லாம் இதனை உயிரெச்சம் எனப் பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்.

# குறள் **502** (குடிப்பிறந்து)

குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியுகுடிப் பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப் பரியும்

'நாணுடையான் கட்டே தெளிவு. *(02)'*நாண் உடையான் கட்டே தெளிவு.

இதன்பொருள்

குடிப்பிறந்து= உயர்ந்த குடியிற் பிறந்து; குற்றத்தின் நீங்கி= குற்றங்களினின்று நீங்கி; வடுப் பரியும் நாண் உடையான் கட்டே தெளிவு= நமக்கு வடு வருங்கொல் என்று அஞ்சாநிற்கும் நாண் உடையவன்கண்ணதே அரசனது தெளிவு.

உரைவிளக்கம்

குற்றங்களாவன: மேல் அரசனுக்குச் சொல்லிய வகை ஆறும் (குறள்:431 செருக்கு, சினம், காமம்; குறள்:432 இவறல், மாண்பு இறந்த மானம், அளவிறந்த உவகை), மடி, மறப்பு, பிழைப்பு என்று இவை முதலாயவுமாம். நாண், இழிதொழில்களின் மனம் செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலாகிய ஆகம அளவையான் தெரிவன. இந்நான்கும் உடையவனையே தெளிக என்பதாம்.

# குறள் 503 (அரியகற்)

'அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா'அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால்

'லின்மை யரிதே வெளிறு. *(03)*'இன்மை அரிதே வெளிறு.

இதன்பொருள்

அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும்= கற்றற்கு அரிய நூல்களைக் கற்று மேற்சொல்லிய குற்றங்கள் அற்றார் மாட்டும்; தெரியுங்கால் வெளிறு இன்மை அரிது= நுண்ணிதாக ஆராயும் இடத்து வெண்மை இல்லாமை அரிது.

உரைவிளக்கம்

வெண்மை- அறியாமை; அஃது இவர்மாட்டு உளதாவது, மனத்தது நிலையாமையான் ஒரோவழி ஆகலின், 'தெரியுங்கால்' என்றார். காட்சிஅளவையான் தெரிந்தால் அதுவும் இல்லாதாரே தெளியப்படுவர் என்பது குறிப்பெச்சம். இவ்வளவைகளான் இக்குணமும் குற்றமும் தெரிந்து, குணமுடையாரைத் தெளிக என்பது இவை மூன்று பாட்டானும் கூறப்பட்டது.

# குறள் 504 (குணநாடிக்)

'குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்'குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்

'மிகைநாடி மிக்க கொளல். *(04)*'மிகை நாடி மிக்க கொளல்.

இதன்பொருள்

குணம் நாடி= குணம் குற்றங்களுள் ஒன்றே உடையார் உலகத்து இன்மையின் ஒருவன் குணங்களை ஆராய்ந்து; குற்றமும் நாடி= ஏனைக் குற்றங்களையும் ஆராய்ந்து; அவற்றுள் மிகை நாடி= பின் அவ்விரு பகுதியுள்ளும் மிக்கவற்றை ஆராய்ந்து; மிக்க கொளல்= அவனை அம்மிக்கவற்றானே அறிக.

உரைவிளக்கம்

மிகை உடையவற்றை 'மிகை' என்றார். அவையாவன: தலைமையானாக, பன்மையானாக உயர்ந்தன. அவற்றான் அறிதலாவது, குணமிக்கதாயின் வினைக்கு உரியன் என்றும், குற்றம் மிக்கதாயின் அல்லன் என்றும் அறிதல். குணமே உடையார் உலகத்து அரியர் ஆகலின், இவ்வகை யாவரையும் தெளிக என்பது இதனான் கூறப்பட்டது.

# குறள் **505** (பெருமைக்கு)

'பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்

'கருமமே கட்டளைக் கல். *(05)*'கருமமே கட்டளைக் கல்.

இதன்பொருள்

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் கட்டளைக்கல்= பிறப்புக் குணம் அறிவு என்பனவற்றான் மக்கள் எய்தும் பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் உரைகல்லாவது; தத்தம் கருமமே= தாம்தாம் செய்யும் கருமமே, பிறிதில்லை.

உரைவிளக்கம்

இஃது ஏகதேச உருவகம். மக்களது பெருமையும் சிறுமையும்

தப்பாமல் அறியலுறுவார்க்குப் பிற கருவிகளும் உளவாயினும், முடிந்த கருவி செயல் என்பது, தேற்றேகாரத்தாற் பெற்றாம். இதனாற் குணம் குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது.

# குறள் **506** (அற்றாரைத்)

'அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்'அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்று அவர்

'பற்றிலர் நாணார் பழி. *(06)'*பற்று இலர் நாணார் பழி.

இதன்பொருள்

அற்றாரைத் தேறுதல் ஓம்புக= சுற்றம் இல்லாரைத் தெளிதலை ஒழிக; அவர் மற்றுப் பற்று இலர் = அவர் உலகத்தோடு தொடர்பிலர்; பழி நாணார்= ஆகலாற் பழிக்கு அஞ்சார்.

உரைவிளக்கம்

'பற்றிலர்' என்பதனால், சுற்றம் என்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும், புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடை இயல்பு, சுற்றம் இல்லாதார்க்கு இன்மையின், அவர் தெளியப்படார் என்பதாம்.

# குறள் **507** (காதன்மை)

'காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்'காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல்

'பேதைமை யெல்லாந் தரும். *(07)'*பேதைமை எல்லாம் தரும்.

இதன்பொருள்

காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல்= அன்புடைமை பற்றுக்கோடாகத் தமக்கு அறிய வேண்டுவன அறியாதாரைத் தெளிதல்; பேதைமை எல்லாம் தரும்= அரசனுக்கு எல்லா அறியாமையையும் கொடுக்கும்.

உரைவிளக்கம்

தன்னோடு அவரிடைநின்ற அன்புபற்றி, அரசன் அறிவிலார்மேல் வினையை வைப்பின், அஃது அவர் அறிவின்மையாற் கெடும்; கெட்டால், அவர்க்கு உளதே அன்றி, வினைக்குரியாரை அறியாமை, மேல் விளைவு அறியாமை முதலாக அவனுக்கு அறியாமை பல உளவாம் என்பதாம்.

# குறள் **508** **(**தேரான்**)**

'தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை'தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை

'தீரா விடும்பை தரும். *(08)'*தீரா இடும்பை தரும்.

இதன்பொருள்

பிறனைத் தேரான் தெளிந்தான்= தன்னொடு இயைபுடையன் அல்லாதானைப் பிறப்பு முதலியவற்றானும், செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு; வழிமுறை தீரா இடும்பைதரும்= அத்தெளிவு தன் வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்

இயைபு, தன் குடியொடு தொடர்ந்த மரபு. இதனானே அதுவும்

வேண்டும் என்பது பெற்றாம். தெளிதல் அவன்க்ண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால் தன்குலத்துப் பிறந்தாரும், பகைவர் கைப்பட்டுக் கீழாய் விடுவர் என்பதாம். நான்கன் உருபு விகாரத்தான் தொக்கது.

# குறள் **509** **(**தேறற்க**)**

'தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்'தேறற்க யாரையும் தேராது தேர்ந்த பின்

'றேறுக தேறும் பொருள். *(09)'* தேறுக தேறும் பொருள்.

இதன்பொருள்

யாரையும் தேராது தேறற்க= யாவரையும் ஆராயாது தெளியாது ஒழிக; தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக= ஆராய்ந்தபின் தெளியும் பொருட்களை ஐயுறாது ஒழிக.

உரைவிளக்கம்

'தேறற்க' என்ற பொதுமையான், ஒரு வினைக்கண்ணும் தெளியலாகாது என்பது பெற்றாம். ஈண்டுத் 'தேறுக' என்றது, தாற்பரியத்தால் ஐயுறவினது விலக்கின்மேல் நின்றது. 'தேறும் பொருள்' என்றது, அவரவர் ஆற்றற்கு ஏற்ற வினைகளை. 'பொருள்' ஆகுபெயர்.

# குறள் **510** **(**தேரான்தெளிவும்**)**

'தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்'தேரான் தெளிவும்

தெளிந்தான் கண் ஐயுறவும்

'தீரா விடும்பை தரும். *(10)*'தீரா இடும்பை தரும்.

இதன்பொருள்

தேரான் தெளிவும்= அரசன் ஒருவனை ஆராயாது தெளிதலும்; தெளிந்தான்கண் ஐயுறவும்= ஆராய்ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும்; தீரா இடும்பை தரும்= அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்

வினை வைத்தபின் ஒரு தவறு காணாது வைத்து ஐயுறுமாயின், அதனை அவன் அறிந்து இனி இது நில்லாது என்னும் கருத்தான் அவ்வினையை நெகிழ்த்துவிடும்; அதுவேயன்றிப் பகைவரால் எளிதிற் பிரிக்கவும்படும்; ஆதலால், 'தெளிந்தான்கண் ஐயுறவு'ம் ஆகாவாயிற்று. தெளிவிற்கு எல்லை கூறியவாறு.

இவை ஐந்து பாட்டானும் தெளியப்படாதார் இவர் என்பதூஉம், அவரைத்தெளிந்தாற் படும் இழுக்கும், தெளிவிற்கு எல்லையும் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **52.** தெரிந்து வினையாடல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:** அஃதாவது**,** அத்தெளியப்பட்டாரை அவர் செய்யவல்ல வினைகளை அறிந்து அவற்றின்கண்ணே ஆளுந்திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **511 (**நன்மையுந்**)**

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்தநன்மையும் தீமையும் நாடி நலம் புரிந்த

'தன்மையா னாளப் படும். *(01)'*தன்மையான் ஆளப் படும்.

இதன்பொருள்

நன்மையும் தீமையும் நாடி= அரசன் முதற்கண் ஒருவினையைத் தன்கண் வைத்தால்**,** அதன்கண் ஆவனவும் ஆகாதனவும் ஆய செயல்களை ஆராய்ந்தறிந்து**;** நலம்புரிந்த தன்மையான்= அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய இயல்பினை உடையான்**;** ஆளப்படும்= பின் அவனாற் சிறந்த வினைகளிலே ஆளப்படும்.

உரைவிளக்கம்

தன்னை உரிமை அறிதற்பொருட்டு அகம் புறங்கட்கு நடுவாயதோர் வினையை அரசன் தன்கண்வைத்தவழி, அதன்கண் ஆம்

செயல்களையே செய்தவன் பின்னும் அவ்வியல்பினன் ஆதல்பற்றி, அகமாய வினைக்கண்ணே ஆளப்படுவன் என்பது ஆயிற்று. 'புரிந்த' என்ற இறந்தகாலத்தான், முன்னுரிமை அறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றாம்.

# குறள் **512 (**வாரிபெருக்கி**)**

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவைவாரி பெருக்கி வளம் படுத்து உற்றவை

'யாராய்வான் செய்க வினை. *(02)'*ஆராய்வான் செய்க வினை.

இதன்பொருள்

வாரி பெருக்கி= பொருள் வரு வாயில்களை விரியச் செய்து; வளம்படுத்து= அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து; உற்றவை ஆராய்வான்= அவ்வாயில்கட்கும் பொருட்கும் செல்வங்கட்கும் உற்ற இடையூறுகளை நாள்தோறும் ஆராய்ந்து நீக்கவல்லவன்; வினைசெய்க= அரசனுக்கு வினைசெய்க.

உரைவிளக்கம்

வாயில்களாவன: மேல் இறைமாட்சியுள் 'இயற்றலும்' (குறள் 385) என்புழி உரைத்தனவும், உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தையுமாம். (வார்த்தை- தொழில்) செல்வங்களாவன: ஆண்டுப் பொருளும் இன்பமுமாக

உரைக்கப்பட்டன. 'இடையூறு'களாவன: அரசன் வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வர் என்று இவரான் வரும் நலிவுகள்.

# குறள் **513 (**அன்பறிவு**)**

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்குஅன்பு அறிவு தேற்றம் அவா இன்மை இந்நான்கும்

'நன்குடையான் கட்டே தெளிவு. *(03)'*நன்கு உடையான் கட்டே தெளிவு.

இதன்பொருள்

அன்பு= அரசன்மாட்டு அன்பும்; அறிவு= அவனுக்காவன அறியும் அறிவும்; தேற்றம்= அவை செய்தற்கண் கலங்காமையும்; அவாவின்மை= அவற்றாற் பொருள் கையுற்றவழி அதன்மேல் அவா இன்மையுமாகிய; இந்நான்கும் உடையான்கட்டே தெளிவு= இந்நான்கு குணங்களையும் நிலைபெற உடையான் மேலதே வினையை விட்டிருக்கும் தெளிவு.

உரைவிளக்கம்

'இந்நான்கும் நன்குஉடைமை' இவன் செய்கின்ற வினைக்கண் யாதும் ஆராய வேண்டுவது இல்லை என்று அரசன் தெளிதற்கு ஏதுவாகலின், அதன் அதன் பிறப்பிடன் ஆக்கிக் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் ஆடற்கு (ஆடற்கு உரியான்- ஆளுதற்கு உரியவன்)உரியானது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **514 (**எனைவகையாற்**)**

எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்எனை வகையான் தேறியக் கண்ணும் வினை வகையான்

'வேறாகு மாந்தர் பலர். *(04)*'வேறு ஆகும் மாந்தர் பலர்.

இதன்பொருள்

எனை வகையான் தேறியக் கண்ணும்= எல்லா வகையானும் ஆராய்ந்து தெளிந்து வினைவைத்த பின்னும்; வினைவகையான் வேறாகும் மாந்தர் பலர்= அவ்வினையின் இயல்பானே வேறுபடும் மாந்தர் உலகத்துப் பலர்.

உரைவிளக்கம்

கட்டியங்காரன் (சீவகசிந்தாமணி காப்பியத்தின் கதைத்தலைவன் சீவகன். அவனுடைய தந்தை சச்சந்தன், அம் மன்னனின் தலைமை அமைச்சன் கட்டியங்காரன்.)போல அரச இன்பத்தினை வெஃகி விகாரப்படுவது அல்லது, அதனைக்குற்றம் என்று ஒழிந்து தம் இயல்பின் நிற்பார் அரியர் ஆகலின், 'வேறாகு மாந்தர் பலர்' என்றார். வினை வைப்பதற்குமுன் எல்லாக் குணங்களும் உடையராய், வைத்தபின் விகாரப் படுவாரை இடையாயதொரு வினையை வைத்து அறிந்து ஒழிக்க என்பதாம். இதனான் ஒருவகையால் ஒழிக்கப்படுவார் இவர் என்பது கூறப்பட்டது.

# குறள் **515** (அறிந்தாற்றிச்)

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்

'சிறந்தானென் றேவற்பாற் றன்று. *(05)*'சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று.

இதன்பொருள்

அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால்= செய்யும் உபாயங்களை அறிந்து செயலானும் இடையூறுகளானும் வரும் துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்ய வல்லானை அல்லது; வினைதான் சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று= வினைதான் இவன்நம்மாட்டு அன்புடையன் என்று பிறன்ஒருவனை ஏவும் இயல்புடைத்துஅன்று.

உரைவிளக்கம்

'செய்கிற்பாற்கு' என்பது வேற்றுமை மயக்கம். அறிவு ஆற்றல்களான் அல்லது, அன்பான் முடியாது என இதனால் வினையினது இயல்பு கூறப்பட்டது.

# குறள் 516 (செய்வானை)

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோசெய்வானை நாடி வினை நாடிக் காலத்தோடு

'டெய்த வுணர்ந்து செயல். *(06)'*எய்த உணர்ந்து செயல்.

இதன்பொருள்

செய்வானை நாடி= முதற்கண்ணே செய்வானது இலக்கண்த்தை ஆராய்ந்து; வினை நாடி= பின்செய்யப்படும் வினையினது இயல்பை ஆராய்ந்து; காலத்தோடு எய்த உணர்ந்து செயல்= பின் அவனையும் அதனையும், காலத்தொடு படுத்துப் பொருந்த அறிந்து அவனை அதன்கண் ஆடலைச் செய்க.

உரைவிளக்கம்

செய்வானது இலக்கணமும்♣, வினையினது இயல்பும்¶ மேலே

கூறப்பட்டன. காலத்தோடு எய்த உணர்தலாவது, இக்காலத்து இவ்விலக்கணமுடையான் செய்யின் இவ்வியல்பிற்றாய வினைமுடியும் என்று கூ்ட்டி உணர்தல்.

♣ திருக்குறள், *511, 512, 513.*
¶ திருக்குறள், *515.*

# குறள் **517 (**இதனையிதனா**)**

இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து

'ததனை யவன்கண் விடல். *(07)'*அதனை அவன்கண் விடல்.

இதன்பொருள்

இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து= இவ்வினையை இக்கருவியால் இவன் முடிக்கவல்லன் எனக் கூறுபடுத்து ஆராய்ந்து; அதனை அவன்கண் விடல்= மூன்றும் தம்முள் இயைந்தவழி அவ்வினையை அவன்கண்ணே விடுக.

உரைவிளக்கம்

கருவி: துணைவரும் பொருளும் முதலாயின. வினைமுதலும், கருவியும், வினையும் தம்முள் இயைதலாவது, ஓர் ஒன்றோடு ஏனைய இரண்டற்கும் பொருத்தம் உண்டாதல். விடுதல் அதற்கு அவனை உரியன் ஆக்குதல்.

# குறள் **518 (**வினைக்குரிமை**)**

வினைக்குரிமை நாடிய பின்றை யவனைவினைக்கு உரிமை நாடிய பின்றை அவனை

'யதற்குரிய னாகச் செயல். *(08)'*அதற்கு உரியனாகச் செயல்.

இதன்பொருள்

வினைக்கு உரிமை நாடிய பின்றை= ஒருவனை அரசன், தன் வினை செய்தற்கு உரியனாக ஆராய்ந்து துணிந்தால்; அவனை அதற்கு உரியனாகச் செயல்= பின் அவனை அதற்கு உரியனாக உயரச் செய்க.

உரைவிளக்கம்

உயரச்செய்தலாவது, அதனைத் தானே செய்து முடிக்கும் ஆற்றல் உடையவன் ஆக்குதல். அதுசெய்யாக்காலும் கெடும் என்பது கருத்து.

# குறள் **519 (**வினைக்கண்**)**

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாகவினைக்கண் வினை உடையான் கேண்மை வேறு ஆக

'நினைப்பானை நீங்குந் திரு. *(09)'*நினைப்பானை நீங்கும் திரு.

இதன்பொருள்

வினைக்கண் வினை உடையான் கேண்மை= எப்பொழுதும் தன்வினையின்கண்ணே முயறலை உடையான் அவ்வுரிமையால் தனக்குக் கேளாய் ஒழுகுகின்ற தன்மையை; வேறாக நினைப்பானைத் திரு நீங்கும்= அது பொறாதார் சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின், திருமகள் அவனை விட்டு நீங்கும்.

உரைவிளக்கம்

கேளாய் ஒழுகுகின்ற தன்மையாவது, தான் பிறனாய் நில்லாது கேளிர் செய்யும் உரிமையெல்லாம் செய்து ஒழுகுதல். அவனை அவமதிப்பாகக்கொண்டு செறக் கருதுமாயின் பின் ஒருவரும் உட்பட்டு முயல்வார் இல்லையாம்; ஆகவே, தன் செல்வம் கெடும் என்பது கருத்து.

இந்நான்கு பாட்டானும் ஆடற்குரியானை ஆளும்திறம் கூறப்பட்டது.

# குறள் **510 (**நாடோறு**)**

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்நாள் தோறும் நாடுக மன்னன் வினை செய்வான்

'கோடாமை கோடா துலகு. *(10)* 'கோடாமை கோடாது உலகு.

இதன்பொருள்

வினைசெய்வான் கோடாமை உலகு கோடாது= வினை செய்வான் கோடாது ஒழிய உலகம் கோடாது; மன்னன் நாடோறும் நாடுக= ஆதலான் அரசன் அவன் செயலை நாள்தோறும் ஆராய்க.

உரைவிளக்கம்

அஃது ஒன்றனையும் ஆராயவே அதன் வழித்தாய உலகமெல்லாம் ஆராய்ந்தானாம்; அதனால் அவன் உரிமை அழியாமல் தன்னுள்ளே ஆராய்ந்து போதுக என்பதாம். இதனான் ஆண்டவழிச் செய்வது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 53. சுற்றம் தழாஅல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். வினைசெய்வாரைக் கூறி ஏனைச் சுற்றம் கூறுகின்றார் ஆகலின், இது தெரிந்துவினையாடலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் 521 (பற்றற்ற)

'பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்'பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்

'சுற்றத்தார் கண்ணே யுள. *(01)*'சுற்றத்தார் கண்ணே உள.

இதன்பொருள்

பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்= ஒருவன் செல்வம் தொலைந்து வறியனாய வழியும் விடாது தம்மோடு அவனிடைப் பதைமையை எடுத்துக் கொண்டாடும் இயல்புகள்; சுற்றத்தார்

கண்ணே உள= சுற்றத்தார்மாட்டே உளவாவன.

உரைவிளக்கம்

சிறப்பும்மை, வறியனாயவழிப் பாராட்டப்படாமை விளக்கி நின்றது. 'பழைமை' பற்றறாக் காலத்துத் தமக்குச் செய்த உபகாரம். பிறரெல்லாம் அவன் பற்றற்ற பொழுதே தாமும் அவனோடு பற்றறுவராகலின், ஏகாரத் தேற்றத்தின்கண் வந்தது.

இதனாற் சுற்றத்தாரது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **522** (விருப்பறாச்)

விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறாவிருப்பு அறாச் சுற்றம் இயையின் அருப்பு அறா

'வாக்கம் பலவுந் தரும். *(02)'*ாக்கம் பலவும் தரும்.

இதன்பொருள்

விருப்பு அறாச் சுற்றம் இயையின்= அன்பு அறாத சுற்றம் ஒருவற்கு எய்துமாயின்; அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும்= அஃது அவற்குக் கிளைத்தல் அறாத செல்வங்கள் பலவற்றையும் கொடுக்கும்.

உரைவிளக்கம்

உட்பகையின் நீக்குதற்கு 'விருப்பறாச் சுற்றம்' என்றும். தானே வளர்க்கும் ஒருதலையாய செல்வத்தின் நீக்குதற்கு 'அருப்பறாவாக்கம்' என்று விசேடித்தார். தொடை நோக்கி விகாரம் ஆயிற்று. 'இயையின்' என்பது அதனது அருமை விளக்கிநின்றது. 'ஆக்கம்' என்பது, ஆகுபெயர். 'பலவும்' என்றது

அங்கங்கள் ஆறனையும் நோக்கி, பலர்கூடி வளர்த்தலின், அவை மேன்மேற் கிளைக்கும் என்பது கருத்து.

# குறள் **523 (**அளவளா**)**

அளவளா வி◌்ல்லாதான் வாழ்க்கை குளவளாக்அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குள வளாக்

'கோடின்றி நீர்நிறைந் தற்று. *(03)*'கோடு இன்றி நீர் நிறைந்து அற்று.

இதன்பொருள்

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை= அச்சுற்றத்தோடு நெஞ்சு கலத்தல் இல்லாதவன் வாழ்க்கை; குளவளாக் கொடு இன்றி நீர் நிறைந்தற்று= குளப்பரப்புக் கரையின்றி நீர் நிறைந்தாற் போலும்.

உரைவிளக்கம்

சுற்றத்தோடு என்பது அதிகாரத்தான் வந்தது. நெஞ்சு கலப்புத் தன்னளவும் அதனளவும் உசாவுதலான் வருவதாகலின், அளவளாவு எனபது ஆகுபெயர். வாழ்க்கை யென்றதூஉம் அதற்கு ஏதுவாய செல்வங்களை. நிறைதல் என்னும் இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. சுற்றமில்லாதவன் செல்வங்கள் தாங்குவார் இன்மையிற் புறத்துப் போம் என்பதாம்.

# குறள் **524 (**சுற்றத்தாற்**)**

'சுற்றத்தாற் சுற்றப்பட வொழுகல் செல்வந்தான்'சுற்றத்தால் சுற்றப்பட

ஒழுகல் செல்வம்தான்

'பெற்றத்தாற் பெற்ற பயன். *(04)*'பெற்றத்தால் பெற்ற பயன்.

இதன்பொருள்

செல்வம் பெற்றத்தான் பெற்ற பயன்= செல்வம் பெற்றவதனால் ஒருவன் பெற்ற பயனாவது; சுற்றத்தான் சுற்றப்பட ஒழுகல்= தன் சுற்றத்தால் தான் சூழப்படும்வகை அதனைத் தழீஇ ஒழுகுதல்.

உரைவிளக்கம்

'பெற்ற' என்பதனுள் அகரமும், அதனான் எனபதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி விகாரத்தான் தொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற்கு ஏதுவாகலின், இதனைச் செல்வத்திற்குப் பயன் என்றார்.

இவைமூன்று பாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற்கு ஏதுவும், அரணும், பயனும் ஆம் என்பது கூறப்பட்டது.

# குறள் **525** (கொடுத்தலு)

கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கியகொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய

'சுற்றத்தாற் சுற்றப் படும். *(05)*'சுற்றத்தான் சுற்றப்படும்.

இதன்பொருள்

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின்= ஒருவன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலையும், இன்சொற் சொல்லுதலையும் வல்லனாயின்; அடுக்கிய சுற்றத்தான் சுற்றப்படும்= தம்மின் தொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும்.

உரைவிளக்கம்

இரண்டும் அளவறிந்து ஆற்றதல் அரிது என்பது தோன்ற 'ஆற்றின்' என்றார். தம்மின் தொடர்தலாவது, சு◌ற்றத்தது சுற்றமும், அதனது சுற்றமுமாய் அவற்றான் பிணிப்புண்டு வருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமும், சாமமும் என்ப.

# குறள் 526 (பெருங்கொடையான்)

பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்பெரும் கொடையான் பேணான் வெகுளி அவனின்

'மருங்குடையார் மாநிலத் தில். *(06)*'மருங்கு உடையார் மாநிலத்து இல்.

இதன்பொருள்

பெரும் கொடையான் வெகுளி பேணான்= ஒருவன்மிக்க கொடையை உடையனுமாய், வெகுளியை விரும்பானும் ஆயின்; அவனின் மருங்கு உடையார் மாநிலத்து இல்= அவன்போலக் கிளையுடையார் இவ்வுலகத்தில் இல்லை.

உரைவிளக்கம்

மிக்க கொடை, ஒன்றானும் வறுமை எய்தாமல் கொடுத்தல். விரும்பாமை, இஃது அரசற்கு வேண்டுவது ஒன்றுஎன்று அளவிறந்து செய்யாமை.

# குறள் 527 (காக்கை)

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமுகாக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும்

'மன்னநீ ரார்க்கே யுள. *(07)'*அன்ன நீரார்க்கே உள.

இதன்பொருள்

காக்கை கரவா கரைந்து உண்ணும்= காக்கைகள் தமக்கு இரையாயின கண்டவழி, மறையாது இனத்தை அழைத்து அதனோடும்கூட உண்ணாநிற்கும்; ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள= சுற்றத்தான் எய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினை உடையார்க்கே உளவாவன.

உரைவிளக்கம்

அவ்வாக்கங்களாவன: பகையின்மையும், பெருஞ்செல்வமுடைமையும் முதலாயின. எச்சவும்மையான் அறமும் இன்பமுமே அன்றிப் பொருளும் எய்தும் என்பது பெறுதும். அப்பெற்றித்தாய இயல்பென்றது தாம் நுகர்வன எல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.

# குறள் **528 (**பொதுநோக்கான்**)**

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கிபொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்

'னதுநோக்கி வாழ்வார் பலர். *(08)'*அது நோக்கி வாழ்வார் பலர்.

இதன்பொருள்

பொதுநோக்கான் வரிசையா நோக்கின்= எல்லாரையும் ஒருதன்மையராக நோக்காது, அரசன் தத்தம் தகுதிக்கு ஏற்ப நோக்குமாயின்; அதுநோக்கி வாழ்வார் பலர்= அச்சிறப்பு நோக்கி

அவனை விடாது வாழும் சுற்றத்தார் பலர்.

உரைவிளக்கம்

உயர்ந்தார் நீங்குதல் நோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடாது ஒழுகுதல் நோக்கி வரிசைநோக்கை விதித்தார்.

இந்நான்கு பாட்டானும் சுற்றம் தழுவும் உபாயம் கூறப்பட்டது.

# குறள் **529** (தமராகித்)

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்தமர் ஆகித் தன் துறந்தார் சுற்றம் அமராமைக்

'காரண மின்றி வரும். *(09)'*காரணம் இன்றி வரும்.

இதன்பொருள்

தமராகித் தற்றுறந்தார் சுற்றம்= முன் தமராய் வைத்துத் தன்னோடு அமராது யாதானும் ஒருகாரணத்தான் தன்னைப்பிரிந்து போயவர், பின்னும் வந்து சுற்றமாதல்; அமராமைக் காரணம் இன்றி வரும்= அவ்வமராமைக் காரணம், தன்மாட்டு இல்லையாகத் தானே உளதாம்.

உரைவிளக்கம்

'அமராமைக் காரணம் இன்றி' என்றதனான், முன் அஃது உண்டாய்த் துறத்தல் பெற்றாம். அஃதாவது, அரசன் தான் நெறிகெட ஒழுகல், வெறுப்பன செய்தல் என்றிவை முதலியவற்றான் வருவது. ஆக்கம் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடையவராய சுற்றத்தார்க்குச் செயற்கையான் வந்தநீக்கம், அதனையொழிய ஒழியும்;

ஒழிந்தால் அவர்க்கு அன்புசெய்து கொள்ளவேண்டா, பழைய இயல்பாய் நிற்கும் என்பார் 'வரும்' என்றார்.

# குறள் **530** (உழைப்பிரி ்ந்து)

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தஉழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்

'னிழைத்திருந் தெண்ணிக் கொளல். *(10)'*இழைத்து இருந்து எண்ணிக் கொளல்.

இதன்பொருள்

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை= காரணமின்றித் தன்னிடத்து நின்றும் பிரிந்துபோய்ப் பின் காரணத்தான் வந்த சுற்றத்தானை; வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக் கொளல்= அரசன் அக்காரணத்தைச் செய்துவைத்து ஆராய்ந்து தழீஇக் கொள்க.

உரைவிளக்கம்

வாளா 'உழைப்பிரிந்து' என்றமையின், பிரிதற்குக் காரணம் இன்மை பெற்றாம். வருதற்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்துபோய்ப் பகையோடு கூடும் ஆகலின் 'இழைத்திருந்து' என்றும், அன்பின்றிப்போய்ப் பின்னும் காரணத்தான் வந்தமையின் 'எண்ணிக் கொளல்' என்றும் கூறினார்.

பிரிந்துபோய சுற்றத்தாருள் தீமைசெய்யப்போய் அதனை ஒழியவருவானும், அது செய்யாமற்போய்ப் பின் நன்மைசெய்ய வருவானும் தழுவப்படும் ஆகலின், தழுவுமாறு முறையே இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **54.** பொச்சாவாமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:**அஃதாவது, உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து, தற்காத்தலினும் பகையழித்தல் முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத்தாராற் பயனுள்ளது இச்சோர்வு இல்வழியாகலின், இது சுற்றந்தழாலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **531** (இறந்த)

இறந்த வெகுளியிற் றீதே சிறந்தஇறந்த வெகுளியின் தீதே சிறந்த
'வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு. *(01)'*உவகை மகிழ்ச்சியின் சோர்வு.

இதன்பொருள்

சிறந்த உவகை மகிழ்ச்சியிற் சோர்வு= மிக்க உவகைக்களிப்பான் வரும் மறவி; இறந்த வெகுளியின் தீது= அரனுக்கு அளவிறந்த வெகுளியினும் தீது.

உரைவிளக்கம்

மிக்க உவகை பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதம் என்று இவற்றான் வருவது. அளவு பகைவரை அடர்த்தற்கும், கொடியோரை ஒறுத்தற்கும் வேண்டுவது. 'இறந்த வெகுளி' ஒரோவழிப் பகைவரையும் கொல்லும்; இஃது அன்னதன்றித் தன்னையே கோறலின், அதனினும் தீது ஆயிற்று.

## குறள் **532** (பொச்சாப்புக்)

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினைபொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை

'நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. *(02)'*நிச்ச நிரப்புக் கொன்றாங்கு.

இதன்பொருள்

புகழைப் பொச்சாப்புக் கொல்லும்= ஒருவன் புகழினை அவன் மறவி கெடுக்கும்; அறிவினை நிச்ச நிரப்புக் கொன்றாங்கு= அறிவினை நிச்சநிரப்புக் கெடுக்குமாறு போல.

உரைவிளக்கம்

'நிச்சநிரப்பு' நாடோறும் இரவான் வருந்தித் தன் வயிறு நிறைத்தல். அஃது அறிவுடையான்கண் உண்டாயின் அவற்கு இளிவரவானும், பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து, அவன் நன்குமதிப்பினை அழிக்கும். அதுபோல மறவியும், புகழுடையான்கண் உண்டாயின் அவற்குத் தற்காவாமையானும் காரியக்கேட்டானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவன் நன்குமதிப்பினை அழிக்கும் என்பதாயிற்று.

இவை இரண்டுபாட்டானும் பொச்சாப்பினது குற்றம் கூறப்பட்டது.

# குறள் **533 (**பொச்சாப்பார்க்கில்லை**)**

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அது உலகத்து

'தெப்பா னூலோர்க்குந் துணிவு. *(03)'*எப்பால் நூலோர்க்கும் துணிவு.

இதன்பொருள்

பொச்சாப்பார்க்குப் புகழ்மை இல்லை= பொச்சாந்து ஒழுகுவார்க்குப் புகழுடைமை இல்லை; அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு= அவ்வின்மை இந்நீதிநூல் உடையார்க்கேயன்றி உலகத்து எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்பமுடிந்தது.

உரைவிளக்கம்

அரசர்க்கேயன்றி அறமுதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும் கைகூடாமையின் புகழில்லை என்பது தோன்ற, 'எப்பால் நூலோர்க்கும் துணிவு' என்றார்.

# குறள் **534 (**அச்சமுடையார்க்**)**

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லைஅச்சம் உடையார்க்கு அரண் இல்லை ஆங்கு இல்லை

'பொச்சாப் புடையார்க்கு நன்கு. *(04)'*பொச்சாப்பு உடையார்க்கு நன்கு.

இதன்பொருள்

அரண் அச்சம் உடையார்க்கு இல்லை= காடு மலை முதலிய

அரண்களுக்குள்ளே நிற்பினும்; ஆங்கு நன்கு பொச்சாப்பு உடையார்க்கு இல்லை= அதுபோலச் செல்வம்எல்லாம் உடையராயினும், மனத்தின்கண் மறவியை உடையார்க்கு அவற்றான் பயனில்லை.

உரைவிளக்கம்

நன்மைக்கு ஏதுவாகலின், 'நன்கு' என்றார். அச்சமுடையார் நின்ற அரண் அழியுமாறுபோல, மறவியுடையாருடைய செல்வங்களும் அழியும் என்பதாயிற்று.

## குறள் 535 (முன்னுறக்)

முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழைமுன்னுறக் காவாது இழுக்கியான் தன் பிழை

'பின்னூ றிரங்கி விடும். *(05)*'பின் ஊறு இரங்கி விடும்.

இதன்பொருள்

முன்னுறக் காவாது இழுக்கியான்= தன்னாற் காக்கப்படும் துன்பங்களை அவை வருவதற்கு முன்னே அறிந்து காவாது மறந்திருந்தான்; பின் ஊறு தன் பிழை இரங்கிவிடும்= பின் வந்துற்ற காலத்துக் காக்கலாகாமையின் அப்பிழைப்பினை நினைந்து இரங்கிவிடும்.

உரைவிளக்கம்

காக்கப்படும் தன்மைகளாவன: சோர்வு பார்த்துப் பகைவர் செய்வன. ஊற்றின்கண் என்புழி உருபும் சாரியையும் உட்ன்தொக்கன. உற்ற காலத்துக் காக்கல் ஆகாமையின், 'இரங்கி விடும்' என்றார்.

இவை மூன்றுபாட்டானும் பொச்சாப்பு உடையார்க்கு வரும் ஏதம் கூறப்பட்டது.

## குறள் **536** (இழுக்காமை)

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை இழுக்காமை யார் மாட்டும் என்றும் வழுக்காமை

வாயி னதுவொப்ப தில். **(06)** வாயின் அது ஒப்பது இல்.

இதன்பொருள்

இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை வாயின்= அரசர்க்கு மறவாமைக் குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின்; அது ஒப்பது இல்= அதனை ஒக்கும் நன்மை பிறிது இல்லை.

உரைவிளக்கம்

வினைசெய்வார், சுற்றத்தார் என்னும் தம்பாலார்கண்ணும் ஒப்பவேண்டுதலின் 'யார்மாட்டும்' என்றும், தாம் பெருகிய ஞான்றும் சுருங்கிய ஞான்றும் ஒப்பவேண்டுதலின் 'என்றும்' என்றும், எல்லாக் காரியங்களினும் ஒப்பவேண்டுதலின், 'வழுக்காமை' என்றும் கூறினார். 'வாயின்' என்பது முதனிலைத் தொழிற்பெயர் அடியாகவந்த வினையெச்சம். வாய்த்தல்-நேர்படுதல்.

## குறள் **537** (அரியவென்)

அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்அரிய என்று ஆகாத இல்லை பொச்சாவாக்

'கருவியாற் போற்றிச் செயின். *(07)'*கருவியான் போற்றிச் செயின்.

இதன்பொருள்

அரிய என்று ஆகாத இல்லை= இவை செய்தற்கு அரியன என்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்கள் இல்லை; பொச்சாவாக் கருவியான் போற்றிச் செயின்= மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின்.

உரைவிளக்கம்

பொச்சாவாத என்பதன் இறுதிநிலை விகாரத்தான் தொக்கது. அந்தக் கரணமாதலின் 'கருவி' என்றார். இடைவிடாத நினைவும், தப்பாத சூழ்ச்சியும் உடையார்க்கு எல்லாம் எளிதின் முடியும் என்பதாம்.

இவை இரண்டுபாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **538 (**புகழ்ந்தவை**)**

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யாபுகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் செய்யாது

'திகழ்ந்தார்க் கெழுமையு மில். *(08)'*இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.

இதன்பொருள்

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும்= நீதி நூலுடையார் இவை அரசர்க்கு உரியன என்று உயர்த்துக்கூறிய செயல்களைக்

கடைப்பிடித்துச் செய்க; செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்= அங்ஙனம் செய்யாது மறந்தவர்க்கு எழுமையினும் நன்மையில்லை ஆகலான்.

உரைவிளக்கம்

அச்செயல்களாவன ¶: மூவகையாற்றலும், நால்வகை உபாயமும், ஐவகைத் தொழிலும், அறுவகைக் குணமும் முதலாய செயல்கள். சாதி தருமம்ஆகிய இவற்றின் வழீஇயோர்க்கு உள்ளது நிரயத்துன்பமே ஆகலின், 'எழுமையும்இல்' என்றார். 'எழுமை' ஆகுபெயர். இதனான் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன.

(¶ இவற்றுள் மூவகை ஆற்றலை 466 ஆம் குறள் உரையினும், நால்வகை உபாயத்தை 467 ஆம் குறள்உரையினும், ஐவகைத்தொழிலை 462 ஆம் குறள்உரையினும், அறுவகைக்குணத்தை 485 ஆம் குறள்உரையினும் காண்க.)

# குறள் **539** (இகழ்ச்சியிற்)

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம் தம்

'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. *(09)*'மகிழ்ச்சியின் மைந்து உறும் பொழுது.

இதன்பொருள்

தம் மகிழ்ச்சியின் தாம் மைந்து உறும் போழ்து= அரசர் தம் மகிழ்ச்சிக்கண் தாம் வலியுறும்பொழுது; இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக= முற்காலத்து அதனின்ஆய சோர்வாற் கெட்டவர்களை நினைக்க.

உரைவிளக்கம்

காரணங்களோடு அவர்க்கு உளதாய உரிமையை மகிழ்ச்சிமேல் ஏற்றித் 'தம் மகிழ்ச்சியின்' என்றும், இகழ்ச்சியும் கேடும் உடன் தோன்றும்ஆகலின், 'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' என்றும் கூறினார். கெட்டாரை உள்ளவே, தாமும் அவ்வாறே கெடுதும் என்று அதன்கண் மைந்துறார் என்பது கருத்து. எண்ணுக‡ என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(‡ மணக்குடவர்)

# குறள் **540** (உள்ளிய)

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தாஉள்ளியது எய்தல் எளிதுமன் மற்றும்தான்

'னுௗள்ளிய துள்ளப் பெறின். *(10)*'உள்ளியது உள்ளப் பெறின்.

இதன்பொருள்

தான் உள்ளியது எய்துதல் எளிதுமன்- அரசனுக்குத் தான் எய்தநினைத்த பொருளை அந்நினைத்த பெற்றியே எய்துதல் எளிதாம்; மற்றும் உள்ளியது உள்ளப் பெறின்= பின்னும் அதனையே நினைக்கக் கூடுமாயின்.

உரைவிளக்கம்

அது கூடாது என்பது ஒழிந்து நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. அதனையே நினைத்தலாவது, மறவியின்றி அதன்கண்ணே முயறல்.

இவை இரண்டுபாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயம்

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 55. செங்கோன்மை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒருபாற்கோடாது செவ்விய கோல்போறலிற் செங்கோல் எனப்பட்டது. வடநூலாரும் தண்டம் என்றார். அது சோர்வில்லாத அரசனாற் செயற்பாலது ஆகலின் இது 'பொச்சாவாமை'யின்பின் வைக்கப்பட்டது.

## குறள் 541 (ஓர்ந்து)

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்ஓர்ந்து கண்ணோடாது இறை புரிந்து யார் மாட்டும்

'தேர்ந்துசெய் வஃதே முறை. *(01)*'தேர்ந்து செய்வஃதே முறை.

இதன்பொருள்

ஓர்ந்து= தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை நாடி; யார்மாட்டும் கண்ணோடாது= யாவர்மாட்டும் கண்ணோடாது;

இறை புரிந்து= நடுவுநிலைமையைப் பொருந்தி; தேர்ந்து= அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆய்ந்து; செய்வஃதே முறை= அவ்வளவிற்றாகச் செய்வதே முறையாம்.

உரைவிளக்கம்

நடுவு நிற்றல் இறைக்கு இயல்புஆகலின் அதனை இறையென்றும், உயிரினும் சிறந்தார்கண்ணும் என்பார் யார்மாட்டும் என்றும் கூறினார். இறைமை இறை எனவும், செய்வது செய்வஃது எனவும் நின்றன.

இதனாற் செங்கோன்மையது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **542** (வானோக்கி)

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்வான் நோக்கி வாழும் உலகு எல்லாம் மன்னவன்

'கோனோக்கி வாழுங் குடி. *(02)*'கோல் நோக்கி வாழும் குடி.

இதன்பொருள்

உலகு எல்லாம் வான் நோக்கி வாழும்= உலகத்து உயிர் எல்லாம் மழை உளதாயின் உளவாகாநிற்குமே எனினும்; குடி மன்னவன் கோல் நோக்கி வாழும்= குடிகள் அரசன் செங்கோல் உளதாயின் உளவாகா நிற்கும்.

உரைவிளக்கம்

நோக்கிவாழ்தல்- இன்றியமையாமை. வானினாய உணவை 'வான்' என்றும், கோலினாய ஏமத்தைக் 'கோல்' என்றும் கூறினார். அவ்வேமம் இல்வழி உணவு உளதாயினும் குடிகட்கு அதனாற்

பயனில்லை என்பதாம்.

# குறள் **543** (அந்தணர்)

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்அந்தணர் நூற்கும் அறத்திற்கு ஆதியாய்

'நின்றது மன்னவன் கோல். *(03)*'நின்றது மன்னவன் கோல்.

இதன்பொருள்

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது= அந்தணர்க்கு உரித்தாய வேதத்திற்கும், அதனாற் சொல்லப்பட்ட அறத்திற்கும் காரணமாய் நிலைபெற்றது; மன்னவன் கோல்= அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோல்.

உரைவிளக்கம்

அரசர் வணிகர் என்று ஏனையோர்க்கும் உரித்தாயினும், தலைமைபற்றி 'அந்தணர்நூல்' என்றார். "மாதவர் நோன்பும் மடவார் கற்பும்- காவலன் காவல்"[1] அன்றித் தங்காவலான் ஆகலின், ஈண்டு அறம் என்றது அவை ஒழிந்தவற்றை. வேதமும் அறனும் அநாதியாயினும் செங்கோல் இல்வழி நடவாவாகலின், அதனை அவற்றிற்கு ஆதி என்றும், அப்பெற்றியே தனக்கு ஆதியாவது பிறிதில்லை என்பார் நின்றது என்றும் கூறினார்.

இவை இரண்டுபாட்டானும் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது.

**1.** மணிமேகலை: சிறைசெய்காதை, வரி: 208-09.

# குறள் 544 (குடிதழீஇக்)

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னகுடி தழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன்

'னடிதழீஇ நிற்கு முலகு. *(04)'*அடி தழீஇ நிற்கும் உலகு.

இதன்பொருள்

குடி தழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன் அடி= தன் குடிகளையும் அணைத்துச் செங்கோலையும் செலுத்தும் பெருநில வேந்தன் அடியை; தழீஇ நிற்கும் உலகு= பொருந்தி விடார் உலகத்தார்.

உரைவிளக்கம்

அணைத்தல் இன்சொற் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமல் செய்வான் நிலம்முழுதும் ஆளும்ஆகலின் அவனை 'மாநில மன்னன்' என்றும், அவன்மாட்டு யாவரும் நீங்கா அன்பினர் ஆவர் ஆகலின், 'அடி தழீஇ நிற்கும் உலகு' என்றும் கூறினார்.

# குறள் 545 (இயல்புளிக்)

இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்டஇயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட

'பெயலும் விளையுளுந் தொக்கு. *(05)'*பெயலும் விளையுளும் தொக்கு.

இதன்பொருள்

பெயலும் விளையுளும் தொக்கு= பருவமழையும் குன்றாதவிளைவும் ஒருங்குகூடி; இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட= நூல்கள் சொல்லிய இயல்பாற் செங்கோலைச் செலுத்துவானது நாட்டின்கண்ணவாம்.

உரைவிளக்கம்

உளி யென்பது, மூன்றாவதன் பொருள்படுவதோர் இடைச்சொல். வானும் நிலனும் சேரத்தொழிற்பட்டு, வளஞ்சுரக்கும் என்பதாம்.

## குறள் **546** **(**வேலன்று**)**

வேலன்று வென்றி தருவது மன்னவன்வேல் அன்று வென்றி தருவது மன்னவன்

'கோலதூஉங் கோடா தெனின். *(06)*'கோல் அதூஉம் கோடாது எனின்.

இதன்பொருள்

மன்னவன் வென்றிதருவது வேல் அன்று கோல்= மன்னவனுக்குப் போரின்கண் வெற்றியைக் கொடுப்பது அவன் எறியும் வேல்அன்று, கோல்; அதூஉம் கோடாது எனின்= அஃதும் அப்பெற்றித்தாவது, தான் கோடாதாயின்.

உரைவிளக்கம்

கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பது என்பார் 'வேல்அன்று' என்றார். "மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"[2] என்றார் பிறரும். கோடான்[3] என்பது பாடமாயின் கருவியின் தொழில் வினைமுதன்மேல் நின்றதாக உரைக்க.

2.புறநானூறு- 55.
3.மணக்குடவர்.

# குறள் 547 (இறைகாக்கும்)

இறைகாக்கும் வையக மெல்லா மவனைஇறை காக்கும் வையகம் எல்லாம் அவனை

'முறைகாக்கும் முட்டாச் செயின். *(07)'*முறை காக்கும் முட்டாச் செயின்.

இதன்பொருள்

வையகம் எல்லாம் இறை காக்கும்= வையகத்தை எல்லாம் அரசன் காக்கும்; அவனை முறை காக்கும்= அவன்தன்னை அவனது செங்கோலே காக்கும்; முட்டாச் செயின்= அதனை முட்டவந்துழியும் முட்டாமற் செலுத்துவானாயின்.

உரைவிளக்கம்

முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான்[4] கண்ணும், தன் கைகுறைத்தான்[5] கண்ணும் காண்க. 'முட்டாது' என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது.

இவை நான்கு பாட்டானும் அதனைச் செலுத்தினான் எய்தும் பயன் கூறப்பட்டது.

4. மனுநீதிச்சோழன். (சிலப்பதிகாரம், வழக்குரைகாதை, வரி: 53-55.)
5. பாண்டியன் நெடுஞ்செழியன். (சிலப்பதிகாரம், கட்டுரைகாதை, வரி 42-53.)

# குறள் 548 (எண்பதத்தா)

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்எண் பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன்

'றண்பதத்தாற் றானே கெடும். *(08)'*தண் பதத்தான் தானே கெடும்.

இதன்பொருள்

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்= முறைவேண்டினார்க்கு எளிய செவ்வியை உடையனாய் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடும் ஆராய்ந்து, நின்ற உண்மைக்கொப்ப முறைசெய்யாத அரசன்; தண் பதத்தான் தானே கெடும்= தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும்.

உரைவிளக்கம்

'எண்பதத்தான்' என்னும் முற்றுவினை எச்சமும், ஓரா என்னும் வினையெச்சமும், செய்யா என்னும் பெயரெச்ச எதிர்மறையுள் செய்தல்வினை கொண்டன. தாழ்ந்த பதம்- பாவமும் பழியும் எய்திநிற்கும் நிலை. "அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றம்"[6] ஆகலின், பகைவர் இன்றியும் கெடும் என்றார்.

இதனான் முறைசெலுத்தாதானது கேடு கூறப்பட்டது.

6. நான்மணிக்கடிகை- 85.

# குறள் 549 (குடிபுறங்)

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்குடி புறம் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்

'வடுவன்று வேந்தன் றொழில். *(09)'*வடு அன்று வேந்தன் தொழில்.

இதன்பொருள்

குடி புறம் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்= குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, அவர்மாட்டுக் குற்றநிகழின் அதனை ஒறுப்பான் ஒழித்தல்; வேந்தன் வடு அன்று தொழில்= வேந்தனுக்குப் பழியன்று, தொழிலாகலான்.

உரைவிளக்கம்

துன்பம் செய்தல், பொருள் கோடல், கோறல் என ஒறுப்பு மூன்று; அவற்றுள் ஈண்டைக்கு எய்துவன முன்னைய என்பது 'குற்றங்கடிதல்' என்பதனாற் பெற்றாம். தன் கீழ்வாழ்வாரை ஒறுத்தல் அறன் அன்மையின், வடுவாம் என்பதனை ஆசங்கித்து, அஃதாகாது, அரசனுக்கு அவரை அக்குற்றத்தின் நீக்கித் தூயராக்குதலும் சாதிதருமம் என்றார்.

# குறள் **550** (கொலையிற்)

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்கொலையின் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ்

'களைகட் டதனொடு நேர். *(10)'*களை கட்டதனொடு நேர்.

இதன்பொருள்

வேந்து கொடியாரைக் கொலையின் ஒறுத்தல்= அரசன் கொடியவர்களைக் கொலையான் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல்; பைங்கூழ் களை கட்டதனொடு நேர்= உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காத்ததனோடு ஒக்கும்.

உரைவிளக்கம்

கொடியவர் என்றது, தீக்கொளுவுவார், நஞ்சிடுவார்,

கருவியிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள்வார், பிறனில் விழைவார் என்று இவர் முதலாயினாரை. இவரை வடநூலார் ஆததாயிகள் என்ப. இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழிப் புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ்போன்று நலிவு பல எய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசர்க்குச் சாதிதருமம் என்பதாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் செங்கோல்செலுத்தும் வெண்குடை வேந்தற்குத் தீயார்மாட்டு மூவகை ஒறுப்பும் ஒழியற்பால அல்ல என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **56.** கொடுங்கோன்மை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:**அஃதாவது**,** அம்முறையினது கோடுதல் தன்மை. ஈண்டும் உவமையின் பெயர் பொருள்மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறாகலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **551 (**கொலைமேற்**)**

கொலைமேற் கொண்டாரிற் கொடிதே யலைமேற்கொண்கொலை மேற்கொண்டாரின் கொடிதே அலை மேற்கொண்டு

'டல்லவை செய்தொழுகும் வேந்து. *(01)'*அல்லவை செய்து ஒழுகும் வேந்து.

இதன்பொருள்

கொலை மேற்கொண்டாரின் கொடிது= பகைமை பற்றிக் கொல்லுதல் தொழிலை தம்மேற்கொண்டு ஒழுகுவாரினும் கொடியன்**;** அலை மேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து= பொருள் வெஃகிக் குடிகளை அலைத்தல் தொழிலைத் தன்மேற்கொண்டு முறையல்லவற்றைச் செய்தொழுகும் வேந்தன்.

உரைவிளக்கம்

அவர் செய்வது ஒருபொழுதைத் துன்பம், இவன் செய்வது எப்பொழுதும் துன்பமாம் என்பது பற்றி, அவரினும் 'கொடியன்' என்றார். பான்மயக்குறழ்ச்சி. 'வேந்து' என்பது உயர்திணைப்பொருட்கண் வந்த அஃறிணைச்சொல். 'அலை' கொலையினும் கொடிது என்பதாயிற்று.

# குறள் **552** (வேலொடு)

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்வேலொடு நின்றான் இடு என்றது போலும்

'கோலொடு நின்றா னிரவு. *(02)'*கொலொடு நின்றான் இரவு.

இதன்பொருள்

வேலொடு நின்றான்= ஆறலைக்கும் இடத்துத் தனியே வேல்கொண்டு நின்ற கள்வன்; இடு என்றது போலும்= ஆறுசெல்வானை நின் கைப்பொருள் தாவென்று வேண்டுதலோடு ஒக்கும்; கோலொடு நின்றான் இரவு= ஒறுத்தல் தொழிலோடு நின்ற அரசன் குடிகளைப் பொருள்வேண்டுதல்.

உரைவிளக்கம்

வேலொடு நின்றான் என்றதனான் பிறரொடு நில்லாமையும், இரவு என்றதனால் இறைப்பொருள்அன்மையும் பெற்றாம். தாராக்கால் ஒறுப்பல் என்னும் குறிப்பினன் ஆகலின், இரவான் கோடலும் கொடுங்கோன்மையாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் கொடுங்கோன்மையது குற்றம் கூறப்பட்டது.

# குறள் **553 (**நாடொறு**)**

நாடொறு நாடி முறைசெய்ய மன்னவநாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்

'னாடொறு நாடு கெடும். *(03)'*நாள்தொறும் நாடு கெடும்**.**

இதன்பொருள்

நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்= தன் நாட்டு நிகழும் தீமைகளை நாள்தோறும் ஆராய்ந்து அதற்கொக்க முறைமையைச் செய்யாத அரசன்; நாள்தொறும் நாடு கெடும்= நாள் தோறும் நாடு இழக்கும்.

உரைவிளக்கம்

அரசனுக்கு நாடு உறுப்பாகலின், அதன் வினை அவன்மேல் நின்றது. இழத்தல்- பயன் எய்தாமை. மன்னவனோடு நாடோறும்கெடும் என்று உரைப்பாரும் உளர்.[1]

1. மணக்குடவர்.

# குறள் **554 (**கூழுங்**)**

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் கோல் கோடிச்

'சூழாது செய்ய மரசு. *(04)'*சூழாது செய்யும் அரசு.

இதன்பொருள்

சூழாது கோல் கோடிச் செய்யும் அரசு= மேல்விளைவு எண்ணாது,

முறைதப்பச் செய்யும் அரசன்; கூழும் குடியும் ஒருங்கு இழக்கும்= செயலான் முன் ஈட்டிய பொருளையும் பின் ஈட்டுதற்கு ஏதுவாகிய குடிகளையும் சேர இழக்கும்.

உரைவிளக்கம்

கோட என்பது திரிந்துநின்றது. முன்ஈட்டிய பொருள் இழத்தற்கு ஏது வரும்பாட்டான் கூறுப.

# குறள் **555** (அல்லற்பட்)

அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றேஅல்லல்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே

'செல்வத்தைத் தேய்க்கும் படை. *(05)'*செல்வத்தைத் தேய்க்கும் படை.

இதன்பொருள்

அல்லல்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே= அரசன் முறைசெய்யாமையான் குடிகள் துன்பமுற்று அதனைப் பொறுக்கமாட்டாது அழுதகண்ணீ்ர் அன்றே; செல்வத்தைத் தேய்க்கும் படை= அவன் செல்வத்தைக் குறைக்கும் கருவி.

உரைவிளக்கம்

'அழுத கண்ணீர்' அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய மரத்தை என்னாமையின், இஃது ஏகதேச உருவகம். அல்லற்படுத்திய பாவத்தது தொழில் அதற்கு ஏதுவாகிய கண்ணீர்மேல் நின்றது, அக்கண்ணீரிற் கொடியது பிறிது இன்மையின். செல்வம் கடிதின் தேயும் என்பது கருத்து.

# குறள் **556 (**மன்னர்க்குமன்**)**

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃது இன்றேல்

'மன்னாவா மன்னர்க் கொளி. *(06)'*மன்னாவாம் மன்னர்க்கு ஒளி.

இதன்பொருள்

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை= அரசர்க்குப் புகழ்கள்தாம் நிலைபெறுதல் செங்கோன்மையான் ஆம்; அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னாவாம்= அச்செங்கோன்மை இல்லையாயின், அவர்க்கு அப்புகழ்கள்தான் உளவாகா.

உரைவிளக்கம்

விகாரத்தான் தொக்க மூன்றாவது விரித்து ஆக்கம் வருவித்து உரைக்கப்பட்டது. மன்னுதற்கு ஏது புகழாதல் "இந்நிலத்து மன்னுதல் வேண்டின் இசை நடுக"[2] என்பதனானும் அறிக. 'மன்னா'மை ஒருகாலும் நிலையாமை. பழிக்கப்பட்டால் ஒளி மன்னாவாம். ஆகவே தாமும் மன்னார் என்பது ஆயிற்று. வென்றி, கொடை முதலிய ஏதுக்களால் புகழ் பகுதிப்படுதலின், பன்மையாற் கூறினார். அவை எல்லாம் செங்கோன்மை இல்வழி இலவாம் என்பதாம்.

இவை நான்கு பாட்டானும் கொடுங்கோலன் ஆயினான் எய்தும் குற்றம் கூறப்பட்டது.

2. நான்மணிக்கடிகை, 15.

# குறள் **557 (**துளியின்மை**)**

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்ததுளி இன்மை ஞாலத்திற்கு எற்று அற்றே வேந்தன்

'னளியின்மை வாழு முயிர்க்கு. *(07)'*அளி இன்மை வாழும் உயிர்க்கு.

இதன்பொருள்

துளியின்மை ஞாலத்திற்கு எற்று= மழையில்லாமை வையத்து வாழும் உயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும்; அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு= அவ்வகைத் துன்பம் பயக்கும், அரசன் தண்ணளி இல்லாமை அவன் நாட்டு வாழும் குடிகட்கு.

உரைவிளக்கம்

சிறப்புப்பற்றித் 'துளி'யென்றது மழைமேல் நின்றது. 'உயிர்' என்பது குடிகள்மேன் நின்றது. மேல் 'வான்நோக்கி வாழும்'[3] என்றதனை எதிர்மறை முகத்தாற் கூறியவாறு.

3.குறள், 542.

# குறள் 558 (இன்மையின்இன்)

இன்மையி னி்ன்னா துடைமை முறைசெய்யாஇன்மையின் இன்னாது உடைமை முறை செய்யா

'மன்னவன் கோற்கீழ்ப் படின். *(08)'*மன்னவன் கோல் கீழ்ப் படின்.

இதன்பொருள்

முறை செய்யா மன்னவன் கோல் கீழ்ப்படின்= முறை செய்யாத அரசனது கொடுங்கோலின்கீழ் வாழின்; இன்மையின் உடைமை

இன்னாது= யாவர்க்கும் பொருளினது இன்மையினும் உடைமை இன்னாது.

உரைவிளக்கம்

தனக்குரிய பொருளோடு அமையாது, மேலும் வெஃகுவோனது நாட்டுக் கைந்நோவ யாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே ஆகலின், அவ்வுடைமை இன்மையினும் இன்னாதாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் அவன்நாட்டு வாழ்வார்க்கு வரும் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **559** (முறைகோடி)

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடிமுறை கோடி மன்னவன் செய்யின் உறை கோடி

'யொல்லாது வானம் பெயல். *(09)'*ஒல்லாது வானம் பெயல்.

இதன்பொருள்

மன்னவன் முறை கோடிச் செய்யின்= மன்னவன் தான்செய்யும் பொருளை முறைதப்பச் செய்யுமாயின்; உறைகோடி வானம் பெயல் ஒல்லாது= அவன்நாட்டுப் பருவமழை இன்றாம்வகை மேகம் பொழிதலைச் செய்யாது.

உரைவிளக்கம்

இரண்டிடத்தும் கோட என்பன திரிந்துநின்றன. 'உறை' கோடுதலாவது, பெய்யும் காலத்துப் பெய்யாமை. அதற்கு ஏது வருகின்ற பாட்டாற் கூறுப.

# குறள் **560** (ஆபயன்)

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்ஆ பயன் குன்றும் அறு தொழிலோர் நூல் மறப்பர்

'காவலன் காவா னெனின். *(10)'*காவலன் காவான் எனின்

இதன்பொருள்

காவலன் காவான் எனின்= காத்தற்குஉரிய அரசன் உயிர்களைக் காவான் ஆயின்; ஆபயன் குன்றும்= அறன் இல்லாத அவன் நாட்டுப் பசுக்களும் பால் குன்றும்; அறு தொழிலோர் நூல் மறப்பர்= அந்தணரும் நூல்களை மறந்து விடுவர்.

உரைவிளக்கம்

'ஆ பயன்', ஆவாற் கொள்ளும் பயன். அறுதொழிலாவன: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என இவை. பசுக்கள் பால் குன்றியவழி அவிஇன்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரம், கற்பம் என்பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம்; ஆகவே, வானம் பெயல் ஒல்லாது என்பதாயிற்று.

இவை இரண்டு பாட்டானும், அவன் நாட்டின்கண் நிகழும் குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **57.** வெருவந்த செய்யாமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:** அஃ்தாவது**,** குடிகள் அஞ்சுவதும்**,** பகுதி அஞ்சுவதும்**,** தான் அஞ்சுவதுமாகிய தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங்கோன்மைப்பாற் படுதலின்**,** இஃ்து அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **561 (**தக்காங்கு**)**

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தாதக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்

'லொத்தாங் கொறுப்பது வேந்து. *(01)'*ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.

இதன்பொருள்

தக்காங்கு நாடி= ஒருவன் தன்னின் மெலியார் மேல் சென்றவழி அதனை நடுவாக நின்று ஆராய்ந்து; தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து= பின்னும் அது செய்யாமற் பொருட்டு அவனை அக்குற்றத்திற்கு ஒப்ப ஒறுப்பானே அரசனாவான்.

உரைவிளக்கம்

'தக்காங்கு', 'ஒத்தாங்கு' என்பன ஒருசொல். தகுதி யென்பது நடுவுநிலைமையாதல். "தகுதியென ஒன்று நன்றே" [1]என்பதனானும் அறிக. இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர் காரணம்பற்றி மிக ஒறுத்தலும், குடிகள்அஞ்சும் வினையாதல் பெற்றாம்.

1.குறள், 111.

# குறள் **562** (கடிதோச்சி)

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்ககடிது ஓச்சி மெல்ல எறிக நெடிது ஆக்கம்

'நீங்காமை வேண்டு பவர். *(02)*'நீங்காமை வேண்டுபவர்.

இதன்பொருள்

கடிது ஓச்சி= அவ்வொத்தாங்கு ஒறுத்தல் தொடங்குங்கால் அளவிறப்பச் செய்வார்போல் தொடங்கி; மெல்ல எறிக= செய்யுங்கால் அளவிறவாமல் செய்க; ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர்= ஆக்கம் தங்கண் நெடுங்காலம் நிற்றலை வேண்டுவார்.

உரைவிளக்கம்

'கடிதோச்'சல் குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதல் பொருட்டும், 'மெல்லஎறி'தல் யாவரும் வெருவாமைப் பொருட்டுமாம். தொடங்கின அளவிற் குறைதல் பற்றி மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல், எறிதல் என்பன இரண்டும் உவமைபற்றி வந்தன.

இவை இரண்டுபாட்டானும் குடிகள் வெருவந்த செய்யாமையது இயல்பு கூறப்பட்டது.

# குறள் **563** (வெருவந்த)

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயிவெருவந்த செய்து ஒழுகும் வெம் கோலன் ஆயின்

'னொருவந்த மொல்லைக் கெடும். *(03)'*ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.

இதன்பொருள்

வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்= குடிகள் வெருவிய செயல்களைச் செய்துநடக்கும் வெங்கோலனாம் ஆயின்; ஒருவந்தம் ஒல்லைக் கெடும்= அரசன் ஒருதலையாகக் கடிதிற் கெடும்.

உரைவிளக்கம்

'வெங்கோலன்' என்பது ஈண்டு வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன ஒருபொருட்கிளவி. அச்செயல்களும் கேடுகளும் முன்னர்க் கூறப்படும்.

# குறள் **564** (இறைகடிய)

இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்தஇறை கடியன் என்று உரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்

'னுறைகடுகி யொல்லைக் கெடும். *(04)'*உறை கடுகி ஒல்லைக்

கெடும்.

இதன்பொருள்

இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச் சொல்வேந்தன்= குடிகளான் நம்மிறைவன் கடியன் என்று சொல்லப்படும் இன்னாத சொல்லையுடைய வேந்தன்; உறைகடுகி ஒல்லைக் கெடும்= ஆயுளும்குறைந்து செல்வமும் கடிதின் இழக்கும்.

உரைவிளக்கம்

நெஞ்சு நொந்து சொல்லுதலான், இன்னாமை பயப்பதாய சொல்லை 'இன்னாச் சொல்' என்றார். 'உறை' என்பது முதனிலைத் தொழிற்பெயர்; அஃது ஈண்டு ஆகுபெயராய் உறைதலைச் செய்யும் நாள்மேல் நின்றது. அது குறைதலாவது, அச்சொல் இல்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல்.

# குறள் **565** (அருஞ்செவ்வி)

அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்அரும் செவ்வி இன்னா முகத்தான் பெரும் செல்வம்

பேஎய்கண் டன்ன துடைத்து. **(05)**பேஎய் கண்டு அன்னது உடைத்து.

இதன்பொருள்

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்= தன்னைக் காண வேண்டுவார்க்குக் காலம் அரியனாய்க் கண்டால் இன்னாத முகத்தினை உடையானது பெரிய செல்வம்; பேஎய் கண்டன்னது உடைத்து= பேயாற் காணப்பட்டாற் போல்வதொரு குற்றம் உடைத்து.

உரைவிளக்கம்

எனவே இவை இரண்டும் வெருவந்த செய்தல்ஆயின. இவை செய்வானைச் சார்வார் இன்மையின், அவனது செல்வம் தனக்கும் பிறர்க்கும் பயன்படா என்பது பற்றிப் "பேஎய் கண்டன்னதுடைத்து" என்றார். காணுதல்- தன்வயமாக்குதல்.

## குறள் **566** (கடுஞ்சொல்லன்)

கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வகடும் சொல்லன் கண் இலன் ஆயின் நெடும் செல்வம்

'நீடின்றி யாங்கே கெடும். *(06)'*நீடு இன்றி ஆங்கே கெடும்.

இதன்பொருள்

கடும் சொல்லன் கண் இலன் ஆயின் = அரசன் கடிய சொல்லையும் உடையனாய்க் கண்ணோட்டமும் இலன் ஆயின்; நெடுஞ் செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும் = அவனது பெரிய செல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும்.

உரைவிளக்கம்

"வேட்டம் கடுஞ்சொல் மிகுதண்டம் சூதுபொருள் ஈட்டங்கட் காமமோ டேழு" எனப்பட்ட விதனங்களுட் கடும் சொல்லையும், மிகுதண்டத்தையும் இவர் இவ்வெருவந்த செய்தலுள் அடக்கினார். 'கண்' ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடும் சிறுமைத்துஅன்று ஆயினும் என்பார், 'நெடுஞ்செல்வம்' என்றார். நீடுதல்- நீட்டித்தல்.

## குறள் **567** (கடுமொழியுங்)

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தகடு மொழியும் கை இகந்த தண்டமும் வேந்தன்

'னடுமுரண் டேய்க்கு மரம். *(07)'*அடு முரண் தேய்க்கும் அரம்.

இதன்பொருள்

கடு மொழியும் கை இகந்த தண்டமும்= கடிய சொல்லும் குற்றத்தின் மிக்க தண்டமும்; வேந்தன் அடு முரண் தேய்க்கும் அரம்= அரசனது பகை வெல்லுதற்கு ஏற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம்.

உரைவிளக்கம்

கடுமொழியால் தானையும், கையிகந்த தண்டத்தான் தேசமும் கெட்டு, முரண் சுருங்கி வருதலின் 'அரம்' ஆக்கி, திண்ணிதாயினும் தேயும் என்றற்கு 'அடுமுர'ணை இரும்பாக்கினார். ஏகதேச உருவகம். 'அரம்' என்பதனைத் தனித்தனிக் கூட்டுக. இவை ஐந்து பாட்டானும், செவ்வியின்மை, இன்னாமுகமுடைமை, கண்ணோட்டம் இன்மை, கடுஞ்சொற் சொல்லல், கையிகந்த தண்டம் என்று இவைகள் குடியஞ்சும் வினையென்பதூஉம், இவை செய்தான் ஆயுளும் அடுமுரணும் செல்வமும் இழக்கும் என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள் **568** (இனத்தாற்றி)

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன் சினத்து ஆற்றிச்

'சீறிற் சிறுகுந் திரு. *(08)'*சீறின் சிறுகும் திரு.

இதன்பொருள்

காரியத்தைப் பற்றி வந்த எண்ணத்தை அமைச்சர்மேல் வைத்து அவரோடு தானும் எண்ணிச் செய்யாத அரசன்; சினத்து ஆற்றிச் சீறின்= அப்பிழைப்பால் தன்காரியம் தப்பியவழித் தன்னைச் சினமாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி அவரை வெகுளுமாயின்; திருச் சிறுகும்= அவன் செல்வம் நாள்தோறும் சுருங்கும்.

உரைவிளக்கம்

அரசர் பாரம் பொறுத்து உய்த்தல் ஒப்புமையான் அமைச்சரை 'இனம்' என்றும், தான் பின் பிழைப்பாதல் அறிந்து அமையாது, அதனை அவர்மேல் ஏற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே அப்பிழைப்புத் தீருமாறும், அப்பாரம் இனிது உய்க்குமாறும் இலனாம் என்பது நோக்கித் 'திருச்சிறுகும்' என்றும் கூறினார். இதனாற் பகுதியஞ்சும் வினையும், அது செய்தானது குற்றமும் கூறப்பட்டன.

# குறள் 569 (செருவந்த)

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்செரு வந்த போழ்தில் சிறை செய்யா வேந்தன்

'வெருவந்து வெய்து கெடும். *(09)'*வெருவந்து வெய்து கெடும்.

இதன்பொருள்

சிறை செய்யா வேந்தன்= செருவருதற்கு முன்னே தனக்குப் புகல் ஆவதோர் அரண் செய்துகொள்ளாத அரசன்; செருவந்த போழ்தில் வெருவந்து வெய்து கெடும்= அது வந்த காலத்து ஏமம் இன்மையான் வெருவிக் கடிதிற் கெடும்.

உரைவிளக்கம்

பகையை வெருவிச் சேர்ந்தார் நீங்குதலின் தமியனாய்த் தானும் வெருவி, அப்பகை வயத்தனாம் என்பதாம். இதனால் தான் அஞ்சும் வினையும், அது செய்தான் எய்தும் பயனும் கூறப்பட்டன.

## குறள் 570 (கல்லார்ப்)

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்லகல்லார்ப் பிணிக்கும் கடும்கோல் அதுவல்லது

'தில்லை நிலக்குப் பொறை. *(10)*'இல்லை நிலக்குப் பொறை.[1]

இதன்பொருள்

கடுங்கோல் கல்லார்ப்பிணிக்கும்= கடுங்கோலனாய அரசன் நீதிநூன் முதலிய கல்லாதாரைத் தனக்குப் பகுதியாகக் கூட்டாநிற்கும்; அதுவல்லது நிலக்குப் பொறை இல்லை= அக்கூட்டம்அல்லது நிலத்திற்கு மிகையாய பாரம் பிறிது இல்லை.

உரைவிளக்கம்

கடுங்கோல் என்பது ஈண்டு மிக்க தண்டத்தின் மேற்று அன்றி, அதனைச் செய்வான் மேற்று ஆயிற்று. அவன் அது செய்தற்கு இயைவாரை அல்லது கூட்டாமையின் 'கல்லார்ப்பிணிக்கும்' என்றும், ஏனையவற்றை எல்லாம் பொறுக்கின்றது இயல்பாகலின் நிலத்திற்குப் பொறை 'அதுவல்லது இல்லை' என்றும் கூறினார். 'நிலக்கு' என்பது செய்யுள்விகாரம். இதனால் வெருவந்த செய்தலின் குற்றம் கூறப்பட்டது.

1. பார்க்க: குறள், 189.

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 58. கண்ணோட்டம்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை: தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேல் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று. மேல் வெருவந்த செய்யாமையுள் கூறிய அதனையே சிறப்புப்பற்றி விரித்துக்கூறுகின்றமையின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் 571 (கண்ணோட்ட)

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகைகண்ணோட்டம் என்னும் கழி பெரும் காரிகை

'யுண்மையா னுண்டிவ் வுலகு. *(01)'*உண்மையான் உண்டு இவ் உலகு.

இதன்பொருள்

கண்ணோட்டம் என்னும் கழி பெரும் காரிகை உண்மையான்= கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற சிறப்புடைய அழகு அரசர் மாட்டு உண்டாகலான்; இவ்வுலகு உண்டு= இவ்வுலகம்

உண்டாகாநின்றது.

உரைவிளக்கம்

'கழிபெருங்காரிகை' என்புழி ஒருபொருட் பன்மொழி இவ்வுயிர் அழகது சிறப்புணரநின்றது. இவ்வழகு அதற்கு உறுப்பாகலின், 'உண்மையான்' என நிலைபேறும் கூறினார். இன்மை வெருவந்தசெய்தல் ஆகலின், அவர்நாட்டு வாழ்வார் புலியை அடைந்த புல்வாய்இனம் போன்று ஏமஞ்சாராமை பற்றி, 'இவ்வுலகுஉண்டு' என்றார்.

# குறள் 572 (கண்ணோட்டத்)

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலாகண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃது இலார்

'ருண்மை நிலக்குப் பொறை. *(02)'*உண்மை நிலக்குப் பொறை.

இதன்பொருள்

உலகியல் கண்ணோட்டத்து உள்ளது= உலகநடை கண்ணோட்டத்தின்கண் நிகழ்வது; அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை= ஆகலான், அக்கண்ணோட்டம் இல்லாதார் உளராதல் இந்நிலத்துக்குப் பாரமாதற்கே, பிறிது ஒன்றற்கு அன்று.

உரைவிளக்கம்

உலகநடையாவது ஒப்புரவுசெய்தல், புறந்தருதல், பிழைத்தனபொறுத்தல் என்றிவை முதலாயின. அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படார் என்பதுபற்றி, 'நிலக்குப் பொறை' என்றார். ஆதற்கு என்பது சொல்லெச்சம்.

இவை இரண்டு பாட்டானும் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் 573 (பண்ணென்னாம்)

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் கண் என்னாம்

'கண்ணோட்ட மில்லாத கண். *(03)*'கண்ணோட்டம் இல்லாத கண்.

இதன்பொருள்

பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல்= பண் என்ன பயத்ததாம் பாடல்தொழிலோடு பொருத்தம் இன்றாயின்; கண் என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண்= அதுபோலக் கண் என்னபயத்ததாம் கண்ணோட்டம் இல்லாத இடத்து.

உரைவிளக்கம்

'பண்', 'கண்' என்பன சாதிப்பெயர். பண்களாவன பாலையாழ் முதலிய நூற்றுமூன்று. பாடல்தொழில்களாவன: யாழின்கண் வார்தல் முதலிய எட்டும், பண்ணல் முதலிய எட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னும் ஐந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் முதலிய வண்ணங்கள் எழுபத்தாறும்ஆம். இவற்றோடு இயையாதவழிப் பண்ணாற் பயனில்லாதவாறு போலக் கண்ணோட்டத்து இயையாதவழிக் கண்ணாற்பயனில்லை என்பதாம். கண்சென்றவழி நிகழ்தல்பற்றி அதனை இடமாக்கினார். இறுதிக்கட் 'கண்' என்பதனைக் "கண்ணகன் ஞாலம்"‡ என்புழிப்போலக் கொள்க.

‡. திரிகடுகம்-1.

# குறள் **574** **(**உளபோன்**)**

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்உளபோல் முகத்து எவன் செய்யும் அளவினான்

'கண்ணோட்ட மில்லாத கண். *(04)'*கண்ணோட்டம் இல்லாத கண்.

இதன்பொருள்

முகத்து உளபோல் எவன்செய்யும்= கண்டார்க்கு முகத்தின்கண் உளபோல் தோன்றல் அல்லது வேறுஎன்ன பயனைச் செய்யும்; அளவினான் கண்ணோட்டம் இல்லாத கண்= அளவிறவாத கண்ணோடுதலை உடையவல்லாத கண்கள்.

உரைவிளக்கம்

தோன்றல்அல்லது என்னும் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. கழிகண்ணோட்டத்திலிருந்து நீக்குதற்கு, 'அளவினான்' என்றார். ஒருபயனையும் செய்யா என்பது குறிப்பெச்சம்.

# குறள் **575** **(**கண்ணிற்கணி**)**

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃது இன்றேல்

'புண்ணென் றுணரப் படும். *(05)'*புண் என்று உணரப்படும்.

இதன்பொருள்

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்= ஒருவன் கண்ணிற்கு அணியும் கலமாவது கண்ணோட்டம்; அஃது இன்றேல் புண் என்று உணரப்படும்= அக்கலம் இல்லையாயின் அஃது அறிவுடையோரால் புண் என்று அறியப்படும்.

உரைவிளக்கம்

வேறு அணிகலம் இன்மையின் 'கண்ணிற்கு அணிகலம்' என்றும், கண்ணாய்த்தோன்றினும் நோய்களானும், புலன்பற்றலானும் துயர்விளைத்தல் நோக்கிப் 'புண்ணென்று உணரப்படும்' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் ஓடாதுநின்ற கண்ணின் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **576** **(**மண்ணோடி**)**

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோமண்ணோடு இயைந்த மரத்து அனையர் கண்ணோடு

'டியைந்துகண் ணோடா தவர். *(06)'*இயைந்து கண்ணோடாதவர்.

இதன்பொருள்

கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர்= ஓடுதற்கு உரிய கண்ணோடு பொருந்திவைத்து அஃது ஓடாதவர்; மண்ணோடு இயைந்த மரத்தனையர்= இயங்காநின்றார் ஆயினும், மண்ணோடு பொருந்திநிற்கின்ற மரத்தினை ஒப்பர்.

உரைவிளக்கம்

ஓடாதவர் என்புழிச் சினைவினை முதன்மேல்நின்றது. மரமும்

கண்ணோடுஇயைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம். இதனைச் சுதைமண்ணோடு கூடிய மரப்பாவை என்று உரைப்பாரும் உளர்.¶ அஃது உரையன்மை, காணப்படுவ கண்ணான்அன்றி அதன்உள்மறைந்து நிற்கின்ற ஒருசார் உள்ளீட்டாற் கூறியமையானும், "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்- றிரக்கண்டாய்" † என்பதனானும் அறிக.

¶. மணக்குடவர்.

† முத்தொள்ளாயிரம்.

# குறள் 577 (கண்ணோட்டமில்)

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்கண்ணோட்டம் இல்லவர் கண் இலர் கண் உடையார்

'கண்ணோட்ட மின்மையு மில். *(07)*'கண்ணோட்டம் இன்மையும் இல்.

இதன்பொருள்

கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்= கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணுடையரும் அல்லர்; கண் உடையார் கண்ணோட்டம் இன்மையும் இல்= கண்ணுடையவர் கண்ணோட்டம் இலராதலும் இல்லை.

உரைவிளக்கம்

கண்ணுடையவர் காட்சிக்கண்ணே அஃதோடும் என்பதுபற்றிக் 'கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்' எனக்கூறிப் பின் அதனை எதிர்மறை முகத்தான் விளக்கினார். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

இவை இரண்டு பாட்டானும் கண்ணோடாதாராது இழிபு கூறப்பட்டது.

## குறள் 578 (கருமஞ்)

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு

'குரிமை யுடைத்திவ் வுலகு. *(08)'*உரிமை உடைத்து இவ் உலகு.

இதன்பொருள்

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு= முறைசெய்தலாகிய தம்தொழில் அழியாமல் கண்ணோடவல்ல வேந்தர்க்கு; உரிமை உடைத்து இவ்வுலகு= உரித்தாம் தன்மைஉடைத்து இவ்வுலகம்.

உரைவிளக்கம்

தம்மோடு பயின்றார் பிறரை இடுக்கண் செய்துழி, அவரைக் கண்ணோடி ஒறாதார்க்கு, முறைசிதைதல் மேல் "ஓர்ந்து கண்ணோடாது" ṁ என்ற முறையிலக்கணத்தானும் பெற்றாம். முறைசிதைய வரும்வழிக் கண்ணோடாமையும், வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கு இயல்பாதல் அருமையின், 'கண்ணோட வல்லார்க்கு' என்றும், அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங்காலம் சேறலின் 'உரிமையுடைத்து' என்றும் கூறினார்.

இதனாற் கண்ணோடுமாறு கூறப்பட்டது.

ṁ. திருக்குறள்- 541.

# குறள் **579 (**ஒறுத்தாற்றும்**)**

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்ஒறுத்து ஆற்றும் பண்பினார் கண்ணும் கண்ணோடிப்

'பொறுத்தாற்றும் பண்பே தலை. *(09)'*பொறுத்து ஆற்றும் பண்பே தலை.

இதன்பொருள்

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்= தம்மை ஒறுக்கும் இயல்புடையார் இடத்தும்; கண்ணோடிப் பொறுத்து ஆற்றும் பண்பே தலை= கண்ணோட்டம் உடையராய்க் குற்றத்தைப் பொறுக்கும் இயல்பே அரசர்க்குத் தலையாய இயல்பாவது.

உரைவிளக்கம்

பண்பினார் என்றதனால், அவர் பயிற்சி பெற்றாம். 'ஒறுத்தாற்றும், 'பொறுத்தாற்றும்' என்பன ஈண்டொரு சொன்னீர.

# குறள் **580 ()**

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்கபெயக் கண்டும் நஞ்சு உண்டு அமைவர் நயத் தக்க

'நாகரிகம் வேண்டு பவர். *(10)'*நாகரிகம் வேண்டுபவர்.

இதன்பொருள்

நஞ்சு பெயக்கண்டும் உண்டு அமைவர்= பயின்றார் தமக்கு நஞ்சிடக் கண்டுவைத்தும் கண் மறுக்கமாட்டாமையின் அதனை உண்டு பின்னும் அவரோடு மேவுவர்; நயத்தக்க நாகரிகம்

வேண்டுபவர்= யாவரானும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுமவர்.

உரைவிளக்கம்

நாகரிகம் என்பது கண்ணோட்டமாதல், "முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்- நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்" என்பதனானும் அறிக.

அரசர் அவரை ஒறாது கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றம்செய்துழி என்பது இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **59.** ஒற்றாடல்

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:**

அஃதாவது, பகை நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார்மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல். மேற்சொல்லிய இலக்கணத்தானாய அரசனுக்குத் தன் நாடுசெலுத்துங்காலும், பிறர் நாடுகொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றாராகலின், அவ்விருமைக்கும் இன்றியமையாதாய இது முன்வைக்கப்பட்டது.

## குறள் **581 (**ஒற்றுமுறை**)**

ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்ஒற்றும் உரைசான்ற நூலும் இவை இரண்டும்

'தெற்றென்க மன்னவன் கண். *(01)*'தெற்றென்க மன்னவன் கண்.

இதன்பொருள்

ஒற்றும் உரைசான்ற நூலும் இவை இரண்டும்= ஒற்றும்,

புகழமைந்த நீதிநூலுமாகிய இவை இரண்டனையும்; மன்னவன் கண் தெற்றென்க= அரசன் தன் இரண்டு கண்ணுமாகத் தெளிக.

உரைவிளக்கம்

ஒற்றுத் தன்கண் செல்லமாட்டாத பரப்பெல்லாம் சென்று கண்டு, ஆண்டு நிகழ்ந்தன எல்லாம் உணர்த்தலானும், நூல் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன் உணர்வு செல்லமாட்டாத வினைகளை எல்லாம் சொல்லி உணர்த்தலானும், இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும், ஞானக்கண்ணும் ஆகத் துணிந்துகொண்டு ஒழுகுக என்பதாம். ஒற்றனை 'ஒற்று' என்றார்,வேந்தனை 'வேந்து' என்றாற் போல. 'தெற்றென்க' என்பது தெற்றென் என்பது முதனிலையாக வந்த வியங்கோள். அது தெற்றென என்னும் செயவென் எச்சத்தான் அறிக.

இதனால் ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **582** **(**எல்லார்க்கு**)**

எல்லார்க்கு மெல்ல நிகழ்பவை யெஞ்ஞான்றும்எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை யெஞ்ஞான்றும்

'வல்லறிதல் வேந்தன் றொழில். *(02)'*வல் அறிதல் வேந்தன் தொழில்.

இதன்பொருள்

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும் வல் அறிதல்= எல்லார்கண்ணும் நிகழ்வன எல்லாவற்றையும், நாள்தோறும் ஒற்றான் விரைந்தறிதல்; வேந்தன் தொழில்= அரசனுக்கு உரிய தொழில்.

உரைவிளக்கம்

'எல்லார்க்கும்' என்றது மூன்று திறத்தாரையும். நான்காவது ஏழாவதன் பொருட்டு வந்தது. நிகழ்வன 'எல்லாம்' என்றது, நல்லவும் தீயவும் ஆய சொற்களையும், செயல்களையும். அவை நிகழ்ந்தபோதே, அவற்றிற்குத் தக்க அளியாகத் தெறலாகச் செய்ய வேண்டுதலின் 'வல்லறிதல்' என்றும், அவ்விரு தொழிற்கும் அறிதல் காரணமாகலின் அதனையே உபசாரவழக்கால் 'தொழில்' என்றும் கூறினார். ஒற்றான் என்பது, அதிகாரத்தான் வந்தது.

இதனால் ஒற்றினாய பயன் கூறப்பட்டது.

# குறள் **583 (**ஒற்றினா**)**

ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன்

'கொற்றங் கொளக்கிடந்த தில். *(03)'*கொற்றம் கொளக் கிடந்தது இல்.

இதன்பொருள்

ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன்= ஒற்றினானே எல்லார்கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து அவற்றான் எய்தும் பயனை ஆராயாத அரசன்; கொற்றம் கொளக்கிடந்தது இல்= வென்றியடையக் கிடந்தது வேறொரு நெறியில்லை.

உரைவிளக்கம்

அந்நிகழ்ந்தனவும், பயனும் அறியாது பகைக்கு எளியனாதல் பிறிதின் தீராமையின் 'கொற்றங் கொளக்கிடந்தது இல்' என்றார். இதற்குக் 'கொளக்கிடந்தது ஒரு வென்றியில்லை' Γ என்று உரைப்பினும் அமையும்.

இதனால் அத்தொழில் செய்யாதவழி வரும் குற்றம் கூறப்பட்டது.

Γ. மணக்குடவர்.

## குறள் **584** (வினைசெய்வார்)

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்வினை செய்வார் தம் சுற்றம் வேண்டாதார் என்று ஆங்கு

'கனைவரையு மாராய்வ தொற்று. *(04)'*அனைவரையும் ஆய்வது ஒற்று.

இதன்பொருள்

தம் வினை செய்வார் சுற்றம் வேண்டாதார் என்ற அனைவரையும் ஆராய்வது= தம் காரியம் செய்வார், சுற்றத்தார், பகைவர் என்று சொல்லப்பட்ட அனைவரையும் சொல், செயல்களான் ஆராய்வானே; ஒற்று= ஒற்றனாவான்.

உரைவிளக்கம்

'தம்' என்றது, அரசனோடு உளப்படுத்தி அவனுக்குக் காரியம்செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்தும் செய்வனவும், பகைவர் தன் அற்றம் ஆராய்தலும் மேல்தேறப்படுதலும், முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவும் அறிந்து, அவற்றிற்கு ஏறறன செய்யவேண்டுதலின், இம்மூவகையாரையும் எஞ்சாமல் ஆராய வேண்டும் என்பார், 'அனைவரையும் ஆராய்வது ஒற்று' என்றார்.

## குறள் **585** (கடாஅவுரு)

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டுகடாஅ உருவொடு கண் அஞ்சாது யாண்டும்

'முகாஅமை வல்லதே யொற்று. *(05)'*உகாஅமை வல்லதே ஒற்று.

இதன்பொருள்

கடாஅ உருவொடு= ஒற்றப்பட்டார் கண்டால், ஐயுறாத வடிவோடு பொருந்தி; கண் அஞ்சாது= அவர் ஐயுற்று அறியலுறின் செயிர்த்து நோக்கிய அவர் கண்ணிற்கு அஞ்சாது நின்று; யாண்டும் உகாஅமை வல்லதே ஒற்று= நான்கு உபாயமும் செய்தாலும், மனத்துக் கொண்டவற்றை உமிழாமை வல்லவனே ஒற்றனாவான்.

உரைவிளக்கம்

'கடா' என்பது, கடுக்கும் என்னும் பெயரெச்சத்து எதிர்மறை. ஐயுறாத வடிவாவன: பார்ப்பார், வணிகர் முதலாயினோர் வடிவு.

# குறள் **586** (துறந்தார்)

துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து

'தென்செயினுஞ் சோர்வில தொற்று. *(06)'*என் செயினும் சோர்வு இலது ஒற்று.

இதன்பொருள்

துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து= முற்றத் துறந்து ஆராயும் விரத ஒழுக்கினராயும், உள்புகுதற்கு அரியஇடங்கள் எல்லாம் உள்புக்கு ஆராயவேண்டுவன ஆராய்ந்து அறிந்து; என் செயினும் சோர்வு இலது ஒற்று= ஆண்டையார் ஐயுற்றுப்பிடித்து

எல்லாத் துன்பமும் செய்துகேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான்.

உரைவிளக்கம்

விரதஒழுக்கம் தீர்த்த யாத்திரை முதலாயின. 'செயினும்' என்பது, அறவோர்என்று செய்வாரின்மை விளக்கிநின்றது. மேல் @ நால்வகை உபாயத்தினும், சோர்வின்மை சொல்லிவைத்து, ஈண்டும் தண்டத்தைப் பிரித்துவைத்துக் கூறியது, அதனது பொறுத்தற்குஅருமைச் சிறப்புநோக்கி. இதனுட் 'படிவம்' என்றதனை வேடமாக்கித் 'துறந்தார் வேடத்தராகி' என்று உரைப்பாரும் உளர்.$

@ பார்க்க: 585 ஆம் குறளுரை.

$ மணக்குடவர்.

# குறள் **587** (மறைந்தவை)

மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவைமறைந்தவை கேட்க வற்று ஆகி அறிந்தவை

'யையப்பா டில்லதே யொற்று. *(07)*'ஐயப்பாடு இல்லதே ஒற்று.

இதன்பொருள்

மறைந்தவை கேட்க வற்று ஆகி= ஒற்றப்பட்டார் மறையச்செய்த செயல்களை அவர்களுக்கு உள்ளாயினாரால் கேட்க வல்லனாய்; அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று= கேட்டறிந்த செயல்களில் பின் ஐயப்படாது துணியவல்லவனே ஒற்றனாவான்.

உரைவிளக்கம்

மறைந்தவை சொல்லுவாரை அறிந்து, அவர் அயிராமல் சென்று ஒட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாக, செயலாக முன்னே விளைத்து, அத்தொடர்பால் கேட்குங்காலும், உறாதார்போன்று நின்று கேட்கவேண்டுதலின் 'கேட்கவற்றாகி' என்றுும், கேட்டறிந்தவற்றைத் தானே ஐயுற்றுவந்து சொல்லின் அரசனால் அவற்றிற்கு ஏற்ற வினைசெய்யலாகாமையின் 'ஐயப்பாடு இல்லதே' என்றும் கூறினார்.

இவை நான்கு பாட்டானும் ஒற்றினது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **588** (ஒற்றொற்றி)

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோஒற்று ஒற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர்

'ரொற்றினா லொற்றிக் கொளல். *(08)'*ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

இதன்பொருள்

ஒற்று ஒற்றித் தந்த பொருளையும்= ஓர் ஒற்றன் ஒற்றிவந்து அறிவித்த காரியம் தன்னையும்; மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றிக் கொளல்= பிறன்ஓர் ஒற்றனாலும் ஒற்றுவித்து ஒப்புமை கண்டுகொள்க.

உரைவிளக்கம்

ஒற்றப்பட்டாரோடு ஒத்துநின்று மாறுபடக்கூறலும் கூடுமாகலின், ஒருவன் மாற்றம் தேறப்படாது என்பதாம்.

# குறள் **589** ()

ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்ஒற்று ஒற்று உணராமை ஆள்க உடன் மூவர்

'சொற்றொக்க தேறப் படும். *(09)'*சொல் தொக்க தேறப் படும்.

இதன்பொருள்

ஒற்று ஒற்று உணராமை ஆள்க= ஒற்றரை ஆளுமிடத்து ஒருவனை ஒருவன் அறியாமல் ஆள்க; உடன்மூவர் சொல்தொக்க தேறப்படும்= அங்ஙனம் ஆண்ட ஒற்றர் மூவரை ஒருபொருள்மேல் விட்டால், அம்மூவர் சொல்லும், பயனால் ஒத்தனவாயின் அதுமெய்யென்று தெளியப்படும்.

உரைவிளக்கம்

ஆயின் என்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை ஒருவன் அறியின் தம்முள் இயைந்து ஒப்பக் கூறுவாராகலின் 'உணராமையாள்க' என்றும், மூவர்க்கு நெஞ்சு ஒற்றுமைப்படுதலும், பட்டால் நீடுநிற்றலும் கூடாமையின் 'தேறப்படும்' என்றும் கூறினார். இதனானே அஃது ஒத்திலவாயின் பின்னும் ஆராய்க என்பதூஉம் பெற்றாம்.

# குறள் **590** (சிறப்பறிய)

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்சிறப்பு அறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்

'புறப்படுத்தா னாகு மறை. *(10)'*புறப்படுத்தான் ஆகும் மறை.

இதன்பொருள்

ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க= மறைந்தவை அறிந்து கூறிய ஒற்றின்கண் செய்யும் சிறப்பினை, அரசன் பிறர்அறியச்

செய்யாது ஒழிக; செய்யின் மறை புறப்படுத்தான் ஆகும்= செய்தானாயின், தன்னகத்து அடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானாம்.

உரைவிளக்கம்

'மறை'யாவது, அவன் ஒற்றனாயதூஉம், அவன் கூறியதூஉம் ஆம். சிறப்புப்பெற்ற இவன் யாவன் என்றும், இது பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் இறுப்பாரும் அயலார்ஆகலின், 'புறப்படுத்தானாகும்' என்றார்.

இவை மூன்று பாட்டானும், ஒற்றரை ஆளுமாறும், அவரான் நிகழ்ந்தனஅறியுமாறும், அறிந்தால் சிறப்புச்செய்யுமாறும் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 60. ஊக்கமுடைமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கண் கிளர்ச்சி உடைத்தாதல். ஒற்றரான் நிகழ்ந்தனவறிந்து அவற்றிற்கு ஏற்ற வினைசெய்வானுக்கு இஃது இன்றியமையாமையின் ஒற்றாடலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் 591 (உடையர்)

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லாஉடையர் எனப்படுவது ஊக்கம் அஃது இல்லார்

'ருடைய துடையரோ மற்று. *(01)'*உடையது உடையரோ மற்று.

இதன்பொருள்

உடையர் எனப்படுவது ஊக்கம்= ஒருவரை உடையர் என்று சொல்லச் சிறந்தது ஊக்கம்; அஃது இல்லார் மற்று உடையது உடையரோ= அவ்வூக்கம் இல்லாதார் வேறுடையது தானும்

உடையர் ஆவாரோ? ஆகார்.

உரைவிளக்கம்

வேறுடையது என்றது, முன் எய்திநின்ற பொருளை. உம்மை விகாரத்தான் தொக்கது. காக்கும் ஆற்றல் இலர் ஆதலின், அதுவும் இழப்பர் என்பதாம்.

## குறள் **592** (உள்ளமுடைமை)

உள்ள முடைமை யுடைமை பொருளுடைமைஉள்ளம் உடைமை உடைமை பொருள் உடைமை

'நில்லாது நீங்கி விடும். *(02)'*நில்லாது நீங்கி விடும்.

இதன்பொருள்

உள்ளம் உடைமை உடைமை= ஊக்கம் உடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது; பொருள் உடைமை நில்லாது நீங்கி விடும்= மற்றைப் பொருளுடைமை நிலைநில்லாது நீங்கிப்போம்.

உரைவிளக்கம்

'உள்ளம்' ஆகுபெயர். ஊக்கம், உள்ளத்துப் பண்பாகலின் அதற்கு நிலைநிற்றலும், பொருள் உடம்பினும் வேறாய் அழிதன் மாலைத்து ஆகலின், அதற்கு நிலைநில்லாமையும் கூறினார். கூறவே அஃது உடைமை அன்று என்பது பெறப்பட்டது.

## குறள் **593** (ஆக்கமிழந்)

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்கஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் ஊக்கம்

'மொருவந்தங் கைத்துடை யார். *(03)'*ஒருவந்தம் கைத்து உடையார்.

இதன்பொருள்

ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார்= இழந்தாராயினும் யாம் கைப்பொருளை இழந்தேம் என்று அலமரார்; ஒருவந்தம் கைத்து உடையவர்= நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக உடையார்.

உரைவிளக்கம்

'ஆக்கம்' ஆகுபெயர். ஒருவந்தமாய ஊக்கம் என்க. 'கைத்து' கையகத்ததாகிய பொருள். "கைத்துண்டாம் போழ்தே கரவாது அறஞ்செய்ம்மின்"[И] என்றார் பிறரும். அல்லாமைக்கு ஏதுவருகின்ற பாட்டாற் கூறுப.

И. நாலடியார், 19.

# குறள் 594 (ஆக்கமதர்)

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலாஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் அசைவு இலா

'வூக்க முடையா னுழை. *(04)'*ஊக்கம் உடையான் உழை.

இதன்பொருள்

அசைவு இலா ஊக்கம் உடையானுழை= அசைவில்லாத ஊக்கத்தை உடையான் மாட்டு; ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும்= பொருள்தானே வழி வினவிக்கொண்டு செல்லும்.

உரைவிளக்கம்

'அசைவின்'மை இடுக்கண் முதலியவற்றால் தளராமை. வழிவினவிச் சென்று சார்வார்போலத் தானே சென்று சாரும் என்பார், 'அதர்வினாய்ச் செல்லும்' என்றார்.

எய்திநின்ற பொருளினும், அதற்குக் காரணமாய 'ஊக்கம்' சிறந்தது என்பது இவை நான்கு பாட்டானும் கூறப்பட்டது.

# குறள் **595** (வெள்ளத்தனை)

வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தவெள்ளத்து அனைய மலர் நீ◌ட்டம் மாந்தர் தம்

'முள்ளத் தனைய துயர்வு. *(05)'*உள்ளத்து அனையது உயர்வு.

இதன்பொருள்

வெள்ளத்து அனைய மலர்நீட்டம்= நின்ற நீரின் அளவினவாம் நீர்ப்பூக்களின் தாளினது நீளங்கள்; மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு= அதுபோல் மக்கள்தம் ஊக்கத்து அளவினதாம் அவர் உயர்ச்சி.

உரைவிளக்கம்

'மலர்' ஆகுபெயர். நீர்மிக்கதுணையும் மலர்த்தாள் நீளும் என்பதுபட, 'வெள்ளத்தனைய' என்றார். இவ்வுவமையாற்றலான் ஊக்கம் மிக்கதுணையும் மக்கள் உயர்வர் என்பது பெறப்பட்டது. 'உயர்'தல் பொருள், படைகளான் மிகுதல்.

# குறள் **596** (உள்ளுவ)

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றதுஉள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் மற்று அது

'தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. *(06)'*தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

இதன்பொருள்

உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்= அரசராயினார் கருதுவது எல்லாம் தம் உயர்ச்சியையே கருதுக; அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து= அவ்வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக்கருத்துத் தள்ளாமை நீர்மை உடைத்து.

உரைவிளக்கம்

உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளியவழியும், தாளாண்மையில் தவறின்றி நல்லோரான் பழிக்கப்படாமையின், தள்ளாவியற்கைத்து என்பதாம். மேல் 'உள்ளத்தனையதுயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு.

# குறள் **597** **(**சிதைவிடத்**)**

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்சிதைவு இடத்து ஒல்கார் உரவோர் புதை அம்பின்

'பட்டுப்பா டூன்றுங் களிறு. *(07)'*பட்டுப் பாடு ஊன்றும் களிறு.

இதன்பொருள்

களிறு புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும்= களிறு புதையாகிய அம்பாற் புண்பட்ட இடத்துத் தளராது தன் பெருமையை நிலைநிறுத்தும்; உரவோர் சிதைவிடத்து ஒல்கார்= அதுபோல ஊக்கமுடையார், தாம்கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத் தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர்.

உரைவிளக்கம்

'புதை' அம்புக்கட்டு; பன்மை கூறியவாறு. பட்டால் என்பது 'பட்டு' எனத் திரிந்துநின்றது. 'ஒல்காமை' களிற்றுடனும், 'பாடூன்று'தல் உரவோருடனும் சென்று இயைந்தன. தள்ளினும் தவறாது உள்ளியது முடிப்பர் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் ஊக்கம்உடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

## குறள் **598** (உள்ளமிலாத)

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்துஉள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து

'வள்ளிய ரென்னுஞ் செருக்கு. *(08)'*வள்ளியர் என்னும் செருக்கு.

இதன்பொருள்

உள்ளம் இலாதவர்= ஊக்கம் இல்லாத அரசர்; உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு எய்தார்= இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேம் என்று தம்மைத்தாம் மதித்தலைப் பெறார்.

உரைவிளக்கம்

ஊக்கம் இல்லையாகவே முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இலவாம் ஆகலின், 'செருக்கெய்தார்' என்றார். கொடை வென்றியின் ஆய இன்பம், தமக்கல்லது பிறர்க்குப் புலன்ஆகாமையின் தன்மையான் கூறப்பட்டது.

## குறள் **599** (பரியது)

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானைபரியது கூர்ங் கோட்டது ஆயினும்

'வெரூஉம் புலிதாக் குறின். *(09)*'வெரூஉம் புலி தாக்குறின்.

இதன்பொருள்

பரியது கூர்ங் கோட்டது ஆயினும்= எல்லா விலங்கினும் தான் பேருடம்பினது; அதுவேயும் அன்றிக் கூரிய கோட்டையும் உடையது ஆயினும்; யானை புலி தாக்குறின் வெரூஉம்= யானைத் தன்னைப் புலி எதிர்ப்படின் அதற்கு அஞ்சும்.

உரைவிளக்கம்

பேருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின் மிக்க மெய்வலியும், கருவிச்சிறப்பும் உடைத்தாயினும், யானை ஊக்கம் இன்மையான் அஃதுஉடைய அதற்கு அஞ்சும் என்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியும், கருவிச்சிறப்பும் உடையராயினும், அரசர் ஊக்கம் இலராயின் அஃது உடைய அரசர்க்கு அஞ்சுவர் என்பது தோன்ற நின்றமையின், பிறிது மொழிதல்.

# குறள் **600** (௬00)

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃது இல்லார்

'மரமக்க ளாதலே வேறு. *(10)*'மரம் மக்கள் ஆதலே வேறு.

இதன்பொருள்

ஒருவற்கு உரம் உள்ள வெறுக்கை= ஒருவற்குத் திண்ணிய அறிவாவது ஊக்கம்மிகுதி; அஃது இல்லார் மரம்= அவ்வூக்கம்

மிகுதிஇல்லாதார் மக்கள் ஆகார், மரங்களாவார்; மக்களாதலே வேறு= சாதிமரங்களோடு, இம்மரங்களிடை வேற்றுமை, வடிவுமக்கள்வடிவே, பிறிதில்லை.

உரைவிளக்கம்

'உரம்' என்பது அறிவாதல், "உரன் என்னும்தோட்டியான்"S என்பதனானும் அறிக. 'மரம்' என்பது சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவும், காரியமுயற்சியும் இன்மைபற்றி 'மரம்' என்றும், மரத்திற்குள்ள பயன்பாடுஇன்மை பற்றி 'மக்களாதலே வேறு' என்றும் கூறினார். பயன்: பழம் முதலியவும் தேவர்கோட்டம், இல்லம், தேர், நாவாய்கட்கு உறுப்பாதலும் முதலிய.

இவை மூன்று பாட்டானும் ஊக்கம்இல்லாதார் இழிபு கூறப்பட்டது.

S. குறள், 24.

# திருக்குறள் பொருட்பால்- **1.** அரசியல்- அதிகாரம் **61.** மடியின்மை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:**

அஃதாவது**,** கருதியன செய்யுங்கால் சோம்புதல் இல்லாமை. ஊக்கமுடையார்க்கு ஒரோவழிக் குணவயத்தான் மடிவருதல் நோக்கி இஃது ஊக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **601 (**குடியென்னுங்**)**

குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னுகுடி என்னும் குன்றா விளக்கம் மடி என்னும்

'மாசூர மாய்ந்து விடும். *(01)'*மாசு ஊர மாய்ந்து விடும்.

இதன்பொருள்

குடி என்னும் குன்றா விளக்கம்= தான் பிறந்த குடியாகிய நந்தாவிளக்கு**;** மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும்= ஒருவன் மடியாகிய இருள் அடர நந்திப்போம்.

உரைவிளக்கம்

உலகநடையுள்ள துணையும் இடையறாது தன்னுள் பிறந்தாரை விளக்குதலின், குடியைக் 'குன்றா விளக்கம்' என்றும், தாமதகுணத்தான் வருதலின் மடியை 'மாசு' என்றும், அஃது ஏனை இருள்போலாது, அவ்விளக்கைத் தான் அடர்ந்து மாய்க்கும் வலியுடைமையின், 'மாசூர மாய்ந்துகெடும்' என்று கூறினார். 'கெடு'தல் பெயர்வழக்கமும் இல்லையாதல்.

# குறள் **602** (மடியை)

மடியை மடியா வொழுகல் குடியைக் /மடியை மடியா ஒழுகல் குடியைக்

'குடியாக வேண்டு பவர். *(02)* /'குடியாக வேண்டுபவர்.

இதன்பொருள்

குடியைக் குடியாக வேண்டுபவர்= தாம் பிறந்த குடியை மேன்மேலும் நற்குடியாக வேண்டுவார்; மடியை மடியா ஒழுகல்= மடியை மடியாகவே கருதி முயற்சியோடு ஒழுகுக.

உரைவிளக்கம்

முயற்சியோடு என்பது அவாய்நிலையான் வந்தது. நெருப்பிற் கொடியது பிறிதின்மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக என்றாற்போல, மடியின் தீயது பிறிதின்மைபற்றிப் பின்னும் அப்பெயர்தன்னானே கூறினார். அங்ஙனம் கருதியதனைக் கடிந்து முயன்று ஒழுகவே தாம்உயர்வர்; உயரவே குடியுயரும் என்பார், 'குடியைக் குடியாக வேண்டுபவர்' என்றார். அங்ஙனம் ஒழுகாக்கால், குடிஅழியும் என்பது கருத்து. இனி 'மடியா' என்பதனை வினையெச்சமாக்கிக் கெடுத்தொழுகுகI என்று

உரைப்பாரும் உளர்.

I. மணக்குடவர்.

# குறள் **603** (மடிமடிக்கொண்)

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த/மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த

'குடிமடியுந் தன்னினு முந்து. *(03)'*/குடி மடியும் தன்னினும் முந்து.

இதன்பொருள்

மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி= விடத்தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண்டொழுகும் அறிவில்லாதான் பிறந்த குடி; தன்னினும் முந்து மடியும்= அவன்தன்னினும் முந்துற அழியும்.

உரைவிளக்கம்

அழிவு தருவதனை அகத்தேகொண்டு ஒழுகதலின் 'பேதை' என்றும், அவனால் புறந்தரப்படுவது ஆகலின், குடிதன்னினும் முந்துற அழியும் என்றும் கூறினார். ஆக்கத்திற் பிற்படினும், அழிவின் முற்படும் என்பதாம்.

# குறள் **604** (குடிமடிந்து)

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்துகுடி மடிந்து குற்றம் பெருகும் மடி மடிந்து

'மாண்ட வுஞற்றில வர்க்கு. *(04)'*மாண்ட உஞற்று இலவர்க்கு.

இதன்பொருள்

மடி மடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு= மடியின்கண்ணே வீழ்தலான் திருந்திய முயற்சி இலராயினார்க்கு; குடி மடிந்து குற்றம் பெருகும்= குடியும் மடிந்து குற்றமும் பெருகும்.

உரைவிளக்கம்

'மடிந்து' எனத் திரிந்துநின்ற வினையெச்சம் 'இலவர்' என்னும் குறிப்புவினைப் பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க்கூறுப.

இவை நான்கு பாட்டானும் மடியின் தீமை கூறப்பட்டது.

# குறள் **605** (நெடுநீர்)

நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்நெடுநீர் மறவி மடி துயில் நான்கும்

'கெடுநீரார் காமக் கலன். *(05)'*கெடும் நீரார் காமக் கலன்.

இதன்பொருள்

மடி நெடுநீர் மறவி துயில் நான்கும்= மடியும், விரைந்துசெய்வதனை நீட்டித்துச் செய்யும் இயல்பும், மறப்பும், துயிலும்ஆகிய இந்நான்கும்; கெடும் நீரார் காமக் கலன்= இறக்கும் இயல்பினை உடையார் விரும்பி ஏறும் மரக்கலம்.

உரைவிளக்கம்

முன்னிற்கற்பாலதாய 'மடி' செய்யுள் நோக்கி இடைநின்றது. நெடுமையாகிய காலப்பண்பு, அதன்கண்நிகழ்வதாய செயன்மேல் நின்றது. காலநீட்டத்தையுடைய செயல் முதல்

மூன்றும் தாமதகுணத்தின் தோன்றி உடன்நிகழ்வதாகலின், மடியோடு ஒருங்கு எண்ணப்பட்டன. இறக்கும் இயல்பு- நாள்உலத்தல். இவை துன்புறு நீரார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி, அவர் விரும்பிக்கொண்டவழித் துன்பத்திடை வீழ்தலின், நாள் உலந்தார்க்கு ஆக்கம்பயப்பது போன்று காட்டி, அவர் விரும்பி ஏறியவழிக் கடலிடை வீழ்க்கும் கலத்தினை ஒக்கும் என்னும் உவமைக் குறிப்புக் 'காமக்கலன்' என்னு்ம் சொல்லான் பெறப்பட்டது. இதற்கு விரும்பிப் பூணும் ஆபரணம் என்று உரைப்பாரும் உளர்.

# குறள் 606 (படியுடையார்)

படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்படி உடையார் பற்று அமைந்தக் கண்ணும் மடி உடையார்

'மாண்பய னெய்த லரிது. *(06)*'மாண் பயன் எய்தல் அரிது.

இதன்பொருள்

படி உடையார் பற்று அமைந்தக்கண்ணும்= நிலம் முழுதும் ஆண்டாராது செல்வம் தானே வந்து எய்தியவிடத்தும்; மடி உடையார் மாண் பயன் எய்தல் அரிது= மடியுடையார் அதனான் மாண்ட பயனை எய்துதல் இல்லை.

உரைவிளக்கம்

உம்மை எய்தாமை விளக்கிநின்றது. மாண்பயன்- பேரின்பம். அச்செல்வம் அழியாமல் காக்கும் முயற்சிஇன்மையின் அழியும்;அழியவே, தம்துன்பம் நீங்கா என்பதாம். இதற்கு நிலம் முழுதுமுடைய வேந்தர் துணையாதல் கூடியவிடத்தும்¢ என்று உரைப்பாரும் உளர்.

₵. மணக்குடவர்.

# குறள் **607 (**இடிபுரிந்**)**

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்துஇடி புரிந்து எள்ளும் சொல் கேட்பர் மடி புரிந்து

'மாண்ட வுஞற்றி லவர். *(07)'*மாண்ட உஞற்று இலவர்.

இதன்பொருள்

மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர்= மடியை விரும்புதலான் மாண்ட முயற்சி இல்லாதார்; இடி புரிந்து எள்ளும் சொல் கேட்பர்= தம் நாட்டார்முன் கழறுதலை மிகச்செய்து அதனாற் பயன் காணாமையின் பின் இகழ்ந்து சொல்லும் சொல்லைக் கேட்பர்.

உரைவிளக்கம்

'இடி'$ என்னும்முதனிலைத் தொழிற்பெயரான், நட்டார் என்பது பெற்றாம். அவர் இகழ்ச்சி சொல்லவே, பிறர்இகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது. அவற்றிற்கு எல்லாம் மாறுசொல்லும் ஆற்றல் இன்மையின், 'கேட்பர்' என்றார்.

$. குறள்- 784.

# குறள் **608 (**மடிமை**)**

மடிமை குடிமைக்கட் டங்கி்ற்றன் னொன்னார்க்மடிமை குடிமைக் கண் தங்கின் தன் ஒன்னார்க்கு

'கடிமை புகுத்தி விடும். *(08)'*அடிமை புகுத்தி விடும்.

இதன்பொருள்

மடிமை குடிமைக்கண் தங்கின்= மடியினது தன்மை குடிமை உடையான்கண்ணே தங்குமாயின்; தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்தி விடும்= தன் பகைவர்க்கு அடியனாம் தன்மையை அடைவித்து விடும்.

உரைவிளக்கம்

'மடியி'னது தன்மை காரியக்கேடு. 'குடிமை', குடிசெய்தல்தன்மை. அஃது அதனை உடைய அரசன்மேற்றாதல், 'தன் ஒன்னார்க்கு' என்றதனான் அறிக. அடியனாந்தன்மை, தாழ்ந்துநின்று ஏவல் கேட்டல்.

இவை நான்கு பாட்டானும் மடிமைக் குற்றங்கள் கூறப்பட்டன.

# குறள் 609 (குடியாண்மை)

குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்குடி ஆண்மையுள் வந்த குற்றம் ஒருவன்

'மடியாண்மை மாற்றக் கெடும். *(09)'*மடி ஆண்மை மாற்றக் கெடும்.

இதன்பொருள்

ஒருவன் மடி ஆண்மை மாற்ற= ஒருவன் தன் மடியாளும் தன்மையை ஒழிக்கவே; குடி ஆண்மையுள் வந்த குற்றம் கெடும்= அவன் குடியுள்ளும், ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் கெடும்.

உரைவிளக்கம்

'மடியா'ளும் தன்மை, மடியுடைமைக்கு ஏதுவாய தாமதகுணம். 'குடியாண்மை' என்பது, உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த 'குற்றம்' என்பது, மடியானன்றி முன்னே பிறகாரணங்களான்♣ நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சி உடையனாக நீங்கும் என்பதாம்.

♣ . காலம், இடம், செய்வினையின் மூலம், முடிவு முதலிய அறியாதிருத்தலும், சூழ்வன சூழாதிருத்தலும், துணைவலிமை தெரியாமையும் முதலானவை.

# குறள் **610** (மடியிலா)

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்மடி இலா மன்னவன் எய்தும் அடி அளந்தான்

'றாஅய தெல்லா மொருங்கு. *(10)'*தாஅயது எல்லாம் ஒருங்கு.

இதன்பொருள்

அடி அளந்தான் தாஅயது எல்லாம்= தன் அடியளவானே எல்லாவகை உலகையும் அளந்த இறைவன் கடந்த பரப்பு முழுதையும்; மடி இலா மன்னவன் ஒருங்கு எய்தும்= மடியிலாத அரசன் முறையான் அன்றி, ஒருங்கே எய்தும்.

உரைவிளக்கம்

'அடியளந்தான்' என்றது, வாளா பெயராய் நின்றது. தாவியது என்பது இடைக்குறைந்த நின்றது. எப்பொழுதும் வினையின்கண்ணே முயறலின், இடையீடு இன்றி எய்தும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும், மடியிலாதான் எய்தும் பயன் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- 1. அரசியல்- அதிகாரம் 62. ஆள்வினையுடைமை

## பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை:

அஃதாவது, இடைவிடாது மெய்ம்முயற்சி உடையனாதல்;அஃது ஆளும்வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது.மடி கெடுத்தாலும், வினை முயற்சியான் அன்றி ஆளப்படாமையின், இது மடியின்மையின்பின் வைக்கப்பட்டது.

## குறள் 611 (அருமையுடைத்)

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்/அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்

'பெருமை முயற்சி தரும். *(01)*'/பெருமை முயற்சி தரும்.

இதன்பொருள்

அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்= தஞ்சிறுமை நோக்கி நாம் இவ்வினைமுடித்தல் அருமை உடைத்துஎன்று கருதித் தளராது ஒழிக; பெருமை முயற்சி தரும்= அது முடித்தற்கு

ஏற்ற பெருமையைத் தமக்கு முயற்சி உண்டாக்கும்.

உரைவிளக்கம்

சிறுமைநோக்கி என்பது, 'பெருமை தரும்' என்றதனானும், வினைமுடித்தல் என்பது, அதிகாரத்தானும் வருவிக்கப்பட்டன. விடாது முயலத் தாம் பெரியர் ஆவர்; ஆகவே, அரியனவும் எளிதின் முடியும் என்பதாம்.

# குறள் 612 (வினைக்கண்)

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறைவினைக் கண் வினை கெடல் ஓம்பல் வினைக் குறை

'தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. *(02)*'தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

இதன்பொருள்

வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று= வினையாகிய குறையைச் செய்யாதுவிட்டாரை உலகம் விட்டது; வினைக்கண் வினை கெடல் ஓம்பல்= ஆதலால், செய்யப்படும் வினைக்கண் தவிர்ந்து இருத்தலை ஒழிக.

உரைவிளக்கம்

'குறை' இன்றியமையாப் பொருள். அது "பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே" என்பதனானும் அறிக. இதற்கு வினை செய்யவேண்டும் குறையை நீங்கினாரின் நீங்கிற்று என்பாரும் உளர்:

# குறள் 613 (தாளாண்மை)

தாளாண்மை யென்னும் தகைமக்கட் டங்கிற்றே/தாளாண்மை என்னும் தகைமைக் கண் தங்கிற்றே

'வேளாண்மை என்னுஞ் செருக்கு. *(03)*'/ வேளாண்மை என்னும் செருக்கு.

இதன்பொருள்

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே= முயற்சி என்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின் கண்ணே நிலைபெற்றது; வேளாண்மை என்னும் செருக்கு= எல்லார்க்கும் உபகாரம்செய்தல் என்னும் மேம்பாடு.

உரைவிளக்கம்

பொருள் கைகூடுதலான் உபகரித்தற்கு உரியார் முயற்சியுடையார் அவ்வக்குணங்கள் மேல்வைத்தும், அது பிறர்மாட்டு இல்லை என்பார் 'தங்கிற்றே' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **614** **(**தாளாண்மையில்லா**)**

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை/தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடி கை

'வாளாண்மை போலக் கெடும். *(04)*'//வாளாண்மை போலக் கெடும்.

இதன்பொருள்

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை= முயற்சி இல்லாதவன் உபகாரியாம் தன்மை; பேடி கை வாளாண்மை போலக் கெடும்=

படை கண்டால் அஞ்சும் பேடி அதனிடைத் தன்கையில் வாளை ஆளுதல்தன்மைபோல இல்லையாம்.

உரைவிளக்கம்

'ஆள்' என்பது முதனிலைத் தொழிற்பெயர். பேடி வாளைப் பணிகோடற் கருத்துடையள் ஆயினும், அது தன் அச்சத்தான் முடியாதவாறு போல, முயற்சியில்லாதான் பலர்க்கும் உபகரித்தற் கருத்துடையனாயினும், அது தன் வறுமையான் முடியாது என்பதாம். 'வாளாண்மை' என்பதற்கு, வாளாற் செய்யும் ஆண்மை என்று உரைப்பாரும் உளர்.

இதனான் அஃது இல்லாதானது குற்றம் கூறப்பட்டது.

# குறள் **615** (இன்பம்விழை)

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்// இன்பம் விழையான் வினை விழைவான் தன் கேளிர்

'துன்பந் துடைத்தூன்றுந் தூண். *(05)*'// துன்பம் துடைத்து ஊன்றும் தூண்.

இதன்பொருள்

இன்பம் விழையான் வினை விழைவான்= தனக்கு இன்பத்தை விரும்பானாகி, வினை முடித்தலையே விரும்புவான்; தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண்= தன் கேளிராகிய பாரத்தின் துன்பத்தினை நீக்கி, அதனைத் தாங்கும் தூணாம்.

உரைவிளக்கம்

இஃது ஏகதேச உருவகம். 'ஊன்றும்' என்றது, அப்பொருட்டாதல்

"மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு"[‡] என்பதனானும் அறிக. சுற்றத்தார், நட்டாரது வறுமையுந் தீர்த்து, அவர்க்கு ஏமஞ்செய்யும் ஆற்றலை உடையனாம் எனவே, தன்னைக் கூறவேண்டா ஆயிற்று. காரியத்தை விழையாது, காரணத்தை விழைவான் எல்லாப் பயனும் எய்தும் என்றதனால், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதும் எய்தான் என்பது பெற்றாம்.

இதனால் அஃது உடையானது நன்மை கூறப்பட்டது.

‡. நாலடியார் 397.

# குறள் **616** (முயற்சிதிரு)

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை// முயற்சி திருவினை ஆக்கும் முயற்று இன்மை

'யின்மை புகுத்தி விடும். *(06)'*// இன்மை புகுத்தி விடும்.

இதன்பொருள்

முயற்சி திருவினை ஆக்கும்= அரசர்மாட்டு உளதாய முயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்; முயற்று இன்மை இன்மை புகுத்திவிடும்= அஃது இல்லாமை வறுமையை அடைவித்துவிடும்.

உரைவிளக்கம்

செல்வம் அறுவகை அங்கங்கள்.[†] வறுமை அவற்றான் வறியராதல். அதனை அடைவிக்கவே, பகைவரான் அழிவர் என்பது கருத்து.

†. குறள் 381.

# குறள் **617** (மடியுளாள்)

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான் // மடி உளாள் மா முகடி என்ப மடி இலான்

'றாளுளா டாமரையி னாள் *(07).'*// தாள் உளாள் தாமரையினாள்.

இதன்பொருள்

மா முகடி மடி உளாள்= கரியசேட்டை ஒருவன் மடியின்கண்ணே உறையும்; தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்ப= திருமகள் மடியிலானது முயற்சி◌க்கண்ணே உறையும் என்று சொல்லுவர் அறிந்தோர்.

உரைவிளக்கம்

பாவத்தின் கருமை அதன்பயனாய 'முகடி'மேல் ஏற்றப்பட்டது. மடியும் முயற்சியும் உடையார்மாட்டு நிலையை அவை தம்மேல் வைத்துக்கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் அவ்விருமைக்கும் ஏது கூறப்பட்டது.

# குறள் **618** (பொறியின்மை)

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்// பொறி இன்மை யார்க்கும் பழி அன்று அறிவு அறிந்து

'தாள்வினை யின்மை பழி. *(08).'*// ஆள்வினை இன்மை பழி.

இதன்பொருள்

பொறி இன்மை யார்க்கும் யார்க்கும் பழிஅன்று= பயனைத் தருவதாய விதியில்லாமை ஒருவற்கும் பழியாகாது; அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி= அறிய வேண்டும் அவற்றை வினைசெய்யாமையே பழியாவது.

உரைவிளக்கம்

அறிய வேண்டுவன வலி முதலாயின.¶ தெய்வம் இயையாவழி ஆள்வினை உடைமையான் பயனில்லை என்பாரை நோக்கி, உலகம் பழவினைபற்றிப் பழியாது, ஈண்டைக் குற்றம் உடைமைபற்றியே பழிப்பது என்றார். அதனால் விடாது முயல்க என்பது குறிப்பெச்சம்.

¶. காலம், இடம் ஆகியவை.

# குறள் **619** **(**தெய்வத்தா**)**

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன் // தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சி தன்

'மெய்வருத்தக் கூலி தரும் *(09).'* // மெய் வருத்தக் கூலி தரும்.

இதன்பொருள்

தெய்வத்தான் ஆகாது எனினும்= முயன்றவினை, பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும்; முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்= முயற்சி தனக்கு இடமாகிய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும், பாழாகாது.

உரைவிளக்கம்

தெய்வத்தான் ஆயவழித் தன்அளவின் மிக்க பயனைத் தரும் என்பது உம்மையான் பெற்றாம். இருவழியும் பாழாகல் இன்மையின், தெய்வநோக்கி இராது முயல்க என்பது கருத்து.

## குறள் 620 (ஊழையு)

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித் // ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவு இன்றித்

'தாழா துஞற்று பவர் *(10).'* // தாழாது உஞற்றுபவர்.

இதன்பொருள்

ஊழையும் உப்பக்கம் காண்பர்= பயனை விலக்குவதாய ஊழினையும் புறங் காண்பர்; உலைவு இன்றித தாழாது உஞற்றுபவர்= அவ்விலக்கிற்கு இளையாது வினையைத் தாழ்வற முயல்வார்.

உரைவிளக்கம்

தாழ்வறுதல், சூழ்ச்சியினும் வலி முதலிய அறிதலினும், செயலினும் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக, இருகாலாக அல்லது விலக்கல்ஆகாமையின் பலகால் முயல்வார் பயன்எய்துவர் என்பார், 'உப்பக்கம் காண்பார்' என்றார்.

தெய்வத்தான் இடுக்கண் வரினும் முயற்சிவிடற்பாலது அன்று என்பது, இவை மூன்று பாட்டானும் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- இயல் **01.** அரசியல்

# அதிகாரம் **63.** இடுக்கண் அழியாமை

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை**:**

அஃதாவது, வினையின்கண் முயல்வான், தெய்வத்தானாக, பொருள்இன்மையானாக, மெய்வருத்தத்தானாகத் தனக்கு இடுக்கண் வந்துழி, அதற்கு மனங்கலங்காமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **621 (**இடுக்கண்**)**

இடுக்கண் வருங்கா னகுக வதனைஇடுக்கண் வருங்கால் நகுக அதனை

'யடுத்தூர்வ தஃதொப்ப தில். *(01)'*அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்.

இதன்பொருள்

இடுக்கண் வருங்கால் நகுக= ஒருவன் வினையான் தனக்கு இடுக்கண் வருமிடத்து அதற்கு அழியாது உள்மகிழ்க; அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்= அவ் இடுக்கணை மேன்மேல் அடரவல்லது அம்மகிழ்ச்சி போல்வது பிறிது இல்லையாகலான்.

உரைவிளக்கம்

வினை இனிது முடிந்துழி, நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே இடுக்கண் வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி மனஎழுச்சியான் அதனைத் தள்ளி அக்குறைமுடிக்கும் ஆற்றல் உடையனாம் ஆகலின், 'அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பதி்ல்' என்றார்.

# குறள் **622** **(**வெள்ளத்தனைய**)**

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையாவெள்ளத்து அனைய இடும்பை அறிவு உடையான்

'னுள்ளத்தி னுள்ளக் கெடும். *(02)'*உள்ளத்தின் உள்ளக் கெடும்.

இதன்பொருள்

வெள்ளத்து அனைய இடும்பை= வெள்ளம்போலக் கரையிலவாய இடும்பைகள் எல்லாம்; அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும்= அறிவுடையவன் தன் உள்ளத்தான் ஒன்றனை நினைக்க, அத்துணையானே கெடும்.

உரைவிளக்கம்

'இடும்பை' யாவது, உள்ளத்து ஒருகோட்பாடே அன்றிப் பிறிதில்லை என்பதூஉம், அது மாறுபடக் கொள்ள நீங்கும்

எனவும் அறிதல் வேண்டுதலின், 'அறிவுடையான்' என்றும், அவ்உபாயத்து எண்மை தோன்ற 'உள்ளத்தின் உள்ள' என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும், ஊழினானாய இடுக்கணால் அழியாமைக்கு உபாயம் கூறப்பட்டது.

# குறள் **623 (**இடும்பைக்**)**

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு

'கிடும்பை படாஅ தவர். *(03)'*இடும்பை படாஅதவர்.

இதன்பொருள்

இடும்பைக்கு இடும்பை படாதவர்= வினைசெய்யுங்கால் அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர்; இடும்பைக்கு இடும்பை படுப்பர்= அத்துன்பந்தனக்கு தாம் துன்பம் விளைப்பர்.

உரைவிளக்கம்

வருந்துதல் இளைத்து விட நினைத்தல். மனத்திட்பம் உடையராய் விடாது முயலவே, வினை முற்றுப் பெற்றுப் பயன்படும்; படவே, எல்லா இடும்பையும் இலவாம் ஆகலின், 'இடும்பைக்கிடும்பை படுப்பர்' என்றார். வருகின்ற பாட்டு இரண்டினும் இதற்கு இவ்வாறே கொள்க. சொற்பொருட் பின்வருநிலை.

# குறள் **624 (**மடுத்த**)**

மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்றமடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற

'விடுக்க ணிடர்ப்பாடு டைத்து. *(04)'*இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.

இதன்பொருள்

மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான்= விலங்கிய இடங்கள் எல்லாவற்றினும் சகடம் ஈர்க்கும் பகடுபோல வினையை எடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை; உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து= வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை உடைத்து.

உரைவிளக்கம்

'மடுத்தவாயெல்லாம்' என்பது, பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்றுநிலம் முதலியவாகவும், வினைக்கு இடையூறுகளாகவும் கொள்க. 'பகடு' மருங்கு ஒற்றியும், மூக்கூன்றியும், தாள்தவழ்ந்தும் அரிதின் உய்க்குமாறு போலத் தன் மெய்வருத்தம் நோக்காது முயன்று உய்ப்பான் என்பார், 'பகடன்னான்' என்றார்.

# குறள் **625** **(**அடுக்கி**)**

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற*//* அடுக்கி வரினும் அழிவு இலான் உற்ற

'விடுக்க ணிடுக்கட் படும். *(05)'//* இடுக்கண் இடுக்கண் படும்.

இதன்பொருள்

அடுக்கி வரினும்= இடைவிடாது மேன்மேல் வந்தனவாயினும்;

அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும்= தன் உள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற இடுக்கண்தாம் இடுக்கணிலே பட்டுப்போம்.

உரைவிளக்கம்

ஒன்றே பலகால் வருதலும், வேறுபட்டன விராய் வருதலும் அடங்க அடுக்கிவரினும் என்றார். அழிவு என்னும் காரணப்பெயர் காரியத்தின்மேல் நின்றது.

இவை மூன்று பாட்டானும் தெய்வத்தான் ஆயதற்கு அழியாமை கூறப்பட்டது.

# குறள் **626** **(**அற்றேமென்**)**

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்அற்றேம் என்று அல்லல் படுபவோ பெற்றேம் என்று

'றோம்புத றேற்றா தவர். *(06)*'ஓம்புதல் தேற்றாதவர்.

இதன்பொருள்

அற்றேம் என்று அல்லல் படுபவோ = வறுமைக்காலத்து யாம் வறியம் ஆயினேம் என்று மனத்தான் துயர் உழப்பாரோ? ; பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர்= செல்வக்காலத்து இது பெற்றேம் என்று இவறுதலை அறியாதார்.

உரைவிளக்கம்

பெற்றவழி இவறாமை நோக்கி, அற்றவழியும் அப்பகுதி விடாதாகலின் அல்லற்பாடு இல்லையாயிற்று. இதனான் பொருள் இன்மையான் ஆயதற்கு அழியாமையும், அதற்கு உபாயமும்

கூறப்பட்டன.

# குறள் **627** (இலக்கமுடம்)

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்இலக்கம் உடம்பு இடும்பைக்கு என்று கலக்கத்தைக்

கையாறாக் கொள்ளாதா மேல். **(07)/B>**கையாறாக் கொள்ளாதாம் மேல்.

இதன்பொருள்

உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று= நாற்கதியினும் உள்ள உடம்புகள் இடும்பை என்னும் வாளுக்கு இலக்கு என்று தெளிந்து; கலக்கத்தைக் கையாறாக் கொள்ளாதாம் மேல்= தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையார்.

உரைவிளக்கம்

ஏகதேச உருவகம். 'உடம்பு' சாதிப்பெயர். 'கலக்கம்' என்னும் காரியப்பெயர் காரணத்தின்மேல் நின்றது. 'கையாறு' என்பது ஒருசொல்; இதற்கு ஒழுக்கநெறி என்று உரைப்பாரும் உளர். இயல்பாகக்கொள்வர் என்பது குறிப்பெச்சம்.

# குறள் **628** (இன்பம்விழை)

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்

'றுன்ப முறுத லிலன்.'துன்பம் உறுதல் இலன்.

இதன்பொருள்

இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்= தன் உடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையால் இடும்பை எய்துதல் இயல்பு என்று தெளிந்திருப்பான்; துன்பம் உறுதல் இலன்= தன் முயற்சியான் துன்பம் உறான்.

உரைவிளக்கம்

இன்பத்தை விழையினும், இடும்பையை இயல்பு என்னாது காக்கக் கருதினும், துன்பம் விளைதலின், இவ்விரண்டுஞ் செய்தானைத் 'துன்பம் உறுதல்இலன்' என்றார்.

# குறள் **629** (இன்பத்துளின்ப)

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்

'டுன்ப முறுத லிலன். *(09)*'துன்பம் உறுதல் இலன்.

இதன்பொருள்

இன்பத்துள் இன்பம் விழையாதான்= வினையால் தனக்கின்பம் வந்துழி அதனை அனுபவியாநின்றே மனத்தான் விரும்பாதான்; துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்= துன்பம் வந்துழியும், அதனை அனுபவியாநின்றே மனத்தான் வருந்தான்.

உரைவிளக்கம்

துன்பம் முயற்சியான் வரும் இடுக்கண். இரண்டையும் ஒருதன்மையாகக் கோடலின், பயன்களும் இலவாயின.

# குறள் **630 (**இன்னாமை**)**

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்இன்னாமை இன்பம் எனக் கொளின் ஆகும் தன்

'னொன்னார் விழையுஞ் சிறப்பு. *(10)'*ஒன்னார் விழையும் சிறப்பு.

இதன்பொருள்

இன்னாமை இன்பம் எனக்கொளின்= ஒருவன் வினைசெய்யும் இடத்து முயற்சியான் வரும் துன்பம்தன்னையே தனக்கு இன்பமாகக் கற்பித்துக் கொள்வானாயின்; தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும்= அதனான் தன் பகைவர் நன்கு மதித்தற்கு ஏதுவாய கவர்ச்சி உண்டாம்.

உரைவிளக்கம்

துன்பந்தானும், உயிர்க்கு இயல்பன்றிக் கணிகமாய் மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடு ஆகலின், அதனை மாறுபடக் கொள்ளவே, அதற்கு அழிவின்றி மனமகிழ்ச்சி உடையனாய், அதனால் தொடங்கிய வினை முடித்தேவிடும் ஆற்றல் உடையனாம் என்பது கருத்து.

இவை நான்கு பாட்டானும் மெய் வருத்தத்தான் ஆயதற்கு அழியாமையும், அதற்கு உபாயமுங் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- இயல் **02** அங்கவியல்

## பரிமேலழகர் உரை

இயல் முன்னுரை**:** இனி முறையானே அரசியல் நடாத்துதற்கண், ஒன்றற்கொன்று துணையாய அங்கங்கள் ஆறனது இயல்பு முப்பத்திரண்டு அதிகாரததான் கூறுவான் எடுத்துக்கொண்டு, அவை ஆறனுள்ளும் "காவற்சாகாடு உகைத்தற்"கண், அவ்வரசற்கு இணையாய அமைச்சனது இயல்பு, பத்து அதிகாரத்தான் கூறுவான் தொடங்கி, முதற்கண்அமைச்சுக்கூறுகின்றார்.

## அதிகாரம் **64.** அமைச்சு

அதிகார முன்னுரை அஃதாவது, அமைச்சனது தன்மை; என்றது, அவன்தன் குணங்களையும் செயல்களையும்.

## குறள் **631 (**கருவியுங்**)**

'கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்ய'கருவியும் காலமும் செய்கையும் செய்யும்

'மருவினையு மாண்ட தமைச்சு. *(01)'*அரு வினையும் மாண்டது

அமைச்சு.

இதன்பொருள்

கருவியும்= வினைசெய்யுங்கால் அதற்கு வேண்டுங் கருவிகளும்; காலமும்= அதற்கேற்ற காலமும்; செய்கையும்= அது செய்யுமாறும்; செய்யும் அருவினையும்= அவ்வாற்றிற் செய்யப்படும் அவ்வரிய வினைதானும்; மாண்டது அமைச்சு= வாய்ப்ப எண்ணவல்லவனே அமைச்சனாவான்.

உரைவிளக்கம்

'கருவி'கள்: தானையும் பொருளும். 'காலம்' அது தொடங்குங் காலம். 'செய்கை' எனவே, அது தொடங்கும் உபாயமும், இடையூறு நீக்கி முடிவு போக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரிய பயன் தருவதென்பார், 'அருவினை' என்றார். இவை ஐந்தனையும் வடநூலார் மந்திரத்திற்கு அங்கம் என்ப.

# குறள் **632** (வன்கண்)

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோவன்கண் குடி காத்தல் கற்று அறிதல் ஆள்வினையோடு

'டைந்துடன் மாண்ட தமைச்சு. *(02)'*<ஐந்துடன் மாண்டது அமைச்சு.

இதன்பொருள்

வன்கண்= வினைசெய்தற்கண் அசைவின்மையும்; குடிகாத்தல்= குடிகளைக் காத்தலும்; கற்றுஅறிதல்= நீதிநூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும்; ஆள்வினை= முயற்சியும்; ஐந்துடன் மாண்டது அமைச்சு= மேற்சொல்லிய அவ்வங்கங்கள் ஐந்துடனே திருந்தவுடையானே அமைச்சனாவான்.

உரைவிளக்கம்

எண்ணொடு நீண்டது, அவ்வைந்து எனச் சுட்டுவருவிக்க. இந்நான்கனையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையும் இவற்றோடு கூடிய மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னும் தொகை பெறுதற்கும். இனி, இதனை ஈண்டெண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் 'குடிகாத்தல்' என்பதனைக் குடிப்பிறப்பும் அதனை ஒழுக்கத்தாற் காத்தலும் எனப் பகுப்பாரும், 'கற்றறிதல்' என்பதனைக் கற்றலும் அறிதலும் எனப் பகுப்பாரும்உளர். அவர் 'உடன்' என்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், 'குடி'யென்பதனை ஆகுபெயர் ஆக்கியும் இடர்ப்படுப.

# குறள் **633** (பிரித்தலும்)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்

'பொருத்தலும் வல்ல தமைச்சு. *(03)*'பொருத்தலும் வல்லது அமைச்சு.

இதன்பொருள்

பிரித்தலும்= வினைவந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும்; பேணி்க்கொளலும்= தம்பாலரை அவர் பிரியாமற் கொடை இன்சொற்களாற் பேணிக்கொள்ளுதலும்; பிரிந்தார்ப் பொருத்தலும்= முன்னே தம்மினும் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்தவேண்டிற் பொருத்தலும்; வல்லது அமைச்சு= வல்லவனே அமைச்சனாவான்.

உரைவிளக்கம்

இவற்றுள் அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும், அதனை அவர்அறியாமல், ஏற்ற உபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாதல் நோக்கி, 'வல்லது' என்றார். வடநூலார், இவற்றுள் பொருத்தலைச் 'சந்தி'யென்றும், பிரித்தலை 'விக்கிரகம்' என்றுங் கூறுப.

## குறள் **634** (தெரிதலுந்)

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்

'சொல்லலும் வல்ல தமைச்சு. *(04)'*சொல்லலும் வல்லது அமைச்சு.

இதன்பொருள்

தெரிதலும்= ஒரு காரியச்செய்கை பலவாற்றால் தோன்றின், அவற்றுள் ஆவது ஆராய்ந்து அறிதலும்; தேர்ந்து செயலும்= அது செய்யுங்கால் வாய்க்குந் திறன்நாடிச் செய்தலும்; ஒருதலையாச் சொல்லலும்= சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண், அவர்க்கு இதுவே செயற்பாலது என்று துணிவுபிறக்கும் வகை சொல்லுதலும்; வல்லது அமைச்சு= வல்லவனே அமைச்சனாவான்.

உரைவிளக்கம்

'தெரிதல்' செயன்மேலதாயிற்று; வருகின்றது அதுவாகலின்.

## குறள் **635** (அறனறிந்தான்)

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்அறன் அறிந்தான் ஆன்று அமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்

'திறனறிந்தான் றேர்ச்சித் துணை. *(05)'*திறன் அறிந்தான் தேர்ச்சித் துணை.

இதன்பொருள்

அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான்= அரசனாற் செய்யப்படும் அறங்களை அறிந்து, தனக்கு ஏற்ற கல்வியான் நிறைந்தமைந்த சொல்லை உடையனாய்; எஞ்ஞான்றும் திறன் அறிந்தான்= எக்காலத்தும் வினை செய்யும் திறங்களை அறிந்தான்; தேர்ச்சித் துணை= அவர்க்குச் சூழ்ச்சித் துணையாம்.

உரைவிளக்கம்

தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடைநிகராய காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். 'சொல்லான்' என்பதனை, ஒடு உருபின் பொருட்டாய ஆன் உருபாக்கி உரைப்பாரும் உளர்.

இவை ஐந்து பாட்டானும் அமைச்சரது குணத்தன்மை கூறப்பட்டது.

# குறள் **636** (மதிநுட்ப)

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்மதி நுட்பம் நூலோடு உடையார்க்கு அதி நுட்பம்

'யாவுள முன்னிற் பவை. *(06)'*யா உள முன் நிற்பவை.

இதன்பொருள்

மதி நுட்பம் நூலோடு உடையார்க்கு= இயற்கையாகிய

நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடு உடையராய அமைச்சர்க்கு; அதி நுட்பம் முன் நிற்பவை யா உள= மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்னிற்பன யாவை உள?

உரைவிளக்கம்

மதிநுட்பம் என்பது பின்மொழி நிலையல். அது தெய்வம்தர வேண்டுதலின் முற்கூறப்பட்டது. 'நூல்' என்பதூஉம், 'அதிநுட்பம்' என்பதூஉம் ஆகுபெயர். 'அதி' என்பது, வடசொல்லுள் மிகுதிப் பொருளதோர் இடைச்சொல்; அது திரிந்து, நுட்பம் என்பதனோடு தொக்கது. 'முன்னிற்றல்' மாற்றார் சூழ்ச்சியாயின, தம்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி அதினுட்பம் என்று பாடம்ஓதி, அதனின்நுட்பம் யா என்று உரைப்பாரும் உளர். அவர் சூழ்ச்சி ்க்கு இனமாய் முன் சுட்டப்படுவது ஒன்று இல்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தாம் உருபு ஏற்றவழி, அவ்வாறு நில்லாமையும் அறிந்திலர்.பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து, அவர்அறிந்து அழியாதனதாஞ் சூழ்வர் என்பது கருத்து.

# குறள் **637** **(**செயற்கை**)**

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து

'தியற்கை யறிந்து செயல். *(07)'*இயற்கை அறிந்து செயல்.

இதன்பொருள்

செயற்கை அறிந்தக் கடைத்தும்= நூல்நெறியான் வினசெய்யும் திறஙகளை அறிந்தவிடத்தும்; உலகத்து இயற்கை அறிந்து செயல்= அப்பொழுது நடக்கின்ற உலகவியற்கையை அறிந்து

அதனோடு பொருந்தச் செய்க.

உரைவிளக்கம்

'கடைத்தும்' என்புழி 'து' பகுதிப்பொருள்விகுதி. நூல் நெறியே ஆயினும், உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க; செய்யின் அது பழிக்கும் என இயற்கையறிவாற் பயன் கூறியவாறு.

# குறள் **638** (அறிகொன்றறி)

அறிகொன்றறியா னெனினு முறுதிஅறி கொன்று அறியான் எனினும் உறுதி

'யுழையிருந்தான் கூறல் கடன். *(08)'*உழை இருந்தான் கூறல் கடன்.

இதன்பொருள்

அறி கொன்று அறியான் எனினும்= அறிந்து சொல்லியாரது அறிவையும் அழித்து, அரசன் தானும் அறியானே ஆயினும்; உறுதி கூறல் உழையிருந்தான் கடன்= அக்குற்றம் நோக்கி யொழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை.

உரைவிளக்கம்

'அறி'யென்பது முதனிலைத் தொழிற்பெயர். 'கோறல்' தான் கொள்ளாமை, மேலும் இகழ்ந்து கூறல். 'உழையிருந்தான்' எனப் பெயர்கொடுத்தார், அமாத்தியர் என்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். உறுதி கூறாக்கால், அவனது இறுதி எய்தற்குற்றத்தை உலகம் தன்மேல் ஏற்றும் என்பார், 'கூறல் கடன்' என்றார்.

இவை இரண்டுபாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது.

# குறள் **639** (பழுதெண்ணு)

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோபழுது எண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்

'ரெழுபது கோடி யுறும். *(09)'*எழுபது கோடி உறும்.

இதன்பொருள்

பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின்= பக்கத்திருந்து பிழைப்ப எண்ணும் அமைச்சன் ஒருவனில்; ஓர் எழுபது கோடி தெவ் உறும்= அரசனுக்கு எதிர்நிற்பார் ஓர் எழுபது கோடி பகைவர் உறுவர்.

உரைவிளக்கம்

'எழுபதுகோடி' என்றது, மிகப்பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு. வெளிப்பட நிற்றலான் அவர் காக்கப் படுவர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படான் என்பது பற்றி இவ்வாறு கூறினார். எழுபதுகோடி மடங்கு நல்லர் என்றுரைப்பாரும், 'எழுபது கூறு தலை' யென்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் **640** (முறைப்படச்)

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்முறைப் படச் சூழ்ந்தும் முடிவு இலவே செய்வர்

'திறப்பா டிலாஅ தவர். *(10)'*திறப்பாடு இலாஅதவர்.

இதன்பொருள்

முறைப் படச் சூழ்ந்தும் முடிவு இலவே செய்வர்= செய்யப்படும் வினைகளை முன் அடைவுபட எண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவு இலவாகவே செய்யாநிற்பர்; திறப்பாடு இலாதவர்= முடித்தற்கு ஏற்ற கூறுபாடு இல்லாதார்.

உரைவிளக்கம்

அக்கூறுபாடாவன: வந்தவந்த இடையூறுகட்கு, ஏற்றஏற்ற பரிகாரம் அறிந்து செய்தலும், தாம் திண்ணியர் ஆதலுமாம். பிழையாமல் எண்ணவல்லராய் வைத்தும், செய்து முடிக்கமாட்டாரும் உளர் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப்படுவாரது குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால் - 2.அங்கவியல்

# அதிகாரம் 65. சொல்வன்மை

# பரிமேலழகர் உரை

அதிகாரமுன்னுரை

அஃதாவது,தான் கருதிய வினை முடியுமாற்றால், அமைச்சியல் நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் "ஒருதலையாச் சொல்லலும் வல்லது"¶ என்றதனையே சிறப்புப்பற்றி விரிக்கின்றமையின், இஃது அமைச்சின் பின் வைக்கப்பட்டது.

¶.குறள் 634.

## குறள் 641 (நாநலமென்)

நாநல மென்னு நலனுடைமை யந்நலம்நா நலம் என்னும் நலன் உடைமை அந்நலம்

'யாநலத் துள்ளதூஉ மன்று. *(01)'*யா நலத்து உள்ளதூஉம் அன்று.

இதன்பொருள்

நா நலம் என்னும் நலன் உடைமை= அமைச்சர்க்கு இன்றியமையாக் குணமாவது, சான்றோரான் நாநலம் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்தினை உடையராதல்; அந்நலம் யா நலத்து உள்ளதூஉம் அன்று= அந்நலம் பிறர்க்கும் பிறநலமெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்கதாகலான்.

உரைவிளக்கம்

நாவால் உளதாய நலம் என விரியும். இந்நலம் உலகத்தைத் தம் வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேறாக வேண்டுமென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி 'நாநலம் என்னும் நலன்' என்றும், பிறர்க்கும் இதுபோற் சிறந்தது பிறிதின்மையான், அந்நலம் 'யாநலத்துள்ளதூஉம் அன்று' என்றும் கூறினார். பிரித்தல், பொருத்தல் முதலிய தொழில் இல்லாதார்க்கும் இஃது இன்றியமையாதாய பின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ என்பது கருத்து.

# குறள் **642** (ஆக்கமுங்)

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்

'காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. *(02)'*காத்து ஓம்பல் சொல்லின் கண் சோர்வு.

இதன்பொருள்

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்=தம் அரசற்கும், அங்கங்கட்கும் ஆக்க அழிவுகள் தம் சொல்லான் வரும்ஆகலான்; சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல்= அப்பெற்றித்தாய

சொல்லின்கண் சோர்தலை, அமைச்சர் தம்கண் நிகழாமற் போற்றிக் காக்க.

உரைவிளக்கம்

ஆக்கத்திற்கு ஏதுவாய நற்சொல்லையும், கேட்டிற்கு ஏதுவாகிய தீச்சொல்லையும் சொல்லாதல் ஒப்புமை பற்றி 'அதனால்' என்றார். செய்யுளாகலின் சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வு போலாது, உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருதலால், 'காத்தோம்பல்' என்றார்.

இவை இரண்டுபாட்டானும் இஃது இவர்க்கு இன்றியமையாது என்பது கூறப்பட்டது.

## குறள் **643** (கேட்டார்ப்)

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய்க் கேளாரும்

'வேட்ப மொழிவதாஞ் சொல். *(03)'*வேட்ப மொழிவது ஆம் சொல்.

இதன்பொருள்

கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய்= நட்பாய் ஏற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிக்கும் குணங்களை அவாவி; கேளாரும் வேட்ப மொழிவது= மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமை ஒழிந்து நட்பினை விரும்பும் வண்ணம் சொல்லப்படுவதே; சொல்லாம்= அமைச்சர்க்குச் சொல்லாவது.

உரைவிளக்கம்

அக்குணங்களாவன: வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல்,

இனிதாதல், விழுப்பயன் தருதல் என்று இவை முதலாயின. அவற்றை அவாவுதலாவது, சொல்லுவான் குறித்தனவேயன்றி, வேறு நுண்ணுணர்வு உடையோர் கொள்பவற்றின் மேலும் நோக்குடைத்தாதல். 'அவாய்' என்னும் செய்தென் எச்சம், 'மொழிவது' என்னும் செயப்பாட்டுவினை கொண்டது. இனிக் 'கேட்டார்', 'கேளார்' என்பதற்கு, நூல் கேட்டார் கேளாதார் எனவும், வினவியார் வினவாதார் எனவும் உரைப்பாரும் உளர். 'தகையவாய்' என்பதற்கு, எல்லாரும் தகுதியையுடையவாய் என்றுரைத்தார், அவர், பன்மை 'மொழிவது' என்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர்.
இதனால் சொல்லினது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **644 (**திறனறிந்து**)**

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்திறன் அறிந்து சொல்லுக சொல்லை அறனும்

'பொருளு மதனினூஉங் கில். *(04)'*பொருளும் அதனின் ஊஉங்கு இல்.

இதன்பொருள்

சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக= அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையுவம் கேட்பாருடையவுமாய திறங்களை அறிந்து சொல்லுக; அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல்= அங்ஙனம் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும், பொருளும் இல்லையாகலான்.

உரைவிளக்கம்

அத்திறங்களாவன: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம்,

உருவம், பருவம் என்பவற்றான் வரும் தகுதிவேறுபாடுகள். அவற்றை 'அறிந்து சொல்லுத'லாவது, அவற்றான் தமக்கும் அவர்க்கும் உளவாய ஏற்றத் தாழ்வுகளை அறிந்து, அவ்வம் மரபாற் சொல்லுதல். அஃது, உலகத்தோடு ஒட்டஒழுகலையும், இனிமையையும் பயத்தலின் அறனாயிற்று; தம் காரியம் முடித்தலின் பொருளாயிற்று. 'அறனும் பொருளும்' எனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினார்.

# குறள் **645** (சொல்லுக)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லைசொல்லுக சொல்லைப் பிறிது ஓர் சொல் அச் சொல்லை

'வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. *(05)*'வெல்லும் சொல் இன்மை யறிந்து.

இதன்பொருள்

சொல்லைப் பிறிது ஓர் சொல் வெல்லும்சொல் இன்மை அறிந்து= தாம் சொல்லக் கருதிய சொல்லைப் பிறிதோர் சொல்லாய் வெல்லவல்லதொரு சொல் இல்லாமை அறிந்து; அச்சொல்லைச் சொல்லுக= பின் அச்சொல்லைச் சொல்லுக.

உரைவிளக்கம்

'பிறிதோர் சொல்' மாற்றாரது மறுதலைச் சொல். 'வெல்லுதல்' குணங்களான் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக என்பதாம். இனிப் பிறிதோர் சொல் வெல்லுஞ்சொல் எனச் செவ்வெண்ணாக்கி, ஒத்தசொல்லும் மிக்கசொல்லும் உளவாகாமற் சொல்லுக என்று உரைப்பாரும் உளர்§. இது சொற்பொருட் பின்வருநிலை.

# குறள் **646 (**வேட்பத்தாஞ்**)**

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்வேட்பத்தாம் சொல்லிப் பிறர் சொல் பயன் கோடல்

'மாட்சியின் மாசற்றார் கோள். *(06)'*மாட்சியின் மாசு அற்றார் கோள்.

இதன்பொருள்

வேட்பத் தாம் சொல்லிப் பிறர்சொற் பயன் கோடல்= பிறர்க்குத் தாம் சொல்லுங்கால் அவர் பின்னும் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைக் கொண்டொழிதல்; மாட்சியின் மாசு அற்றார் கோள்= அமைச்சியலுள் குற்றம் அற்றாரது துணிபு.

உரைவிளக்கம்

பிறர் சொற்களுள் குற்றம் உளவாயினும், அவை நோக்கி இகழார் என்பதாம். வல்லாரை இகழ்தல் வல்லுநர்க்குத் தகுதியன்மையின், இதுவும் உடன் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது.

# குறள் **647 (**சொலல்வல்லன்

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனைசொலல் வல்லன் சோர்வு இலன் அஞ்சான் அவனை

'யிகல்வெல்லல் யார்க்கு மரிது. *(07)'*இகல் வெல்லல் யார்க்கும் அரிது.

இதன்பொருள்

சொலல் வல்லன்= தான் எண்ணிய காரியங்களைப் பிறர்க்கு ஏற்பச்சொல்லுதல் வல்லனாய்; சோர்வு இலன்= அவைமிகப் பலவாயவழி ஒன்றினும் சோர்வு இலனாய்; அஞ்சான்= அவைக்கு அஞ்சானாயினான் யாவன்; அவனை இகல்வெல்லல் யார்க்கும் அரிது= அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கும் அரிது.

உரைவிளக்கம்

ஏற்பச் சொல்லுதல், அவர்க்கு அவை காரியம் அல்லவாயினும் ஆம்எனத் துணியும்வகை சொல்லுதல். 'சோர்வு' சொல்ல வேண்டுவதனை மறப்பான் ஒழிதல். இம்மூன்று குணமுடையானை, மாற்றாராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை என்பதாம்.

# குறள் **648 (**விரைந்து**)**

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிதுவிரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்து இனிது

'சொல்லுதல் வல்லார்ப் பெறின். *(08)'*சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

இதன்பொருள்

தொழி◌ில் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப்பெறின்= சொல்லப்படுங் காரியங்களை நிரல்படக் கோத்து இனிதாகச்

சொல்லுதல் வல்லாரைப் பெறின்; ஞாலம் விரைந்து தொழில் கேட்கும்= உலகம் அவற்றை விரைந்து ஏற்றுக்கொள்ளும்.

உரைவிளக்கம்

'தொழில்' சாதியொருமை. நிரல்படக் கோத்தல்- முன் சொல்வனவும், பின்சொல்வனவும் அறிந்து அம்முறையே வைத்தல். இனிதாதல், கேட்டார்க்கு இன்பம் பயத்தல். சொல்லுதல் வல்லான் நூறாயிரவருள் ஒருவன் என்ற வடமொழிபற்றிப் 'பெறின்' என்றார். ஈண்டுங் கேட்டல் ஏற்றுக் கோடல்.

இவை இரண்டுபாட்டானும் அவ்வாற்றாற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **649** (பலசொல்லக்)

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்றபல சொல்லக் காமுறுவர் மன்ற மாசு அற்ற

'சிலசொல்லத் தேற்றா தவர். *(09)'*சில சொல்லத் தேற்றாதவர்.

இதன்பொருள்

மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர்= குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வாற்றாற் சொல்லுதலை அறியாதார்; பல சொல்லக் காமுறுவர்= பலவாய வார்த்தைகளைத் தொகுத்துச் சொல்ல விரும்புவர்.

உரைவிளக்கம்

குற்றம் மேற்சொல்லிய குணங்கட்கு மறுதலையாயின.

இடைவிடாது பல சொல்லுதலையும் சொல்வன்மை என்று விரும்புவாரும் உளர். அவர் இவ்வாறு சொல்லமாட்டாதாரே, வல்லார் அது செய்யார் என யாப்புறுப்பார், 'மன்ற' என்றார்.

## குறள் **650 (**இணரூழ்த்து**)**

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்றஇணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் கற்றது

'துணர விரித்துரையா தார். *(10)'*உணர விரித்து உரையாதார்.

இதன்பொருள்

கற்றது உணர விரித்து உரையாதார்= கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்க மாட்டாதவர்; இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர்= கொத்தின்கண்ணே மலர்ந்து வைத்தும் நாறாத பூவை ஒப்பர்.

உரைவிளக்கம்

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றம் இல்லாத பூச் சூடப்படாதவாறு போல நூலைக் கற்றுவைத்தும் சொல்லமாட்டாதார் நன்கு மதிக்கப்படார் என்றமையின், இது தொழில் உவமம் ஆயிற்று. இவை இரண்டு பாட்டானும் அது மாட்டாரது இழிபு கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால் - **2.**அங்கவியல்

## அதிகாரம் **66.** வினைத்தூய்மை

அதிகார முன்னுரை**:** அஃதாவது, செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி, அறமும் புகழும் பயந்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாக வேண்டும் என்கின்றமையின், இது சொல்வன்மையின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **651 (**துணைநலமாக்**)**

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்துணை நலம் ஆக்கம் தரூஉம் வினை நலம்

'வேண்டிய வெல்லாந் தரும். *(01)'*வேண்டிய எல்லாம் தரும்.

இதன்பொருள்

துணை நலம் ஆக்கம் தரூஉம்= ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வம் ஒன்றனையும் கொடுக்கும்; வினைநலம் வேண்டிய எல்லாம்தரும்= அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையு◌ம் கொடுக்கும்.

உரைவிளக்கம்

'வேண்டியஎல்லாம்' என்றது, இம்மைக்கண் அறம், பொருள்,

இன்பம் முதலாயவற்றையும், மறுமைக்கண் தான் விரும்பிய பதங்களையும். இதனாற் காணப்படும் துணைநன்மையினும் கருதப்படும் வினைநன்மை சிறந்தது என வினைத்தூய்மையது சிறப்புக்கூறப்பட்டது.

# குறள் **652 (**என்று**)**

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு

'நன்றி பயவா வினை. *(02)'*நன்றி பயவா வினை.

இதன்பொருள்

புகழொடு நன்றி பயவா வினை= தம் அரசனுக்கு இம்மைக்கண் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை; என்றும் ஒருவுதல் வேண்டும்= அமைச்சர்க்கு எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்.

உரைவிளக்கம்

பெருகல், சுருங்கல், இடைநிற்றல் என்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின், 'என்றும்' என்றார். 'வேண்டும்' என்பது, ஈண்டு இன்றியமையாது என்னும் பொருட்டு.

# குறள் **653 (**ஓஒதல்**)**

ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை ஓஒதல் வேண்டும் ஒளி மாழ்கும் செய் வினை

'யாஅது மென்னு மவர். *(30)'*ஆஅதும் என்னுமவர்.

இதன்பொருள்

ஆஅதும் என்னுமவர்= மேலாகக் கடவேம் என்று கருதுவார்; ஒளி மாழ்கும் வினை செய் ஓஒதல் வேண்டும்= தம் ஒளி கெடுதற்கு் க் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க.

உரைவிளக்கம்

'ஓஒதல்வேண்டும்' என்பது, ஒருசொல் நீர்மைத்து. ஓவுதல் என்பது குறைந்து நின்றது. 'ஒளி' தாமுள காலத்து, எல்லாரானும் நன்கு மதிக்கப்படுதல். 'செய்'யென்னும் முதனிலைத் தொழிற்பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் செய்வினை என வினைத்தொகை ஆக்கியவழிப் பொருளின்மை அறிக. ஒளிகெட வருவது, ஆக்கம் அன்று என்பதாம்.

# குறள் **654** (இடுக்கட்)

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்

'நடுக்கற்ற காட்சி யவர். *(04)'*நடுக்கு அற்ற காட்சியவர்.

இதன்பொருள்

இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்= தாம் இடுக்கண் படவரினும், அது தீர்தற்பொருட்டு முன் செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார்; நடுக்கு அற்ற காட்சியவர்= துளக்கம் அற்ற தெளிவினை உடையார்.

உரைவிளக்கம்

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்கண் நோக்கி, எஞ்ஞான்றும் கழியாத இழிவு எய்தற்பாலது அன்று என்பதூஉம், அஃது எய்தினாலும் வருவது வரும் என்பதூஉம் தெளிவராதலால், 'செய்யார்' என்றார்.

## குறள் **655 (**எற்றென்**)**

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்எற்று என்று இரங்குவ செய்யற்க செய்வானேல்

'மற்றன்ன செய்யாமை நன்று. *(05)*'மற்று அன்ன செய்யாமை நன்று.

இதன்பொருள்

எற்று என்று இரங்குவ செய்யற்க= யான் செய்தது எத்தன்மைத்து, என்று பின் தானே இரங்கும் வினைகளை ஒருகாலும் செய்யாது ஒழிக; செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று= அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச் செய்யும் தன்மையன் ஆயினான்ஆயின், பின்னிருந்து அவ் இரங்கல்களைச் செய்யாது ஒழிதல் நன்று.

உரைவிளக்கம்

'இரங்குவ' என முன்வந்தமையின், பின் 'அன்ன' எனச் சுட்டியொழிந்தார். அவ்வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந்து இரங்குவனாயின், அது தீரும் வாயில் அறிந்திலன் எனவும், திட்பம் இலன் எனவும், பயனில்லனவும் செய்கின்றான் எனவும், தன்பழியைத் தானே தூற்றுகின்றான் எனவும், எல்லாரும் இகழ்தலின் பின்னிரங்காமை நன்று என்றார். இதுவும் வினைத்தூயார் செயலாகலின், உடன் கூறப்பட்டது. பிற்றொடருக்குச் செய்வானாயின்

அவைபோல்வனவும் செய்யாமை நன்று எனப் பிறர்எல்லாம் இயைபற உரைத்தார்.£

£. மணக்குடவர்.

# குறள் 656 (ஈன்றாள்)

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்கஈன்றாள் பசி காண்பான் ஆயினும் செய்யற்க

'சான்றோர் பழிக்கும் வினை. *(06)*'சான்றோர் பழிக்கும் வினை.

இதன்பொருள்

ஈன்றாள் பசி காண்பான் ஆயினும்= தன்னைப் பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந் தன்மையன் ஆயினான் எனினும்; சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க= அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை ஒருவன் செய்யாது ஒழிக.

உரைவிளக்கம்

இறந்த மூப்பினராய இருமுதுகுரவரும், கற்புடை மனைவியும், குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண், தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக என்னும் அறநூல் பொதுவிதி, பொருள்நூல் வழியொழுகுதலும், அரசர் தொழிற்குரியர் ஆதலும், நன்கு மதிக்கற்பாடும் உடைய அமைச்சர்க்கு எய்தாமைபற்றி இவ்வாறு கூறினார்.

இவை ஐந்து பாட்டானும், பாவமும் பழியும் பயக்கும் வினைசெய்யற்க என்பது பெறப்பட்டது.

# குறள் **657 (**பழிமலைந்**)**

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்பழி மலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்

'கழிநல் குரவே தலை. *(07)'*கழி நல்குரவே தலை.

இதன்பொருள்

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின்= சாலாதார் தீய வினைகளைச் செய்து, அதனாற் பழியைத் தம்மேற் கொண்டு பெற்றசெல்வத்தின்; சான்றோர் கழி நல்குரவே தலை= அது மேற்கொ◌ௗளளாத சான்றோர் அனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது.

உரைவிளக்கம்

நிலையாத செல்வத்தின்பொருட்டு, நிலையின பழியை மேற்கோடல் சால்போடு இயையாமையின், 'சான்றோர் கழிநல்குரவே தலை' என்றார்.

# குறள் **658 (**கடிந்த**)**

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாகடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு அவைதாம்

'முடிந்தாலும் பீழை தரும். *(08)'*முடிந்தாலும் பீழை தரும்.

இதன்பொருள்

கடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு= நூலோர் கடிந்த வினைகளைத் தாமும் கடிந்துஒழியாது, பொருள்நோக்கிச் செய்த அமைச்சர்க்கு;

அவைதாம் முடிந்தாலும் பீழை தரும்= அவை தூயவன்மையின் முடியா, ஒருவாற்றான் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும்.

உரைவிளக்கம்

'முடிதல்', கருதிய பொருள்தருதல். பீழை தருதலாகிய பொருளின் தொழில், அதற்குக் காரணமாய வினைகள் மேல் ஏற்றப்பட்டது.

## குறள் **659** (அழக்கொண்ட)

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்அழக் கொண்ட எல்லாம் அழப் போம்

'பிற்பயக்கு நற்பா லவை. *(09)*'பின் பயக்கும் நல் பாலவை.

இதன்பொருள்

அழக்கொண்ட எல்லாம் அழப் போம்= ஒருவன் தீவினைகளைச் செய்து பிறர் இரங்கக்கொண்ட பொருள் எல்லாம், இம்மையிலே அவன்தான் இரங்கப் போகாநிற்கும்; நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும்= மற்றைத் தூயவினையான் வந்த பொருள்கள் முன் இழந்தான் ஆயினும், அவனுக்குப் பின்னர் வந்து பயன்கொடுக்கும்.

உரைவிளக்கம்

'பின்' எனவே மறுமையும் அடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரணமாய வினைகளது இயல்பு கூறியவாறு.

## குறள் **660** (சலத்தாற்)

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல் பசு மண்

'கலத்துணீர் பெய்திரீஇ யற்று. *(10)*'கலத்துள் நீர் பெய்து இரீஇ அற்று.

இதன்பொருள்

சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல்= அமைச்சன் தீய வினைகளாற் பொருள் படைத்து, அதனால் அரசனுக்கு ஏமஞ்செய்தல்; பசுமட் கலத்துள் நீர் பெய்து இரீஇயற்று= பசிய மட்கலத்துள்ளே நீரைப்பெய்து அதற்கு ஏமம் செய்ததனோடு ஒக்கும்.

உரைவிளக்கம்

முன் ஆக்கம் பயப்பனபோல் தோன்றிப் பின் அழிவே பயத்தலால், அவை 'சலம்' எனப்பட்டன. ஏமம்ஆர்த்தல் என்பது, 'ஏமார்த்தல்' என்றாயிற்று; ஏமத்தை அடையப்பண்ணுதல் என்றவாறு. இருத்துதல் நெடுங்காலம் இருப்பச் செய்தல். அரசனும், பொருளும் சேரப் போம் என்பதாம். பிறரெல்லாம் ஏமாத்தல் என்று பாடமோதி, அதற்கு மகிழ்தல் என்றும், 'இரீஇயற்று' என்பதற்கு, வைத்தாற்போலும் என்றும் உரைத்தார். அவர், அவை தன்வினையும் பிறிதின் வினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர்.

இவை நான்கு பாட்டானும் அதற்குக்காரணம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- இரண்டாவது அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **67.** வினைத்திட்பம்

அதிகார முன்னுரை

அஃதாவது, அத்தூயவினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **661 (**வினைத்திட்ப**)**

'வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப 'வினைத் திட்பம் என்பது ஒருவன் மனத் திட்பம்

'மற்றைய வெல்லாம் பிற.*(01) '* மற்றைய எல்லாம் பிற.

இதன் பொருள்

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத் திட்பம்= வினைசெய்தற்கண் திண்மை என்று சொல்லப்படுவது, அதனை முடித்தற்குரியானொருவன் மனத்தினது திண்ணம்; மற்றைய எல்லாம் பிற= அஃது ஒழிந்தன எல்லாம் அதற்குத் திண்மையென்று சொல்லப்படா.

உரைவிளக்கம்

ஒழிந்தனவாவன: படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின் 'மற்றைய' என்றும், வேண்டினும் அஃது இல்வழிப் பயனிலவாகலின் 'பிற'வென்றும் கூறினார். இதனால் வினைத்திட்பமாவது, இன்னதென்பது கூறப்பட்டது.

# குறள் **662** (ஊறொரா)

'ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி 'ஊறு ஒரால் உற்ற பின் ஒல்காமை இவ் இரண்டின்

னாறென்ப வாய்ந்தவர் கோள்.(02)ஆறு என்ப ஆய்ந்தவர் கோள்.

இதன் பொருள்

ஆய்ந்தவர் கோள்= முன் நீதி ஆராய்ந்த அமைச்சரது துணிபு; ஊறு ஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்பர்= பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும், செய்யும் வினை தெய்வத்தான் பழுதுபட்டவழி அதற்குத் தளராமையுமாகிய இவ்விரண்டின் வழியென்பர் நூலோர்.

உரைவிளக்கம்

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது

துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மையும் உடன் கூறினார். உறுதலையுடையதனை முன் 'ஊறு' என்றமையின், 'உற்றபின்' என்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் 'இரண்டினாறு' என்றும் கூறினார். ஊறொரார் என்று பாடம் ஓதுவாரும் உளர்; அஃது 'ஒல்காமை' என்னும் எண்ணோடும், 'இரண்டு' என்னும் தொகையோடும் இயையாமை அவர் அறிந்திலர்.

# குறள் **663** (கடைக்)

'கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி 'கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை இடைக் கொட்கின்

னெற்றா விழுமந் தரும்.(03) எற்றா விழுமம் தரும்.

இதன் பொருள்

கடைக் கொட்கச் செய் தக்கது ஆண்மை= செய்யப்படும் வினையை முடிவின்கண் புலப்படும் வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது; இடைக் கொட்கின் எற்றா விழுமம் தரும்= அங்ஙனமின்றி இடையே புலப்படுமாயின், அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்

மறைத்துச் செய்வதாவது, அங்கம் ஐந்தும் எண்ணியவாறு பிறர் அறியாமலும், தானறிந்ததூஉம், தன்னிங்கிதம், வடிவு, செயல், சொற்களான் அவருய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அத்திட்பம் ஆண்டன்மையான் வருதலின், 'ஆண்மை' எனப்பட்டது. 'எற்றா விழும'மாவன: பகைவர் முன்னறிந்து

அவ்வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வராகலின், அவற்றான் வருவன. 'விழுமம்' சாதிப்பெயர். இவை இரண்டு பாட்டானும் அதனது பகுதி கூறப்பட்டது.

# குறள் **664 (**சொல்லுதல்**)**

' சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்

சொல்லிய வண்ணஞ் செயல்.(04) சொல்லிய வண்ணம் செயல்.

இதன் பொருள்

சொல்லுதல் யார்க்கும் எளிய= யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்துமென நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய; சொல்லிய வண்ணம் செயல் அரியவாம்= அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கும் அரியவாம்.

உரைவிளக்கம்

'சொல்லுதல்' 'செயல்' என்பன சாதிப்பெயர். அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் திட்பம் இல்லாதார்க்கு இயறலின், 'எளிய' என்றார். இதனால் அதனது அருமை கூறப்பட்டது.

# குறள் **665 (**வீறெய்தி**)**

'வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க 'வீறு எய்தி மாண்டார் வினைத் திட்பம் வேந்தன்கண்

ணூறெய்தி யுள்ளப் படும்.(05) ஊறு எய்தி உள்ளப் படும்.

இதன் பொருள்

வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம்= எண்ணத்தால் சிறப்பெய்திப் பிற இலக்கணங்களாலும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைத்திட்பம்; வேந்தன்கண் ஊறு எய்தி உள்ளப்படும்= வேந்தன்கண்ணே உறுதலை எய்தலான், எல்லாரானும் நன்கு மதிக்கப்படும்.

உரைவிளக்கம்

'வேந்தன்கண் ஊறு எய்தல்' எடுத்தவினை அதனால் முற்றுப் பெற்றுச் செல்வமும் புகழும் அவன்கண்ணவாதல். எய்தலான் என்பது திரிந்து நின்றது. 'உள்ளல்', மதிப்பான் மறவாமை. இதனால் அதன் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **666** (எண்ணிய)

'எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார் 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்

திண்ணிய ராகப் பெறின்.(06)திண்ணியர் ஆகப் பெறின்.

இதன் பொருள்

எண்ணிய எண்ணியாங்கு எய்துப= தாம் எய்த எண்ணிய பொருள்கள் எல்லாவற்றையும், அவ்வெண்ணியவாறே எய்துவர்; எண்ணியார் திண்ணியராகப் பெறின்= எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கண் திண்மை உடையராகப் பெறின்.

உரைவிளக்கம்

எளிதின் எய்துப என்பார், 'எண்ணியாங் கெய்துப' என்றார். அவர்

அவ்வாறல்லது எண்ணாமையின் திண்ணியராகவே வினை முடியும்; அது முடிய, அவை யாவையும் கைகூடும் என்பது கருத்து. இதனால் அஃதுடையார் எய்தும் பயன் கூறப்பட்டது.

# குறள் **667** (உருவுகண்)

' உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்'உருவு கண்டு எள்ளாமை வேண்டும் உருள் பெரும் தேர்க்கு

கச்சாணி யன்னா ருடைத்து.(07)அச்சாணி அன்னார் உடைத்து.

இதன் பொருள்

உருள் பெரும் தேர்க்கு அச்சாணி அன்னார் உடைத்து= உருளாநின்ற பெரிய தேர்க்கு அச்சின்கண் ஆணி போல வினைக்கண் திண்ணியாரை உடையது உலகம்; உருவு கண்டு எள்ளாமை வேண்டும்= அதனால் அவரை வடிவின் சிறுமைநோக்கி இகழ்தலை ஒழிக.

உரைவிளக்கம்

சிறுமை, 'எள்ளாமை வேண்டும்' என்பதனானும், உவமையானும் பெற்றாம். 'அச்சு' உருள்கொத்த மரம். 'ஆணி' உருள் கழலாது அதன்கடைக்கண் செருகுமது. அது வடிவாற் சிறியதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டுய்க்கும் திட்பம்உடைத்து; அதுபோல வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டுய்க்கும் திட்பமுடைய அமைச்சரும் உளர்; அவரை அத்திட்பம் நோக்கி அறிந்துகொள்க என்பதாம். இதனால் அவரை அறியுமாறு கூறப்பட்டது.

# குறள் **668** (கலங்காது)

'கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது 'கலங்காது கண்ட வினைக் கண் துளங்காது

தூக்கங் கடிந்து செயல்.(08)தூக்கம் கடிந்து செயல்.

இதன் பொருள்

கலங்காது கண்ட வினைக்கண்= மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண்; துளங்காது தூக்கம் கடிந்து செயல்= பின் அசைதலின்றி நீட்டித்தலை ஒழிந்து செய்க.

உரைவிளக்கம்

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோல் தோன்றுமாகலின், தெளிந்து பலகால் ஆராய்ந்து தாம் செய்வதாக ஓர்த்தவினையைக் 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை திட்பமுடைமை.

# குறள் **669** (துன்பமுற)

'துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி 'துன்பம் உற வரினும் செய்க துணிவு ஆற்றி

யின்பம் பயக்கும் வினை.(09) இன்பம் பயக்கும் வினை.

இதன் பொருள்

துன்பம் உற வரினும்= முதற்கண் மெய்ம் முயற்சியான் தமக்குத் துன்பம் மிகவருமாயினும்; இன்பம் பயக்கும் வினை துணிவு ஆற்றிச் செய்க= அது நோக்கித் தளராது, முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க.

உரைவிளக்கம்

துணிவு கலங்காமை. அஃதுடையார்க்கு அல்லது கணிகமாய முயற்சித் துன்பம் நோக்காது நிலையுதலுடைய பரிணாம இன்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச் செய்க' என்றார்.

இவை இரண்டுபாட்டானும் அவர் வினைசெய்யுமாறு கூறப்பட்டது.

# குறள் **670** (எனைத்திட்ப)

' எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்'எனைத் திட்பம் எய்தியக் கண்ணும் வினைத் திட்பம்

வேண்டாரை வேண்டா துலகு.(10)வேண்டாரை வேண்டாது உலகு.

இதன் பொருள்

வினைத்திட்பம் வேண்டாரை= வினைத்திட்பத்தை இது நமக்குச் சிறந்தது என்று கொள்ளாத அமைச்சரை; எனைத் திட்பம் எய்தியக் கண்ணும்= ஒழிந்த திட்பங்கள் எல்லாம் உடையராய இடத்தும்; வேண்டாது உலகு= நன்கு மதியார் உயர்ந்தோர்.

உரைவிளக்கம்

மனத்தின்கண் திட்பம் இல்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும், வினை முடியாதாம், ஆகவே அவையெல்லாம் கெடும் என்பது பற்றி 'உலகுவேண்டாது' என்றார்.

இதனால் வினைத்திட்பம் இல்லாதாரது இழிபு கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- இரண்டாவது அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **68.** வினைசெயல்வகை

அதிகார முன்னுரை

அஃதாவது, அத்திட்பமுடைய அமைச்சன் அவ்வினையைச் செய்யுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **671 (**சூழ்ச்சி**)**

சூழ்ச்சி முடிவுதுணி வெய்த லத்துணிவு சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் அத் துணிவு

தாழ்ச்சியுட் டங்குத றீது. (01) தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

தொடரமைப்பு**:** சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல்**,** அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

இதன்பொருள்

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்= விசாரத்திற்கு எல்லையாவது, விசாரிக்கின்றான் இனி இது தப்பாது என்னும் துணிவினைப் பெறுதல்; அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது= அங்ஙனந் துணிவு பெற்ற வினை, பின் நீட்டிப்பின்கண் தங்குமாயின், அது குற்றமுடைத்து.

உரை விளக்கம்

'சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்' எனவே, துணிவெய்தும் அளவுஞ் சூழவேண்டும் என்பது பெற்றாம். பின்னர்த் `துணிவு` ஆகுபெயர். நீட்டிப்புச் செய்யுங் காலத்துச் செய்யாமை. அஃதுள்ளவழிக் காலக் கழிவாகலானும், பகைவர் அறிந்து அழித்தலானும் முடியாமையின் அதனைத் தீது என்றார்.

# குறள் 672 (தூங்குக)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க தூங்குக தூங்கிச் செயல்பால தூங்கற்க

தூங்காது செய்யும் வினை. (02) தூங்காது செய்யும் வினை.

தொடரமைப்பு: தூங்கிச் செயற்பால தூங்குக, தூங்காது செய்யும்வினை தூங்கற்க.

இதன்பொருள்

தூங்கிச் செயற்பால தூங்குக= நீட்டித்துச் செய்யும் பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க; தூங்காது செய்யும் வினை தூங்கற்க= நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியாது ஒழிக.

உரை விளக்கம்

இருவழியும் இறுதிக்கண் தொக்க ஏழாவது விரி◌ககப்பட்டது. இருவகை வினைகளும் வலியானும் காலத்தானும் அறியப்படும். மாறிச் செய்யின், அவை வாயா என்பது கருத்து. மேல் தூங்காமை என்றார், ஈண்டதனைப் பகுத்துக் கூறினார்.

இவை இரண்டுபாட்டானும் பொதுவகையால் வினைசெய்யும் திறம் கூறப்பட்டது.

# குறள் **673 (**ஒல்லும்வா**)**

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால் ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்றே ஒல்லாக்கால்

செல்லும்வாய் நோக்கிச் செயல். (03) செல்லும் வாய் நோக்கிச் செயல்.

தொடரமைப்பு**:** ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று, ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செயல்.

இதன்பொருள்

ஒல்லும் வாய் எல்லாம் வினைநன்று= வினைசெய்யுங்கால், இயலும் இடத்தெல்லாம் போராற் செய்தல் நன்று; ஒல்லாக்கால் செல்லும் வாய்நோக்கிச் செயல்= அஃது இயலாவிடத்து, ஏனை மூன்று உபாயத்துள்ளும் அது முடிவதோர் உபாயநோக்கிச் செய்க.

உரை விளக்கம்

இயலுமிடம், பகையில் தான் வலியனாய காலம். அக்கலத்துத் தண்டமே நன்று என்றார், அஞ்சுவது அதற்கேயாகலி◌ன். இயலாவிடம் ஒத்தகாலமும், மெலியகாலமும். அவ்விரண்டு

காலத்தும் சாம பேத தானங்களுள் அதுமுடியும் உபாயத்தாற் செய்க என்றார், அவை ஒன்றற்கொன்று வேறுபாடு உடையவேனும் உடம்படுத்தற் பயத்தான் தமக்குள் ஒக்குமாகலின். இதனால் வலியான், ஒப்பான், மெலியான் என நிலை மூவகைத்து என்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப்பட்டன.

# குறள் 674 (வினைபகை)

வினைபகை யென்றிரண் டினெச்ச நினையுங்காற் வினை பகை என்று இரண்டின் எச்சம் நினையும் கால்

தீயெச்சம் போலத் தெறும். (04) தீ எச்சம் போலத் தெறும்.

தொடரமைப்பு: வினை பகை என்று இரண்டின் எச்சம், நினையுங்கால் தீ எச்சம் போலத் தெறும்.

இதன்பொருள்

வினை பகை என்ற இரண்டின் எச்சம்= செய்யத் தொடங்கிய வினையும், களையத்தொடங்கிய பகையும் என்று சொல்லப்பட்ட இரண்டனது ஒழிவும்; நினையுங்கால் தீயெச்சம் போலத் தெறும்= ஆராயுங்கால் தீயினது ஒழிவுபோலப் பின் வளர்ந்து கெடுக்கும்.

உரை விளக்கம்

இனி இக்குறை என்செய்வது என்று இகழ்ந்து ஒழியற்க, முடியச் செய்க என்பதாம். பின் வளர்தல் ஒப்புமைபற்றிப் பகையெச்சமும் உடன் கூறினார். இதனான் வலியான் செய்யுந்திறம் கூறப்பட்டது.

## குறள் 675 (பொருள்கருவி)

'பொருள்கருவி காலம் வினையிட னொடைந்து'பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும்

மிருடீர வெண்ணிச் செயல். (05) இருள் தீர எண்ணிச் செயல்.

**தொடரமைப்பு: பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும், இருள் தீர எண்ணிச் செயல்.**

இதன்பொருள்

பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும்= வினைசெய்யுமிடத்துப் பொருளும் கருவியும் காலமும் வினையும் இடனுமாகிய இவ்ஐந்தனையும்; இருள் தீர எண்ணிச் செயல்= மயக்கம் அற எண்ணிச் செய்க.

உரை விளக்கம்

எண்ணொடு பிற வழியும் கூட்டப்பட்டது. 'பொருள்' அழியும் பொருளும் ஆகும் பொருளும். 'கருவி' தன் தானையும், மாற்றார் தானையும். 'காலம்' தனக்கு ஆம் காலமும், அவர்க்கு ஆம் காலமும். 'வினை' தான் வல்ல வினையும், அவர் வல்லவினையும். 'இடம்' தான் வெல்லும் இடமும், அவர் வெல்லும் இடமும். இவற்றைத் தான் வென்றிஎய்தும் திறத்திற் பிழையாமல் எண்ணிச் செய்க என்பதாம்.

## குறள் 676 (முடிவுமிடை)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் () முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்

படுபயனும் பார்த்துச் செயல். (06) படுபயனும் பார்த்துச் செயல்.

தொடரமைப்பு: முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும் படுபயனும் பார்த்துச் செயல்.

இதன்பொருள்

முடிவும்= வினை செய்யுங்கால் அது முடிதற்கு உளதாம் முயற்சியும்; இடையூறும்= அதற்கு வரும் இடையூறும்; முற்றியாங்கு எய்தும் படுபயனும்= அது நீங்கி முடிந்தாற் தான் எய்தும் பெரும்பயனும்; பார்த்துச் செயல்= சீர்தூக்கிச் செய்க.

உரை விளக்கம்

'முடிவு' ஆகுபெயர். முயற்சி இடையூறுகளது அளவிற் பயனது அளவு பெரிதாயிற் செய்க என்பதாம்.

# குறள் 677 (செய்வினை)

செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை

யுள்ளறிவா னுள்ளங் கொளல். (07) உள்ளறிவான் உள்ளம் கொளல்.

தொடரமைப்பு: செய்வினை செய்வான் செயன்முறை, அவ்வினை உள்ளறிவான் உள்ளம் கொளல்.

இதன்பொருள்

செய்வினை செய்வான் செயன்முறை= அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கினான் செய்யும் முறைமையாவது; அவ்வினை உள் அறிவான் உள்ளம் கொளல்= அதனது உளப்பாட்டினை அறிவான் கருத்தினைத் தானறிதல்.

உரை விளக்கம்

அவ்வாறு என்றது பொருள் முதலிய எண்ணலையும், முடிவு முதலிய தூக்கலையும். 'உள்ளறிவான்' முன்செய்து போந்தவன். அவன் கருத்து, அவன் செய்து போந்த உபாயம். அதனை அறியவே, தானும் அதனாற் செய்து பயன் எய்தும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் ஒப்பான் செய்யும் திறம் கூறப்பட்டது.

# குறள் **678** (வினையான்)

வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள் வினையான் வினை ஆக்கிக் கோடல் நனை கவுள்

யானையால் யானையாத் தற்று. (08) யானையால் யானை யாத்து அற்று.

தொடரமைப்பு: வினையான் வினை ஆக்கிக் கோடல், நனை கவுள் யானையால் யானை யாத்தற்று

இதன்பொருள்

வினையான் வினை ஆக்கிக் கோடல்= செய்கின்ற வினையாலே அன்னது பிறிதும் ஓர் வினையை முடித்துக் கொள்க; நனை கவுள் யானையால் யானை யாத்தற்று= அது மதத்தான் நனைந்த கபோலத்தினையுடைய யானையாலே அன்னது பிறிதுமோர் யானையைப் பிணித்ததனோடு ஒக்கும்.

உரை விளக்கம்

பிணித்தற்கு அருமை தோன்ற 'நனைகவுள்' என்றார்?. 'நனைகவுள்' என்பது பின்னும் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே, பிறிதும் ஓர் வினையை முடித்தற்கு உபாயம்

ஆமாறு எண்ணிச் செய்க; செய்யவே, அம்முறையான் எல்லாவினையும் எளிதில் முடியும் என்பதாம்.

## குறள் 679 (நட்டார்க்கு)

'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே

யொட்டாரை யொட்டிக் கொளல். (09) ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

தொடரமைப்பு: நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே, ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

இதன்பொருள்

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே= வினைசெய்வானால், தன் நட்டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப்படும்; ஒட்டாரை ஒட்டிக் கொளல்= தன் பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல்.

உரை விளக்கம்

அவ்வினை வாய்த்தற்பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன் மெலிவு புலனாவதன் முன்னே செய்க என்பார், 'விரைந்தது' என்றார்; விரைந்து செய்யப்படுவது என்றவாறு. வினைசெய்யுந்திறம் ஆகலின் பகைவரோடு ஒட்டார் ஆயிற்று. தன் ஒட்டார், பிறருட் கூடாமல் மாற்றிவைத்தல் எனினும் அமையும்.

## குறள் 680 (உறைசிறியா)

'உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்'உறை சிறியார் உள் நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்

கொள்வர் பெரியார்ப் பணிந்து. (10) கொள்வர் பெரியார்ப் பணிந்து.

**தொடரமைப்பு:** உறை சிறியார் உள் நடுங்கல் அஞ்சிக் குறைபெறின் பெரியார்ப் பணிந்து கொள்வர்.

இதன்பொருள்

உறை சிறியார்= ஆளுமிடம் சிறியராய அமைச்சர்; உள் நடுங்கல் அஞ்சி= தம்மின் வலியராய் எதிர்ந்தவழித் தம் பகுதி நடுங்கலை அஞ்சி; குறை பெறின் பெரியார்ப்பணிந்து கொள்வர்= அந்நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை ஏற்றுக் கொள்வர்.

உரை விளக்கம்

இடம்- நாடும் அரணும். அவற்றது சிறுமை ஆள்வார்மேல் ஏற்றப்பட்டது. மெலியாரோடு சந்திக்குவலியார் இயைவது அரிதாகலின், 'பெறின்' என்றார். அடியிலே மெலியராயினார், தம் பகுதியும் அஞ்சிநீங்கின் முதலொடுங் கெடுவார் ஆகலின் அது வாராமற் சிறிது கொடுத்துஞ் சந்தினை ஏற்றுக் கொள்க என்பதாம். பணிதல் மானமுடையார்க்குக் கருத்தன்மையின், கொள்வர் என உலகியலாற் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் மெலியான் செய்யும் திறன் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- இரண்டாவது அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **69.** தூது

அதிகாரமுன்னுரை

அஃதாவது, சந்தி விக்கிரகங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மை. அவ்விரண்டனையும் மேல் வினைசெயல் வகையென்றமையின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் எனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சனோடு ஒப்பான் ஆகலானும், பின்னோன் அவனிற் காற்கூறு குணங் குறைந்தோனாகலானும் இஃது அமைச்சியல் ஆயிற்று.

## குறள் **681 (**அன்புடைமை**)**

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம் அன்பு உடைமை

ஆன்ற குடிப் பிறத்தல் வேந்து அவாம்

பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. (01) பண்பு உடைமை தூது உரைப்பான் பண்பு.

தொடரமைப்பு: அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்து அவாம் பண்புடைமை தூது உரைப்பான் பண்பு.

இதன்பொருள்

அன்பு உடைமை= தன் சுற்றத்தார் மாட்டு அன்புடையனாதலும்; ஆன்ற குடிப்பிறத்தல்= அமைச்சுப் பூணற்கமைந்த குடியின்கட் பிறத்தலும்; வேந்து அவாம் பண்பு உடைமை= அரசர் சாதி விரும்பும் பண்புடையனாதலும்; தூது உரைப்பான் பண்பு= தூது வார்த்தை சொல்வானுக்கு இலக்கணம்.

உரை விளக்கம்

முன்னைய இரண்டனாலும், முறையே சுற்றத்தார்க்குத் தீங்குவாராமல் தான் பேணிஒழுகலும், தன் முன்னோர் தூதியல் கேட்டறிதலும் பெற்றாம். 'வேந்தவாம் பண்புடைமை' முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்தாராதல் பெறுதும்.

# குறள் **682** **(**அன்பறிவா**)**

'அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்'அன்பு அறிவு ஆராய்ந்த சொல் வன்மை தூது உரைப்பார்க்கு

கின்றி யமையாத மூன்று. (02) இன்றியமையாத மூன்று.

தொடரமைப்பு:

இதன்பொருள்

அம்பு= தம்மரசன் மாட்டு அன்புடைமையும்; அறிவு= அவனுக்கு ஆவன அறியும் அறிவுடைமையும்; ஆராய்ந்த சொல்வன்மை= அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையும் என; தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று= தூதுரைக்க உரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று.

உரை விளக்கம்

ஆராய்தல்: அவற்றிறுகு உடம்படும் சொற்களைத் தெரிதல். இன்றியமையாத மூன்று எனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிற குணங்களும் வேண்டும் என்பது பெற்றாம். இவை இரண்டு பாட்டானும் இருவகையார்க்கும் பொதுவிலக்கணம் கூறப்பட்டது.

தொடரமைப்பு:

## குறள் **683** (**நூலாருள்**)

நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள் () நூலாருள் நூல் வல்லன் ஆகுதல் வேலாருள்

வென்றி வினையுரைப்பான் பண்பு. (03) வென்றி வினை உரைப்பான் பண்பு.

தொடரமைப்பு:

இதன்பொருள்

வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு= வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்அரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது; நூலாருள்

நூல்வல்லன் ஆகுதல்= நீதி நூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்லனாதல்.

உரை விளக்கம்

கோறன்மாலையர் என்பது தோன்ற வேலார் என்றும், தூதுவினை இரண்டும் அடங்க வென்றிவினை என்றும் கூறினார். வல்லனாதல் உணர்வுமாத்திரம் உடையராய அவர்முன் வகுக்குமாற்றல் உடையனாதல்.

## குறள் **684** (அறிவுரு)

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன் () அறிவு உரு ஆராய்ந்த கல்வி இம் மூன்றன்

செறிவுடையான் செல்க வினைக்கு. (04) செறிவு உடையான் செல்க வினைக்கு.

### தொடரமைப்பு:

இதன்பொருள்

அறிவு= இயற்கையாகிய அறிவும்; உரு= கண்டார் விரும்பும் தோற்றப் பொலிவும்; ஆராய்ந்த கல்வி= பலரோடும் பலகாலும் ஆராயப்பட்ட கல்வியும் என; இம்மூன்றன் செறிவு உடையான்= நன்கு மதித்தற்கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தையுடையான்; வினைக்குச் செல்க= வேற்று வேந்தரிடைத் தூது வினைக்குச் செல்க.

உரை விளக்கம்

இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதல் அரிதாகலின், செறிவுடையான் என்றார். இவற்றான் நன்கு மதிப்புடையனாகவே, வினை இனிது

முடியும் என்பது கருத்து.

# குறள் **685** **(**தொகச்சொல்லி**)**

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி () தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி

நன்றி பயப்பதாந் தூது. (05) நன்றி பயப்பதாம் தூது.

## தொடரமைப்பு:

இதன்பொருள்

தொகச் சொல்லி= வேற்றரசர்க்குப் பல காரியங்களைச் சொல்லும்வழிக் காரணவகையான் தொகுத்துச் சொல்லியும்; தூவாத நீக்கி நகச்சொல்லி= இன்னாத காரியங்களைச் சொல்லும்வழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும்; நன்றி பயப்பது தூதாம்= தன் அரசனு ◌க்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான்.

உரை விளக்கம்

பல காரியங்கட்கு உடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாயது ஒன்றைச் சொல்ல, அதனால் அவை விளைய மாறுய்த்துணர அருமையானும் சுருக்கத்தானும் உடம்படுவர். இன்னாதவற்றிற்கு உடம்படாதார் தம் மனமகிழச்சொல்ல, அவ்வின்னாமை காணாது உடம்படுவர் ஆதலின், அவ்விரு வாற்றானும் தன் காரியந் தவறாமல் முடிக்கவல்லான் என்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தான் தொக்கன.

# குறள் 686 (கற்றுக்கண்)

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற் () கற்றுக் கண் அஞ்சான் செலச் சொல்லிக் காலத்தால்

றக்க தறிவதாந் தூது. (06) தக்கது அறிவதாம் தூது.

தொடரமைப்பு:

இதன்பொருள்

கற்று= நீதிநூல்களைக் கற்று; செலச்சொல்லி= தான்சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி; கண்அஞ்சான்= அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற்கு அஞ்சாடு; காலத்தால் தக்கது அறிவது தூதாம்= காலத்தோடு பொருந்த அது முடியத்தக்க உபாயம் அறிவானே தூதனாவான்.

உரை விளக்கம்

அவ்வுபாயம் அறிதற்பொருட்டு நீதிநூல் கல்வியும், அதனான் அன்றிப் பிறிதொன்றான் முடியும் காலம்வரின், அவ்வாறு முடிக்கவேண்டுதலின் 'காலத்தாற் தக்கது அறித'லும் இலக்கணம் ஆயின.

# குறள் 687 (கடனறிந்து)

கடனறிந்து காலங் கருதி யிடனறிந் () கடன் அறிந்து காலம் கருதி இடன் அறிந்து

தெண்ணி யுரைப்பான் றலை. (07) எண்ணி உரைப்பான் தலை.

தொடரமைப்பு:

இதன்பொருள்

கடன் அறிந்து= வேற்றரசர் இடத்துத் தான்செய்யும் முறைமை அறிந்து; காலம் கருதி= அவர் செவ்வி பார்த்து; இடன் அறிந்து= சென்ற கருமஞ் சொல்லுதற்கேற்ற இடம் அறிந்து; எண்ணி= சொல்லுமாற்றை முன்னே விசாரித்து; உரைப்பான் தலை= அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான்.

உரை விளக்கம்

செய்யும் முறைமையாவது. அவர்நிலையுந் தன்னரசன் நிலையும், தன்னிலையும் தூக்கி அவற்றிற்கு ஏற்பக் காணும் முறைமையும் சொல்லுமுறைமையும் முதலாயின. செவ்வி- தன்சொல்லை ஏற்றுக்கொள்ளும் மனநிகழ்ச்சி; அது காலவயத்தது ஆகலின் 'காலம்' என்றார். 'இடம்'- தனக்குத் துணையாவார் உடனாயஇடம். 'எண்ணு'தல்- தான் அதுசொல்லுமாறும், அதற்கு அவர்சொல்லும் உத்தரமும், அதற்குப் பின் தான்சொல்லுவனவுமாக இவ்வாற்றான் மேன்மேல் தானே கற்பித்தல். வடநூலார் இவ்விரு வகையாருடன் ஓலைகொடுத்து நிற்பாரையும் கூட்டித் தாதரைத் தலை, இடை, கடை என்று வகுத்துக் கூறினார்ஆகலின், அவர்மதமும் தோன்றத் 'தலை' என்றார். தூது என்பது, அதிகாரத்தான் வந்தது.

இவை ஐந்து பாட்டானும் தான்வகுத்துக் கூறுவானது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **688** (தூய்மை)

தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின் () தூய்மை துணைமை துணிவு உடைமை இம் மூன்றின்

வாய்மை வழியுரைப்பான் பண்பு. (08) வாய்மை வழி உரைப்பான்

பண்பு.

தொடரமைப்பு:

இதன்பொருள்

வழி உரைப்பான் பண்பு=தன் அரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவானது இலக்கணமாவன; தூய்மை= பொருள் காமங்களான் தூயனாதலும்; துணைமை= தனக்கு அவர்அமைச்சர் துணையாந் தன்மையும்; துணிவுடைமை= துணிதல்உடைமையு ்ம்; இம்மூன்றின் வாய்மை= இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையும் என இவை.

உரை விளக்கம்

பொருள், காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப் பெருட்டுத் 'தூய்மை'யும், தனனரசனுக்கு உயர்ச்சி கூறியவழி எம்மனோர்க்கு அஃது இயல்பு எனக்கூறி, அவர் வெகுளி நீக்குதற்பொருட்டுத் 'துணைமை'யும், இது சொல்லின் ஏதஞ்செய்வர் என்று ஒழியாமைப்பொருட்டுத் 'துணிவுடைமை'யும், யாவரானும் தேறப்படுதற்பொருட்டு 'மெய்ம்மை'யும் வேண்டப்பட்டன. 'இன்' ஒடுவின் பொருட்கண் வந்தது.

## குறள் **689** (விடுமாற்றம்)

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம் () விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடு மாற்றம்

வாய்சோரா வன்க ணவன். (09) வாய் சோரா வன்கண் அவன்.

தொடரமைப்பு:

இதன்பொருள்

விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்= தன்அரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லவுரியான்; வடு மாற்றம் வாய்சோரா வன்கணவன்= தனக்கு வரும் ஏதத்திற்கு அஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத திண்மையை உடையான்.

உரை விளக்கம்

தாழ்வு சாதிதருமம் அன்மையின், 'வடு' என்றார். 'வாய்சோரா' எனக் காரியம் காரணத்துள் அடக்கப்பட்டது.

# குறள் **690** (இறுதிபயப்)

' இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற் இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு '

குறுதி பயப்பதாந் தூது. (10) உறுதி பயப்பதாம் தூது.

தொடரமைப்பு:

இதன்பொருள்

இறுதி பயப்பினும் எஞ்சாது= அவ்வார்த்தை தன் உயிர்க்கு இறுதி தருமாயினும், அதற்கு அஞ்சி ஒழியாது; இறைவற்கு உறுதி பயப்பது தூதாம்= தன்னரசன் சொல்லியவாறே, அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதன்ஆவான்.

உரை விளக்கம்

'இறுதி பயப்பினும்' என்றதனால், ஏனைய பயத்தல் சொல்லவேண்டா ஆயிற்று.

இவை மூன்று பாட்டானும் கூறியது கூறுவானது இலக்கணம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **70.** மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

அதிகார முன்னுரை

அஃதாவது, அமைச்சர் அரசரைப் பொருந்தி ஒழுகுமாறு. இது வேந்தவாம் பண்புடைமை என மேலே வேண்டப்பட்டமையின், தூதின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **691 (**அகலாதணு**)**

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க () அகலாது அணுகாது தீக் காய்வார் போல்க

இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். (01) இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார்.

இதன்பொருள்

இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார்= மாறுபடுதலை உடைய அரசரைச் சேர்ந்து ஒழுகும் அமைச்சர்; அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க= அவரை மிகநீங்குவதும், மிகச்செறிவதும் செய்யாது தீக்காய்வார்போல இடைநிலத்திலே நிற்க.

உரை விளக்கம்

கடிதின் வெகுளும் தன்மையர் என்பது தோன்ற, 'இகல்வேந்தர்' என்றார். மிக அகலின் பயன் கொடாது, மிக அணுகின் அவமதிபற்றித் தெறும் வேந்தர்க்கு, மிக அகலின் குளிர் நீங்காது மிக அணுகின் சுடுவதாய தீயோடு உளதாய தொழில்உவமம் பெறப்பட்டது.

# குறள் **692** (மன்னர்விழை)

மன்னர் விழைப விழையாமை மன்னரான் () மன்னர் விழைப விழையாமை மன்னரான்

மன்னிய வாக்கந் தரும். (02) மன்னிய ஆக்கம் தரும்.

இதன்பொருள்

மன்னர் விழைப விழையாமை= தம்மால் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாது ஒழிதல்; மன்னரான் மன்னிய ஆக்கம் தரும்= அமைச்சர்க்கு அவரானே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும்.

உரை விளக்கம்

ஈண்டு 'விழைப' என்றது, அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை. அவை நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மை என்றிவை

முதலாயின. இவற்றை ஒப்பிற்கஞ்சித் தாம் விழையாது ஒழியவே, அவ்வச்ச நோக்கி உவந்து அவர்தாமே எல்லாச் செல்வமும் நல்குவர் என்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பிற் கேடுதரும் என்பதாம்.

# குறள் **693** (போற்றின)

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின் () போற்றின் அரியவை போற்றல் கடுத்த பின்

றேற்றுதல் யார்க்கு மரிது. (03) தேற்றுதல் யார்க்கும் அரிது.

இதன்பொருள்

போற்றின் அரியவை போற்றல்= அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள் தங்கண் வாராமற் காக்க; கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது= அவற்றை வந்தனவாகக் கேட்டு, அவ்வரசர் ஐயுற்றால் அவரைப் பின் தெளிவித்தல் யாவர்க்கும் அரிதாகலான்.

உரை விளக்கம்

அரிய பிழைகளாவன: அவரால் பொறுத்தற்கு அரிய அறைபோதல், உரிமையொடு மருவல், அரும்பொருள் வெளவல் என்றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது, ஒருவன் சொல்லியக்கால், தகுமோ என்று ஐயுறாது தகாதென்றே அவர் துணிய ஒழுகல். ஒருவாற்றான் தெளிவித்தலும், கடன்கொண்டான் தோன்றப் பொருள்தோன்றுமாறு போலக் கண்டுழி எல்லாம் அவை நினைக்கப்படுதலின், 'யார்க்கும் அரிது' என்றார். இவை மூன்று பாட்டானும் அது பொதுவகையால் கூறப்பட்டது.

# குறள் **694 (**செவிச்சொல்**)**

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக () செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல்

லான்ற பெரியா ரகத்து. (04) ஆன்ற பெரியார் அகத்து.

இதன்பொருள்

ஆன்ற பெரியார் அகத்து= அமைந்த அரசர் அருகிருந்தால்; செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல்= அவர்காண ஒருவன் செவிக்கட் சொல்லுதலையும், ஒருவன் முகநோக்கி நகுதலையும் தவிர்ந்து ஒழுகுக.

உரை விளக்கம்

சேர்தல்: பிறனொடு சேர்தல். செய்தொழுகின் தம் குற்றங்கண்டு செய்தனவாகக் கொள்வர் என்பது கருத்து.

# குறள் **695 (**எப்பொருளும்**)**

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை () எப்பொருளும் ஓரார் தொடரார் மற்று அப்பொருளை

விட்டக்காற் கேட்க மறை. (05) விட்டக்கால் கேட்க மறை.

இதன்பொருள்

மறை= அரசனுக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி; எப்பொருளும் ஓரார்= யாதொரு பொருளையும் செவி கொடுத்து◌்க் கேளாது; தொடரார்= அவனை முடுகி வினவுவதுஞ் செய்யாது; அப்பொருளை விட்டக்கால் கேட்க= அம்மறைப்பொருளை

அவன் தானே அடக்காது சொல்லியக்கால் கேட்க.

உரை விளக்கம்

ஓர்தற்கு ஏற்கும் பொருளாயினும் என்பார், 'எப்பொருளும்' என்றார். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது.

# குறள் **696 (**குறிப்பறிந்து**)**

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில () குறிப்பு அறிந்து காலம் கருதி வெறுப்பு இல

வேண்டுப வேட்பச் சொலல். (06) வேண்டுப வேட்பச் சொலல்.

இதன்பொருள்

குறிப்பு அறிந்து= அரசனுக்குக் காரியம் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினை அறிந்து; காலம் கருதி= சொல்லுதற்கேற்ற காலத்தையும் நோக்கி; வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல்= வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்பும் வகை சொல்லுக.

உரை விளக்கம்

குறிப்புக் காரியத்தின்கண் அன்றிக் காம வெகுளி உள்ளிட்டவற்றின் நிகழ்வுழியும் அதற்குஏலாக் காலத்தும் சொல்லுதல் பயனின்றாகலின் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவன் உடம்படாதன முடிவுபோகாமையின் 'வெறுப்பில' என்றும், பயனில்லவும் பயன் சுருங்கியவும் செய்தல் வேண்டாமையின் 'வேண்டுப' என்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுக

என்பார், 'வேட்பச்சொலல்' என்றும் கூறினார்.

# குறள் **697** (வேட்பன)

வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங் () வேட்பன சொல்லி வினை இல எஞ்ஞான்றும்

கேட்பினுஞ் சொல்லா விடல். (07) கேட்பினும் சொல்லா விடல்.

இதன்பொருள்

வேட்பன சொல்லி= பயன் பெரியனவுமாய், அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினும் சொல்லி, எஞ்ஞான்றும் வினை இல கேட்பினும் சொல்லாவிடல்= எஞ்ஞான்றும் பயனிலவாயவற்றைத் தானே கேட்டாலும் சொல்லாது விடுக.

உரை விளக்கம்

'வினையில' எனவும், 'கேட்பினும்' எனவும் வந்த சொற்களான், அவற்றின் மறுதலைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின் 'வினை' என்றும், வறுமைக்காலமும் அடங்க 'எஞ்ஞான்றும்' என்றும் கூறினார். சொல்லுவனவும் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு.

இவை நான்கு பாட்டானும் சிறப்புவகையாற் கூறப்பட்டது.

# குறள் **698** (இளையரின)

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற () இளையர் இன முறையர்

என்று இகழார் நின்ற

வொளியோ டொழுகப் படும். (08) ஒளியோடு ஒழுகப் படும்.

இதன்பொருள்

இளையர் இன முறையர் என்று இகழார்= இவர் எம்மின் இளையர் என்றும், எமக்கு இன்னமுறையினை உடையரென்றும் அரசரை அவமதியாது; நின்ற ஒளியோடு ஒழுகப்படும்= அவர் மாட்டு நின்ற ஒளியோடு பொருந்த ஒழுகுதல் செயப்படும்.

உரை விளக்கம்

'ஒளி' உறங்காநிற்கவுந் தாம் உலகம் காக்கின்ற அவர் கடவுள்தன்மை. அதனோடு பொருந்த ஒழுகுதலாவது, அவர் கடவுளரும் தாம் மக்களுமாய் ஒழுகுதல். அவ்வொளியால் போக்கப்பட்ட இளமையும் முறையும்பற்றி இகழ்வாராயின், தாமும் போக்கப்படுவர் என்பது கருத்து.

# குறள் **699 (**கொளப்பட்டே**)**

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார் () கொளப் பட்டேம் என்று எண்ணிக் கொள்ளாத செய்யார்

துளக்கற்ற காட்சி யவர். () துளக்கு அற்ற காட்சியவர்.

இதன்பொருள்

கொளப்பட்டேம் என்று எண்ணிக்கொள்ளாத செய்யார்= அரசனால் யாம் நன்கு மதிக்கப்பட்டேம் என்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார்; துளக்கு அற்ற காட்சியவர்= நிலைபெற்ற அறிவினை உடையார்.

உரை விளக்கம்

கொள்ளாதன செய்து அழிவெய்துவார், கொளப்பாட்டிற்குப் பின் தம்மை வேறொருவராகக் கருதுவர் ஆதலின், முன்னையராகவே கருதி அஞ்சி ஒழுகுவாரைத் 'துளக்கற்ற காட்சியவர்' என்றார்.

## குறள் **700** (பழையமெனக்)

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங் () பழையம் எனக் கருதிப் பண்பு அல்ல செய்யும்

கெழுதகைமை கேடு தரும். (10) கெழுதகைமை கேடு தரும்.

இதன்பொருள்

பழையம் எனக்கருதிப் பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை= அரசனுக்குத் யாம் பழையம்எனக் கருதித் தமக்கு இயல்புஅல்லாதவற்றைச் செய்யும் உரிமை; கேடு தரும்= அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும்.

உரை விளக்கம்

அவன் பொறாது செறும்பொழுதின் அப்பழைமை நோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன் வேண்டாதன செய்தற்கு ஏதுவாய 'கெழுதகைமை கேடு தரும்' என்றார்.

இவை மூன்று பாட்டானும் பொறுப்பர் என்று அரசர் வெறுப்பன செய்யற்க் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **71.** குறிப்பறிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, அரசர்கருதிய அதனை அவர் கூறாமல் அறிதல். இது மன்னரைச் சேர்ந்து ஒழுகுதற்கு இன்றியமையா தாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **701 (**கூறாமை**)**

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று () கூறாமை நோக்கிக் குறிப்பு அறிவான் எஞ்ஞான்றும்

மாறாநீர் வையக் கணி. () மாறா நீர் வையக்கு அணி.

இதன்பொருள்

குறிப்புக் கூறாமை நோக்கி அறிவான்= அரசனால் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன் முகத்தானும் கண்ணானும் நோக்கி அறியும் அமைச்சன்; எஞ்ஞான்றும் மாறா நீர் வையக்கு அணி= எஞ்ஞான்றும் வற்றாத நீரால் சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓர் ஆபரணமாம்.

உரை விளக்கம்

ஒட்பம் உடையவனாய் எல்லார்க்கும் அழகுசெய்தலான், 'வையக்கணி' என்றார். 'குறிப்பு'ம் 'வைய'மும் ஆகுபெயர். வையத்திற்கு என்பது விகாரப்பட்டு நின்றது.

# குறள் **702** (ஐயப்படா)

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத் () ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்

தெய்வத்தோ டொப்பக் கொளல். (01) தெய்வத்தோடு ஒப்பக் கொளல்.

இதன்பொருள்

அகத்தது ஐயப்படாஅது உணர்வானை= ஒருவன் மனத்தின்கண்நிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக உணரவல்லானை; தெய்வத்தோடு ஒப்பக் கொளல்= மகனே ஆயினும், தெய்வத்தோடு ஒப்ப நன்கு மதிக்க.

உரை விளக்கம்

உடம்பு முதலியவற்றான் ஒவ்வான் ஆயினும், பிறர் நினைத்தது உணரும் தெய்வத்தன்மை உடைமையின் 'தெய்வத்தோடொப்ப'

என்றார்.

# குறள் 703 (குறிப்பிற்)

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள் () குறிப்பின் குறிப்பு உணர்வாரை உறுப்பினுள்

யாது கொடுத்துங் கொளல். (03) யாது கொடுத்தும் கொளல்.

இதன்பொருள்

குறிப்பின் குறிப்பு உணர்வாரை= தம் குறிப்பு நிகழுமாறு அறிந்து; அதனான் பிறர் குறிப்பு அறியும் தன்மையாரை; உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல்= அரசர் தம் உறுப்பினுள் அவர் வேண்டுவது ஒன்றனைக் கொடுத்தாயினும், தமக்குத் துணையாகக் கொள்க.

உரை விளக்கம்

உள்நிகழு நெறி யாவர்க்கும் ஒத்தலின், பிறர் குறிப்புஅறிதற்குத் தம் குறி்ப்புக் கருவியாயிற்று. உறுப்புக்களாவன: பொருளும், நாடும், யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புக்கள். இதற்குப் பிறர் குறிப்பானே அவர் மனக்குறிப்பு உணர்வாரை# என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் குறிப்பறிவாரது சிறப்புக் கூறப்பட்டது.

#. மணக்குடவர்.

# குறள் 704 (குறித்தது)

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை () குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை

யுறுப்போ ரனையரால் வேறு. (04) உறுப்பு ஓர்அனையரால் வேறு.

இதன்பொருள்

குறித்தது கூறாமைக் கொள்வாரோடு= ஒருவன் மனத்துக் கருதிய அதனை அவன் கூறவேண்டாமல் அறியவல்லாரோடு; ஏனை உறுப்பு ஓரனையர்= மற்றை மாட்டாதார் உறுப்பால் ஒருதன்மையாராக ஒப்பாராயினும்; வேறு= அறிவான் வேறு.

உரை விளக்கம்

கொள்ளாதார் என்பதூஉம், ஆயினும் என்பதூஉம் அவாய் நிலையான் வந்தன. சிறந்த அறிவின்மையின், விலங்கு என்னும் கருத்தான் 'வேறு' என்றார்.

# குறள் **705** **(**குறிப்பிற்**)**

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு () குறிப்பின் குறிப்பு உணராவாயின் உறுப்பினுள்

ளென்ன பயத்தவோ கண். (05) என்ன பயத்தவோ கண்.

இதன்பொருள்

குறிப்பின் குறிப்பு உணராவாயின்= குறித்தது காணவல்ல தம் காட்சியாற் பிறர் குறிப்பினை உணரமாட்டாவாயின்; உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ= ஒருவன் உறுப்புக்களுள் சிறந்த கண்கள் வேறென்ன பயனைச் செய்வன?

உரை விளக்கம்

முதற்கண் 'குறிப்பு' ஆகுபெயர். குறிப்பறிதற்கண் துணையாதல் சிறப்புப் பற்றி உயிரது உணர்வு கண்மேல் ஏற்றப்பட்டது. அக்கண்களால் பயனி◌ில்லை என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் குறிப்பு அறியாரது இழிபு கூறப்பட்டது.

# குறள் 706 (அடுத்தது)

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங் () அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம்

கடுத்தது காட்டு முகம். (06) கடுத்தது காட்டும் முகம்.

இதன்பொருள்

அடுத்தது காட்டும் பளிங்குபோல்= தன்னை அடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல; நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும்= ஒருவன் நெஞ்சத்து மிக்கதனை அவன் முகம்தானே கொண்டுகாட்டும்.

உரை விளக்கம்

'அடுத்தது' என்பது ஆகுபெயர். 'கடுத்தது' என்பது கடி என்னும் உரிச்சொல் அடியாய் வந்த தொழிற்பெயர். உவமை ஒருபொருள் பிறிதொரு பொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில் பற்றிவந்தது.

# குறள் 707 (முகத்தின்)

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங் () முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்

காயினுந் தான்முந் துறும். (07) காயினும் தான் முந்துறும்.

இதன்பொருள்

உவப்பினும் காயினும் தான் முந்துறும்- உயிர் ஒருவனை உவத்தலானும், காய்தலானும்உறின், தானறிந்து அவற்றின்கண் அதனின் முற்பட்டு நிற்கும்ஆகலான்; முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ- முகம்போல அறிவு மிக்கது பிறிதுண்டோ? இல்லை.

உரை விளக்கம்

உயிர்க்கே அறிவுள்ளது, ஐம்பூதங்களான் இயன்ற முகத்திற்கு இல்லை என்பாரை நோக்கி, உயிரது கருத்தறிந்து அஃது உவக்குறின் மலர்ந்தும் காய்வுறின் கருகியும் வரலான் உண்டென மறுப்பார் போன்று குறிப்பறிதற்குக் கருவி கூறியவாறு.

# குறள் 708 (முகநோக்கி)

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி () முகம் நோக்கி நிற்க அமையும் அகம் நோக்கி

யுற்ற துணர்வார்ப் பெறின். (08) உற்றது உணர்வார்ப் பெறின்.

இதன்பொருள்

அகம் நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின்- குறையுறுவானும் தன் மனத்தைக் குறிப்பான்அறிந்து தானுற்ற அதனைத் தீர்ப்பாரைப்பெறின்; முகம் நோக்கி நிற்க அமையும்- அவர் தன் முகம் நோக்கும் வகை, தானும் அவர் முகநோக்கி அவ்வெல்லைக்கண் நிற்க அமையும்.

உரை விளக்கம்

'உணர்வார்' எனக் காரியத்தைக் காரணம்ஆக்கிக் கூறினார். அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் இருவருக்கும் சிறுமையாகலின், அது வேண்டா என்பதாம். குறையுறுவான் இயல்பு கூறுவார்போன்று கருவி கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் குறிப்பறிதற்கருவி முகம் என்பது கூறப்பட்டது.

# குறள் 709 (பகைமையுங்)

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின் () பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் கண்ணின்

வகைமை யுணர்வார்ப் பெறின். (09) வகைமை உணர்வார்ப் பெறின்.

இதன்பொருள்

கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின்= வேந்தர்தம் நோக்கு வேறுபாட்டின் தன்மையை அறியவல்ல அமைச்சரைப் பெறின்; பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும்- அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும், ஏனைக் கேண்மையையும் வேற்று வேந்தர் சொல்லிற்றிலர் ஆயினும் அவர் கண்களே சொல்லும்.

உரை விளக்கம்

இறுதிக்கட் 'கண்' ஆகுபெயர். நோக்குவேறுபாடாவன, வெறுத்த நோக்கமும், உவந்த நோக்கமும். உணர்தல் அவற்றை அவ்வக் குறிகளான் அறிதல்.

# குறள் **710 (**நுண்ணிய**)**

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற் () நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் காணுங்கால்

கண்ணல்ல தில்லை பிற. (10) கண் அல்லது இல்லை பிற.

இதன்பொருள்

நுண்ணியம் என்பார் அளக்கும் கோல்- யாம் நுண்ணறிவு உடையேம் என்று இருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை அளக்கும் கோலாவது; காணுங்கால் கண்ணல்லது இல்லை பிற- ஆராயுமிடத்து அவர்கண்ணல்லது பிற இல்லை.

உரை விளக்கம்

அறிவின் உண்மை அஃதுடையார்மேல் ஏற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பன முதலாகப் பிறர் கருத்தளக்கும் அளவைகள் பல. அவையெல்லாம் முன்னறிந்தவழி அவரான் மறைக்கப்படும். நோக்கம் மனத்தொடு கலத்தலான் ஆண்டு மறைக்கப் படாது என்பதுபற்றி, அதனையே பிரித்துக் கூறினார். இனி அலைக்குங்கோல் என்று பாடம்ஓதி, நூண்ணியம் என்றிருக்கும் அமைச்சரை அலைக்கும் கோலாவது கண்ணென உரைத்து, தன் வெகுளி நோக்கால் அவர் வெகுடற் குறிப்பறிக என்பது கருத்தாக்குவாரும் உளர்.

இவை இரண்டு பாட்டானும் நுண்கருவி நோக்கு என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **72.** அவை அறிதல்.

அதிகார முன்னுரை

அஃதாவது, அரசனோடிருந்த அவையினது இயல்பை அறிதல். காரியம் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே அன்றி, இதுவும் வேண்டுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **711 (**அவையறிந்**)**

அவை யறிந்தாராய்ந்து சொல்லுக சொல்லின் () அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர். (01) தொகை அறிந்த தூய்மையவர்.

இதன்பொருள்

சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்= சொல்லின் குழுவினை அறிந்த தூய்மையினை உடையார்; அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக= தாம் ஒன்று சொல்லுங்கால் அப்பொழுதை அவையினை அறிந்து ஆராய்ந்து சொல்லுதல்

உரை விளக்கம்

சொல்லின் குழு எனவே, செஞ்சொல் இலக்கணைச் சொல் குறிப்புச் சொல் என்னும் மூவகைச் சொல்லும் அடங்கின. 'தூய்மை' அவற்றுள் தமக்காகாதன ஒழித்து ஆவன கோடல். 'அவை' என்றது ஈண்டு அதன்அளவை. அது மிகுதி, ஒப்பு, தாழ்வு என மூவகைத்து. 'அறி'தல் தம்மொடு தூக்கிஅறிதல். 'ஆராய்'தல், இவ் அவைக்கண் சொல்லும் காரியம் இது, சொல்லுமாறு இது, சொன்னால் அதன் முடிவு இது என்று இவை உள்ளிட்டன ஆராய்தல்.

# குறள் **712 (**இடைதெரிந்து**)**

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி () இடை தெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக சொல்லின்

னடைதெரிந்த நன்மை யவர். (02) நடை தெரிந்த நன்மையவர்.

இதன்பொருள்

சொல்லின் நடை தெரிந்த நன்மையவர்= சொற்களின் நடையினை ஆராய்ந்து அறிந்த நன்மையினை உடையார்; இடை தெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக= அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அதன் செவ்வியை ஆராய்ந்து அறிந்து வழுப்படாமல் மிகவும் தெளிந்து சொல்லுக.

உரை விளக்கம்

சொற்களின் 'நடை'யாவது, அம்மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணைப்பொருள், குறிப்புப்பொருள் என்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி கேட்டற்கண் விருப்புடைமை. வழு சொல் வழுவும், பொருள் வழுவும்.

இவை இரண்டுபாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டும் என்பது கூறப்பட்டது.

## குறள் 713 (அவையறி)

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின் () அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின்

வகையறியார் வல்லதூஉ மில். (03) வகை அறியார் வல்லதூஉம் இல்.

இதன்பொருள்

அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின் வகை அறியார்= அவையினது அளவையறியாது ஒன்று சொல்லுதலைத் தம் மேற்கொள்வார் அச்சொல்லுதலின் கூறுபாடும் அறியார்;

வல்லதூஉம் இல்= கற்றுவல்ல கலையும் அவர்க்கு இல்லை.

உரை விளக்கம்

அம் மூவகைச் சொற்களால் வரும் சொல்லுதல் வகைமை, கேட்பாரது உணர்வு வகைமை பற்றி வருதலால், 'சொல்லின் வகையறியார்' என்றும், அஃது அறியார் என்று எல்லாரானும் இகழப்படுதலின் 'வல்லதூஉம்இல்' என்றும் கூறினார்.

இதனான் அவையறியாக்கால் வரும் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **714** (ஒளியார்முன்)

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன் () ஒளியார் முன் ஒள்ளியர் ஆதல் வெளியார் முன்

வான்சுதை வண்ணங் கொளல். (04) வான் சுதை வண்ணம் கொளல்.

இதன்பொருள்

ஒளியார் முன் ஒள்ளியர் ஆதல்= அறிவான் ஒள்ளியார் அவைக்கண் தாமும் ஒள்ளியாராக; வெளியார் முன் வான் சுதை வண்ணம் கொளல்= ஏனை வெள்ளைகள் அவைக்கண் தாமும் வாலிய சுதையின் நிறத்தைக் கொள்க.

உரை விளக்கம்

ஒள்ளியார் என்றது, மிக்காரையும் ஒத்தாரையும். அதுவிகாரத்தால் 'ஒளியார்' என நின்றது. ஒள்ளியராதல், தம்நூலறிவும், சொல்வன்மையும் தோன்ற விரித்தல். அவையறியாத புல்லரை 'வெளியார்' என்றது, வயிரம்இல் மரத்தை வெளிறு என்னும் வழக்குப்பற்றி. அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையாராக என்பார், 'வான்சுதை வண்ணம் கொளல்' என்றார்.

அவை அளவறிந்தார் செய்யும் திறம் இதனால் தொகுத்துக் கூறப்பட்டது. முன்னர் விரித்துக் கூறுப.

# குறள் **715** (நன்றென்ற)

நன்றென் றவற்றுள்ளு நன்றே முதுவருண் () நன்று என்றவற்றுள்ளும் நன்றே முதுவருள்

முந்து கிளவாச் செறிவு. (05) முந்து கிளவாச் செறிவு.

இதன்பொருள்

நன்று என்றவற்றுள்ளும் நன்றே= ஒருவர்க்கு இது நன்றுஎன்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்கள் எல்லாவற்றுள்ளும் நன்றே; முதுவருள் முந்து கிளவாச் செறிவு= தம்மின் மிக்கார் அவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம்.

உரை விளக்கம்

தம் குறைவும், அவர் மிகுதியும், முந்து கிளந்தாற் படும் இழுக்கும், கிளவாக்கால் எய்தும் நன்மையும் அறிந்தே அடங்கியனமையின், அவ்வடக்கத்தினை 'நன்று என்றவற்றுள்ளும் நன்று' என்றார். முன் கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலும் ஆம் என்பது பெற்றாம்.

இதனால் மிக்கார் அவைக்கண் செய்யுந்திறம் கூறப்பட்டது.

# குறள் 716 (ஆற்றி)

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல () ஆற்றின் நிலை தளர்ந்து அற்றே வியன் புலம்

மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. (05) ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு.

இதன்பொருள்

ஆற்றின் நிலை தளர்ந்தற்றே- வீடு எய்தற்பொருட்டு நன்னெறிக்கண் நின்றான் ஒருவன் அந்நெறியின் நின்றும் நிலைதளர்ந்து வீழ்ந்தால் ஒக்கும்; வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு= அகன்ற நூற்பொருள்களை உட்கொண்டு

அவற்றின் மெய்ம்மை உணரவல்லார் அவைக்கண் வல்லான் ஒருவன் சொல் இழுக்குப்படுதல்.

உரை விளக்கம்

நிலைதளர்ந்து வீழ்தல்: "உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் கா"¶த்தொழுகியான் பின் இழுக்கிக் கூடாஒழுக்கத்தனாதல். பயனிழத்தலே அன்றி, இகழவும் படும் என்பதாம்.
இதனான் அதன்கண் இழுக்கியவழிப்படும் குற்றம் கூறப்பட்டது.

¶. குறள், 24.

# குறள் 717 (கற்றறிந்தார்)

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச் () கற்று அறிந்தார் கல்வி விளங்கும் கசடு அறச்

சொற்றெரிதல் வல்லா ரகத்து. () சொல் தெரிதல் வல்லார் அகத்து.

இதன்பொருள்

கசடு அறச் சொல் தெரிதல் வல்லார் அகத்து= வழுப்படாமல் சொற்களை, ஆராய்தல் வல்லார் அவைக்கண் சொல்லின்; கற்று அறிந்தார் கல்வி விளங்கும்= பல நூல்களையும் கற்று அவற்றின் ஆய பயனை அறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித் தோன்றும்.

உரை விளக்கம்

சொல்லின் என்பது, அவாய்நிலையான் வந்தது. ஆண்டே சொல்லுக என்பதாம்.

# குறள் 718 (உணர்வது)

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன் () உணர்வது உடையார் முன் சொல்லல் வளர்வதன்

பாத்தியு ணீர்சொரிந் தற்று. (08) பாத்தியுள் நீர் சொரிந்து அற்று.

இதன்பொருள்

உணர்வது உடையார் முன் சொல்லல்= பிறர் உணர்த்தலின்றிப் பொருள்களைத் தாமே உணரவல்ல அறிவினை உடையார் அவைக்கண், கற்றார் ஒன்றனைச் சொல்லுதல்; வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று= தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும்.

உரை விளக்கம்

தானேயும் வளர்வதற்கு உரிய கல்வி மிக வளரும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் ஒத்தார்அவைக்கண் எவ்வழியும் சொல்லுக என்பது கூறப்பட்டது.

# குறள் 719 (புல்லவை)

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு () புல் அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல் அவையுள்

ணன்கு செலச்சொல்லு வார். (09) நன்கு செலச் சொல்லுவார்.

இதன்பொருள்

நல் அவையுள் நன்கு செலச் சொல்லுவார்= நல்லார் இருந்த

அவைக்கண் நல்ல பொருள்களை அவர் மனங்கொள்ளச் சொல்லுதற்கு உரியார்; புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க= அவை அறியாத புல்லர் இருந்த அவைக்கண் அவற்றை மறந்தும் சொல்லாது ஒழிக.

உரை விளக்கம்

சொல்லின், தம்மை அவையறியாமை நோக்கி 'நல்லவை'யும், பொருள்அறியாமையாற் 'புல்லவை' தானும் இகழ்தலின், இரண்டவைக்கும் ஆகார் என்பது கருதிப் 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார்.

## குறள் **720** (அங்கணத்து)

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த () அங்கணத்துள் உக்க அமிழ்து அற்றால் தம் கணத்தர்

ரல்லார்முற் கோட்டி கொளல். (10) அல்லார் முன் கோட்டி கொளல்.

இதன்பொருள்

தம் கணத்தார் அல்லார் முன் கோட்டி கொளல்= நல்லார் தம்இனத்த அல்லாதார் அவைக்கண் ஒன்றனையும் சொல்லற்க; அங்கணத்துள் உக்க அமிழ்து அற்று= சொல்லின் அது தூய்தல்லாத முற்றத்தின்கண் உக்க அமிழ்தத்தினை ஒக்கும்.

உரை விளக்கம்

'கொள்'என்னும் முதனிலைத் தொழி்ற்பெயர் முன்னின்று, பின் எதிர்மறை அல் விகுதியோடு கூடி, "மகனெனல்₵" என்பது போல் நின்றது. சொல்லின் அது என்பன, அவாய்நிலையான் வந்தன. பிறர் எல்லாம் 'கொளல்' என்பதனைத் தொழிற்பெயராக்கி

உரைத்தார்; அவர், அத்தொழில் 'அமிழ்து' என்னும் பொருள், உவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவா மருந்தாதல் அறிந்து, நுகர்வோர் கையினும் படாது, அவ் அங்கணத்துக்கும் இயைபின்றிக் கெட்டவாறு தோன்ற உக்கஅமிழ்து என்றார். அச்சொல் பயனில் சொல்லாம் என்பதாயிற்று.

இவை இரண்டு பாட்டானும், தாழ்ந்தார் அவைக்கண் ஒருவழியும் சொல்லற்க என்பது கூறப்பட்டது.

₡. திருக்குறள், 196.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **73.** அவை அஞ்சாமை

அதிகார முன்னுரை

அஃதாவது, சொல்லுதற்குரிய அவையினை அறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **721 (**வகையறிந்து**)**

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின் () வகை அறிந்து வல்லவை வாய் சோரார் சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர். (01) தொகை அறிந்த தூய்மையவர்.

இதன்பொருள்

வகை அறிந்து வல்லவை வாய் சோரார்- கற்றுவல் அவை அல்லா அவை என்னுும் அவையின் வகையினை அறிந்து வல்ல அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச் சொல்லார்; சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்= சொல்லின் தொகை எல்லாம் அறிந்த தூய்மையினை உடையார்.

உரை விளக்கம்

இருந்தாரது வன்மை அவைமேல் ஏற்றப்பட்டது. வல்லவை என்பதற்குத் தாம் கற்றுவல்ல நூற்பொருள்களை என்று உரைப்பாரும் உளர். அச்சத்தான் என்பது அதிகாரத்தான் வந்தது. 'சொல்லின்றொகை', 'தூய்மை' என்பனவற்றிற்கு மேல்[₦] உரைத்தாங்கு உரைக்க.

₦. திருக்குறள், 711.

# குறள் 722 (கற்றாருட்)

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற் () கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார் முன்

கற்ற செலச்சொல்லு வார். (02) கற்ற செலச் சொல்லுவார்.

இதன்பொருள்

கற்றாருள் கற்றார் எனப்படுவர்= கற்றார் எல்லாரினும் இவர் நன்கு கற்றார் என்று உலகத்தாரான் சொல்லப்படுவார்; கற்றார் முன் செலச் சொல்லுவார்= கற்றார் அவைக்கண் அஞ்சாதே தாம் கற்றவற்றை அவர் மனம் கொள்ளும்வகை சொல்லவல்லார்.

உரை விளக்கம்

உலகம் அறிவது அவரையேயாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவர் என்பதாம்.

## குறள் 723 (பகையகத்துச்)

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய () பகை அகத்துச் சாவார் எளியர் அரியர்

ரவையகத் தஞ்சா தவர். (03) அவை அகத்து அஞ்சாதவர்.

இதன்பொருள்

பகையகத்துச் சாவார் எளியர்= பகையிடை அஞ்சாது புக்குச் சாவவல்லார் உலகத்துப் பலர்; அவையகத்து அஞ்சாதவர் அரியர்= அவையிடை அஞ்சாது புக்குச் சொல்லவல்லார் சிலர்.

உரை விளக்கம்

அஞ்சாமை 'சாவார்' என்பதனோடும் கூட்டி, அதனாற் சொல்லவல்லார் என்பது வருவித்து உரைக்கப்பட்டது.

இவை மூன்று பாட்டானும் அவை அஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது.

## குறள் 724 (கற்றார்முற்)

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற () கற்றார் முன் கற்ற செலச் சொல்லித் தாம் கற்ற

மிக்காருண் மிக்க கொளல். (04) மிக்காருள் மிக்க கொளல்.

இதன்பொருள்

கற்றார் முன் கற்ற செலச் சொல்லி= பல நூல்களையும் கற்றார் அவைக்கண் தாம் கற்றவற்றை அவர் மனம் கொள்ளுமாற்றாற் சொல்லி; தாம் கற்ற மிக்க மிக்காருள் கொளல்= அவற்றின் மிக்க பொருள்களை அம் மிகக் கற்றாரிடத்து அறிந்து கொள்க.

உரை விளக்கம்

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின், வேறு வேறாய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கண், தாம் கற்றவற்றை அவர்க்கு ஏற்பச் சொல்லுக; சொல்லவே, அவரும் அவைஎல்லாம் சொல்லுவராகலான், ஏனைக் கற்கப் பெறாதன கேட்டறியலாம் என்பதாயிற்று.

இதனால் அதனது ஒருசார் பயன் கூறப்பட்டது.

# குறள் 725 (ஆற்றின்)

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா () ஆற்றின் அளவு அறிந்து கற்க அவை அஞ்சா

மாற்றங் கொடுத்தற் பொருட்டு. (05) மாற்றம் கொடுத்தல் பொருட்டு.

இதன்பொருள்

ஆற்றின் அளவு அறிந்து கற்க= சொல் இலக்கணநெறியானே அளவை நூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க; அவை அஞ்சா மாற்றம் கொடுத்தற் பொருட்டு= வேற்று வேந்தர் அவையிடை அஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரம் சொல்லுதற்

பொருட்டு.

உரை விளக்கம்

அளவை நூல், சொன்னூல் கற்றே கற்க வேண்டுதலின், அதற்கு அஃது 'ஆறு' எனப்பட்டது. அளக்கும் கருவியை 'அளவு' என்றார், ஆகுபெயரான். அவர் சொல்லை வெல்வதொருசொல் சொல்லலாவது, நியாயத்து வாத செற்ப விதண்டைகளும், சல சாதிகளும் முதலிய கற்றார்க்கே ஆகலின், அவற்றைப் பிழையாமற் கற்க என்பதாம்.

இதனால் அதன் காரணம் கூறப்பட்டது.

# குறள் 726 (வாளொடென்)

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ () வாளொடு என் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடு என்

னுண்ணவை யஞ்சு பவர்க்கு. (06) நுண் அவை அஞ்சுபவர்க்கு.

இதன்பொருள்

வன் கண்ணர் அல்லார்க்கு வாளொடு என்= வன்கண்மை உடையர் அல்லாதார்க்கு வாளோடு என்ன இயைபு உண்டு? நுண்ணவை அஞ்சுபவர்க்கு நூலொடு என்= அதுபோல நுண்ணியாரது அவையை அஞ்சுவார்க்கு நூலோடு என்ன இயைபு உண்டு?

உரை விளக்கம்

இருந்தாரது நுண்மை அவைமேல் ஏற்றப்பட்டது. நூற்கு உரியர் அல்லர் என்பதாம்.

## குறள் 727 (பகையகத்துப்)

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத் () பகை அகத்துப் பேடி கை ஒள்வாள் அவை அகத்து

தஞ்சு மவன்கற்ற நூல். (07) அஞ்சும் அவன் கற்ற நூல்.

இதன்பொருள்

பகை அகத்துப் பேடி கை ஒள்வாள்= எறியப்படும் பகை நடுவண் அதனை அஞ்சும் பேடி பிடித்த கூர்வாளை ஒக்கும்; அவை அகத்து அஞ்சுமவன் கற்ற நூல்- சொல்லப்படும் அவை நடுவண் அதனை அஞ்சுமவன் கற்ற நூல்.

உரை விளக்கம்

'பேடி' பெண்ணியல்பு மிக்கு ஆணியல்பும் உடையவள். களமும் வாய்த்துத் தானும் நன்றாய் இருந்ததேயாயினும் பிடித்தவள் குற்றத்தால் வாள் சிறப்பின்றாயினாற் போல, அவையும் வாய்த்துத் தானும் நன்றாய் இருந்ததேயாயினும், கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று.

## குறள் 728 (பல்லவை)

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு () பல்லவை கற்றும் பயம் இலரே நல் அவையுள்ீ

ணன்கு செலச்சொல்லா தார். (08) நன்கு செலச் சொல்லாதார்.

இதன்பொருள்

நல் அவையுள் நன்கு செலச் சொல்லாதார்- நல்லார் இருந்த

அவைக்கண் நல்ல சொற்பொருள்களைத் தம் அச்சத்தான் அவர்க்கு ஏற்கச் சொல்லமாட்டாதார்; பல்லவை கற்றும் பயம் இலரே= பல நூல்களைக் கற்றார் ஆயினும் உலகிற்குப் பயன்படுதல் இலர்.

உரை விளக்கம்

அறிவார்முன் சொல்லாமையின், கல்வியின் உண்மையறிவார் இல்லை என்பதாம். இனிப் 'பயமிலர்' என்பதற்குக் கல்விப் பயனுடையர் அல்லர் என்று உரைப்பாரும் உளர்.

# குறள் **729 (**கல்லாதவரிற்**)**

கல்லாதவரிற் கடையென்ப கற்றறிந்து () கல்லாதவரின் கடை என்ப கற்று அறிந்தும்

நல்லா ரவையஞ்சு வார். (09) நல்லார் அவை அஞ்சுவார்.

இதன்பொருள்

கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார்= நூல்களைக் கற்று வைத்தும், அவற்றாற் பயன் அறிந்து வைத்தும் நல்லார் இருந்த அவையினை அஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை; கல்லாதவரின் கடை என்ப= உலகத்தார் கல்லாதவரினும் கடையர் என்று சொல்லுவர்.

உரை விளக்கம்

அக்கல்வி அறிவுகளாற் பயன், தாமும் எய்தாது பிறரை எய்துவிப்பதும் செய்யாது, கல்வித் துன்பமே எய்தி நிற்றலின் 'கல்லாதவரிற் கடை' என உலகம் பழிக்கும் என்பதாம்.

# குறள் **730 (**உளரெனினு**)**

உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக் () உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர் களன் அஞ்சிக்

கற்ற செலச்சொல்லா தார். (10) கற்ற செலச் சொல்லாதார்.

இதன்பொருள்

களன் அஞ்சிக் கற்ற செலச் சொல்லாதார்= அவைக்களத்தை அஞ்சித் தாம் கற்றவற்றை அதற்கு ஏற்கச் சொல்லமாட்டாதார்;

உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர்= உயிர் வாழ்கின்றார் ஆயினும், உலகத்தாரால் எண்ணப்படாமையின் இறந்தாரோடு ஒப்பர்.

உரை விளக்கம்

ஈண்டுக் களன் என்றது, ஆண்டு இருந்தாரை.

இவை ஐந்து பாட்டானும் அவை அஞ்சுவாரது இழிபு கூறப்பட்டது.

அமைச்சியல் முற்றிற்று

# திருக்குறள் பொருட்பால் **2.**அங்கவியல்

# அதிகாரம் **74.**நாடு

# பரிமேலழகர் உரை

அதிகார முன்னுரை

இனி அவ்வரசனாலும், அமைச்சனாலும் கொண்டுய்க்கப்படுவதாய், ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்றார்.

## குறள் **731 (**தள்ளா **)**

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச் () தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வு இலாச்

செல்வருஞ் சேர்வது நாடு. (01) செல்வரும் சேர்வது நாடு.

இதன்பொருள்

தள்ளா விளையுளும்= குன்றாத விளையுளைச் செய்வோரும்; தக்காரும்= அறவோரும்; தாழ்வு இலாச் செல்வரும்= கேடில்லாத செல்வம் உடையோரும்; சேர்வது நாடு= ஒருங்கு வாழ்வதே

நாடாவது.

உரை விளக்கம்

மற்றை உயர்திணைப் பொருள்களோடும் சேர்தல் தொழிலோடும் இயையாமையின், விளையுள் என்றது உழவர்மேல் நின்றது. குன்றாமை: எல்லா உணவுகளும் நிறைய உளவாதல். இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர்: துறந்தோர், அந்தணர் முதலாயினார். "நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கும் அஃதிடம்"฿ என்றார் பிறரும். இதனால் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை: வழங்கத்தொலையாமை. செல்வர்:கலத்தினும் காலினும் அரும்பொருள் தரும் வணிகர். இதனால், அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது.

฿.சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம்: 48.

# குறள் 732( பெரும்பொருளாற்)

பெரும்பொருளாற் பெட்டத்த தாகி யருங்கேட்டா () பெரும் பொருளால் பெட்டக்கது ஆகி அரும் கேட்டால்

லாற்ற விளைவது நாடு. (02) ஆற்ற விளைவது நாடு.

இதன்பொருள்

பெரும் பொருளால் பெட்டக்கது ஆகி= அளவிறந்த பொருளுடைமையாற் பிற தேயத்தாரானும் விரும்பத்தக்கதாய்; அருங் கேட்டால் ஆற்ற விளைவது நாடு= கேடின்மையோடு கூடி மிகவிளைவதே நாடாவது.

உரை விளக்கம்

அளவிறப்பு, பொருள்களது பன்மை மேலும், தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது மிக்க பெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்று இவற்றான் வருவது. "மிக்கபெய லொடுபெய லின்மையெலி விட்டில் கிளி, யக்கணரசன்மையோ டாறு." இவற்றை வடநூலார் ஈதிகள் என்ப. இவற்றுள் முன்னையவற்றது இன்மை அரசன் அறத்தானும், பின்னையதின்மை அவன் மறத்தானும் வரும். இவ்வி◌ன்மைகளான் மிக விளைவதாயிற்று.

# குறள் 733 (பொறையொருங்கு )

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற் () பொறை ஒருங்கு மேல் வரும்கால் தாங்கி இறைவற்கு

கிறையொருங்கு நேர்வது நாடு. (03) இறை ஒருங்கு நேர்வது நாடு.

இதன்பொருள்

பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி= பிற நாடுகள் பொறுத்த பாரம் எல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி; இறைவற்கு இறை ஒருங்கு நேர்வது நாடு= அதன்மேல் தன் அரசனுக்கு, இறைப்பொருள் முழுதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது.

உரை விளக்கம்

பாரங்கள் மக்கள் தொகுதியும், ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும். 'தாங்கு'தல் அவை தத்தம் தேயத்துப் பகைவந்து இறுத்ததாக, அரசு கோல் கோடியதாக, உணவு இன்மையானாகத் தன்கண் வந்தால், அவ்வத் தேயங்களைப் போல இனிது இருப்பச்

செய்தல். அச்செயலால் இறையைக் குறைப்படுத்தாது தானே கொடுப்பது என்பார், 'இறையொருங்கு நேர்வது' என்றார்.

## குறள் 734 (உறுபசியு )

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ் () உறு பசியும் ஓவாப் பிணியும் செறு பகையும்

சேரா தியல்வது நாடு. (04) சேராது இயல்வது நாடு.

இதன்பொருள்

உறு பசியும்= மிக்க பசியும்; ஓவாப் பிணியும்= நீங்காத நோயும்; செறு பகையும் சேராது= புறத்து நின்று வந்து அழிவுசெய்யும் பகையும் இன்றி; இயல்வது நாடு= இனிது நடப்பதே நாடாவது.

உரை விளக்கம்

'உறுபசி' உழவர் உடைமையானும், ஆற்ற விளைதலானும் சேராதாயிற்று. 'ஓவாப்பிணி' தீக்காற்று மிக்க குளிர் வெப்பங்களும் நுகரப்படும் அவற்றது தீமை இன்மையிற் சேராதாயிற்று. 'செறு பகை' அரசனாற்றலும், நிலைப்படையும் அடவியும் அரணும் உடைமையிற் சேராதாயிற்று.

## குறள் 735 (பல்குழுவும் )

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங் () பல் குழுவும் பாழ் செய்யும் உட் பகையும் வேந்து அலைக்கும்

கொல்குறும்பு மில்லது நாடு. (05) கொல் குறும்பும் இல்லது நாடு.

இதன்பொருள்

பல் குழுவும்= சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும்; பாழ் செய்யும் உட்பகையும்= உடனுறையாநின்றே பாழாகச் செய்யும் உட்பகையும்; வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு= அளவு வந்தால் வேந்தனை அலைக்கும் கொல்வினைக் குறும்பரும் இல்லாததே நாடாவது.

உரை விளக்கம்

சங்கேதம், சாதிபற்றியும், கடவுள் பற்றியும் பலர்க்கு உளதாம் ஒருமை. உட்பகை: ஆறலைப்பார், கள்வர், குறளை கூறுவார் முதலிய மக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும். 'உட்பகை', 'குறும்பு' என்பன ஆகுபெயர். இம்மூன்றும் அரசனாலும், வாழ்வாராலும் கடியப்பட்டு நடப்பதே நாடு என்பதாம்.

# குறள் **736**(கேடறியாக் )

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா () கேடு அறியாக் கெட்ட இடத்தும் வளம் குன்றா

நாடென்ப நாட்டிற் றலை. (06) நாடு என்ப நாட்டில் தலை.

இதன்பொருள்

கேடு அறியா= பகைவரால் கெடுதல் அறியாததாய்; கெட்ட இடத்தும் வளம் குன்றா நாடு= அரிதிற் கெட்டதாயினும் அப்பொழுதும் தன் வளம் குன்றாத நாட்டினை; நாட்டின் தலை என்ப= எல்லா நாட்டினும் தலை என்று சொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்

அறியாத குன்றாத என்னும் பெயரெச்சங்களின் இறுதிநிலைகள் விகாரத்தால் தொக்கன. 'கேடறியாமை' அரசன் ஆற்றலானும், கடவுள் பூசை அறங்கள் என்று இவற்றது செயலானும் வரும். வளம் ஆகரங்களிற் படுவனவும், வயலினும், தண்டலையினும் விளைவனவுமாம். 'குன்றாமை' அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே உளவாயும், முன்னீட்டப்பட்டும் குறைவுறுதல்.
இவை ஆறுபாட்டானும் நாட்டது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் 737 (இருபுனலும் )

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் () இரு புனலும் வாய்ந்த மலையும் வரு புனலும்

வல்லரணு நாட்டிற் குறுப்பு. (07) வல் அரணும் நாட்டிற்கு உறுப்பு.

இதன்பொருள்

இருபுனலும்= கீழ்நீர், மேனீர் எனப்பட்ட தண்ணீரும்; வாய்ந்த மலையும்= வாய்ப்புடைத்தாய மலையும்; வருபுனலும்= அதனின்றும் வருவதாய நீரும்; வல் அரணும்= அழியாத நகரியும்; நாட்டிற்கு உறுப்பு= நாட்டிற்கு அவயவமாம்.

உரை விளக்கம்

ஈண்டுப் 'புனல்' என்றது, துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை; அவயவம் ஆதற்கு உரியன அவையே ஆகலின். அவற்றான் வானம் வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது. இடையதன்றி ஒருபுடையதாகலும், தன் வளந்தருதலும், மாரிக்கண் உண்டநீர் கோடைக்கண் உமிழ்தலும் உடைமை பற்றி, 'வாய்ந்த மலை' என்றார். 'அரண்' ஆகுபெயர். இதனான் அவயவம் கூறப்பட்டது.

# குறள் 738 (பிணியின்மை )

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம () பிணி இன்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம்

மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. (08) அணி என்ப நாட்டிற்கு இவ் ஐந்து.

இதன் பொருள்:

பிணி இன்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ் ஐந்து= நோயின்மையும், செல்வம் விளைதல், இன்பம், காவல் என்று இவை உடைமையும் ஆகிய இவ்வைந்தினையும்; நாட்டிற்கு அணி என்ப= நாட்டிற்கு அழகு என்று சொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்:

'பிணியின்மை' நிலநலத்தான் வருவது. 'செல்வம்' மேற்சொல்லியன. 'இன்பம்' விழவும் வேள்வியும் சான்றோரும் உடைமையானும், நுகர்வன உடைமையானும், நிலநீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு உள்நிகழ்வது. 'காவல்' எனவே, அரசன் காவலும், வாழ்வோர் காவலும், அரண்காவலும் அடங்கின. பிற தேயங்களின் உள்ளாரும் விழைந்து பின் அவை உள்ளாமைக்கு ஏதுவாய அதன் அழகு இதனான் கூறப்பட்டது.

# குறள் 739(நாடென்ப )

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல () நாடு என்ப நாடா வளத்தன நாடு அல்ல

நாட வளந்தரு நாடு. (09) நாட வளம் தரு நாடு.

இதன்பொருள்

நாடா வளத்தன நாடு என்ப= தங்கண் வாழ்வார் தேடி வருந்தாமல் அவர்பால் தானே அடையும் செல்வத்தை உடையவற்றை நூலோர் நாடு என்று சொல்லுவர்; நாட வளம் தரும் நாடு நாடு அல்ல= ஆதலான் தேடி வருந்தச் செல்வம் அடைவிக்கும் நாடுகள் நாடாகா.

உரை விளக்கம்

'நாடுதல்' இருவழியும் வருத்தத்தின்மேல் நின்றது. "பொருள் செய்வார்க்கும் அஃதிடம்"¶ என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறைமுகத்தான் குற்றம் கூறியவாறு. இவ்வாறன்றி 'என்ப' என்பதனைப் பின்னும் கூட்டி இரு பொருள்பட உரைப்பின் அனுவாதமாம்.

¶. சீவகசிந்தாமணி, நாமகள் இலம்பகம்: 48.

# குறள் 740 (ஆங்கமை )

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே () ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே

வேந்தமை வில்லாத நாடு. (10) வேந்து அமைவு இல்லாத நாடு.

இதன்பொருள்

வேந்து அமைவு இல்லாத நாடு= வேந்தனோடு மேவதல் இல்லாத நாடு; ஆங்கு அமைவு எய்தியக் கணும் பயம் இன்றே= மேற்சொல்லிய குணங்கள் எல்லாவற்றினும் நிறைந்து

இருந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று.

உரை விளக்கம்

வேந்தமைவு எனவே, குடிகள் அவன்மாட்டு அன்புடையர் ஆதலும், அவன்தான் இவர் மாட்டு அருளுடையன் ஆதலும் அடங்கின. அவை இல்வழி வாழ்வோர் இன்மையின், அவற்றான் பயனின்று ஆயிற்று.

இவை இரண்டுபாட்டானும் அதன் குற்றம் கூறப்பட்டது.

# **75.** அரண்

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **75.**அரண்

அதிகார முன்னுரை

இனி, அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும் பகைவரால் தொலைவு வந்துழி அதுதனக்கும், அரசன் தனக்கும் ஏமம் ஆதல் சிறப்புப் பிறிதோர் அங்கமாக ஓதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தான் கூறுகின்றார்.

## குறள் **741 (**ஆற்றுபவர்க்கும் **)**

ஆற்றுபவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற் () ஆற்றுபவர்க்கும் அரண் பொருள் அஞ்சித் தன்

போற்று பவர்க்கும் பொருள். (03) போற்றுபவர்க்கும் பொருள்.

இதன்பொருள்

ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்= மூவகை ஆற்றலும் உடையராய்ப் பிறர்மேல் செல்வார்க்கும் அரண் சிறந்தது; அஞ்சித் தற் போற்றுபவர்க்கும் (அரண்) பொருள்= அவையின்றித் தம்மேல் வருவார்க்கு அஞ்சித் தன்னையே அடைவார்க்கும் அரண் சிறந்தது.

உரைவிளக்கம்

பிறர்மேல் செல்லுங்கால் உரிமை பொருள் முதலியவற்றைப் பிறன் ஒருவன் வெளவாமல் வைத்துச் செல்லவேண்டும் ஆகலானும், அப்பெருமை தொலைந்து இறுதிவந்துழிக் கடன் நடுவண் உடைகலத்தார் போன்று ஏமம் காணாது இறுவர் ஆகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருள் ஆயிற்று. ஆற்றலுடையராயினும், அரண் இல்வழி அழியும் பாலராகலின், அவரை முற்கூறினார்.

இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **742** (மணிநீரும் )

மணிநீருமண்ணு மலையு மணிநிழற் () மணி நீரும் மண்ணும் மலையும் அணிநிழல்

காடு முடைய தரண். (03) காடும் உடையது அரண்.

இதன்பொருள்

பணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல் காடும் உடையது அரண்= மணிபோலும் நிறத்தினை உடைய நீரும், வெள்ளிடை நிலமும், மலையும், குளிர்ந்த நிழலையுடைய காடும் உடையதே அரணாவது.

உரைவிளக்கம்

எஞ்ஞான்றும் வற்றாத நீர் என்பார், 'மணிநீர்' என்றும், நீரும் நிழலும் இல்லா மருநிலம் என்பார், 'மண்' என்றும், செறிந்த காடு என்பார், 'அணிநிழற் காடு' என்றும் கூறினார். மதிற்புறத்து மருநிலம், பகைவர் அரண் பற்றாமைப்பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கையும் செயற்கையும் ஆய இந்நான்கு அரணும் சூழப்படுவது 'அரண்' என்பதாம்.

# குறள் 743 (உயர்வகலந் )

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி () உயர்வு அகலம் திண்மை அருமை இந் நான்கின்

னமைவர ணென்றுரைக்கு நூல். (03) அமைவு அரண் என்று உரைக்கும் நூல்.

இதன்பொருள்

உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின் அமைவு= உயர்ச்சியும், அகலமும், திண்மையும், அருமையும் என்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியை உடைய மதிலை; அரண் என்று உரைக்கும் நூல்= அரண் என்று சொல்லுவர் நூலோர்.

உரைவிளக்கம்

அமைவு, நூல் என்பன ஆகுபெயர். உயர்வு ஏணி எய்தாதது. அகலம் புறத்தோர்க்கு அகழலாகா அடி அகலமும், அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாம் தலைஅகலமும். திண்மை நல் இட்டிகைகளான் செய்தலின் குத்தப்படாமை. அருமை, பொறிகளான் அணுகற்கு அருமை. பொறிகளாவன: "வளைவிற் பொறியும் அயிற்செறி நிலையும், கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும்/ பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்/ காய்பொன் னுலையும் கல்லிடு கூடையும்/ தூண்டிலும் துடக்கும் ஆண்டலை அடுப்பும்/ கவையும் கழுவும் புதையும் புழையும்/ ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்/ சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்/ எழுவும் சீப்பும் முழுவிரற் கணையமும்/ கோலும் குந்தமும் வேலும் சூலமும்"‡ என்று இவை முதலாயின.

‡. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை: வரிகள்- 207-216.

# குறள் **744** (சிறுகாப்பிற் )

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை () சிறுகாப்பில் பேர் இடத்தது ஆகி உறு பகை

யூக்க மழிப்ப தரண். (04) ஊக்கம் அழிப்பது அரண்.

இதன்பொருள்

சிறு காப்பின் பேர் இடத்தது ஆகி= காக்கவேண்டும் இடம் சிறிதாய், அகன்ற இடத்தை உடைத்தாய்; உறு பகை ஊக்கம் அழிப்பது அரண்= தன்னை வந்து முற்றிய பகைவரது மனஎழுச்சியைக் கெடுப்பதே அரணாவது.

உரைவிளக்கம்

வாயிலும் வழியும் ஒழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலை என்று இவற்றுள் ஏற்பன உடைத்தாதல் பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தம் வலி நோக்கி இது பொழுதே அழித்தும் என்று வரும் பகைவர், வந்து கண்டால் அவ் ஊக்கம் ஒழிதல் பற்றி 'ஊக்கம் அழிபபது' என்றும் கூறினார்.

# குறள் **745 (**கொளற்கரி **)**

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார் () கொளற்கு அரிதாய்க் கொண்ட கூழ்த்து ஆகி அகத்தார்

நிலைக்கெளிதா நீர தரண். (05) நிலைக்கு எளிதாம் நீரது அரண்.

இதன்பொருள்

கொளற்கு அரிதாய்= புறத்தாரான் கோடற்கு அரிதாய்; கொண்ட கூழ்த்து ஆகி= உட்கொண்ட பலவகை உணவிற்றாய்; அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண்= அகத்தாரது போர்நிலைக்கு எளிதாய நீர்மையை உடையதே அரணாவது.

உரைவிளக்கம்

கோடற்கருமை: இளை கிடங்குகளானும், பொறிகளானும், இடங்கொள்ளுவதற்கு அருமை. உணவு நிலைமை பற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவும் அடங்கின. 'நிலைக்கு எளிதாம் நீர்மை'யாவது, அகத்தார் விட்ட ஆயுத்ம முதலிய புறத்தார்மேல் எளிதின் சேறலும், அவர்விட்டன அகத்தார் மேல் செல்லாமையும், பதணப் பரப்பும் முதலாயின.

# குறள் **746(**எல்லாப்பொரு **)**

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு () எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்து உதவும்

நல்லா ளுடைய தரண். (06) நல் ஆள் உடையது அரண்.

இதன்பொருள்

எல்லாப் பொருளும் உடைத்தாய்= அகத்தோர்க்கு வேண்டும் பொருள்கள் எல்லாவற்றையும் உள்ளே உடைத்தாய்; இடத்து உதவும் நல்லாள் உடையது அரண்= புறத்தோரால் அழிவெய்தும் எல்லைக்கண், அஃது எய்தாவகை உதவிக்காக்கும் நல்ல வீரரையும் உடையதே அரணாவது.

உரைவிளக்கம்

அரசன் மாட்டு அன்பும், மானமும், மறமும், சோர்வின்மையும் முதலிய நற்குணங்கள் உடைமைபற்றி 'நல்லாள்' என்றார்.

# குறள் 747 (முற்றியு )

முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும் () முற்றியும் முற்றாது எறிந்தும் அறைப் படுத்தும்

பற்றற் கரிய தரண். (07) பற்றற்கு அரியது அரண்.

இதன்பொருள்

முற்றியும்= புகலொடு போக்கு ஒழியும் வகை நெருங்கிச் சூழ்ந்தும்; முற்றாது எறிந்தும்= அங்ஙனம் சூழாது நெகிழ்ந்த இடன் நோக்கி ஒருமுகமாகப் பொருதும்; அறைப்படுத்தும்= அகத்தோரை அவர் தெளிந்தோரை விட்டுக் கீழறுத்துத் திறப்பித்தும்; பற்றற்கு அரியது அரண்= புறத்தோரான் கொள்ளுதற்கு அரியதே அரணாவது.

உரைவிளக்கம்

இம்மூன்று உபாயத்துள்ளும், முதலாவது 'எல்லாப்பொருளும் உடைமை'யானும், ஏனைய 'நல்லாள் உடைமை'யானும் வாயாவாயின.

## குறள் 748 (முற்றாற்றி )

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப் () முற்று ஆற்றி முற்றியவரையும் பற்று ஆற்றிப்

பற்றியார் வெல்வ தரண். (08) பற்றியார் வெல்வது அரண்.

இதன்பொருள்

முற்று ஆற்றி முற்றியவரையும்= தானைப்பெருமையாற் சூழ்தல் வல்லராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும்; பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண்= தன்னைப் பற்றிய அகத்தோர், தாம்பற்றிய இடம் விடாதே நின்று, பொருது வெல்வதே அரணாவது.

உரைவிளக்கம்

உம்மை சிறப்பும்மை. பற்றின்கண்ணே ஆற்றி என விரியும். 'பற்று' ஆகுபெயர். 'வெல்வது' என உடையார்தொழில் அரண்மேல் நின்றது. பெரும்படையானைச் சிறுபடையான் பொறுத்து நிற்கும் துணையேயன்றி வெல்லும் இயல்பினது என்பதாம். இதற்குப் பிறிதுரைப்பாரும் உளர்.

இவை ஏழுபாட்டானும், அதனது இலக்கணம் கூறப்பட்டது.

## குறள் 749(முனைமுகத்து )

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து () முனை முகத்து மாற்றலர் சாய வினை முகத்து

வீறெய்தி மாண்ட தரண். (09) வேறு எய்தி மாண்டது அரண்.

இதன்பொருள்

முனை முகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறு எய்தி= போர் தொடங்கின அளவிலே, பகைவர் கெடும் வண்ணம் அகத்தோர் செய்யும் வினைவேறுபாடுகளான் வீறுபெற்று; மாண்டது அரண்= மற்றும் வேண்டும் மாட்சியையுடையதே அரணாவது.

உரை விளக்கம்

தொடக்கத்திற் கெட்டார் பின்னும் கூடிப் பொருதல் கூடாமையின், 'முனைமுகத்துச் சாய' என்றார். வினைவேறுபாடுகள் ஆவன: பகைவர் தொடங்கிய போரினை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் என்றிவை முதலாய வினைகளுள், அதனைச் சாய்ப்பன செய்தல். மற்றும் வேண்டும் மாட்சி என்றது, புறத்தோர் அறியாமல் புகுதல், போதல் செய்தற்குக் கண்ட சுருங்கைவழி முதலாயின உடைமை.

# குறள் 750 (எனைமாட்சித் )

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி () எனை மாட்சித்து ஆகியக் கண்ணும் வினை மாட்சி

யில்லார்க ணில்ல தரண். (10) இல்லார் கண் இல்லது அரண்.

இதன் பொருள்

அரண்= அரண்; எனை மாட்சித்து ஆகியக்கண்ணும்= மேற்சொல்லப்பட்ட மாட்சி எல்லாம் உடைத்தாய இடத்தும்;

வினை மாட்சி இல்லார்கண் இல்லது= வினைசெய்தற்கண் மாட்சி இல்லாதார்மாட்டு அவை இலதாம்.

உரை விளக்கம்

வாளா இருத்தலும், அளவறியாது செய்தலும், ஏலாதது செய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சி இல்லார்' என்றும், ஏற்ற வினையை அளவறிந்து செய்து காவாக்கால் அம் மாட்சிகளாற் பயனின்றி அழியும் என்பார் அவை உடைத்தன்று என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் காப்பாரையின்றி அமையாது என்பது கூறப்பட்டது.

# **76.**பொருள்செயல்வகை

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **76.** பொருள் செயல்வகை

அதிகார முன்னுரை

இனிப் பெரும்பான்மையும் நாட்டானும், அரணானும் ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தான் கூறுகிறார்.

## குறள் **751 (**பொருளல்லவரைப் **)**

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் () பொருள் அல்லவரைப் பொருள் ஆகச் செய்யும்

பொருளல்ல தில்லை பொருள். (01) பொருள் அல்லது இல்லை பொருள்.

தொடரமைப்பு: "பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள்அல்லது, பொருள் இல்லை".)

இதன்பொருள்

பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள்அல்லது= ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவராகச் செய்யவல்ல பொருளை ஒழிய; பொருள் இல்லை= ஒருவனுக்குப் பொருளாவது இல்லை.

உரைவிளக்கம்

மதிக்கப்படாதார்: அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவு சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. மதிக்கப்படுவாராகச் செய்தல், அறிவுடையாரும் உயர்குலத்தாரும் அவர்பால் சென்று நிற்கப்பண்ணுதல். அதனால் ஈட்டப்படுவது அதுவே, பிறிதில்லை என்பதாம்.

# குறள் **752(** இல்லாரை**)**

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை () இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை

யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. (02) எல்லாரும் செய்வர் சிறப்பு.

தொடரமைப்பு: "இல்லாரை எல்லாரும் எள்ளுவர், செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர்".

(இதன்பொருள்

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்= எல்லாநன்மையும் உடையராயினும் பொருள் இல்லாரை யாவரும் இகழ்வர்; செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர்= எல்லாத் தீமையும் உடையராயினும் அஃது உடையாரை யாவரும் உயரச் செய்வர்.

உரைவிளக்கம்

உயரச்செய்தல்= தாம் தாழ்ந்து நி்ற்றல். இகழ்தற்கண்ணு்ம் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமலர் என்னும் மூவகையாரும் ஒத்தலின், யாவரும் என்றார். பின்னும் கூறியது, அதனை வலியுறுத்தல் பொருட்டு.

# குறள் 753 (பொருளென்னும் )

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு () பொருள் என்னும் பொய்யா விளக்கம் இருள் அறுக்கும்

மெண்ணிய தேயத்துச் சென்று. (03) எண்ணிய தேயத்துச் சென்று.

தொடரமைப்பு: "பொருள் என்னும் பொய்யாவிளக்கம், எண்ணிய தேயத்துச் சென்று இருளறுக்கும்".

இதன்பொருள்

பொருள் என்னும் பொய்யா விளக்கம்= பொருள் என்று எல்லாரானும் சிறப்பிக்கப்படும் நந்தா விளக்கு; எண்ணிய தேயத்துச் சென்று இருள் அறுக்கும்= தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச் சென்று பகையென்னும் இருளைக் கெடுக்கும்.

உரைவிளக்கம்

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றிப் பொய்யாவிளக்கம் என்றும், ஏனை விளக்கோடு இதனிடை வேற்றுமை தோன்ற எண்ணிய தேயத்துச் சென்று என்றும் கூறினார். ஏகதேச உருவகம்.

இவை மூன்று பாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் 754 (அறனீனும் )

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து () அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறன் அறிந்து

தீதின்றி வந்த பொருள். (04) தீது இன்றி வந்த பொருள்.

தொடரமைப்பு: "திறன் அறிந்து தீது இன்றி வந்த பொருள், அறன் ஈனும் இன்பமும் ஈனும்".

இதன்பொருள்

திறன் அறிந்து தீது இன்றி வந்த பொருள்= செய்யும்திறத்தினை அறிந்து அரசன் கொடுங்கோன்மை இலனாக உளதாய பொருள்; அறன் ஈனும் இன்பமும் ஈனும்= அவனுக்கு அறத்தையும் கொடுக்கும், இன்பத்தையும் கொடுக்கும்.

உரைவிளக்கம்

செய்யும் திறம்: தான் பொருள் செய்தற்கு உரிய நெறி. இலனாக என்பது இன்றி எனத் திரிந்துநின்றது. செங்கோலன் என்று புகழப்படுதலானும், கடவுட்பூசை தானங்களான் பயன்எய்தலானும் 'அறன்ஈனும்' என்றும், நெடுங்காலம் துய்க்கப்படுதலான் 'இன்பமும் ஈனும்' என்றும் கூறினார். அத்திறத்தான் ஈட்டுக என்பதாம்.

# குறள் 755 (அருளொடும் )

அருளொடு மன்பொடும் வாரார் பொருளாக்கம் () அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்

புல்லார் புரள விடல். (05) புல்லார் புரள விடல்.

தொடரமைப்பு: "அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் புல்லார் புரள விடல்".

இதன்பொருள்

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்= தாம் குடிகள்மாட்டுச் செய்யும் அருளோடும், அவர் தம்மாட்டுச் செய்யும் அன்போடும் கூடி வாராத பொருள் ஈட்டத்தை; புல்லார் புரள விடல்= அரசர் பொருந்தாது கழிய விடுக.

உரைவிளக்கம்

அவற்றோடு கூடி வருதலாவது, ஆறில் ஒன்றாய் வருதல். அவ்வாறு வாராத பொருளீட்டம் 'பசுமட் கலத்துள் நீர்'போலச் செய்தானையும் கொண்டு இறத்தலின், அதனைப் 'புல்லார்' என்று ஒழியாது, 'புரளவிடல்' என்றும் கூறினார்.

# குறள் 756(உறுபொருளும் )

உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த் () உறு பொருளும் உல்கு பொருளும் தன் ஒன்னார்த்

தெறுபொருளும் வேந்தன் பொருள். (06) தெறு பொருளும் வேந்தன் பொருள்.

தொடரமைப்பு: "உறு பொருளும், உல்கு பொருளும், தன் ஒன்னார்த் தெறு பொருளும், வேந்தன் பொருள்".

இதன்பொருள்

உறு பொருளும்= உடையார் இன்மையின் தானே வந்துற்ற பொருளும்; உல்கு பொருளும்= சுங்கமாகிய பொருளும்; தன் ஒன்னார்த் தெறு பொருளும்= தன் பகைவரைத் திறையாகக் கொள்ளும் பொருளு்ம; வேந்தன் பொருள்= அரசனுக்குரிய பொருள்கள்.

உரைவிளக்கம்

'உறு பொருள்' வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கண் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறாததூஉம்ஆம். சுங்கம் கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது. 'தெறுபொருள்' தெறுதலான் வரும் பொருள் எனவிரியும். ஆறின்ஒன்று ஒழியவும் உரியன கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் அஃது ஈட்டும்நெறி கூறப்பட்டது.

# குறள் 757 (அருளென்னும் )

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் () அருள் என்னும் அன்பு ஈன் குழவி பொருள் என்னும்

செல்வச் செவிலியா லுண்டு. (07) செல்வச் செவிலியால் உண்டு.

தொடரமைப்பு: "அன்பு ஈன் அருள் என்னும் குழவி, பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு."

இதன்பொருள்

அன்பு ஈன் அருள் என்னும் குழவி= அன்பினால் ஈனப்பட்ட அருள் என்னும் குழவி; பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு= பொருள் என்று உயர்த்துச் சொல்லப்படும் செல்வத்தையுடைய செவிலியான் வளரும்.

உரைவிளக்கம்

தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார் மேல் செல்வதாய அருள், தொடர்புபற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்து உளதாவதாகலின், அதனை 'அன்பீன் குழவி' என்றும், அது வறியான்மேற் செல்வது அவ்வறுமை களைய வல்லார்க்குஆதலின், பொருளை அதற்குச் 'செவிலி' என்றும், அஃது உலகியற் செவிலி போலாது, தானே எல்லாப் பொருளும் உதவி வளர்த்தலின் 'செல்வச் செவிலி' என்றும் கூறினார்.

# குறள் **758** **(**குன்றேறி **)**

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன் () குன்று ஏறி யானைப் போர் கண்டு அற்றுஆல் தன் கைத்து ஒன்று

றுண்டாகச் செய்வான் வினை. (08) உண்டாகச் செய்வான் வினை.

தொடரமைப்பு: "தன் கைத்து உண்டாக ஒன்று செய்வான் வினை குன்று ஏறி யானைப்போர் கண்டற்றால்".

இதன்பொருள்

தன் கைத்து உண்டாக ஒன்று செய்வான் வினை= தன் கையதாகிய பொருளுண்டாக ஒரு வினையை எடுத்துக்கொண்டான் அதனைச் செய்தல்; குன்று ஏறி யானைப்போர் கண்டற்று= ஒருவன் மலைமேல் ஏறிநின்று யானைப்போரைக் கண்டால் ஒக்கும்.

உரைவிளக்கம்

'ஒன்று' என்பது, வினையாதல் 'செய்வான்' என்றதனாற் பெற்றாம். குன்றேறியான், அச்சமும் வருத்தமும் இன்றி, நிலத்திடை யானையும் யானையும் பொருபோரைத் தான் இனிதிருந்து காணும் அதுபோலக், கைத்துண்டாக வினையை மேற்கொண்டானும், அச்சமும் வருத்தமும் இன்றி வல்லாரை ஏவித் தான் இனிதிருந்து முடிக்கும் என்பதாம்.

# குறள் 759(செய்கபொருளை )

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு () செய்க பொருளைச் செறுநர் செருக்கு அறுக்கும்

மெஃகதனிற் கூரிய தில். (09) எஃகு அதனில் கூரியது இல்.

தொடரமைப்பு: "பொருளைச் செய்க, செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு, அதனிற் கூரியது இல்".

இதன்பொருள்

பொருளைச் செய்க= தமக்கு ஒன்று உண்டாகக் கருதுவார் பொருளை உண்டாக்குக; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு= தன் பகைவர் தருக்கினை அறுக்கும் படைக்கலம் அதுவாம்; அதனின் கூரியது இல்= அதற்கு அதுபோலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை.

உரைவிளக்கம்

அதுவாம், அதற்கு என்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே, பெரும்படையும் நட்பும் உடையராவர்; ஆகவே, பகைவர் தருக்கு ஒழிந்து தாமே அடங்குவர் என்பார், 'செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு' என்றும், ஏனை எஃகுகள்

அதுபோல அருவப் பொருளை அறுக்கமாட்டாமையின், 'அதனின் கூரியது இல்' என்றும் கூறினார்.

# குறள் 760 (ஒண்பொருள் )

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு () ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண் பொருள்

ளேனை யிரண்டு மொருங்கு. (10) ஏனை இரண்டும் ஒருங்கு.

தொடரமைப்பு: " ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு, ஏனை இரண்டும் ஒருங்கு எண் பொருள்."

இதன்பொருள்

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு= நெறியான் வரும்பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு; ஏனை இரண்டும் ஒருங்கு எண் பொருள்= மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாம்.

உரைவிளக்கம்

'காழ்'த்தல் முதிர்தல். பயன் கொடுத்தல்லது போகாமையின் 'ஒண்பொருள்' என்றும், ஏனை இரண்டும் அதன் விளைவாகலின், தாமே ஒரு காலத்திலே உளவாம் என்பார், 'எண்பொருள்' என்றும் கூறினார்.

இவை நான்கு பாட்டானும் அதனான் வரும் பயன் கூறப்பட்டது.

# **77.**படைமாட்சி

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **77.**படை மாட்சி

அதிகார முன்னுரை

இனி, அப்பொருளினான் ஆவதாய் வெல்வதாய படை இரண்டு அதிகாரத்தான் கூறுவான் தொடங்கி, முதற்கண் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது, படையினது நன்மை.

## குறள் **761 (**உறுப்பமைந்து **)**

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன் () உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல் படை வேந்தன்

வெறுக்கையு ளெல்லாந் தலை. (01) வெறுக்கையுள் எல்லாம் தலை.

உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல் படை வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை

இதன்பொருள்

உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல் படை= யானை முதலிய நான்கு உறுப்பானும் நிறைந்து போரின்கண் ஊறுபடுதற்கு அஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை; வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை= அரசன் செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம்.

உரைவிளக்கம்

ஈண்டுப் 'படை' என்றது, அந்நநான்கன் தொகுதியை. ஊறு அஞ்சியவழி வேறல் கூடாமையின் 'ஊறஞ்சா' என்றும், ஒழிந்த அங்கங்கட்கும், அரசன் தனக்கும் காவலாகலின், 'வெறுக்கையுள் எல்லாம் தலை' என்றும் கூறினார்.

# குறள் 762( உலைவிடத்)

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத் ( ) உலைவு இடத்து ஊறு அஞ்சா வன்கண் தொலைவு இடத்துத்

தொல்படைக் கல்லா லரிது. (02) தொல் படைக்கு அல்லால் அரிது.

தொடரமைப்பு: தொலைவு இடத்து உலைவு இடத்து ஊறு அஞ்சா வன்கண் தொல்படைக்கு அல்லால் அரிது.

இதன்பொருள்

தொலைவிடத்து உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண்= தான் சிறிதாய வழியும் அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால் தன் மேல் உறுவதற்கு அஞ்சாது நின்று தாங்கும்வன்கண்மை; தொல்படைக்கு அல்லால் அரிது= அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உளதாகாது.

உரைவிளக்கம்

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப் படையுள்ளும் சிறப்புடையது மூலப்படை யாகலான், அதனை அரசன் "வெல்பொறியும் நாடும் விழுப்பொருளும் தண்ணடையும்/ கொல்களிறு மாவுங் கொடுத்தளிக்க"‡ என்பது குறிப்பெச்சம்.

இப்படையை வடநூலார் மௌலம் என்ப.

‡.புறப்பொருள் வெண்பா மாலை- தும்பை, 2.

# குறள் 763 (ஒலித்தக்கால் )

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை () ஒலித்தக்கால் என் ஆம் உவரி எலிப் பகை

நாக முயிர்ப்பக் கெடும். (03) நாகம் உயிர்ப்பக் கெடும்.

தொடரமைப்பு: எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னாம், நாகம் உயிர்ப்பக் கெடும்.

இதன்பொருள்

எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னாம்= எலியாகிய பகை கடல்போல ஒலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும்; நாகம் உயிர்ப்பக் கெடும்= அந்நாகம் உயிர்த்த துணையானே அது தானே கெடும்.

உரைவிளக்கம்

உவமைச்சொல் தொக்கு நின்றது. இத்தொழில் உவமத்தால் திரட்சி பெற்றாம். வீரர் அல்லாதார், பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான்; அவன் கிளர்ந்த துணையானே அவர்தாம் கெடுவர் என்பது தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம். வீரர் அல்லாதார் பலரினும், வீரன் ஒருவனை ஆடல் நன்று என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், முறையே அரசனுக்குப் படை ஏனை அங்கங்களுள் சிறந்தது என்பதூஉம், அது தன்னுள்ளும் மூலப்படை சிறந்தது என்பதூஉம், அதுதன்னுள்ளும் வீரன் சிறந்தான் என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள் 764 (அழிவின்றறை )

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த () அழிவு இன்று அறைபோகாது ஆகி வழி வந்த

வன்க ணதுவே படை (04) வன்கண் அதுவே படை.

தொடரமைப்பு: அழிவு இன்று அறை போகாதாகி வழிவந்த வன்கண் அதுவே படை.

இதன்பொருள்

அழிவு இன்று= போரின்கண் கெடுதல் இன்றி; அறை

போகாதாகி= பகைவரான் கீழறுக்கப்படாததாய்; வழிவந்த வன்கண்அதுவே படை= தொன்றுதொட்டு வந்த தறுகண்மையை உடையதே அரசனுக்குப் படையாவது.

உரைவிளக்கம்

'அழிவின்மை'யான் மறம் மானங்கள் உடைமையும், 'அறைபோகாமை'யான், அரசன்மாட்டு அன்புடைமையும் பெறப்பட்டன. 'வழிவந்த வன்கண்மை', "கன்னின்றான் எந்தை கணவன் களப்பட்டான்/ முன்னின்று மொய்யவிந்தார் என்னையர்- பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மோலோடி, எய்போற் கிடந்தான்என் ஏறு."[T] என்பதனான் அறிக. குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது. இது வருகின்ற பாட்டுள்ளும் ஒக்கும்.

T.புறப்பொருள் வெண்பாமாலை- வாகை, 22.

# குறள் 765 (கூற்றுடன்று )

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு () கூற்று உடன்று மேல் வரினும் கூடி எதிர் நிற்கும்

மாற்ற லதுவே படை. (05) ஆற்றலதுவே படை.

தொடரமைப்பு: கூற்று உடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும் ஆற்றலதுவே படை.

இதன்பொருள்

கூற்று உடன்று மேல் வரினும்= கூற்றுவன் தானே வெகுண்டு மேல்வந்தாலும்; கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை=

நெஞ்சொத்து எதிர்நின்று தாங்கும் ஆற்றலை உடையதே படையாவது.

உரைவிளக்கம்

'மருந்தில் கூற்றாகலின்'[Ì] உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ்சு ஒத்தற்குக் காரணம் அரசன்மேல் அன்பு. ஆற்றல்-மனவலி.

Ì.புறநானூறு, 3.

# குறள் 766(மறமான )

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற () மறம் மானம் மாண்ட வழிச் செலவு தேற்றம்

மெனநான்கே யேமம் படைக்கு. (06) என நான்கே ஏமம் படைக்கு.

**தொடரமைப்பு: மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே, படைக்கு ஏமம்.**

இதன்பொருள்

மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே= தறுகண்மையும், மானமும், முன் வீரராயினார் சென்ற நன்னெறிக்கண் சேறலும் அரசனால் தேறப்படுதலும் என இந்நான்கு குணமுமே; படைக்கு ஏமம்= படைக்கு அரணாவது.

உரைவிளக்கம்

இவற்றான் முறையே பகைவரைக் கடிதிற் கொன்றுநிற்றலும், அரசனுக்குத் தாழ்வு வாராமல் காத்தலும், "அழியுநர் புறக்கொடை அயில்வாள் ஒச்சா"[F]மை முதலியவும், அறைபோகாமையும் ஆகிய செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கையார்க்குப் பகைவர்

நணுகார் ஆகலின் வேறு அரண்வேண்டா என்பதாம்.

Ḟ.புறப்பொருள் வெண்பாமாலை- வஞ்சி, 20.

# குறள் **767** (தார்தாங்கிச் )

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த () தார் தாங்கிச் செல்வது தானை தலைவந்த

போர்தாங்குந் தன்மை யறிந்து. (07) போர் தாங்கும் தன்மை அறிந்து.

தொடரமைப்பு:: "தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து, தார் தாங்கிச் செல்வது தானை

இதன்பொருள்

தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து= மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல் வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக் கொண்டு; தார் தாங்கிச் செல்வது தானை= அவர் தூசியைத தன்மேல் வாராமல் தடுத்துத் தான் அதன்மேற் செல்வதே படையாவது.

உரைவிளக்கம்

படை வகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை உறுப்பிற்றாய் வகையான் நான்காய், விரியான் முப்பதாம். உறுப்பு ஏழாவன: உரம் முதல் கோடி ஈறாயின. வகை நான்காவன: தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் என இவை. விரி முப்பதாவன: தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்தும் என இவை. இவற்றின் பெயர்களும், இலக்கணமும் ஈண்டு உரைப்பிற் பெருகும். அவை எல்லாம் வடநூல்களுள் கண்டு கொள்க.

இவை நான்கு பாட்டானும் படையினது இலக்கணம் கூறப்பட்டது.

## குறள் 768 (அடற்றகையு )

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை () அடல் தகையும் ஆற்றலும் இல் எனினும் தானை

படைத்தகையாற் பாடு பெறும். (08) படைத் தகையால் பாடு பெறும்.

தொடரமைப்பு: "தானை அடற்றகையும் ஆற்றலும் இல் எனினும், படைத்தகையால் பாடு பெறும்"

இதன்பொருள்

தானை= தானை; அடல்தகையும் ஆறறலும் இல் எனினும்= பகைமேல் தான் சென்று அடும் தறுகண்மையும் அது தன்மேல் வந்தால் பொறுக்கும் ஆற்றலும் இல்லையாயினும்; படைத் தகையால் பாடு பெறும்= தன் தோற்றப் பொலிவானே பெருமை எய்தும்.

உரைவிளக்கம்

'இல்லெனினும்' எனவே, அவற்றது இன்றியமையாமை பெறப்பட்டது. 'படைத்தகை என்றது, ஒரு பெயர்மாத்திரமாய் நின்றது. தோற்றப்பொலிவாவது: அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைகளுடனும், பதாகை கொடி குடை பல்லியம் காகளம் முதலியவற்றுடனும் அணிந்து தோன்றும் அழகு. 'பாடு', கண்ட அளவிலே பகைவர் அஞ்சும் பெருமை.

## குறள் 769(சிறுமையுஞ் )

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு () சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்

மில்லாயின் வெல்லும் படை. (09) இல்லாயின் வெல்லும் படை.

தொடரமைப்பு: "சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின், படை வெல்லும்"

இதன்பொருள்

சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின்= தான் தேய்ந்து சிறிதாகலும், மனத்தினின்று நீங்காத வெறுப்பும், நல்குரவும் தனக்கு இல்லையாயின்; படை வெல்லும்= படை பகையை வெல்லும்.

உரைவிளக்கம்

விட்டுப்போதலும், நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள்கொடாமையான் வருவன. 'செல்லாத் துனி'யாவது, மகளிரை வெளவல், இளிவரவாவன செய்தன் முதலியவற்றான் வருவது. இவை உள்வழி, அவன்மாட்டு அன்பின்றி உற்றுப் பொராமையின், 'இல்லாயின் வெல்லும்' என்றார்.

# குறள் 770 (நிலைமக்கள் )

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை () நிலை மக்கள் சால உடைத்து எனினும் தானை

தலைமக்க ளில்வழி யில். (10) தலைமக்கள் இல் வழி இல்.

தொடரமைப்பு: நிலை மக்கள் சால உடைத்து எனினும், தலைமக்கள் இல்வழித் தானை இல்

இதன்பொருள்

நிலைமக்கள் சால உடைத்து எனினும்= போரின்கண் நிலையுடைய வீரரை மிக உடைத்தேயாயினும்; தலைமக்கள் இல் வழித் தானை இல்= தனக்குத் தலைவராகிய வீரர் இல்லாதவழித் தானை நில்லாது.

உரைவிளக்கம்

படைத்தலைவர் நிலையுடையர் அன்றிப் போவாராயின் காண்போர் இல்லெனப் பொராது, தானும் போம் என்பார், 'தலைமக்கள் இல்வழி இல்' என்றார்.

இவை மூன்று பாட்டானும் முறையே படைத்தகை இன்மையானும், அரசன் கொடைத் தாழ்வுகளானும், தலைவர் இன்மையானும் தாழ்வு கூறப்பட்டது.

# 78.படைச்செருக்கு

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் 78.படைச் செருக்கு

அதிகார முன்னுரை

அஃதாவது, அப்படையது மறமிகுதி. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் 771 (என்னைமுன் )

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை () என் ஐ முன்

நில்லன்மின் தெவ்விர் என் ஐ

முன்னின்று கன்னின் றவர். (01) முன் நின்று கல் நின்றவர்.

தொடரமைப்பு: தெவ்விர் என் ஐ முன் நின்று கல் நின்றவர் பலர், என் ஐ முன் நில்லன்மின்!

இதன்பொருள்

தெவ்விர் என் ஐ முன் நின்று கல் நின்றவர் பலர்= பகைவீர்! இன்றினூங்கு என் தலைவன் எதிர் போரேற்று நின்று அவன் வேல்வாய் வீழ்ந்து பின் கல்லின்கண்ணே நின்ற வீரர் பலர்; என் ஐ முன் நில்லன்மின்= நீவிர் அதன்கண் இன்றி நும் உடற்கண் நிற்றல் வேண்டின், என் தலைவன் எதிர் போர் ஏற்று நிற்றலை ஒழிமின்.

உரைவிளக்கம்

என் ஐ எனத் தன்னொடு தொடர்புபடுத்துக் கூறினமையின், அவன் வேல் வாய் வீழ்தல் பெற்றாம். கல்- நடுகல். "நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லா, லம்பொன் முடிப்பூ ணரசும் மிலை"Ḳ எனப் பதுமுகன் கூறினாற் போல, ஒரு வீரன் தன் மறம் அரசன் மேல் வைத்துக் கூறியவாறு. இப்பாட்டு நெடுமொழி வஞ்சி.Γ

Ḳ.சீவகசிந்தாமணி- காந்தருவ தத்தையார் இலம்பகம்,317.

Γ.புறப்பொருள் வெண்பாமாலை- வஞ்சி, 12.

# குறள் 772(கானமுய )

கான முயலெய்த வம்பினில் யானை () கான முயல் எய்த

அம்பினில் யானை

பிழைத்தவே லேந்த லினிது. (02) பிழைத்த வேல் ஏந்தல் இனிது.

தொடரமைப்பு: கான முயல் எய்த அம்பினில், யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது.

இதன்பொருள்

கான முயல் எய்த அம்பினில்= கானகத்தின்கண் ஒடும் முயலைப் பிழையாமல் எய்த அம்பை ஏந்தலினும்; யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது= வெள்ளிடை நின்ற யானையை எறிந்து பிழைத்த வேலை ஏந்துதல் நன்று.

உரைவிளக்கம்

'கான முயல்' என்றதனால், வெள்ளிடைநின்ற என்பதும், 'பிழைத்த' என்றதனால் பிழையாமல் என்பதும், முயற்குத்தக 'எய்த'என்றதனான், யானைக்குத்தக எறிதலும் வருவிக்கப்பட்டன. இது மாற்றரசன் படையொடு பொருதான் ஓர் வீரன், அது புறங் கொடுத்ததாக நாணிப் பின் அவன் தன்மேற் செல்லலுற்றானது கூற்று.

# குறள் 773 (பேராண்மை )

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றுக்கா () பேராண்மை என்ப தறுகண் ஒன்று உற்றக்கால்

லூராண்மை மற்றத னெஃ்கு. (03) ஊராண்மை மற்று அதன் எஃ்கு.

தொடரமைப்பு: தறுகண் பேராண்மை என்ப, ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃ்கு (என்ப)

இதன்பொருள்

தறுகண் பேராண்மை என்ப= பகைவர்மேல் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்க ஆண்டன்மை என்று சொல்லுவர்; ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு (என்ப)= அவர்க்கு ஒரு தாழ்வு வந்ததாயின் கண்ணோடி அது தீர்த்துக் கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மை என்று சொல்லுவர்.

உரைவிளக்கம்

'என்ப' என்பது, பின்னும் இயைந்தது. 'ஊராண்மை' உபகாரியாம் தன்மை; அஃதாவது, இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும்படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர்இறை மேல்செல்லாது "இன்றுபோய் நாளை நின் தானையோடு வா" என விட்டாற் போல்வது.

இவை இரண்டுபாட்டும் தழிஞ்சி.[௫]

௫. புறப்பொருள் வெண்பாமாலை-வஞ்சி, 3.

# குறள் 774 ( கைவேல்)

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் () கை வேல் களிற்றொடு போக்கி வருபவன்

மெய்வேல் பறியா நகும். (04) மெய் வேல் பறியா நகும்.

தொடரமைப்பு: "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் மெய் வேல் பறியா நகும்.

இதன்பொருள்

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்= தன் கைப்படையாய வேலைத் தன்மேல் வந்த களிற்றோடு போக்கி, வருகின்ற களிற்றுக்கு வேல் நாடித் திரிவான்; மெய் வேல் பறியா நகும்= தன் மார்பின்கண் நின்ற வேலைக் கண்டு பறித்து மகிழும்.

உரைவிளக்கம்

களிற்றோடு போக்கல்: களிற்றினது உயிரைக் கொடுபோமாறு விடுதல். மகிழ்ச்சி, தேடியது எய்தலான். இதனுள் களிற்றையல்லது எறியாது என்பதூஉம், சினமிகுதியான் வேல் இடை போந்தது அறிந்திலன் என்பதூஉம், பின்னும் போர்மேல் விருப்பினன் என்பதூஉம், பெறப்பட்டன. நூழிலாட்டு.₦

₦.புறப்பொருள் வெண்பாமாலை-தும்பை, 16.

# குறள் 775 (விழித்தகண் )

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி () விழித்த கண் வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின்

னொட்டன்றோ வன்க ணவர்க்கு. (05) ஒட்டு அன்றோ வன்கண் அவர்க்கு.

தொடரமைப்பு: விழித்தகண் வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின், வன்கணவர்க்கு ஒட்டுஅன்றோ?

இதன்பொருள்

விழித்தகண்= பகைவரை வெகுண்டு நோக்கிய கண்; வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின்= அவர் வேலைக்கொண்டு எறிய அஃது ஆற்றாது அந்நோக்கை அழித்து இமைக்குமாயின்;

வன்கணவர்க்கு ஒட்டு அன்றோ= அது வீரர்க்குப் புறங்கொடுத்தலாம்.

உரைவிளக்கம்

அவ் வெகுளி நோக்க மீட்டலும் போரின்கண் மீட்சி எனக் கருதி அதுவும் செய்யார் என்பதாம்.

## குறள் 776(விழுப்புண் )

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள் () விழுப்புண் படாத நாள் எல்லாம் வழுக்கினுள்

வைக்குந்தன் னாளை யெடுத்து. (06) வைக்கும் தன் நாளை எடுத்து.

தொடரமைப்பு: தன் நாளை எடுத்து, விழுப்புண் படாத நாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும்.

இதன்பொருள்

தன் நாளை எடுத்து= தனக்குச் சென்ற நாள்களை எடுத்து எண்ணி; விழுப்புண் படாத நாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும்= அவற்றுள், விழுப்புண் படாத நாள்களை எல்லாம் பயன்படாது கழிந்த நாளுள்ளே வைக்கும் வீரன்.

உரைவிளக்கம்

விழுப்புண் முகத்தினும் மார்பினும் பட்ட புண். போர் பெற்றிருக்கவும், அது பெறாத நாள்களோடும் கூட்டும் என்பதாம். இவை மூன்று பாட்டானும் ஊறு அஞ்சாமை கூறப்பட்டது.

# குறள் 777 (சுழலுமிசை )

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார் () சுழலும் இசை வேண்டி வேண்டா உயிரார்

கழல்யாப்புக் காரிகை நீர்த்து. (07) கழல் யாப்புக் காரிகை நீர்த்து.

தொடரமைப்பு: சுழலும் இசை வேண்டி வேண்டா உயிரார் கழல் யாப்புக் காரிகை நீர்த்து.

இதன்பொருள்

சுழலும் இசை வேண்டி வேண்டா உயிரார்= துறக்கத்துத் தம்மொடு செல்லாது, வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழைவேண்டி உயிர் வாழ்தலை வேண்டாத வீரர்; கழல் யாப்புக் காரிகை நீர்த்து= கழல் கட்டுதல் அலங்கார நீர்மையை உடைத்து.

உரைவிளக்கம்

வையத்தைச் சூழும் எனவே, அதன் பெருமை பெற்றாம். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல் அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதின் எய்துவர் ஆகலின், ஆபரணமாவது அதுவே என்பதாம்.

# குறள் 778 (உறினுயிரஞ்சா )

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன் () உறின் உயிர் அஞ்சா மறவர் இறைவன்

செறினுஞ் சீர்குன்ற லிலர். (08) செறினும் சீர் குன்றல் இலர்.

தொடரமைப்பு: உறின் உயிர் அஞ்சா மறவர், இறைவன்

செறினும் சீ ர் குன்றல் இலர்.

இதன்பொருள்

உறின் உயிர் அஞ்சா மறவர்= போர் பெறின் தம் உயிர்ப்பொருட்டு அஞ்சாது அதன்மேல் செல்லும் வீரர்; இறைவன் செறினும் சீர்குன்றல் இலர்= தம் இறைவன் அது வேண்டாம் என்று முனியினும், அவ் வீரமிகுதி குன்றார்.

உரைவிளக்கம்

போர் பெற்றறியாமையின், அது பெற்றால் அரசன் தடுப்பினும் நில்லார் என்பதாம். பிறரும், "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்"¶ என்றும், "புட்பகைக் / கேவான் ஆகலிற் சாவேம் யாமென/ நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப"₦ என்றும் கூறினார்.

¶.புறநானூறு, 31. ₦.புறநானூறு, 68.

# குறள் 779(இழைத்ததிக )

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே () இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே

பிழைத்த தொறுக்கிற் பவர். (09) பிழைத்தது ஒறுக்கிற்பவர்.

தொடரமைப்பு: இழைத்தது இகவாமைச் சாவாரை பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார்ஏ. "

இதன்பொருள்

இழைத்தது இகவாமைச் சாவார்= தாம் கூறின வஞ்சினம்

தப்பாமற் பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை; பிழைத்தது ஒறுக்கிற்பவர் யாரே= அது தப்பியவாறு சொல்லி எள்ளுதற்கு உரியார் யாவர்.

உரைவிளக்கம்

'இழைத்தல்': இன்னது செய்யேன் ஆயின், இன்னன் ஆகுக எனத் தான்வகுத்தல். சொல்லி என்பது அவாய்நிலையான் வந்தது. வஞ்சின முடிப்பான்புக்கு முன்னே சாவினும் தொலைவன்மையின், அது முடித்தவராவர் எனச் சாதற்சிறப்புக் கூறியவாறு.

# குறள் 780 (புரந்தார்கண் )

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகி ற்பிற் சாக்கா () புரந்தார் கண் நீர் மல்கச் சாகில் பின் சாக்காடு

டிரந்துகோட் தக்க துடைத்து. (10) இரந்து கோள் தக்கது உடைத்து.

தொடரமைப்பு: புரந்தார் கண்ணீர் மல்கச் சாகிற்பின், சாக்காடு இரந்துகோள் தக்கது உடைத்து. "

இதன்பொருள்

புறந்தார் கண்ணீர் மல்கச் சாகிற் பின்= தமக்குச் செய்த நன்றிகளை நினைந்து ஆண்ட அரசர் கண்கள் நீர்மல்கும் வகை போரிடைச் சாவப் பெறின்; சாக்காடு இரந்து கோள் தக்கது உடைத்து= அச் சாக்காடு இரந்தாயினும் கொள்ளும் தகுதியை உடைத்து.

உரைவிளக்கம்

மல்குதலாகிய இடத்து நிகழ் பொருளின் தொழில், இடத்தின்மேல் நின்றது. கிளையழ இல்லிடை நோயால் விளிவார் பழவினைப்

பயனே எய்தலின், அடுத்த வினையால் துறக்கம் எய்தும் சாதலை, 'இரந்து கோள் தக்கதுடைத்து' என்றார்.
இவை நான்கு பாட்டானும் உயிர் ஓம்பாமை கூறப்பட்டது.

# **79.**நட்பு

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **79.**நட்பு

அதிகார முன்னுரை

இனி, அப்படை போல அரசனுக்கு வினையிடத்து உதவுவதாகிய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தானும், பன்னிரண்டு அதிகாரம் எதிர்மறை முகத்தானும் கூறுவான் தொடங்கி, விதிமுக அதிகாரம் ஐந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். அஃதாவது, இன்னது என்பதூஉம், அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

# குறள் **781** (செயற்கரியயா )

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல் () செயற்கு அரிய யா உள நட்பின் அது போல்

வினைக்கரிய யாவுள காப்பு. (01) வினைக்கு அரிய யா உள காப்பு.

தொடரமைப்பு: நட்பின் செயற்கு அரியா யா உள? அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள? "

இதன்பொருள்

நட்பின் செயற்கு அரிய யா உள= நட்புப்போலச்செய்துகோடற்கு அரிய பொருள்கள் யாவை உள; அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள= செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவை உள?

உரைவிளக்கம்

நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றாற் செய்யும் உபாயமும், செய்தால் திரிபின்றி நிற்றலும் முதலிய அரிய வாகலின் நட்பின் செயற்கு அரியனவில்லை யென்றும், செய்தாற் பகைவர் அஞ்சி வினை தொடங்கார் ஆகலின், அதுபோல வினை வாராமைக்கு அரிய காவலில்லை என்றும் கூறினார். நட்புத்தான் இயற்கை செயற்கை என இருவகைப்படும். அவற்றுள், இயற்கை பிறப்பு முறையான் ஆயதூஉம், தேய முறையான் ஆயதூஉம் என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலின், அது சுற்றந்தழாலின் அடங்கிற்று; ஏனையது பகை இடையிட்ட தேயத்தது ஆகலின், அது துணைவலியென வலியறிதலுள் அடங்கிற்று. இனி, ஈண்டுச் சொல்லப்படுவது, முன் செய்த உதவிபற்றி வரும் செய்கையே ஆகலின், அதன் சிறப்பு இதனால் கூறப்பட்டது.

# குறள் 782(நிறைநீர )

நிறைநீர நீரவர்கேண்மைப் பிறைமதிப் () நிறை நீர நீரவர் கேண்மைப் பிறை மதிப்

பின்னீர பேதையார் நட்பு. (02) பின் நீர பேதையார் நட்பு.

தொடரமைப்பு: நீரவர் கேண்மை பிறை நிறை நீர, பேதையார் நட்பு மதிப் பின் நீர.

இதன்பொருள்

நீரவர் கேண்மை பிறை நிரை நீர= அறிவுடையார் நட்புக்கள் பிறைநிறையும் தன்மைபோல நாள்தோறும் நிறையும் தன்மையவாம்; பேதையார் நட்பு மதிப் பின் நீர= மற்றைப் பேதைமை உடையார் நட்புக்கள், நிறைந்தமதி பின் குறையும் தன்மைபோல நாள்தோறும் குறையும் தன்மையவாம்.

உரைவிளக்கம்

'நீரவர்' என்றார், இனிமைபற்றி. 'கேண்மை', 'நட்பு' என்பன, ஒருபொருட்கிளவி. செய்தாரது பன்மையான், நட்பும் பலவாயின. அறிவுடையாரும், அறிவடையாரும் செயதன முன்சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையாரும் பேதையாரும் செய்தன முன் பெருகிப் பின் சுருங்கற்கும் காரணம், தம்முள் முன் அறியாமையும், பின் அறிதலும் ஆம்.

# குறள் 783 (நவில்தொறு )

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும் () நவில்தொறும் நூல் நயம் போலும் பயில் தொறும்

பண்புடை யாளர் தொடர்பு. (03) பண்பு உடையாளர் தொடர்பு.

தொடரமைப்பு: பண்புடையாளர் தொடர்பு பயில்தொறும், நூல் நவில்தொறும் நயம் போலும்.

இதன்பொருள்

பண்புடையாளர் தொடர்பு பயில்தொறும்= நற்குணமுடைய மக்கள், தம்முள் செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க்கு இன்பம்செய்தல்; நூல் நவில்தொறும் நயம்போலும்= நூற்பொருள் கற்குந்தோறும் கற்றார்க்கு இன்பம் செய்தலை ஒக்கும்.

உரைவிளக்கம்

நயம் செய்தலான், நயம் எனப்பட்டது. இருமையினும் ஒருகாலைக்கொருகால் மிகும் என்பதாம்.
இவை இரண்டு பாட்டானும் அச்சிறப்பிற்கு ஏது கூறப்பட்டது.

# குறள் 784 (நகுதற் )

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண் () நகுதல் பொருட்டு அன்று நட்பு மிகுதிக்கண்

மேற்சென் றிடித்தற் பொருட்டு. (04) மேல் சென்று இடித்தல் பொருட்டு.

தொடரமைப்பு: நட்டல் நகுதற் பொருட்டு அன்று, மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டு.

இதன்பொருள்

நட்டல் நகுதற் பொருட்டன்று= ஒருவனோடு ஒருவன்

நட்புச்செய்தல் தம்முள் நகுதற்கு இயைந்தன சொல்லி நகையாடல் பொருட்டன்று; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டு= அவர்க்கு வேண்டாதன செய்கை உளதாயவழி முற்பட்டுக் கழறுதற் பொருட்டு.

உரைவிளக்கம்

பழியும் பாவமும் தரும் செய்கை துன்பமே பயத்தலான், வேண்டப்படுவது அன்மையின், அதனை 'மிகுதி' என்றும், அது செய்தற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்று' என்றும். இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற்பொருட்டு' என்றும் கூறினார். :இதனால் நட்பின் பயன் கூறப்பட்டது.

# குறள் **785 (**புணர்ச்சி **)**

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா () புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சி தான்

னட்பாங் கிழமை தரும். (05) நட்பு ஆம் கிழமை தரும்.

தொடரமைப்பு: புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்.

இதன்பொருள்

புணர்ச்சி பழகுதல் வேண்டா= ஒருவனோடு ஒருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும், பழகுதலும் ஆகிய காரணங்கள் வேண்டுவது இல்லை; உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்= இருவர்க்கும் ஒத்த உணர்ச்சிதானே நட்பாம் உரிமையைக் கொடுக்கும்.

உரைவிளக்கம்

'புணர்ச்சி', ஒரு தேயத்தராதல்; "இன்றே போல்க நும் புணர்ச்சி"¶ என்றதும் அதனை. 'பழகுதல்', பலகாற் கண்டும் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டும் இன்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும், பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சி ஒப்பின், அதுவே உடனுயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும் என்பதாம்.† நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி ஒத்தல் என்னும் காரணம் மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்து என்பது இதனால் கூறப்பட்டது.

¶.புறநானூறு, 58.

†.புறநானூறு, 217.

# குறள் 786( முகநக)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத் ()

தகநக நட்பது நட்பு. (06)

தொடரமைப்பு: முகம் நக நட்பது நட்பு அன்று, நெஞ்சத்து அகம் நக நட்பது நட்பு.

இதன்பொருள்

முகம் நக நட்பது நட்பு அன்று= கண்டவழி அகம் ஒழிய, முகம் மாத்திரமே மலரும் வகை நட்கும் அது, நட்பு ஆகாது; நெஞ்சத்து அகம் நக நட்பது நட்பு= அன்பால் அகமும் மலர நட்கும் அதே நட்பாவது.

உரைவிளக்கம்

நெஞ்சின்கண் நிகழ்வதனை 'நெஞ்சு' என்றார். இறந்தது தழீஇய

எச்ச உம்மை விகாரத்தான் தொக்கது. இதனால் இரண்டும் ஒருங்கே மலரவேண்டும் என்பது பெற்றாம்.

## குறள் 787 (அழிவினவை )

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க () அழிவின் அவை நீக்கி ஆறு உய்த்து அழிவின்கண்

ணல்ல லுழப்பதா நட்பு. (07) அல்லல் உழப்பது ஆம் நட்பு.

தொடரமைப்பு:அழிவின் அவை நீக்கி ஆறு உய்த்து, அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம்.

இதன்பொருள்

அழிவின் அவை நீக்கி ஆறு உய்த்து= கேட்டினைத்தரும் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி, ஏனை நன்னெறிகளைச் செல்லாக்காற் செலுத்தி; அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம்= தெய்வத்தான் கேடு வந்துழி, அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடன் அனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது.

உரைவிளக்கம்

'ஆறு' என வருகின்றமையின், அழிவினைத் தருமவை என்று ஒழிந்தார். தெருண்ட அறிவின வர்"§ என்புழிப்போல இன் சாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது. இனி, நவை என்று பாடம் ஓதி, அதற்குப் போரழிவினும், செல்வ அழிவினும் வந்த துன்பங்கள் என்றும், 'அழிவின்கண்' என்பதற்கு யாக்கை அழிவின்கண் என்றும் உரைப்பாரும் உளர்.

§.நாலடியார், 301.

# குறள் 788 (உடுக்கை )

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே () உடுக்கை இழந்தவன் கை போல ஆங்கே

யிடுக்கண் களைவதா நட்பு. (08) இடுக்கண் களைவது ஆம் நட்பு.

**தொடரமைப்பு:** உடுக்கை இழந்தவன் கை போல, ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம்.

இதன்பொருள்

உடுக்கை இழந்தவன் கைபோல= அவையிடை ஆடை குலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்று உதவி அவ் இளிவரல் களையுமாறு போல; ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம்= நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி, அப்பொழுதே சென்று உதவி, அதனைக் களைவதே நட்பாவது.

உரைவிளக்கம்

அற்றம் காத்தற்கண் கை தன் மனத்தினும் முற்படுதலின், அவ் விரைவு இடுக்கண் களைவுழியும் அதற்கு ஒத்த தொழில் உவமையினும் வருவிக்க. உடையவன் தொழில் நட்பின்மேல் ஏற்றப்பட்டது.

# குறள் 789(நட்பிற்கு )

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி () நட்பிற்கு வீற்று இருக்கை யாது எனில் கொட்பு இன்றி

யொல்லும்வா யூன்று நிலை. (09) ஒல்லும் வாய் ஊன்றும் நிலை.

தொடரமைப்பு: நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின், கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை.

இதன்பொருள்

நட்பிற்கு வீற்றிருக்கை யாது எனின்= நட்பினுக்கு அரசிருக்கை யாது எனின்; கொட்பு இன்றி ஒல்லும்வாய் ஊன்றும் நிலை= அஃது எஞ்ஞான்றும், திரிபின்றி இயலும் எல்லை எல்லாம் அறம் பொருள்களின் தளராமைத்? தாங்கும் தன்மை.

உரைவிளக்கம்

ஒரு ஞான்றும் வேறுபடாது, மறுமை இம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களில் தளர்ந்துழி, அத்தளர்ச்சி நீக்கி, அவற்றின்கண் நிறுத்துதற்குமேல் ஒருசெயலும் இன்மையின், அதனை நட்பிற்கு முடிந்த எல்லை என்றார்.

# குறள் **790** (இனையரிவர் )

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று () இனையர் இவர் எமக்கு இன்னம் யாம் என்று

புனையினும் புல்லென்னு நட்பு. (10) புனையினும் புல்லென்னும் நட்பு.

தொடரமைப்பு: இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும், நட்புப் புல்லென்னும்.

இதன்பொருள்

இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும்= இவர் நமக்கு இத்துணை அன்பினர், யாம் இவர்க்கு இத்தன்மையம் என்று ஒருவரை ஒருவர் புனைந்து சொல்லினும்;

நட்புப் புல் என்னும்= நட்புப் புல்லிதாய்த் தோன்றும்.

உரைவிளக்கம்

இவர்க்கு என்பது வருவிக்கப்பட்டது. தாம் அவர் என்னும் வேற்றுமையின்றி வைத்துப் புனைந்து உரைப்பினும் வேற்றுமை உண்டாம் ஆகலின், நட்புப் 'புல்லென்னும்' என்றார்.

இவை ஐந்து பாட்டானும் நட்பினது இலக்கணம் கூறப்பட்டது.

# **80.**நட்பாராய்தல்

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **80.**நட்பு ஆராய்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, மேற்சொல்லிய இலக்கணத்தாரை ஆராய்ந்து அறிந்தே நட்க வேண்டுதலின், அவரை ஆராயும் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **791 (**நாடாது **)**

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின் () நாடாது நட்டலின் கேடு இல்லை நட்ட பின்

வீடில்லை நட்பாள் பவர்க்கு. (01) வீடு இல்லை நாடு ஆள்பவர்க்கு.

தொடரமைப்பு: நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை, நாடாது நட்டலின் கேடு இல்லை.

இதன்பொருள்

நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை=நட்பினை விரும்பி அதன்கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச்செய்தபின் அவனை விடுதல் உண்டாகாது; நாடாது நட்டலிற் கேடு இல்லை= ஆகலான், ஆராயாது நட்புச்செய்தல்போலக் கேடு தருவது பிறிதில்லை.

உரைவிளக்கம்

ஆராய்தல், குணஞ்செய்கைகளது நன்மையை ஆராய்தல். 'கேடு' ஆகுபெயர். நட்கின் தாம் அவர் என்னும் வேற்றுமையின்மையின் 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமையின்மையான் அவன்கண் பழிபாவங்கள் தமவாம் ஆகலின், இருமையும் கெடுவர் என்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றும் கூறினார்.

# குறள் **792**(ஆய்ந்தாய்ந்து )

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை () ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை முறை

தான்சாந் துயரந் தரும். (02) தான் சாம் துயரம் தரும்.

தொடரமைப்பு: ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான் கடை முறை தான் சாம் துயரம் தரும்.

இதன்பொருள்

ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான்= குணமும் செய்கையும் நல்லன் என்பது, பலகாலும் பலவாற்றானும் ஆராய்ந்து ஒருவனோடு நட்புக்கொள்ளாதவன்; கடைமுறை தான் சாம் துயரம் தரும்= முடிவில் தான் சாதற்கு ஏதுவாய துன்பத்தினைத் தன் மாற்றார் விளைக்கவேண்டாமல் தானே விளைக்கும்.

உரைவிளக்கம்

கடைமுறைக் கண்ணென இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்க. குணமும் செயலும் தீயானொடு கொள்ளின் அவற்கு வரும் பகைமையெல்லாம் தன்மேலவாய்ப் பின் அவற்றான் இறந்துவிடும் என்பதாம்.

இவை இரண்டுபாட்டானும் ஆராயாவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் **793** (குணனும் )

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா () குணனும் குடிமையும் குற்றமும் குன்றா

வினனு மறிந்தியாக்க நட்பு. (03) இனனும் அறிந்து யாக்க நட்பு.

தொடரமைப்பு:குணனும் குடிமையும் குன்றா இன்னும் அறிந்து, நட்பு யாக்க.

இதன்பொருள்

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து= ஒருவன் குணத்தினையும், குடிப்பிறப்பினையும், குற்றத்தினையும்,

குறைவற்ற சுற்றத்தினையும் ஆராய்ந்து அறிந்து; நட்பு யாக்க= அவனோடு நட்புச் செய்க.

உரைவிளக்கம்

குற்றம் இல்லாதார் உலகத்து இன்மையின், உள்ளது பொறுக்கப் படுவதாயின் அவர் நட்பு விடற்பாற்று அன்று என்பார், 'குற்றமும்' என்றும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலின் 'குன்றா இனனும்' என்றும், விடப்படின் தம் குறையாம் என்பார் 'அறிந்து யாக்க' என்றும் கூறினார்.

# குறள் **794 (**குடிப்பிறந்து **)**

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக் () குடிப் பிறந்து தன்கண் பழி நாணுவானைக்

கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. (04) கொடுத்தும் கொளல் வேண்டும் நட்பு.

தொடரமைப்பு**:** குடிப்பிறந்து தன்கண் பழி நாணுவானைக் கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும்.

இதன்பொருள்

குடிப்பிறந்து தன்கண் பழிநாணுவானை= உயர்ந்த குடியின்கண் பிறந்து, தன் மாட்டு உலகர் சொல்லும் பழிக்கு அஞ்சுவானை; கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும்= சில கொடுத்தாயினும் நட்புக் கோடல் சிறந்தது.

உரைவிளக்கம்

குடிப்பிறப்பான் தான் பிழைசெய்யாமையும், பழிக்கு அஞ்சலான் பிழைத்தன பொறுத்தலும் பெற்றாம். இவை இரண்டும்

உடையானைப் பெறுதல் அருமையின், அவன் நட்பை விலைகொடுத்தும் கொள்க என்பதாம்.

# குறள் **795** **(**அழச்சொல்லி **)**

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய () அழச் சொல்லி அல்லது இடித்து வழக்கு அறிய

வல்லார்நட் பாய்ந்து கொளல். (05) வல்லார் நட்பு ஆய்ந்து கொளல்.

தொடரமைப்பு**:** அல்லது அழச் சொல்லி இடித்து வழக்கு அறிய வல்லார் ஆய்ந்து நட்புக் கொளல்.

இதன்பொருள்

அல்லது அழச் சொல்லி= தாம் உலகவழக்கல்லது செய்யக் கருதின், சோகம் பிறக்கும்வகை சொல்லி விலக்கியும்; இடித்து= செய்தக்கால் பின்னும் செய்யாவகை நெருக்கியும்; வழக்கு அறிய வல்லார்= அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை; ஆய்ந்து நட்புக்கொளல்= ஆராய்ந்து நட்புக் கொள்க.

உரைவிளக்கம்

'அழச்சொல்லி', 'இடித்து' என வந்த பரிகார வினைகளான், அவற்றிற்கு ஏற்ற? குற்ற வினைகள் வருவிக்கப்பட்டன. 'வழக்கு' உலகத்தார் அடிப்படச் செய்துபோந்த செயல். தம்மொடு நட்டாரும் அறியும்வகை அறிவித்தல் அரிதாகலின் 'அறியவல்லார்' என்றார். இரண்டாவது இறுதிக்கண் தொக்கது.

# குறள் **796(**கேட்டினு **)**

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை () கேட்டினும் உண்டு ஓர் உறுதி கிளைஞரை

நீட்டி யளப்பதோர் கோல். (06) நீட்டி அளப்பது ஓர் கோல்.

தொடரமைப்பு: கிளைஞரை நீட்டி அளப்பது ஓர் கோல் கேட்டினும் ஓர் உறுதி உண்டு.

இதன்பொருள்

கிளைஞரை நீட்டி அளப்பது ஓர் கோல்= ஒருவனுக்குக் கேடென்பது தன் நட்டாராகிய புலன்களை எஞ்சாமல் அளப்பதோர் கோல்; கேட்டினும் ஓர் உறுதி உண்டு= ஆகலின் அதன்கண்ணும் அவனாற் பெறப்படுவதோர் நல்லறிவு உண்டு.

உரைவிளக்கம்

தத்தம் நட்பு எல்லைகள் சுருங்கி இருக்கவும், செல்வக்காலத்துப் புறத்துத் தோன்றாமல் போந்தார் பின் கேடுவந்துழிச் செயல் வேறுபடுதலின் அக்கேட்டால் அவை வரையறுக்கப்படும் என்பதுபற்றிக் கேட்டினைக் கோலாக்கியும், அதனால் அவரை அளந்தறிந்தால் ஆவாரையே கோடலின் அவ்வறிவினை 'உறுதி' யென்றும் கூறினார். 'கிளைஞர்' ஆகுபெயர். இஃது ஏகதேச உருவகம்.

இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும், ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவர் என்பதூஉம் கூறப்பட்டன.

# குறள் **797 (**ஊதிய **)**

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார் () ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்

கேண்மை யொரீஇ விடல். (07) கேண்மை ஒரீஇ விடல்.

தொடரமைப்பு: ஒருவற்கு ஊதியம் என்பது பேதையார் கேண்மை ஒரீஇ விடல்.

இதன்பொருள்

ஒருவற்கு ஊதியம் என்பது= ஒருவனுக்குப் பேறென்று சொல்லப்படுவது; பேதையார் கேண்மை ஒரீஇ விடல்= அறிவிலாரோடு நட்புக் கொண்டானாயின், அதனை ஒழிந்து அவரின் நீங்குதல்.

உரைவிளக்கம்

நட்பு ஒழிந்தாலும், நீங்காக்கால் "வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வே"§மாறுபோலத் தீங்கு வருதலின், 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங்கு ஒழிதலேயன்றி இருமையின்பத்திற்கு உரிமை எய்தலும் உடைமையின் அதனை 'ஊதியம்' என்றும் கூறினார்.

§. நாலடியார், 180.

# குறள் 798 (உள்ளற்க )

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க (08) உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க

வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. (08) அல்லல் கண் ஆற்று அறுப்பார் நட்பு.

தொடரமைப்பு: உள்ளம் சிறுகுவ உள்ளற்க,அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு கொள்ளற்க.

இதன்பொருள்

உள்ளம் சிறுகுவ உள்ளற்க= தம் ஊக்கம் சுருங்குதற்குக் காரணமாய வினைகளைச் செய்ய நினையாது ஒழிக; அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்புக் கொள்ளற்க= அதுபோலத் தமக்கு ஒருதுன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளாது ஒழிக.

உரைவிளக்கம்

'உள்ளம் சிறுகுவ'வாவன, தம்மின் வலியாரோடு தொடங்கியனவும், பயனில்லனவுமாம். 'ஆற்று' என்பது, முதனிலைத் தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழிதலின், வலியறுப்பார் என்றார். எடுத்துக்காட்டு உவமை. கொள்ளின் அழிந்தேவிடும் என்பதாம்.

## குறள் 799(கெடுங்காலை )

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை () கெடும் காலை கை விடுவார் கேண்மை அடும் காலை

யுள்ளினு முள்ளஞ் சுடும். (09) உள்ளினும் உள்ளம் சுடும்.

தொடரமைப்பு: கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை, அடுங்காலை உள்ளினும் உள்ளம் சுடும்.<

இதன்பொருள்

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை= ஒருவன் கெடுங்காலத்து அவனை விட்டு நீங்குவார் முன் அவனோடு செய்த நட்பு;

அடுங்காலை உள்ளினும் உள்ளம் சுடும்= தன்னைக் கூற்று அடுங்காலத்து ஒருவன் நினைப்பினும், அந்நினைத்த உள்ளத்தைச் சுடும்.

உரைவிளக்கம்

நினைத்ததுணையானே இயைபு இல்லாத பிறனுக்கும் கூற்றினும் கொடிதாம் எனக் கைவீடு எண்ணிச் செய்த நட்பின் கொடுமை கூறியவாறு. இனி, அவன்றானே ஆக்கிய கேடு தன்னை அடுங்காலை உள்ளினும் அக்கேட்டினும் சுடும் என்று உரைப்பாரும் உளர்.‡

இவை மூன்றுபாட்டானும் ஆராய்ந்தால் நட்கப்படாதார் இவர் என்பது கூறப்பட்டது.

‡. மணக்குடவர்

# குறள் 800 (மருவுக )

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து () மருவுக மாசு அற்றார் கேண்மை ஒன்று ஈத்தும்

மொருவுக வொப்பிலார் நட்பு. (10) ஒருவுக ஒப்பிலார் நட்பு.

தொடரமைப்பு: மாசு அற்றார் கேண்மை மருவுக, ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக.

இதன்பொருள்

மாசு அற்றார் கேண்மை மருவுக= உலகோடு ஒத்துக் குற்றமற்றார் நட்பினையே பயில்க; ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக= உலகத்தோடு ஒத்தில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டியது ஒன்றனைக் கொடுத்தாயினும் விடுக.

உரைவிளக்கம்

உலகோடு ஒத்தார் நட்பு இருமையின்பமும் பயத்தலின் 'மருவுக' என்றும், அதனோடு மாறாயினார் நட்புத் துன்பமே பயத்தலின் அதன் ஒழிவை விலைகொடுத்தும் கொள்க என்றும் கூறினார். இதனால் அவ்விருமையும் தொகுத்துக் கூறப்பட்டன.

# **81.**பழைமை

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **81.**பழைமை

அதிகார முன்னுரை

அஃதாவது, நட்டாரது பழையராம் தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற்கு ஆயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரெனினும் பொறுக்கப்படும் குற்றமுடையார் ஆகலானும், ஊழ்வகையானும் நட்டார்மாட்டுப் பிழையுளதாம் என்பது அறிவித்தற்கு, இது நட்பாராய்தலின்பின் வைக்கப்பட்டது.

# குறள் 801 (பழைமை )

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங் () பழைமை எனப்படுவது யாது எனின் யாதும்

கிழைமையைக் கீழ்ந்திடா நட்பு. (01) கிழைமையைக் கீழ்ந்து இடா நட்பு.

தொடரமைப்பு: பழைமை எனப்படுவது யாதெனின், கிழைமையை யாதும் கீழ்ந்திடா நட்பு.

இதன்பொருள்

பழைமை எனப்படுவது யாதெனின்= பழைமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்ந கிழைமையை யாதும் கீழ்ந்திடா நட்பு= அது பழைமையோர் உரிமையான் செய்வனவற்றைச் சிறிதும் சிதையாது அவற்றிற்கு உடம்படும் நட்பு.

உரைவிளக்கம்

'கிழமை' ஆகுபெயர். கெழுதகைமை என வருவனவும் அது. உரிமையாற் செய்வனவாவன: கருமம் ஆயின செய்யுங்கால் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்குவேண்டியன தாமே கோடல், பணிவு அச்சங்கள் இன்மை என்று இவை முதலாயின. சிதைத்தல்- விலக்கல். இதனாற் பழைமையாவது காலம் சென்றதன்று, இப்பெற்றித்தாய நட்பு என்பது கூறப்பட்டது.

# குறள் 802 (நட்பிற்குறுப் )

நட்பிற்குறுப்புக் கெழுதகைமை மற்றதற் () நட்பிற்கு உறுப்புக்

கெழுதகைமை மற்று அதற்கு

குப்பாதல் சான்றோர் கடன். (02) உப்பு ஆதல் சான்றோர் கடன்.

தொடரமைப்பு: நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை, அதற்கு உப்பாதல் சான்றோர் கடன்.

இதன்பொருள்

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை= நட்பிற்கு அவயவம் ஆவன நட்டார் உரிமையான் செய்வன; அதற்கு உப்பாதல் சான்றோர் கடன்= அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை.

உரைவிளக்கம்

வேறன்மை தோன்ற 'உறுப்பு' என்றார். 'உறுப்பு' என்பது, ஈண்டு இலக்கணை அடியாக வந்த குறிப்புச்சொல். அவயவம் ஆதல் அறிந்தே இனியவராவர் என்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார்.

# குறள் 803 (பழகிய )

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை () பழகிய நட்பு எவன் செய்யும் கெழுதகைமை

செய்தாங் கமையாக் கடை. (03) செய்து ஆங்கு அமையாக் கடை.

தொடரமைப்பு:கெழுதகைமை செய்தாங்கு அமையாக் கடை, பழகிய நட்பு எவன்செய்யும்.

இதன்பொருள்

கெழுதகைமை செய்தாங்கு அமையாக்கடை= தாம்

உடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத் தாம் செய்தாற்போல உடம்படாராயின்; பழகிய நட்பு எவன் செய்யும்= அவரோடு பழையதாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும்?

உரைவிளக்கம்

செய்தாற்போல உடம்படுதலாவது, தாமும் அவரிடத்து உரிமையால் உடம்படுதல். இவை இரண்டு பாட்டானும் பழைமையான் வரும் உரிமையது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் 804 (விழைதகையான் )

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற் () விழை தகையான் வேண்டி இருப்பர் கெழுதகையான்

கௌாது நட்டார் செயின். (04) கேளாது நட்டார் செயின்.

தொடரமைப்பு: நட்டார் கெழுதகையால் கேளாது செயின், விழைதகையான் வேண்டி இருப்பர்.

இதன்பொருள்

நட்டார் கெழுதகையால் கேளாது செயின்= தன் கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின்; விழை தகையான் வேண்டி இருப்பர்= அச்செயலது விழையப்படுந்தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார்.

உரைவிளக்கம்

ஒருவர்க்குத் தம் கருமம் தாம் அறியாமல் முடிந்திருத்தலினூஉங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்கது ஆயிற்று. அதனை அவ்வாறு அறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கு

அல்லது இன்மையின், அவர்மேல் வைத்துக் கூறினார். வேண்டியிருப்பர் என்பது எழுந்திருப்பர் என்பதுபோல ஒரு சொல்நீர்மைத்து. இதனாற் கேளாது செய்துழி அதனை விரும்புக என்பது கூறப்பட்டது.

# குறள் **805 (**பேதைமையொன் **)**

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க () பேதைமை ஒன்றோ பெரும் கிழமை என்று உணர்க

நோதக்க நட்டார் செயின். (05) நோ தக்க நட்டார் செயின்.

தொடரமைப்பு**:**நோ தக்க நட்டார் செயின், பேதைமை ஒன்றோ பெருங்கிழமை ஒன்றோ என்று உணர்க.

இதன்பொருள்

நோதக்க நட்டார் செயின்= தாம் வெறுக்கத்தக்கனவற்றை நட்டார் செய்தாராயின்; பேதைமை ஒன்றோ பெரும் கிழமை என்று உணர்க= அதற்குக்காரணம் ஒன்றிற் பேதைமை யென்றாதல், ஒன்றின் மி்க்கஉரிமை என்றாதல் கொள்க.

உரைவிளக்கம்

'ஒன்றோ' என்பது எண்ணிடைச்சொல். 'செயின்' எனவே, தம்மியல்பான் செய்யாமை பெற்றாம். இது வருகின்றவற்றுள்ளும் ஒக்கும். இழவூழான் வரும் பேதைமை யாவர்க்கும் உண்மையின் தமக்கு ஏதம்கொண்டார் என்றாதல், ஊழ்வகையான் எம்மின் வரற்பாலது ஒறறுமைமிகுதிபற்றி அவரின் வந்தது என்றாதல் கொள்வது அல்லது, அன்பின்மை என்று கொள்ளப்படாது என்பதாம். கெடும்வகை செய்யின் அதற்குக்காரணம் இதனான் கூறப்பட்டது.

# குறள் 806(எல்லைக்கணி )

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந் () எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவு இடத்தும்

தொல்லைக்க ணின்றார் தொடர்பு. (06) தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

தொடரமைப்பு: எல்லைக்கண் நின்றார் தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவுஇடத்தும் துறவார்.

இதன்பொருள்

எல்லைக்கண் நின்றார்= நட்பு வரம்பு இகவாது அதன்கண்ணே நின்றவர்; தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவிடத்தும் துறவார்= தம்மொடு பழைமையில் திரியாது நின்றாரது நட்பினை அவரால் தொலைவு வந்த இடத்தும் விடார்.

உரைவிளக்கம்

பழைமையில் திரியாமை: உரிமை ஒழியாமை. தொலைவு பொருட்கேடும், போர்க்கேடும்.

# குறள் 807 (அழிவந்த )

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்()அழிவந்த செய்யினும் அன்பு அறார் அன்பின்

வழிவந்த கேண்மை யவர். (07) வழி வந்த கேண்மையவர்.

தொடரமைப்பு:அழிவந்த செய்யினும் அன்பு அறார் அன்பின் வழி வந்த கேண்மையவர்.

இதன்பொருள்

அழிவந்த செய்யினும் அன்பு அறார்= நட்டார் தமக்கு அழிவு வந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட்டு அன்பு ஒழியார்; அன்பின்வழிவந்த கேண்மையவர்= அன்புடனே பழையதாய் வந்த நட்பினை உடையார்.

உரைவிளக்கம்

அழிவு என்பது, முதனிலைத்தொழிற்பெயர். அழிவு, மேற்சொல்லிய கேடுகள். இவை இரண்டுபாட்டானும் கேடு செய்தக்கண்ணும் நட்பு விடற்பாற்று அன்று என்பது கூறப்பட்டது.

# குறள் **808** (கேளிழுக்கங் )

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு () கேள் இழுக்கம் கெழுதகைமை வல்லார்க்கு

நாளிழுக்க நட்டார் செயின். (08) நாள் இழுக்கம் நட்டார் செயின்.

தொடரமைப்பு: கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு நட்டார் இழுக்கம் செயின் நாள்.

இதன்பொருள்

கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு= நட்டார்செய்த பிழையைத் தாமாகவே அன்றிப் பிறர்சொன்னாலும் கொள்ளாத உரிமை அறியவல்லார்க்கு; நட்டார் இழுக்கம் செய்யின் நாள்= அவர் பிழைசெய்வாராயின், அது பயன்பட்ட நாளாம்.

உரைவிளக்கம்

பிழையாவன சொல்லாது நற்பொருள் வெளவல், பணியாமை,

அஞ்சாமை முதலியன. கேட்டல்- உட்கோடல். 'கெழுதகைமைவல்லார்' என்பது ஒரு பெயராய்க் கேளாத என்னும் எச்சத்திற்கு முடிபு ஆயிற்று. செய்து போந்துழியல்லது அவ்வுரிமை வெளிப்படாமையின், செய்யாதன நாள்அல்லவாயின. இதனான் பிழைபொறுத்தல் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **809(**கெடாஅவழி **)**

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை () கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை

விடாஅர் விழையு முலகு. (09) விடாஅர் விழையும் உலகு.

தொடரமைப்பு:கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை, விடாஅர் உலகு விழையும்.

இதன்பொருள்

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை= உரிமையறாது பழையதாய் வந்த நட்பினை உடையாரது நட்பினை; விடாஅர் உலகு விழையும்= அவர் பிழைநோக்கி விடுதல்செய்யாதாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும்.

உரைவிளக்கம்

'கெடாது' என்பதன் இறுதிநிலை விகாரத்தான் தொக்கது. விடாதாரை எனவே, விடுதற்காரணம் கூறப்பட்டது. நம்மாட்டும் இவர் இத்தன்மையர் ஆவர் என்று யாவரும் தாமே வந்து நட்பாவர் என்பதாம். கெடார் என்று பாடம் ஓதி, நட்புத்தன்மையிற் கெடாராகி என்று உரைப்பாரும் உளர்.

# குறள் **810 (**விழையார் **)**

விழையார் விழையப் படுப பழையார்கட் () விழையார் விழையப் படுப பழையார்கண்

பண்பிற் றலைப்பிரியா தார். (10) பண்பில் தலைப்பிரியாதார்.

தொடரமைப்பு**:** பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார், விழையார் விழையப் படுப.

இதன்பொருள்

பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார்= பழைய நட்டார் பிழை செய்தாராயினும் அவர்மாட்டுத் தம் பண்பின் நீங்காதார்; விழையார் விழையப்படுப= பகைவரானும் விரும்பப்படுவர்.

உரைவிளக்கம்

தம் பண்பாவது, செய்யாதமுன்போல அன்புடையராதல். மூன்றன் உருபும் சிறப்பும்மையும் விகாரத்தால் தொக்கன. அத்திரிபின்மை நோக்கிப் பகைவரும் நட்டாராவர் என்பதாம். இவை இரண்டுபாட்டானும் பழைமை அறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது.

# 82. தீ நட்பு

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் 82. தீ நட்பு

அதிகார முன்னுரை

இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு நட்பாராய்தற்கண் சுருங்கச்சொல்லிய துணையான் அடங்காமையின், அதனை இருவகைப்படுத்து இரண்டு அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி முதற்கண் தீநட்புக் கூறுகின்றார். அஃதாவது, தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின் தீமை ஒற்றுமைபற்றி உடையார் மேற்றாய், அது பின் அவரோடு செய்த நட்பின் மேற்றாயிற்று. அதிகாரமுறைமை

கூறாமையே விளங்கும்.

## குறள் 811 ( பருகுவார்)

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை () பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை

பெருகலிற் குன்ற லினிது. (01) பெருகலின் குன்றல் இனிது.

தொடரமைப்பு: பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை, பெருகலின் குன்றல் இனிது. "

இதன்பொருள்

பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை= காதன்மிகுதியான் பருகுவார் போன்றார் ஆயினும் தீக்குணமுடையார் நட்பு; பெருகலின் குன்றல் இனிது= வளர்தலின் தேய்தல் நன்று.

உரைவிளக்கம்

"பருகுவன்ன அருகா நோக்கமொடு" என்றார் பிறரும். நற்குணம் இல்லார் எனவே, தீக்குணம் உடையார் என்பது அருத்தாபத்தியான் வந்தது. பெருகினால் வரும் கேடு குன்றினால் வாராமையின் 'குன்றல் இனிது' என்றார். இதனார் தீநட்பினது ஆகாமை பொதுவகையான் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையான் கூறுப.

## குறள் 812 (உறினட்டறி )

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை () உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை

பெறினு மிழப்பினு மென். (02) பெறினும் இழப்பினும் என்.

தொடரமைப்பு: உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை, பெறினும் இழப்பினும் என்.

இதன்பொருள்

உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை= தமக்குப் பயன்உள்வழி நட்புச்செய்து, அஃது இல்வழி ஒழியும் ஒப்பிலாரது நட்பினை; பெறினும் இழப்பினும் என்= பெற்றால் ஆக்கம் யாது? இழந்தால் கேடுயாது?

உரைவிளக்கம்

தமக்கு உற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தம் இலராகலின் அவரை ஒப்பிலார் என்றார். அவர்மாட்டு நொதுமல் தன்மையே அமையும் என்பதாம்.

# குறள் 813 (உறுவதுசீர் )

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது () உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது

கொள்வாருங் கள்வரு நேர். (03) கொள்வாரும் கள்வரும் நேர்.

தொடரமைப்பு: உறுவது சீர்தூக்கும் நட்பும், பெறுவது கொள்வாரும், கள்வரும் நேர்.

இதன்பொருள்

உறுவது சீர்தூக்கும் நட்பும்= நட்பளவு பாராது அதனால்வரும்

பயனளவு பார்க்கும் நட்டாரும்; பெறுவது கொள்வாரும்= கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் பொதுமகளிரும்; கள்வரும்= பிறர் கேடுநோக்காது அவர் சோர்வு நோக்கும் கள்வரும்; நேர்= தம்முள் ஒப்பர்.

உரைவிளக்கம்

'நட்பு' ஆகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்து ஒழுகலின், கணிகையர் கள்வர் என்று இவரோடு ஒப்பர் என்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானும் தமக்கு உறுவது பார்ப்பார் நட்பின் தீமை கூறப்பட்டது.

# குறள் **814** (அமரகத் )

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார் () அமர் அகத்து ஆற்று அறுக்கும் கல்லா மா அன்னார்

தமரிற் றனிமை தலை. (04) தமரின் தனிமை தலை.

தொடரமைப்பு: அமர் அகத்து ஆற்று ஆறுக்கும் கல்லா மா அன்னார் தமரின் தனிமை தலை.

இதன்பொருள்

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லா மா அன்னார் தமரின் = அமர் வாராத போதெல்லாம் தாங்குவது போன்று, வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போம் கல்வியிலலாத புரவிபோல்வாரது தமர்மையில்; தனிமை தலை = தனிமை சிறப்புடைத்து.

உரைவிளக்கம்

கல்லாமை- கதி ஐந்தும் சாரி பதினெட்டும் பொருமுரண் ஆறறலும் அறியாமை. துன்பம் வாராத முன்னெலலாம்

துணையாவார் போன்று வந்துழி விட்டுநீங்குவர் என்பது உவமையாற் பெற்றாம். அவல் தமரானால் வருமிறுதி தனியானால் வாராமையின், தனிமையைத் தலை என்றார். எனவே, அதுவும் தீதால் பெறுதும்.

# குறள் 815 (செய்தேமஞ் )

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை () செய்து ஏமம் சாராச் சிறியவர் புன் கேண்மை

யெய்தலி னெய்தாமை நன்று. (05) எய்தலின் எய்தாமை நன்று.

தொடரமைப்பு: செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை, எய்தலின் எய்தாமை நன்று.

இதன்பொருள்

செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை = செய்து வைத்தாலும் அரண்ஆகாத கீழ்மக்களது தீநட்பு; எய்தலின் எய்தாமை நன்று = ஒருவர்க்கு உண்டாதலின் இல்லையாதல் நன்று.

உரைவிளக்கம்

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அரணாகாமை - தொலைவின்கண் விட்டு நீங்குதல். எய்தலின் எய்தாமை நன்று என்பதற்கு மேல் உரைத்தாங்கு உரைக்க. சாராத என்னும் பெயரெச்சம் கேண்மை என்னும் பெயர் கொண்டது. சிறியவர் என்பதனைக் கொ◌ள்ளின், செய்து என்பது நின்று வற்றும்.

இவை இரண்டு பாட்டானும் தொலைவில் துணையாகாத நட்பின்தீமை கூறப்பட்டது.

# குறள் 816(பேதைபெருங் )

பேதை பெருங்கழீஇ நட்பி னறிவுடையா () பேதை பெரும் கெழீஇ நட்பின் அறிவுடையார்

ரேதின்மை கோடி யுறும். (06) ஏதின்மை கோடி உறும்.

தொடரமைப்பு: பேதை பெரும் கெழீஇ நட்பின் அறிவு உடையார் ஏதின்மை கோடி உறும். "

இதன்பொருள்

பேதை பெருங்கழீஇ நட்பின் = அறிவுஇலானது மிகச்செறி◌ந்த நட்பின்; அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் = அறிவுடையானது பகைமை கோடி மடங்கு நன்று.

உரைவிளக்கம்

கெழீஇய என்பதன் இறுதிநிலை விகாரத்தான் தொக்கது. பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான் பகைமை ஒருதீங்கும் பயவாமையானும், பேதை நட்பு எலலாத்தீங்கும் பயத்தாலானும், கோடியுறும் என்றார். பெருங்கழி நட்பென்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் 817 (நகைவகை )

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற் () நகை வகையர் ஆகிய நட்பின் பகைவரால்

பத்தடுத்த கோடி யுறும். (07) பத்து அடுத்த கோடி உறும்.

தொடரமைப்பு: நகை வகையர் ஆகியநட்பின் பகைவரால் பத்து அடுத்த கோடி உறும்.

இதன்பொருள்

நகை வகையர் ஆகிய நட்பின் = தாம் அறிதல் வகையர் ஆகாது, நகுதல் வகையர் ஆதற்கு ஏதுவாகிய நட்பான் வருவனவற்றின்; பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் = பகைவரான் வருவன பத்துக்கோடி மடங்கு நல்ல.

உரைவிளக்கம்

நட்பு ஆகுபெயர். அந்நட்பாவது, விடமரும் தூர்த்தரும், வேழம்பரும் போன்று பலவகையான் நகுவித்துத் தாம் பயன் கொண்டுஒழிவாரோடு உளதாயது. பகைவரால் என்பது அவாய்நிற்றலின், வருவன என்பது வருவிக்கப்பட்டது. பத்தடுதத கோடி பத்தாகத் தொகுத்த கோடி. அந்நட்பான் வரும் இன்பங்களின், அப்பகைவரான் வரும் துன்பங்கள் இறப்ப நல்ல என்பதாம். இதற்குப் பிறர் எல்லாம் சொல்லிலக்கணத்தோடு மாறுகொள உரைத்தார்.

# குறள் **818** (ஒல்லும்கரும )

ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை () ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை

சொல்லாடார் சோர விடல். (08) சொல் ஆடார் சோர விடல்.

தொடரமைப்பு: ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை,

சொல்லாடார் சோர விடல்.

இதன்பொருள்

ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை = தம்மான் முடியும் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட நட்பினை; சொல்லாடார் சோர விடல் = அது கண்டால், அவர் அறியச் சொல்லாதே சோரவிடுக.

உரைவிளக்கம்

முடியாதாக்குதல் - முடியாதாக நடித்தல். சோரவிடல் - விடுகின்றவாறு தோன்றாமல் ஒருகாலைக்குஒருகால் ஓயவிடுதல். அறியச்சொல்லினும், விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது பரிகரித்துப் பின்னும் நட்பாய் ஒழுகக் கருதுவராகலின், 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் முறையே பேதையார், நகுவிபபார், இயல்வது செய்யாதார் என்ற இவர்கள் நட்பின் தீமை கூறப்பட்டது.

# குறள் **819(**கனவினும் **)**

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு () கனவினும் இன்னாது மன்னோ வினை வேறு

சொல்வேறு பட்டார் தொடர்பு. (09) சொல் வேறு பட்டார் தொடர்பு.

தொடரமைப்பு: வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு, கனவினும் இன்னாது மன்னோ.

இதன்பொருள்

வினைவேறு சொல் வேறு பட்டார் தொடர்பு = வினையும் சொல்லும் ஒவ்வாது◌் வேறுவேறாய் இருப்பார் நட்பு; கனவினும் இன்னாது = நனவின்கண்ணே அன்றிக் கனவின் கண்ணும் இன்னாது.

உரைவிளக்கம்

வினை சொற்களது ஒவ்வாமை முதன்மேல் ஏற்றப்பட்டது. அஃதாவது, வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராய் இருத்தல். நிகழ்வின்கண் உளதாயிருத்தலால், கனவினும் இன்னாது என்றார். உம்மை எச்சவும்மை. இழிவுசிறப்பும்மையுமாம். மன்னும் ஒவும் அசைநிலை.

# குறள் **820** (எனைத்துங் )

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ () எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக் கெழீஇ

மன்றிற் பழிப்பார் தொடர்பு. (10) மன்றில் பழிப்பார் தொடர்பு.

தொடரமைப்பு: மனைக் கெழீஇ மன்றில் பழிப்பார் தொடர்பு, எனைத்தும் குறுகுதல் ஓம்பல்.

இதன்பொருள்

மனைக் கெழீஇ மன்றில் பழிப்பார் தொடர்பு = தனியே மனைக்கண் இருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்கண் இருந்துழிப் பழிகூறுவார் நட்பு; எனைத்தும் குறுகுதல் ஓம்பல் = சிறிதாயினும் தம்மை நணுகுதலைப் பரிகரிக்க.

உரைவிளக்கம்

மனைக்கண் கெழுமலும், மன்றின்கண் பழித்தலும் தீதாகலின்,

அவர் ஒருகாலும் தம்மை நணுகாவகை குறிக்கொண்டு காக்க என்பார், அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினார்.

இவை இரண்டுபாட்டானும் வஞ்சர்நட்பின் தீமை கூறப்பட்டது.

# **83.**கூடா நட்பு

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **83.** கூடாநட்பு

அதிகார முன்னுரை

இனை ஏனைக் கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது**,** பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடி ஒழுகுவார் நட்பு.

## குறள் **821 (**சீரிடங் **)**

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை () சீர் இடம் காணின் எறிதற்குப் பட்டடை

நேரா நிரந்தவர் நட்பு. (01) நேரா நிரந்தவர் நட்பு.

தொடரமைப்பு: நேரா நிரந்தவர் நட்பு சீரிடம்காணின் எறிதற்குப் பட்டடை.

இதன்பொருள்

நேரா நிரந்தவர் நட்பு= கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் கூடியொழுகுவார் நட்பு; சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை= அதுபெற்றால், அற எறிதற்குத் துணையாய பட்டடையாம்.

உரைவிளக்கம்

எறியும் இடம் வாராமுன் எல்லாம் தாங்குவது போன்றிருந்து, வந்துழி அற எறிவிப்பதாய பட்டடைக்கும் அத்தன்மைத்தாய நட்பிற்கும் தொழில் ஒப்புமையுண்மையான், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக உபசரித்தார். தீர்விடம் என்ற பாடம் ஓதி முடிவிடம் என்று உரைப்பாரும் உளர்.

# குறள் 822 (இனம்போன்றின )

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர் () இனம் போன்று இனம் அல்லார் கேண்மை மகளிர்

மனம்போல வேறு படும். (02) மனம் போல வேறு படும்.

தொடரமைப்பு: இனம் போன்று இனம் அல்லார் கேண்மை, மகளிர் மனம் போல வேறு படும்.

இதன்பொருள்

இனம்போன்று இனமலலார் கேண்மை= தமக்கு உற்றார் போன்று உறாதாரோடு உளதாய நட்பு; மகளிர் மனம்போல வேறுபடும்= இடம்பெற்றால் பெண்பாலார் மனம்போல வேறுபடும்.

உரைவிளக்கம்

அவர் மனம் வேறுபடுதல் "பெண்மனம் பேடின் றொருப்படுப் பேனென்னும்- எண்ணில் ஒருவன்" வளையாபதி என்பதனானும் அறிக. நட்பு வேறுபடுதலாவது, பழைய பகையேயாதல்.

இவை இரண்டு பாட்டானும் கூடாநட்பினது குற்றம் கூறப்பட்டது.

# குறள் **823** (பலநல்ல )

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல () பல நல்ல கற்றக் கடைத்தும் மன நல்லர்

ராகுதன் மாணார்க் கரிது. (03) ஆகுதல் மாணார்க்கு அரிது.

தொடரமைப்பு: நல்ல பல கற்றக் கடைத்தும், மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது.

இதன்பொருள்

நல்ல பல கற்றக் கடைத்தும்= நல்லன பலநூல்களைக் கற்றவிடத்தும்; மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது= அதனான் மனம்திருந்தி நட்பாதல் பகைவர்க்கு இல்லை.

உரைவிளக்கம்

நல்லன- மனக்குற்றம் கெடுப்பன. மனநல்லர் எனச் சினைவினை முதன்மேல் நின்றது. நல்லர் ஆகுதல்- செற்றம் விடுதல். உள்ளே

செற்றமுடையாரைக் கல்வியுடைமை பற்றி நட்பென்று என்று கருதற்க என்பதாம்.

## குறள் **824 (** முகத்தினி**)**

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா () முகத்தின் இனிய நகாஅ அகத்தின் இன்னா

வஞ்சரை யஞ்சப் படும். (04) வஞ்சரை அஞ்சப் படும்.

தொடரமைப்பு: முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை, அஞ்சப்படும்.

இதன்பொருள்

முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை= கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாராய வஞ்சரை; அஞ்சப்படும்= அஞ்சல் வேண்டும்.

உரைவிளக்கம்

நகையது வகை பற்றி 'இனிய'வென்றும், அகத்துச் செற்றம் நிகழவும், அதற்கு மறுதலையாய நகையைப் புறத்து விளைத்தலின் 'வஞ்சர்' என்றும், அச்செற்றம் குறிப்பறிதற் கருவியாய முகத்தானும் தோன்றாமையின், அஞ்சுதல் செய்யப்படும் என்றும் கூறினார்.

## குறள் **825 (**மனத்தினமை **)**

மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ் () மனத்தின் அமையாதவரை எனைத்து ஒன்றும்

சொல்லினாற் றேறற்பாற் றன்று. (05) சொல்லினால் தேறல் பாற்று அன்று.

தொடரமைப்பு: மனத்தின் அமையாதவரை, எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற்று அன்று.

இதன்பொருள்

மனத்தின் அமையாதவரை= மனத்தால் தம்மொடு மேவாதாரை; எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற்று அன்று= யாதொரு கருமத்தினும் சொல்லால் தெளிதல் முறைமைத்தன்று நீதிநூல்.

உரைவிளக்கம்

நீதிநூல் என்பது, அவாய்நிலையான் வந்தது. பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லைச் செவ்விய சொல் எனக்கருதி அவரைக் கருமங்களில் தெளிதல் நீதிநூல்முறைமை அன்று என்பதாம்.

# குறள் 826(நட்டார்போ )

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ () நட்டார் போல் நல்லவை சொல்லினும் ஒட்டார் சொல்

லொல்லை யுணரப் படும். (06) ஒல்லை உணரப் படும்.

தொடரமைப்பு: நட்டார் போல் நல்லவை சொல்லினும், ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும்.

இதன்பொருள்

நட்டார்போல் நல்லவை சொல்லினும்= நட்டார்போன்று நன்மை பயக்கும் சொற்களைச் சொன்னாராயினும்; ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும்= பகைவர் சொற்கள் அது பயவாமை அச்சொல்லிய பொழுதே அறியப்படும்.

உரைவிளக்கம்

'சொல்லினும்' எனவே, சொல்லாமையே பெற்றாம். 'ஒட்டார்' ஆதலால், தீமைபயத்தல் ஒருதலை என்பார், 'ஒல்லை உணரப்படும்' என்றார்.

# குறள் **827** **(**சொல்வணக்கம் **)**

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந் () சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில் வணக்கம்

தீங்கு குறித்தமை யான். (07) தீங்கு குறித்தமையான்.

தொடரமைப்பு: வில் வணக்கம் தீங்கு குறித்தமையான், ஒன்னார்கண் சொல் வணக்கம் கொள்ளற்க.

இதன்பொருள்

வில் வணக்கம் தீங்கு குறித்தமையான்= வில்லினது வணக்கம், ஏற்றவர்க்குத் தீமைசெய்தலைக் குறித்தமையால்; ஒன்னார்கண் சொல்வணக்கம் கொள்ளற்க= பகைவர் மாட்டுப் பிறக்கும் சொல்லினது வணக்கத்தையும், தமக்கு நன்மைசெய்தலைக் குறித்தது என்று கருதற்க.

உரைவிளக்கம்

தம் வணக்கம் என்பது தோன்றச் 'சொல்வணக்கம்' என்றும், வில்வணக்கம் வேறாயினும் வணங்குதல் ஒப்புமைபற்றி அதன்குறிப்பை ஏதுவாக்கியும் கூறினார். வில்லியது குறிப்பு அவனினாய வில்வணக்கத்தின் மேல்நிற்றலான், ஒன்னாரது குறி்ப்பும் அவரினாய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. இதுவும் தீங்குகுறித்தவணக்கம் என்றே கொண்டு அஞ்சிக் காக்க என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அவரைச் சொல்லால் தெளியற்க என்பது கூறப்பட்டது.

# குறள் **828** (தொழுதகை )

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா () தொழுத கை உள்ளும் படை ஒடுங்கும் ஒன்னார்

ரழுதகண் ணீரு மனைத்து. (08) அழுத கண்ணீரும் அனைத்து.

தொடரமைப்பு: ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும், அழுத கண்ணீரும் அனைத்து.

இதன்பொருள்

ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்= ஒன்னார் குறி்ப்பை உணரவல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்; அழுத கண்ணீரும் அனைத்து= அவர் அழுத கண்ணீரும் அவ்வாறே அதுமறைந்திருத்தற்கு இடனாம்.

உரைவிளக்கம்

தீநட்பென்பதனைத் தம் கையானும் கண்ணானும் தேற்றிப் பின்

கோறற்கு வாங்க இருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வுழித் தேற்றுகின்ற பொழுதே, அவற்றுள்ளே தோன்றும் என்பார், 'ஒடுங்கும்' என்றார். பகைவர் தம்மென்மை காட்டித் தொழினும் அழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்க என்பதாம்.

இதனால் அவரைச் செயலால் தெளியற்க என்பது கூறப்பட்டது.

## குறள் **829**(மிகச்செய்து )

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து () மிகச் செய்து தம் எள்ளுவாரை நகச் செய்து

நட்பினுட் சாப்புல்லற் பாற்று. (09) நட்பினுள் சாப் புல்லல் பாற்று.

தொடரமைப்பு: மிகச் செய்து தம் எள்ளுவாரை, நட்பினுள் நகச் செய்து சாப் புல்லற்பாற்று.

இதன்பொருள்

மிகச் செய்து தம் எள்ளுவாரை= பகைமை தோன்றாமல் புறத்தின்கண் நட்பினை மிகச்செய்து, அகத்தின்கண் தம்மை இகழும் பகைவரை; நட்பினுள் நகச்செய்து சாப் புல்லற்பாற்று= தாமும் அந்நட்பின்கண்ணே நின்று புறத்தின்கண் அவர்மகிழும் வண்ணம்செய்து, அகத்தின்கண் அது சாம்வண்ணம் பொருந்தற்பான்மையுடைத்து அரசநீதி.

உரைவிளக்கம்

நின்றென்பதூஉம், அரசநீதி என்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. அகன் ஒன்றாதல், பறன் ஒன்றாதல் ஒருவற்குத் தகாது எனினும், பகைவர்மாட்டாயின் தகும் என்பது நீதி நூல்துணிபு என்பர், அதன்மேல்வைத்துக் கூறினார். சாவ என்பதன்

இறுதிநிலை விகாரத்தான் தொக்கது. "கோட்டின் வாய்ச் சாக்குத்தி" (கலித்தொகை, முல்லை: 5) என்புழிப்போல. 'எள்ளுவாரைப் புல்லல்' எனக்கூட்டுக.

# குறள் 830 (பகைநட்பாங் )

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட் () பகை நட்பாம் காலம் வருங்கால் முகம் நட்டு

டகநட் பொரீஇ விடல். (10) அகம் நட்பு ஒரீஇ விடல்.

தொடரமைப்பு: பகை நட்பாம் காலம் வருங்கால், முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல்.

இதன்பொருள்

பகை நட்பாம் காலம் வருங்கால்= தம்பகைவர் தமக்கு நட்டாராய் ஒழுகுங்காலம் வந்தால்; முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல்= தாமும் அவரோடு முகத்தால் நட்புச்செய்து, அகத்தால் அதனைவிட்டுப் பின் அதுவும் தவிர்க.

உரைவிளக்கம்

அக்காலமாவது, தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்காலாகாத அளவு. இதனானே ஆமளவு எல்லாம் நீக்குக என்பது பெற்றாம்.

இவை இரண்டு பாட்டானும் அந்நட்பிடை ஒழுகுமாறு கூறப்பட்டது.

# **84.** பேதைமை.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **84.** பேதைமை

அதிகார முன்னுரை

இனி, அந்நட்பினை எதிர்மறுத்துப் பகைமுகத்தான் கூறியதொடங்கினார், அப்பகைதான் முற்றக்கடியும் குற்றம் அன்மையின் உளவாய வெகுளியானும், காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்து அதிகாரத்தானும், காமத்தான் வருவன ஐந்து அதிகாரத்தானும் கூறுவார், அதற்கு அடியாய மயக்கத்தை இருவகைப் படுத்து, இரண்டுஅதிகாரத்தான் கூறுவான் தொடங்கி, முதற்கண்

பேதைமை கூறுகின்றார். அஃதாவது, யாதும் அறியாமை.

## குறள் **831** (பேதைமையென் )

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண் () பேதைமை என்பது ஒன்று யாது எனின் ஏதம் கொண்டு

டூதியம் போக விடல். (01) ஊதியம் போக விடல்.

தொடரமைப்பு: பேதைமை என்பது ஒன்று, யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போக விடல்.

இதன்பொருள்

பேதைமை என்பது ஒன்று = பேதைமை என்று சொல்லப்படுவது ஒருவனுக்கு ஏனைக் குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதொன்று; யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போகவிடல்= அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடுபயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல்.

உரைவிளக்கம்

கேடு: வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம்: செல்வம், புகழ், அறங்கள். தானே தன்னிருமையும் கெடுத்துக்கோடல் என்பதாம்.

## குறள் **832** (பேதைமையுளெல் )

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை () பேதைமையுள்

எல்லாம் பேதைமை காதன்மை

கையல்ல தன்கட் செயல். (02) கையல்ல தன்கண் செயல்.

தொடரமைப்பு: பேதைமையுள் எல்லாம் பேதைமை கையல்ல தன்கண் காதன்மை செயல்.

இதன்பொருள்

பேதைமையுள் எல்லாம் பேதைமை= ஒருவனுக்குப் பேதைமை எல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது; கையல்லதன்கண் காதன்மை செயல்= தனக்கு ஆகாத ஒழுக்கத்தின்கண் காதன்மை செய்தல்.

உரைவிளக்கம்

இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தல் என்பதாம். இவை இரண்டு பாட்டானும் பேதைமையது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் 833 (நாணாமை )

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும் () நாணாமை நாடாமை நார் இன்மை யாது ஒன்றும்

பேணாமை பேதை தொழில். (03) பேணாமை பேதை தொழில்.

தொடரமைப்பு: நாணாமை நாடாமை நார் இன்மை யாது ஒன்றும் பேணாமை பேதை தொழில்.

இதன்பொருள்

நாணாமை= நாணவேண்டும் அவற்றுக்கு நாணாமையும்; நாடாமை= நாடவேண்டுமவற்றை நாடாமையும்; நார் இன்மை= யாவர்மாட்டும் முறிந்தசொல், செயல்உடைமையும்; யாதொன்றும் பேணாமை= பேணவேண்டுமவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும்; பேதை தொழில்= பேதையது தொழில்.

உரைவிளக்கம்

நாணவேண்டுமவை: பழி, பாவங்கள். நாடவேண்டுமவை: கருமங்களிற் செய்வன, தவிர்வன. முறிதல்:கண்ணறுதல். பேணவேண்டுமவை= குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலாயின. இவை பேதைக்கு எஞ்ஞான்றும் இயல்பாய் வருதலின் 'தொழில்' என்றார்.

## குறள் **834** (ஓதியுணர்ந்தும் )

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் () ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காப்

பேதையிற் பேதையா ரில். (04) பேதையின் பேதையார் இல்.

தொடரமைப்பு: ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காப் பேதையின் பேதையார் இல்.

இதன்பொருள்

ஓதி= மனமொழி மெய்கள் அடங்குவதற்கு ஏதுவாய நூல்களை ஓதியும்; உணர்ந்தும்= அவ்வடக்கத்தான் வரும் பயனை உணர்ந்தும்; பிறர்க்கு உரைத்தும்= அதனை அறியலுறப் பிறர்க்கு உரைத்தும்; தான் அடங்காப் பேதையின்= தான் அவையடங்கி

ஒழுகாத பேதை போல; பேதையார் இல்= பேதையார் உலகத்தில்லை

உரைவிளக்கம்

உம்மை முன்னும் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றால் தீராமையானும், வேற்று மருந்தின்மையானும் 'பேதையிற் பேதையார் இல்' என்றார். இவை இரண்டு பாட்டானும் பேதையது தொழில் பொதுவகையான் கூறப்பட்டது. இனி ் ச் சிறப்பு வகையாற் கூறுப.

## குறள் 835 (ஒருமைச் )

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந் () ஒருமைச் செயல் ஆற்றும் பேதை எழுமையும்

தான்புக் கழுந்து மளறு. (05) தான் புக்கு அழுந்தும் அளறு.

தொடரமைப்பு: பேதை எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு, ஒருமைச் செயல் ஆற்றும்.

இதன்பொருள்

பேதை= பேதையாயினான்; எழுமையும் தான்புக்கு அழுந்தும் அளறு= வரும் பிறவிகள் எல்லாம் தான் புக்கு அழுந்தும் நிரயத்தினை; ஒருமைச் செயல் ஆற்றும்= இவ்வொரு பிறப்புள்ளே செய்துகொள்ள வல்லனாம்.

உரைவிளக்கம்

எல்லாப் பிறப்பு ஏழாய் அடங்குதல் அறியப்பட்டமையின், முற்றும்மை கொடுத்தார். அழுந்துதற்கு இடனாய நிரயம்; ஈண்டைப் பிறப்புக்களினும் கொடுவினை வயத்தால் அந்நிரயத்

துன்பமே உழந்து வருதலின், 'எழுமையும் தான்புக்குஅழுந்தும் அளறு' என்றார்.முடிவில் காலம்எல்லாம் தான் நிரயத்துன்ப முடித்தற்கு ஏதுவாம் கொடுவினைகளையே அறிந்து சில காலத்துள்ளே செய்துகோடல் பிறர்க்கு அரிதாகலின், 'ஆற்றும்' என்றார். இதனான் அவன் மறுமைச் செயல் கூறப்பட்டது.

# குறள் **836 (**பொய்படு **)**

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப் **()** பொய்படும் ஒன்றோ புனை பூணு ் ம் கை அறியாப்

பேதை வினைமேற் கொளின். **(06)** பேதை வினை மேற்கொளின்.

தொடரமைப்பு: கை அறியாப் பேதை வினை மேற்கொளின், பொய்படும் ஒன்றோ புனை பூணும்.

இதன்பொருள்

கையறியாப் பேதை வினைமேற்கொளின்= செய்யும் முறைமை அறியாத பேதை ஒரு கருமத்தை மேற்கொள்வனாயின்; பொய்படும் ஒன்றோ புனை பூணும்= அதுவும் புரைபடும், தானும் தளை பூணும்.

உரைவிளக்கம்

புரைபடுதல்: பின் ஆகாவகை உள்ளழிதல். 'ஒன்றோ' என்பது எண்ணிடைச்சொல். அதனையும் கெடுத்துத் தானும் கெடும் என்பதாம். இதனான் அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது.

# குறள் 837 (ஏதிலாராரத் )

ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை () ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர் பேதை

பெருஞ்செல்வ முற்றக் கடை. (07) பெரும் செல்வம் உற்றக் கடை.

தொடரமைப்பு: பேதை பெருஞ்செல்வம் உற்றக் கடை, ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்.

இதன்பொருள்

பேதை பெரும் செல்வம் உற்றக்கடை= பேதையாயினான் பெரிய செல்வத்தைத் தெய்வத்தான் எய்தியவழி; ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்= தான்னோடு ஒரியையும் இல்லாதார் நிறைய, எல்லா இயையும் உடைய தமராயினார் பசியாநிற்பர்.

உரைவிளக்கம்

எல்லா நன்மையும் செய்துகோடற் கருவி என்பது தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றும், அதனைப் படைக்கும் ஆற்றல் இல்லாமை தோன்ற 'உற்றக்கடை' என்றும், எல்லாம் பெறுதல் தோன்ற 'ஆர' என்றும், உணவும் பெறாமை தோன்றப் 'பசிப்பர்' என்றும் கூறினார்.

# குறள் 838 (மையலொரு )

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன் () மையல் ஒருவன் களித்தற்றால் பேதை தன்

கையொன் றுடைமை பெறின். (08) கை ஒன்று உடைமை பெறின்.

தொடரமைப்பு: பேதை தன் கைஒன்று உடைமை பெறின், மையல் ஒருவன் களித்தற்றால்.

இதன்பொருள்

பேதை தன் கைஒன்று உடைமை பெறின்= பேதையாயினான், தன் கைக்கண்ணே ஒன்றனை உடைமையாகப் பெற்றானாயின்; மையல் ஒருவன் களித்தற்று= அவன் மயங்குதல், முன்னே பித்தினையுடையான் ஒருவன் அம்மயக்கத்தின் மேலே மதுவுண்டு மயங்கினாற் போலும்.

உரைவிளக்கம்

'பெறின்' எனவே, தெய்வத்தான்அன்றித் தன்னாற் பெறாமை பெற்றாம். பேதையும், செல்வக்களிப்பும் ஒருங்கு உடைமையால், அவன் செய்வன மையலும், மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோல் தலைதடுமாறும் என்பதாம். இவை இரண்டு பாட்டானும், அவன் செல்வம் எய்தியவழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது.

# குறள் **839**(பெரிதினிது )

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட் () பெரிது இனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்

பீழை தருவதொன் றில். (09) பீழை தருவது ஒன்று இல்.

‘’’தொடரமைப்பு:’’’ பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல், பேதையார் கேண்மை பெரிது இனிது.

இதன்பொருள்

பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல்= பின் பிரிவுவந்துழி, அஃது இருவர்க்கும் தருவதொரு துன்பமில்லை; பேதையார் கேண்மை பெரிது இனிது = ஆதலாற் பேதையாயினார் தம்முட் கொண்ட நட்பு மிகவினிது.

உரைவிளக்கம்

நாடோறும் தேய்ந்து வருதலின், துன்பம் தாராதாயிற்று. புகழ்வார் போன்று பழித்தவாறு. இதனால் அவரது நட்பின் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **840** (கழாஅக்கால் )

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர் () கழாஅக் கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்

குழாஅத்துப் பேதை புகல். (10) குழாஅத்துப் பேதை புகல்.

‘’’தொடரமைப்பு:’’’ சான்றோர் குழாஅத்துப் பேதை புகல், கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்று.

இதன்பொருள்

சான்றோர் குழாஅத்துப் பேதை புகல்= சான்றோர் அவையின்கண் பேதையாயினான் புகுதல்; கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்று= தூயவல்ல மிதித்த காலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற் போலும்.

உரைவிளக்கம்

கழுவாக்கால் என்பது இடக்கரடக்கு. அதனால் அவ்வமளியும் இழிக்கப்படுமாறு போல, இவனால் அவ்வவையும் இழிக்கப்படும் என்பதாம். இதனால் அவன் அவையிடை

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **85.** புல்லறிவாண்மை

அதிகார முன்னுரை

இனி, ஏனைப் புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லிய அறிவினை ஆடல்தன்மை என விரியும். அஃதாவது, தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொல் கொள்ளாமை.

## குறள் **841 (**அறிவின்மை **)**

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை ( ) அறிவு இன்மை இன்மையுள் இன்மை பிறிது இன்மை

யின்மையா வையா துலகு. (01) இன்மையா வையாது உலகு.

தொடரமைப்பு: இன்மையுள் இன்மை அறிவின்மை, பிறிது இன்மை இன்மையா வையாது உலகு.

இதன்பொருள்

இன்மையுள் இன்மை அறிவின்மை= ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இல்லாமையாவது, அறிவில்லாமை; பிறிதின்மை இன்மையா வையாது உலகு= மற்றைப் பொருள் இல்லாமையோவெனின், அதனை அப்பெற்றித்தாய இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார்.

உரைவிளக்கம்

'அறிவு' என்பது, ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின்மேல் நின்றது. புல்லறிவாளர் செல்வம் எய்தியவழியும் இம்மை மறுமைப் பயன் எய்தாமையின் அதனை 'இன்மையுள் இன்மை' என்றும், நல்லறிவாளர் வறுமையெய்திய வழியும், அஃது இழவாமையின் அதனை 'இன்மையா வையாது' என்றும் கூறினார். இதனால் புல்லறிவினது குற்றம் கூறப்பட்டது.

## குறள் **842** (அறிவிலான் )

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது ( ) அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் பிறிது யாதும்

மில்லை பெறுவான் றவம். (02) இல்லை பெறுவான் தவம்.

தொடரமைப்பு: அறிவு இலான் நெஞ்சு உவந்து ஈதல் பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை.

இதன்பொருள்

அறிவுடையான் நெஞ்சு உவந்து ஈதல்= புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனம் உவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின்; பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை= அதற்குக் காரணம் பெறுகின்றவன் நல்வினையே, வேறொன்றும் இல்லை.

உரை விளக்கம்

ஒரோவழி நெஞ்சு உவந்து ஈதல் கூடலின் புல்லறிவாளரும் நல்வினை செய்ப என்பார்க்குப் பெறுவான் வீழ்பொருள் எய்தியான் போல்வதல்லது, இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈகின்றார் அல்லர் எனக் கூறியவாறு. கூடிற்றாயின், அதற்குக் காரணம் என்னும் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. இதனால் அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தல் அறியாமை கூறப்பட்டது.

## குறள் **843** (அறிவிலார் )

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை ( ) அறிவு இலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை

செறுவார்க்குஞ் செய்த லரிது. (03) செறுவார்க்கும் செய்தல் அரிது.

தொடரமைப்பு: அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை, செறுவார்க்கும் செய்தல் அரிது.

இதன்பொருள்

அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை= புல்லறிவுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம்; செறுவார்க்கும் செய்தல் அரிது= அது செய்தற்கு உரியராய தம்பகைவர்க்கும் செய்தல் அரிது.

உரை விளக்கம்

பகைவர் தாம் அறிந்தது ஒன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவம் முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்யமாட்டாமையின், அவர்க்கும் 'செய்தல் அரிது' என்றார். இதனால், அவர் தம்மாட்டும் தீயன செய்தல் அறிவர் என்பது கூறப்பட்டது.

# குறள் **844** (வெண்மை )

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை ( ) வெண்மை எனப்படுவது யாது எனின் ஒண்மை

யுடையம்யா மென்னுஞ் செருக்கு. (04) உடையம் யாம் என்னும் செருக்கு.

தொடரமைப்பு: வெண்மை எனப்படுவது யாது எனின், யாம் ஒண்மை உடையம் எனும் செருக்கு.

இதன்பொருள்

வெண்மை எனப்படுவது யாது எனின்= புலலறிவுடைமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்;

யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு= அது தம்மைத்தாமே யாம் நல்லறிவுடையம் என்று நன்குமதிக்கும் மயக்கம்.

உரை விளக்கம்

வெண்மையாவது, அறிவு முதிராமை. ஒண்மையெனக் காரியப்பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தார் இகழ்தல் அறிந்து வைத்தும், அவ்வாறு மதித்தலான் மயக்கம் என்றார்.

# குறள் **845 (**கல்லாத **)**

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற **( )** கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடு அற

வல்லதூஉ மையந் தரும். (05) வல்லதூஉம் ஐயம் தரும்.

தொடரமைப்பு: கல்லாத மேற்கொண்டு ஒழுகல், கசடுஅற வல்லதூஉம் ஐயம் தரும்.

இதன்பொருள்

கல்லாத மேற்கொண்டு ஒழுகல்= புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல்; கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும்= கசடறக் கற்றதொரு நூலுண்டாயின், அதன்கண்ணும் பிறர்க்கு ஐயத்தை விளைக்கும்.

உரை விளக்கம்

'வல்லது' என ஏழாவது இறுதிக்கண் தொக்கது. உண்டாயின் என்பது அவாய்நிலையான் வந்தது. 'ஐயம்' அதுவல்லர் என்பதூஉம், இவ்வாறுகொல்லோ என்பது.

# குறள் **846 (**அற்றமறைத் **)**

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற் **( )** அற்றம் மறைத்தலோ புல் அறிவு தம் வயின்

குற்ற மறையா வழி. (06) குற்றம் மறையா வழி.

தொடரமைப்பு: தம் வயின் குற்றம் மறையா வழி, அற்றம் மறைத்தலோ புல் அறிவு

இதன்பொருள்

தம் வயின் குற்றம் மறையா வழி= புல்லறிவாளர் தம்கண் நிகழும் குற்றங்களை அறிந்து கடியாராயின்; அற்றம் மறைத்தலோ புல்லறிவு= ஆடையால் அற்றம் மறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம்.

உரை விளக்கம்

குற்றம் மறைத்தலாவது அவற்றை இலவாக்குதல். மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றனையே மறைத்து அவ்வளவான் தம்மையும் உலகஒழுக்கினராக மதித்தலும் புல்லறிவு என்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை வியத்தல் குற்றம் கூறப்பட்டது.

# குறள் 847 (அருமறை )

அருமறை சோரு மறிவிலான் செய்யும் ( ) அரு மறை சோரும் அறிவு இலான் செய்யும்

பெருமிறை தானே தனக்கு. (07) பெரும் மிறை தானே தனக்கு.

**தொடரமைப்பு:** அருமறை சோரும் அறிவு இலான் தானே தனக்குப் பெரும் மிறை செய்யும்.

இதன்பொருள்

அருமறை சோரும் அறிவிலான்= பெறுதற்குரிய உபதேசப்பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன்; தானே தனக்குப் பெருமிறை செய்யும்= அவ்வுறுதி அறியாமையான் தானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளும்.

உரை விளக்கம்

'சோரும்' என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. மிக்கவருத்தம் பொறுத்தற்கு அரிய துன்பங்கள். இனி 'அருமறை சோரும்' என்பதற்குப் பிறர் எல்லாம், உள்ளத்துஅடக்கப்படும் எண்ணத்தை வாய்சோர்ந்து பிறர்க்கு உரைக்கும் என்று உரைத்தார்; அது பேணாமை என்னும் பேதைமை ஆவதன்றிப் புல்லறிவாண்மை அன்மை அறிக.

# குறள் **848** (ஏவவுஞ் )

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர் ( ) ஏவவும் செய்கலான் தான் தேறான் அவ் உயிர்

போஒ மளவுமோர் நோய். (08) போஒம் அளவும் ஓர் நோய்.

தொடரமைப்பு: ஏவவும் செய்கலான், தான் தேறான், அவ்வுயிர் போஒம் அளவும் ஓர் நோய்.

இதன்பொருள்

ஏவவும் செய்கலான்= புல்லறிவாளன் தனக்கு உறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாநிற்கவும் செய்யான்; தான் தேறான்= அதுவன்றித் தானாகவும் இவை செய்வன என்று அறியான்; அவ்வுயி ◌ர் போஒம்அளவும் ஓர்நோய்= அவ்வுயிர் யாக்கையின் நீங்கும் அளவும் நிலத்திற்குப் பொறுத்தற்குஅரியதொரு நோயாம்.

உரை விளக்கம்

உயிர் தான் உணர்தல் தன்மைத்தாய் இருந்தும், நின்ற யாக்கை வயத்தான் மருடல் தன்மைத்தாய் வேறுபடுதலின், 'அவ்வுயி ◌ர்'

என்றும், அதனின் நீங்கியபொழுதே அதற்கு இரண்டனுள் ஒன்று கூடுதலின், 'போஒமளவும்' என்றும், குலமலை முதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ்செய்தலின் ஒரு 'நோய்' என்றும் கூறினார்.

# குறள் **849** **(**காணாதாற் **)**

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான் ( ) காணாதான் காட்டுவான் தான் காணான் காணாதான்

கண்டானாந் தான்கண்டா வாறு. (09) கண்டானாம் தான் கண்டவாறு.

தொடரமைப்பு**:** காணாதான் காட்டுவான் தான் காணான், காணாதான் தான் கண்டவாறு கண்டானாம்.

இதன்பொருள்

காணாதான் காட்டுவான் தான் காணான்= தன்னை எல்லாம் அறிந்தானாக மதித்தலான் பிறரால் ஒன்றுஅறியும் தன்மை இலாதானை, அறிவிக்கப்புகுவான் அவனால் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்; காணாதான் தான் கண்டவாறு கண்டானாம்= இனி அவ்வறியுந்தன்மை இல்லாதான், கொண்டது விடாமையான், தான் அறிந்தவாற்றால் அதனை அறிந்தானாய் முடியும்.

உரை விளக்கம்

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவதன்று என்பதாம்.

# குறள் 850 (உலகத்தார் )

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத் () உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் வையத்து

தலகையா வைக்கப் படும். () அலகையா வைக்கப் படும்.

தொடரமைப்பு: உலகத்தார் உண்டு என்பது இல் என்பான், வையத்து அலகையா வைக்கப்படும்.

இதன்பொருள்

உலகத்தார் உண்டு என்பது இல் என்பான்= உயர்ந்தோர் பலரும் உண்டு என்பதோர் பொருளைத் தன் புல்லறிவான் இல்லையென்று சொல்லுவான்; வையத்து அலகையா வைக்கப்படும்= மகன் என்று கருதப்படான், வையத்துக் காணப்படுவதோர் பேய் என்று கருதப்படும்.

உரை விளக்கம்

கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேனும், சாதிபற்றி உண்டென்பது என்றும், தானே வேண்டிய கூறலால் ஒப்பும், வடிவால் ஒவவாமையும் உடைமையின், தன் யாக்கை கரந்து மக்கள் யாக்கையுள் தோன்றுதல் வல்ல 'அலகை' என்றும் கூறினார்.

இவை நான்கு பாட்டானும் உறுதிச்சொல் கொள்ளாமையது குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **86.**இகல்

அதிகார முன்னுரை

இனி, அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத்து ஆகலின், அதனான் வருவன கூறுவான் தொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். அஃதாவதும, இருவர் தம்முள் பொருது வலிதொலைதற்கு ஏதுவாய மாறுபாடு.

## குறள் **851 (**இகலென்ப **)**

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும் ( ) இகல் என்ப எல்லா உயிர்க்கும் பகல் என்னும்

பண்பின்மை பாரிக்கு நோய். (01) பண்பு இன்மை பாரிக்கும் நோய்.

தொடரமைப்பு: எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய், இகல் என்ப.

இதன்பொருள்

எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய்= எல்லா உயிர்கட்கும், பிறஉயிர்களோடு கூடாமை என்னும் தீக்குணத்தை வளர்க்கும் குற்றம்; இகல் என்ப= இகல்என்று சொல்லுவர் நூலோர்.

உரைவிளக்கம்

மக்களையும், விலங்குகளோடு ஒப்பிப்பது என்பது தோன்ற 'எல்லாஉயிர்க்கும்' என்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலின் 'பகல் என்னும் பண்பின்மை' என்றும் கூறினார். நற்குணமின்மை அருத்தாபத்தியான் தீக்குணம் ஆயிற்று. இதனால் இகலது குற்றம் கூறப்பட்டது.

# குறள் 852 (பகல்கருதிப் )

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி ( ) பகல் கருதிப் பற்றா செயினும் இகல் கருதி

யின்னாசெய் யாமை தலை. (02) இன்னா செய்யாமை தலை.

தொடரமைப்பு: பகல் கருதிப் பற்றா செயினும், இகல் கருதி இன்னா செய்யாமை தலை.

இதன்பொருள்

பகல் கருதிப் பற்றா செயினும்= தம்மோடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும்; இகல் கருதி இன்ன

செய்யாமை தலை= அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தாம் அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமை உயர்ந்தது.

உரை விளக்கம்

செய்யின், பகைமை வளரத் தாம் தாழ்ந்துவரலானும், ஒழியின் அப் பற்றாதன தாமே ஓய்ந்துபோகத் தாம் ஓங்கிவரலானும் 'செய்யாமை தலை' என்றார். பற்றாத என்பது விகாரமாயிற்று.

## குறள் **853 (** இகலென்னு**)**

இகலென்னு மெவ்வநோய்நீக்கிற் றவலில்லாத் ( ) இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின் தவல் இல்லாத்

தாவில் விளக்கந் தரும். (03) தாவில் விளக்கம் தரும்.

தொடரமைப்பு: இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின், தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும்

இதன்பொருள்

இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின்= மாறுபாடு என்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யு நோயை ஒருவன் தன்மனத்தினின்று நீக்குமாயின்; தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும்= அவனுக்கு அந்நீக்குதல், எஞ்ஞான்றும் உளனாதற்கு ஏதுவாய புகழைக் கொடுக்கும்.

உரை விளக்கம்

தவல் இல்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. தாவில் விளக்கம் வெளிப்படை. யாவரு நண்பர்ஆவார், ஆகவே, எல்லாச் செல்வமும் எய்திக் கொடை முதலிய காரணங்களான் புகழ்பெறும் என்பதாம்.

# குறள் 854 ( இன்பத்துள்)

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந் ( ) இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல் என்னும்

துன்பத்துட் டுன்பங் கெடின். (04) துன்பத்துள் துன்பம் கெடின்.

தொடரமைப்பு: இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின், இன்பத்துள் இன்பம் பயக்கும்.

இதன்பொருள்

இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்= மாறுபாடு என்று சொல்லப்படுகின்ற துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க துன்பம் ஒருவனுக்கு இல்லையாயின்; இன்பத்துள் இன்பம் பயக்கும்= அவ்வின்மை அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க இன்பத்தினைக் கொடுக்கும்.

உரை விளக்கம்

'துன்பத்துட் துன்பம்': பலரொடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கும் எளியனாய் உறுவது. அதனை இடையின்றியே பயத்தலின், இகல் என்னும் என்றார். 'இன்பத்துள் இன்பம்': யாவரு நட்பாகலின் எல்லாப் பயனும் எய்தியுறுவது.

# குறள் 855 ( இகலெதிர்)

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே ( ) இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை யாரே

மிகலூக்குந் தன்மை யவர். (05) மிகல் ஊக்கும் தன்மையவர்.

‘’’தொடரமைப்பு:’’’ இகல் எதிர் சாய்ந்து ஒழுகவல்லாரை, மிகல் ஊக்கும் தன்மையவர் யார்.

இதன்பொருள்

இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை= தம்முள்ளது மாறுபாடு தோன்றியவழி அதனை ஏற்றுக்கொள்ளாது சாய்ந்து ஒழுகவல்லாரை; மிகல் ஊக்கும் தன்மையவர் யார்= வெல்லக் கருதும் தன்மயுடையார் யாவர்?

உரை விளக்கம்

இகலை ஒழிந்து ஒழுகல் வேந்தார்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின், வல்லாரை என்றும், யாவர்க்கும் நண்பர் ஆகலின், அவரை வெல்லக் கருதுவார் யாரும்இல்லை என்றும் கூறினார்.

இவை நான்கு பாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

# குறள் **856 (**இகலின் **)**

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை **( )** இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை

தவலுங் கெடலு நணித்து. (06) தவலும் கெடலும் நணித்து.

‘’’தொடரமைப்பு:’’’இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை, தவலும் கெடலும் நணித்து.

இதன்பொருள்

இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை= பிறரொடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச் செய்வானது உயிர்வாழ்க்கை; தவலும் கெடலும் நணித்து=

பிழைத்தலும் முற்றக்கெடுதலும் சிறிது பொழுதுள் உளவாம்.

உரை விளக்கம்

மிகுதல்: மேன்மேல் ஊக்குதல். இனிது என்பது, தான் வேறல் குறித்தல். பிழைத்தல்- வறுமையான் இன்னாதாதல். முற்றக்கெடுதல்- இறத்தல். இவற்றோடு நணித்து என்பதனைத் தனித்தனிக் கூட்டி உம்மைகளை எதிரதும் இறந்ததும் தழீஇய எச்சவும்மைகளாக உரைக்க. பொருட்கேடும், உயிர்க்கேடும் அப்பொழுதே உளவாம் என்பதாம்.

# குறள் **857** (மிகன்மேவன் )

மிகன்மேவன் மெய்ப்பொருள் காண ரிகன்மேவ ( ) மிகல் மேவல் மெய்ப் பொருள் காணார் இகல் மேவல்

லின்னா வறிவி னவர். (07) இன்னா அறிவினவர்.

‘’’தொடரமைப்பு:’’’இகல் மேவல் இன்னா அறிவினவர், மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார்

இதன்பொருள்

இகல் மேவல் இன்னா அறிவினவர்= இகலோடு மேவுதலையுடைய இன்னாத அறிவினை உடையார்; மிகல் மேவல் மெய்ப்பொரு்ள் காணார்= வெற்றி பொருந்தலையுடைய நீதிநூற் பொருளை அறியமாட்டார்.

உரை விளக்கம்

'இன்னாவறிவு', தமக்கும் பிறர்க்கும் தீங்கு பயக்கும் அறிவு. வெற்றிவழி நின்றார்க்கு உளதாவது, காணப்படும் பயத்ததாகலின் மெய்ந்நூல் எனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின், காணார்

என்றார்.

இவை இரண்டு பாட்டானும் இகலினார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

# குறள் **858 (**இகலிற் **)**

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை ( ) இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் அதனை

மிகலூக்கி னூக்குமாங் கேடு. (08) மிகல் ஊக்கின் ஊக்குமாம் கேடு.

'''தொடரமைப்பு:''' இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம், அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம்.

இதன்பொருள்

இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம்= தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி, அதனை எதிர்தலை ஒழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம்; அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம்= அது செய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயின், கேடும் தன்கண் வருதலை மேற்கொள்ளும்.

உரை விளக்கம்

எதிர்தல்: ஏற்றுக்கோடல். சாய்ந்தபொழுதே வருதலின், சாய்தல் ஆக்கம் என்றார். 'இகலிற்கு' எனவும், 'அதனை' எனவும் வந்தன வேற்றுமை மயக்கம்.

# குறள் **859 (**இகல்காணா **)**

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை ( ) இகல் காணான் ஆக்கம் வருங்கால் அதனை

மிகல்காணுங் கேடு தரற்கு. (09) மிகல் காணும் கேடு தரற்கு.

தொடரமைப்பு: ஆக்கம் வருங்கால் இகல் காணான், கேடு தரற்கு அதனை மிகல் காணும்.

இதன்பொருள்

ஆக்கம் வருங்கால் இகல் காணான்= ஒருவன் தன்கண் ஆக்கம் வரும்வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான்; கேடு தரற்கு அதனை மிகல் காணும்= தனக்குக் கேடு செய்துகோடற்கண் காரணம் இன்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும்.

உரை விளக்கம்

இகலான் வரும் கேடு பிறரான் அன்று என்பது தோன்றத் 'தரற்கு' என்றார். நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக் கேடுகட்கு முன் நடப்பன, இகலினது இன்மை, உண்மைகள் என்பதாம்.

# குறள் 860 (இகலானாம் )

இகலானா மின்னாத வெல்லா நகலானா () இகலான் ஆம் இன்னாத எல்லாம் நகலான் ஆம்

நன்னய மென்னுஞ் செருக்கு. () நல் நயம் என்னும் செருக்கு.

’’’தொடரமைப்பு:‘’’ இகலான் இன்னாத எல்லாம் ஆம், நகலான் நன்னயம் என்னும் செருக்கு ஆம்.

இதன்பொருள்

இகலான் இன்னாத எல்லாம் ஆம்= ஒருவனுக்கு மாறுபாடு ஒன்றானே இன்னாதன எல்லாம் உளவாம்; நகலான் நன்னயம் என்னும் செருக்கு ஆம்= நட்பு ஒன்றானே நல்லநீதி என்னும் பெருஞ்செல்வம் உளதாம்.

உரை விளக்கம்

'இன்னாத'ன: வறுமை, பழி, பாவம் முதலாயின. 'நகல்': மகிழ்தல். நகல் என்பதூஉம், செருக்கு என்பதூஉம் தத்தம் காரணங்கட்கு ஆயின. 'நயம் என்னும் செருக்'கெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

இவை மூன்று பாட்டானும் அவ்விருமையும் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **87.** பகை மாட்சி.

அதிகார முன்னுரை

அஃதாவது, அறிவின்மை முதலிய குற்றங்களுடைமையான் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் மேற் பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை, ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றார் ஆகலின், இஃது அதன் பின் வைக்கப்பட்டது.

## குறள் **861 (**வலியார்க்கு **)**

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா **( )** வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக ஓம்பா

மெலியார்மேன் மேக பகை. (01) மெலியார் மேல் மேக பகை.

தொடரமைப்பு: வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக, மெலியார்மேல் பகை ஓம்பா மேக.

இதன்பொருள்

வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக= தம்மின் வலியார்க்குப் பகையாய் எதிர்தலை ஒழிக; மெலியார் மேல் பகை ஓம்பா மேக= ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக.

உரைவிளக்கம்

வலியார் என்புழித் துணைவலியும் அடங்கலின், மெலியார் என்புழித் துணைவலி இன்மையும் கொள்ளப்படும். அத்துணைதான் படை பொருள் முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை, நீதிநூல் வழி ஒழுகல் முதலிய ஒற்றுமைத்துணையும் என இரண்டாம். அவ்விரண்டும் இல்லாரை வெல்வார்க்கு வலிதொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது.

சிங்க நோக்காகிய இதனுள் பகைமாட்சி பொதுவகையான் கூறப்பட்டது.

# குறள் 862 (அன்பிலனான்ற )

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா ( ) அன்பு இலன் ஆன்று துணை இலன் தான் துவ்வான்

னென்பரியு மேதிலான் றுப்பு. (02) என் பரியும் ஏதிலான் துப்பு.

தொடரமைப்பு: அன்பு இலன், ஆன்ற் துணையிலன், தான்துவ்வான், ஏதிலான் துப்பு என்பரியும்

இதன்பொருள்

அன்பு இலன்= ஒருவன் தன் சுற்றத்தின்மேல் அன்பிலன்; ஆன்ற துணையிலன்= அதுவேயன்றி வலிய துணையிலன்; தான் துவ்வான்= அதன்மேல் தான் வலியிலன்; ஏதிலான் துப்பு என் பரியும்= அப்பெற்றியான் மேல்வந்த பகைவன் வலியினை யாங்ஙனந் தொலைக்கும்?

உரை விளக்கம்

சுற்றமும் இருவகைத்துணையும், தன்வலியும் இலனாகலின், அவன்மேல் செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தோலையாது என்பதாம். துவ்வான்- துவ்வினைச் செய்யான்.

# குறள் 863 (அஞ்சுமறியான் )

அஞ்சு மறியா னமைவில னீகலான் ( ) அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான்

றஞ்ச மெளியன் பகைக்கு. (03) தஞ்சம் எளியன் பகைக்கு

தொடரமைப்பு: அஞ்சும், அறியான், அமைவிலன், ஈகலான், பகைக்குத் தஞ்சம் எளியன்

இதன்பொருள்

அஞ்சும்= ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும்; அறியான்= அறியவேண்டுமவற்றை அறியான்; அமைவு இலன்= பிறரோடு பொருத்தமிலன்; ஈகலான்= இவற்றின்மேலும், யாவர்மாட்டும் இவறன் மாலையன்; பகைக்குத் தஞ்சம் எளியன்= இப்பெற்றியான் பகைவர்க்கு மிகவெளியன்.

உரை விளக்கம்

தஞ்சம் எளியன் என்பன ஒருபொருட்பன்மொழி. இந்நான்கு குற்றமும் உடையான் பகையின்றியும் அழியும் ஆகலின், தஞ்சம் எளியன் என்றார்.

## குறள் **864 (**நீங்கான் **)**

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும் ( ) நீங்கான் வெகுளி நிறை இலன் எஞ்ஞான்றும்

யாங்கணும் யார்க்கு மெளிது. (04) யாங்கணும் யார்க்கும் எளிது.

தொடரமைப்பு: வெகுளி நீங்கான், நிறை இலன், எஞ்ஞான்றும் யார்க்கும் எளிது

இதன்பொருள்

வெகுளி நீங்கான்= ஒருவன் வெகுளியின் நீங்கான்; நிறை இலன்= அதுவேயன்றித் தான் நிறையுடையன் அல்லன்; எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது= அவன்மேற்சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கும் எளிது.

உரை விளக்கம்

நிறை- மறைபிறர் அறியாமை (கலித்தொகை, நெய்தற்கலி: 16); வெகுடன்மாலையன் ஆகலானும், மறை வெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும்ம இடனும் வலியும் அறிந்து சேறல் வேண்டாதாயிற்று. இனி, இனிதென்று பாடம் ஓதி அவன் பகைமை இனிது என்று உரைப்பாரும் உளர்.

## குறள் **865 (**வழிநோக்கான் **)**

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான் ( ) வழி நோக்கான் வாய்ப்பன செய்யான் பழி நோக்கான்

பண்பிலன் பற்றார்க் கினிது. (05) பண்பு இலான் பற்றார்க்கு இனிது.

தொடரமைப்பு: வழி நோக்கான், வாய்ப்பன செய்யான், பழிநோக்கான், பண்பு இலன், பற்றார்க்கு இனிது.

இதன்பொருள்

வழி நோக்கான்= ஒருவன் நீதிநூலை ஓதான்; வாய்ப்பன செய்யான்= அது விதித்த தொழில்களைச் செய்யான்; பழிநோக்கான்= தனக்கு வரும் பழியைப் பாரான்; பண்பு இலன்= தான் பண்புடையன் அல்லன்; பற்றார்க்கு இனிது= அவன் பகைவர்க்கு அப்பகைமை இனிது.

உரை விளக்கம்

தொல்லோர் அடிப்பட வழங்கி வந்தது ஆகலின் வழியென்றும், தப்பாது பயன்படுதலின் வாய்ப்பன என்றும், இக்குற்றங்கள் உடையான் தானே அழிதலின் பற்றார்க்கு இனிது என்றும் கூறினார்.

# குறள் **866** (காணாச் )

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான் ( ) காணாச் சினத்தான் கழி பெரும் காமத்தான்

பேணாமை பேணப் படும். (06) பேணாமை பேணப் படும்.

தொடரமைப்பு: காணாச் சினத்தான், கழி பெரும் காமத்தான், பேணாமை பேணப்படும்.

இதன்பொருள்

காணாச் சினத்தான்= தன்னையும் பிறரையும் தான் அறியாமைக்கு ஏதுவாகிய வெகுளியை உடையான் யாவன்; கழிபெருங் காமத்தான்= மேன்மேல் வளராநின்ற மிக்க காமத்தை உடையவன் யாவன்; பேணாமை பேணப்படும்= அவரது பகைமை விரும்பிக் கொள்ளப்படும்.

உரை விளக்கம்

காணாத சினம் என்பது விகாரமாயிற்று. முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனோனுக்குக் காரியந் தோன்றாமையானும், தாமே அழிவர் என்பது பற்றி, இவர் பேணாமை பேணப்படும் என்றார்.

# குறள் **867** (கொடுத்துங் )

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து ( ) கொடுத்தும் கொளல் வேண்டும் மன்ற அடுத்து இருந்து

மாணாத செய்வான் பகை. (07) மாணாத செய்வான் பகை.

தொடரமைப்பு: அடுத்து இருந்து மாணாத செய்வான் பகை, கொடுத்தும் கொளல் மன்ற வேண்டும்

இதன்பொருள்

அடுத்து இருந்து மாணாத செய்வான் பகை= வினையைத் தொடங்கியிருந்து அதற்கு ஏலாதன செய்வான் பகைமையை; கொடுத்தும் கொளல் மன்ற வேண்டும்= சில பொருள் அழியக் கொடுத்தாயினும் கோடல் ஒருதலையாக வேண்டும்.

உரை விளக்கம்

ஏலாதன மெலியனாய் வைத்துத் துணிதலும், வலியனாய் வைத்துத் தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனாற் சில பொருள் அழியினும் பின் பல பொருள் எய்தற்கு ஐயமின்மையின், கொளல் வேண்டுமென்ற என்றார்.

இவை ஆறுபாட்டானும் அது சிறப்புவகையாற் கூறப்பட்டது.

## குறள் 868 (குணனிலனாய்க் )

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க் ( ) குணன் இலனாய்க் குற்றம் பல ஆயின் மாற்றார்க்கு

கினனிலனா மேமாப் புடைத்து. (08) இனன் இலனாம் ஏமாப்பு உடைத்து.

தொடரமைப்பு: குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் இனன் இலனாம், மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து.

இதன்பொருள்

குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் இனன் இலனாம்= ஒருவன் குணன் ஒன்றும் இலனாய் உடைய குற்றம் பலவாய வழி, அவன் துணையிலனாம்; மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து= அவ்விலனாதல் தானே அவன்பகைவர்க்குத் துணையாதலை உடைத்து.

உரை விளக்கம்

குணம்- இறைமாட்சியுட் சொல்லியன. குற்றம்- இவ்வதிகாரத்துச் சொல்லியனவும், மற்றும் அத்தன்மையனவும். துணை- சுற்றம், நட்பு, பொருள், படை முதலாயின. பகைவர்க்கு இவற்றான் உளதாம் பயன் தானே உளதாம் ஆகலின், ஏமாப்புடைத்து

என்றார். இலனாய் என்னும் செய்து என்எச்சம் உடையவென வந்த பெயரெச்சக்குறிப்புக் கொண்டது.

## குறள் **869** (செறுவார்க்குச் )

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா ( ) செறுவார்க்குச் சேண் இகவா இன்பம் அறிவு இலா

வஞ்சும் பகைவர்ப் பெறின். (09) அஞ்சும் பகைவர்ப் பெறின்.

தொடரமைப்பு: அறிவு இலா அஞ்சும் பகைவர்ப்பெறின், செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா

இதன்பொருள்

அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின்= நீதியை அறிதல் இல்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால்; செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா= அவரைச் செறுவார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா.

உரை விளக்கம்

உபாயம் அறிதலும், அறிந்தாற் செய்துமுடிக்குந் திண்மையும் இல்லாதாரே பகைவராதல் கூடாமையிற் பெறின் என்றும், அவரை யறிந்து மேற்சென்ற பொழுதே பகையின்மையும் செல்வமும் ஒருங்கே எய்தலின் சேணுடையின்பங்கள் இகவா என்றும் கூறினார்.

## குறள் **870** (கல்லான் )

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று () கல்லான் எஞ்ஞான்றும் சிறுபொருள் எஞ்ஞான்றும்

மொல்லானை ஒல்லா தொளி. (10) ஒல்லானை ஒல்லாது ஒளி.

தொடரமைப்பு: கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை, எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது.

இதன்பொருள்

கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை= நீதிநூலைக் கல்லாதானொடு பகைததலான் வரும் எளியபொருளை மேவாதானை; எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது= எஞ்ஞான்றும் புகழ் மேவாது.

உரை விளக்கம்

சிறுபொருள்- முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும், அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாது என்பதாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயன் எய்தக என்றவாறாயிற்று. இதற்குப் பிறர் எல்லாம் அதிகாரத்தோடு மாறாதன்மேலும், ஓர் பொருட்டொடர்பு படாமல் உரைத்தார்.

இவை மூன்றுபாட்டானும் அதனினாய பயன் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **88.**பகைத் திறம் தெரிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, மாணாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகிநின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற் பாலதும்,,, அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கட் செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற்படுமிழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். இரட்டுறமொழிதலென்பதனாற் பகையதுதிறமும், பகையிடத்தாக்குந் திறமுமென விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணாப் பகையவாகலின், இது பகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **871 (** பகையென்னும்**)**

பகையென்னும் பண்பி லதனை யொருவ ( ) பகை என்னும் பண்பு இலதனை ஒருவன்

னகையேயும் வேண்டற்பாற் றன்று. (01) நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

தொடரமைப்பு: பகை என்னும் பண்பு இலதனை, ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

இதன்பொருள்

பகை என்னும் பண்புஇலதனை= பகை என்று சொல்லப்படும் தீமை பயப்பதனை; ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று= ஒருவன் விளையாட்டின்கண்ணே ஆயினும் விரும்புதல் இயற்கைத்தன்று நீதிநூல்.

உரைவிளக்கம்

மாணாத பகையை ஆக்கிக் கோடல் எவ்வாற்றானும் தீமையே பயத்தலின், 'பண்பிலது' என்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினும் செற்றமே விளைந்து மெய்யாம் ஆகலின், 'நகையேயும்' என்றும், வேண்டாமை தொல்லையோரது துணிவென்பார் நீதிநூன் மேல் வைத்தும் கூறினார். அப்பெயர் அவாய்நிலையான் வந்தது.

# குறள் **872** (வில்லேருழவர் )

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க ( ) வில் ஏர் உழவர் பகை கொளினும் கொள்ளற்க

சொல்லே ருழவர் பகை. (02) சொல் ஏர் உழவர் பகை.

தொடரமைப்பு: வில் ஏர் உழவர் பகை கொளினும், சொல்

ஏர் உழவர் பகை கொள்ளற்க.

இதன்பொருள்

வில்ஏர் உழவர் பகைகொளினும்= ஒருவன் வில்லை ஏராக உடைய உழவரோடு பகைகொண்டான் ஆயினும்; சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க= சொல்லை ஏராக உடைய உழவரோடு பகை கொள்ளாது ஒழிக.

உரை விளக்கம்

'சொல்' ஆகுபெயரான் நீதிநூல் மேல் நின்றது. வீரம், சூழ்ச்சி என்னும் ஆற்றல்களுள் வீரமே உடையாரோடு பகை கொண்டாற் கேடுவருவது ஒருதலையன்று, வந்ததாயினும் தனக்கேயாம்; ஏனைச் சூழ்ச்சியுடையோராயில், தன்வழியின் உள்ளார்க்கும் தப்பாது வருதலின், அது கொள்ளினும் இதுகொள்ளற்க என்றார். உம்மையான் அதுவும் ஆகாமை பெறுதும். இரண்டும் உடையாரோடு கொள்ளல் ஆகாமை சொல்லவேண்டாவாயிற்று. உருவக விசேடம்.

# குறள் **873 (**ஏமுற்றவரினு **)**

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப் ( ) ஏமுற்றவரினும் ஏழை தமியனாய்ப்

பல்லார் பகைகொள் பவன். (03) பல்லார் பகை கொள்பவன்.

தொடரமைப்பு: தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவன், ஏமுற்றவரினும் ஏழை.

இதன்பொருள்

தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவன்= தான் தனியனாய்

வைத்துப் பலரோடு பகை கொள்பவன்; ஏமுற்றவரினும் ஏழை= பித்துற்றாரினும் ஏழை.

உரை விளக்கம்

தனிமை: சுற்றம் நட்புப் படை முதலிய இன்மை. மயக்கத்தால் ஒப்பாராயினும், ஏமுற்றவர் அதனால் தீங்கு எய்தாமையின், தீங்கெய்துதலும் உடைய இவனை, 'அவரினும் ஏழை' என்றார். தீங்காவது, துணையுள்வழியும் வேறல் ஐயமாயிருக்க, அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறுவேறு பொருதற்கண்ணும், ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தே விடுதல்.

இவை மூன்று பாட்டானும் பகைகோடற்குற்றம் பொதுவினும் சிறப்பினும் கூறப்பட்டது.

# குறள் **874** (பகைநட்பாக் )

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன் ( ) பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன்

றகைமைக்கட் டங்கிற் றுலகு. (04) தகைமைக்கண் தங்கிற்று உலகு.

தொடரமைப்பு:பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண், தங்கிற்று உலகு.

இதன்பொருள்

பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண்= வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாச்செய்துகொண்டு ஒழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே; தங்கிற்று உலகு= அடங்கிற்று இவ்வுலகு.

உரை விளக்கம்

வேண்டிய வழி என்பது, ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல்= பகைநிலைமையின் நீக்குதல். ஒழுகல்- நீதிவழி ஒழுகல். பெருமை: பொருள், படை என இருவகைத்தாய் ஆற்றல். அதன்வழித்தாதற்கு எஞ்ஞான்றும் திரிபின்மையின், அத்துணிவு பற்றித் 'தங்கிற்று' என்றார்.

## குறள் **875** (தன்றுணையின் )

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவன் (05) தன் துணை இன்று ஆல், பகை இரண்டு ஆல் தான் ஒருவன்

னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. (05) இன் துணையாக் கொள்க அவற்றின் ஒன்று.

தொடரமைப்பு: தன் துணை இன்றால், பகை இரண்டால்,ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன் துணையாக் கொள்க.

இதன்பொருள்

தன்துணை இன்றால்= தனக்கு உதவும் துணையோவெனின் இல்லை; பகை இரண்டால்= நலிவு செய்யும் பகையோவெனின் இரண்டு; ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன்றுணையாக் கொள்க= அங்ஙனமாய் நின்றவழி, ஒருவனாகிய தான், அப்பகை இரண்டனுள் பொருந்தியது ஒன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்து கொள்க.

உரை விளக்கம்

பொருந்தியது: ஏனையதனை வேறற்கு ஏற்றது. அபபொழுது:

அவ்வெல்லும் பொழுது. திரிபின்றாகச் செய்துகொள்க என்பார், 'இன்றுணையா' என்றார். 'ஆல்'கள் அசை.

இவை இரண்டு பாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது.

# குறள் **876** (தேறினுந் )

தேறினுந் தேறா விடினு மழிவின்கட் ( ) தேறினும் தேறா விடினும் அழிவின்கண்

டேறான் பகாஅன் விடல். (06) தேறான் பகாஅன் விடல்.

தொடரமைப்பு:தேறினும் தேறாவிடினும், அழிவின்கண் தேறான் பகாஅன் விடல்.

இதன்பொருள்

தேறினும் தேறாவிடினும்= பகைவனை முன் தெளி்ந்தான் ஆயினும் தெளிந்திலன் ஆயினும்; அழிவின்கண் தேறான் பகாஅன் விடல்= தனக்குப் புறத்தொரு வினையால் தாழ்வு வந்துழிக் கூடாது நீங்காது இடையே விட்டுவைக்க.

உரை விளக்கம்

முன் தெளிந்தான் ஆயினும், அப்பொழுது கூடாது ஒழிக என்றது, உள்ளாய் நின்று கெடுத்தல்நோக்கி. தெளிந்திலன் ஆயினும், அப்பொழுது நீங்காது ஒழிக என்றது, அவ்வழிவிற்குத் துணையாதல் நோக்கி. இதனான் நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது.

# குறள் **877** (நோவற்க )

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க ( ) நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க

மேன்மை பகைவ ரகத்து. (07) மென்மை பகைவர் அகத்து.

தொடரமைப்பு:நொந்தது அறியார்க்கு நோவற்க, மென்மை பகைவர்அகத்து மேவற்க.

இதன்பொருள்

நொந்தது அறியார்க்கு நோவற்க= நொந்ததனைத் தாமா அறியாத நட்டார்க்குத் தன்நோவு சொல்லற்க; மென்மை பகைவரகத்து மேவற்க= வலியின்மை பார்த்திருக்கும் பகைவர் மாட்டு அவ்வலியின்மையை மேலிட்டுக் கொள்ளற்க.

உரை விளக்கம்

'நோவு' என்னும் முதனிலைத் தொழிற்பெயர், ஈண்டு அது சொல்லுதற்கண் ஆயிற்று. பகைவர்கண் தவிர்வது கூறுவார், நட்டார்கண் தவிர்வதும் உடன் கூறினார். இதனால் அவ்விரு பகுதிக்கண்ணும் செய்வது கூறப்பட்டது.

# குறள் 878 (வகையறிந்து )

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும் ( ) வகை அறிந்து தன் காப்ப மாயும்

பகைவர்கட் பட்ட செருக்கு. (08) பகைவர்கண் பட்ட செருக்கு.

தொடரமைப்பு: வகை அறிந்து தற்காப்ப, பகைவர்கண் பட்ட செருக்கு மாயும்.

இதன்பொருள்

வகை அறிந்து தற்காப்ப= தான் வினைசெய்யும் வகையை அறிந்து, அது முடிதற்கேற்பத் தன்னைப் பெருக்கி மறவி புகாமல் தன்னைக் காக்கவே; பகைவர்கண் பட்ட செருக்கு மாயும்= தன் பகைவர் மாட்டு உளதாய களிப்புக் கெடும்.

உரை விளக்கம்

வகை: வலியனாய்த் தான் எதிரே பொருமாறும், மெலியனாயவளவிற் போர் விலக்குமாறும் முதலாயின. பெருக்கல்: பொருள் படைகளால் பெருகச்செய்தல். களிப்பு: இவற்றான் வேறும் என்று எண்ணி மகிழ்ந்திருத்தல். இவ்விறுகுதல் அறிந்து தாமே அடங்குவர் என்பதாம்.

இதனாற் களைதற்பாலதன்கண் செய்வன கூறப்பட்டது.

# குறள் **879 (**இளைதாக **)**

இளைதாக முள்மரம் கொல்க களையுநர் **( )** இளைதாக முள் மரம் கொல்க களையுநர்

கைகொல்லுங் காழ்த்த விடத்து. **(09)** கை கொல்லும் காழ்த்த இடத்து.

தொடரமைப்பு**:** முள் மரம் இளைதாகக் கொல்க, காழ்த்த இடத்து களையுநர் கைகொல்லும்.

இதன்பொருள்

முள் மரம் இளைதாகக் கொல்க= களைய வேண்டுவதாய முள்மரத்தை இளைதாய நிலைமைக்கண் களைக; காழ்த்தவிடத்துக் களையுநர் கைகொல்லும்= அன்றியே முதிர்ந்த நிலைமைக்கண் களையலுறின் களைவார் கையினை அதுதான்

களையும்.

உரை விளக்கம்

களையப்படுவதாய தம் பகையை அது மெலிதாய காலத்தே களைக, அன்றியே வலிதாய கால்த்துக் களையலுறின் தம்மை அதுதான் களையும் என்பது தோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதல்.

இதனாற் களையும் பருவம் கூறப்பட்டது.

# குறள் 880 (உயி ர்ப்ப )

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர் () உயிர்ப்ப உளர் அல்லர் மன்ற செயிர்ப்பவர்

செம்மல் சிதைக்கலா தார். (10) செம்மல் சிதைக்கலாதார்.

தொடரமைப்பு: செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார், உயிர்ப்ப உளரல்லர் மன்ற.

இதன்பொருள்

செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார்= தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியான் அது செய்யாத அரசர்; உயிர்ப்ப உளரல்லர் மன்ற= பின் உயிர்க்கு மாத்திரத்திற்கும் உளரல்லர் ஒருதலையாக.

உரை விளக்கம்

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒருதலையாகலின், இறந்தாரே ஆவர் என்பதாம். அவருயிர்த்த துணையானே தாமிறப்பர் எனினும் அமையும்.

இதனாற் களையாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **89.**உட்பகை

அதிகார முன்னுரை

அஃதாவது, புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லுந் துணையும் உள்ளாய்நிற்கும் பகை. இதுவும் களையப்படுவதன் பாலதாகலின், 'பகைத்திறந்தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **881 (**நிழனீரு **)**

நிழனீரு மி்ன்னாத வின்ன தமர்நீரு ( ) நிழல் நீரும் இன்னாத இன்னா தமர் நீரும்

மி்ன்னாவா மி்ன்னா செயின். (01) இன்னாவாம் இன்னா செயின் இன்னாவாம்.

தொடரமைப்பு: நிழல் நீரும் இன்னாத இன்னா, தமர் நீரும் இன்னாசெயின் இன்னாவாம்.

இதன்பொருள்

நிழல் நீரும் இன்னாத இன்னா= ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய்செய்வன இன்னாவாம்; தமர் நீரும் இன்னாசெயின் இன்னாவாம்= அதுபோலத் தழுவவேண்டுனவாய தமர் இயல்புகளும், முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம்.

உரைவிளக்கம்

நோய்: பெருங்கால் பெருவயிறு முதலாயின. தமர் என்றதனால், உட்பகையாதற்கு உரியராய ஞாதியர் என்பது அறிக. இன்னாசெயல்: முன் வெளிப்படாமை நின்று துணைபெற்றவழிக் கெடுத்தல்.

## குறள் **882** (வாள்போல் )

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக ( ) வாள் போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக

கேள்போல் பகைவர் தொடர்பு. (02) கேள் போல் பகைவர் தொடர்பு.

தொடரமைப்பு: வாள்போல் பகைவரை அஞ்சற்க, கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக.

இதன்பொருள்

வாள்போல் பகைவரை அஞ்சற்க= வாள் போல எறிதும் என்று வெளிப்பட்டு நிற்கும் பகைவர் பகையினை அஞ்சாது ஒழிக;

கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக= அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக.

உரை விளக்கம்

'பகைவர்' ஆகுபெயர். முன்னே அறிந்து காக்கப்படுதலான், 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும் படாமையிற் கெடுதல் ஒருதலை என்பதுபற்றி 'அஞ்சுக' என்றும் கூறினார். பின்செய்யும் பகையினும் கொடிதாகலானும், காக்கல் ஆகாதது ஆகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர் தொடர்பு ஆயிற்று.

இவை இரண்டு பாட்டானும் உட்பகை ஆகாது என்பது பெறப்பட்டது.

# குறள் **883** (உட்பகையஞ்சித் )

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து ( ) உள்பகை அஞ்சித் தன் காக்க உலைவு இடத்து

மட்பகையின் மாணத் தெறும். (03) மண் பகையின் மாணத் தெறும்.

தொடரமைப்பு: உட்பகை அஞ்சித் தற்காக்க, உலைவிடத்து மட்பகையின் மாணத் தெறும்.

இதன்பொருள்

உட்பகை அஞ்சித் தற்காக்க= உட்பகை யாயினாரை அஞ்சித் தன்னைக் காத்துக்கொண்டு ஒழுகுக; உலைவிடத்து மட்பகையின் மாணத் தெறும்= அங்ஙனம் ஒழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சி

வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவிபோல அவர் தப்பாமற் கெடுப்பர்.

உரை விளக்கம்

'கா'த்தல்: அவர் அணையாமலும், அவர்க்கு உடம்படாமலும் பரிகரித்தல். பகுக்கும் கருவி 'மட்பகை' எனப்பட்டது. பகைமை தோன்றாமல், உள்ளேயிருந்தே கீழறுத்தலின், கெடுதல் தப்பாது என்பதாம்.

## குறள் 884 ( மனமாணா)

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா ( ) மனம் மாணா உட்பகை தோன்றின் இனம் மாணா

வேதம் பலவுந் தரும். (04) ஏதம் பலவும் தரும்.

தொடரமைப்பு:மனம் மாணா உட்பகை தோன்றின், இனம் மாணா ஏதம் பலவும் தரும்.

இதன்பொருள்

மனம் மாணா உட்பகை தோன்றின்=புறம் திருந்தியது போன்று அகம் திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின்; இனம் மாணா ஏதம் பலவும் தரும்= அஃது அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக்கு ஏதுவாகிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

உரை விளக்கம்

அவை சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவழித் தான் தேறாமையும், பின் அவற்றான் விளைவனவும் ஆம்.

# குறள் 885 (உறன்முறை )

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா ( ) உறல் முறையான் உட்பகை தோன்றின் இறல் முறையான்

னேதம் பலவுந் தரும். (05) ஏதம் பலவும் தரும்.

தொடரமைப்பு: உறல் முறையான் உட்பகை தோன்றின், இறல் முறையான் ஏதம் பலவும் தரும்.

இதன்பொருள்

உறல்முறையான் உட்பகை தோன்றின்= புறத்து உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின்; இறல் முறையான் ஏதம் பலவும் தரும்= அஃது அவனுக்கு இறத்தன் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

உரை விளக்கம்

அவை புறப்பகைத் துணையாய் நின்றே அது தோன்றாமல் கோறன் முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின.

# குறள் 886 (ஒன்றாமை )

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும் ( ) ஒன்றாமை ஒன்றியார் கண் படின் எஞ்ஞான்றும்

பொன்றாமை யொன்ற லரிது. (06) பொன்றாமை ஒன்றல் அரிது.

தொடரமைப்பு: ஒன்றாமை ஒன்றியார்கண் படின், பொன்றாமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது.

இதன்பொருள்

ஒன்றாமை ஒன்றியார்கண் படின்= பகைமை தனக்குள்ளாயினார் மாட்டே பிறக்குமாயின்; பொன்றாமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது= அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்றும் அரிது.

உரை விளக்கம்

பொருள் படை முதலிய உறுப்புக்களாற் பெரியனாய காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார்.

இவை நான்குபாட்டானும் அதனால் தனக்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

# குறள் 887 (செப்பின் )

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே ( ) செப்பின் புணர்ச்சி போல் கூடினும் கூடாதே

யுட்பகை யுற்ற குடி. (07) உட்பகை உற்ற குடி.

தொடரமைப்பு: செப்பின் புணர்ச்சிபோல் கூடினும், உட்பகை உற்ற குடி கூடாது.

இதன்பொருள்

செப்பின் புணர்ச்சி போல் கூடினும்= செப்பினது புணர்ச்சிபோலப் புறத்து வேற்றுமைதெரியாமற் கூடினாராயினும்; உட்பகை உற்ற குடி கூடாது= உட்பகை உண்டாய குடியில் உள்ளார் அகத்துத் தம்முள் கூடார்.

உரை விளக்கம்

செப்பின் புணர்ச்சி செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெறுறுழி

வீற்று வீற்றாவர் என்பதாம். குடி கூடாதென்பதனை நாடு வந்தது என்பது போலக் கொள்க. உட்பகை தானுற்ற குடியோடு கூடாது என்றும், உட்பகை உண்டாய குடி அப்பகையோடு கூடாது என்றும் உரைப்பாரும் உளர்.

## குறள் 888 (அரம்பொருத )

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு ( ) அரம் பொருத பொன் போலத் தேயும் உரம் பொருது

துட்பகை யுற்ற குடி. (08) உட்பகை உற்ற குடி.

தொடரமைப்பு: உட்பகை உற்ற குடி, அரம் பொருத பொன் போலப் பொருது உரம் தேயும்.

இதன்பொருள்

உட்பகை யுற்ற குடி= முன் வளர்ந்து வந்ததாயினும் உட்பகையுண்டாய குடி; அரம் பொருத பொன்போலப் பொருது உரம் தேயும்= அரத்தாற் பொரப்பட்ட இரும்புபோல அதனாற் பொரப்பட்டு வலி தேயும்.

உரை விளக்கம்

'பொருது' என்னும் செயப்பாட்டு வினையெச்சம், 'தேயும்' என்னும் வினைகொண்டது. அஃது உரத்தின் தொழில்ஆயினும் குடிமேல் ஏற்றுதலின், வினைமுதல் வினையாயிற்று. காரியஞ்செய்வது போன்று பொருந்தி மெல்லமெல்லப் பிரிவித்தலான், வலிதேய்ந்து விடும் என்பதாம்.

இவை இரண்டுபாட்டானும் அவன்குடிக்குவரும் தீங்கு கூறப்பட்டது.

# குறள் **889 (**எட்பக **)**

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு ( ) எள் பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்

முட்பகை யுள்ளதாங் கேடு. (09) உட்பகை உள்ளதாம் கேடு.

தொடரமைப்பு**:** உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்**,** கேடு உள்ளதாம்.

இதன்பொருள்

உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்= அரசனது உட்பகை அவன் பெருமையே நோக்க எள்ளின் பிளவை ஒத்த சிறுமையுடைத்தே ஆயினும்; கேடு உள்ளதாம்= பெருமையெல்லாம் அழியவரும் கேடு அதன் அகத்ததாம்.

உரை விளக்கம்

எத்துணையும் பெரிதாய கேடு தனக்கு எல்லை வருந்துணையும்**,** எத்துணையும் சிறிதாய உட்பகையுள்ளே அடங்கியிருந்து**,** வந்தால் வெளிப்பட்டு நிற்கும் என்பதாம்.

இதனால் அது சிறிது என்று இகழப்படாது என்பது கூறப்பட்டது.

# குறள் **890 (**உடம்பாடிலா **)**

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட் () உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்

பாம்போ டுடனுறைந் தற்று. (10) பாம்போடு உடன் உறைந்து அற்று.

தொடரமைப்பு**:** உடம்பாடு இலாதவர் வாழ்க்கை**,**

குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று.

இதன்பொருள்

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை= மனப்பொருத்தம் இல்லாதாரோடு கூட ஒருவன் வாழும் வாழ்க்கை; குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று= ஒரு குடிலுள்ளே பாம்போடு கூட உறைந்தாற் போலும்.

உரை விளக்கம்

'குடங்கம்' என்னும் வடசொல் திரிந்து நின்றது. இடச்சிறுமையானும், பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம். ஆகவே, அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதிவருதல் ஒருதலையென்பது பெற்றாம்.

இதனால் கண்ணோடாது அவரைக் கடிகவென்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **90.**பெரியாரைப் பிழையாமை

அதிகார முன்னுரை

அஃதாவது, பெரியராயினாரை அவமதித்து ஒழுகாமை. இரட்டுற மொழிதல் என்பதனாற் பெரியார் என்பது, ஆற்றலாற் பெரியாராய வேந்தர் மேலும், தவத்தாற் பெரியாராய முனிவர்மேலும் நின்றது. மேற் சொல்லாது எஞ்சி நின்றதாகலின், இது வெகுளியான் வருவனவற்றது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

## குறள் **891 (**ஆற்றுவா **)**

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார் ( ) ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்

போற்றலு ளெல்லாந் தலை. (01) போற்றலுள் எல்லாம் தலை.

தொடரமைப்பு:ஆற்றுவார் ஆற்றல் இகழாமை, போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை.

இதன்பொருள்

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை= எடுத்துக்கொண்டன யாவும் முடிக்கவல்லாருடைய ஆற்றல்களை அவமதியாமை; போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை= தங்களுக்குத் தீங்கு வாராமற் காப்பார் செய்யும் காவல்கள் எல்லாவற்றினும் மிக்கது.

உரைவிளக்கம்

ஆற்றல் என்பது, பெருமை, அறிவு, முயற்சி என்னும் மூன்றன்மேலும் நிற்றலின் சாதியொருமை. இகழ்ந்தவழிக் களையவல்லார் என்பது தோன்ற ஆற்றுவர் என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிற காவல்கள் அவரான் அழியுமாகலின், அவ்விகழாமையைத் தலை யாய காவல் என்றும் கூறினார்.

பொதுவகையால் அவ்விரு திறத்தாரையும் பிழையாமையது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **892** (பெரியாரைப் )

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால் ( ) பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்

பேரா விடும்பை தரும். (02) பேரா இடும்பை தரும்.

தொடரமைப்பு:பெரியாரைப் பேணாது ஒழுகின், பெரியாரால் பேரா இடும்பை தரும்.

இதன்பொருள்

பெரியாரைப் பேணாது ஒழுகின்= ஆற்றல்களாற் பெரியர் ஆயினாரை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின்; பெரியாரால் பேரா இடும்பைதரும்= அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும்.

உரை விளக்கம்

அத்துன்பங்களாவன இருமையிலும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களுமாம். அவையெல்லாந் தாமே செய்து கொள்கினர் என்பது தோன்ற ஒழுக்கத்தை வினை முதலாக்கியும், பெரியாரைக் கருவியாக்கியும் கூறினார். பொதுவகையால் அவரைப் பிழைத்தற்குற்றம் இதனால் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையால் கூறுப.

# குறள் **893 (**கெடல்வேண்டிற் **)**

கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி ( ) கெடல் வேண்டின் கேளாது செய்க அடல் வேண்டின்

னாற்று பவர்க ணிழுக்கு. (03) ஆற்றுபவர்கண் இழுக்கு.

தொடரமைப்பு: அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு, கெடல் வேண்டின் கேளாது செய்க.

இதன்பொருள்

அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு= வேற்றுவேந்தரைக் கோறல்வேண்டியவழி, அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர் மாட்டுப் பிழையினை; கெடல் வேண்டின் கேளாது

செய்க= தான் கெடுதல் வேண்டினான்ஆயின் ஒருவன் நீதிநூலைக் கடந்து செய்க.

உரை விளக்கம்

அப்பெரியாரைக் "காலனும் காலம் பார்க்கும் பாராது/ வேலீண்டு தானை விழுமியோர் தொலைய/ வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தர்" (புறநானூறு, 41.) என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாது என்று கூறலின், 'கேளாது' என்றார்.

## குறள் 894 (கூற்றத்தைக் )

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க் ( ) கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு

காற்றாதா ரின்னா செயல். (04) ஆற்றாதார் இன்னா செயல்.

தொடரமைப்பு: ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல், கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்.

இதன்பொருள்

ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல்= மூவகை ஆற்றலும் உடையார்க்கு அவை இல்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல்; கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்= தானேயும் வரற்பாலனாய கூற்றுவனை அதற்கு முன்னே கைகாட்டி அழைத்தால்ஒக்கும்.

உரை விளக்கம்

கையால் விளி்த்தல் இகழ்ச்சிக் குறிப்பிற்று. தாமேயும் உயிர்முதலிய கோடற்குரியாரை அதற்கு முன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வார் இறப்பினது உண்மையும்,

அண்மையும் கூறியவாறு.

இவை இரண்டு பாட்டானும் வேந்தரைப் பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது.

## குறள் **895 (**யாண்டுச்சென் **)**

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின் ( ) யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்

வேந்து செறப்பட்ட வர். (05) வேந்து செறப்பட்டவர்.

தொடரமைப்பு:வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர், யாண்டுச் சென்றும் யாண்டும் உளராகார்.

இதன்பொருள்

வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர்= பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற் செறப்பட்ட அரசர்; யாண்டுச் சென்றும் யாண்டும் உளராகார்= அவனைத்தப்பி எங்கேபோய் உளராவர், ஓரிடத்தும் உளராகார்.

உரை விளக்கம்

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. 'வெந்துப்பின் வேந்து' ஆகலால், தன்னிலம் விட்டுப்போயவர்க்கு இடம் கொடுப்பாரில்லை; உளராயின் அவர் இனியராகார் என்பது நோக்கி, அவனோடு நட்புக்கோடற் பொருட்டும் தானே வந்தெய்திய அவருடைமை வெளவுதற் பொருட்டும் கொல்வர், அன்றெனின் உடனே அழிவர் என்பன நோக்கி, 'யாண்டுச் சென்றி யாண்டுமுளராகார்' என்றார்.

# குறள் 896 (எரியாற் )

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார் ( ) எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் உய்யார்

பெரியார்ப் பிழைத்தொழுகு வார் (06) பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார்.

தொடரமைப்பு: எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம், பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார்.

இதன்பொருள்

எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம்= காட்டிடைச் சென்றான் ஒருவன் ஆண்டைத் தீயாற்சுடப்பட்டான்ஆயினும் ஒருவாற்றான் உயிர் உய்தல்கூடும்; பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார்= தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார்.

உரை விளக்கம்

தீ முன் உடம்பினைக் கதுவி அதுவழியாக உயி◌ர்மேற் சேறலின் இடையே உய்யவும் கூடும், அருந்தவர் வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்கும் காத்தல் அரிதாகலின், அது கூடாது ஆகலான், அதற்கு ஏதுவாய பிழைசெய்யற்க என்பதாம்.

# குறள் 897 (வகைமாண்ட )

வகைமாண்ட வாழ்க்கையு வான்பொருளு மென்னாந் ( ) வகை மாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என் ஆம்

தகைமாண்ட தக்கார் செறின். (07) தகை மாண்ட தக்கார் செறின்.

தொடரமைப்பு: தகை மாண்ட தக்கார் செறின், வகை மாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என்னாம்

இதன்பொருள்

தகை மாண்ட தக்கார் செறின்= சாப அருள்கட்கு ஏதுவாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வாராயின்; வகைமாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என்னாம்= உறுப்பழகு பெற்ற அவன் அரசாட்சியும், ஈட்டிவைத்த பெரும்பொருளும் என்பட்டுவிடும்.

உரை விளக்கம்

உறுப்பு- அமைச்சு, நாடு, அரண், படையென இவை. 'செறின்' என்பது, அவர் செறாமை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான், முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். அரசர் தம் செல்வக்களிப்பான், அருந்தவர்மாட்டுப் பிழை செய்வாராயின், அச்செல்வம் அவ்வெகுளித்தீயான் ஒருகணத்துள்ளே வெந்துவிடும் என்பதாம்.

# குறள் 898 (குன்றன்னார் )

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு ( ) குன்று அன்னார் குன்ற மதிப்பின் குடியொடு

நின்றன்னார் மாய்வர் நிலத்து. (08) நின்றன்னார் மாய்வர் நிலத்து.

தொடரமைப்பு: குன்று அன்னார் குன்ற மதிப்பின், நிலத்து நின்றன்னார் குடியொடு மாய்வர்.

இதன்பொருள்

குன்றன்னார் குன்ற மதிப்பின்= குன்றத்தை ஒக்கும் அருந்தவர் கெட நினைப்பாராயின்; நிலத்து நின்றன்னார் குடியொடு மாய்வர்= அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற் போலும் செல்வர் தம் குடியொடும் மாய்வர்.

உரை விளக்கம்

வெயில், மழை முதலிய பொறுத்தலும், சலியாமையும் உள்ளிட்ட குணங்கள் உடைமையின், குன்றன்னார் என்றார். "மல்லன் மலையனைய மாதவர்" என்றார் பிறரும் (சீவக சிந்தாமணி, முத்தியிலம்பகம்- 191).நிலைபெற்றாற்போறலாவது, இறப்பப்பெரியார் ஆகலின், இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லையென்று கண்டாராற் கருதப்படுதல்.

# குறள் **899** (ஏந்திய )

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து ( ) ஏந்திய கொள்கையார் சீறின் இடை முரிந்து

வேந்தனும் வேந்து கெடும். (09) வேந்தனும் வேந்து கெடும்.

தொடரமைப்பு: ஏந்திய கொள்கையார் சீறின், வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும்.

இதன்பொருள்

ஏந்திய கொள்கையார் சீறின்= காத்தற்கு அருமையான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வாராயின்; வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும்= அவர் ஆற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்து கெடும்.

உரை விளக்கம்

"வேந்தன் மேய தீம்புன லுலகமும்" என்றார் பிறரும், (தொல்காப்பியம்- பொருளதிகாரம், அகத்திணையியல்: 5). நகுடன் என்பான் இந்திரன் பதம்பெற்றுச்செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழை செய, அதனாற் சாபம் எய்தி அப்பதம் இடையே இழந்தான் என்பதை உட்கொண்டு இவ்வாறு கூறினார்.

இவை நான்கு பாட்டானும், முனிவரைப்பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது.

## குறள் **900** (இறந்தமைந்த )

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார் () இறந்து அமைந்த சார்பு உடையர் ஆயினும் உய்யார்

சிறந்தமைந்த சீரார் செறின். (10) சிறந்து அமைந்த சீரார் செறின்.

தொடரமைப்பு: சிறந்து அமைந்த சீரார் செறின், இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார்.

இதன்பொருள்

சிறந்து அமைந்த சீரார் செறின்= கழிய மிக்க தவத்தினையுடையார் வெகுள்வராயின்; இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார்= அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரிய சார்பு உடையராயினும், அதுபற்றி உய்யமாட்டார்.

உரை விளக்கம்

'சார்பு'- அரண், படை, பொருள், நட்பென இவை. அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் திரிபுரம் போல

அழிந்துவிடும் ஆகலின், 'உய்யார்' என்றார். சீருடையது 'சீர்' எனப்பட்டது.
இதனால் அக்குற்றமுடையார் சார்பு பற்றியும், உய்யார் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **91.**பெண்வழிச்சேறல்

அதிகார முன்னுரை

இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும், ஆக்கம் சிதைத்தல், அழிவு தலைத்தருதல் என்னும் தொழில்களாற் பகையோடு ஒத்தலின் பகைப்படுவனவாம் ஆகலான், அவற்றைப் பகைப்பகுதியது இறுதிக்கண் கூறுவான் தொடங்கி, முதற்கண் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃதாவது, தன்வழி ஒழுகற்பாலளாய இல்லாள்வழியே தான் ஒழுகுதல்.

## குறள் **901 (**மனைவிழைவார் **)**

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார் **( )** மனை விழைவார் மாண் பயன் எய்தார் வினை விழைவார்

வேண்டாப் பொருளு மது. (01) வேண்டாப் பொருளும் அது.

தொடரமைப்பு: மனைவிழைவார் மாண்பயன் எய்தார், வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது.

இதன்பொருள்

மனைவிழைவார் மாண் பயன் எய்தார்= இன்பங்காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவள்தன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றுணையாய அறத்தினை எய்தார்; வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது= இனிப் பொருள்செய்தலை முயல்வார் அதற்கு இடையீடு என்று இகழும் பொருளும் அவ்வின்பம்.

உரைவிளக்கம்

'மனை'யும், 'விழைத'லும், 'பய'னும் ஆகுபெயர். அவ்வின்பம் அவள்தன்மையராதற்கு ஏதுவாய இன்பம். அஃது அவளாற் பயனாய அறத்தினும், அவ்வறத்திற்கும் தனக்கும் ஏதுவாய பொருளினும் செல்லவிடாமையின், விடற்பாற்றென்பதாம்.

# குறள் 902 (பேணாது )

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர் ( ) பேணாது பெண் விழைவான் ஆக்கம் பெரியது ஓர்

நாணாக நாணுத் தரும். (02) நாண் ஆக நாணுத் தரும்.

தொடரமைப்பு: பேணாது பெண் விழைவான் ஆக்கம், பெரியது ஓர் நாண் ஆக நாணுத் தரும்.

இதன்பொருள்

பேணாது பெண்விழைவான் ஆக்கம்= தன் ஆண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்திநின்ற செல்வம்; பெரியது ஓர் நாணாக நாணுத் தரும்= இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும்.

உரை விளக்கம்

எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்றல் இலனாகலின். அச்செல்வத்தால் ஈதலும் துய்த்தலும் முதலிய பயன்கொள்வாள் அவளாகலின், அவ்வாண்மைச் செய்கை அவள்கண்ணதாயிற்று என்று, ஆண்பாலார் யாவரும் நாண அதனால் தன் ஆண்மையின்மை அறிந்து பின் தானும் நாணும் என்பது நோக்கிப் 'பெரியதோர் நாணாக நாணுத்தரும்' என்றார்.

இவ்விரண்டு பாட்டானும் மனைவிழைதற் குற்றம் கூறப்பட்டது.

# குறள் **903** (இல்லாள்கட் )

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று ( ) இல்லாள் கண் தாழ்ந்த இயல்பு இன்மை எஞ்ஞான்றும்

நல்லாரு ணாணுத் தரும். (03) நல்லாருள் நாணுத்தரும்.

தொடரமைப்பு**:** இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை, நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும்.

இதன்பொருள்

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை= ஒருவன் இல்லாள்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம்; நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும்= அஃதிலராய நல்லாரிடைச் செல்லுங்கால்,

நாணுதலை அவனுக்கு எக்காலத்தும் கொடுக்கும்.

உரை விளக்கம்

அவள்தான் அஞ்சியொழுகுதல் இயல்பாகலின், அவளை அஞ்சுதல் இயல்பின்மை ஆயிற்று. அங்ஙனம் அஞ்சியொழுகுதலின், அவளை நியமிப்பார் இல்லையாம். ஆகவே, எல்லாக்குற்றமும் விளையும் என்பது நோக்கி, 'எஞ்ஞான்றும் நாணுத்தரும்' என்றார்.

# குறள் 904 (மனையாளை )

மனையாளை யஞ்சு மறுமை யிலாளன் ( ) மனையாளை அஞ்சும் மறுமை இலாளன்

வினையாண்மை வீறெய்த லின்று. (04) வினை ஆண்மை வீறு எய்தல் இன்று.

தொடரமைப்பு: மனையாளை அஞ்சும் மறுமை இலாளன், வினை ஆண்மை வீறு எய்தல் இன்று.

இதன்பொருள்

மனையாளை அஞ்சும் மறுமை இலாளன்= தன்மனையாளை அஞ்சி ஒழுகுகின்ற மறுமைப் பயன் இல்லாதானுக்கு; வினை ஆண்மை வீறு எய்தல் இன்று= வினையை ஆளுந்தன்மை உண்டாய வழியும், நல்லோராற் கொண்டாடப்படாது.

உரை விளக்கம்

உண்டாயவழியும் என்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ்செய்தற்குரிய நன்மை இன்மையின், 'மறுமையிலாளன்' என்றும், வினையை ஆளுந்தன்மை, தன்தன்மை இல்லாத

அவனான் முடிவுபோகாமையின், 'வீறுஎய்தல் இன்று' என்றும் கூறினார்.

## குறள் **905** (இல்லாளை )

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று ( ) இல்லாளை அஞ்சுவான் அஞ்சும் மற்று எஞ்ஞான்றும்

நல்லார்க்கு நல்ல செயல். (05) நல்லார்க்கு நல்ல செயல்.

தொடரமைப்பு: இல்லாளை அஞ்சுவான், மற்று நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும்.

இதன்பொருள்

இல்லாளை அஞ்சுவான்= தன்மனையாளை அஞ்சுவான்; நல்லார்க்கு நல்லசெயல் எஞ்ஞான்றும் அஞ்சும்= தான்தேடிய பொருளேயாயினும், அதனால் நல்லார்க்கு நல்லனசெய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும்.

உரை விளக்கம்

'நல்லார்'- தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் முதலாயினாரும், நல் விருந்தினரும். 'நல்லன செய்தல்'- அவர் விரும்புவன கொடுத்தல். அது செய்யவேண்டும் நாள்களினும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். "இல்லாளை அஞ்சி விருந்தின் முகங்கொன்ற நெஞ்சிற்/ புல்லாளனாக" என்றார் பிறரும், (சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம்: 217).

## குறள் **906** (இமையாரின் )

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா ( ) இமையாரின் வாழினும் பாடு இலரே இல்லாள்

ளமையார்டோ ளஞ்சு பவர். (06) அமையார் தோள் அஞ்சுபவர்

தொடரமைப்பு: இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர், இமையாரின் வாழினும் பாடு இலரே.

இதன்பொருள்

இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர்= தம் இல்லாளுடைய வேய்போலும் தோளினை அஞ்சுவார்; இமையாரின் வாழினும் பாடு இலர்= வீரத்தான் துறக்கம் எய்திய அமரர் போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மை இலர்.

உரை விளக்கம்

அமரர் போல வாழ்தலாவது, பகைத்த வீரர் தோள்களை எல்லாம் வேறலான் நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின், 'வாழினும்' என்றார்.'அமையார் தோள்' எனவே, அஞ்சுதற் காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர் தோள்களை வென்றார் ஆயினும், இல்லாள் தோள்களை அஞ்சுவார் ஆண்மையிலர் என்பதாம்.

இவை நான்கு பாட்டானும் அவளை அஞ்சுதற் குற்றம் கூறப்பட்டது.

# குறள் 907 ( பெண்ணேவல்)

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப் ( ) பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் நாண் உடைப்

பெண்ணே பெருமை உடைத்து. பெண்ணே பெருமை உடைத்து.

தொடரமைப்பு: பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின், நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து.

இதன்பொருள்

பெண் ஏவல்செய்து ஒழுகும் ஆண்மையின்= நாண்இன்றித் தன் இல்லாளது ஏவல் தொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண்தன்மையின்; நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து= நாணினையுடைய அவ்ள் பெண்தன்மையே மேம்பாடு உடைத்து.

உரை விளக்கம்

'நாணுடைப் பெண்' என வேண்டாது கூறியது, அவள் ஏவல் செய்வானது. நாணின்மை முடித்தற்காதலின், அம்மறுதலைத் தொழில் வருவிக்கப்பட்டது. 'ஏவல்' ஆகுபெயர். இறுதிக்கண் 'பெண்'ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்துக் கோடற்சிறப்புத் தோன்றப் 'பெண்ணே'யெனப் பிரித்தார்.

## குறள் **908** (நட்டார்குறை )

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட் ( ) நட்டார் குறை முடியார் நன்று ஆற்றார் நல் நுதலாள்

பெட்டாங் கொழுகு பவர். (08) பெட்டாங்கு ஒழுகுபவர்.

தொடரமைப்பு: நல்நுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர், நட்டார் குறைமுடியார், நன்று ஆற்றார்.

இதன்பொருள்

நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர்= தாம்

வேண்டியவாறன்றித் தம் மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார்; நட்டார்குறை முடியார்= தம்மொடு நட்புச் செய்தார் உற்ற குறைமுடிக்க மாட்டார்; நன்று ஆற்றார்= அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ்செய்யவு மாட்டார்.

உரை விளக்கம்

'நன்னுதலாள்' என்பதனை, "அமையார் தோள்" (குறள், 906) என்புழிப்போலக் கொள்க. அவள்தானே அறிந்து ஏவலும், பொருள்கொடுத்தலும் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டார் என்பதாம்.

# குறள் 909 (அறவினையு )

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும் ( ) அற வினையும் ஆன்ற பொருளும் பிற வினையும்

பெண்ணேவல் செய்வார்க ணில். (09) பெண் ஏவல் செய்வார்கண் இல்.

தொடரமைப்பு: அறவினையும், ஆன்ற பொருளும் பிறவினையும், பெண் ஏவல் செய்வார்கண் இல்.

இதன்பொருள்

அறவினையும்= அறச்செயலும்; ஆன்ற பொருளும்= அது முடித்தற்கு ஏதுவாய பொருட் செயலும்; பிறவினையும்= அவ்விரண்டின் வேறாய இன்பச் செயல்களும்; பெண் ஏவல் செய்வார்கண் இல்= தம்மனையாள் ஏவல் செய்வார்மாட்டு உளவாகா.

உரை விளக்கம்

புலன்கள் ஐந்தாகலின், 'பிறவினை'யெனப் பன்மையாயிற்று. அவைநோக்கி அறச்செயல் பொருட்செயல்கள் முன்னே ஒழிந்தார்க்குத் தலைமை அவள் கண்ணதாகலின், பின் அவைதாமும் இலவாயின என்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் அவள் ஏவல் செய்தற் குற்றம் கூறப்பட்டது.

# குறள் 910 (எண்சேர்ந்த )

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும் () எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு எஞ்ஞான்றும்

பெண்சேர்ந்தாம் பேதைமை யில். (10) பெண் சேர்ந்து ஆம் பேதைமை இல்.

தொடரமைப்பு: எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு, பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல்.

இதன்பொருள்

எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு= கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத்தினையும் அதனினாய செல்வத்தினையம் உடையராய வேந்தர்க்கு; பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல்= மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது.

உரை விளக்கம்

"இடனில் பருவத்தும்" (திருக்குறள், 218) எனவும், "இடனின்றி

இரந்தோர்க்கு" (கலித்தொகை, பாலைக்கலி: 1) எனவும் வந்தமையான், 'இடன்' என்பது அப்பொருட்டாதல் அறிக. இளமைக் காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். அப்பேதைமையாவது, மேற்சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல்செய்தல் என்னும் மூன்றற்கும் காரணமாயது. எதிர்மறைமுகத்தான், அம்மூன்றும் இதனான் தொகுத்துக் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **92.**வரைவின்மகளிர்

அதிகார முன்னுரை

அஃதாவது தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது, அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வரும் குற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **911 (**அன்பின்விழை **)**

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா ( ) அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார்

ரின்சொ லிழுக்குத் தரும். (01) இன் சொல் இழுக்குத் தரும்.

தொடரமைப்பு: அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார், இன்சொல் இழுக்குத்தரும்.

இதன்பொருள்

அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார்= ஒருவனை அன்புபற்றி விழையாது, பொருள்பற்றி விழையும் மகளிர்; இன்சொல் இழுக்குத் தரும்= அது கையுறுந்துணையும் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும் இனியசொல், அவனுக்குப் பின் இன்னாமையைப் பயக்கும்.

உரைவிளக்கம்

'பொருள்' என்புழி இன் விகாரத்தான் தொக்கது. ஆய்ந்த தொடியினையுடையார் என்றதனானும், இனிய சொல்லென்றதனானும், அவர் கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிது போன்று பின் வறுமை பயத்தலின், அது கொள்ளற்க என்பதாம்.

## குறள் **912 (** பயன்றூக்கி**)**

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர் ( ) பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர்

நயன்றூக்கி நள்ளா விடல். (02) நயன் தூக்கி நள்ளா விடல்.

தொடரமைப்பு: பயன்தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பில் மகளிர், நயன்தூக்கி நள்ளா விடல்.

இதன்பொருள்

பயன்தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பில் மகளிர்= ஒருவனுக்கு

உள்ள பொருளை அளந்தறிந்து அஃது எய்தும் துணையும் தம் பண்புடைமை சொல்லும் பண்பில்லாத மகளிரது; நயன் தூக்கி நள்ளா விடல்= ஒழுகலாற்றினை ஆய்ந்தறிந்து அவரைப் பொருந்தாது விடுக.

உரை விளக்கம்

பண்பு சொல்லின்கண் அல்லது தங்கண் கிடவாமை தோன்றப் 'பண்பின் மகளிர்' என்றும், அவர்க்கு அது சாதிதருமம் ஆதல் நூலானேயன்றி அவர்செயலானும் அறிந்து என்பார் 'நயன்தூக்கி' என்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயம் என்பது தோன்றப் பின் 'நள்ளாவிடல்' என்றும் கூறினார்.

# குறள் 913 (பொருட்பெண்டிர் )

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி ( ) பொருள் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டு அறையில்

லேதில் பிணந்தழீஇ யற்று. (03) ஏது இல் பிணம் தழீஇ அற்று.

தொடரமைப்பு: பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம், இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇயற்று.

இதன்பொருள்

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்= கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்ம்மையை யுடைய முயக்கம்; இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇயற்று= பிணம் எடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற் போலும்.

உரை விளக்கம்

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்தும் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதானை முயங்குங்கால் அவர் குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பார் காணப்படாததோர் இடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போடு ஒக்கும் எனவே, அகத்தால் அருவரா நின்றும் பொருள்நோக்கிப் புறத்தால் தழுவுவர், அதனை ஒழிக என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது.

# குறள் 914 ( பொருட்பொருளார்)

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு ( ) பொருள் பொருளார் புன் நலம் தோயார் அருள் பொருள்

ளாயு மறிவி னவர். (04) ஆயும் அறிவினவர்.

தொடரமைப்பு: பொருட்பொருளார் புன்னலம், அருட்பொருள் ஆயும் அறிவினவர் தோயார்.

இதன்பொருள்

பொருட் பொருளார் புன்னலம்= இன்பமாகிய பொருளை இகழ்ந்து, பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை; அருட்பொருள் ஆயும் அறிவினவர் தோயார்= அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையார் தீண்டார்.

உரை விளக்கம்

அறமுதலிய நான்கும் பொருள் எனப்படுதலின், 'பொருட்பொருள்', 'அருட்பொருள்' என விசேடித்தார். புன்மை-

இழிந்தோர்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்ந்நலம் மறுதலையாகலின், தோயார் என்பதாம்.

## குறள் **915** (பொதுநலத்தார் )

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின் () பொது நலத்தார் புன் நலம் தோயார் மதி நலத்தின்

மாண்ட வறிவி னவர். (05) மாண்ட அறிவினவர்.

தொடரமைப்பு: மதிநலத்தின் மாண்ட அறிவினவர், பொதுநலத்தார் புன்னலம் தோயார்.

இதன்பொருள்

மதி நலத்தின் மாண்ட அறிவினவர்= இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கை அறிவினையுடையார்; பொது நலத்தார் புன்னலம் தோயார்= பொருள் கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார்.

உரை விளக்கம்

மதிநன்மை, முற்பிறப்புக்களிற் செய்த நல்வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல். அதனானன்றி◌் க் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதிநலத்தின் மாண்டவறிவினவர்' என்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொதுமையும், மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் 'தோயார்' என்றும் கூறினார்.

# குறள் **916 (**தந்நல **)**

தந்நல பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப் ( ) தம் நலம் பாரிப்பார் தோயார் தகை செருக்கிப்

புன்னலம் பாரிப்பார் தோள். (06) புன் நலம் பாரிப்பார் தோள்.

தொடரமைப்பு: தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள், தம்நலம் பாரிப்பார் தோயார்.

இதன்பொருள்

தகைசெருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள்= ஆடல், பாடல், அழகு என்பனவற்றாற் களித்துத் தம்புல்லியநலத்தை, விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர் தோளி்னை; தம் நலம் பாரிப்பார் தோயார்= அறிவு ஒழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார்.

உரை விளக்கம்

ஆடன் முதலிய மூன்றுமுடைமை அவர்க்கு மேம்பாடாகலின் 'தகை'யென்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியுமாகலின், அவற்றாற் புகழ்பரப்புவார் 'தோயார்' என்றும் கூறினார். 'தந்நலம்' என்புழி நலம் ஆகுபெயர்.

# குறள் **917 (**நிறைநெஞ்ச **)**

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற் ( ) நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் பிற நெஞ்சின்

பேணிப் புணர்பவர் தோள். (07) பேணிப் புணர்பவர் தோள்.

தொடரமைப்பு: நெஞ்சின் பிற பேணிப் புணர்பவர் தோள், நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர்.

இதன்பொருள்

நெஞ்சின் பிற பேணிப் புணர்பவர் தோள்= நெஞ்சினாற் பிறவற்றை ஆசைப்பட்டு, அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை; நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர்= நிறையான் திருந்திய நெஞ்சம் இல்லாதார் தோய்வர்.

உரை விளக்கம்

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு அவற்றின்மேலதாகலின், புணர்வது உடம்புமாத்திரம் என்பதறிந்து அதுவழி ஓடாதுநிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், 'அஃதிலார் தோய்வர்' என்றார்.

# குறள் 918 ( ஆயுமறிவின)

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப ( ) ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப

மாய மகளிர் முயக்கு. (08) மாய மகளிர் முயக்கு.

தொடரமைப்பு: மாய மகளிர் முயக்கு, ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப.

இதன்பொருள்

மாய மகளிர் முயக்கு= உருவு சொற்செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை; ஆயும் அறிவினவர் அல்லார்க்கு அணங்கு என்ப= அவ்வஞ்சனை ஆராய்ந்தறியும் அறிவுடையர்

அல்லார்க்கு, அணங்குதாக்கு என்றுசொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்

'அணங்கு'- காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்குத் தீண்டல். இவ்வுருவகத்தான், அம்முயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர்கோடல் பெற்றாம். இது நூலோர் துணிவு என்பதுதோன்ற அவர்மேல் வைத்துக் கூறினார். அப்பெயர் அவாய்நிலையான் வந்தது.

# குறள் 919 (வரைவிலா )

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப் ( ) வரைவு இலா மாண் இழையார் மென் தோள் புரை இலாப்

பூரியர்க ளாழு மளறு. (09) பூரியர்கள் ஆழும் அளறு.

தொடரமைப்பு: வரைவு இலா மாண் இழையார் மென்றோள், புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு.

இதன்பொருள்

வரைவு இலா மாண் இழையார் மென்தோள்= உயர்ந்தோர், இழிந்தோர் என்னாது விலைகொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லியதோள்கள்; புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு= அக்குற்றத்தை அறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கு அழுந்து நிரயம்.

உரை விளக்கம்

உயர்தற்கு ஏதுவாகலின், 'புரை'யெனப்பட்டது. சாதியான் இழிந்தாரின் நீக்குதற்குப் 'புரையிலாப் பூரியர்கள்' என்றும், அவர் ஆழ்தற்கு ஏது, உருவம் முதலிய மூன்றும் என்பது தோன்ற

'மாணிழையார் மென்றோள்' என்றும், அவர்க்கு அளற்றினை இடையின்றிப் பயக்கும் என்பது தோன்ற, உருவகம் ஆக்கியும் கூறினார்.

# குறள் 920 ( இருமனப்)

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் () இரு மனப் பெண்டிரும் கள்ளும் கவறும்

திருநீக்கப் பட்டார் தொடர்பு. (10) திரு நீக்கப்பட்டார் தொடர்பு.

தொடரமைப்பு: இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும், திரு நீக்கப்பட்டார் தொடர்பு.

இதன்பொருள்

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்= கவர்த்த மனத்தினையுடைய மகளிரும், கள்ளும், சூதும் என இம்மூன்றும்; திரு நீக்கப்பட்டார் தொடர்பு= திருமகளான் துறக்கப்பட்டார்க்கு நட்பு.

உரை விளக்கம்

'இருமனம்' ஒருவனோடு புணர்தலும், புணராமையும் ஒருகாலத்தேயுடைய மனம். 'கவறு' ஆகுபெயர். ஒத்தகுற்றத்தவாகலின், கள்ளும் சூதும் உடன்கூறப்பட்டன. வடநூலாரும் இக்கருத்தான் விதனமென உடன்கூறினார். வருகின்ற அதிகார முறைமையும் இதனான் அறிக. திணை விராய் எண்ணியவழிப் பன்மைபற்றி முடிபுகோடலின், ஈண்டு அஃறிணையாற் கொண்டது. திருநீக்கப்பட்டமை இக்குறிகளான் அறியப்படும் என்பதாம்.

இவை நான்குபாட்டானும் சேர்வார் இழிந்தோர் என்பது கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **93.**கள்ளுண்ணாமை

அதிகார முன்னுரை

இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்தற்கண் அவ்வரைவின் மகளிரோடு ஒப்பதாய கள்ளினை உண்ணாமையது சிறப்பு எதிர்மறை முகத்தான் கூறுகின்றார்.

## குறள் **921 (** உட்கப்படாஅ**)**

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங் ( ) உட்கப்படாஅர் ஒளி இழப்பர் எஞ்ஞான்றும்

கட்காதல் கொண்டொழுகு வார். (01) கள் காதல் கொண்டு ஒழுகுவார்.

தொடரமைப்பு: கட்காதல் கொண்டு ஒழுகுவார், எஞ்ஞான்றும் உட்கப்படாஅர், ஒளி இழப்பர்.

இதன்பொருள்

கட்காதல் கொண்டு ஒழுகுவார்= கள்ளின்மேற் காதல் செய்து ஒழுகும் அரசர்; எஞ்ஞான்றும் உட்கப்படாஅர்= எஞ்ஞான்றும் பகைவரான் அஞ்சப்படார்; ஒளிஇழப்பர்= அதுவேயன்றி முன் எய்திநின்ற ஒளியினையும் இழப்பர்.

உரைவிளக்கம்

அறிவின்மையால் பொருள், படை முதலியவற்றால் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோரான் எய்திநின்ற ஒளியினையும் இகழற்பாட்டான் இழப்பர் என்பதாம். இவையிரண்டானும் அரசு இனிது செல்லாது என்பது இதனாற் கூறப்பட்டது.

## குறள் 922 (உண்ணற்க )

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா ( ) உண்ணற்க கள்ளை உணில் உண்க சான்றோரான்

னெண்ணப் படவேண்டா தார். (02) எண்ணப்பட வேண்டாதார்.

தொடரமைப்பு: கள்ளை உண்ணற்க, உணில் சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க.

இதன்பொருள்

கள்ளை உண்ணற்க= அறிவுடையராயினார் அஃதிலர் ஆதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணாதுஒழிக; உணில் சான்றோரான்

எண்ணப்பட வேண்டாதார் உண்க= அன்றியே உண்ணல்வேண்டுவார் உளராயின், நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார் உண்க.

உரை விளக்கம்

பெறுதற்கு அரிய அறிவைப் பெற்றுவைத்தும், கள்ளான் அழித்துக் கொள்ளவாரை, இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் எண்ணார் ஆகலின், 'சான்றோரரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க' என்றார்.

## குறள் **923** (ஈன்றாள் )

ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச் ( ) ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்

சான்றோர் முகத்துக் களி. (03) சான்றோர் முகத்துக் களி.

தொடரமைப்பு: ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது, மற்றுச் சான்றோர் முகத்து என்.

இதன்பொருள்

ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது= யாது செய்யினும் உவக்கும் தாய் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாதாம்; மற்றுச் சான்றோர் முகத்து என்= ஆனபின், குற்றம் யாதும் பொறாத சான்றோர்முன்பு களித்தல் அவர்க்கியாதாம்.

உரை விளக்கம்

மன, மொழி, மெய்கள் தம் வயத்த அன்மையான் நாண் அழியும், அழியவே ஈன்றாட்கும் இன்னாதாயிற்று. ஆனபின், கள் இருமையும் கெடுத்தல் அறிந்து சேய்மைக்கண்ணே கடியும்

சான்றோர்க்கு இன்னாது ஆதல் சொல்லவேண்டுமோ என்பதாம்.

## குறள் **924** (நாணென்னு )

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும் ( ) நாண் என்னும் நல் ஆள் புறம் கொடுக்கும் கள் என்னும்

பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. (04) பேணாப் பெரும் குற்றத்தார்க்கு.

தொடரமைப்பு: கள் என்னும் பேணாப் பெரும் குற்றத்தார்க்கு, நாண் என்னும் நல் ஆள் புறம் கொடுக்கும்.

இதன்பொருள்

கள் என்னும் பேணாப் பெருங்குற்றத்தார்க்கு= கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரும் இகழும் மிக்க குற்றத்தினையுடையாரை; நாண் என்னும் நல் ஆள் புறம் கொடுக்கும்= நாண் என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கு அஞ்சி அவர்க்கு எதிர்முகமாகாள்.

உரை விளக்கம்

காணுதற்கும் அஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவாராகலிற் 'பேணா'வெனறும், பின் ஒருவாற்றானும் கழுவப்படாமையிற் 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோர்பால் நில்லாமையின் 'நல்லாள்' என்றும், கூறினார். பெண்பாலாக்கியது வடமொழி முறைமை பற்றி.

## குறள் **925** (கையறியாமை )

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து ( ) கை அறியாமை உடைத்தே பொருள் கொடுத்து

மெய்யறி யாமை கொளல். (05) மெய் அறியாமை கொளல்.

தொடரமைப்பு: பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல், கை அறியாமை உடைத்தே.

இதன்பொருள்

பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல்= ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளால் தனக்கு மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல்; கை அறியாமை உடைத்து= அவன் பழவினைப்பயனாய செய்வது அறியாமையைத் தனக்குக் காரணமாக உடைத்து.

உரை விளக்கம்

தன்னையறியாமை சொல்லவே, ஒழிந்தன யாவும் அறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. 'கை' அப்பொருட்டாதல், "பழனுடைப் பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று" (புறநானூறு, 209) என்பதனானும் அறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொள்ளுங்கால், தீயது கொள்ளாமையின் 'மெய்யறியாமை கொளல்' முன்னையறியாமையான் வந்தது என்பதாம்.

# குறள் 926 (துஞ்சினார் )

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று ( ) துஞ்சினார் செத்தாரின் வேறு அல்லர் எஞ்ஞான்றும்

நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (06) நஞ்சு உண்பார் கள் உண்பவர்.

தொடரமைப்பு: துஞ்சினார் செத்தாரின் வேறு அல்லர், கள் உண்பவர் எஞ்ஞான்றும் நஞ்சு உண்பவர்.

இதன்பொருள்

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்= உறங்கினார், செத்தாரின் வேறாதல் உடையரேனும், அக்காலத்து அறிவின்மையான் வேறெனப்படார்; கள் உண்பவர் எஞ்ஞான்றும் நஞ்சு உண்பார்= அவ்வாறே கள்ளுண்பார் நஞ்சுண்பாரின் வேறாதல் உடையரேனும், எக்காலத்தும் அறிவின்மையான் வேறெனப்படார், அவர்தாமேயாவர்.

உரை விளக்கம்

உறங்கினார்க்கும், கள்ளுண்பார்க்கும் உயிர்ப்புநிற்றல், வேறாதலும் வேறன்மையும்உடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரல்நிரையாக்கி, திரிக்கப்படுதலால் உறங்கினாரும் நஞ்சுண்பாரும் ஒப்பர், கைவிடப்படுதலான் செத்தாரும் கள்ளுண்பாரும் ஒப்பர் என்று உரைப்பாரும் உளர். அதிகாரப்பொருள் பின்னதாயிருக்க யாதும் இயைபில்லாத நஞ்சுண்பார்க்கு உவமைபுணர்த்து ஈண்டுக் கூறல் பயனின்று ஆகலானும், சொற்கிடக்கை நிரல்நிறைக்கு ஏலாமையானும், அஃது உரையன்மை அறிக.

இவை இரண்டுபாட்டானும் அவரது அறிவுஇழத்தற்குற்றம் கூறப்பட்டது.

## குறள் 927 (உள்ளொற்றி )

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங் ( ) உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்

கள்ளொற்றிக் கண்சாய் பவர். (07) கள் ஒற்றிக் கண் சாய்பவர்.

தொடரமைப்பு: கள் ஒற்றிக் கண் சாய்பவர், உள்ளூர் உள் ஒற்றி எஞ்ஞான்றும் நகப்படுவர்.

இதன்பொருள்

கள் ஒற்றிக் கண்சாய்பவர்= கள்ளை மறைந்துண்டு அக்களிப்பால் தம் அறிவுதளர்வார்; உள்ளூர் உள் ஒற்றி எஞ்ஞான்றும் நகப்படுவர்= உள்ளூர் வாழ்பவரான் உள்நிகழ்கின்றது உய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவர்.

உரை விளக்கம்

'உள்ளூர்' ஆகுபெயர். உண்டென்பது அவாய்நிலையான் வந்தது. உய்த்து உணர்தல், தளர்ச்சியால் களிப்பினை உணர்ந்து அதனால் கள்ளுண்டது உணர்தல்.

# குறள் 928 (களித்தறியே )

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத் ( ) களித்து அறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து

தொளித்ததூஉ மாங்கே மிகும். (08) ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.

தொடரமைப்பு: களித்து அறியேன் என்பது கைவிடுக, நெஞ்சத்து ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.

இதன்பொருள்

களித்து அறியேன் என்பது கைவிடுக=மறைந்து உண்டுவைத்து யான் கள்ளுண்டு அறியேன் என்று உண்ணாதபொழுது தம் ஒழுக்கம் கூறுதலை ஒழிக; நெஞ்சத்து ஒளித்ததூஉம் ஆங்கே

மிகும்= அவ்வுண்டபொழுதே, பிறர் அறியின் இழுக்காம் என்று முன் நெஞ்சத்து ஒளித்த குற்றமும், முன்னை அளவின் மிக்கு வெளிப்படுதலான்.

உரை விளக்கம்

களித்தறியேன் எனக் காரியத்தான் கூறினார்.

இவை இரண்டுபாட்டானும், அது மறைக்கப்படாது என்பது கூறப்பட்டது.

## குறள் **929** **(**களித்தானைக் **)**

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க் ( ) களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ் நீர்க்

குளித்தானைத் தீத்துரீஇ யற்று. (09) குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

தொடரமைப்பு: களித்தானைக் காரணம் காட்டுதல், நீர்க் கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

இதன்பொருள்

களித்தானைக் காரணம் காட்டுதல்= கள்ளுண்டு களித்தான் ஒருவனை, இஃது ஆகாது என்று பிறன் ஒருவன், காரணம் காட்டித் தெளிவித்தல்; நீர்க் கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇயற்று= நீருள் மூழ்கினான் ஒருவனைப் பிறன் ஒருவன் விளக்கினால் நாடுதலை ஒக்கும்.

உரை விளக்கம்

களித்தானை என்னும் இரண்டாவது, "அறிவுடை அந்தணன் அவளைக் காட்டுஎன்றானோ" (கலித்தொகை, மருதக்கலி: 7) என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச் செல்லாதாற்போல

அவன் மனத்துக் காரணம் செல்லாது என்பதாம்.

இதனான் அவனைத் தெளிவித்தல் முடியாது என்பது கூறப்பட்டது.

# குறள் 930 (கள்ளுண்ணாப் )

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா () கள் உண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்

லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. (10) உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.

தொடரமைப்பு: கள் உண்ணாப் போழ்தில் களித்தானைக், காணுங்கால் உண்டதன் சோர்வு உள்ளான்கொல்.

இதன்பொருள்

கள் உண்ணாப் போழ்தில் களித்தானைக்= கள்ளுண்பான் ஒருவன், தான் அஃது உண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டுகளித்த பிறனைக் காணும் அன்றே; காணுங்கால் உண்டதன் சோர்வு உள்ளான்கொல்= காணுங்கால் தான் உண்டபொழுது உளதாம் சோர்வினை, அவன் சோர்வால் அதுவும் இற்று என்று கருதான் போலும்.

உரை விளக்கம்

சோர்வு- மன, மொழி, மெய்கள் தன்வயத்த அல்லவாதல்.

கருதல் அளவையான், அதன் இழுக்கினை உய்த்து உணரின் ஒழியும், என இதனால் அஃது ஒழிதற்காரணம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **94.**சூது

அதிகார முன்னுரை

இனி, அக்கள்ளுண்டல் போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலும் கூறுவான் தொடங்கி, முதற்கட் சூதினது இயல்பு கூறுகின்றார்.

## குறள் **931 (**வேண்டற்க **)**

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் ( ) வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்

தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. (01) தூண்டில் பொன் மீன் விழுங்கி அற்று.

தொடரமைப்பு: வென்றிடினும் சூதினை வேண்டற்க, வென்றதூஉம் தூண்டில் பொன் மீன் விழுங்கியற்று.

இதன்பொருள்

வென்றிடினும் சூதினை வேண்டற்க= தான் வெல்லும் ஆற்றல் உடையனாயினும் சூதாடலை விரும்பாதொழிக; வென்றதூஉம் தூண்டில் பொன் மீன்விழுங்கியற்று= வென்ற பொருள் எய்துவார் உளராலெனின், அவ்வென்ற பொருள்தானும் இரையான் மறைந்த தூண்டில் இரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற் போலும்.

உரைவிளக்கம்

வேறல் ஒருதலையன்மையின் 'வென்றிடினும்' என்றும், கருமங்கள் பலவும் கெடுதலின் 'வேண்டற்க' என்றும் கூறினார். எய்திய பொருள், சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தளையென்பதூஉம், அதன்பின் துயருழத்தலும் உவமையாற் பெற்றாம்.

# குறள் 932 (ஒன்றெய்தி )

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ ( ) ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் உண்டாம் கொல்

னன்றெய்தி வாழ்வதோ ராறு. (02) நன்று எய்தி வாழ்வது ஓர் ஆறு.

தொடரமைப்பு: ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும், நன்று எய்தி வாழ்வது ஓராறு உண்டாம்கொல்.

இதன்பொருள்

ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும்= அத்தூண்டிற் பொன் போன்ற ஒன்றனை முன்பெற்று இன்னும் பெறுதும் என்னும் கருத்தால் நூற்றினை இழந்து வறியராம் சூதர்க்கும்; நன்று எய்தி வாழ்வது ஓராறு உண்டாம்கொல்= பொருளால் அறனும் இன்பமும் எய்தி வாழ்வதொரு நெறியுண்டாமோ, ஆகாது.

உரை விளக்கம்

அவ்வாற்றாற் பொருள் இழந்தே வருதலான், அதனால் எய்தும் பயனும் அவர்க்கு இல்லை என்பதாம்.

## குறள் **933 (**உருளாய **)**

உருளாய மோவாது கூறிற் பொருளாயம் ( ) உருள் ஆயம் ஓவாது கூறின் பொருள் ஆயம்

போஒய்ப் புறமே படும். (03) போஒய்ப் புறமே படும்.

தொடரமைப்பு**:** உருள் ஆயம் ஓவாது கூறின், பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும்

இதன்பொருள்

உருள் ஆயம் ஓவாது கூறின்= உருளும் கவற்றின்கட்பட்ட ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின்; பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும்= அரசன் ஈட்டிய பொருளும், அவன் பொருள் வருவாயும் அவனை விட்டுப் போய்ப் பகைவர்கண்ணே தங்கும்.

உரை விளக்கம்

கவற்றினது உருட்சியை அதனினாய ஆயத்தின் மேலேற்றியும், சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மேலிட்டுங் கூறினார்.

பொருளாயம் என்பது உம்மைத்தொகை. ஆயம்- வடமொழித் திரிசொல். காத்தற்கண்ணும், இயற்றற்கண்ணும் கருத்திலன் ஆகலின், அவையிரண்டும் பகைவர்பாற் செல்லும் என்பதாம்.

## குறள் **934** (சிறுமைபல )

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின் ( ) சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின்

வறுமை தருவதொன் றில். (04) வறுமை தருவது ஒன்று இல்.

**தொடரமைப்பு: சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின், வறுமை தருவது ஒன்று இல்.**

இதன்பொருள்

சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின் = தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத பல துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ளபுகழையும் கெடுக்கும் சூதுபோல்; வறுமை தருவது ஒன்று இல்= நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை.

உரை விளக்கம்

அத்துன்பங்கள் முன்னர்க்கூறுப. நல்வினைகளையும், நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையும், தீயினத்தையும் கூட்டுதலால், 'சீரழிக்கும்' என்றார். வறுமைக்கு எல்லையாவரென்பதாம்.

## குறள் **935** (கவறுங் )

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி () கவறும் கழகமும் கையும் தருக்கி

யிவறியா ரில்லாகி யார். (05) இவறியார் இல்லாகியார்.

தொடரமைப்பு: இல்லாகியார், கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார்.

இதன்பொருள்

இல்லாகியார்= முற்காலத்துத் தாம் உளராகியே இலராகி ஒழுகினார்; கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார்= கவற்றினையும், அஃதாடும் களத்தினையும், அவ்வாடற்கு வேண்டும் கைத்தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர்.

உரை விளக்கம்

கைத்தொழில்- வெல்லும் ஆயம்படப் பிடித்து எறிதல். அவ்விவறுதலாற் பாண்டவர், தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டு மறைந்து ஒழுகினார் என அனுபவம் காட்டியவாறு.

இவை ஐந்து பாட்டானும் அதனது வறுமைபயத்தற் குற்றம் கூறப்பட்டது.

# குறள் 936 (அகடாரா )

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு ( ) அகடு ஆரார் அல்லல் உழப்பர் சூது என்னும்

முகடியான் மூடப்பட் டார். (06) முகடியான் மூடப்பட்டார்.

தொடரமைப்பு: சூது என்னும் முகடியான் மூடப்பட்டார், அகடு ஆரார் அல்லல் உழப்பர்.

இதன்பொருள்

சூது என்னும் முகடியான் மூடப்பட்டார்= தன் பெயர்சொல்லல் மங்கலம் அன்மையின் சூது என்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார்; அகடு ஆரார் அல்லல் உழப்பர்= இம்மைக்கண் வயிறாரப் பெறார், மறுமைக்கண் நிரயத் துன்பம் உழப்பர்.

உரை விளக்கம்

செல்வம் கெடுத்து, நல்குரவு கொடுத்தல் தொழில் வேறுபடாமையின் 'சூது என்னும் முகடி' என்றும், வெற்றிதோல்விகள் நோக்கி ஒருபொழுதும் விடார் ஆகலின், ஈண்டு 'அகடு ஆரார்' என்றும், பொய்யும் களவும் முதலிய பாவங்கள் ஈட்டலின், ஆண்டு 'அல்லல் உழப்பர்' என்றும் கூறினார். வயிறு ஆராமை சொல்லவே, ஏனைப்புலன்கள் நுகரப்பெறாமை சொல்லவேண்டாவாயிற்று. 'உழப்பர்' என்பது எதிர்கால வினை.

# குறள் **937** (பழகிய )

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்கும் ( ) பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்

கழகத்துக் காலை புகின். **(07)** கழகத்துக் காலை புகின்.

தொடரமைப்பு: காலை கழகத்துப் புகின், பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்.

இதன்பொருள்

காலை கழகத்துப் புகின்= அறம் பொருள் இன்பங்களுக்கடைத்த

காலம் அரசனுக்குச் சூதாடும் களத்தின்கண் கழியுமாயின்; பழகியசெல்வமும் பண்பும் கெடுக்கும்= அக்கழிவு தொன்றுதொட்டு வந்த அவன் செல்வத்தினையும், நற்குணங்களையும் போக்கும்.

உரை விளக்கம்

'பழகிய' என்பது பண்புடனும் இயையும். தான் செய்து கொள்ளும் அறமுதலியவே அன்றி, முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும், முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாம் என்பதாம்.

## குறள் 938 (பொருள்கெடுத்துப் )

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத் ( ) பொருள் கெடுத்துப் பொய் மேற்கொளீஇ அருள் கெடுத்து

தல்ல லுழப்பிக்குஞ் சூது. (08) அல்லல் உழப்பிக்கும் சூது.

தொடரமைப்பு: சூது, பொருள் கெடுத்து, பொய் மேற்கொளீஇ, அருள்கெடுத்து, அல்லல் உழப்பிக்கும்.

இதன்பொருள்

சூது= சூது; பொருள் கெடுத்து= தன்னைப் பயின்றவன் பொருளைக் கெடுத்து; பொய்மேற்கொளீஇ= பொய்யை மேற்கொள்ளப்பண்ணி; அருள்கெடுத்து= மனத்து எழும் அருளைக் கெடுத்து; அல்லல் உழப்பிக்கும்= இவ்வாற்றான் அவனை இருமையினும் துன்பம் உறுவிக்கும்.

உரை விளக்கம்

இத்தொழில் மூன்றற்கும் 'சூது' வினைமுதலாகவும், தோல்வி,

வெற்றி, செற்றம் என்பன முறையே கருவிகளாகவும் கொள்க. முன்னதனான் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினுமாம். பொருள்கொடுத்து என்பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிவு மேற்கொளீஇ என்புழி, மேற்கோடலாகிய வினைமுதல்வினை.

## குறள் 939 ( உடைசெல்வ)

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து ( ) உடை, செல்வம், ஊண், ஒளி, கல்வி என்று ஐந்தும்

மடையாவா மாயங் கொளின். (09) அடையாவாம் ஆயம் கொளின்.

தொடரமைப்பு: ஆயம் கொளின், ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்ற ஐந்தும் அடையாவாம்.

இதன்பொருள்

ஆயம் கொளின்= அரசன் சூதினைத் தனக்கு வினோதத் தொழிலாக விரும்புமாயின்; ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்ற ஐந்தும் அடையாவாம்= அவனை ஒளியும், கல்வியும், செல்வமும், ஊணும், உடையும் என்ற இவ்வைந்தும் சாராவாம்.

உரை விளக்கம்

'ஆயம்'- ஆகுபெயர். இச்சிறப்புமுறை செய்யுள்நோக்கிப் பிறழநின்றது. 'செல்வம்'- அறுவகையுறுப்புக்கள். 'ஊணுடை' என்பனவற்றால், துப்புரவுகள் எல்லாம் கொள்ளப்படும். காலமும் கருத்தும் பெறாமையின், இவை உளவாகாவென்பதாம்.

இவை நான்கு பாட்டானும் சிறுமைபல செய்து அவற்றான் இருமையுங் கெடுத்தல் கூறப்பட்டது.

# குறள் 940 (இழத்தொறூஉங் )

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப () இழத்தொறூஉம் காதலிக்கும் சூதே போல் துன்பம்

முழத்தொறூஉங் காதற் றுயிர். (10) உழத்தொறூஉம் காதற்று உயிர்.

**தொடரமைப்பு: இழத்தொறூஉம் காதலிக்கும் சூதே போல், துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயிர்.**

இதன்பொருள்

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல்= சூதாடலான் இருமைப் பயன்களையும் இழக்கும்தோறும் அதன்மேல் காதல்செய்யும் சூதன்போல; துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயி்ர்= உடம்பான் மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்கும்தோறும் அதன்மேற் காதலை உடைத்து உயி்ர்.

உரை விளக்கம்

'சூது'- ஆகுபெயர். உயிரினது அறியாமை கூறுவார்போன்று சூதனது அறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற்பொருட்டு உவமம் ஆக்கிக் கூறினார். இதனது எதிர்மறை முகத்தாற் சூதினை வெறுத்தொழிவானை ஒக்கும், உடம்பினை வெறுத்தொழியும் உயிர் எனவும் கொள்க.

இதனான் அஃது ஒழிதற்கு அருமையும், ஒழிந்தாரது பெருமையும் கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்-அங்கவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **95.**மருந்து

அதிகார முன்னுரை

பழவினையானும், காரணங்களானும் மக்கட்கு, வாத முதலிய பிணிகள் வரும். அவற்றுட் பழவினையான வருவன அதன் கழிவின்கண் அல்லது தீராமையின் அவையொழித்து, ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறங்கூறுகின்றார். காரணங்களாவன- உணவு, செயல்களது ஒவ்வாமையாகலின், பிணிகளும் காரணத்தான் வருவனவாயின.

## குறள் **941 (**மிகினுங் **)**

மிகினுங் குறையினு நோய் செய்யு நூலோர் ( ) மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்

வளிமுதலா வெண்ணிய மூன்று. (01) வளி முதலா எண்ணிய மூன்று.

தொடரமைப்பு: மிகினும் குறையினும், நூலோர் வளி முதலா எண்ணிய மூன்றும் நோய் செய்யும்.

இதன்பொருள்

மிகினும் குறையினும்= உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த அளவி◌னவன்றி அதனின் மிகுமாயினும், குறையுமாயினும்; நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் நோய் செய்யும்= ஆயுள்வேதம் உடையாரால் வாத முதலாக எண்ணப்பட்ட மூன்றுநோயும் அவனுக்குத் துன்பம் செய்யும்.

உரைவிளக்கம்

நூலோர் எண்ணியவெனவே, அவர் அவற்றான் வகுத்த வாதப்பகுதி, பித்தப்பகுதி, ஐப்பகுதி என்னும பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றிற்கு உணவு ஒத்தலாவது, சுவை வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்கள் ஒத்தலாவது மனமொழி மெய்களாற் செய்யும் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே ஒழிதல் இவை இரண்டும் இங்ஙனமன்றி மிகுதல் குறைதல் செய்யின், அவை தத்தம் நிலையின்நில்லாவாய் வருத்தும் என்பதாம். காரணம் இரண்டும் அவாய்நிலையான் வந்தன. முற்றும்மை விகாரத்தான் தொ◌ககது. இதனால் யாக்கைகட்கு இயல்பாகிய நோய் மூவகைத்து என்பதூஉம், அவை துன்பம் செய்தற்காரணம் இருவகைத்து என்பதூஉம் கூறப்பட்டன. இன்பம் செய்தற்காரணம் முன்னர்க்கூறுப.

## குறள் 942 (மருந்தென )

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய ( ) மருந்து என வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது

தற்றது போற்றி யுணின். (02) அற்றது போற்றி உணின்.

தொடரமைப்பு: அருந்தியது அற்றது போற்றி உணின், யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம்.

இதன்பொருள்

அருந்தியது அற்றது போற்றி உணின்= ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளான் தெளியவறிந்து பின் உண்ணுமாயின்; யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம்= அவன்யாக்கைக்கு மருந்தென்று வேறு வேண்டாவாம்.

உரை விளக்கம்

குறிகளாவன: யாக்கை நொய்ம்மை, தேக்கின்தூய்மை, கரணங்கள் தொழிற்கு உரியவாதல், பசிமிகுதல் என இவை முதலாயின. பிணிகள் யாக்கையவாதலின், 'யாக்கைக்கு' என்றார். 'உணின்' என்பது, அதன் அருமைதோன்ற நின்றது.

## குறள் **943** (அற்றால் )

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு ( ) அற்றால் அளவு அறிந்து உண்க அஃது உடம்பு

பெற்றா னெடிதுய்க்கு மாறு. (03) பெற்றான் நெடிது உய்க்குமாறு.

தொடரமைப்பு: அற்றால் அளவு அறிந்து உண்க, உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு அஃது.

இதன்பொருள்

அற்றால் அளவு அறிந்து உண்க= முன் உண்டது அற்றால் பின் உண்பதனை அறும் அளவறிந்து அவ்வளவிற்றாக உண்க; உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு அஃது= இறப்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கு அரிய இம்மானுட யாக்கையைப பெற்றான், அதனை நெடுங்காலம் கொண்டுசெலுத்து நெறி அதுவாகாலான்.

உரை விளக்கம்

இம்மை மறுமை வீடுபேறுகள் எய்தற்பாலது ஈதொன்றுமேயாகலின், 'உடம்பு பெற்றான்' என்றும், அது நெடிது நின்றுழி அவை பெருகச் செய்துகொள்ளலாம் ஆகலின் 'நெடிது உய்க்குமாறு' என்றும் கூறினார். பெற்றால் என்று பாடம்ஓதுவாரும் உளர்.

## குறள் 944 (அற்றதறிந்து )

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல ( ) அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறு அல்ல

துய்க்க துவரப் பசி்த்து. (04) துய்க்கத் துவரப் பசித்து.

தொடரமைப்பு: அற்றது அறிந்து, துவரப் பசித்து, மாறு அல்ல கடைப்பிடித்துத் துய்க்க.

இதன்பொருள்

அற்றது அறிந்து= முன்னுண்டது அற்றபடியை அறிந்து; துவரப்பசித்து= பின் மிகப்பசித்து; மாறல்ல கடைப்பிடித்துத் துய்க்க= உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கொண்டு உண்க.

உரை விளக்கம்

'அற்றது அறிந்து' என்னும் பெயர்த்துரை அதனை யாப்புறுத்தற்பொருட்டு. உண்டது அற்றாலும், அதன் பயனாகிய இரதம் அறாதாகலான், அதுவும் அறவேண்டும் என்பார் 'மிகப்பசித்து' என்றார். பசித்தல் வினை ஈண்டு உடையான்மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது, உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களான் தம்முள் மாறுகொள்ளாமையும் ஆம். அவையாவன முறையை வாத பித்த ஐகளான் ஆய பகுதிக்கு அடாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது, சிறுபொழுது என்னும் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனுநெய்யுந் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது, மனம்பட்டவாற்றால் துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், 'கடைப்பிடித்து' என்றார்.

# குறள் **945** (மாறுபாடில்லாத )

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி ( ) மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்

னூறுபா டில்லை யுயிர்க்கு. (05) ஊறுபாடு இல்லை உயிர்க்கு.

தொடரமைப்பு: மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின், உயிர்க்கு ஊறுபாடு இல்லை.

இதன்பொருள்

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்= அம்மூவகை மாறுகோளும் இல்லாத உணவைத் தன்னுள்ளம் வேண்டிய

அளவினான்அன்றிப் பிணிவாரா அளவினால் ஒருவன் உண்ணுமாயின்; உயிர்க்கு ஊறுபாடு இல்லை= அவன் உயிர்க்குப் பிணிகளால் துன்பம் விளைதல் உண்டாகாது.

உரை விளக்கம்

உறுவதனை 'ஊறு' என்றார். அஃது இன்பத்திற்செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரே ஆகலின் அதன்மேல் வைத்துக்கூறினார். மாறுபாடு இல்வழியும் குறைதல் நன்று என்பதாம்.

இவை நான்கு பாட்டானும், உண்ணப்படுவனவும்,அவற்றது அளவும், காலமும் பயனும் கூறப்பட்டன.

## குறள் **946** (இழிவறிந்து )

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும் ( ) இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம் போல் நிற்கும்

கழிபே ரிறையான்க ணோய். (06) கழி பேர் இரையான்கண் நோய்.

தொடரமைப்பு: இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல், கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும்.

இதன்பொருள்

இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல்= அக்குறைதலை நன்று என்று அறிந்து அவ்வாறே உண்பவன்மாட்டு இன்பம்நீங்காது நிலை நிற்குமாறுபோல்; கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும்= மிகப்பெரிய இரையை விழுங்குவான் மாட்டு நோய்நீங்காது நிலைநிற்கும்.

உரை விளக்கம்

அவ்வாறே உண்டல்- உண்ணலாம் அளவிற் சிறிது குறைய உண்டல். இன்பமாவது- வாத முதலிய மூன்றும் தத்தம் நிலையில் திரியாமையின் மன மொழி மெய்கள் அவன் வயத்தவாதலும், அதனான் அறமுதலிய நான்கும் எய்தலும்ஆம். இரையை அளவின்றி எடுத்து அதனான் வருந்தும் விலங்கோடு ஒத்தலின், 'இரையான்' என்றார். விதி எதிர்மறைகளை, உவமும் பொருளும் ஆக்கியது இரண்டானும் பெறுதற்கு.

## குறள்**497** **(**தீயளவின்றித் **)**

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி ( ) தீ அளவு அன்றித் தெரியான் பெரிது உண்ணின்

னோயள வின்றிப் படும். (07) நோய் அளவு இன்றிப் படும்.

தொடரமைப்பு: தெரியான் தீயளவு அன்றிப் பெரிது உண்ணி ் ன், நோய் அளவு இன்றிப் படும்.

இதன்பொருள்

தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின்= தன்பகுதியும், அதற்கு ஏற்ற உணவும் காலமும் ஆராயாது வேண்டியதோர் உணவை வேண்டியதோர் காலத்து வயிற்றுத் தீயளவன்றி ஒருவன் மிகஉண்ணுமாயின்; நோய் அளவு இன்றிப்படும்= அவன் மாட்டு நோய்கள் எல்லையற வளரும்.

உரை விளக்கம்

தெரியாமை வினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன. நோய்- சாதியொருமை.

இவை இரண்டு பாட்டானும் அவ்வகை உண்ணாவழிப்படும்

இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் 948 (நோய்நாடி)

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும் ( ) நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்

வாய்நாடி வாய்ப்பச் செயல். (08) வாய் நாடி வாய்ப்பச் செயல்.

தொடரமைப்பு: நோய்நாடி, நோய்முதல் நாடி, அது தணிக்கும் வாய்நாடி, வாய்ப்பச்செயல்.

இதன்பொருள்

நோய் நாடி= மருத்துவன்ஆயினான் ஆதுரன் மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து; நோய் முதல் நாடி= பின் அது வருதற் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து; அது தணிக்கும் வாய்நாடி= பின் அது தீர்க்கும் உபாயத்தினை அறிந்து; வாய்ப்பச் செயல்= அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க.

உரை விளக்கம்

காரணம்- உணவு, செயல் என முற்கூறிய இரண்டும். அவற்றை ஆயுள் வேதமுடையார் நிதானம் என்ப. அவை நாடுதற் பயன் நோயினையும், வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்து செய்தல், உதிரம் களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, 'அது தணிக்கும் வாய்' என்றார். "கழுவாயுமுள" என்றார் பிறரும் (புறநானூறு, 34.). பிழையாமை- பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறைமையில் தப்பாமை.

## குறள் 949 ( உற்றானளவும்)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங் ( ) உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்

கற்றான் கருதிச் செயல். (09) கற்றான் கருதிச் செயல்.

தொடரமைப்பு: கற்றான், உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல்.

இதன்பொருள்

கற்றான்= ஆயுள் வேதத்தினைக் கற்ற மருத்துவன்; உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல்= அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுரன் அளவினையும், அவன்கண் நிகழ்கின்ற நோயின் அளவினையும், தன் செயற்கு ஏற்ற காலத்தினையும் அந்நூல் நெறியால் நோக்கி, அவற்றோடு பொருந்தச் செய்க.

உரை விளக்கம்

ஆதுரன்அளவு- பகுதி, பருவம், வேதனை வலிகளின் அளவு. பிணியளவு- சாத்தியம், அசாத்தியம், யாப்பியம் என்னும் சாதிவேறுபாடும், தொடக்கம் நடு ஈறு என்னும் அதன் பருவவேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம்- மேற்சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வுமிகுதியானும் ஆராய்ந்து செய்க என்பார் 'கற்றான் கருதிச் செயல்' என்றார்.

## குறள் 950 (உற்றவன் )

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென் () உற்றவன் தீர்ப்பான் மருந்து உழைச்செல்வான் என்று

றப்பானாற் கூற்றே மருந்து. (10) அப்பால் நாற்கூற்றே மருந்து

தொடரமைப்பு:மருந்து, உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான், என்று அப்பால் நாற்கூற்றே.

இதன்பொருள்

மருந்து= பிணிக்கு மருந்தாவது; உற்றவன்= அதனையு◌ற்றவன்; தீர்ப்பான்= அதனைத் தீர்க்கும் மருத்துவன்; மருந்து= அவனுக்குக் கருவியாகிய மருந்து;உழைச்செல்வான் என்ற அப்பால் நாற்கூற்றே= அதனைப் பிழையாமல் இயற்றுவான் என்று சொல்லப்பட்ட நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது.

உரை விளக்கம்

'நான்கு' என்னும் எண் வருகின்றமையின், அதுநோக்கி 'அப்பால்' என்று ஒழிந்தார். நாற்கூற்றது என்பது விகாரம் ஆயிற்று. அவற்றுள் 'உற்றவன்'வகை நான்காவன- பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலை உணர்த்தல் வன்மை, மருத்துத் துன்பம் பொறுத்தல் எனஇவை. 'தீர்ப்பான்' வகை நான்காவன- நோய்கண்டு அஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டு ஓதிய கல்வியும் நுண்ணறிவும் உடைமை, பலகாலும் தீர்த்துவருதல், மன மொழி மெய்கள் தூயவாதல் என இவை. 'மருந்'தின் வகை நான்காவன- பல பிணிகட்கும் ஏற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதின் எய்தப்படுதல், பகுதியொடு பொருந்துதல் என இவை. 'இயற்றுவான்' வகை நான்காவன- ஆதுரன்மாட்டு அன்புடைமை, மன மொழி மெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமை என இவை. இவையெல்லாம் கூடியவழியல்லது பிணிதீராமையின், இத்தொகுதியையும் மருந்து

என்றார். ஆயுள் வேதமுடையாரும், இவை கால்களாக நடக்கும் என்பதுபற்றிப் பாதம் என்றும், இவை மாறுபட்டவழிச் சாத்தியமும் முதிர்ந்து அசாத்தியமாம் என்றும் கூறினார்.
இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவன எல்லாம் தொகுத்துக் கூறப்பட்டன.

அங்கவியல் முற்றிற்று

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## இயல்முன்னுரை

இனி, அவ்வரசியலிலும் அங்கவியலிலும் அடங்காது ஒழிந்தவற்றது இயல்பு, பதின்மூன்றுஅதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் குடிமை கூறுகின்றார்.

## அதிகாரம் **96.**குடிமை

அதிகார முன்னுரை

அஃதாவது, உயர்ந்த குடியின்கண் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.

# குறள் **951 (**இற்பிறந்தார் **)**

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச் **( )** இல் பிறந்தார்கண் அல்லது இல்லை இயல்பாகச்

செப்பமும் நாணு மொருங்கு. (01) செப்பமும் நாணும் ஒருங்கு.

தொடரமைப்பு**:** செப்பமும் நாணும் ஒருங்கு**,** இற்பிறந்தார்கண் அல்லது இயல்பாக இல்லை.

இதன்பொருள்

செப்பமும் நாணும் ஒருங்கு= செம்மையும் நாணும் சேர**;** இற்பிறந்தார்கண் அல்லது இயல்பாக இல்லை= குடிப்பிறந்தார் மாட்டல்லது பிறர்மாட்டு இயற்கையாக உளவாகா.

உரைவிளக்கம்

இல்லு குடி குலம் என்பன ஒருபொருள். ஈண்டு உயர்ந்தவற்றின் மேல. செம்மை**:** கருத்தும் சொலலும் செயலும் தம்முண் மாறாகாமை. நாண்**:** பழி**,** பாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின்**,** ஒருவர் கற்பிக்கவேண்டாமல் தாமே உளவாம். பிறர்க்காயின் கற்பித்தவழியும் நெடிது நில்லா என்பதாம்.

# குறள் **952 (**ஒழுக்கமும் **)**

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று **( )** ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம் மூன்றும்

மிழுக்கார் குடிப்பிறந் தார். (02) இழுக்கார் குடிப்பிறந்தார்.

தொடரமைப்பு: குடிப்பிறந்தார், ஒழுக்கமும், வாய்மையும், நாணும் இம்மூன்றும் இழுக்கார்.

இதன்பொருள்

குடிப்பிறந்தார்= உயர்ந்த குடியின்கண் பிறந்தார்; ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார்= தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாண் எனப்பட்ட இமமூன்றன் கண்ணும் கல்வியான் அன்றித் தாமாகவே வழுவார்.

உரை விளக்கம்

ஒழுக்கம் முதலியன மெய்ம் மொழி மனங்களின ஆகலின், அம்முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், 'இழுக்கார்' என்றார்.

# குறள் **953** (நகையீகை )

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும் ( ) நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும்

வகையென்ப வாய்மைக் குடிக்கு. (03) வகை என்ப வாய்மைக் குடிக்கு.

தொடரமைப்பு: வாய்மைக் குடிக்கு, நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப.

இதன்பொருள்

வாய்மைக் குடிக்கு= எக்காலத்தும் திரிபில்லாத குடியின்கண் பிறந்தார்க்கு; நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப= வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன

கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறு என்று சொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்

பொய்ம்மை திரிபுடைமையின் திரிபின்மையை 'வாய்மை' என்றும், "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்" ஆகலின், இகழாமையை அவர்கூறாக்கியும் கூறினார். 'குடி' ஆகுபெயர். 'நான்கின் வகை' என்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந்நான்கான் உளதாம் என்று உரைக்க.

இவை மூன்று பாட்டானும் குடிப்பிறந்தாரது இயல்பு கூறப்பட்டது.

## குறள் **954** ( அடுக்கிய)

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார் ( ) அடுக்கிய கோடி பெறினும் குடிப் பிறந்தார்

குன்றுவ செய்த லிலர். **(04)** குன்றுவ செய்தல் இலர்.

தொடரமைப்பு**:** அடுக்கிய கோடி பெறினும், குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர்.

இதன்பொருள்

அடுக்கிய கோடி பெறினும்= பலவாக அடுக்கிய கோடி அளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும்; குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர்= உயர்ந்த குடியின்கண் பிறந்தார் தம் ஒழுக்கம் குன்றும் தொழில்களைச் செய்யார்.

உரை விளக்கம்

அடுக்கிய கோடி என்பது, ஈண்டு எண்ணப்படும் பொருள் மேல்

நின்றது. குன்றுந் தொழில்கள் குன்றுதற்கு ஏதுவாய தொழில்கள்.

# குறள் 955 (வழங்குவ )

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி ( ) வழங்குவது உள் வீழ்ந்தக் கண்ணும் பழம் குடி

பண்பிற் றலைப்பிரித லின்று. (05) பண்பில் தலைப்பிரிதல் இன்று.

தொடரமைப்பு: பழங்குடி, வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும், பண்பின் தலைப்பிரிதல் இன்று.

இதன்பொருள்

பழங்குடி= தொன்றுதொட்டு வருகின்ற குடியின்கண் பிறந்தார்; வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும்= தாம் கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய இடத்தும்; பண்பின் தலைப்பிரிதல் இன்று= தம் பண்புடைமையின் நீங்கார்.

உரை விளக்கம்

தொன்றுதொட்டு வருதல் சேர சோழ பாண்டியர் என்றாற் போலப் படைப்புக்காலம் தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது, 'வழங்குவது உள்வீழ்வது' ஆகலின், அதனையே கூறினார்.

# குறள் 956 (சலம்பற்றிச் )

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற ( ) சலம் பற்றிச் சால்பு இல செய்யார் மாசு அற்ற

குலம்பற்றி வாழ்துமென் பார். (06) குலம் பற்றி வாழ்தும் என்பார்.

தொடரமைப்பு: மாசு அற்ற குலம் பற்றி வாழ்தும் என்பார், சலம் பற்றிச் சால்பு இல செய்யார்.

இதன்பொருள்

மாசு அற்ற குலம் பற்றி வாழ்தும் என்பார்= வசையற்று வருகின்ற நம் குடிமரபினோடு ஒத்து வாழக்கடவேம் என்று கருதி அவ்வாறு வாழ்வார்; சலம் பற்றிச் சால்பு இல செய்யார்= வறுமையுற்றவழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவிலவாய தொழில்களைச் செய்யார்.

உரை விளக்கம்

அமைவின்மை: அம்மரபிற்கு ஏலாமை.

இவை மூன்று பாட்டானும், அவர் வறுமையுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடார் என்பது கூறப்பட்டது.

# குறள் 957 (குடிப்பிறந்தார் )

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின் ( ) குடிப் பிறந்தார் கண் விளங்கும் குற்றம் விசும்பின்

மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. (07) மதிக் கண் மறுப்போல் உயர்ந்து.

தொடரமைப்பு: குடிப்பிறந்தார்கண் குற்றம், விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும்.

இதன்பொருள்

குடிப்பிறந்தார்கண் குற்றம்= உயர்ந்த குடியின்கண் பிறந்தார்மாட்டு உளதாம் குற்றம்; விசும்பின் மதிக்கண்

மறுப்போல் உயர்ந்து விளங்கும்= தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும்.

உரை விளக்கம்

உயர்குடி முதலிய பொருள்வகை மூன்றற்கும், விசும்பு முதலிய உவமை வகையொத்துப் பான் மாறுபட்டது. குடியது உயர்ச்சியானும், மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறாதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படும் என்பதாம்.

## குறள் 958 (நலத்தின்கண் )

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக் ( ) நலத்தின் கண் நார் இன்மை தோன்றின் அவனைக்

குலத்தின்க ணையப் படும். (08) குலத்தின் கண் ஐயப் படும்.

தொடரமைப்பு: நலத்தின்கண் நாரின்மை தோன்றின், அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்.

இதன்பொருள்

நலத்தின்கண் நான் இன்மை தோன்றின்= குல நலமுடையனாய் வருகின்றவன்கண்ணே ஈரமின்மை உளதாம் ஆயின்; அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்= அவனை அக்குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம்.

உரை விளக்கம்

நலமும் குலமும் ஆகுபெயர். 'நாரின்மை'யான் கொடாமையும், கடுஞ்சொல்லும் முதலிய கூறப்பட்டன. 'தோன்றின்' என்பது தோன்றாமை விளக்கிநின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உள்ளது ஐயமாயிற்று.

உலகம் என்பது அவாய்நிலையான் வந்தது. ஐயப்படல் என்பது பாடமாயின், ஐயப்படுக வென விதியாக்கி உரைக்க.

இவ்விரண்டு பாட்டானும், வேறுபட்டவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது.

# குறள் 959 (நிலத்திற் )

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங் ( ) நிலத்தின் கிடந்தமை கால் காட்டும் காட்டும்

குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். (09) குலத்தின் பிறந்தார் வாய்ச் சொல்.

தொடரமைப்பு: நிலத்தின் கிடந்தமை கால் காட்டும், குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல் காட்டும்.

இதன்பொருள்

நிலத்தின் கிடந்தமை கால் காட்டும்= நிலத்தின் இயல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்; குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல் காட்டும்= அதுபோலக் குலத்தின் இயல்பை அதன்கண் பிறந்தார் வாயி ் ற் சொல் காட்டும்.

உரை விளக்கம்

'கிடந்தமை': உள்ளபடி, முளைத்த மாத்திரத்தானே நன்மையும் தீமையும் தெரிதலின், இலை முதலிய கூறார் ஆயினார். ஆகவே, பொருளினும் செயல் முதலிய வேண்டாவாயின. குலத்தியல்பு அறிதற் கருவி கூறுவார் போன்று, இன்சொல் வேண்டும் என்றவாறு ஆயிற்று.

# குறள் **960** (நலம்வேண்டி )

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின் () நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும் குலம் வேண்டின்

வேண்டுக யார்க்கும் பணிவு. (10) வேண்டுக யார்க்கும் பணிவு.

தொடரமைப்பு: நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும், குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக.

இதன்பொருள்

நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும்= ஒருவன் தனக்கு நலன் உடைமையை வேண்டுவனாயின், நாணுடையன் ஆதலை வேண்டுக; குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக= குலன் உடைமையை வேண்டுவன் ஆயின், பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக.

உரை விளக்கம்

'நலம்'- புகழ் புண்ணியங்கள். 'வேண்டும்' என்பது, விதிப்பொருட்டாய் நின்றது. "வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்"Ė என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாய் என்று இவர்Ļ எல்லாரும் அடங்க யர்க்கும் என்றார். பணிவு இருக்கை எழலும், எதிர்செலவும்Ź முதலாயின.

இவை இரண்டு பாட்டானும், குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன.

Ė -தொல்காப்பியம்: சொல்லதிகாரம், கிளவியாக்கம்-நூற்பா.33

Ļ -புறப்பொருள்வெண்பா மாலை, பாடாண்- 33

# திருக்குறள் பொருட்பால்- 3. ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் 97. மானம்

அதிகார முன்னுரை

இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானம் கூறுகின்றார். அஃதாவது, எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாம். இஃது, அக்குடிப்பிறப்பினை நிறுத்துதல் உடைமையின், அச்சிறப்புப் பற்றி முன் வைக்கப்பட்டது.

## குறள் 961 (இன்றியமையாச் )

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங் () இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்

குன்ற வருப விடல். (01) குன்ற வருப விடல்.

தொடரமைப்பு: இன்றி அமையாச் சிறப்பின ஆயினும், குன்ற வருப விடல்.

இதன்பொருள்

இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்= செய்யாதவழித் தாம் அமையாத சிறப்பினை உடையவே எனினும்; குன்ற வருப விடல்= தம் குடிப்பிறப்புத் தாழவரும் செயல்களை ஒழிக.

உரை விளக்கம்

அமையாமை- இறத்தல். குடிப்பிறப்பு என்பது அதிகாரமுறைமையான் வந்தது. இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க வென்னும் வடநூன் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையியையும், மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்க என்பதாம்.

# குறள் 962(சீரினுஞ் )

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு () சீரினும் சீர் அல்ல செய்யாரே சீரொடு

பேராண்மை வேண்டு பவர் (02) பேராண்மை வேண்டுபவர்.

தொடரமைப்பு:சீரினும் சீர் அல்ல செய்யாரே, சீரொடு பேராண்மை வேண்டுபவர்.

இதன்பொருள்

சீரினும் சீர் அல்ல செய்யாரே= புகழ்செய்யும் இடத்தும் தம் குடிமைக்கு ஒவ்வாத இளிவரவுகளைச் செய்யார்; சீரொடு

பேராண்மை வேண்டுபவர்= புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார்.

உரை விளக்கம்

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் 'பேராண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவும் செய்யார் என்பதாம்.

## குறள் 963 (பெருக்கத்து )

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய () பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய

சுருக்கத்து வேண்டு முயர்வு. (03) சுருக்கத்து வேண்டும் உயர்வு.

தொடரமைப்பு: பெருக்கத்துப் பணிதல் வேண்டும், சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும்.

இதன்பொருள்

பெருக்கத்துப் பணிதல் வேண்டும்= குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வம் உளதாயவழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்; சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும்= குறைந்த நல்குரவு உளதாயவழிப் பணியாமை வேண்டும்.

உரை விளக்கம்

பணியாமை, தாழ்வு வராமல் பழைய உயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை அஃது உயர்ச்சி செய்யத் தாம் தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வு செய்யத் தாம் உயர்தலும் வேண்டும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் தாம் தாழ்தற்கு ஏதுவாயின

செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் 964 (தலையினிழிந்த )

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர் () தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர்

நிலையி னிழிந்தக் கடை. (04) நிலையின் இழிந்தக் கடை.

தொடரமைப்பு: மாந்தர், நிலையின் இழிந்தக்கடை, தலையின் இழிந்த மயிர் அனையர்.

இதன்பொருள்

மாந்தர்= குடிப்பிறந்த மாந்தர்; நிலையின் இழிந்தக் கடை= தம் உயர்ந்த நிலையை விட்டு அதனினின்றும் தாழ்ந்தவழி; தலையின் இழிந்த மயி◌ர் அனையர்= தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை ஒப்பர்.

உரை விளக்கம்

அந்நிலையை விடாதுநின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும் உவமையாற் பெற்றாம்.

# குறள் 965 ( குன்றியனையாருங்)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ () குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ

குன்றி யனைய செயின். (05) குன்றி அனைய செயின்.

தொடரமைப்பு: குன்றின் அனையாரும், குன்றுவ குன்றி அனைய செயின் குன்றுவர்.

இதன்பொருள்

= குன்றின் அனையாரும்= குடிப்பிறப்பான் மலைபோல உயர்ந்தோரும்; குன்றுவ குன்றி அனைய செயின் குன்றுவர் = தாழ்தற்கு ஏதுவாய செயல்களை ஒருகுன்றியளவாயினும் செய்வராயின் தாழ்வர்.

உரை விளக்கம்

குன்றியனையவும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. தாழ்தற்கு ஏதுவாய செயல்களாவன இளிவந்தன. சொற்பின் வருநிலை.

# குறள் **966(**புகழின்றாற் **)**

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற் () புகழ் இன்றால் புத்தேள் நாட்டு உய்யாதால் என் மற்று

றிகழ்வார்பின் சென்று நிலை. (06) இகழ்வார் பின் சென்று நிலை.

தொடரமைப்பு: இகழ்வார் பின் சென்றுநிலை, புகழ் இன்றால், புத்தேள் நாட்டு உய்யாதால், என் மற்று.

இதன்பொருள்

இகழ்வார் பின் சென்றுநிலை= மானத்தைவிட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே ஒருவன்சென்று நிற்கின்ற நிலை; புகழ் இன்று= இவ்வுலகத்துப் புகழ் பயவாது; புத்தேள் நாட்டு உய்யாது= ஏனைப் புத்தேள் உலகத்துச் செலுத்தாது; மற்று என்=

இனி, அவனுக்கு அது செய்வது யாது?

உரை விளக்கம்

புகழ் பயப்பதனைப் புகழ் என்றார். பயனாய இவ்விரண்டும் இன்றிக் கொன்னே மானம் கெடுக்கின்றது என்னை என்பதாம். இவை மூன்று பாட்டானும் அவை செய்தற்குற்றம் கூறப்பட்டது.

# குறள் **967** **(**ஒட்டார்பின் **)**

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே () ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் அந் நிலையே

கெட்டா னெனப்படுத னன்று. (07) கெட்டான் எனப்படுதல் நன்று.

தொடரமைப்பு: ஒட்டார் பின்சென்று ஒருவன் வாழ்தலின், அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று.

இதன்பொருள்

ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின்= தன்னை இகழ்வார் பின்னே சென்று பொருள் பெற்று அதனால் ஒருவன் உயிர் வாழ்தலின்; அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று= அது செய்யாது இறந்தான் என்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று.

உரை விளக்கம்

ஒட்டுதல்- பொருந்துதல். 'அந்நிலையே' என்றது, செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்று என்றவாறு; அப்பொழுதே என்றுமாம். புகழும், புத்தேள் நாடும் பயவாதேனும் பொருள்பெற்று உயிர் வாழ்வாம் என்பாரை நோக்கிக் கூறியது.

# குறள் **968 (**மருந்தோ **)**

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை () மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை பெரும் தகைமை

பீடழிய வந்த விடத்து. (08) பீடு அழிய வந்த இடத்து.

தொடரமைப்பு**:** பெருந்தகைமை பீடு அழிய வந்த இடத்து, ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ?

இதன்பொருள்

பெருந்தகைமை பீடழிய வந்தவிடத்து= உயர்குடிப் பிறப்புத் தன் வலியாகிய மானம் அழிய வந்துழி; ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ= இறத்தல் ஒழிந்து பயனில்லாத உடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னும் இறவாமைக்கு மருந்தாகுமோ?

உரை விளக்கம்

'மற்று' என்பது, மேற்சொல்லிய இறப்பினை மாற்றிநின்றது. நற்குணங்கட்கு எல்லாம் இடனாதல் சிறப்புப்பற்றிப் 'பெருந்தகைமை' என்றும், அவை எல்லாவற்றுள்ளும் அதற்கு வலியாதல் சிறப்புப் பற்றிப் 'பீடு' என்றும், அஃது அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலின், அதனை 'ஊன்' என்றும், பின்னும் இறத்தல் ஒருதலை என்பார், 'மருந்தோ' என்றும் கூறினார். மானத்தின் தொழில் அதற்கு இடனாகி குடிப்பிறப்பின்மேல் நின்றது.

# குறள் **969(**மயிர்நீப்பின் **)**

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா () மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்

ருயிர்நீப்பர் மானம் வரின். (09) உயிர் நீப்பர் மானம் வரின்.

தொடரமைப்பு: மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார், மானம் வரின் உயிர் நீப்பர்.

இதன்பொருள்

மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்= தன் மயிர்த்திரளின் ஒருமயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமானை ஒப்பார்; மானம் வரின் உயிர் நீப்பர்= உயிர் நீங்கத் தான் மானம் எய்தும் எல்லைவரின், அதனைத் தாங்காது இறப்பர்.

உரை விளக்கம்

இழிவு சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. உயிரும் மானமும் உடன் நில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரை நீத்து, எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவர் என்பதாம். உவமை அவர்க்கு அஃது இயல்பு என்பது விளக்கி நின்றது.

# குறள் 970 (இளிவரின் )

இளிவரின் வாழாத மான முடையா () இளி வரின் வாழாத மானம் உடையார்

ரொளிதொழு தேத்து முலகு. (10) ஒளி தொழுது ஏத்தும் உலகு.

தொடரமைப்பு: இளிவரின் வாழாத மானம் உடையார் ஒளி, தொழுது ஏத்தும் உலகு.

இதன்பொருள்

இளிவரின் வாழாத மானம் உடையார் ஒளி= தமக்கோர் இழிவு வந்துழிப் பொறுத்து உயிர் வாழாது அதனை நீத்த மானம் உடையாரது புகழ் வடிவினை; தொழுது ஏத்தும் உலகு= எஞ்ஞான்றும் தொழுது துதியாநிற்பர் உலகத்தார்.

உரை விளக்கம்

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்/ வலவன் ஏவா வான வூர்தி/ எய்துவர்"Ȳ ஆகலி்ன், துறக்கச்செலவு சொல்லவேண்டா வாயிற்று.

இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

Ȳ- புறநானூறு, 27.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **98.** பெருமை

அதிகார முன்னுரை

அஃதாவது, செயற்கு அரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற்றம் கூறாமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை; நிலையினும் மேன்மேல் உயர்த்தற்[Ħ] பயத்தவாய இவை உளவாவது நிலையின் தாழாமை உள்வழியாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

Ħ.நாலடியார்,248.

## குறள் **971 (**ஒளியொருவற் **)**

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற் () ஒளி ஒருவற்கு

உள்ள வெறுக்கை இளி ஒருவற்கு

கஃதிறந்து வாழ்து மெனல். (01) அஃது இறந்து வாழ்தும் எனல்.

தொடரமைப்பு: ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை, ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல்.

இதன்பொருள்

ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை= ஒருவனுக்கு ஒளியாவது, பிறரால் செயற்கு அரிய செய்வேம் என்று கருதும் ஊக்கமிகுதி; ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல்= ஒருவனுக்கு மாசாவது, அச்செயலை ஒழிந்து உயிர்வாழக் கடவேம் என்று கருதுதல்.

உரை விளக்கம்

'ஒளி': தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை. "ஒளிநிறா னோங்குபுகழ் செய்யான்"Â என்றார் பிறரும். மேலும், "செயற்கரிய செய்வார் பெரியர்"Ê என்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த ஒப்புரவு, ஈகை முதலியவாம். அவற்றினானாய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு 'உள்ள வெறுக்கை' என்றும், அதுதன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியும் கூறினார். இவ்வாறு இதன் எதிர்மறைக்கண்ணும் ஒக்கும்.

இதனான் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.

Â.நாலடியார், 9.

Ê.குறள், 26.

# குறள் 972(பிறப்பொக்கு)

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா () பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா

செய்தொழில் வேற்றுமை யான். (02) செய் தொழில் வேற்றுமையான்.

தொடரமைப்பு: எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும், சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான்.

இதன்பொருள்

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும்= எல்லா மக்கள் உயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமே எனினும்; சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான்= பெருமை, சிறுமை எனப்பட்ட சிறப்பியல்கள் ஒவ்வா, அவை செய்யும் தொழில்களது வேறுபாட்டான்.

உரை விளக்கம்

வேறுபாடு: நல்லனவும், தீயனவும் இரண்டுமாயினவும், இரண்டும் அல்லவாயினவுமாய அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தான் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயன் அனுபவித்தல், எல்லா வருணத்தார்க்கும் ஒத்தலின் 'பிறப்பொக்கும்' என்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக் கல்[Ŵ]லாகிய தொழிற் பாகுபாடுகள் வருணந்தோறும், யாக்கைதோறும் வேறுபடுதலின் 'சிறப்பொவ்வா' என்றும் கூறினார்.

Ŵ. குறள், 505.

## குறள் **973** (மேலிருந்து )

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங் () மேல் இருந்தும் மேல் அல்லார் மேல் அல்லர் கீழ் இருந்தும்

கீழல்லார் கீழல் லவர் (03) கீழ் அல்லார் கீழ் அல்லவர்.

தொடரமைப்பு: மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர், கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லார்.

இதன்பொருள்

மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர்= செயற்கு அரிய செய்கலாது சிறியராயினார், உயர்ந்து அமளி முதலியவற்றின் மிசையிருந்தவராயினும், பெரியராகார்; கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லார்= அவை செய்து பெரியராயினார், தாழ்ந்த வறுநிலத்து இருந்தாராயினும், சிறியர் ஆகார்.

உரை விளக்கம்

மேலிருத்தல், கீழிருத்தல்களான் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன.
இவை இரண்டு பாட்டானும் முறையே குடிமை மாத்திரத்தானும், செல்வமாத்திரத்தானும் அஃது உளதாகாமை கூறப்பட்டது.

# குறள் 974 (ஒருமைமகளிரே )

ஒருமை மகளிரே போலப் பெருமையுந் () ஒருமை மகளிரே போலப் பெருமையும்

தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. (04) தன்னைத் தான் கொண்டு ஒழுகின் உண்டு.

தொடரமைப்பு: ஒருமை மகளிரே போலப், பெருமையும் தன்னைத்தான் கொண்டு ஒழுகின் உண்டு.

இதன்பொருள்

ஒருமை மகளிரே போல= கவராதமனத்தினை உடைய மகளிர் நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக்கொண்டு ஒழுகுமாறுபோல; பெருமையும் தன்னைத் தான் கொண்டொழுகின் உண்டு= பெருமைக்குணனும், ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத்தான் காத்துக்கொண்டு ஒழுகுவானாயின் அவன்கண் உண்டாம்.

உரை விளக்கம்

பொருளின் தொழில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் மன மொழி மெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்துபோதல். இதனால் அஃது உளதாமாறு கூறப்பட்டது.

## குறள் **975** (பெருமையுடைய )

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி () பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்

னருமை யுடைய செயல். (05) அருமை உடைய செயல்.

தொடரமைப்பு: பெருமை உடையவர், அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார்.

இதன்பொருள்

பெருமை உடையவர்= அவ்வாற்றான் பெருமையுடையர் ஆயினார்; அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார்= தாம் வறியராயவழியும், பிறரான் செய்தற்கு அரியவாய தம் செயல்களை விடாது அவை செய்யும் நெறியான் கடைபோகச்

செய்தலை வல்லராவர்.

உரை விளக்கம்

வறியராயவழியும் என்பது, முன்செய்து போந்தமை தோன்றப் 'பெருமையுடையவர்' என்றதனானும், 'ஆற்றுவார்' என்றதனானும் பெற்றாம். இதனால் அதனைஉடையார் செய்தி கூறப்பட்டது.

# குறள் 976(சிறியாரு )

சிறியா ருணர்ச்சியு ளி்ல்லை பெரியாரைப் ( ) சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்

பேணிக்கொள் வேமென்னு நோக்கு. (06) பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு.

தொடரமைப்பு: பெரியாரைப் பேணிக்கொள்வேம் என்னும் நோக்கு, சிறியார் உணர்ச்சியுள் இல்லை.

இதன்பொருள்

பெரியாரைப் பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு= அப்பெற்றியராய பெரியாரை வழிபட்டு அவர் இயல்பினை யாம் கோடும் என்னும் கருத்து; சிறியார் உணர்ச்சியுள் இல்லை= மற்றைச் சிறியராயினார் மனத்தின்கண் உளதாகாது.

உரை விளக்கம்

குடிமை, செல்வம், கல்வி என்று இவற்றது உண்மைமாத்திரத்தால் தாம் வியந்திருப்பார்க்கு, அவை நமக்கு இயல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃது உடையராதல் கூடாது என்பதாம்.

## குறள் **977 (**இறப்பே **)**

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான் () இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்பும் தான்

சீரல் லவர்கட் படின் (07) சீர் அல்லவர்கண் படின்.

தொடரமைப்பு**:** சிறப்புந்தான்**,** சீர் அல்லவர்கண் படின்**,** இறப்பே புரிந்த தொழிற்றாம்.

இதன்பொருள்

சிறப்புந்தான்= தனக்கு ஒக்கும் பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும்; சீர் அல்லவர்கண் படின்= தனக்கு ஒவ்வாத சிறியாரிடத்துப் படுமாயின்; இறப்பே புரிந்ததொழிற்றாம்= அதனை ஒழித்துத் தருக்கின்கண்ணே மிக்கசெயலை உடைத்தாம்.

உரை விளக்கம்

தருக்கினை மிகச்செய்யும் என்பதாயிற்று. சிறப்பு, குடிமை செல்வம் கல்விகளினாய மிகுதி.

இவை இரண்டு பாட்டானும் அஃது இலார் செய்தி கூறப்பட்டது.

## குறள் **978 (**பணியுமாம் **)**

பணியுமா மென்றும் பெருமை சிறுமை () பணியுமாம் என்றும் பெருமை சிறுமை

யணியுமாந் தன்னை வியந்து. (08) அணியுமாம் தன்னை வியந்து.

தொடரமைப்பு: பெருமை என்றும் பணியுமாம், சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியுமாம்.

இதன்பொருள்

பெருமை என்றும் பணியுமாம்= பெருமையுடையார், அச்சிறப்பு உண்டாய ஞான்றும் தருக்கின்றி அமைந்தொழுகுவர்; சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியுமாம்= மற்றைச் சிறுமையுடையார் அஃது இல்லாத ஞான்றும் தம்மை வியந்து புனையாநிற்பர்.

உரை விளக்கம்

பொருளின்தொழி்ல்கள் பண்பின்மேல் ஏற்றப்பட்டன. இஃது "அற்றமறைக்கும் பெருமை"Ş என்புழியும் ஒக்கும். என்றும் என்பது, பின்னும் வந்து இயைந்தது. ஆம் என்பன இரண்டும் அசை. புனைதல்: பிறரின் தமக்கோர் மிகுதியை ஏற்றிக்கோடல். இதற்கு உயர்ந்தார் தாழ்வார், தாழ்ந்தார் உயர்வார், இஃதொரு விரோதம் இருந்தவாறென் என உலகியலை வியந்து கூறிற்றாக்குவாரும் உளர்.

Ş.குறள், 980.

# குறள் 979 (பெருமைபெரு )

பெருமை பெருமித மின்மை சிறுமை () பெருமை பெருமிதம் இன்மை சிறுமை

பெருமித மூர்ந்து விடல். (09) பெருமிதம் ஊர்ந்து விடல்.

தொடரமைப்பு: பெருமை பெருமிதம் இன்மை, சிறுமை

பெருமிதம் ஊர்ந்து விடல்.

இதன்பொருள்

பெருமை பெருமிதம் இன்மை= பெருமைக் குணமாவது, காரணம் உண்டாயவழியும் அஃது இயல்பாதல் நோக்கித் தருக்கின்றி இருத்தல்; சிறுமை பெருமிதம் ஊர்ந்து விடல்= சிறுமைக்குணமாவது, அஃது இல்வழியும் அதனை ஏற்றிக்கொண்டு தருக்கின் முடிவின்கண்ணே நின்றுவிடுதல்.

உரை விளக்கம்

அளவறத் தருக்குதல் என்பதாயிற்று. விடும் என்று பாடம் ஓதுவாரும் உளர்[Đ]. முற்றுத்தொடரும், எழுவாய்த்தொடரும் தம்முள் இயையாமையின் அது பாடம் அன்மை உணர்க.

Đ. மணக்குடவர்.

# குறள் 980 (அற்றமறைக்கும் )

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான் () அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்

குற்றமே கூறி விடும். (10) குற்றமே கூறிவிடும்.

தொடரமைப்பு: பெருமை அற்றம் மறைக்கும், சிறுமைதான் குற்றமே கூறிவிடும்.

இதன்பொருள்

பெருமை அற்றம் மறைக்கும்= பெருமையுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையாநிற்பர்; சிறுமைதான் குற்றமே கூறிவிடும்= மற்றைச் சிறுமையுடையார், பிறர் குணத்தை

மறைத்துக் குற்றத்தையே கூறி விடுவர்.

உரை விளக்கம்

மறைத்தலும் கூறலும் ஏனையிடத்தும் இயைந்தன. 'அற்றம்' ஆகுபெயர். 'தான்' என்பது அசை.

இவை மூன்று பாட்டானும் இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **99.** சான்றாண்மை

அதிகார முன்னுரை

அஃதாவது, பலகுணங்களானும் நிறைந்து அவற்றை ஆடல் தன்மை. பல குணங்களானும் என்பது, சாலுதல் தொழிலான் பெறப்படுதலின், அவற்றை என்பது வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பலவற்றையும் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

## குறள் **981 (**கடனென்ப **)**

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து () கடன் என்ப நல்லவை எல்லாம் கடன் அறிந்து

சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. (01) சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு.

தொடரமைப்பு: கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு, நல்லவை எல்லாம் கடன் என்ப.

இதன்பொருள்

கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு= நமக்குத் தகுவது இது என்று அறிந்து சான்றாண்மையை மேற்கொண்டு ஒழுகுவார்குக்; நல்லவை எல்லாம் கடன் என்ப= நல்லனவாய குணங்கள் எல்லாம் இயல்பாய் இருக்கும் என்று சொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்

சிலகுணங்கள் இலவாய வழியு◌ம், உள்ளன செய்துகொண்டனவாய வழியும், சான்றாண்மை என்னும் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ்வேதுப் பெயர்பற்றி அவர் இலக்கணம் இவ்வாறு கூறுவர் என்பதாம்.

# குறள் **982**(குணநலஞ் )

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல () குணநலம் சான்றோர் நலனே பிற நலம்

மெந்நலத் துள்ளதூஉ மன்று. (02) எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

தொடரமைப்பு: சான்றோர் நலன் குணநலனே, பிற நலம் எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

இதன்பொருள்

சான்றோர் நலன் குணநலனே= சான்றோர் நலமாவது குணங்களான் ஆய நலமே; பிறநலம் எந்நலத்து உள்ளதூஉம் அன்று= அஃது ஒழிந்த உறுப்புக்களானாய நலம் ஒரு நலத்தினும் உள்ளதன்று.

உரை விளக்கம்

அந்நலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப் புறநலத்தைப் 'பிறநலம்' என்றும், அது குடிப்பிறப்பும், கல்வியும் முதலாக நூலோர் எடுத்த நலங்களுள் புகுதாமையின், 'எந்நலத்து உள்ளதூஉம் அன்று' என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் சால்பிற்கு ஏற்ற குணங்கள் பொதுவகையான் கூறப்பட்டன.

# குறள் **983** **(**அன்புநாண் **)**

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டன் வாய்மையொ () அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு

டைந்துசால் பூன்றிய தூண். (03) ஐந்து சால்பு ஊன்றிய தூண்.

தொடரமைப்பு: அன்று, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, சால்பு ஊன்றிய தூண் ஐந்து.

இதன்பொருள்

அன்பு= சுற்றத்தார் மேலேயன்றிப் பிறர் மேலும் உளதாய அன்பும்; நாண்= பழி, பாவங்களின் நாணலும்; ஒப்புரவு= யாவர்மாட்டும் ஒப்புரவு செய்தலும்; கண்ணோட்டம்= பழையார்மேல் கண்ணோடலும்; வாய்மையொடு= எவ்விடத்தும் மெய்ம்மை கூறலும் என; சால்பு ஊன்றிய தூண் ஐந்து= சால்பு

என்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து.

உரை விளக்கம்

எண் ஒடு முன்னவற்றோடும் கூடிற்று. இக்குணங்கள் இல்வழிச் சால்பு நிலைபெறாமையின், இவற்றைத் தூண் என்றார். ஏகதேச உருவகம்.

# குறள் **984** **(**கொல்லா **)**

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை () கொல்லா நலத்து நோன்மை பிறர் தீமை

சொல்லா நலத்தது சால்பு. (04) சொல்லா நலத்தது சால்பு.

தொடரமைப்பு: நோன்மை கொல்லா நலத்தது, சால்பு பிறர் தீமை சொல்லா நலத்தது.

இதன்பொருள்

நோன்மை கொல்லா நலத்தது= பிற அறங்களும் வேண்டுமாயினும், தவம் ஒருயிரையும் கொல்லாத அறத்தின்கண்ணதாம்; சால்பு பிறர் தீமை சொல்லா நலத்தது= அதுபோலப் பிற குணங்களும் வேண்டுமாயினும். சால்பு பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தின்கண்ணதாம்.

உரை விளக்கம்

'நலம்' என்னும் ஆகுபெயர்ப் பொருள் இரண்டினையும் தலைமை தோன்ற இவ்விரண்டற்கும் அதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லா அறம் சிறந்தாற் போலச் சால்பிற்குப் பிறர்குற்றம் சொல்லாக் குணம் சிறந்தது என்பதாம்.

# குறள் **985** (ஆற்றுவார் )

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர் () ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அது சான்றோர்

மாற்றாரை மாற்றும் படை. (05) மாற்றாரை மாற்றும் படை.

தொடரமைப்பு: ஆற்றுவார் ஆற்றல் பணிதல், சான்றோர் மாற்றாரை மாற்றும் படை அது.

இதன்பொருள்

ஆற்றுவார் ஆற்றல் பணிதல்= ஒரு கருமத்தைச் செய்து முடிப்பாரது ஆற்றலாவது அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; சான்றோர் மாற்றாரை மாற்றும் படை அது= இனிச் சால்புடையார் தம் பகைவரைப் பகைமை ஒழிக்கும் கருவியும் அது.

உரை விளக்கம்

ஆற்றல்: அது வல்லராந் தன்மை. இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. சால்பிற்கு ஏற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார், ஏனையதும் உடன் கூறினார்.

# குறள் **986**(சால்பிற்கு )

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி () சால்பிற்குக் கட்டளை யாது எனின் தோல்வி

துலையல்லார் கண்ணுங் கொளல். (06) துலை அல்லார் கண்ணும் கொளல்.

தொடரமைப்பு: சால்பிற்குக் கட்டளை யாதெனின், தோல்வி துலை அல்லார் கண்ணும் கொளல்.

இதன்பொருள்

சால்பிற்குக் கட்டளை யாது எனின்= சால்பாகிய பொன்னின் அளவு அறிதற்கு உரைகல்லாகிய செயல் யாது எனின்; தோல்வி துலை அல்லார்கண்ணும் கொளல்= அது தம்மின் உயர்ந்தார்மாட்டுக் கொள்ளும் தோல்வியை இழிந்தார்மாட்டும் கோடல்.

உரைவிளக்கம்

துலை- ஒப்பு. எச்சவும்மையான் இருதிறத்தார்கண்ணும் வேண்டுதல் பெற்றாம். கொள்ளுதல்: வெல்லும் ஆற்றல் உடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடு ஒப்பித்துக்கொள்ளாது தோல்வியான் அவரின் உயர்வராயின், அதனான் சால்பளவு அறியப்படும் என்பதாம்.

# குறள் **987** **(**இன்னாசெய்தார்க்கு **)**

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா () இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்

லென்ன பயத்ததோ சால்பு. (07) என்ன பயத்ததோ சால்பு.

தொடரமைப்பு: இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், சால்பு என்ன பயத்ததோ

இதன்பொருள்

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்= தமக்கு

இன்னாதவற்றைச் செய்தார்க்கும் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின்; சால்பு என்ன பயத்தது= அச்சால்பு வேறு என்ன பயனை உடைத்து?

உரை விளக்கம்

சிறப்பும்மை அவர் இன்னா செய்தற்கு இடனாதல் விளக்கிநின்றது. ஓகாரம் அசை. வினா எதிர்மறைப் பொருட்டு. தாமும் என்னா செய்வாராயின், சால்பால் ஒருபயனும் இல்லை எனபதாம்.

இவை ஐந்து பாட்டானும் சிறப்புவகையான் கூறப்பட்டது.

# குறள் 988 (இன்மையொரு )

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந் () இன்மை ஒருவற்கு இளிவு அன்று சால்பு என்னும்

திண்மை யுண்டாகப் பெறின். (08) திண்மை உண்டாகப் பெறின்.

தொடரமைப்பு:சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின், ஒருவற்கு இன்மை இளிவு அன்று.

இதன்பொருள்

சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்= சால்பு என்று சொல்லப்படும் வலி உண்டாகப்பெறின்; ஒருவற்கு இன்மை இளிவு அன்று= ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது.

உரை விளக்கம்

தளராமை நாட்டுதலின் வலியாயிற்று. இன்மையான் வருவதனை இன்மைதானாக உபசரித்துக் கூறினார். சால்புடையார்

நல்கூர்ந்தவழியும் மேம்படுதலையுடையர் என்பதாம்.

## குறள் **989( ஊழிபெயரினுந்)**

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக் () ஊழி பெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு

காழி யெனப்படு வார். (09) ஆழி எனப்படுவார்.

தொடரமைப்பு: சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார், ஊழி பெயரினும் தாம் பெயரார்.

இதன்பொருள்

சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார்= சால்புடைமையாகிய கடற்குக் கரை என்று சொல்லப்படுவார்; ஊழி பெயரினும் தாம் பெயரார்= ஏனைக் கடலும் கரையுள் நில்லாமல் காலத்தான் திரிந்தாலும் தாம் திரியார்.

உரை விளக்கம்

சான்றாண்மையது பெருமை தோன்ற அதனைக் கடல் ஆக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் அஃது உடையாரைக் கரையாக்கியும் கூறினார். "பெருங்கடற்கு ஆழி யனையன் மாதோ"ħ என்றார் பிறரும். ஏகதேச உருவகம்.

ħ. புறநானூறு, 330.

## குறள் **990 (**சான்றவர் **)**

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான் () சான்றவர் சான்றாண்மை குன்றின் இரு நிலம்தான்

தாங்காது மன்னோ பொறை. (10) தாங்காது மன்னோ பொறை.

தொடரமைப்பு: சான்றவர் சான்றாண்மை குன்றின், இரு நிலம் தான் பொறை தாங்காது.

இதன்பொருள்

சான்றவர் சான்றாண்மை குன்றின்= பல குணங்களானும் நிறைந்தவர் தம் தன்மை குன்றுவராயின்; இரு நிலம் தான் பொறை தாங்காது மன்னோ= மற்றை இருநிலந்தானும் தன் பொறையைத் தாங்காதாய் முடியும்.

உரை விளக்கம்

தானும் என்னு எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. அவர்க்கு அது குன்றாமையும், அதற்கு அது தாங்கலும் இயல்பாகலான், அவை எஞ்ஞான்றும் உளவாகா என்பது தோன்றநின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. 'ஓ'காரம் அசை. இதற்கு இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வருதலான், அதுவும் அது தாங்கல் ஆற்றாது என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் அவற்றான் நிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **100.**

அதிகார முன்னுரை

அஃதாவது, பெருமை, சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே, எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல். "பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்"Ĵ என்றார் பிறரும். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

Ĵ. கலித்தொகை, 133.

## குறள் **991 (**எண்பதத்தா **)**

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும் **()** எண் பதத்தால் எய்தல் எளிது என்ப யார் மாட்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு. (01) பண்பு உடைமை என்னும் வழக்கு.

தொடரமைப்பு: யார் மாட்டும் எண் பதத்தால், பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப.

இதன்பொருள்

யார்மாட்டும் எண் பதத்தால்= யாவர்மாட்டும் எளிய செவ்வியர் ஆதலால்; பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப= அரிதாய பண்புடைமை என்னும் நன்னெறியினை எய்துதல் எளிது என்று சொல்லுவர் நூலோர்.

உரை விளக்கம்

குணங்களான் நிறைந்து செவ்வி எளியரும் ஆயக்கால் பண்புடைமை தானே உளதாம் ஆகலின், 'எண் பதத்தால் எய்தல் எளிது' என்றும், அஃது உலகத்தையெல்லாம் வசீகரித்தற் பயத்ததாகலின், அதனைத் தொல்லோர் நன்னெறியாக்கியும், அதனை எளிதின் எய்துதற்கு இது நூலோர் ஓதிய உபாயம் என்பார், அவர்மேல் வைத்தும் கூறினார்.

# குறள் 992(அன்புடைமை )

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும் () அன்புடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ் இரண்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு. (02) பண்பு உடைமை என்னும் வழக்கு.

தொடரமைப்பு: அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும், பண்புடைமை என்னும் வழக்கு.

இதன்பொருள்

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்= பிறர்மேல் அன்புடையன் ஆதலும், உலகத்தோடு அமைந்த குடியின்கண் பிறத்தலும் ஆகிய இவ்விரண்டும்; பண்புடைமை என்னும் வழக்கு= ஒருவனுக்குப் பண்புடைமை என்று உலகத்தார் சொல்லும் நன்னெறி.

உரை விளக்கம்

அமைதல்- ஒத்துவருதல். குடிப்பிறத்தல் என்பது, பிறந்தார் செயலை. தனித்தவழி ஆகாது, இரண்டும் கூடியவழியே ஆவது என்பது தோன்ற, முற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக உபசரிக்கப்பட்டன.

இவை இரண்டு பாட்டானும் பண்புடையர் ஆதல் காரணம் கூறப்பட்டது.

## குறள் **993** (உறுப்பொத்த )

உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க () உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று வெறுத்தக்க

பண்பொத்த லொப்பதா மொப்பு. (03) பண்பு ஒத்தல் ஒப்பதாம் ஒப்பு.

தொடரமைப்பு: உறுப்பொத்தல் மக்கள் ஒப்பு அன்று, ஒப்பதாம் ஒப்பு வெறு ்த்தக்க பண்பு ஒத்தல்.

இதன்பொருள்

உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று= செறியத்தகாத உடம்பால் ஒத்தல் ஒருவனுக்கு நன்மக்களோடு ஒப்பாகாமையின் அது

பொருந்துவது அன்று; ஒப்பதாம் ஒப்பு வெறுத்தக்க பண்பு ஒத்தல்= இனிப் பொருந்துவதாய ஒப்பாவது, செறியத்தக்க பண்பால் ஒத்தல்.

உரை விளக்கம்

வடநூலார் அங்கம் என்றமையின், 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படும் ஒப்பாவது, உயிரின் வேறாய் நிலையுதல்இல்லா உடம்பு ஒத்தலன்று, வேறன்றி நிலையுதல்உடைய பண்பு ஒத்தல் ஆகலான், அப்பெற்றித்தாய அவர் பண்பினை உடையன் ஆக என்பதாம்.

# குறள் 994 ( நயனொடு)

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார் () நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார்

பண்புபா ராட்டு முலகு. (04) பண்பு பாராட்டும் உலகு.

தொடரமைப்பு: நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார் பண்பு, உலகு பாராட்டும்.

இதன்பொருள்

நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார் பண்பு= நீதியையும் அறத்தையும் விரும்புதலான், பிறர்க்கும் தமக்கும் பயன்படுதல் உடையாரது பண்பினை; உலகு பாராட்டும்= உலகத்தார் கொண்டாடாநிற்பர்.

உரை விளக்கம்

'புரிந்த' என்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப்பொருட்டு. நயனொடு நன்றி புரிதலும், பயனுடைமையும், பண்பு காரணமாக

வந்தமையின் அதனைப் 'பாராட்டும்' என்றார்.

## குறள் 995 (நகையுள்ளு )

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும் () நகை உள்ளும் இன்னாது இகழ்ச்சி பகை உள்ளும்

பண்புள பாடறிவார் மாட்டு. (05) பண்பு உள பாடு அறிவார் மாட்டு.

தொடரமைப்பு: இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது, பாடு அறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள.

இதன்பொருள்

இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது= தன்னை இகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது; பாடு அறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள= ஆகலான், பிறர் பாடு அறிந்து ஒழுகுவார்மாட்டுப் பகைமை உள்வழியும், அஃது உளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன.

உரை விளக்கம்

'பாடறிவார்' எனவே, அவ்வின்னாமை அறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அது செய்யார், இனியவே செய்வார் என்பது கருத்து. இதற்குப் பிறரெல்லாம், இரண்டு தொடரும் தம்முள் இயையாமல் உரைப்பாரும், 'இன்னாது' என்னும் சொற்குப் பிறவாது என்று உரைப்பாரும் ஆயினார்.

## குறள் 996(பண்புடையார்ப் )

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன் () பண்பு உடையார்ப் பட்டு உண்டு உலகம் அது இன்றேல்

மண்புக்கு மாய்வது மன். (06) மண் புக்கு மாய்வது மன்.

தொடரமைப்பு: பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு, இன்றேல் அது மண் புக்கு மாய்வது மன்.

இதன்பொருள்

பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு= பண்பு உடையார்கண்ணே படுதலால், உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய் வாராநின்றது; இன்றேல், அது மண்புக்கு மாய்வது மன்= ஆண்டுப் படுதல் இல்லையாயின், அது மண்ணின்கண் புக்கு மாய்ந்து போவதாம்.

உரை விளக்கம்

பட என்பது திரிந்துநின்றது. 'உலகு' ஆகுபெயர். மற்றைப் பண்பில்லார் சார்பின்மையின், ஓர்சார்பும் இன்றி மண்ணின்கண் புக்கு மாயுமது வேண்டாவாயிற்று என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது.

இவை நான்கு பாட்டானும் அதனை உடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

# குறள் 997 (அரம்போலு )

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர் () அரம் போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்

மக்கட்பண் பில்லா தவர். (07) மக்கள் பண்பு இல்லாதவர்.

தொடரமைப்பு: மக்கட்பண்பு இல்லாதவர், அரம்போலும்

கூர்மையரேனும், மரம் போல்வர்.

இதன்பொருள்

மக்கட்பண்பு இல்லாதவர்= நன்மக்கட்கே உரிய பண்பு இல்லாதவர்; அரம் போலும் கூர்மையரேனும்= அரத்தின் கூர்மை போலும் கூர்மையை உடையரே ஆயினும்; மரம் போல்வர்= ஓரறிவிற்றாய மரத்தினை ஒப்பர்.

உரை விளக்கம்

'அரம்' ஆகுபெயர். ஓரறிவு ஊற்றினை அறிதல். உவமை இரண்டனுள், முன்னது தான் மடிதலின்றித் தன்னையு ற்ற பொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது. ஏனையது விசேட அறிவின்மையாகிய பண்பு பற்றி வந்தது. அவ் விசேடஅறிவிற்குப் பயனாய மக்கட்பண்பு இன்மையின், அதுதானும் இல்லையென்பது ஆயிற்று.

# குறள் 998 (நண்பாற்றா )

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும் () நண்பு ஆற்றார் ஆகி நயம் இல செய்வார்க்கும்

பண்பாற்றா ராதல் கடை. (08) பண்பு ஆற்றார் ஆதல் கடை.

தொடரமைப்பு: நண்பு ஆற்றாராகி நயம் இல செய்வார்க்கும், பண்பு ஆற்றாராதல் கடை.

இதன்பொருள்

நண்பு ஆற்றார் ஆகி நயமில செய்வார்க்கும்= தம்மொடு நட்பினைச் செய்யாது பகைமையைச் செய்து ஒழுகுவார் மாட்டும்;

பண்பு ஆற்றாராதல் கடை= தாம் பண்புடையராய் ஒழுகாமை அறிவுடையார்க்கு இழுக்காம்.

உரை விளக்கம்

'நயம்'- ஈரம். சிறப்பும்மை, அவர் பண்பாற்றாமைக்கு இடனாதல் தோன்றநின்றது. அதனைச் செய்யின் தாமும் அவர்தன்மையர் ஆவர் என்பார், 'கடை' என்றார்.

# குறள் 999(நகல்வல்ல )

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம் () நகல் வல்லர் அல்லார்க்கு மா இரு ஞாலம்

பகலும்பாற் பட்டன் றிருள். (09) பகலும் இருட்பால் பட்டன்று.

தொடரமைப்பு: நகல் வல்லர் அல்லார்க்கு, மாயிரு ஞாலம் பகலும் இருட்பாற் பட்டன்று.

இதன்பொருள்

நகல் வல்லர் அல்லார்க்கு= பண்பின்மையான் ஒருவரோடும் கலந்து உள் மகிழ்தல் மாட்டாதார்க்கு; மாயிரு ஞாலம் பகலும் இருட்பால் பட்டன்று= மிகவும் பெரிய ஞாலம், இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கண் கிடந்தாம்.

உரை விளக்கம்

எல்லாரோடும் கலந்து அறியப் பெறாமையின், பண்பில்லார்க்கு உலகியல் தெரியாது என்பார், உலகம் இருளின்கட் பட்டது என்றார். பாழ்பட்டன் றிருள் என்று பாடம் ஓதி, இருள் நீங்கிற்றன்று என்று உரைப்பாரும் உளர்.

# குறள் **1000 (**பண்பிலான் **)**

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பாற் () பண்பு இலான் பெற்ற பெரு ஞ்செல்வம் நன் பால்

கலந்தீமை யாற்றிரிந் தற்று. (10) கலம் தீமையால் திரிந்தற்று.

தொடரமைப்பு: பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம், நன்பால் கலம் தீமையால் திரிந்தற்று.

இதன்பொருள்

பண்பு இலான் பெற்ற பெரும் செல்வம்= பண்புஇல்லாதவன் முன்னை நல்வினையான் எய்திய பெருஞ்செல்வம், அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்; நன்பால் கலம் தீமையால் திரிந்தற்று= நல்ல ஆன் பால், ஏற்ற கலத்தின் குற்றத்தால் இன் சுவைத்தது ஆகாது கெட்டாற்போலும்.

உரை விளக்கம்

கலத்தீமை என்பது மெலி ந்து நின்றது. தொழிலுவமம் ஆகலின், பொருளின்கண் ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் ஆற்றல் இலனாதல் தோன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப் பயனும் கோடற்கு ஏற்ற இடன் உடைமை தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றும் கூறினார். அச்செல்வமும் பயன்படாது என்ற இதனான், வருகின்ற அதிகாரப் பொருண்மையும் தோற்றுவாய் செய்யப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **101.**நன்றி இல் செல்வம்.

அதிகார முன்னுரை

அஃதாவது, ஈட்டியாற்கும் பிறர்க்கும் பயன்படுதல் இல்லாத செல்வத்தினது இயல்பு. உடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகாரமுறைமை மேல் தோற்றுவாய் செய்தவதனால் பெற்றாம்.

## குறள் **1001 (**வைத்தான் **)**

வைத்தான் வாய்சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான் () வைத்தான் வாய் சான்ற பெரும்பொருள் அஃது உண்ணான்

செத்தான் செயக்கிடந்த தில். (01) செத்தான் செயக்கிடந்தது இல்.

தொடரமைப்பு: வாய் சான்ற பெரும்பொருள் வைத்தான் அஃது உண்ணான், செத்தான் செயக் கிடந்தது இல்.

இதன்பொருள்

வாய் சான்ற பெரும்பொருள் வைத்தான் அஃது உண்ணான்= தன் மனை அகலம் எல்லாம் நிறைதற்கு ஏதுவாய பெரும்பொருளை ஈட்டிவைத்து உலோபத்தால் அதனை உண்ணாதவன்; செத்தான் செயக்கிடந்தது இல்= உளனாயினும் செத்தானாம், அதன்கண் அவனால் செயக் கிடந்ததோர் உரிமை இன்மையான்.

உரை விளக்கம்

'வைத்தான்' என்பது முற்றெச்சம். உண்ணுதல்: அதனால் ஐம்புலன்களையும் நுகர்தல். "வாய் சான்ற பெரும்பொருளை" வைத்தான் ஒருவன், அதனை உண்ணாது செத்தவழி அதன்கண் அவனால் செய்யக் கிடந்ததோர் உரிமை இல்லையாகலான், வையாது பெற்ற பொழுதே நுகர்க என்று உரைப்பினும் அமையும். இதற்குச் 'செத்தான்' என்பது எச்சம். இதனால் ஈட்டியானுக்குப் பயன்படல் இன்மை கூறப்பட்டது.

# குறள் 1002(பொருளானாம் )

பொருளானா மெல்லாமென் றீயா திவறு () பொருளான் ஆம் எல்லாம் என்று ஈயாது இவறும்

மருளானா மாணாப் பிறப்பு. (02) பருளான் ஆம் மாணாப் பிறப்பு.

<தொடரமைப்பு:பொருளான் எல்லாம் ஆம் என்று, ஈயாது இவறும் மருளான், மாணாப் பிறப்பு ஆம்.

இதன்பொருள்

பொருளான் எல்லாம்ஆம் என்று= பொருள் ஒன்றும் உண்டாக அதனால் எல்லாம் உண்டாம் என்று அறிந்து அதனை ஈட்டி; ஈயாது இவறும் மருளான்= பின் பிறர்க்கு ஈயாது பற்றுள்ளம் செய்யும் மயக்கத்தாலே; மாணாப் பிறப்பு ஆம்= ஒருவனுக்கு நிறைதல் இல்லாத பேய்ப்பிறப்பு உண்டாம்.

உரை விளக்கம்

இருமையினும் எய்தும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்' என்றும், ஈட்டுதற்கு முன்னுண்டாய அறிவு பின் மயங்குதலின் 'மருள்' என்றும், பொருள் உண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினை பற்றி உணவுகள் உளவாயிருக்கப் பசித்துவருந்தும் 'பிறப்பு' உளதாம் என்றும் கூறினார்.

# குறள் **1003** (ஈட்டம் )

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர் () ஈட்டம் இவறி யிசைவேண்டா ஆடவர்

தோற்ற நிலக்குப் பொறை. (03) தோற்றம் நிலக்குப் பொறை.

தொடரமைப்பு: ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம், நிலக்குப் பொறை.

இதன்பொருள்

ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம்= யாம் பிறரின் மிக ஈட்டுதும் என்று, பொருளினது ஈட்டல் மாத்திரத்தையே விரும்பி, அதன் பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு; நிலக்குப் பொறை= நிலத்திற்குப் பாரமாம் அத்துணையே.

உரை விளக்கம்

'இசை' இருமைக்கும் உறுதியாய அறம் ஆகலின், ஈகையான் அதனையே வேண்டல் செய்யாது, ஈட்டல் துன்பத்தையும் காத்தல் துன்பத்தையும் வேண்டிய அறிவின்மை பற்றி, 'நிலக்குப் பொறை' என்றார். 'பிறப்பு' என்றது, அதற்குரிய உடம்பினை.

## குறள் 1004 (எச்சமென் )

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா () எச்சம் என்று என் எண்ணும் கொல்லோ ஒருவரால்

னச்சப் படாஅ தவன். (04) நச்சப்படாஅதவன்.

தொடரமைப்பு: ஒருவரால் நச்சப்படாஅதவன், எச்சம் என்று என் எண்ணுங்கொல்லோ.

இதன்பொருள்

ஒருவரால் நச்சப்படாஅதவன்= ஒரு பொருளும் ஈந்தறியாமையின் ஒருவராலும் நச்சப்படுதல் இல்லாதவன்; எச்சம் என்று என் எண்ணுங்கொல்= தான் இறந்தவழி ஈண்டு ஒழிந்து நிற்பதாக யாதனைக் கருதுமோ?

உரை விளக்கம்

ஈண்டு ஒழிந்து நிற்கும் புகழ், ஈவான் மேலன்றி நில்லாமையின், அவனுக்கு அதனோடு யாதும் இயைபு இல்லை என்பார், 'என்னெண்ணுங் கொல்லோ' என்றார். 'ஓ'காரம் அசை.

இவை மூன்று பாட்டானும் பிறர்க்குப் பயன்படல் இன்மை கூறப்பட்டது.

## குறள் **1005 (** கொடுப்பதூஉ**)**

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய () கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய

கோடியுண் டாயினு மில். (05) கோடி உண்டாயினும் இல்.

தொடரமைப்பு: கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு, அடுக்கிய கோடி உண்டாயினும் இல்.

இதன்பொருள்

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு= பிறர்க்கு ஈவதும் தாம் நுகர்வதுமாய இரண்டு செய்கையும் உடையர் அல்லாதார்க்கு; அடுக்கிய கோடி உண்டாயினும் இல்= பலவாகிய அடுக்கிய கோடி பொருள் உண்டாயினும் ஒன்றுமில்லை.

உரை விளக்கம்

இன்பத்தினும் அறம் சிறந்தமையின் கொடுத்தல் தொழில் முன்கூறப்பட்டது. 'அடுக்கிய கோடி' என்பது ஈண்டு எண்ணப்படும் பொருள்மேல் நின்றது. ஒன்றும் இல்லார்போலப் பயன் இரண்டும் இழத்தலின், 'இல்' என்றார்.

## குறள் **1006(**ஏதம்பெருஞ் **)**

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன் () ஏதம் பெரும் செல்வம் தான் துவ்வான் தக்கார்க்குத ஒன்று

றீத லியல்பிலா தான். (06) ஈதல் இயல்பு இலாதான்.

தொடரமைப்பு: தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பு

இலாதான், பெரும் செல்வம் ஏதம்.

இதன்பொருள்

தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பிலாதான்= தான் நுகரானாய் அதன்மேலும் தகுதியுடையார்க்கு அவர் வேண்டியது ஒன்றனை ஈதல் இயற்கை இலன் ஆயினான்; பெருஞ் செல்வம் ஏதம்= இண்டும் செய்தற்கு இடனுடைத்தாய செல்வத்திற்கு ஒரு நோய்.

உரை விளக்கம்

தகுதி: தானம் கோடற்கு ஏற்புடைமை. 'ஏதம்' ஆகுபெயர். நுகரப்படுதலும், ஈயப்படுதலும் ஆகிய தொழிற்கு உரியதனை அன்று ஆக்கினமையின், 'நோய்' என்றார். ஈதலியல்பு இலாதானது பெரும் செல்வம் அவனுக்கு ஈட்டல், காத்தல் முதலியவற்றால் துன்பமேயாம் எனறு உரைப்பரும் உளர்

இவை இரண்டு பாட்டானும் அவ்விருமையும் உடன்கூறப்பட்டன.

# குறள் **1007** (அற்றார்க்கொன் )

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம் () அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் மிக நலம்

பெற்றா டமியண்மூத் தற்று. (07) பெற்றாள் தமியள் மூத்து அற்று.

தொடரமைப்பு: அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம், மிக நலம் பெற்றாள் தமியள் மூத்தற்று.

இதன்பொருள்

அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம்= ஒருபொருளும் இலர்

ஆயினார்க்கு அவர் வேண்டியது ஒன்றனைக் கொடாதானது செல்வம் கொன்னே கழிதல்; மிக நலம் பெற்றாள் தமியள் மூத்தற்று= பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்றாள் ஒருத்தி, கொடுப்பார் இன்மையின் கொழுநன் இன்றித் தமியளாய் மூத்த தன்மைத்து.

உரை விளக்கம்

'நலம்' வடிவின் நன்மையும், குணத்தின் நன்மையும். இரண்டும் ஒருங்கு பெறுதல் அரிதாகலின், 'பெற்றாள்' என்றார். கொடுப்பாரும், கொழுநனுமேயன்றித் தானும் பயன் இழந்து கழிந்த குமரியோடு உவமை கூறினமையின், தானும் ஏற்பானுமே அன்றிச் செல்வமும் பயனிழந்து கழியும் என்பதாயிற்று.

# குறள் **1008** (நச்சப்படா )

நச்சப் படாஅதவன் செல்வ நடுவூரு () நச்சப்படாஅதவன் செல்வம் நடு ஊருள்

ணச்சு மரம்பழுத் தற்று. (08) நச்சு மரம் பழுத்து அற்று.

தொடரமைப்பு: நச்சப்படாஅதவன் செல்வம், ஊர் நடுவுள் நச்சு மரம் பழுத்தற்று.

இதன்பொருள்

நச்சப் படாதவன் செல்வம்= வறியார்க்கு அணியனாய் இருந்தும் ஒன்றும் கொடாமையின் அவரான் நச்சப்படாதவன் செல்வம் எய்துதல்; ஊர் நடுவுள் நச்சுமரம் பழுத்தற்று= ஊரிடை நிற்பதோர் நச்சுமரம் பழுத்தாற்போலும்.

உரை விளக்கம்

'நடுவூர்' என்பது பின்முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை. அண்மை உடைமைகளான் பயனில்லை என்பதாம்.

# குறள் **1009(**அன்பொரீஇத் **)**

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய **()** அன்பு ஒரீஇத் தன் செற்று அறம் நோக்காது ஈட்டிய

வொண்பொருள் கொள்வார் பிறர். **(09)** ஒண் பொருள் கொள்வார் பிறர்.

தொடரமைப்பு**:** அன்பு ஒரீஇத்**,** தற்செற்று**,** அறம் நோக்காது**,** ஈட்டிய ஒண்பொருள் கொள்வார் பிறர்.

இதன்பொருள்

அன்பு ஒரீஇ= ஒருவன் கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண் அன்பு செய்தலை ஒழித்து; தற் செற்று= வேண்டுவன நுகராது தன்னைச் செறுத்து; அறம் நோக்காது= வறியார்க்கு ஈதல் முதலிய அறத்தை நினைப்பதும் செய்யாது; ஈட்டிய ஒண்பொருள் கொள்வார் பிறர்= ஈட்டிய ஒள்ளிய பொருளைக் கொண்டுபோய்ப் பயன்பெறுவார் பிறர்.

உரை விளக்கம்

பயனாய அறனும், இன்பமும் செய்து கொள்ளாதானுக்குப் பொருளால் உள்ளது ஈட்டல் துன்பமே என்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் வழியில் உள்ளார்க்கும் உதவாது என்பது தோன்றப் 'பிறர்' என்றும் கூறினார்.

# குறள் **1010** **(**சீருடைச் **)**

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி () சீர் உடைச் செல்வர் சிறு துனி மாரி

வறங்கூர்ந் தனைய துடைத்து. (10) வறம் கூர்ந்து அனையது உடைத்து.

தொடரமைப்பு: சீருடைச் செல்வர் சிறு துனி, மாரி வறங்கூர்ந்து அனையது உடைத்து.

இதன்பொருள்

சீருடைச் செல்வர் சிறு துனி= புகழுடைத்தாய செல்வத்தினை உடையவரது, நிற்கும் காலம் சிறிதாய வறுமை; மாரி வறம் கூர்ந்து அனையது உடைத்து= உலகத்தை எல்லாம் நிலைநிறுத்தும் மேகம் வறுமை மிக்காற்போல்வதோர் இயல்பினை உடைத்து.

உரை விளக்கம்

'துனி'- வெறுப்பு;அதனைச் செய்தலான் துனி எனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் அதனான் வறியராயவழியும், அவ்வறுமை கடிதின் நீங்குதலின் பின்பும் செல்வராய்ப் பயன்படுவர் என்பது உவமையான் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாது என்பதாயிற்று. இதற்குச் சீருடைச் செல்வர் இரவலரொடு வெறுக்கும் நிலையில், வெறுப்பு மாரி வறங்கூர்ந்தனைய தன்மையை உடைத்து என அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும், ஓர் பொருள் தொடர்புபடாமல் உரைப்பாரும் உளர்.

இவை நான்கு பாட்டானும் அச்செல்வத்தது குற்றம் கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்-ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **102.** நாணுடைமை

அதிகார முன்னுரை

அஃதாவது, மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல் உடையராந் தன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1011 (**கருமத்தா **)**

கருமத்தா னாணுத னாணுத் திருநுத () கருமத்தால் நாணுதல் நாணுத் திரு நுதல்

னல்லவர் நாணுப் பிற. (01) நல்லவர் நாணுப் பிற.

தொடரமைப்பு**:** நாணுக் கருமத்தால் நாணுதல்**,** பிற திருநுதல்

நல்லவர் நாணு.

இதன்பொருள்

நாணுக் கருமத்தால் நாணுதல்= நன்மக்கள் நாணாவது இழிந்த கருமம் காரணமாக நாணுதல்; பிறதிருநுதல் நல்லவர் நாணு= அஃதன்றி மன மொழி மெய்கள் தொடுக்கத்தான் வருவனவோ எனின், அவை அவரளவல்ல, அழகிய நுதலினை உடைய குலமகளிர் நாண்கள்.

உரைவிளக்கம்

பிற குலமகளிர் நாண் என்றதனான், ஏனையது நன்மக்கள் நாண் என்பதும், 'நாணுதல்' என்றதனான், கருமத்து இழிவும் பெற்றாம். 'திருநுதல் நல்லவர்' என்பது புகழ்ச்சிக்குறிப்பு. ஏதுப்பன்மை பற்றிப் 'பிற'வென்றார். இனி அற்றமறைத்தல் முதலியன பொதுமகளிர் நாணோடு ஒக்கும் என்று உரைப்பாரும் உளர். அவர்க்கு நாண் கேடுபயக்கும் என விலக்கப்பட்டமையானும், அவர் பெயராற் கூறப்படாமையானும் அஃது உரையன்மை அறிக். இதனான் நாணினது இலக்கணம் கூறப்பட்டது.

# குறள் **1012**(ஊணுடை )

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல () ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல

நாணுடைமை மாந்தர் சிறப்பு. (02) நாண் உடைமை மாந்தர் சிறப்பு.

தொடரமைப்பு: ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல, மாந்தர் சிறப்பு நாணுடைமை.

இதன்பொருள்

ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல= ஊணும் உடையும் அவை ஒழிந்தனவும் மக்கள் உயிர்க்கெல்லாம் பொது; மாந்தர் சிறப்பு நாணுடைமை= நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, அவையல்ல.

உரைவிளக்கம்

ஒழிந்தன உறக்கமும் அச்சமும் காமமும், சிறப்பு; அவ்வுயிர்களின் வேறுபாடு. அச்சம் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் **1013 (** ஊனைக்குறித்த**)**

ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு () ஊனைக் குறித்த உயிர் எல்லாம் நாண் என்னும்

னன்மை குறித்தது சால்பு. (03) நன்மை குறித்தது சால்பு.

தொடரமைப்பு: உயிர் எல்லாம் ஊனைக் குறித்த, சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது.

இதன்பொருள்

உயிர் எல்லாம் ஊனைக் குறித்த= எல்லா உயிர்களும், உடம்பினைத் தமக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனை விடா; சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது= அதுபோலச் சால்பு, நாண் என்னும் நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது.

உரைவிளக்கம்

'உடம்பு' என்பது, சாதி ஒருமை. 'நன்மை' ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயன் எய்தாதவாறு போலச் சால்பு நாணோடு கூடியல்லது பயன் எய்தாது என்பதாம். ஊணைக்

குறித்த என்று பாடம் ஓதுவாரும் உளர்.Ŝ

Ŝ. மணக்குடவர்.

## குறள் 1014 (அணியன்றோ )

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற் () அணி அன்றோ நாண் உடைமை சான்றோர்க்கு அஃது இன்றேல்

பிணியன்றோ பீடு நடை. (04) பிணி அன்றோ பீடு நடை.

தொடரமைப்பு: சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ, அஃது இன்றேல் பீடு நடை பிணியன்றோ

இதன்பொருள்

சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ= சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ= சான்றோர்க்கு நாணுடைமை ஆபரணமாம்; அஃது இன்றேல் பீடு நடை பிணியன்றோ= அவ் ஆபரணம் இல்லையாயின் அவர் பெருமிதத்தையுடைய நடை, கண்டார்க்குப் பிணியாம்.

உரைவிளக்கம்

அழகுசெய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற்கு அருமையின் 'பிணி' என்றும் கூறினார். 'ஓ'கார இடைசசொற்கள் எதிர்மறைக்கண் வந்தன.
இவை மூன்று பாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது.

## குறள் 965 (பிறர்பழியுந் )

பிறர்பழியுந் தம்பழியு நாணுவர் நாணுக் () பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் நாணுக்கு

குறைபதி யென்னு முலகு. (05) உறைபதி என்னும் உலகு.

தொடரமைப்பு: பிறர் பழியும் தம் பழியும் நாணுவார், உலகு நாணுக்கு உறைபதி என்னும்.

இதன்பொருள்

பிறர் பழியும் தம் பழியும் நாணுவார்= பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை; உலகு நாணுக்கு உறைபதி என்னும்= உலகத்தார் நாணுக்கு உறைவிடம் என்று சொல்லுவார்.

உரைவிளக்கம்

ஒப்பமதித்தல்: அதுவும் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வர் என்பதாம்.

இதனால் அதனை உடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் 1016(நாண்வேலி )

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம் () நாண் வேலி கொள்ளாது மன்னோ வியன் ஞாலம்

பேணலர் மேலா யவர். (06) பேணலர் மேலாயவர்.

தொடரமைப்பு: மேலாயவர், வேலி நாண் கொள்ளாது, வியன் ஞாலம் பேணலர்.

இதன்பொருள்

மேலாயவர், வேலி நாண் கொள்ளாது= தமக்கு ஏமமாக நாணினைக் கொள்வதன்றி; வியன் ஞாலம் பேணலர்= அகன்ற ஞாலத்தைக் கொள்ள விரும்பார்.

உரைவிளக்கம்

பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின், 'வேலி' என்றார். நாணும், ஞாலமும் தம்முள் மாறாயவழி, அந்நாணினைக் கொள்வதல்லது, அவை புகுது நெறியாகிய ஞாலத்தினைக் கொள்ள விரும்பார் என்பதாம். 'மன்'னும் 'ஓ'வும் அசை. நாணாகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பார் என்று உரைப்பாரும் உளர்.

# குறள் **1017** (**நாணால்** )

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா () நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டான்

னாண்டுறவார் நாணாள் பவர். (07) நாண் துறவார் நாண் ஆள்பவர்.

தொடரமைப்பு: நாண் ஆள்பவர், நாணால் உயிரைத் துறப்பர், உயிர்ப்பொருட்டான் நாண் துறவார்.

இதன்பொருள்

நாண் ஆள்பவர்= நாணினது சிறப்பறிந்து அதனை விடாது ஒழுகுவார்; நாணால் உயிரைத் துறப்பர்= அந்நாணும் உயிரும் தம்முள் மாறாயவழி, நாண் சிதையாமற்பொருட்டு உயிரை நீப்பர்; உயிர்ப்பொருட்டு நாண் துறவார்= உயிர் சிதையாமற் பொருட்டு நாணினை நீக்கார்.

உரைவிளக்கம்

உயிரினும் நாண் சிறந்தது என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அவர்செயல் கூறப்பட்டது.

# குறள் 1018 (பிறர்நாணத் )

பிறர்நாணத் தக்கது தானாணா னாயி () பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின்

னறநாணத் தக்க துடைத்து. (08) அறம் நாணத் தக்கது உடைத்து.

தொடரமைப்பு: பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின், அறம் நாணத்தக்கது உடைத்து.

இதன்பொருள்

பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின்= கேட்டாரும் கண்டாரும் நாணத்தக்க பழியை, ஒருவன் தான் நாணாது செய்யுமாயின்; அறம் நாணத்தக்கது உடைத்து= அந்நாணாமை, அவனை அறம் விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை உடைத்து.

உரைவிளக்கம்

'தான்' எனச் செய்வானைப் பிரிக்கின்றார் ஆகலின், 'பிறர்' என்றார். நாணோடு இயைபு இல்லாதானை அறஞ்சாராது என்பதாம்.

# குறள் 1019( குலஞ்சுடுங்)

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு () குலம் சுடும் கொள்கை பிழைப்பின் நலம் சுடும்

நாணின்மை நின்றக் கடை. (09) நாண் இன்மை நின்றக் கடை.

தொடரமைப்பு: கொள்கை பிழைப்பின் குலம் சுடும், நாணின்மை நின்றக்கடை நலம் சுடும்.

இதன்பொருள்

கொள்கை பிழைப்பின் குலம் சுடும்= ஒருவனுக்கு ஒழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு, அவன் குடிப்பிறப்பு ஒன்றனையும் கெடுக்கும்; நாணின்மை நின்றக் கடை நலம் சுடும்= ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி, அந்நிலை அவன் நலம் யாவற்றையும் கெடுக்கும்.

உரைவிளக்கம்

நிற்றல்: ஒருபொழுதும் நீங்காமை. 'நலம்' சாதி யொருமையாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்று இவற்றான் வந்தன எல்லாம் கொள்ளப்படும். ஒழுக்கஅழிவினும், நாணழிவு இறப்பத் தீது என்பதாம்.

# குறள் 1020 ( நாணகத்)

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை () நாண் அகத்து இல்லார் இயக்கம் மரப் பாவை

நாணா லுயிர்மருட்டி யற்று. (10) நாணால் உயிர் மருட்டி அற்று.

தொடரமைப்பு: அகத்து நாண் இல்லார் இயக்கம், மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று.

இதன்பொருள்

அகத்து நாண் இல்லார் இயக்கம்= தம் மனத்தின்கண் நாண் இல்லாத மக்கள் உயிருடையார் போன்று இயங்குகின்ற இயக்கம்;

மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று= மரத்தாற் செய்யப்பட்ட பாவை இயந்திரக் கயிற்றினான் ஆய தன்னியக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற் போலும்.

உரைவிளக்கம்

கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்கள் இயக்கம், நாணுடைய பாவை இயக்கம் போல்வதல்லது உயிரியக்கம் அன்று என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், நாண் இல்லாரது இழிவு கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **103.** குடிசெயல்வகை

அதிகார முன்னுரை

அஃதாவது, ஒருவன் தான் பிறந்தகுடியை உயரச்செய்தலின் திறம். இது தாழ்வின்கண் நாணுதலை உடையார்க்கு உளதாவது ஆகலின் நாணுடைமையின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1021 (**கருமஞ் **)**

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும் () கருமம் செய ஒருவன் கைதூவேன் என்னும்

பெருமையிற் பீடுடைய தில். (01) பெருமையின் பீடு உடையது இல்.

தொடரமைப்பு: கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின்,

ஒருவன் பீடு உடையது இல்.

இதன்பொருள்

கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின்= தன் குடிசெய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமம் முடியாமையின் எண்ணிய கருமம் செய்தற்கு யான் கையொழியேன் என்னும் ஆள்வினைப் பெருமைபோல; ஒருவன் பீடு உடையது இல்= ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிதில்லை.

உரை விளக்கம்

குடிசெய்தற்கு என்பது, அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச் செயலான், செல்வமும் புகழும் எய்திக் குடி உயருமாகலின், 'பீடுடையது இல்' என்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன் கருமம் செய்ய என்றும், பிறர் கருமம் செய்ய என்றும் உரைப்பாருமுளர்; தன் கருமமும் அதுவேயாகலானும், பிறர் ஏவல் செய்தல் தலைமை அன்மையானும் அவை உரையன்மை அறிக்.

# குறள் 1022(ஆள்வினையு )

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி () ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின்

னீள்வினையா னீளுங் குடி. (02) நீள் வினையான் நீளும் குடி.

தொடரமைப்பு: ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள் வினையான், குடி நீளும்.

இதன்பொருள்

ஆள்வினையும் ஆன்றஅறிவும் என இரண்டின் நீள்வினையான்=

முயற்சியும், நிறைந்த அறிவும் என்ற சொல்லப்பட்ட இரண்டினையும் உடைய இடையறாத கருமச்செயலால்; குடி நீளும்= ஒருவன் குடி உயரும்.

உரை விளக்கம்

நிறைதல்: இயற்கையறிவு, செயற்கையறிவோடு கூடி நிரம்புதல். 'ஆள்வினை' மடி புகுதாமற்பொருட்டு. 'ஆன்ற அறிவு' உயர்தற்கு ஏற்ற செயல்களும், அவை முடிக்குந் திறமும் பிழையாமல் எண்ணுதற் பொருட்டு.

இவை இரண்டு பாட்டானும் அச்செயற்குக் காரணம் கூறப்பட்டது.

# குறள் **1023** (குடிசெய்வல் )

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ () குடி செய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்

மடிதற்றுத் தான்முந் துறும். (03) மடி தற்றுத் தான் முந்துறும்.

தொடரமைப்பு: குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் , தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்.

இதன்பொருள்

குடி செய்வல் என்னும ஒருவற்கு= என் குடியினை உயரச்செய்யக் கடவேன் என்றுகொண்டு அதற்கு ஏற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்கு; தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்= தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும்.

உரை விளக்கம்

முயற்சியை அதன் காரணத்தாற் கூறினார். தற்றுதல்: இறுக உடுத்தல். முன்நடப்பார்செயல் நியதிமேல் ஏற்றப்பட்டது.

# குறள் 1024 (சூழாமற்றானே )

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத் ( ) சூழாமல் தானே முடிவு எய்தும் தம் குடியைத்

தாழா துஞற்று பவர்க்கு. (04) தாழாது உஞற்றுபவர்க்கு.

தொடரமைப்பு: தம் குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு, சூழாமல் தானே முடிவு எய்தும்.

இதன்பொருள்

தம் குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு= தம் குடிக்கு ஆம் வினையை விரைந்து முயல்வார்க்கு; சூழாமல் தானே முடிவு எய்தும்= அவ்வினை முடிக்குந்திறம் அவர் சூழவேண்டாமல் தானே முடிவு எய்தும்.

உரை விளக்கம்

குடி ஆகுபெயர். தெய்வம் முந்துறுதலான் பயன் கூறியவாறு.

இவை இரண்டு பாட்டானும், அதற்குத் தெய்வம் துணையாதல் கூறப்பட்டது.

# குறள் 1025 (குற்றமிலனாய் )

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச் () குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானைச்

சுற்றமாச் சுற்று முலகு. (05) சுற்றாச் சுற்றும் உலகு.

தொடரமைப்பு: குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானைச், சுற்றமாச் சுற்றும் உலகு.

இதன்பொருள்

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானை= குற்றமாயின செய்யாது தன் குடியை உயரச்செய்து ஒழுகுவானை; சுற்றமாச் சுற்றும் உலகு= அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார்.

உரை விளக்கம்

குற்றமாயின, அற நீதிகட்கு மறுதலையாய செயல்கள். தாமும் பயன் எய்தல் நோக்கி, யாவரும் சென்று சார்வர் என்பதாம்.

# குறள் 1026(நல்லாண்மை )

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த () நல் ஆண்மை என்பது ஒருவற்குத் தான் பிறந்த

வில்லாண்மை யாக்கிக் கொளல். (06) இல் ஆண்மை ஆக்கிக் கொளல்.

தொடரமைப்பு: ஒருவற்கு நல்லாண்மை என்பது, தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக் கொளல்.

இதன்பொருள்

ஒருவற்கு நல்லாண்மை என்பது= ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று உயர்த்துச் சொல்லப்படுவது; தான் பிறர் இல்லாண்மை ஆக்கிக் கொளல்= தான் பிறந்த குடியினை ஆளும் தன்மையைத் தனக்கு உளதாக்கிக் கோடல்.

உரை விளக்கம்

போர்த் தொழிலின் நீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித்தார். குடியினை ஆளும் தன்மை: குடியில் உள்ளாரை உயரச்செய்து

தன்வழிப்படுத்தல். அதனைச் செய்துகோடல், நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டான் பெறப்படும்.

# குறள் **1027 (**அமரகத்து **)**

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து () அமர் அகத்து வன்கண்ணர் போலத் தமர் அகத்தும்

மாற்றுவார் மேற்றே பொறை. (07) ஆற்றுவார் மேற்றே பொறை.

தொடரமைப்பு: அமரகத்து வன்கண்ணர் போலத், தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே.

இதன்பொருள்

அமர் அகத்து வன்கண்ணர் போல= களத்தின்கண் சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர்மேலது ஆனாற்போல; தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே= குடியின்கண் பிறந்தார் பலராயினும், அதன் பாரம்பொறுத்தல் அது வல்லார் மேலதாம்.

உரை விளக்கம்

பொருட்கு ஒக்க வேண்டும் சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்கு மதிக்கப்படுவார் அவரே என்பதாம். இவை மூன்று பாட்டானும், அது செய்வார் எய்தும் சிறப்புக் கூறப்பட்டது.

# குறள் **1028 (**குடிசெய்வார்க் **)**

குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து () குடி செய்வார்க்கு

இல்லை பருவம் மடி செய்து

மானங் கருதக் கெடும். (08) மானம் கருதக் கெடும்.

தொடரமைப்பு: மடி செய்து மானம் கருதக் கெடும், குடி செய்வார்க்குப் பருவம் இல்லை.

இதன்பொருள்

மடி செய்து மானம் கருதக் கெடும்= தம் குடியினை உயரச்செய்வார், அச்செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச் செய்துகொண்டு, மானத்தையும் கருதுவாராயின் குடி கெடும்; குடி செய்வார்க்குப் பருவம் இல்லை= ஆகலான், அவர்க்குக் காலநியதி இல்லை.

உரை விளக்கம்

காலத்தை நோக்கி மடிசெய்தல்: வெயில், மழை, பனி என்பன உடைமை நோக்கிப் பின்னர்ச் செய்தும் என்று ஒழிந்திருத்தல். மானம் கருதுதல்: இக்குடியில் உள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானோ என்று உட்கோடல். மேல், "இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது"[1] என்றது உட்கொண்டு, இவர்க்கும் வேண்டுமோ என்று கருதினும் அது கருதற்க என்று மறுத்தவாறு.

1. குறள், 481.

# குறள் **1029** (இடும்பைக்கே)

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக் ()

இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்

குற்ற மறைப்பா னுடம்பு. (09) குற்றம் மறைப்பான் உடம்பு.

தொடரமைப்பு:குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு, இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ

இதன்பொருள்

குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு= மூவகைத் துன்பமும் உறற்பாலதாய தன் குடியை அவை உறாமல் காக்க முயல்வானது உடம்பு; இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ= அம்முயற்சித் துன்பத்திற்கே கொள்கலமாம் அத்துணையோ, அஃது ஒழிந்து இன்பத்திற்காதல் இல்லையோ?

உரை விளக்கம்

"உறைப்பெயல் ஓலை போல, மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே"[2] என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று. என் குடிமுழுதும் இன்புற்று உயரவே நான் இருமையும் எய்துதலான் இம்மெய்வருத்தம் மாத்திரம் எனக்கு நன்று, என்று முயலும் அறிவுடையான் அஃது ஒருஞான்றும் மொழியாமை நோக்கி, 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார். இது குறிப்பு மொழி.

இவை இரண்டு பாட்டானும், அவர் அது செய்யும் இயல்பு கூறப்பட்டது.

2. புறநானூறு, 260.

# குறள் **1030** (இடுக்கண்கால் )

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று () இடுக்கண் கால் கொன்றிட வீழும் அடுத்து ஊன்றும்

நல்லா ளிலாத குடி. (10) நல் ஆள் இலாத குடி.

தொடரமைப்பு: இடுக்கண் கால் கொன்றிட வீழும், அடுத்து ஊன்றும் நல் ஆள் இலாத குடி.

இதன்பொருள்

இடுக்கண் கால் கொன்றிட வீழும்= துன்பமாகிய நவியம் புகுந்து தன் முதலை வெட்டிச் சாய்க்க ஒரு பற்றின்றி வீழாநிற்கும்; அடுத்து ஊன்றும் நல்லாள் இலாத குடி= அக்காலத்தும் பற்றாவன கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம்.

உரை விளக்கம்

முதல்: அதன் வழிக்குரியார். வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்துபயன்படுதலும் அல்லாவழிக் கெடுதலும் உடைமையின், மரமாக்கினார்; "தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளன்ன, ஓங்குகுல நையவதன் உட்பிறந்த வீரர், தாங்கல் கடன்"[3]என்றார் பிறரும். இது குறிப்புருவகம்.

இதனான் அவர் இல்லாத குடிக்கு உளதாம் குற்றம் கூறப்பட்டது.

3. சீவகசி ்ந்தாமணி- காந்தருவதத்தையார் இலம்பகம், 6.

# திருக்குறள் பொருட்பால்-ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **104.** உழவு

அதிகார முன்னுரை

அஃதாவது, சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதல் தொழில், செய்விக்குங்கால் ஏனையோர்க்கும் உரித்து. இது, மேல் குடிஉயர்தற்கு ஏது என்ற ஆள்வினையாகலின், குடிசெயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1031** (சுழன்று )

சுழன்று மேர்ப்பின்ன துலக மதனா () சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனால்

லுழந்து முழவே தலை. (01) உழந்தும் உழவே தலை.

தொடரமைப்பு: சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம், அதனால் உழந்தும் உழவே தலை.

இதன் பொருள்

சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்= உழுதலான் வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில்களைச் செய்துதிரிந்தும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம்; அதனால் உழந்தும் உழவே தலை= ஆதலான் எல்லா வருத்தமுற்றும், தலையாய தொழில் உழவே.

உரை விளக்கம்

'ஏர்' ஆகுபெயர். பிற தொழில்களான் பொருள் எய்திய வழியும், உணவின் பொருட்டு உழுவார்கண் செல்லவேண்டுதலின், 'சுழன்றும் ஏர்ப்பி ின்னது உலகம்' என்றும், வருத்தம் இலவேனும், பிறதொழில்கள் கடை என்பது போதர 'உழந்தும் உழவே தலை' என்றும் கூறினார்.

இதனால் உழவினது சிறப்புக் கூறப்பட்டது.

## குறள் **1032**(உழுவாருலகத் )

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா () உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃது ஆற்றாது

தெழுவாரை யெல்லாம் பொறுத்து. (02) எழுவாரை எல்லாம் பொறுத்து.

தொடரமைப்பு: அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து, உழுவார் உலகத்தார்க்கு ஆணி.

இதன் பொருள்

அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து= அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிற தொழில்கள் மேல் செல்வார் யாவரையும் தாங்குதலால்; உழுவார் உலகத்தார்க்கு ஆணி= அது வல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணி ஆவர்.

உரை விளக்கம்

"காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்டு"[1] என்றாற் போல, உழுவார் என்றது, உழுவிப்பார் மேலும் செல்லும். 'உலகத்தார்' என்றது, ஈண்டு இவரை ஒழிந்தாரை. கலங்காமல் நிறுத்தற்கண் ஆணி போறலின், 'ஆணி' என்றார். பொறுத்தலான் என்பது திரிந்து நின்றது. ஏகதேச உருவகம். அஃதாற்றார் தொழுவாரே எல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அது மாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவம் எல்லாம் பொறுத்து, அவரைத் தொழுவாரே ஆவார் என்று உரைப்பாரும் உளர்.[2]

1. பட்டினப்பாலை, அடி: 283-284.

2. மணக்குடவர்

# குறள் 1033 (உழுதுண்டு )

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் () உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் மற்று எல்லாம்

தொழுதுண்டு பின்செல் பவர். (03) தொழுது உண்டு பின் செல்பவர்.

தொடரமைப்பு: உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார், மற்று எல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர்.

இதன் பொருள்

உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்= யாவரும் உண்ணும் வகை உழுதலைச்செய்து அதனான் தாமும் உண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர்; மற்றெல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர்= மற்றையார் எல்லாம் பிறரைத் தொழுது அதனான் தாமும் உண்டு அவரைப் பின்பற்றிச் செல்கி◌ ன்றவர்.

உரை விளக்கம்

'மற்று' என்பது, வழக்குப் பற்றி வந்தது. தாமும் மக்கட் பிறப்பினராய் வைத்துப் பிறரைத் தொழுது, அவர் சில கொடுப்பத் தம் உயிரோம்பி, அவர்பின் செல்வார் தமக்கு உரியர் அல்லர் என்பது கருத்து.

# குறள் **1034** (பலகுடை )

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப () பல குடை நீழலும் தம் குடைக் கீழ்க் காண்பர்

ரலகுடை நீழ லவர். (04) அலகு உடை நீழலவர்.

தொடரமைப்பு: அலகு உடை நீழலவர், பல குடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர்.

இதன் பொருள்

அலகு உடை நீழலவர்= உழுதல் தொழிலான், நெல்லினை உடையராய தண்ணளி உடையோர்; பல குடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர் = பலவேந்தர் குடை நிழலதாய மண் முழுதினையும், தம் அரசன் குடைக்கீழே காண்பர்.

உரை விளக்கம்

'அலகு'- கதிர்; அஃது ஈண்டு ஆகுபெயராய் நெல் மேலதாயிற்று. உடைய என்பது, குறைந்து நின்றது. நீழல் போறலின், 'நீழல்' எனப்பட்டது. 'நீழலவர்' என்றது, இரப்போர்க்கு எல்லாம் ஈதல் நோக்கி. ஒற்றுமை பற்றித் 'தம்குடை' என்றார். 'குடைநீழல்' என்பதூஉம், ஆகுபெயர். "ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே"[3] என்றதனால் தம் அரசனுக்குக் கொற்றம் பெருக்கி, மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்பர் என்பதாம்; "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்"[4] என்றார் பிறரும்.

3. புறநானூறு, 35.

4. சிலப்பதிகாரம், நாடுகாண் காதை: 149.

# குறள் **1035** (இரவாரிரப் )

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது () இரவார் இரப்பார்க்கு ஒன்று ஈவர் கரவாது

கைசெய்தூண் மாலை யவர். (05) கை செய்து ஊண் மாலையவர்

தொடரமைப்பு: கை செய்து ஊண் மாலையவர் இரவார், இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர்.

இதன் பொருள்

கை செய்து ஊண் மாலையவர் இரவார்= தம் கையால் உழுதுண்டலை இயல்பாக உடையார் பிறரைத் தாம் இரவார்; இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர்= தம்மை இரப்பார்க்கு அவர் வேண்டியது ஒன்றனைக் கரவாது கொடுப்பர்.

உரை விளக்கம்

'செய்து' என்பதற்கு உழுதலை என வருவிக்க. 'கைசெய்தூண் மாலையவர்' என்பது, ஒருஞான்றும் அழிவில்லாத செல்வம் உடையர் என்னும் ஏதுவை உட்கொண்டு நின்றது.

# குறள் **1036** (உழவினார் )

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம் () உழவினார் கைம் மடங்கின் இல்லை விழைவதூஉம்

விட்டேமென் பார்க்கு நிலை. (06) விட்டேம் என்பார்க்கு நிலை.

தொடரமைப்பு: உழவினார் கை மடங்கின், விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை இல்லை

இதன் பொருள்

உழவினார்கை மடங்கின்= உழுதலை உடையார் கை அதனைச் செய்யாது மடங்குமாயின்; விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை இல்லை= யாவரும் விழையும் உணவும், யாம் துறந்தேம் என்பார்க்கு அவ்வறத்தின்கண் நிற்றலும் உளவாகா.

உரை விளக்கம்

உம்மை இறுதிக்கண்ணும் வந்து இயைந்தது. உணவின்மையால் தாம் உண்டலும், இல்லறம் செய்தலும் யாவர்க்கும் இல்லையாயின. அவர் உறுப்பு மாத்திரமாய கை வாளாவிருப்பின், உலகத்து இம்மை மறுமை வீடு என்னும் பயன்கள் நிகழா என்பதாம். ஒன்றனை மனத்தால் விழைதலும் ஒழிந்தேம் என்பார்க்கு என உரைப்பாரும் உளர்.[5]

இவை ஐந்து பாட்டானும் அதனைச் செய்வாரது சிறப்புக்

கூறப்பட்டது.

5. மணக்குடவர்.

## குறள் **1037** (தொடிப்புழுதி )

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும் () தொடிப் புழுதி கஃசா உணக்கின் பிடித்து எருவும்

வேண்டாது சாலப் படும். (07) வேண்டாது சாலப் படும்.

**தொடரமைப்பு:** தொடிப் புழுதி கஃசா உணக்கின், பிடித்து எருவும் வேண்டாது சாலப் படும்.

இதன் பொருள்

தொடிப் புழுதி கஃசா உணக்கின் = ஒரு நிலத்தினை உழுதவன் பலப்புழுதி கஃசாம் வண்ணம் அதனைக் காயவிடுவானாயின்; பிடித்து எருவும் வேண்டாது சாலப்படும்= அதன்கண் செய்த பயிர், ஒரு பிடியின்கண் அடங்கிய எருவும் இட வேண்டாமல், பணைத்து விளையும்.

உரை விளக்கம்

பிடித்து: பிடியின்கண்ணது. பிடித்த என்பதன் விகாரம் என்பாரும் உளர்.[6] வேண்டாமல், சான்று என்பன திரிந்து நின்றன.

6. மணக்குடவர்.

## குறள் **1038** (ஏரினு )

ஏரினு நன்றா மெருவிடுதல் கட்டபி () ஏரினும் நன்றாம் எரு இடுதல் கட்டபின்

னீரினு நன்றதன் காப்பு. (08) நீரினும் நன்றதன் காப்பு.

தொடரமைப்பு: ஏரினும் எரு இடுதல் நன்றாம், கட்டபின் அதன் காப்பு நீரினும் நன்று.

இதன் பொருள்

ஏரினும் எரு இடுதல் நன்றாம்= அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று; கட்டபின் அதன் காப்பு நீரினும் நன்று= இவ்விரண்டும் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால் யாத்தலினும் நன்று.

உரை விளக்கம்

'ஏர்' ஆகுபெயர். காத்தல்: பட்டி முதலியவற்றான் அழிவு எய்தாமல் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால்யாத்தல், காத்தல் என்று இம்முறையவாய இவ்வைந்தும் வேண்டும் என்பதாம்.

# குறள் **1039**(செல்லான் )

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந் () செல்லான் கிழவன் இருப்பின் நிலம் புலந்து

தில்லாளி னூடி விடும். (09) இல்லாளின் ஊடி விடும்.

தொடரமைப்பு: கிழவன் செல்லான் இருப்பின், நிலம் இல்லாளின் புலந்து ஊடி விடும்.

இதன் பொருள்

கிழவன் செல்லான் இருப்பின்= அந்நிலத்திற்கு உரியவன் அதன்கண் நாடோறும் சென்று பார்த்து அடுத்தன செய்யாது மடிந்து இருக்குமாயின்; நிலம் இல்லாளிற் புலந்து விடும்= அஃது அவன் இல்லாள் போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின் அவனோடு ஊடிவிடும்.

உரை விளக்கம்

செல்லுதல் ஆகுபெயர். பிறரே ஏவியிராது, தானே சேறல் வேண்டும் என்பது போதரக் 'கிழவன்' என்றார். தன்கட் சென்று வேண்டுவன செய்யாது, வேறிடத்து இருந்தவழி, மனையாள் ஊடுமாறு போல என்றது, அவன் போகம் இழத்தல் நோக்கி.

இவை மூன்று பாட்டானும் அது செய்யுமாறு கூறப்பட்டது.

# குறள் **1040** (இலமென்ற )

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி () இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின்

னிலமென்னு நல்லா ணகும். (10) நிலம் என்னும் நல்லாள் நகும்.

தொடரமைப்பு: இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின், நிலம் என்னும் நல்லாள் நகும்.

இதன் பொருள்

இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின்= யாம் வறியேம் என்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால்; நிலம் என்னும் நல்லாள் நகும்= நிலமகள் என்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள், தன்னுள்ளே நகாநிற்கும்.

உரை விளக்கம்

உழுதன் முதலிய செய்வார், யாவர்க்கும் செல்வம் கொடுத்து வருகின்றவாறு பற்றி 'நல்லாள்' என்றும், அது கண்டுவைத்தும், அது செய்யாது வறுமையுறுகின்ற பேதைமை பற்றி, 'நகும்' என்றும் கூறினார். இரப்பாரை என்று பாடம் ஓதுவாரும் உளர்.[7] இதனான் அது செய்யாதவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகாரமுறைமைக்குக் காரணமும் இது.

7. மணக்குடவர்.

# திருக்குறள் பொருட்பால்-ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **105.** நல்குரவு

அதிகார முன்னுரை

அஃதாவது, நுகரப்படுவன யாவும் இல்லாமை.

## குறள் **1041 (** இன்மையினின்**)**

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி () இன்மையின் இன்னாதது யாது எனின் இன்மையின்

னின்மையே யின்னா தது. (01) இன்மையே இன்னாதது.

தொடரமைப்பு**:** இன்மையின் இன்னாதது யாது எனின்**,** இன்மையின் இன்னாதது இன்மையே.

இதன் பொருள்

இன்மையின் இன்னாதது யாது எனின்= ஒருவனுக்கு வறுமைபோல இன்னாதது யாது என்று வினவின்; இன்மையின் இன்னாதது இன்மையே= வறுமைபோல இன்னாதது வறுமையே பிறிதில்லை.

உரை விளக்கம்

இன்னாதது- துன்பம் செய்வது. ஒப்பதில்லை எனவே, மிக்கது இன்மை சொல்லவேண்டா வாயிற்று.

# குறள் 1042 (இன்மையென )

இன்மை யெனவொரு பாவி மறுமையு () இன்மை என ஒரு பாவி மறுமையும்

மிம்மையு மின்றி வரும். (02) இம்மையும் இன்றி வரும்.

தொடரமைப்பு: இன்மை என ஒரு பாவி, மறுமையும் இம்மையும் இன்றி வரும்.

இதன் பொருள்

இன்மை என ஒரு பாவி= வறுமை என்று சொல்லப்படுவதொரு பாவி; மறுமையும் இம்மையும் இன்றி வரும்= ஒருவனுழை வருங்கால், அவனுக்கு மறுமை இன்பமும், இம்மையின்பமும் இல்லையாக வரும்.

உரை விளக்கம்

'இன்மை என ஒருபாவி' என்பதற்கு மேல் "அழுக்கா றெனஒரு பாவி"[1] என்புழி உரைத்தாங்கு உரைக்க. மறுமை, இம்மை என்பன ஆகுபெயர். ஈயாமையானும், துவ்வாமையானும் அவை

இலவாயின. இன்றி விடும் எனப் பாடம் ஓதிப் பாவியால்என விரித்துரைப்பாரும் உளர்.[2]

1. குறள், 168.திருக்குறள் அறத்துப்பால் 17.அழுக்காறாமை

2. மணக்குடவர்.

## குறள் **1043 (** தொல்வரவுந்**)**

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக () தொல் வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக

நல்குர வென்னு நசை. (03) நல்குரவு என்னும் நசை.

தொடரமைப்பு**:** நல்குரவு என்னும் நசை**,** தொல்வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும்.

இதன் பொருள்

நல்குரவு என்னும் நசை= நல்குரவு என்று சொல்லப்படும் ஆசை; தொல்வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும்= தன்னாற் பற்றப்பட்டாருடைய பழைய குடிவரவினையும், அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும்.

உரை விளக்கம்

நசை இல்வழி நல்குரவும் இல்லையாகலின், நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியில் தொல்லோர்க்கு இல்லாத இழிதொழில்களையும், இளிவந்த சொற்களையும் உளவாக்கலான், அவ்விரண்டனையும் ஒருங்கு கெடுக்கும் என்றார். "குடிப்பிறப் பழி்க்கும் விழுப்பம் கொல்லும்"[3] என்றார் பிறரும். தோலாவது, "இழுமென் மொழியால் விழுமியது

நுவறல்"[4] என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு உடம்பு என்று உரைப்பாரும் உளர்.[5] அஃது அதற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்கும் என்றற்கோர் பொருட்சிறப்பு இல்லாமை அறிக.

3. மணிமேகலை- பாத்திரம்பெற்ற காதை, 76.

4. தொல்காப்பியம்-பொருளதிகாரம்: செய்யுளியல், 239.

5. மணக்குடவர்.

# குறள் **1044** (இற்பிறந்தார்)

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த () இல் பிறந்தார் கண்ணேயும் இன்மை இளி வந்த

சொற்பிறக்குஞ் சோர்வு தரும். (04) சொல் பிறக்கும் சோர்வு தரும்.

தொடரமைப்பு: இல் பிறந்தார் கண்ணேயும், இளிவந்த சொல் பிறக்கும் சோர்வு இன்மை தரும்.

இதன் பொருள்

இற்பிறந்தார் கண்ணேயும்= இளிவந்த சொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும்; இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு இன்மை தரும்= அது பிறத்தற்கு ஏதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும்.

உரை விளக்கம்

சிறப்பும்மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. 'இளிவந்த சொல்'- இளிவருதற்கு ஏதுவாகிய சொல்; அஃதாவது, எமக்கு ஈயவேண்டும் என்றல். 'சோர்வு', தாம் உறுகின்ற

துன்பமிகுதி பற்றி, ஒரோவழித் தம் பிறப்பினை மறந்து அது சொல்லுவதாக நினைத்தல்.

## குறள் 1045 (நல்குரவென்னு )

நல்குர வென்னு மிடு◌ம்பையுட் பல்குரைத் () நல்குரவு என்னும இடும்பையு◌ள் பல் குரைத்

துன்பங்கள் சென்று படும். (05) துன்பங்கள் சென்று படும்.

தொடரமைப்பு:நல்குரவு என்னும் இடும்பையுள், பல்குரைத் துன்பங்கள் சென்று படும்.

இதன் பொருள்

நல்குரவு என்னும் இடும்பையுள்= நல்குரவு என்று சொல்லப்படும் துன்பம் ஒன்றனுள்ளே; பல்குரைத் துன்பங்கள் சென்று படும்= பல் துன்பங்களும் வந்து விளையும்.

உரை விளக்கம்

'குரை' இசைநிறை. செலவு, விரைவின்கண் வந்தது. துன்பமும் தானும் உடனே நிகழ்தலின், நல்குரவைத் துன்பம் ஆக்கியும், அத்துன்பம் அடியாகச் செல்வர் கடைநோக்கிச் சேறல் துன்பமும், அவரைக் காண்டல் துன்பமும், கண்டான் மறுத்துழி நிகழும் துன்பமும், மறாவழியும் அவர் கொடுத்தது வாங்கல் துன்பமும், அது கொடுவந்து நுகர்வன கூட்டல் துன்பமும் முதலாயின நாள்தோறும் வேறு வேறாக வருதலின், எல்லாத் துன்பங்களும் உளவாம் என்றும் கூறினார்.

இவை ஐந்து பாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டது.

# குறள் 1046(நற்பொருள் )

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார் () நல் பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்

சொற்பொருள் சோர்வு படும். (06) சொல் பொருள் சோர்வு படும்.

தொடரமைப்பு: நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும், நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வுபடும்.

இதன் பொருள்

நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும்= மெய்ந்நூற் பொருளைத் தெளிய அறிந்து சொன்னாராயினும்; நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும்= நல்கூர்ந்தார் சொல்லும் சொற்பொருள் இன்மையைத் தலைப்படும்.

உரை விளக்கம்

பொருளின்மையைத் தலைப்படுதலாவது, யாம் இவர் சொல்லியன விரும்பிக் கேட்குமாயின், கண்ணோடி இவர் உறுகின்ற குறைமுடிக்க வேண்டும் என்றுஅஞ்சி, யாவரும் கேளாமையின் பயனில் சொல்லாய் முடிதல். கல்வியும் பயன்படாது என்பதாம்.

# குறள் 1047 (அறஞ்சாரா )

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும் () அறம் சாரா நல்குரவு ஈன்ற தாயானும்

பிறன்போல நோக்கப் படும். (07) பிறன் போல நோக்கப் படும்.

தொடரமைப்பு: அறம் சாரா நல்குரவு, ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்.

இதன் பொருள்

அறம் சாரா நல்குரவு= அறத்தோடு இயைபில்லாத நல்குரவு உடையான்; ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்= தன்னை ஈன்ற தாயானும், பிறனைக் கருதுமாறு போலக் கருதி நோக்கப்படும்.

உரை விளக்கம்

அறத்தோடு கூடாமை,காரண காரியங்களுள் ஒன்றாய் இயையாமை. நல்குரவு ஆகுபெயர். சிறப்பும்மை அவளது இயற்கை அன்புடைமை விளக்கிநின்றது. கொள்வது இன்றாதலே அன்றிக் கொடுப்பது உண்டாதலும் உடைமையின், அதுநோக்கிச் சுற்றத்தார் யாவரும் துறப்பார் என்பதாம்.

## குறள் **1048** ( இன்றும்வரு)

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங் () இன்றும் வருவது கொல்லோ நெருநலும்

கொன்றது போலும் நிரப்பு. (08) கொன்றது போலும் நிரப்பு.

தொடரமைப்பு: நெருநலும் கொன்றது போலும் நிரப்பு, இன்றும் வருவது கொல்லோ.

இதன் பொருள்

நெருநலும் கொன்றது போலும் நிரப்பு= நெருநற்றும் கொன்றது

போன்று எனக்கு இன்னாதவற்றைச் செய்த நல்குரவு; இன்றும் வருவது கொல்லோ = இன்றும் என்பால் வரக்கடவதோ வந்தால் இனி யாது செய்வேன்?

உரை விளக்கம்

அவ் இன்னாதனவாவன: மேற் சொல்லிய துன்பங்கள்.[7] நெருநல் மிகவருந்தித் தன் வயிறு நிறைத்தான் ஒருவன் கூற்று.

7. குறள், 1045

# குறள் **1049 (**நெருப்பினுட் **)**

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள் () நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்

யாதொன்றுங் கண்பா டரிது. (09) யாது ஒன்றும் கண் பாடு அரிது.

தொடரமைப்பு**:** நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்**,** நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது.

இதன் பொருள்

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்= மந்திர மருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்து உறங்கலும் ஆம்; நிரப்பினுள் யாதொன்றும் கண் பாடு அரிது= நிரப்பு வந்துழி யாதொன்றாமனும் உறக்கமில்லை.

உரை விளக்கம்

நெருப்பினும் நிரப்புக் கொடிது என்றவாறு ஆயிற்று. இதுவும் அவன் கூற்று.

இவை நான்கு பாட்டானும் நல்கூர்ந்தார்க்கு உளதாம் குற்றம்

கூறப்பட்டது.

## குறள் 1050 (துப்புரவில்லார் )

துப்புர வில்லார் துவரத் துறவாமை () துப்புரவு இல்லார் துவரத் துறவாமை

யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. (10) உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

தொடரமைப்பு: துப்புரவு இல்லார் துவரத் துறவாமை, உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

இதன் பொருள்

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை= நுகரப்படும் பொருள்கள் இல்லாதார் தம்மாற் செயற்பாலது முற்றத் துறத்தலேயாகவும் அது செய்யாது ஒழிதல்; உப்பிற்கும் காடிக்கும் கூற்று= பிறர் இல்லன் உளவாய உப்பிற்கும் காடிக்கும் கூற்றாம்.

உரை விளக்கம்

மானம் அழியாமையின் செயற்பாலது அதுவேயாயிற்று. முற்றத் துறத்தல், சுற்றம் தானே விட்டமையின், ஒருவாற்றான் துறந்தார் ஆயினார் நின்ற தம் உடம்பினையும் துறத்தல். அது செய்யாது கொண்டிருத்தல் இரண்டனையும் மாளப்பண்ணுதலின், அதனை அவற்றிற்குக் 'கூற்று' என்றார். இனி முற்றத் துறத்தலாவது, துப்புரவில்லாமையின் ஒருவாற்றான் துறந்தார் ஆயினார், பின்னவற்றை மனத்தான் துறவாமை என்று உரைப்பாரும் உளர்.[8] இதனான் அஃது உளதாயவழிச் செய்வது கூறப்பட்டது.

8. மணக்குடவர்.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **106.** இரவு

அதிகார முன்னுரை

இனி, மானம் தீரா இரவாமையோடு ஒத்தலின், அதனானும் வீடு எய்தற்பயத்ததாய உடம்பு ஓம்பப்படும் என்னும் அறநூல் வழக்குப்பற்றி மேல் எய்திய துவரத்துறத்தல் விலக்குதற் பொருட்டு இரவு கூறுகின்றார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1051 (**இரக்க **)**

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி () இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்

னவர்பழி தம்பழி யன்று. (01) அவர் பழி தம் பழி அன்று.

தொடரமைப்பு: இரத்தக்கார்க் காணின் இரக்க, கரப்பின் அவர் பழி தம் பழி அன்று.

இதன் பொருள்

இரத்தக்கார் காணின் இரக்க= நல்கூர்ந்தார் இரத்தற்கு ஏற்புடையாரைக் காணில், அவர்மாட்டு இரக்க; கரப்பின் அவர் பழி தம் பழி அன்று= இரந்தால் அவர் கரந்தாராயின், அவர்க்குப் பழியாவதல்லது தமக்குப் பழியாகாமையான்.

உரை விளக்கம்

இரவு என்னும் முதனிலைத் தொழிற்பெயரது இறுதிக்கண் நான்கன் உருபு விகாரத்தான் தொக்கது. இரத்தற்கு ஏற்புடையர் ஆவார்- உரையாமை முன் உணரும் ஒண்மை உடையராய் மாற்றாது ஈவார். அவர் உலகத்து அரியர் ஆகலின் 'காணின்' என்றும், அவர் மாட்டு இரந்தார்க்கு இரவான் வரும் இழிவு இன்மையின் 'இரக்க' என்றும், அவர் ஈதலிற் குறைகாட்டாமையிற் 'கரப்பின்' என்றும், காட்டுவராயின் அப்பழி தூவெள் அறுவைக்கண் மாசுபோல அவர்கண் கடிதுசேறலின் 'அவர் பழி' என்றும், ஏற்பிலார் மாட்டு இரவன்மையின், 'தம்பழி அன்று' என்றும் கூறினார்.

# குறள் 1052(இன்பமொரு )

இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை () இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை

துன்ப முறாஅ வரின். (02) துன்பம் உறாஅ வரின்.

தொடரமைப்பு: ஒருவற்கு இரத்தல் இன்பம், இரந்தவை துன்பம் உறாஅ வரின்.

இதன் பொருள்

ஒருவற்கு இரத்தல் இன்பம்= ஒருவற்கு இரத்தல் தானும் இன்பத்திற்கு ஏதுவாம்; இரந்தவை துன்பம் உறாஅ வரின்= இரந்த பொருள்கள் ஈவாரது உணர்வுடைமையான் தான் துன்புறாமல் வருமாயின்.

உரை விளக்கம்

'இன்பம்' ஆகுபெயர். உறாமல் என்பது கடைக்குறைந்து நின்றது. 'துன்பம்' சாதிஒருமைப்பெயர். அவையாவன: ஈவார்கட் காலமும், இடனும் அறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத் தம்வயத்தர் ஆக்கலும், அவர் மனம் நெகிழ்வன நாடிச் சொல்லலும் முதலியவற்றான் வருவனவும், மறுத்துழி வருவனவுமுமாம். அவை உறாமல் வருதலாவது, அவர் முன் உணர்ந்து ஈயக்கோடல். இரந்தவர் துன்பமுறாவரின் என்று பாடமோதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவற்றான் துன்புறாது எதிர்வந்து ஈவாராயின் என்று உரைப்பாரும் உளர்.[1]
இவை இரண்டு பாட்டானும், நல்குரவான் உயிர்நீங்கும் எல்லைக்கண் இளிவில்லா இரவு விலக்கப்படாது என்பது கூறப்பட்டது.

1. மணக்குடவர்.

# குறள் **1053** (கரப்பிலா )

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின் () கரப்பு இலா நெஞ்சின்

கடன் அறிவார் முன் நின்று

நிரப்புமோ ரேஎ ருடைத்து. (03) இரப்பும் ஓர் ஏஎர் உடைத்து.

தொடரமைப்பு: கரப்பிலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று இரப்பும், ஓர் ஏஎர் உடைத்து.

இதன் பொருள்

கரப்பிலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று இரப்பும்= கரத்தல் இல்லா நெஞ்சினை உடைய மானம் அறிவார் முன்னர் நின்று அவர் மாட்டு ஒன்று இரத்தலும்; ஓர் ஏஎர் உடைத்து= நல்கூர்ந்தார்க்கு ஓர் அழகு உடைத்து.

உரை விளக்கம்

"சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு"[2] என்றதனால், அவர்க்கு அது கடன் எனப்பட்டது. அதனை அறிதல்- சொல்லுதல் உற்று, உரைக்கலாகாமைக்கு ஏதுவாய அதன் இயல்பினை அறிதல். அவ்வறிவுடையார்க்கு முன், நிற்றன் மாத்திரமே அமைதலின், 'முன்னின்று' என்றும், சொல்லுதலான் வரும் சிறுமை எய்தாமையின், 'ஓர் ஏஎர் உடைத்து' என்றும் கூறினார். உம்மை அதன் இழிபு விளக்கி நின்றது.

2. குறள் 963. திருக்குறள் அதிகாரம் 97.மானம்

# குறள் 1054 (இரத்தலு )

இரத்தலு மீதலே போலுங் கரத்தல் () இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்

கனவிலுந் தேற்றாதார் மாட்டு. (04) கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

தொடரமைப்பு: கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு இரத்தலும், ஈதலே போலும்.

இதன் பொருள்

கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு இரத்தலும்= தமக்கு உள்ளது கரத்தலைக் கனவின்கண்ணும் அறியாதார் மாட்டுச் சென்று ஒன்றனை இரத்தலும்; ஈதலே போலும்= வறியார்க்கு ஈதலே போலும்.

உரை விளக்கம்

உம்மை ஈண்டு அவ்வாறு நின்றது. தான் புகழ்பயவாதாயினும், முன்னுளதாய புகழ் கெட வாராமையின், 'ஈதலே போலும்' என்றார். ஏகாரம், ஈற்றசை.

# குறள் 1055 (கரப்பிலார் )

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின் () கரப்பு இலார் வையகத்து உண்மையான் கண்ணின்று

றிரப்பவர் மேற்கொள் வது. (05) இரப்பவர் மேற்கொள்வது.

தொடரமைப்பு: கண்ணி்ன்று இரப்பவர் மேற்கொள்வது, கரப்பிலார் வையகத்து உண்மையான்.

இதன் பொருள்

கண்ணின்று இரப்பவர் மேற்கொள்வது= சொல்லுதல் மாட்டாது, முன் நிற்றன் மாத்திரத்தான் இரப்பார் உயிர் ஓம்பற் பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின்றது; கரப்பிலார் வையகத்து உண்மையான்= அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார் சிலர்

உலகத்து உளராய தன்மையானே, பிறிது ஒன்றான் அன்று.

உரை விளக்கம்

அவர் இல்லையாயின், மானம் நீக்க மாட்டாமையின், உயிர் நீப்பர் என்பதாம்.

# குறள் **1056(**கரப்பிடும்பை **)**

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை () கரப்பு இடும்பை இல்லாரைக் காணின் நிரப்பு இடும்பை

யெல்லா மொருங்கு கெடும். (06) எல்லாம் ஒருங்கு கெடும்.

தொடரமைப்பு**:**கரப்பிடும்பை இல்லாரைக் காணின்**,** நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்.

இதன் பொருள்

கரப்பிடும்பை இல்லாரைக் காணின்= உள்ளது கரத்தலாகிய நோய் இல்லாரைக் கண்டால்; நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்= மானம் விடாது இரப்பார்க்கு நிரப்பான் வரும் துன்பங்கள் எல்லாம் சேரக்கெடும்.

உரை விளக்கம்

கரத்தல் ஒருவற்கு வேண்டுவது ஒன்றன்மையின், அதனை நோய் என்றும், அஃது இல்லாத இரக்கத்தக்காரைக் கண்ட பொழுதே அவர் கழி உவகையர் ஆவர் ஆகலின், 'எல்லாம் ஒருங்கு கெடும்' என்றும் கூறினார். 'இடும்பை' ஆகுபெயர். முழுதும் கெடும் என்று பாடம் ஓதி, எஞ்சாமற் கெடும் என்று உரைப்பாரும் உளர்.[3]

3. மணக்குடவர்.

# குறள் **1057 (**இகழ்ந்தெள்ளா **)**

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள () இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்து உள்ளம்

முள்ளு ளுவப்ப துடைத்து. (07) உள் உள் உவப்பது உடைத்து.

தொடரமைப்பு**:** இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின்**,** உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து.

இதன் பொருள்

இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின்= தம்மை அவமதித்து இழிவு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால்; உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து= அவ்விரப்பாரது உள்ளம் மகிழ்ந்து உள்ளுள்ளே உவக்கும் தன்மை உடைத்து.

உரை விளக்கம்

'இகழ்ந்து எள்ளாது' எனவே, நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெறுதும். நிரப்பிடும்பை கெடுதல் அளவேயன்றி, ஐம்புலன்களானும் பேரின்பம் எய்தினாராகக் கருதலான், 'உள்ளுள் உவப்பதுடைத்து' என்றார்.

இவை ஐந்து பாட்டானும் அவ்விரக்கத்தக்காரது இயல்பு கூறப்பட்டது.

# குறள் **1058 (**இரப்பாரை **)**

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால () இரப்பாரை இல்லா ஈர்ங்கண் மா ஞாலம்

மரப்பாவை சென்றுவந் தற்று. (08) மரப் பாவை சென்று வந்தற்று.

தொடரமைப்பு: இரப்பாரை இல்லாயின், ஈர்ங்கண் மா ஞாலம், மரப்பாவை சென்று வந்தற்று.

இதன் பொருள்

இரப்பாரை இல்லாயின்= வறுமையுற்று இரப்பார் இல்லையாயின்; ஈர்ங்கண் மா ஞாலம்= குளிர்ந்த இடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் செலவு வரவுகள்; மரப்பாவை சென்று வந்தற்று= உயிர் இல்லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றாற் சென்றுவந்தாற் போலும்.

உரை விளக்கம்

ஐகாரம் அசைநிலை. ஞாலம் என்னும் ஆகுபெயர்ப் பொருட்கு உவமையோடு ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளார் என்றது அவரை ஒழிந்தாரை. அவர்க்கு ஈதலைச் செய்து புகழும் புண்ணியமும் எய்தாமையின் உயிருடையர் அல்லர் என்பதாம். "ஈவாருங் கொள்வாரும் இல்லாத வானத்து, வாழ்வாரே வன்கணவர்" என்றார் பிறரும். இத்தொடையின்பம் நோக்காது இரப்பவர் இல்லாயின் என்று பாடம் ஓதுவாருமுளர்.[4]

4. மணக்குடவர்

# குறள் 1059( ஈவார்கண்)

ஈவார்கண் ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள் () ஈவார்கண் என் உண்டாம் தோற்றம் இரந்து கோள்

மேவா ரிலாஅக் கடை. (09) மேவார் இலாஅக் கடை.

தொடரமைப்பு: இரந்து கோள் மேவார் இலாஅக்கடை, ஈவார்கண் தோற்றம் என் உண்டாம்

இதன் பொருள்

இரந்துகோள் மேவார் இலாக்கடை= அவர்பால் சென்று ஒன்றனை இரந்துகோடலை விரும்புவார் இல்வழி; ஈவார்கண் தோற்றம் என் உண்டாம்= கொடுப்பார்மாட்டு, என்ன புகழ் உண்டாம்? யாதும் இல்லை.

உரை விளக்கம்

'தோற்றம்' ஆகுபெயர். மேவுவார் என்பது விகாரமாயிற்று. கொடுத்தல் வன்மை வெளிப்படாமையின், அதனான் புகழ் எய்தார் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும், உலகிற்கு இரப்பார் வேண்டும் என்பது கூறப்பட்டது.

# குறள் 1060 (இரப்பான் )

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை () இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பு இடும்பை

தானேயுஞ் சாலுங் கரி. (10) தானேயும் சாலும் கரி.

தொடரமைப்பு: இரப்பான் வெகுளாமை வேண்டும், நிரப்பிடும்பை தானேயும் கரி சாலும்.

இதன் பொருள்

இரப்பான் வெகுளாமை வேண்டும்= ஈவானுக்குப் பொருள் உதவாவழி, இவன் எனக்கு ஈகின்றிலன் என்று, அவனை

இரப்பான் வெகுளாது ஒழிதல் வேண்டும்; நிரப்பிடும்பை தானேயும் கரி சாலும் = அதுவேண்டிய பொழுது உதவாது என்பதற்கு வேறு சான்று வேண்டா, நிரப்பாகிய தன் இடும்பை தானேயும் சான்றாதல் அமையும்.

உரை விளக்கம்

யாவர்க்கும் தேட வேண்டுதலும், நிலையின்மையும் முதலிய பிற சான்றும் உண்டு என்பதுபட நின்றமையின், உம்மை எச்சவும்மை. தனக்கேயன்றி, மற்றை இரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு அவன் உறும் துன்பத்தைத் தனக்கேயாக வைத்துத் தானுறும் துன்பம் தானறிந்து வெகுளற்க என்பதாம்.

இதனால் அவர்க்கு இன்றியமையாததோர் இயல்பு கூறப்பட்டது.

# திருக்குறள் பொருட்பால்- ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **107.** இரவச்சம்

அதிகார முன்னுரை

அஃதாவது, மானந் தீர வரும் இரவிற்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1061 (**கரவாது **)**

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு () கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும்

மிரவாமை கோடி யுறும். (01) இரவாமை கோடி உறும்.

தொடரமைப்பு**:** கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை**,** கோடி உறும்.

இதன் பொருள்

கரவாது உவந்து ஈயும் கண் அன்னார்கண்ணும் இரவாமை= தனக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றோம் என்று உண்மகிழ்ந்து கொடுக்கும் கண் போலச் சிறந்தார் மாட்டும் இரவாதே ஒருவன் வறுமை கூர்தல்: கோடி உறும்= இரந்து செல்வம் எய்தலின் கோடிமடங்கு நன்று.

உரை விளக்கம்

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாது என்பதுபட நின்றமையின், உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. அவ்விரவான் மானம் தீராது என்னும் துணையல்லது, அதற்கு மிகுதி கூடாமையின், வல்லதோர் முயற்சியான் உயிர் ஓம்பலே நல்லது என்பது கருத்து.

# குறள் **1062(**இரந்துமுயிர் **)**

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து () இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து

கெடுக வுலகியற்றி யான். (02) கெடுக உலகு இயற்றியான்.

தொடரமைப்பு**:** உலகு இயற்றியான் இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து கெடுக.

இதன் பொருள்

உலகு இயற்றியான், இரந்தும் உயி்ர் வாழ்தல் வேண்டின்= இவ்வுலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ்வார்க்கு முயன்று உயிர்வாழ்தலை அன்றி இரந்தும் உயிர்வாழ்தலை வேண்டி விதித்தானாயின்; பரந்து கெடுக= அக்கொடியோன் தானும்

அவரைப்போன்று எங்கும் அலமந்து கெடுவானாக.

உரை விளக்கம்

மக்கள் உயிர்க்கெல்லாம் வாழ்நாளும், அதற்கு வேண்டுவதாய உண்டியும், அதற்கு ஏதுவாய செய்தொழிலும், பழவினை வயத்தாற் கருவொடு கலந்த அன்றே அவன் கற்பிக்கும் அன்றே? அவற்றுள் சில உயிர்க்கு இரத்தலையும், ஒரு செய்தொழிலாகக் கற்பித்தான் ஆயின், அத்தீவினையால் தானும் அத்துன்பமுறல் வேண்டும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அவ்விரவின் கொடுமை கூறப்பட்டது.

# குறள் **1063 (**இன்மையிடும் **)**

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும் () இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும்

வன்மையின் வன்பாட்ட தில். (03) வன்மையின் வன்பாட்டது இல்.

தொடரமைப்பு: இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின், வன்பாட்டது இல்.

இதன் பொருள்

இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின்= வறுமையான் வரும் துன்பத்தை முயன்று நீக்கக் கடவேம் என்று கருதாது இரந்து நீக்கக் கடவேம் என்று கருதும் வன்மை போல;

வன்பாட்டது இல்= வலிமைப்பாடுடையது பிறிது இல்லை.

உரை விளக்கம்

நெறியாய முயற்சி நிற்க, நெறியல்லாத இரவால் தீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு- முருட்டுத்தன்மை. அஃதாவது, ஓராது செய்து நிற்றல்.
இதனான் வறுமை தீர்தற்கு நெறி இரவன்று என்று கூறப்பட்டது.

# குறள் 1064 (இடமெல்லாங் )

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக் () இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம் இல்லாக்

காலு மிரவொல்லாச் சால்பு. (04) காலும் இரவு ஒல்லாச் சால்பு.

தொடரமைப்பு: இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லாச் சால்பு, இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே.

இதன் பொருள்

இடம் இல்லாக் காலும் இரவு ஒல்லாச் சால்பு= நுகரவேண்டுவன இன்றி நல்கூர்ந்த வழியும், பிறர்பால் சென்று இரத்தலை உடம்படாத அமைதி;
இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே= எல்லா உலகும் ஒருங்கு இயைந்தாலும், கொள்ளாத பெருமை உடைத்து.

உரை விளக்கம்

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவு ஒல்லாமை அதன்மேல் ஏற்றப்பட்டது.
இதனான் அந்நெறியல்லதனைச் சால்புடையார் செய்யார் என்பது கூறப்பட்டது.

# குறள் **1065 (**தெண்ணீரடு **)**

தெண்ணீர் அடுபுற்கை யாயினுந் தாடந்த () தெள் நீர் அடு புற்கை ஆயினும் தாள் தந்தது

துண்ணலி னூங்கினிய தில். (05) உண்ணலின் ஊங்கு இனியது இல்.

தொடரமைப்பு**:** தாள் தந்தது தெண்ணீர் அடு புற்கை ஆயினும்**,** உண்ணலின் ஊங்கு இனியது இல்.

இதன் பொருள்

தாள் தந்தது தெண்ணீர் அடுபுற்கை ஆயினும்= நெறியாய முயற்சி கொடுவந்து தந்தது தெளிந்த நீர்போலும் அடுபுற்கையே ஆயினும்;

உண்ணலும் ஊங்கு இனியது இல்= அதனை உண்டற்குமேல் இனியது இல்லை.

உரை விளக்கம்

தாள் தந்த கூழ் செறிவின்றித் தண்ணீர் போன்றதாயினும்**,** இழிவாய இரவான் வந்தது அன்றித் தம் உடைமையாகலின்**,** அமிழதத்தோடு ஒக்கும் என்பதாம்.

இதனால் நெறியினான் ஆயது சிறிதேனும் அது செய்யும் இன்பம் பெரிது என்பது கூறப்பட்டது.

# குறள் **1066(**ஆவிற்கு **)**

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற் () ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு

கிரவி னிளிவந்த தில். (06) இரவின் இளி வந்தது இல்.

தொடரமைப்பு: ஆவிற்கு நீர் என்று இரப்பினும், இரவின் நாவற்கு இளி வந்தது இல்.

இதன் பொருள்

ஆவிற்கு நீர் என்று இரப்பினும்= தண்ணீர் பெறாது இறக்கும் நிலைமைத்தாயதோர் ஆவினைக் கண்டு அறன் நோக்கி இதற்குத் தண்ணீர் தரல்வேண்டும் என்று இரந்து சொல்லுங்காலும்;
இரவின் நாவிற்கு இளி வந்தது இல்= அவ்விரவு போல ஒருவன் நாவிற்கு இளிவந்தது பிறிது இல்லை.

உரை விளக்கம்

ஆ காத்தோம்பல் பேரறம் ஆகலின், 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக் கொள்ளவேண்டாத எண்மைத்து ஆகலின், 'நீர்' என்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவே ஆகலின், 'நாவிற்கு' என்றும், அதுதான் எல்லா இளிவினும் மேற்படுதலின், 'இளிவந்தது இல்' என்றும் கூறினார்.
இதனான் அறனும் முயன்று செய்வது அல்லது, இரந்து செய்யற்க என்பது கூறப்பட்டது.

# குறள் **1067** (இரப்பன் )

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற் () இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்

கரப்பா ரிரவன்மி னென்று. (07) கரப்பாரை இரவன்மின் என்று.

தொடரமைப்பு: இரப்பாரை எல்லாம் இரப்பன், இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று.

இதன் பொருள்

இரப்பாரை எல்லாம் இரப்பன்= இரப்பாரை எல்லாம் யான் இரவாநின்றேன்;

இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று= யாது சொல்லி எனின், நுமக்கு இரக்கவேண்டுமாயின் தமக்கு உள்ளது கரப்பாரை இரவாது ஒழிமின் என்று சொல்லி.

உரை விளக்கம்

இரண்டாவது விகாரத்தான் தொக்கது. இவ்விளிவந்த செயலான் ஊட்டியவழியும், உடம்பு நில்லாதாகலின், இது வேண்டா என்பது தோன்ற, 'இரப்பன்' என்றார்.

இதனான் மானந்தீர வரும் இரவு விலக்கப்பட்டது.

# குறள் **1068** (இரவென்னு )

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும் () இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி கரவு என்னும்

பார்தாக்கப் பக்கு விடும். (08) பார் தாக்கப் பக்கு விடும்.

தொடரமைப்பு: இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி, கரவு என்னும் பார் தாக்கப் பக்கு விடும்.

இதன் பொருள்

இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி= இவ்வறுமை என்னும் கடலை இதனான் கடத்தும் என்று கருதி, ஒருவன் ஏறிய இரவு என்னும் சேமம் அற்ற தோணி;

கரவு என்னும் பார்தாக்கப் பக்கு விடும்= அதன்கண் ஒடுங்கால்,

கரத்தல் என்னும் வன்னிலத்தோடு தாக்குமாயின், பிளந்துபோம்.

உரை விளக்கம்

முயற்சியான் கடப்பதனை, இரவான் கடக்கலுற்றான் அதன் கரை காணாமையின், 'ஏமாப்பில் தோணி' என்றார். ஏமாப்பின்மை தோணிமேல் ஏற்றப்பட்டது. அது கடத்தற்கு ஏற்ற தன்மையானும், நிலம் அறியாது செலுத்தியவழி உடைதலானும், அதன்கண் ஏறற்க என்பதாம்; இஃது அவயவ உருவகம்.

# குறள் **1069**(இரவுள்ள )

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள () இரவு உள்ள உள்ளம் உருகும் கரவு உள்ள

வுள்ளதூஉ மின்றிக் கெடும். (09) உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

தொடரமைப்பு**:** இரவு உள்ள உள்ளம் உருகும்**,** கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

இதன் பொருள்

இரவு உள்ள உள்ளம் உருகும்= உடையார் முன் இல்லார் சென்று இரந்து நிற்றலின் கொடுமையை நினைந்தால் எம் உள்ளம் கரைந்து உருகாநிற்கும்;

கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும்= இனி, அந்நிலையைக் கண்டுவைத்தவர் இல்லையென்றலின் கொடுமையை நினைந்தால், அவ்வுருகும் அளவுதானும் இன்றிப் பொன்றி விடும்.

உரை விளக்கம்

"இரவினை உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ,

கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு"[1] என்றார் பிறரும். இரவினும் கரவு கொடிது என்பதாம். இதற்குப் பிறர் எல்லாம்[2] இரக்கின்றவர் உள்ளம் உருகும் என்று உரைத்தார்.

1. நாலடியார், 305.

2. மணக்குடவர்.

# குறள் **1070 (**கரப்பவர்க்கி **)**

கரப்பவர்க் கியங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர் () கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்லோ இரப்பவர்

சொல்லாடப் போஒ முயிர். (10) சொல் ஆடப் போஒம் உயிர்.

தொடரமைப்பு**:** சொல்லாட இரப்பவர் உயிர் போஒம்**,** கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்.

இதன் பொருள்

சொல்லாட இரப்பவர் உயிர் போஒம்= கரப்பார் இல்லை என்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிர் போகாநின்றது; :கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்குங் கொல்= இனிச் சொல்லாடுகின்ற அவர்தமக்கு உயிர் பின்னும் நிற்றலான், அப்பொழுது எப் புரையுள் புக்கு ஒளி ்த்து நிற்கும்.

உரை விளக்கம்

உயிர்போகலாவது, இனி யாம் என் செய்தும் என்று ஏங்கிச் செயலற்று நிற்றல். "அந்நிலையே, மாயானோ மாற்றி விடின்"[3] என்றார் பிறரும். கேட்டாரைக் கொல்லவற்றாய சொல் சொல்வாரைக் கோறல் சொல்ல வேண்டாவாயினும் அது

காண்கின்றிலம், இஃது என்னோ என்பதாம். வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிர்கட்கும், அதனைச் சொல்லாட உயிர்போம். ஆனபின் மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொல்லாடியக்கால் போகாது எங்கே ஒளித்துநிற்கும்; இரண்டானும் போமே அன்றோ என இரவு அஞ்சினான் ஒருவன் கூற்றாக்கி உரைப்பாரும் உளர்[4].

இவை மூன்று பாட்டானும், அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன.

3. நாலடியார், 308.

4. மணக்குடவர்.

# திருக்குறள் பொருட்பால்-ஒழிபியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **108.** கயமை

அதிகார முன்னுரை

அஃதாவது, மேல் அரசியலுள்ளும், அங்கவியலுள்ளும் சிறப்புவகையான் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கும் எய்த வைத்தமையின், ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும், ஈண்டு ஒழிபியலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவும் இலராய கீழோரது தன்மை. அதனால், இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1071 (**மக்களே **)**

மக்களே போல்வர் கயவ ரவரன்ன () மக்களே போல்வர் கயவர் அவர் அன்ன

வொப்பாரி யாங்கண்ட தில். (01) ஒப்பார் யாம் கண்டது இல்.

தொடரமைப்பு: மக்களே போல்வர் கயவர், அவர் அன்ன ஒப்பார் யாம் கண்டது இல்.

இதன் பொருள்

மக்களே போல்வர் கயவர்= வடிவான் முழுதும் மக்களை ஒப்பர் கயவர்;

அவர் அன்ன ஒப்பாரியாம் கண்டது இல்= அவர் மக்களை ஒத்தார் போன்ற ஒப்பு வேறு இரண்டு சாதிக்கண் யாம் கண்டது இல்லை.

உரை விளக்கம்

முழுதும் ஒத்தல் தேற்றேகாரத்தான் பெற்றாம். அவர் என்றது அவர் மாட்டு உளதாய ஒப்புமையை. மக்கட் சாதிக்கும், கயச்சாதிக்கும் வடிவொத்தலின் குணங்களது உண்மை இன்மைகளான் அல்லது வேற்றுமை அறியப்படாது என்பதாம். இதனான் கயவரது குற்றம் மிகுதி கூறப்பட்டது.

# குறள் **1072(**நன்றறி **)**

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர் () நன்று அறிவாரின் கயவர் திரு உடையர்

நெஞ்சத் தவல மிலர். (02) நெஞ்சத்து அவலம் இலர்.

தொடரமைப்பு: நன்று அறிவாரின் கயவர் திரு உடையர், நெஞ்சத்து அவலம் இலர்.

இதன் பொருள்

நன்று அறிவாரின் கயவர் திரு உடையர்= தமக்கு உறுதியாவன அறிவாரின் அவை அறியாத கீழ்மக்கள் நன்மை உடையர்; நெஞ்சத்து அவலம் இலர்= அவர்போல அவை காரணமாகத் தம் நெஞ்சத்தின்கண் கவலை இலர் ஆகலான்.

உரை விளக்கம்

நன்று என்பது சாதியொருமை. உறுதிகளாவன, இம்மை மறுமை வீடுகட்கு உரியவாய புகழ் அற ஞானங்கள். இவற்றை அறிவார் இவை செய்யாநின்றே மிகச் செயப்பெறுகின்றிலேம் என்றும், செய்கின்ற இவை தமக்கு இடையூறு வருங்கொல் என்றும், இவற்றின் மறுதலையாய பழி பாவம் அறியாமை என்பனவற்றுள் யாது விளையுமோ என்றும் இவ்வாற்றான் கவலை எய்துவர். கயவர் அப்புகழ் முதலிய ஒழித்துப் பழி முதலிய செய்யாநின்றும், யாதும் கவலை உடையர் அல்லர் ஆகலான், திருவுடையர் எனக் குறிப்பால் இகழ்ந்தவாறு.

இதனான் பழி முதலியவற்றிற்கு அஞ்சார் என்பது கூறப்பட்டது.

# குறள் **1073** (தேவரனையர் )

தேவ ரனையர் கயவ ரவருந்தா () தேவர் அனையர் கயவர் அவரும் தாம்

மேவன செய்தொழுக லான். (03) மேவன செய்து ஒழுகலான்.

தொடரமைப்பு: தேவர் அனையர் கயவர், அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான்.

இதன் பொருள்

தேவர் அனையர் கயவர்= தேவரும் கயவரும் ஒருதன்மையர்;

அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான்= அஃது யாதனான் எனின், தேவரைப்போன்று தம்மை நியமிப்பார் இன்றிக் கயவரும் தாம் விரும்புவனவற்றைச் செய்து ஒழுகலான்.

உரை விளக்கம்

உயர்ச்சியும் இழிவுமாகிய தம் காரண வேறுபாடு குறிப்பான் தோன்றநின்றமையின், இது புகழ்வார் போன்று பழித்தவாறாயிற்று.

இதனால் விலக்கற் பாடின்றி வேண்டிய செய்வர் என்பது கூறப்பட்டது.

# குறள் **1074** (அகப்பட்டி )

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின் () அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்

மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். (04) மிகப் பட்டுச் செம்மாக்கும் கீழ்.

தொடரமைப்பு**:** கீழ்**,** அகப்பட்டி ஆவாரைக் காணின்**,** அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும்.

இதன் பொருள்

கீழ்= கீழாயினான்;

அகப்பட்டி ஆவாரைக் காணின்= தன்னின் சுருங்கிய பட்டியாய் ஒழுகுவாரைக் கண்டானாயின்;

அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும்= அவ்வொழுக்கத்தின்கண், அவரில் தான் மேம்பட்டு, அதனால் தன் மிகுதிகாட்டி இறுமாக்கும்.

உரை விளக்கம்

அகப்பட்டி, அகமாகிய பட்டி; பட்டி போன்று வேண்டியவாறே ஒழுகலின் 'பட்டி' என்றார். "நோதக்க செய்யுஞ் சிறுபட்டி"[1] என்றார் பிறரும். இ
இதனால் அவர் மேம்படுமாறு கூறப்பட்டது.

1. கலித்தொகை,15.

# குறள் 1075 (அச்சமே)

அச்சமே கீழ்கள தாசார மெச்ச () அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. (05) அவா உண்டேல் உண்டாம் சிறிது.

தொடரமைப்பு: கீழ்களது ஆசாரம் அச்சமே, எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம்.

இதன் பொருள்

கீழ்களது ஆசாரம் அச்சமே= கயவரது ஆய ஆசாரம் கண்டது உண்டாயின், அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வரும் என்று அஞ்சும் அச்சமே;

எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம் = அஃது ஒழிந்தால், தம்மால் அவாவப்படும் பொருள்அதனால் உண்டாமாயின் சிறிது உண்டாம்.

உரை விளக்கம்

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படுவதனை 'அவா' என்றும் கூறினார். எச்சத்தின்கண் எண்ணு்ம் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானுமின்றி இயல்பாக உண்டாகாது

என்பதாம்.

வேண்டிய செய்தலே இயல்பு; ஆசாரம் செய்தல் இயல்பன்று என்பது இதனான் கூறப்பட்டது.

# குறள் **1076**(அறைபறை )

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட () அறை பறை அன்ன கயவர் தாம் கேட்ட

மறைபிறர்க் குய்த்துரைக்க லான். (06) மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான்.

தொடரமைப்பு: தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்கலான், கயவர் அறை பறை அன்னர்.

இதன் பொருள்

தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்கலான்= தாம் கேட்ட மறைகளை இடந்தோறும் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான்;

கயவர் அறை பறை அன்னர்= கயவர் அறையப்படும் பறையினை ஒப்பர்.

உரை விளக்கம்

'மறை': வெளிப்படின் குற்றம் விளையும் என்று, பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். 'பிறர்': அம்மறைத்தற்கு உரியார். 'உய்த்து' என்றார், அவர்க்கு அது பெரும்பாரமாதல் நோக்கி. பறை ஒருவன் கையான் தன்னை அறிவித்தது ஒன்றனை, இடந்தோறும் கொண்டு சென்று யாவரையும் அறிவிக்கும் ஆகலான், இது தொழில் உவமம்.

இதனால் அவரது செறிவின்மை கூறப்பட்டது.

## குறள் **1077** (ஈர்ங்கை)

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங் () ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறு உடைக்கும்

கூன்கைய ரல்லா தவர்க்கு. (07) கூன் கையர் அல்லாதவர்க்கு.

தொடரமைப்பு: கயவர் கொடிறு உடைக்கும் கூன்கையர் அல்லாதவர்க்கு, ஈர்ங்கை விதிரார்.

இதன் பொருள்

கயவர் கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு= கயவர் தம் கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினை உடையர் அல்லாதார்க்கு;

ஈர்ங்கை விதிரார்= தாம் உண்டு பூசிய கையைத் தெறித்தல் வேண்டும் என்று இரந்தாலும் தெறியார்.

உரை விளக்கம்

வளைந்த கை, முறுக்கிய கை. மெலியார்க்கு யாதும் கொடார்; நலிவார்க்கு எல்லாம் கொடுப்பர் என்பதாம்.

## குறள் **1078** (சொல்லப்பயன் )

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற் () சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்பு போல்

கொல்லப் பயன்படுங் கீழ். (08) கொல்லப் பயன்படும் கீழ்.

தொடரமைப்பு: சொல்லப் பயன்படுவர் சான்றோர், கீழ் கரும்பு போல் கொல்லப் பயன்படும்.

இதன் பொருள்

சொல்லப்பயன்படுவர் சான்றோர்= மெலியார் சென்று தம் குறையைச் சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினார்;

கீழ் கரும்புபோல் கொல்லப் பயன்படும்= மற்றைக் கீழாயினார், கரும்புபோல வலியார் நைய நெருக்கியவழிப் பயன்படுவர்.

உரை விளக்கம்

பயன்படுதல், உள்ளது கொடுத்தல். கீழாயினாரது இழிவு தோன்ற மேலாயினாரையும் உடன் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது.

# குறள் 1079 (உடுப்பதூஉம் )

உடுப்பதூஉமுண்பதூஉங் காணிற் பிறர்மேல் () உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்

வடுக்காண வற்றாகுங் கீழ். (09) வடுக் காண வற்றாகும் கீழ்.

தொடரமைப்பு: உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின், பிறர்மேல் வடுக் காண வற்றாகும்.

இதன் பொருள்

உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின்= பிறர், செல்வத்தான் பட்டும் துகிலும் உடுத்தலையும், பாலோடு அடிசில்

உண்டலையும் கீழாயினான் காணுமாயின்;

பிறர்மேல் வடுக்காண வற்றாகும்= அவற்றைப் பொறாது, அவர் மாட்டு வடு இல்லையாகவும் உண்டாக்க வல்லனாம்.

உரை விளக்கம்

உடுப்பது உண்பது என்பன ஈண்டு அவ்வத் தொழில்மேல் நின்றன; அவற்றான் பூண்டல், ஊர்தல் முதலிய பிற தொழில்களும் கொள்ளப்படும். அவற்றைக் கண்ட துணையானே பொறாமை எய்தலின் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடும் என்று இயையப் படைத்தல் அரிதாகலின் 'வற்றாகும்' என்றும் கூறினார்.

இதனால் பிறர் செல்வம் பொறாமை கூறப்பட்டது.

# குறள் **1080** (எற்றிற்கு )

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால் () எற்றிற்கு உரியர் கயவர் ஒன்று உற்றக்கால்

விற்றற் குரியர் விரைந்து. (10) விற்றற்கு உரியர் விரைந்து.

தொடரமைப்பு**:** கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர்**,** எற்றிற்கு உரியர்.

இதன் பொருள்

கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர்= கயவர் தம்மை யாதானும் ஒரு துன்பம் உற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்கு உரியர்;

எற்றிற்கு உரியர்= அதுவன்றி, வேறு எத்தொழிற்கு உரியர்?

உரை விளக்கம்

உணவு இன்மையாகப் பிறிதாக ஒன்று வந்துற்ற துணையான் என்பது தோன்ற, 'ஒன்று உற்றக்கால்' என்றும், கொள்கின்றார் தம் கயமை அறிந்து வேண்டா என்றற்கு முன்னே விற்று நிற்றலின் 'விரைந்து' என்றும் கூறினார். ஒரு தொழிற்கும் உரியர் அல்லர் என்பது குறிப்பெச்சம்.

இதனால், தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்பர் என்பது கூறப்பட்டது.

ஒழிபியல் முற்றிற்று

பொருட்பால் முற்றிற்று

# திருக்குறள் காமத்துப்பால்

## 1.களவியல் (ஏழு அதிகாரம்)



## 2.கற்பியல் (பதினெட்டு அதிகாரம்)

# 3. காமத்துப் பால்

## 1. களவியல்

இயல் முன்னுரை:

இனி, அப்பொருளைத் துணைக்காரணமாக உடைத்தாய், இம்மையே பயப்பதாய இன்பம் கூறுவான் எடுத்துக்கொண்டார். ஈண்டு இன்பம் என்றது, ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காம இன்பத்தினை; இச்சிறப்புப் பற்றி வடநூலுள் போசராசனும் 'சுவைபல என்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினான். இது புணர்ச்சி, பிரிவு என இருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ எனின், இவர் பொருட் பாகுபாட்டினை அறம், பொருள், இன்பம் என வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான், அவ்வாறே அவற்றைப் பிரிவின்கண் அடக்கினார் என்க. இனி, அவை தம்மையே, தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவு என்றும், பிரிவைக் கற்பு என்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலகநடையோடு ஒப்பும், ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைகோள் இரண்டனுள்ளும் களவாவது, பிணி மூப்பு இறப்புக்களின்றி, எஞ்ஞான்றும் ஒருதன்மையராய், உருவும் திருவும், பருவமும் குலனும், குணனும் அன்பும் முதலியவற்றால்

தம்முள் ஒப்புமை உடையராய தலைமகனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும், அடுப்பவும் அன்றிப் பால்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது. அதனை ஏழு அதிகாரத்தான் கூறுவான்தொடங்கி, முதற்கண் தகையணங்குறுத்தல் கூறுகின்றார்.

# 109. தகையணங்குறுத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, பொழில் விளையாட்டு விருப்பான் ஆயம் நீங்க அதன்கண் தமியளாய் நின்றாளை, வேட்டம் விருப்பான் இளையார் நீங்கத், தமியனாய் வந்து கண்ணுற்ற தலைமகன், அவள் வனப்புத் தன்னை வருத்தம் உறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்ற பொழுதே நிகழ்வதாகலின், முதற்கண் கூறப்பட்டது.

---

## குறள் 1081 (அணங்குகொல் )

(தலைமகள் உருவு முதலியன முன்கண்டறிவன அன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமகன் ஐயுற்றது.)

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை ( )அணங்கு கொல் ஆய் மயில் கொல்லோ கனம் குழை

மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. (01) மாதர் கொல் மாலும் என் நெஞ்சு.

தொடரமைப்பு:

கனம் குழை, அணங்குகொல், ஆய்மயில்கொல்லோ, மாதர்கொல், என் நெஞ்சு மாலும்.

இதன்பொருள்

கனம் குழை= இக்கனவிய குழையை உடையாள்;
அணங்கு கொல்= இப்பொழிற்கண் உறைவாளோர் தெய்வ மகளோ;
ஆய்மயில் கொல்லோ= அன்றி ஒரு மயில் விசேடமோ;
மாதர்கொல்= அன்றி ஒரு மானுட மாதரோ?
என் நெஞ்சு மாலும்= என் நெஞ்சு மயங்காநின்றது.

உரைவிளக்கம்

'ஓ' அசை. 'ஆய் மயில்' படைத்தோன் விசேடமாக ஆய்ந்து படைத்த மயில்; மயிற்சாதியுள் தெரிந்தெடுத்த மயில் என்றும் ஆம். 'கனங்குழை' ஆகுபெயர். கணங்குழை யென்று பாடமோதிப் பலவாய்த் திரண்ட குழை என்று உரைப்பாரும் உளர். எழுதலாகா உருவுந் தன் வருத்தமும் பற்றி 'அணங்குகொல்' என்றும், சாயலும் பொழில்வயின் நிற்றலும் பற்றி 'ஆய்மயி்ல்கொல்' என்றும், தன் நெஞ்சம் சென்றமையும் அவள் எதிர்நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொல்' என்றும் கூறினான்.

---

# குறள் **1082** (நோக்கினாள் )

(மானுட மாதராதல் தெளிந்த தலைமகன் அவள் நோக்கினானாய வருத்தம் கூறியது.)

நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு ( ) நோக்கினாள் நோக்கு எதிர் நோக்குதல் தாக்கு அணங்கு

தானைக்கொண் டன்ன துடைத்து. (02) தானைக் கொண்டு அன்னது உடைத்து.

தொடரமைப்பு:
நோக்கினாள் நோக்கு எதிர்நோக்குதல், தாக்கு அணங்கு தானைக்கொண்டன்னது உடைத்து.

இதன்பொருள்

நோக்கினாள் நோக்கு எதிர்நோக்குதல்= இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என் நோக்கிற்கு எதிர்நோக்குதல்;
தாக்கு அணங்கு தானைக் கொண்டன்னது உடைத்து= தானே தாக்கி வருத்துவதோர் அணங்கு, தாக்குதற்குத் தானையையும் கொண்டுவந்தாற் போலும் தன்மையை உடைத்து.

உரை விளக்கம்

மேலும், 'அணங்கு கொல் ஆய்மயில் கொல்' என்றமையான், சுட்டு வருவிக்கப்பட்டது. 'எதிர்நோக்குதல்' என்றமையின், அது குறிப்புநோக்காயிற்று. வனப்பால் வருந்துதன்மேலும், குறிப்பு நோக்கால் வருந்துதல் கூறியவாறு. 'நோக்கினாள்' என்பதற்கு, என்னான் நோக்கப்பட்டாள் என்று உரைப்பாரும் உளர்.

---

# குறள் 1083 (பண்டறியேன் )

(இதுவும் அது.)

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன் ( ) பண்டு அறியேன் கூற்று என்பதனை இனி அறிந்தேன்

பெண்டகையாற் பேரமர்க் கட்டு. (03) பெண் தகையால் பேர் அமர்க்

கட்டு.

தொடரமைப்பு:

கூற்று என்பதனைப் பண்டு அறியேன், இனி அறிந்தேன், பெண்டகையால் பேர் அமர்க் கட்டு

இதன்பொருள்

கூற்று என்பதனைப் பண்டு அறியேன்= கூற்று என்று நூலோர் சொல்வதனைப் பண்டு கேட்டுஅறிவதல்லது கண்டு அறியேன்;
இனி அறிந்தேன்= இப்பொழுது கண்டறிந்தேன்;
பெண்தகையால் பேர் அமர்க் கட்டு= அது பெண்டகையுடன் பெரியவாய் அமர்த்த கண்களை உடைத்து.

உரை விளக்கம்

பெண்டகை: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்கள். அவை அவ்வக் குறிகளான் அறியப்பட்டன. அமர்த்தல்- அமர்செய்தல்; பெயரடியாகிய வினை. பெண்டகையால், இன்பம் பயத்தலும் உண்டேனும் துன்பம் பயத்தன் மிகுதி பற்றிக் கூற்றாக்கிக் கூறினான்.

---

# குறள் 1084 (கண்டாருயிர் )

(இதுவும் அது.)

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் ( ) கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் பெண் தகை

பேதைக் கமர்த்தன கண் (04) பேதைக்கு அமர்த்தன கண்.

தொடரமைப்பு:

பெண்தகை பேதைக்குக் கண், கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் அமர்த்தன.

இதன்பொருள்

பெண்டகைப் பேதைக்குக் கண்= பெண்டகையையுடைய இப்பேதைக்கு உளவாய கண்கள்;

கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் அமர்த்தன= தம்மைக் கண்டார் உயிருண்ணும் தோற்றத்துடனே கூடி அமர்த்திருந்தன.

உரை விளக்கம்

அமர்த்தல்- மாறுபடுதல். குணங்கட்கும், பேதைமைக்கும் ஏலாது கொடியவாய் இருந்தன என்பதாம்.

---

# குறள் 1085 (கூற்றமோ )

(இதுவும் அது.)

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர ( ) கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்

னோக்கமிம் மூன்று முடைத்து. (05) நோக்கம் இம் மூன்றும் உடைத்து.

தொடரமைப்பு:

கூற்றமோ, கண்ணோ, பிணையோ, மடவரல் நோக்கம் இம் மூன்றும் உடைத்து.

இதன்பொருள்

கூற்றமோ= என்னை வருத்துதல் உடைமையான் கூற்றமோ;

கண்ணோ= என்மேல் ஓடுதல் உடைமையான் கண்ணோ;
பிணையோ= இயல்பாக வெருவுதல் உடைமையான் பிணையோ? அறிகின்றிலேன்;
மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து= இம்மடவரல் கண்களின் நோக்கம் இம்மூன்றன் தன்மையையும் உடைத்தாய் இராநின்றது.

உரை விளக்கம்

இன்பமும் துன்பமும் ஒருங்கு செய்யாநின்றது என்பதாம். தோழில்பற்றி வந்த ஐயநிலை உவமம்.

---

# குறள் **1086 (** கொடும்புருவம்**)**

**(**இதுவும் அது.**)**

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர் ( ) கொடும் புருவம் கோடா மறைப்பின் நடுங்கு அஞர்

செய்யல மன்னிவள் கண். (06) செய்யலமன் இவள் கண்.

தொடரமைப்பு**:**

கொடும் புருவம் கோடா மறைப்பின்**,** இவள் கண் நடுங்கு அஞர் செய்யலமன்.

இதன்பொருள்

கொடும் புருவம் கோடா மறைப்பின்= பிரியா நட்பாய கொடும் புருவங்கள்தாம் செப்பம் உடையவாய் விலக்கினவாயின்;
இவள் கண் நடுங்கு அஞர் செய்யல= அவற்றைக் கடந்து**,** இவள் கண்கள் எனக்கு நடுங்கும் துயரைச் செய்யமாட்டா.

உரை விளக்கம்

நட்டாரைக் கழறுவார்க்குத் தாம் செம்மையுடையராதல் வேண்டலின் 'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடைநின்று விலக்குங்காலும், சிறிதுஇடைபெறின் அது வழியாக வந்து அஞர் செய்யுமாகலின், 'மறைப்பின்' என்றும், கூறினான். 'நடுங்கஞர்': நடுங்குதற்கு ஏதுவாய அஞர். தாம் இயல்பாகக் கோடுதல் உடைமையான், அவற்றை மிகுதிக்கண் மேற்சென்று இடிக்க மாட்டாவாயின என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது.

---

# குறள் **1087** ( கடாஅக்)

(அவள் முலைகளினாய வருத்தம் கூறியது.)

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர் ( ) கடாஅக் களிற்றின் மேல் கட்படாம் மாதர்

படாஅ முலைமேற் றுகில் (07) படாஅ முலை மேல் துகில்.

## தொடரமைப்பு:

மாதர் படாஅ முலைமேல் துகில், கடாஅக் களிற்றின்மேல் கட்படாம்.

இதன்பொருள்

மாதர் படாஅ முலை மேல் துகில்= இம்மாதர் படா முலைகளின் மேல் இட்ட துகில்;

கடாஅக் களிற்றின் மேல் கட்படாம்= அவை கொல்லாமல் காத்தலின், கொல்வதாய மதக்களிற்றின் மேல் இட்ட முகபடாத்தினை ஒக்கும்.

உரை விளக்கம்

கண்ணை மறைத்தல் பற்றிக் 'கட்படாம்' என்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க்கு இயல்பாகலின், அத்துகில் ஊடே அவற்றின் வெம்மையும், பெருமையும் கண்டு இத்துணை ஆற்றல் உடையன இனி எஞ்ஞான்றும் சாய்வில எனக்கருதிப் 'படாஅமுலை' என்றான். உவமை, சிறிது மறையாவழி உவை கொல்லும் என்பது தோன்ற நின்றது.

---

# குறள் **1088** (ஒண்ணுதற்கோஒ )

(நுதலினாய வருத்தம் கூறியது.)

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினு ( ) ஒள் நுதலுக்கோஒ உடைந்ததே ஞாட்பின் உள்

ணண்ணாரு முட்குமென் பீடு. (08) நண்ணாரும் உட்கும் என் பீடு.

தொடரமைப்பு:

ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு, ஒண்ணுதற்கோஒ உடைந்தது ஏ.

இதன்பொருள்

ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு= போர்க்களத்து வந்து நேராத பகைவரும் நேர்ந்தார்வாய்க் கேட்டு அஞ்சுதற்கு ஏதுவாய என் வலி;

ஒண்ணுதற்கு உடைந்ததே= இம் மாதரது ஒள்ளிய நுதல் ஒன்றற்குமே அழிந்துவிட்டது.

உரை விளக்கம்

மாதர் என்பது அதிகாரத்தான் வந்தது. 'ஞாட்பினுள்' என்றதனால், பகைவராதல் பெற்றாம். 'பீடு' என்ற பொதுமையான் மனவலியும், காயவலியும் கொள்க. 'ஓ' என்னும் வியப்பின்கண் குறிப்பு அவ்வலிகளது பெருமையும், நுதலது சிறுமையும் தோன்ற நின்றது. கழிந்ததற்கு இரங்கலின் தற்புகழ்தல் அன்றாயிற்று.

---

# குறள் **1089 (**பிணையேர் **)**

**(**அணிநலத்தானாய வருத்தம் கூறியது.**)**

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட் ( ) பிணை ஏர் மட நோக்கும் நாணும் உடையாட்கு

கணியெவனோ வேதில தந்து. (09) அணி எவனோ ஏதில தந்து.

தொடரமைப்பு:

**பிணை ஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு, ஏதில தந்து அணி எவன்.**

இதன்பொருள்

பிணை ஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு= புறத்து மான் பிணையொத்த மடநோக்கினையும், அகத்து நாணினையும் உடையவளாய இவட்கு; ஏதில தந்து அணி எவன்= ஒற்றுமையுடைய இவ்வணிகளே அமைந்திருக்க, வேற்றுமையுடைய அணிகளைப் படைத்து அணிதல் என்ன பயனுடைத்து?

உரை விளக்கம்

'மடநோக்கு': வெருவுதலுடைய நோக்கு. இவட்குப் பாரமாதலும்

எனக்கு அணங்காதலும் கருதாமையின், அணிந்தார் அறிவிலர் என்பதாம்.

---

# குறள் **1090 (**உண்டார்கண் **)**

தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.)

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற் () உண்டார் கண் அல்லது அடு நறாக் காமம் போல்

கண்டார் மகிழ்செய்த லின்று. (10) கண்டார் மகிழ் செய்தல் இன்று.

தொடரமைப்பு**:**

அடுநறா**,** உண்டார்கண் அல்லது**,** காமம்போல் கண்டார் மகிழ்செய்தல் இன்று.

இதன்பொருள்

அடுநறா= அடப்படும் நறா;

உண்டார்கண் அல்லது= தன்னை உண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது;

காமம்போல் கண்டார் மகிழ்செய்தல் இன்று= காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்தல் உடைத்து அன்று.

உரை விளக்கம்

அடு நறா வெளிப்படை. காமம் என்றது, ஈண்டு அது நிகர்தற்கு இடனாகியாரை. கண்டார்கண் என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. மகிழ்செய்தற்கண் காமம் நறவினும் சிறந்ததே எனினும், இவள் குறிப்பு ஆராய்ந்து அறியாமையின் யானது பெற்றிலேன் எனக் குறிப்பெச்சம் வருவித்து உரைக்க. "அரிமயிர்த் திரண்

முன்கைப்"[1] என்னும் புறப்பாட்டிற் குறிப்புப் போல.

1.புறநானூறு-11.

---

# திருக்குறள் காமத்துப்பால்- களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **110.** குறிப்பறிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, லைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும், தோழி குறிப்பினை அறிதலும், அவள்தான் அவ்விருவர் குறிப்பினையும் அறிதலுமாம். தகையணங்குற்ற தலைமகன் தலைமகளைக் கூடுங்கால் இது வேண்டும் ஆகலி ்ன் தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **1091 (**இருநோக்கு **)**

**(**தலைமகன் தலைமகள் உளப்பாட்டுக் குறிப்பினை அவள் நோக்கினான் அறிந்தது.**)**

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு **( )** இரு நோக்கு இவள்

உண்கண் உள்ளது ஒரு நோக்கு

நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. (01) நோய் நோக்கு ஒன்று அந் நோய் மருந்து.

தொடரமைப்பு:

இவள் உண்கண் உள்ளது இருநோக்கு, ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து.

இதன்பொருள்

இவள் உண்கண் உள்ளது இரு நோக்கு= இவளுடைய உண்கண் அகத்ததாய நோக்கு இதுபொழுது என்மேல் இரண்டு நோக்காயிற்று;

ஒருநோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து= அவற்றுள் ஒருநோக்கு என்கண் நோய்செய்யும் நோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு.

உரைவிளக்கம்

உண்கண்: மையுண்ட கண். நோய்செய்யும் நோக்கு, அவள் மனத்தினான் ஆய காமக்குறிப்பினை வெளிப்படுத்துகின்ற நோக்கு; மருந்தாய நோக்ககுத் தன்கண் நிகழ்கின்ற அற்பு நோக்கு; நோய் செய்யும் நோக்கினைப் பொதுநோக்கு என்பாரும் உளர்; அது நோய் செயின் கைக்கிளையாவதல்லது அகம் ஆகாமை அறிக. இவ்வருத்தம் தீரும் வாயிலும் உண்டாயிற்று என்பதாம்.

# குறள் **1092** (கண்களவு )

**(இதுவும் அது)**

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற் ( ) கண் களவு

கொள்ளும் சிறு நோக்கம் காமத்தில்

செம்பாக மன்று பெரிது. (02) செம்பாகம் அன்று பெரிது.

தொடரமைப்பு:

கண் களவு கொள்ளும் சிறு நோக்கம், காமத்தில் செம்பாகம் அன்று பெரிது.

இதன்பொருள்

கண் களவு கொள்ளும் சிறு நோக்கம்= இவள் கண்கள் யான் காணாமல் என்மேல் நோக்குகின்ற அருகிய நோக்கம்;
காமத்தில் செம்பாகம் அன்று பெரிது= மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதியளவு அன்று, அதனினும் மிகும்.

உரை விளக்கம்

தான் நோக்கியவழி நாணி இறைஞ்சியும், நோக்காவழி உற்று நோக்கியும் வருதலால் 'களவுகொள்ளும்' என்றும், அஃது உளதாதல் காலம் சிறிதாகலின் 'சிறுநோக்கம்' என்றும், அஃது உளப்பாடுள்வழி நிகழ்வதாகலின் இனிப் புணர்தல் ஒருதலை என்பான் 'செம்பாகம் அன்று பெரிது' என்றும் கூறினான்.

# குறள் 1093 (நோக்கினாள் )

(நோக்கினானும், நாணினானும் அறிந்தது.)

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள் ( ) நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃது அவள்

யாப்பினு ளட்டிய நீர். (03) யாப்பினுள் அட்டிய நீர்.

தொடரமைப்பு:

நோக்கினாள், நோக்கி இறைஞ்சினாள், அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர்.

இதன்பொருள்

நோக்கினாள்= யான் நோக்காவளவில் தான் என்னை அன்போடு நோக்கினாள்;

நோக்கி இறைஞ்சினாள்= நோக்கி ஒன்றனை யுட்கொண்டு நாணி இறைஞ்சினாள்;

அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர்= அக்குறிப்பு இருவேம் இடையும் தோன்றிய அற்புப்பயிர் வளர அதன்கண் அவள் வார்த்த நீராயிற்று.

உரை விளக்கம்

'அஃது' என்னும் சுட்டுப்பெயர், அச்செய்கைக்கு ஏதுவாய குறிப்பின்மேன் நின்றது. யாப்பினான் ஆயதனை 'யாப்பு' என்றார். ஏகதேச உருவகம்.

# குறள் 1094 (யானோக்குங் )

(நாணினாலும் மகி்ழ்ச்சியினாலும் அறிந்தது.)

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற் ( ) யான் நோக்கும் காலை நிலன் நோக்கும் நோக்காக் கால்

றானோக்கி மெல்ல நகும். (04) தான் நோக்கி மெல்ல நகும்.

தொடரமைப்பு:

யான் நோக்குங்காலை நிலன் நோக்கும், நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்.

இதன்பொருள்

யான் நோக்கும் காலை நிலன் நோக்கும்= யான் தன்னை நோக்குங்கால் தான் எதிர் நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும்;

நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்= அஃது அறிந்து யான் நோக்காக்கால் தான் என்னை நோக்கித் தன்னுள்ளே மகிழாநிற்கும்.

உரை விளக்கம்

மெல்ல: வெளி◌ப்படாமல். மகிழ்ச்சியால் புணர்தற் குறிப்பு இனிது விளங்கும். மெல்ல நகும் என்பதற்கு முறுவலிக்கும் என்று உரைப்பாரும் உளர்.

## குறள் 1095 (குறிக்கொண்டு )

(இதுவும் அது.)

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண் ( ) குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒரு கண்

சிறக்கணித்தாள் போல நகும். (05) சிறக்கணித்தாள் போல நகும்.

தொடரமைப்பு:

குறிக்கொண்டு நோக்காமை அல்லால், ஒரு கண் சிறக்கணித்தாள் போல நகும்.

இதன்பொருள்

குறிக்கொண்டு நோக்காமை அல்லால்= நேரே குறிக்கொண்டு நோக்காத் துணையல்லது;

ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும்= ஒருகண்ணைச்

சிறக்கணித்தாள் போல என்னை நோக்கிப் பின் தன்னுள்ளே மகிழாநிற்கும்.

உரை விளக்கம்

சிறக்கணித்தாள் என்பது செய்யுள் விகாரம். சிறங்கணித்தல்:சுருங்குதல். அதுதானும் வெளிப்பட நிகழாமையின் 'போல' என்றான். நோக்கி என்பது, சொல்லெச்சம். இனி இவளை எய்துதல் ஒருதலை என்பது குறிப்பெச்சம்.

# குறள் **1096** (உறாஅதவர் )

(தோழி சேட்படுத்தவழி அவள் குறிப்பறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.)

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ ( ) உறாஅதவர் போல் சொலினும் செறாஅர் சொல்

லொல்லை யுணரப் படும். (06) ஒல்லை உணரப் படும்.

தொடரமைப்பு:

உறாஅதவர் போல் சொலினும், செறாஅர் சொல் ஒல்லை உணரப் படும்.

இதன்பொருள்

உறாஅதவர் போல் சொலினும்= புறத்து நொதுமலர்போலக் கடுஞ்சொல் சொன்னாராயினும்;

செறாஅர் சொல் ஒல்லை உணரப்படும்= அகத்துச் செறுதல் இலாதார் சொல் பிற்பயத்தல் குறையுற்றாரான் கடிதின் அறியப்படும்.

உரை விளக்கம்

கடுஞ்சொல் என்பது, இவ்விடம் காவல் மிகுதியுடைத்து, வரற்பாலீர் அல்லீர் என்றன் முதலாயின. 'செறார்' எனவே, அருளுடைமை பெறப்பட்டது. தன் குறை முடிக்கக்கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பான் அறிந்து, உலகியன்மேல் இட்டுக் கூறியவாறு. இதுவருகின்ற பாட்டிற்கும் ஒக்கும்.

# குறள் **1097** (செறாஅச் )

(இதுவுமது)

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு ( ) செறாஅச் சிறு சொல்லும் செற்றார் போல் நோக்கும்

முறாஅர்போன் றுற்றார் குறிப்பு. (07) உறாஅர் போன்று உற்றார் குறிப்பு.

தொடரமைப்பு:

செறாஅச் சிறு சொல்லும், செற்றார் போல் நோக்கும், உறாஅர் போன்று உற்றார் குறிப்பு.

இதன்பொருள்

செறாஅச் சிறுசொல்லும்= பின் இனிதாய் முன் இன்னாதாய சொல்லும்;

செற்றார்போல் நோக்கும்= அகத்துச் செறாதிருந்தே புறத்துச் செற்றார் போன்ற வெகுளிநோக்கும்;

உறாஅர் போன்று உற்றார் குறிப்பு= நொதுமலர் போன்று நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன.

உரை விளக்கம்

குறிப்பு ஆகுபெயர். இவை உள்ளே ஒருபயன் குறித்துச்

செய்கின்றன; இயல்பல்லவாகலான், இவற்றிற்கு அஞ்சவேண்டா என்பதாம்.

## குறள் 1098 (அசையியற் )

(தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலைமகன் கூறியது.)

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப் ( ) அசை இயற்கு உண்டு ஆண்டு ஓர் ஏஎர் யான் நோக்கப்

பசையினள் பைய நகும். (08) பசையினள் பைய நகும்.

தொடரமைப்பு:
யான் நோக்கப் பசையினள் பைய நகும்,அசையியற்கு ஆண்டு ஓர் ஏஎர் உண்டு.

இதன்பொருள்

யான் நோக்கப் பசையினள் பைய நகும்= என்னை அகற்றுகின்ற சொற்கு ஆற்றாது யான் இரந்து நோக்கியவழி அஃ்து அறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள்;
அசை இயற்கு ஆண்டு ஓர் ஏர் உண்டு= அதனால் நுடங்கிய இயல்பினை உடையாட்கு அந்நகையின்கண்ணே தோன்றுகின்றதோர் நன்மைக் குறிப்புண்டு.

உரை விளக்கம்

ஏர் ஆகுபெயர். அக்குறிப்பு இனிப் பழுதாகாது என்பதாம்.

## குறள் 1099 (ஏதிலார்போலப் )

(தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது.)

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல் ( ) ஏதிலார் போலப் பொது நோக்கு நோக்குதல்

காதலார் கண்ணே யுள. (09) காதலார் கண்ணே உள.

தொடரமைப்பு:

ஏதிலார் போலப் பொது நோக்கு நோக்குதல், காதலார் கண்ணே உள.

இதன்பொருள்

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்= முன் அறியாதார் போல ஒருவரை யொருவர் பொதுநோக்கத்தான் நோக்குதல்;
காதலார் கண்ணே உள= இக்காதலை உடையார்கண்ணே உளவாகாநின்றன.

உரை விளக்கம்

'பொதுநோக்கு': யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதல் தொழில் ஒன்றே யாயினும், இருவர்கண்ணும் நிகழ்தலானும், ஒருவர்கட்டானும் குறிப்பு வேறுபாட்டான் பலவாம் ஆகலானும், 'உள' எனப் பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் "மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல, உள்ளத்துள்ளே மகிழ்" [1]தலின், அதுபற்றிக் 'காதலார்' என்றும், அது புறத்து வெளிப்படாமையின் 'ஏதிலார் போல' என்றும் கூறினாள்.

1."ஏனல் காவல் இவளுமல்லள்" என்ற பாட்டு. இதனை இறையனார் அகப்பொருள், 8-ஆம் சூத்திரத்து உரையிலும், தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல் 23-ஆம் சூத்திரத்துரையிலும் காண்க.

---

# குறள் 1100 (கண்ணொடு )

(இதுவுமது)

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ()
கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள்

ளென்ன பயனு மில. (10) என்ன பயனும் இல.

தொடரமைப்பு:
கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின், வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல.

இதன்பொருள்

கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்= காமத்திற்குரிய இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கல் ஒக்குமாயின்;

வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல= அவர் வாய்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒரு பயனும் உடையவல்ல.

உரை விளக்கம்

நோக்கால் ஒத்தல் காதல் நோக்கினவாதல். 'வாய்ச்சொற்கள்': மனத்தின்கண் இன்றி, வாயளவில் தோன்றுகின்ற சொற்கள். இருவர் சொல்லும் கேட்டு உலகியன்மேல் வைத்துக் கூறியவாறு. இருவர் சொல்லுமாவன அவள் புனங்காவன்மேலும், அவன் வேட்டத்தின்மேலும் சொல்லுவன. பயனில் சொற்கள் ஆகலின், இவை கொள்ளப்படா என்பதாம். இவை புணர்தல் நிமி்த்தம்.

# திருக்குறள் காமத்துப்பால்- களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **111.**புணர்ச்சி மகிழ்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, அங்ஙனம் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1 (** கண்டுகேட்டு**)**

**[**இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது**]**

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு ( ) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம் புலனும்

மொண்டொடி கண்ணே யுள. (01) ஒள் தொடி கண்ணே உள.

தொடரமைப்பு:
கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள.

இதன்பொருள்

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்= கண்ணாற்கண்டும், செவியாற் கேட்டும், நாவால் உண்டும், மூக்கான் மோந்தும் மெய்யால் தீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம் புலனும்;

ஒண்டொடி கண்ணே உள= இவ்வொள்ளிய தொடியை உடையாள்கண்டே உளவாயின.

உரைவிளக்கம்

உம்மை முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்து இன்மை விளக்கி நின்றது. வேறு வேறு காலங்களில் வேறு வேறு பொருள்களான் அனுபவிக்கப்படுவன ஒருகாலத்து இவள்கண்ணே அனுபவிக்கப்பட்டன என்பதாம். வடநூலார் இடக்கர்ப்பொருளளவாகச் சொல்லிய புணர்ச்சித் தொழில்களும் ஈண்டு அடக்கிக் கூறப்பட்டன.

# குறள் **1102** (பிணிக்கு )

[இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது]

பிணிக்கு மருந்து பிறம னணியிழை ( ) பிணிக்கு மருந்து பிற மன் அணி இழை

தன்னோய்க்குத் தானே மருந்து. (02) தன் நோய்க்குத் தானே மருந்து.

தொடரமைப்பு:

பிணிக்கு மருந்து பிற, அணியிழை தன் நோய்க்கு மருந்து தானே.

இதன்பொருள்

பிணிக்கு மருந்து பிற மன்= வாத முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானமாயினவன்றி மாறாய இயல்பினை உடையனவாம்;

அணியிழை தன் நோய்க்குத் மருந்து தானே= அவ்வாறன்றி இவ்வணியிழையினை உடையாள் தன்னின் ஆய பிணிக்கு மருந்தும் தானே ஆயினாள்.

உரை விளக்கம்

இயற்கைப் புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினான் ஆகலின், 'தன்னோய்' என்றும், அவ்வருத்தம் தமியாளை இடத்து எதிர்ப்பட்டுத் தீர்ந்தான் ஆகலின், 'தானே மருந்து' என்றும் கூறினான். இப்பிணியும் எளியவாயவற்றான் தீரப்பெற்றிலம் என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது.

# குறள் **1103** (தாம்வீழ்வார் )

[நிரதிசய இன்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இன்னையாதல் தகாது என்ற பாங்கற்குச் சொல்லியது.]

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ ( ) தாம் வீழ்வார் மென் தோள் துயிலின் இனிது கொல்

றாமரைக் கண்ணா னுலகு. (03) தாமரைக் கண்ணான் உலகு.

தொடரமைப்பு:

தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிது கொல்,

தாமரைக்கண்ணான் உலகு.

இதன்பொருள்

தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்= ஐம்புலன்களையும் நுகர்வார்க்குத் தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோளின்கண் துயிலும் துயில்போல வருந்தாமல் எய்தல் ஆமோ; தாமரைக்கண்ணான் உலகு= அவற்றைத் துறந்த தவயோகிகள் எய்தும் செங்கண்மால் உலகம்?

உரை விளக்கம்

ஐம்புலன்களையும் நுகர்வார் என்னும் பெயர் அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்த வேண்டுதலின், எம்மனோர்க்கு ஆகாது என்னும் கருத்தால் 'இனிதுகொல்' என்றான். இந்திரன் உலகு என்று உரைப்பாரும் உளர். 'தாமரைக்கண்ணான்' என்பது அவனுக்குப் பெயர் அன்மையின், அஃது உரையன்மை அறிக.

# குறள் **1104** (நீங்கிற் )

[பாங்கற் கூட்டத்து இறுதிக்கண் சொல்லியது]

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந் ( ) நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண் என்னும்

தீயாண்டுப் பெற்றா ளிவள். (04) தீ யாண்டுப் பெற்றாள் இவள்.

தொடரமைப்பு:

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ, இவள் யாண்டுப் பெற்றாள்.

இதன்பொருள்

நீங்கின்தெறூஉம் குறுகுங்கால் தண் என்னும் தீ= தன்னை அகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிராநிற்கும், இப்பெற்றித்தாய தீயை;

இவள் யாண்டுப்பெற்றாள்= என்கண் தருதற்கு இவள் எவ்வுலகத்துப் பெற்றாள்?

உரை விளக்கம்

கூடாமுன் துன்புறுதலின் 'நீங்கின் தெறூஉம்' என்றும், கூடிய பின் இன்புறுதலின் 'குறுகுங்கால் தண்ணென்னும்' என்றும், இப்பெற்றியதோர் தீ உலகத்து இல்லையாம் ஆகலின், 'யாண்டுப் பெற்றாள்' என்றும் கூறினான். தன் காமத்தீத்தன்னையே அவள் தந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின்.

# குறள் **1105** (வேட்டபொழுதி )

[தோழியிற் கூட்டத்து இறுதிக்கண் சொல்லியது]

வேட்ட பொழுதி னவையவை போலுமே ( ) வேட்ட பொழுதின் அவை அவை போலுமே

தோட்டார் கதுப்பினா டோள். (05) தோடு ஆர் கதுப்பினாள் தோள்.

தொடரமைப்பு:

வேட்ட பொழுதின் அவையவை போலுமே, தோட்டார் கதுப்பினாள் தோள்.

இதன்பொருள்

வேட்ட பொழுதின் அவையவை போலுமே= மிக இனியவாய பொருள்களைப் பெறாது அவற்றின்மேல் விருப்பம்

கூர்ந்தபொழுதின்கண், அவையவை தாமே வந்து இன்பம் செய்யுமாறுபோல் இன்பம் செய்யும்;

தோட்டார் கதுப்பினாள் தோள்= எப்பொழுதும் பெற்றுப் புணரினும், பூவினை அணிந்த தழைந்த கூந்தலினை உடையாள் தோள்கள்.

உரை விளக்கம்

தோடு ஆகுபெயர். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய்நெஞ்சம் பிணித்தலின், அவ் வாராமைபற்றி இவ்வாறு கூறினான். தொழிலுவமம்.

# குறள் 1106 (உறுதோறு )

[இதுவுமது]

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக் ( ) உறுதோறு உயிர் தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்கு

கமுதி னியன்றன தோள். (06) அமுதின் இயன்றன தோள்.

தொடரமைப்பு:

உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால், பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன.

இதன்பொருள்

உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால்= தன்னைப் பெறாது வாடிய என்னுயிர் பெற்று உறும்தோறும் தளிர்க்கும் வகை தீண்டுதலான்;

பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன= இப்பேதைக்குத்

தோள்கள் தீண்டப்படுவதோர் அமிழ்தினான் செய்யப்பட்டன.

உரை விளக்கம்

ஏது ஆகலான், தீண்டல் அமிழ்திற்கும் எய்திற்று. வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல் பற்றி, அவை 'அமிழ்தின் இயன்றன' என்றான். தளிர்த்தல்- இன்பத்தான் தழைத்தல்.

# குறள் **1107** **[**தம்மிலிருந்து**]**

**[**இவளைநீ வரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து தமது பாத்துண்ணும் இல்லறத்தோடு படல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது**]**

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா ( ) தம் இல் இருந்து தமது பாத்து உண்டு அற்றால்

லம்மா வரிவை முயக்கு. (07) அம் மா அரிவை முயக்கு.

தொடரமைப்பு:

அம் மா அரிவை முயக்கு, தம்இல் இருந்து தமது பாத்து உண்டற்றால்

இதன்பொருள்

அம் மா அரிவை முயக்கு= அழகிய மாமை நிறத்தை உடைய அரிவையது முயக்கம்;

தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்றால்= இன்பம் பயத்தற்கண் தமக்குரிய இல்லின்கணிருந்து, உலகோர் தம் தாளான் வந்த பொருளைத் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல்கட்குப் புகுத்துத் தம் கூற்றை உண்டாற்போலும்.

உரை விளக்கம்

தொழிலுவமம். இல்லறம் செய்தார் எய்தும் துறக்கத்து இன்பம் எனக்கு இப்புணர்ச்சியே தரும் என, வரைவு உடன்படான் கூறியவாறாயிற்று.

# குறள் **1108 [**வீழுமிரு**]**

[ஒத்த அன்புடைய நுமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியது என வரைவு கடாய தோழிக்குச் சொல்லியது]

வீழு மிருவர்க் கினிதே வளியிடை ( ) வீழும் இருவர்க்கு இனிதே வளி இடை

போழப் படாஅ முயக்கு. (08) போழப் படாஅ முயக்கு.

தொடரமைப்பு:

வளி இடை போழப் படா முயக்கு, வீழும் இருவர்க்கு இனிதே.

இதன்பொருள்

வளி இடை போழப் படா முயக்கு= ஒருபொழுது நெகிழாமையின் காற்றால் இடை அறுக்கப்படாத முயக்கம்;

வீழும் இருவர்க்கு இனிதே= ஒருவரை ஒருவர் விழைவார் இருவர்க்கும் இனிதே.

உரை விளக்கம்

முற்றும்மை விகாரத்தான் தொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு இருவர் இல்லை;இன்மையான் இஃது ஒவ்வாது என்பது கருத்து. களவிற் புணர்ச்சியை மகிழ்ந்து வரைவு உடன்படான் கூறியது.

# குறள் 1109 [ஊடலுணர்த]

[கரத்தல் வேண்டாமையின் இடையறவு இல்லாத கூட்டமே இன்பப் பயனுடைத்து என வரைவு கடாவியாட்குச் சொல்லியது]

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங் ( ) ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம்

கூடியார் பெற்ற பயன். (09) கூடியார் பெற்ற பயன்.

தொடரமைப்பு:
ஊடல் உணர்தல் புணர்தல் இவை, காமம் கூடியார் பெற்ற பயன்.

இதன்பொருள்

ஊடல் உணர்தல் புணர்தல் இவை= புணர்ச்சி இனிதாதற் பொருட்டு வேண்டுவதாய ஊடலும், அதனை அளவறிந்து நீங்குதலும், அதன்பின் நிகழ்வதாய அப்புணர்ச்சிதானும் என இவையன்றே;

காமம் கூடியார் பெற்ற பயன்= வரைந்துகொண்டு காமத்தை இடைவிடாது எய்தியவர் பெற்ற பயன்கள்.

உரை விளக்கம்

ஆடவர்க்குப் பிரிவு என்பது ஒன்று உளதாதன் மேலும், அதுதான் பரத்தையர்மாட்டு ஆதலும், அதனை அறிந்து மகளிர் ஊடிநிற்றலும், அவ்வூடலைத் தவறு செய்தவர்தாமே தம் தவறின்மை கூறி நீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்த அன்பினராய்க் கூடலும் அன்றே முன வரைந்து எய்தினார் பெற்ற பயன்; அப்பயன் இருதலைப் புள்ளின் ஒருயிராய உழுவல் அன்பு உடைய எமக்கு வேண்டா என அவ்வரைந்து எய்தலை இகழ்ந்து கூறியவாறு.

# குறள் 1110 [அறிதோறறி]

[ புணர்ந்துடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது]

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ் () அறிதோறு அறியாமை கண்டு அற்றால் காமம்

செறிதோறுஞ் சேயிழை மாட்டு. (10) செறிதோறும் சேயிழை மாட்டு.

தொடரமைப்பு:

அறிதோறு அறியாமை கண்டற்று, சேயிழை மாட்டுச் செறிதோறும் காமம்.

இதன்பொருள்

அறிதோறு அறியாமை கண்டற்று= நூல்களானும் நுண்ணுர்வானும் பொருள்களை அறிய அறிய முன்னை அறியாமை கண்டாற்போலக் காணப்படா நின்றது;

சேயிழை மாட்டுச் செறிதோறும் காமம்= சிவந்த இழையினை உடையாளை இடைவிடாது செறியச் செறிய இவள்மாட்டுக் காதல்.

உரை விளக்கம்

களவொழுக்கத்திற் பல இடையீடுகளான் எய்தப்பெறாது அவாவுற்றான் இதுபொழுது நிரந்தரமாக எய்தப் பெற்றமையின், 'செறிதோறும்' என்றான். அறிவிற்கு எல்லையின்மையான் மேன்மேல் அறிய அறிய முன்னை அறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற்கு எல்லையின்றி மேன்மேற் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடியாநின்றது எனத் தன்னாராமை கூறியவாறு.

இப்புணர்ச்சி மகிழ்தல், தலைமட்கும் உண்டேனும் அவள்மாட்டுக் குறிப்பான் நிகழ்வது அல்லது கூற்றான் நிகழாமை அறிக.

# திருக்குறள் காமத்துப்பால்- களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **112.**நலம் புனைந்து உரைத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகன் தலைமகள் நலத்தைப் புனைந்து சொல்லியது. இது புணர்ச்சி மகிழ்ந்துழி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1111 (**நன்னீரை **)**

[இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது]

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு ( ) நல் நீரை வாழி அனிச்சமே நின்னினும்

மென்னீரள் யாம்வீழ் பவள். (01) மெல் நீரள் யாம் வீழ்பவள்.

தொடரமைப்பு:
அனிச்சமே வாழி நன்னீரை, யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள்

இதன்பொருள்

அனிச்சமே வாழி நன்னீரை= அனிச்சப்பூவே, வாழ்வாயாக! மென்மையால் நீ எல்லாப் பூவினு நல்ல இயற்கையை உடையை; யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள்= அங்ஙனமாயினும், எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினு மெல்லிய இயற்கையை உடையள்.

உரைவிளக்கம்

அனிச்சம் ஆகுபெயர். 'வாழி' என்பது, உடன்பாட்டுக் குறிப்பு. இனி, யானே மெல்லியன் என்னும் தருக்கினை ஒழிவாயாக என்பதாம். அதுபொழுது உற்றறி◌ந்தான் ஆகலின், ஊற்றின் இனிமையையே பாராட்டினான். இன்னீரள் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் 1112 (மலர்காணின் )

[இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது]

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண் ( ) மலர் காணின் மையாத்தி நெஞ்சே இவள் கண்

பலர்காணும் பூவொக்கு மென்று. (02) பலர் காணும் பூ ஒக்கும் என்று.

தொடரமைப்பு:
நெஞ்சே, இவள் கண் பலர்காணும் பூ ஒக்கும் என்று,

மையாத்தி.

இதன்பொருள்

நெஞ்சே- நெஞ்சே!

இவள் கண் பலர் காணும் பூ ஒக்கும் என்று= யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பலரானும் காணப்படும் பூக்கள் ஒக்கும் என்று கருதி;

மலர்காணின் மையாத்தி= தாமரை, குவளை, நீலம் முதலிய மலர்களைக் கண்டால் மயங்காநின்றாய், நின் அறிவிருந்தவாறு என்!

உரை விளக்கம்

மையாத்தல் ஈண்டு ஒவ்வாதவற்றை ஒக்கும்எனக் கோடல். இறுமாத்தல், செம்மாத்தல் என்பனபோல ஒருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கம் முதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறாமையின், அவற்றோடு ஒருபுடை ஒக்கும் மலர்களைக் கண்டுழி எல்லாம் அவற்றின்கண் காதல்செய்து போந்தான், இதுபொழுது அக்கண்களின் நலமுழுதுந் தானே தமியாளை இடத்து எதிர்பபட்டு அனுபவித்தான் ஆகலின், அம்மலர்கள் ஒவ்வாமை கண்டு ஒப்புமை கருதிய நெஞ்சை இகழ்ந்து கூறியவாறு.

# குறள் 1113 (முறிமேனி )

[கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் தலைமகளது இயல்பு கூறியது]

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம் ( ) முறி மேனி முத்தம் முறுவல் வெறி நாற்றம்

வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. (03) வேய்த் தோள் அவட்கு.

தொடரமைப்பு:

வேய்த்தோள்அவட்கு, மேனி முறி, முறுவல் முத்தம், நாற்றம் வெறி, உண்கண் வேல்.

இதன்பொருள்

வேய்த்தோளவட்கு= வேய்போலும் தோளினை உடையவட்கு;
மேனிமுறி= நிறம் தளிர்நிறமாய் இருக்கும்;
முறுவல் முத்தம்= பல்லு முத்தமாயிருக்கும்;
நாற்றம் வெறி= இயல்பாய நாற்றம் நறுநாற்றமாயிருக்கும்;
உண்கண் வேல்= உண்கண்கள் வேலாயிருக்கும்.

உரை விளக்கம்

பெயரடையானும் ஓர் இயல்பு கூறப்பட்டது. முறி முறுவல் என்பன ஆகுபெயர். உருவக வகையான் கூறினமையின், புனைந்துரை யாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை அறியேன் என்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம்.

# குறள் **1114** (காணிற்குவளை )

[பாங்கற் கூட்டத்துச் சென்று சார்தலுறுவான் சொல்லியது]

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு ( ) காணின் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்

மாணிழை கண்ணொவ்வோ மென்று. (04) மாண் இழை கண் ஒவ்வோம் என்று.

தொடரமைப்பு:

குவளை, காணின், மாணிழை கண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும்.

இதன்பொருள்

குவளை= குவளைப் பூக்கள் தாமும்;
காணின்= காண்டல் தொழிலை உடையவாயின்;
மாண் இழை கண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும்= மாண்ட கண்களை உடையாள் கண்களை யாம் ஒவ்வேம் என்று கருதி, அந்நாணினால் இறைஞ்சி நிலத்தினை நோக்கும்.

உரை விளக்கம்

பண்பானே அன்றித் தொழிலானும் ஒவ்வாதென்பான் 'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாம் என்பது தோன்றக் 'கவிழ்ந்து' என்றும் கூறினான். காட்சியும் நாணும் இன்மையிற் செம்மாந்து வானை நோக்கின என்பதாம்.

# குறள் 1115 (அனிச்சப்பூ )

[பகற்குறிக்கண் பூவணி கண்டு சொல்லியது]

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு ( ) அனிச்சப் பூக் கால் களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு

நல்ல படாஅ பறை. (05) நல்ல படாஅ பறை.

தொடரமைப்பு:
அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள், நுசுப்பிற்கு நல்ல பறை படாஅ.

இதன்பொருள்

அனிச்சப்பூக் கால் களையாள்= இவள் தன்மென்மை கருதாது அனிச்சப்பூவை முகிழ் களையாது சூடினாள்;
நுசுப்பிற்கு நல்ல பறை படாஅ = இனி இவள் இடைக்கு நல்ல பறைகள் ஒலியா.

உரை விளக்கம்

அம்முகிழ்ப் பாரம் பொறாமையின், இடை முரியும்; முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவது என்பதாம். மக்கட்குரிய சாக்காடும், பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மேல் ஏற்றப்பட்டன.

# குறள் **1116 (**மதியு **)**

**[**இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.**]**

மதியு மடந்தை முகனு மறியா ( ) மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன். (06) பதியின் கலங்கிய மீன்.

தொடரமைப்பு**:**
மீன்**,** மதியும் மடந்தை முகனும் அறியா**,** பதியின் கலங்கிய.

இதன்பொருள்

மீன்= வானத்து மீன்கள்;
மதியும் மடந்தை முகனும் அறியா= வேறுபாடு பெரிதாகவும், தம் மதியினையும் எம் மடந்தை முகத்தினையும் இதுமதி இது முகம் என்று அறியமாட்டாது;
பதியின் கலங்கிய= தந்நிலையினின்றும் கலங்கித் திரியாநின்றன.

உரை விளக்கம்

ஓரிடத்து நில்லாது எப்பொழுதும் இயங்குதல்பற்றிப் 'பதியிற் கலங்கிய' என்றான். வேறுபாடு வருகின்ற பாட்டான் பெறப்படும். இனி இரண்டனையும் பதியிற் கலங்காத மீன்கள் அறியும்அல்லது, கலங்கின மீன்கள் அறியா என்று உரைப்பினும் அமையும்.

# குறள் 1117 (அறுவாய் )

[இதுவும் அது]

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல ( ) அறு வாய் நிறைந்த அவிர் மதிக்குப் போல

மறுவுண்டோ மாதர் முகத்து. (07) மறு உண்டோ மாதர் முகத்து.

தொடரமைப்பு:

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல, மாதர் முகத்து மறு உண்டோ?

இதன்பொருள்

(அம்மீன்கள் அங்ஙனம் கலங்குதற்குக் காரணம் யாது?) அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல= முன் குறைந்த இடம் வந்து நிரம்பியே விளங்கும் மதிக்கண்போல;
மாதர் முகத்து மறு உண்டோ = இம்மாதர் முகத்து மறு உண்டோ?

உரை விளக்கம்

இடம்= கலை. 'மதிக்கு' என்பது வேற்றுமைமயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையும் இன்மைபற்றி வேறுபாடு அறியலாயிருக்க அறிந்தில என இகழ்ந்து கூறியவாறு.

# குறள் 1118 (மாதர் )

[இதுவுமது]

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற் ( ) மாதர் முகம் போல் ஒளி விட வல்லையேல்

காதலை வாழி மதி. (08) காதலை வாழி மதி.

தொடரமைப்பு:
மதி வாழி, மாதர் முகம் போல் ஒளிவிட வல்லையேல் காதலை.

இதன்பொருள்

மதி வாழி= மதியே வாழ்வாயாக!
மாதர் முகம் போல் ஒளிவிட வல்லையேல் காதலை= இம்மாதர் முகம் போல யான் மகிழும்வகை ஒளிவீச வல்லையாயின், நீயும் என் காதலை உடையையாதி.

உரை விளக்கம்

மறுவுடைமையின் அது மாட்டாய்; மாட்டாமையின் என்னால் காதலிக்கவும்படாய் என்பதாம். 'வாழி' என்பது இகழ்ச்சிக் குறிப்பு.

# குறள் 1119 (மலரன்ன )

[இதுவுமது]

மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற் ( ) மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்

பலர்காணத் தோன்றன் மதி. (09) பலர் காணத் தோன்றல் மதி.

தொடரமைப்பு:

மதி, மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின், பலர் காணத் தோன்றல்.

இதன்பொருள்

மதி= மதியே!

மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்= இம்மலர் போலும் கண்ணினை உடையாள் முகத்தை நீ ஒக்க வேண்டுதியாயின்;

பலர் காணத் தோன்றல்= இதுபோல யான் காணத்தோன்று, பலர்காணத் தோன்றாது ஒழி.

உரை விளக்கம்

தானே முகத்தின் நலம் முழுதும் கண்டு அனுபவித்தான் ஆகலின், ஈண்டுப் பலர்காணத் தோன்றலை இழித்துக் கூறினான்.

தோன்றின் நினக்கு அவ்வொப்பு உண்டாகாது என்பதாம்.

# குறள் 1120 (அனிச்சமு )

[உடன்போக்கு உரைத்த தோழிக்கு அதன் அருமைகூறி மறுத்தது.]

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத () அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்

ரடிக்கு நெருஞ்சிப் பழம். (10) அடிக்கு நெருஞ்சிப் பழம்.

தொடரமைப்பு:

அனிச்சமும் அன்னத்தின் தூவியும், மாதர் அடிக்கு நெருஞ்சிப்

பழம்.

இதன்பொருள்

அனிச்சமும் அன்னத்தின் தூவியும்= உலகத்தாரான் மென்மைக்கு எடுக்கப்பட்ட அனிச்சப்பூவும், அன்னப்புள்ளின் சிறகுமாகிய இரண்டும்;

மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்= மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம் போல வருத்தம் செய்யும்.

உரை விளக்கம்

முள் வலிதாதல் உடைமையின் 'பழம்' என்றான். இத்தன்மைத்தாய அடி "பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கற்"[1] களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனம் கடக்கும் என்பது குறிப்பான் பெறப்பட்டது. செம்பொருளே அன்றிக் குறிப்புப்பொருளும் அடிநலன் அழியாமையாகலின், இதுவும் இவ்வதிகாரம் ஆயிற்று.

1.அகநானூறு- களிற்றியானைநிரை,5.

# திருக்குறள் காமத்துப்பால்-களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **113.**காதல் சிறப்பு உரைத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது. தலைமகன் தன் காதன் மிகுதி கூறலும், தலைமகள் தன் காதன் மிகுதி கூறலுமாம். இது புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தல், நலம் புனைந்துரைத்தல்களின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1121 (**பாலொடு **)**

(இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் தன்னயப்பு உணர்த்தியது.)

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி ( ) பாலொடு தேன் கலந்து அற்றே பணி மொழி

வாலெயி றூறிய நீர். (01) வால் எயிறு ஊறிய நீர்.

[தொடரமைப்பு:
பணிமொழி வாலெயிறு ஊறிய நீர், பாலொடு தேன்கலந்து அற்றே.]

இதன்பொருள்

பணிமொழி வால் எயிறு ஊறிய நீர்= இம்மெல்லிய மொழியினை உடையாளது வாலிய எயிறு ஊறிய நீர்;
பாலொடு தேன் கலந்தற்றே= பாலுடனே தேனைக் கலந்த கலவை போலும்.

உரைவிளக்கம்

கலந்ததற்று என்பது விகாரமாயிற்று. கலக்கப்பட்டது என்றவாறு. 'பாலொடு தேன்' என்றவதனால், அதன்சுவைபோலும் சுவையினை உடைத்து என்பதாயிற்று. 'எயிறூறிய' என இடத்து நிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது.. வேறு வேறு அறியப்பட்ட சுவையாய பாலும் தேனும் கலந்துழி, அக்கலவை இன்னது என்று அறியலாகாத இன்சுவைத்தாம் ஆகலின், அது பொருளாகிய நீர்க்கும் எய்துவிக்க.

# குறள் 1122 (உடம்பொடு )

(பிரிவச்சம் கூறியது)

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன ( ) உடம்பொடு உயிரிடை என்ன மற்று அன்ன

மடந்தையொ டெம்மிடை நட்பு. (02) மடந்தையொடு எம் இடை நட்பு.

[தொடரமைப்பு:
உடம்பொடு உயிரிடை என்ன அன்ன, மடந்தையொடு எம்மிடை நட்பு.]

இதன்பொருள்

உடம்பொடு உயிரிடை என்ன அன்ன= உடம்பொடு உயிரிடை உளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய;
மடந்தையொடு எம்மிடை நட்பு= இம்மடந்தையொடு எம்மிடை உளவாய நட்புக்கள்.

உரை விளக்கம்

'என்ன'வெனப் பன்மையான் கூறியது, இரண்டும் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதல், இன்பத்துன்பங்கள் ஒக்க அனுபவித்தல், இன்றியமையாமை என்ற இவற்றை நோக்கி. தெய்வப்புணர்ச்சியாகலான் அதுபொழுது உணர்ச்சி இலள்ஆகியாள், பின்னுடையள் ஆமன்றே! ஆயவழி, இவன்யாவன்கொல் எனவும், என்கண் அன்புடையான்கொல் எனவும், இன்னும் இவனைத் தலைப்பெய்தல் கூடுங்கொல் எனவும், அவள் மனத்தின்கண் நிகழும், அந்நிகழ்வனவற்றைக் குறிப்பான் அறிந்து அவைதீரக் கூறியவாறு. என்னை என்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் **1123** (கருமணியிற் )

(இடந்தலைப்பாட்டின்கண் தலைமகள் நீக்கத்துச் சொல்லியது.)

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந் ( ) கரு மணியின் பாவாய் நீ போதாய் யாம்

திருநுதற் கி◌்ல்லை யிடம். (03) வீழும் திரு நுதற்கு இல்லை இடம்.

[தொடரமைப்பு:
கருமணியிற் பாவாய் நீ போதாய், யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை.]

இதன்பொருள்

கருமணியிற் பாவாய் நீபோதாய்= என்கண்ணின் கருமணியின்கண் உறையும் பாவாய், நீ அங்குநின்றும் போதருவாயாக;
யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை= போதராது இருத்தியாயின், எம்மால் விரும்பப்பட்ட திருநுதலை உடையாட்கு இருக்க இடம் இல்லையாம்.

உரை விளக்கம்

யான் காணாது அமையாமையின், இவள் புறத்துப் போகற்பாலள்அன்றி என்கண்ணுள் இருக்கற்பாலள், இருக்குங்கால் நின்னோடு ஒருங்கு இருக்க இடம் போதாமையின், நின்னினும் சிறந்த இவட்கு அவ்விடத்தைக் கொடுத்து நீபோதுவாயாக என்பதாம்.

# குறள் **1124** (வாழ்தலுயிர்க் )

(பகற்குறிக்கண் புணர்ந்து நீங்குவான் சொல்லியது)

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத ( ) வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழை சாதல்

லதற்கன்ன ணீங்கு மிடத்து. (04) அதற்கு அன்னள் நீங்கும் இடத்து.

[தொடரமைப்பு:
ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள், நீங்கும் இடத்துச் அதற்குச் சாதல் அன்னள்]

இதன்பொருள்

ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள்= தெரிந்த இழையினை உடையாள் எனக்குப் புணருமிடத்து, உயிர்க்கு உடம்போடு கூடி வாழ்தல் போலும்;
நீங்கும் இடத்து அதற்குச் சாதல் அன்னள்= பிரியுமிடத்து அதற்கு அதனின் நீங்கிப்போதல்போலும்.

உரை விளக்கம்

எனக்கு என்பதும், புணரும் இடத்து என்பதும் அவாய்நிலையான் வந்தன. வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தம் செய்தலானும், அவற்றை அவள் புணர்வு பிரிவுகட்கு உவமையாக்கினான்.

# குறள் 1125 (உள்ளுவன் )

(ஒருவழித்தணந்து வந்த தலைமகன், நீயிர் தணந்தஞான்று எம்மை உள்ளியும் அறிதிரோ என்ற தோழிக்குச் சொல்லியது)

உள்ளுவன்மன் யான் மறப்பின் மறப்பறியே ( ) உள்ளுவன் மன் யான் மறப்பின் மறப்பு அறியேன்

னொள்ளமர்க் கண்ணாள் குணம். (05) ஒள் அமர்க் கண்ணாள் குணம்.

[தொடரமைப்பு:
ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன், மறப்பு

அறியேன்.]

இதன்பொருள்

ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உ◌்ளளுவன்= ஒள்ளியவாய் அமரைச்செய்யும் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேன் ஆயின், நினைப்பேன்;

மறப்பு அறியேன்= ஒருபொழுதும் மறத்தலை அறியேன், ஆகலான் நினைத்தலையும் அறியேன்.

உரை விளக்கம்

'மன்' ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள்- நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையும் தலைமகன் கூற்று, மேல் தலைமகள் கூற்று.

# குறள் 1126 (கண்ணுள்ளிற் )

(ஒருவழித் தணப்பின்கண் தலைமகனைத் தோழி இயற்பழிக்கும் என்று அஞ்சி அவள் கேட்பத் தன்னுள்ளே சொல்லியது)

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார் ( ) கண் உள்ளில் போகார் இமைப்பின் பருவரார்

நுண்ணியரெங் காத லவர். (06) நுண்ணியர் எம் காதலவர்.

[தொடரமைப்பு:
எம் காதலர் கண்ணுள்ளில் போகார், இமைப்பின் பருவரார், நுண்ணியர்.]

இதன்பொருள்

எம் காதலர் கண்ணுள்ளில் போகார்= தாம்

காணாமைபற்றிச்சேய்மைக்கண் போயினார் என்றுகருதுவார் கருதுக, எ ்முடைய காதலர் எம் கண்ணகத்துநின்றும் போகார்;
இமைப்பின் பருவரார்= யாம் அறியாது இமைத்தோமாயின், அதனால் வருந்துவதும் செய்யார்;
நுண்ணியர்= ஆகலான் காணப்படா நுண்ணியர்.

உரை விளக்கம்

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னே தோன்றலின், 'கண்ணுள்ளிற் போகார்' என்றும், இமைத்துழியும் அது நிற்றலான், 'இமைப்பிற் பருவரார்' என்றும் கூறினாள்.

# குறள் **1127** (கண்ணுள்ளார் )

(இதுவுமது)

கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணு ( ) கண் உள்ளார் காதலவர் ஆகக் கண்ணும்

மெழுதேங் கரப்பாக் கறிந்து. (07) எழுதேம் கரப்பாக்கு அறிந்து.

[தொடரமைப்பு:
காதலவர் கண்ணுள்ளாராகக் கண்ணும் எழுதேம், கரப்பாக்கு அறிந்து.]

இதன்பொருள்

காதலவர் கண் உள்ளாராகக் கண்ணும் எழுதேம்= காதலர் எப்பொழுதும் எம் கண்ணின் உள்ளார் ஆகலான், கண்ணின் அஞ்சனத்தால் எழுதுவதும் செய்யேம்;
கரப்பாக்கு அறிந்து= அத்துணைக்காலமும் அவர் மறைதலை அறிந்து.

உரை விளக்கம்

இழிவு சிறப்பும்மை மாற்றப்பட்டது. 'கரப்பாக்கு' என்பது வினைப்பெயர். வருகின்ற வேபாக்கு என்பதும் அது. யான் இடையீடு இன்றிக் காண்கின்றவரைப் பிரிந்தார் என்பது கருதுமாறு என்னை என்பது குறிப்பெச்சம்.

## குறள் **1128 (**நெஞ்சத்தார் **)**

**(**இதுவுமது**)**

நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்ட ( ) நெஞ்சத்தார் காதலவர் ஆக வெய்து உண்டல்

லஞ்சுதும் வேபாக் கறிந்து. (08) அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.

தொடரமைப்பு**:**

காதலவர் நெஞ்சத்தாராக வெய்து உண்டல் அஞ்சுதும்**,** வேபாக்கு அறிந்து.

இதன்பொருள்

காதலவர் நெஞ்சத்தாராக வெய்து உண்டல் அஞ்சுதும்= காதலர் எம் நெஞ்சினுள்ளார் ஆகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை அஞ்சாநின்றேம்;

வேபாக்கு அறிந்து= அவர் அதனான் வெய்துறலை அறிந்து.

உரை விளக்கம்

'எப்பொழுதும் எம் நெஞ்சின்கண் இருக்கின்றவரைப் பிரிந்தார் என்று கருதுமாறென்னை'? என்பது குறிப்பெச்சம்.

# குறள் 1129 (இமைப்பிற் )

(வரவிடை வைத்துப் பிரிவின்கண் தலைமகள் ஆற்றுதல் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி அவள் இயற்பட மொழிந்தது.)

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே ( ) இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே

யேதில ரென்னுமிவ் வூர். (09) ஏதிலர் என்னும் இவ் ஊர்.

தொடரமைப்பு:

இமைப்பிற் கரப்பாக்கு அறிவல், அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர்.

இதன்பொருள்

இமைப்பிற் கரப்பார்க்கு அறிவல்= என்கண் இமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலை அறிந்து இமையேன்;
அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர்= அவ்வளவிற்கு அவரைத் துயிலா நோய்செய்தார் அன்பிலர் என்று சொல்லாநிற்கும் இவ்வூர்.

உரை விளக்கம்

தன் கருத்து அறியாமை பற்றிப் புலந்து சொல்லுகின்றாள் ஆகலின், தோழியை வேறுபடுத்து, 'இவ்வூர்' என்றாள். 'ஒரு பொழுதும்' பிரியாதவரைப் பிரிந்தார் என்று பழிக்கற்பாலையல்லை', என்பதாம்.

# குறள் 1130 (உவந்துறைவர் )

(இதுவுமது)

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ () உவந்து உறைவர் உள்ளத்துள் என்றும் இகந்து உறைவர்

ரேதில ரென்னுமிவ் வூர். (10) ஏதிலர் என்னும் இவ் ஊர்.

தொடரமைப்பு:

என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர், இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ் ஊர்.

இதன்பொருள்

என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர்= காதலர் எஞ்ஞான்றும் என் உள்ளத்துள்ளே உவந்து உறையா நிற்பர்;

இகழ்ந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ்வூர்= அதனை அறியாது அவரைப் பிரிந்து உறையா நின்றார், அன்பிலர் என்று சொல்லாநிற்கும் இவ்வூர்.

உரை விளக்கம்

'உவந்து உறைவர்' என்றதனால் அன்புடைமை கூறினாள். 'பிரியாமையும் அன்பும் உடையாரை இலர் எனப் பழிக்கற்பாலையல்லை' என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்-களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **114.**நாணுத் துறவு உரைத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் தோழிக்குத் தன் நாண் துறவு உரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் நாண் துறவு உரைத்தலும் ஆம். இது, காதன் மிக்குழி நிகழ்வதாகலின், காதற்சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1131 (**காமமுழந் **)**

(சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியது.)

காம முழந்து வருந்தினார்க் கேம ( ) காமம் உழந்து வருந்தினார்க்கு

ஏம

மடலல்ல தில்லை வலி. (01) மடல் அல்லது இல்லை வலி.

தொடரமைப்பு:

காமம் உழந்து வருந்தினார்க்கு, ஏம மடல் அல்லது வலி இல்லை.

இதன்பொருள்

காமம் உழந்து வருந்தினார்க்கு= அரியராய மகளிரோடு காமத்தை அனுபவித்துப் பின் அதுபெறாது துன்புற்ற ஆடவர்க்கு;

ஏம மடல் அல்லது வலி இல்லை = பண்டும் ஏமமாய் வருகின்ற மடல் அல்லது இனி எனக்கு வலியாவது இல்லை.

உரைவிளக்கம்

ஏமமாதல்- அத்துன்பம் நீங்கும்வகை அவ்வனுபவத்தினைக் கொடுத்தல். 'வலி' ஆகுபெயர். பண்டும் ஆடவராயினார் இன்பம் எய்தி வருகின்றவாறு நிற்க, நின்னை அதற்குத் துணையென்று கருதிக் கொன்னே முயன்ற யான், இதுபொழுது அல்லாமையை அறிந்தேன் ஆகலான் இனி யானும் அவ்வாற்றான் அதனை எய்துவல் என்பது கருத்து.

# குறள் 1132 (நோனாவுடம் )

நாணுடைய நுமக்கு அது முடியாது என மடல் விலக்கலுற்றாட்குச் சொல்லியது.

நோனா வுடம்பு முயிரு மடலேறு ( ) நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும்

நாணினை நீக்கி நிறுத்து. (02) நாணினை நீக்கி நிறுத்து.

தொடரமைப்பு:
நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும், நாணினை நீக்கி நிறுத்து.

இதன்பொருள்

நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும்= அவ்வருத்தத்தினைப் பொறாத உடம்பும் உயிரும் அதற்கு ஏமமாய மடன்மாவினை ஊரக் கருதாநின்றன;

நாணினை நீக்கி நிறுத்து= அதனை விலக்குவதாய நாணினை அகற்றி.

உரை விளக்கம்

வருந்தினார்க்கு என மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூறாராயினார். 'மடல்' ஆகுபெயர். 'நீக்கிநிறு ் த்து' என்பது ஒருசொன்னீர்மைத்து. அறிவு, நிறை, ஓர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும் நாண் நீங்காது நின்றது, அதுவும் இதுபொழுது நீங்கிற்று என்பான், 'உடம்பும் உயிரும்' என்றான். அவைதாம் தம்முள் நீங்காமற் பொருட்டு 'மடல் ஏறும்' என்றது, அவள் தன் ஆ ் ற்றைமை அறிந்து கடிதின் குறைநேர்தல் நோக்கி.

# குறள் 1133 (நாணொடு )

நாணேயன்றி நல்லாண்மையும் உடைமையின் முடியாது என்றாட்குச் சொல்லியது.

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன் ( )
நாணொடு நல் ஆண்மை பண்டு உடையேன் இன்று உடையேன்

காமுற்றா ரேறு மடல். (03) காமுற்றார் ஏறும் மடல்.

தொடரமைப்பு:

நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன், காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன்.

இதன்பொருள்

நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன்= நாணும் மிக்க ஆண்தகைமையும் யான் பண்டு உடையேன்;
காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன்= அவை காமத்தான் நீங்குதலான், அக்காமம் மிக்கார் ஏறும் மடலினை இன்று உடையேன்.

உரை விளக்கம்

'நாண்'- இழிவாவன செய்தற்கண் விலக்குவது. 'ஆண்மை', ஒன்றற்கும் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன, இன்றுளது இதுவேயாகலின் கடிதின்முடியும் என்பதாம்.

# குறள் **1134** (காமக்கடும் )

நாணு நல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனால் அவை நீங்குவனவல்ல என்றாட்குச் சொல்லியது.

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு ( ) காமக் கடும் புனல் உய்க்குமே நாணொடு

நல்லாண்மை யென்னும் புணை. (04) நல் ஆண்மை என்னும் புணை.

தொடரமைப்பு:

நாணொடு நல்லாண்மை என்னும் புணை, காமக் கடும் புனல் உய்க்குமே.

இதன்பொருள்

நாணொடு நல்லாண்மை என்னும் புணை= யான் தன்னைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையும் ஆகிய புணைகளை;

காமக் கடும்புனல் உய்க்குமே= என்னிற் பிரித்துக் காமமாகிய கடியபுனல் கொண்டுபோகாநின்றது.

உரை விளக்கம்

அது செய்யமாட்டாத ஏனைப் புனலின் நீக்குதற்குக் 'கடும்புனல்' என்றான். இப்புனற்கு அவை புணையாகா, அதனான் அவை நீங்கும் என்பதாம்.

## குறள் **1135** (தொடலைக் )

இவ்வாற்றாமையும் மடலும் நுமக்கு எவ்வாறு வந்தன என்றாட்குச் சொல்லியது.

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு ( ) தொடலைக் குறும் தொடி தந்தாள் மடலொடு

மாலை யுழக்குந் துயர். (05) மாலை உழக்கும் துயர்.

தொடரமைப்பு:

மாலை உழக்கும் துயர் மடலொடு, தொடலைக் குறும் தொடி தந்தாள்.

இதன்பொருள்

மாலை உழக்கும் துயர் மடலொடு= மாலைப் பொழுதின்கண் அனுபவிக்கும் துயரினையும், அதற்கு மருந்தாய மடலினையும் முன்னறியேன்;

தொடலைக் குறுந்தொடி தந்தாள்= இதுபொழுது, எனக்கு

மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினை உடையாள் தந்தாள்.

உரை விளக்கம்

காமம் ஏனைப்பொழுதுகளினும் உளதேனும், மாலைக்கண் மலர்தல் உடைமையின், 'மாலை உழக்கும் துயர்' என்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலின் அவ்விழிவும் அவளால் தரப்பட்டது என்றும், அவள்தான் நீ கூறியதே கூறும் இளைமையள் என்பது தோன்றத் 'தொடலைக் குறுந்தொடி' என்றும் கூறினான். அப்பெயர் உவமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. இவை அவள் தந்தனவாகலின் நின்னான் நீங்கும் என்பது கருத்து.

# குறள் **1136** (மடலூர்தல் )

மடலூரும் பொழுது இற்றைக்கும் கழிந்தது, என்றாட்குச் சொல்லியது.

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற ( ) மடல் ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற

படலொல்லா பேதைக்கென் கண். (06) படல் ஒல்லா பேதைக்கு என் கண்.

## தொடரமைப்பு:

பேதைக்கு என் கண் படல் ஒவ்வா, யாமத்தும் மன்ற மடல் ஊர்தல் உள்ளுவேன்.

இதன்பொருள்

பேதைக்கு என் கண் படல் ஒல்லா= நின்பேதை காரணமாக என்கண்கள் ஒருகாலும் துயிறலைப் பொருந்தா;

யாமத்தும் மன்ற மடல் ஊர்தல் உ ளளுவேன்= அதனால்

எல்லாரும் துயிலும் இடையாமத்தும் யான் இருந்து மடலூர்தலையே கருதாநிற்பன்.

உரை விளக்கம்

'பேதை' என்பது பருவம் பற்றியன்று, மடமை பற்றி. இனிக் குறைமுடிப்பது, நாளையெனவேண்டா என்பதாம்.

# குறள் **1137** **(**கடலன்ன **)**

(பேதைக்கு என்கண் படல் ஒல்லா என்பது பற்றி அறிவிலராய மகளிரினும், அஃதுடையராய ஆடவர் அன்றே ஆற்றற்பாலர் என்றாட்குச் சொல்லியது.)

கடலன்ன காம முழந்து மடலேறாப் ( ) கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப்

பெண்ணிற் பெருந்தக்க தில். (07) பெண்ணின் பெருந்தக்கது இல்.

தொடரமைப்பு:

கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின், பெருந் தக்கது இல்.

இதன்பொருள்

கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின்= கடல்போலக் கரையற்ற காமநோயினை அனுபவித்தும், மடல் ஊர்தலை ்ச்செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புபோல;
பெருந்தக்கது இல்= மிக்க தகுதியினை உடைய பிறப்பு உலகத்தில் இல்லை.

உரை விளக்கம்

பிறப்பு விசேடத்தால் எனக்கு இல்லையாகா நின்றது, நீ அஃது

அறிகிலை என்பதாம். இத்துணையும் தலைமகன் கூற்று, மேல் தலைமகள் கூற்று.

## குறள் 1138 (நிறையரி )

(காப்புச் சிறைமிக்குக் காமம் பெருகியவழிச் சொல்லியது.)

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம ( ) நிறை அரியர் மன் அளியர் என்னாது காமம்

மறையிறந்து மன்று படும். (08) மறை இறந்து மன்று படும்.

தொடரமைப்பு:

நிறை அரியர், மன் அளியர் என்னாது, காமம் மறை இறந்து மன்று படும்.

இதன்பொருள்

நிறை அரியர் (என்னாது)= இவர் நிறையால் நாம் மீதூர்தற்கு அரியர் என்று அஞ்சுதல் செய்யாது;

மன் அளியர் என்னாது= மிகவும் அளிக்கத்தக்கார் என்று இரங்குதல் செய்யாது;

காமம் மறை இறந்து மன்றுபடும்= மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின்கண்ணே வெளிப்படுவதாயிருந்தது.

உரை விளக்கம்

'என்னாது' என்பது, முன்னும் கூட்டி, மகளிர் என்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. 'மன்று' என்பது, தந்தை தன்ஐயரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்து இயல்பு கூறுவாள்போன்று, தன்காமம் பெருகியவாறும், இனி அறத்தொடு நிற்றல் வேண்டும் என்பதும் குறிப்பாற்

கூறியவாறாயிற்று.

## குறள் **1139 (**அறிகிலா **)**

(இதுவுமது)

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம ( ) அறிகிலார் எல்லாரும் என்றே என் காமம்

மறுகின் மறுகு மருண்டு. (09) மறுகின் மறுகு மருண்டு.

தொடரமைப்பு:
எல்லாரும் அறிகிலார் என்று, என் காமம் மறுகில் மருண்டு மறுகும்.

இதன்பொருள்

எல்லாரும் அறிகிலார் என்று= யான் முன் அடங்கி நிற்றலான் எல்லாரும் என்னை அறிதல் இலர், இனி அவ்வாறு நில்லாது யானே வெளி◌ப்பட அறிவிப்பல் என்று கருதி;
என் காமம் மறுகில் மருண்டு மறுகும்= என்காமம் இவ்வூர் மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது.

உரை விளக்கம்

மயங்குதல்- அம்பலாதல். மறுகுதல்-அலராதல். அம்பலும் அலரும் ஆயிற்று. இனி அறத்தொடு நிற்றல்வேண்டும் என்பதாம். அறிவிலார் என்பதூஉம் பாடம்.

## குறள் **1140 (**யாங்கண்ணிற் **)**

(செவிலிக் கறத்தொடு நின்றுவைத்து, யான் நிற்குமாறு என்னையென்று நகையாடிய தோழியொடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.)

யாம் கண்ணிற் காண அறிவில்லார் நகுப () யாம் கண்ணின் காண அறிவு இல்லார் நகுப

யாம்பட்ட தாம்படா வாறு. (10) யாம் பட்ட தாம் படாவாறு.

தொடரமைப்பு:

யாம் கண்ணின் காண அறிவில்லார் நகுப, யாம் பட்ட தாம் படாவாறு.

இதன்பொருள்

யாம் கண்ணிற்காண அறிவில்லார் நகுப= யாம் கேட்குமாறும் அன்றிக் கண்ணாற்காணுமாறு எம்மை அறிவிலார் நகாநின்றார்; :யாம்பட்ட தாம் படாவாறு= அவர் அங்ஙனம் செய்கின்றது யாம் உற்றநோய்கள் தாம் உறாமையான்.

உரை விளக்கம்

'கண்ணின்' என்றது, முன்கண்டறியாமை உணர நின்றது. அறத்தொடு நின்றமையறியாது, வரைவு மாட்சிமைப்படுகின்றிலள் எனப் புலக்கின்றாள் ஆகலின், ஏதிலாள் ஆக்கிக் கூறினாள்.

# திருக்குறள் காமத்துப்பால்-களவியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **115.**அலர் அறிவுறுத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, களவொழுக்கம் வேண்டிய தலைமகள் பிறர் கூறுகின்ற அலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக்கு அறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ் அலரை அவன்றனக்கு அறிவுறுத்தலுமாம். இது நாணுத் துறந்தவழி நிகழ்வதாகலின், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **1141 (** அலரெழ**)**

**(**அல்ல குறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி அலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.**)**

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப் ( ) அலர் எழ ஆர் உயிர் நிற்கும் அதனைப்

பலரறியார் பாக்கியத் தால். (01) பலர் அறியார் பாக்கியத்தால்.

தொடரமைப்பு:

அலர் எழ ஆருயிர் நிற்கும், அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார்.

இதன்பொருள்

அலர் எழ ஆருயிர் நிற்கும்= மடந்தையொடு எம்மிடை நட்பு ஊரின்கண் அலராய் எழுதலான் அவளைப் பெறாது வருந்தும் என் அரிய உயிர் பெற்றது போன்று நிலைபெறும்;

அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார்= அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யானே அறிவதல்லது கூறுகின்ற பலரும் அறியார்.

உரைவிளக்கம்

அல்லகுறிப்பட்டுத் தலைமகளை எய்தப்பெறாத வருத்தம் எல்லாம் தோன்ற அரியவுயிர் என்றும், அங்ஙனம் அரியாளை எளியளாக்கி எடுக்கின்றமையின், அஃது அவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாக நின்றதென்பான் 'அலரெழ ஆருயிர் நிற்கும்' என்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலார் அறியின் தூற்றாது ஒழிவர், ஒழியவே ஆருயிர் போகும் ஆகலான், அவர் அறியாது ஒழிகின்றது தெய்வத்தான் என்றும் கூறினான். முற்றும்மை விகாரத்தான் தொக்கது.

# குறள் 1142 (மலரன்ன )

(இதுவுமது)

மலரன்ன கண்ணா ளருமை யறியா ( ) மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது

தலரெமக் கீந்ததிவ் வூர். (02) அலர் எமக்கு ஈந்தது இவ் ஊர்.

தொடரமைப்பு:

மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது, இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது.

இதன்பொருள்

மலர் அன்ன கண்ணாள் அருமையறியாது= மலர்போலும் கண்ணையுடையாளது எய்தற்கு அருமை அறியாது;
இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது= இவ்வூர் அவளை எளியளாக்கி அவளோடு அலர்கூறலை எமக்கு உபகரித்தது.

உரை விளக்கம்

'அருமை' அல்லகுறிப்பாட்டானும், இடையீடுகளானும் ஆயது. 'ஈந்தது' என்றான் தனக்குப் பற்றுக்கோடாகலின், அலர் கூறுவாரை அவர் செய்த உதவிபற்றி 'இவ்வூர்' என்றான்.

# குறள் **1143 (** உறாஅதோ**)**

**(இதுவுமது)**

உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப் ( ) உறாஅதோ ஊர் அறிந்த கௌவை அதனைப்

பெறாஅது பெற்றன்ன நீர்த்து. (03) பெறாஅது பெற்று அன்ன நீர்த்து.

தொடரமைப்பு:

ஊர் அறிந்த கௌவை உறாஅதோ, அதனைப் பெறாஅது

பெற்று அன்ன நீர்த்து.

இதன்பொருள்

ஊர் அறிந்த கௌவை உறாதோ= எங்கட்குக் கூட்டம் உண்மை இவ்வூர் அறிதலான் விளைந்த அலர் எனக்கு உறுவது ஒன்று அன்றோ;

அதனைப் பெறாது பெற்றன்ன நீர்த்து= அது கேட்ட என் மனம், அக்கூட்டத்தைப் பெறாது இருந்தே பெற்றாற் போலும் நீர்மை உடைத்தாகலான்.

உரை விளக்கம்

'பெற்றன்ன' நீர்மை- பெற்றவழி உளதாம் இன்பம்போலும் இன்பம் உடைமை. 'நீர்த்து' என்பதற்கு ஏற்ற மனம் என்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.

## குறள் **1144 (**கவ்வையாற் **)**

**(**இதுவுமது**)**

கவ்வையாற் கவவிது காம மதுவின்றேற் ( ) கவ்வையால் கவ்விது காமம் அது இன்றேல்

றவ்வென்னுந் தன்மை யிழந்து. (04) தவ் என்னும் தன்மை இழந்து.

தொடரமைப்பு: காமம் கவ்வையால் கவ்விது, அது இன்றேல் தன்மை இழந்து தவ் என்னும்.

இதன்பொருள்

காமம் கவ்வையால் கவ்விது= என் காமம் இவ்வூர் எடுக்கின்ற அலரானே அலர்தலை உடைத்தாயிற்று;

அது இன்றேல் தன்மை இழந்து தவ் என்னும்= அவ்வலர் இல்லையாயின் தன் இயல்பு இழந்து சுருங்கும்.

உரை விளக்கம்

அலர்தல்- மேன்மேல் மிகுதல். செவ்வை உடையதனைச் செவ்விது என்றாற் போலக் கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார். இயல்பு- இன்பம் பயத்தல். தவ்வென்னும் என்பது, குறிப்புமொழி. "நூல்கால் யாத்த மாலை வெண்குடை/ தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" (நெடுநல்வாடை, அடி 184-185) என்புழியும் அது.

# குறள் **1145** (களித்தொறுங் )

(இதுவுமது)

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம் ( ) களித்தொறும் கள் உண்டல் வேட்டு அற்றால் காமம்

வெளிப்படுந் தோறு மினிது. (05) வெளிப்படும் தோறும் இனிது.

தொடரமைப்பு:

களித்தொறும் கள் உண்டல் வேட்டற்றால், காமம் வெளிப்படுந்தோறும் இனிது.

இதன்பொருள்

களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று= கள்உண்பார்க்குக் களிக்குந்தொறும் கள்ளுண்டல் இனிதாமாறுபோல;

காமம் வெளிப்படுந்தோறும் இனிது= எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது.

உரை விளக்கம்

வேட்கப்பட்டற்றால் என்பது 'வேட்டற்றால்' என நின்றது. வேட்கைமிகுதியால், அலரும் இன்பம்செய்யாநின்றது என்பதாம்.

# குறள் **1146** (கண்டதுமன் )

(இடையீடுகளானும் அல்லகுறியானும் தலைமகனை எய்தப்பெறாத் தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலர் அறிவுறீஇ வரைவு கடாயது.)

கண்டது மன்னு மொருநா லலர்மன்னுந் ( ) கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்

திங்களைப் பாம்புகொண் டற்று. (06) திங்களைப் பாம்பு கொண்டு அற்று.

தொடரமைப்பு:

கண்டது ஒருநாள், அலர் மன்னும் திங்களைப் பாம்பு கொண்டு அற்று.

இதன்பொருள்

கண்டது ஒருநாள்= யான் காதலரைக் கண்ணுறப்பெற்றது ஒரு ஞான்றே;

அலர் மன்னும் திங்களைப் பாம்புகொண்டற்று= அதனின் ஆய அலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போன்று உலகெங்கும் பரந்தது.

உரை விளக்கம்

காரியத்தைக் காரணமாக உபசரித்துப் 'பாம்புகொண்டற்று' என்றாள். இருவழியும் 'மன்'னும் 'உம்'மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர் பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது,

வரைந்து கோடல் வேண்டும் என்பதாம்.

# குறள் **1147** **(**ஊரவர் **)**

**(**வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதல் அறிந்த தோழி**,** ஊரவர் அலரும்**,** அன்னைசொல்லும் நோக்கி ஆற்றல்வேண்டும் எனச் சொல்லெடுப்பியவழி அவள் சொல்லியது.**)**

ஊரவர் கௌவை எருவாக வன்னைசொன் ( ) ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல்

னீராக நீளுமிந் நோய். (07) நீர் ஆக நீளும் இந் நோய்.

**தொடரமைப்பு:**
இந்நோய்**,** ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல் நீராக நீளும்.

இதன்பொருள்

இந்நோய்= இக்காம நோயாகிய பயிர்;

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளும்= இவ்வூரின் மகளிர் எடுக்கின்ற அலர் எருவாக அதுகேட்டு அன்னை வெகுண்டு சொல்லுகின்ற வெஞ்சொல் நீராக**,** வளராநின்றது.

உரை விளக்கம்

'ஊரவர் என்பது, தொழிலான் ஆண்ஒழித்துநின்றது. ஏகதேச உருவகம். சுருங்குவதற்கு ஏதுவாவன தாமே, விரிதற்கு ஏதுவாகாநின்றன என்பதாம். வரைவானாதல் பயன்.

# குறள் **1148 (**நெய்யாலெரி **)**

**(**இதுவுமது**)**

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கெளவையாற் ( ) நெய்யால் எரி நுதுப்பேம் என்று அற்றால் கெளவையால்

காம நுதுப்பே மெனல். (08) காமம் நுதுப்பேம் எனல்.

தொடரமைப்பு**:**

கெளவையால் காமம் நுதுப்பேம் எனல்**,** நெய்யால் எரி நுதுப்பேம் என்று அற்று.

இதன்பொருள்

கெளவையால் காமம் நுதுப்பேம் எனல்= ஏதிலார் எடுக்கின்ற அலரால் நாம் காமத்தை அவித்தும் என்று கருதுதல்;
நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்று= நெய்யால் எரியை அவித்தும் என்று கருதுதலோடு ஒக்கும்.

உரை விளக்கம்

மூன்றன் உருபுகள் கருவிக்கண் வந்தன. கிளர்தற் காரணமாய அலரால் அவித்தல் கூடாது என்பதாம்.

# குறள் **1149 (**அலர்நாண **)**

**(**வரைவிடை வைத்துப் பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தான் ஆதல் அறிந்து அலர் அஞ்சி ஆற்றல்வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.**)**

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார் ( ) அலர் நாண்

ஒல்வதோ அஞ்சல் ஓம்பு என்றார்

பலர்நாண நீத்தக் கடை. (09) பலர் நாண நீத்தக் கடை.

தொடரமைப்பு:

அஞ்சல் ஓம்பு என்றார் பலர் நாண நீத்தக்கடை, அலர் நாண ஒல்வதோ.

இதன்பொருள்

அஞ்சல் ஓம்பு என்றார் பலர்நாண நீத்தக்கடை= தம்மை எதிர்ப்பட்டஞான்று நின்னிற்பிரியேன் அஞ்சல் ஓ◌ம்பு என்றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும் வகை நம்மைத் துறந்தபின்;

அலர் நாண ஒல்வதோ= நாம் ஏதிலார் கூறும் அலருக்கு நாணக்கூடுமோ, கூடாது.

உரை விளக்கம்

'நாண' என்னும் வினையெச்சம், 'ஒல்வது' என்னும் தொழிற்பெயருள், ஒல்லுதல் தொழிலோடு முடிந்தது. கண்டார் நாணும் நிலைமயமாய யாம், நாணுதல் யாண்டையது என்பதாம்.

# குறள் **1150** (தாம்வேண்டி )

(தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் அலர் அறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.)

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங் () தாம் வேண்டின் நல்குவர் காதலர் யாம் வேண்டும்

கௌவை யெடுக்குமிவ் வூர். (10) கௌவை எடுக்கும் இவ் ஊர்.

தொடரமைப்பு:
யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடு◌க்கும், காதலர்தாம் வேண்டின் நல்குவர்.

இதன்பொருள்

யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடுக்கும்= உடன்போகற்கு ஏதுவாகல் நோக்கி யாம் பண்டே விரும்புவதாய அலரை இவ்வூர் தானே எடாநின்றது;

காதலர்தாம் வேண்டின் நல்குவர்= இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் அதனை இனிதின் நேர்வர், அதனால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது.

உரை விளக்கம்

எ◌ச்சவும்மை விகாரத்தான் தொக்கது. நங்கட் காதலுடைமையின் மறாஅர் என்பது தோன்றக் காதலர் என்றாள்.

இவ்விருபது பாட்டும் புணர்தல் நிமித்தம்.

# களவியல் முற்றிற்று

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

இனிக் கற்புப் பதினெட்டு அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி முதற்கண் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

## அதிகாரம் **116.**பிரிவு ஆற்றாமை

அதிகார முன்னுரை

அஃதாவது, வரைந்து எய்தியபின் தலைமகன் அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் சேயிடையினும், ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்து செல்லும். செல்லுஞான்று, அப்பிரிவினை அவள் ஆற்றாந்தன்மை. அஃது ஈண்டுப் பிரிவு உணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவள்தனக்குத் தலைமகள் தானே அவன் குறிப்பான் உணர்ந்து கூறலும், பிரிவு உணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக்கூறலும் என நால்வகையாற் கூறப்படும்.

# குறள் **1151** **(**செல்லாமை **)**

**(**பிரிந்து கடிதின்வருவல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.**)**

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின் ( ) செல்லாமை உண்டேல் எனக்கு உரை மற்று நின்

வல்வரவு வாழ்வார்க் குரை. (01) வல் வரவு வாழ்வார்க்கு உரை.

தொடரமைப்பு**:**

செல்லாமை உண்டேல் எனக்கு உரை**,** மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை.

இதன்பொருள்

செல்லாமை உண்டேல் எனக்கு உரை= நீ எம்மைப் பிரியாமை உண்டாயின் அதனை எனக்குச்சொல்;
மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை= அஃதுஒழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்வையாயின், அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல்.

உரைவிளக்கம்

தலைமகளை ஒழித்து எனக்கு என்றாள், தான்அவள் என்னும் வேற்றுமையின்மையின். அக்காலம்எல்லாம் ஆற்றியிருந்து அவ்வரவு காணவல்லள்அல்லள், பிரிந்தபொழுதே இறந்துபடும் என்பதாம். அழுங்குவித்தல் பயன்.

இதனைத் தலைமகள் கூற்றாக்கி உரைப்பாரும் உளர்.

# குறள் **1152** **(**இன்கணுடைத் **)**

(பிரிவு தலைமகன் குறிப்பான் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.)

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும் ( ) இன்கண் உடைத்து அவர் பார்வல் பிரிவு அஞ்சு ம்

புன்க ணுடைத்தாற் புணர்வு (02) புன்கண் உடைத்தால் புணர்வு.

தொடரமைப்பு:

அவர் பார்வல் இன்கண் உடைத்து, புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடைத்து.

இதன்பொருள்

அவர் பார்வல் இன்கண் உடைத்து= தழையும் கண்ணியும் கொண்டு பின்னின்ற ஞான்று அவர் நோக்குமாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கு இன்பம் உடைத்தாயிருக்கும்;

புணர்வு பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்து= இன்று அப்புணர்ச்சிதான் நிகழாநிற்கவும், அது பிரிவர் என்று அஞ்சும் அச்சத்தினை உடைத்தாயிற்று. அவர் அன்பின் நிலைமையிது.

உரை விளக்கம்

'பார்வல்' என்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. 'புன்கண்' என்னும் காரணப்பெயர் காரியத்தின் மேலதாயிற்று. அவ்வச்சத்தினை உடைத்தாதலாவது, "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறும் தீநீரைக்/ கள்ளினும் மகிழ்செய்யும் எனவுரைத்தும் அமையார்என்/ ஒள்ளிழை திருத்தும்" (கலி. பாலைக்கலி,3) பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக் காட்டி அச்சம் செய்தலுடைமை. அழுங்குவித்தல்- பயன்.

## குறள் **1153** (அரிதரோ )

(இதுவுமது)

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும் ( ) அரிது அரோ தேற்றம் அறிவு உடையார் கண்ணும்

பிரிவோ ரிடத்துண்மை யான். (03) பிரிவு ஓர் இடத்து உண்மையான்.

தொடரமைப்பு:
அறிவு உடையார் கண்ணும், ஓரிடத்துப் பிரிவு உண்மையான், தேற்றம் அரிது.

இதன்பொருள்

அறிவுடையார் கண்ணும்= பிரியேன் என்ற தம்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறிதல் உடையராய கண்ணும்;
ஓரிடத்துப் பிரிவு உண்மையான்= ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான்;
தேற்றம் அரிது= அவர்சொல்லும் தலையளியும்பற்றி நம்மாட்டு அன்புடையர் எனத் தேறும் தேற்றம் அரிதாயிருந்தது.

உரை விளக்கம்

அரோ அசைநிலை. உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது.

# குறள் 1154 (அளித்தஞ்ச )

(இதுவுமது)

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற் ( ) அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்த சொல்

றேறியார்க் குண்டோ தவறு. (04) தேறியார்க்கு உண்டோ தவறு.

தொடரமைப்பு:
அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின், தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ

இதன்பொருள்

அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின்= எதிர்ப்பட்ட ஞான்றே தலையளி செய்து, 'நின்னிற்பிரியேன் அஞ்சல்' என்றவர்தாமே பின் பிரிவாராயின்;
தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ= அவர்க்குஅன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ?

உரை விளக்கம்

'தேறியார்' என்பது, தன்னைப் பிறர்போற் கூறல். சொல்லும் செயலும் ஒவ்வாமைக்குற்றம் அவர்க்கு எய்தும், அஃது எய்தாவகை அழுங்குவி என்பது கருத்து.

# குறள் **1155** (ஓம்பின )

(இதுவுமது)

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர் ( ) ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் மற்று அவர்

நீங்கி னரிதாற் புணர்வு. (05) நீங்கின் அரிதால் புணர்வு

தொடரமைப்பு:
ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல், மற்று அவர் நீங்கின் புணர்வு அரிது.

இதன்பொருள்

ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல்= என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயின், அதனை ஆளுதற்கு அமைந்தாருடைய செலவினை அழுங்குவிப்பாயாக;

மற்று அவர்நீங்கின் புணர்வு அரிது= அழுங்குவிப்பார் இன்றி, அவர்செல்வாராயின் அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லும், சென்றால் பின் அவரைக்கூடுதல் எனக்கு அரிதாம்.

உரை விளக்கம்

ஆளுதற்கு அமைதல்- இறைவர் ஆதற்குத் தெய்வத்தால் ஏற்புடையர் ஆதல். மற்று- வினைமாற்றின்கண் வந்தது.

# குறள் **1156** (பிரிவுரைக்கும் )

(தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குச் சொல்லியது.)

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர் ( ) பிரிவு உரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிது அவர்

நல்குவ ரென்னும் நசை. (06) நல்குவர் என்னும் நசை.

தொடரமைப்பு:

அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணராயின், நல்குவர் என்னும் நசை அரிது.

இதன்பொருள்

அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணர் ஆயின்= நம் கவவுக்கடுமை அறிந்த தலைவர்தாமே நம்முனின்று தம்பிரிவினை உணர்த்தும் வன்கண்மை உடையராயின்;

நல்குவர் எ◌்னனும் நசை அரிது= அத்தன்மையார் பின்பு நம்

ஆற்றாமை அறிந்து வந்து தலையளிசெய்வார் என்று இருக்கும் ஆசை விடப்படும்.

உரை விளக்கம்

அருமை- பயன்படுதல் இல்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவு எ௸ணுணுதலும் உணர்த்தலும் வல்லர் ஆயினார் பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டையது என்பதாம். அழுங்குவித்தல் பயன்.

# குறள் **1157** **(**துறைவன் **)**

**(**இதுவுமது**)**

துறைவன் றுறந்தமை தூற்றாகொன் முன்கை ( ) துறைவன் துறந்தமை தூற்றா கொல் முன் கை

யிறையிறவா நின்ற வளை. (07) இறை இறவா நின்ற வளை.

தொடரமைப்பு:

துறைவன் துறந்தமை, முன்கை இறை இறவாநின்ற வளை தூற்றாகொல்.

இதன்பொருள்

துறைவன் துறந்தமை = துறைவன் என்னைப் பிரியலுற்றமையை; முன்கை இறை இறவாநின்ற வளை தூற்றாகொல்= அவன் உணர்த்தாமல் தாமே உணர்ந்து என் முன்கையிறையினின்றும் கழலாநின்ற வளைகள் என்க்கு அறிவியாவோ, அவன் உணர்த்த உணர்ந்துவந்து நீ அறிவித்தல் வேண்டுமோ.

உரை விளக்கம்

முன்னே நிகழ்ந்தமையின் 'துறந்தமை' என்றும், கேட்டதுணையான் மெலிந்து ஆ◌ற்றாமையின் 'இறவாநின்ற' என்றும் கூறினாள். அழுங்குவித்து வந்து கூறற்பாலை அல்லையாய் நீயும் இவ்வளைகள் செய்தனவே செய்தாய் எனப் புலந்து கூறியவாறு.

## குறள் **1158** **(**இன்னாதின **)**

(இதுவுமது)

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு ( ) இன்னாது இனன் இல் ஊர் வாழ்தல் அதனினும்

மின்னா தினியார்ப் பிரிவு. (08) இன்னாது இனியார்ப் பிரிவு.

தொடரமைப்பு:

இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது, இனியார்ப் பிரிவு அதனினும் இன்னாது.

இதன்பொருள்

இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது= மகளிர்க்குத் தம் குறிப்பறியும் தோழியர் இல்லாத வேற்றூரின்கண் வாழ்தல் இன்னாது; இனியார்ப்பிரிவு அதனினும் இன்னாது= அதன்மேலும் தம் காதலரைப் பிரிதல் அதனினும் இன்னாது.

உரை விளக்கம்

தலைவன் செலவினை அழுங்குவித்து வாராது, உடன்பட்டு வந்தமைபற்றிப் புலக்கின்றாள்ஆகலின், 'இனன்இல்லூர்' என்றாள். உலகியல் கூறுவாள்போன்று தனக்கு அவ்விரண்டும் உண்மை கூறியவாறு.

# குறள் 1159 (தொடிற்சுடி )

(காமம் தீயே போன்று தான் நின்ற இடத்தைச் சுடும், ஆகலான் நீ ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.)

தொடிற் சுடினல்லது காமநோய் போல ( ) தொடின் சுடில் அல்லது காம நோய் போல

விடிற்சுட லாற்றுமோ தீ. (09) விடின் சுடல் ஆற்றுமோ தீ.

தொடரமைப்பு:
தீத் தொடின் சுடில் அல்லது, காமநோய் போல் விடின் சுடல் ஆற்றுமோ

இதன்பொருள்

தீத்தொடின் சுடல் அல்லது= தீத் தன்னைத் தொட்டாற் சுடுமாயின் சுடுதல்அல்லது;

காமநோய் போல விடின் சுடல் ஆற்றுமோ= காமமாகிய நோய்போலத் தன்னை அகன்றாற் தப்பாது சுடுதலைவற்றோ, மாட்டாது.

உரை விளக்கம்

சுடுமாயின் என்பது, மந்திர மருந்துகளான் தம்பிக்கப்படாதாயின் என்றவாறு. காமத்திற்கு அதுவும் இல்லை என்பாள் வாளா 'சுடல்' என்றாள். அகறல்- நுகராமை. சுடல் என்பது முன்னும் கூட்டப்பட்டது. தீயினும் கொடியதனை யான் ஆற்றுமாறு என்னை என்பதாம்.

# குறள் 1160 (அரிதாற்றி )

(தலைவியர் பலரும் பிரிவாற்றியிருப்பர், அது நீ செய்கின்றிலை என்ற தோழிக்குச் சொல்லியது.)

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப் () அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவு ஆற்றிப்

பின்னிருந்து வாழ்வார் பலர். (10) பின் இருந்து வாழ்வார் பலர்.

தொடரமைப்பு:

அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கிப், பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர்.

இதன்பொருள்

(நீ சொல்லுகின்றது ஒக்கும்) அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கி= பிரிவு உணர்த்தியவழி அதற்கு உடம்பட்டுப் பிரியுங்கால் நிகலும் அல்லல் நோயினையும் நீக்கி;

பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர்= பிரிந்தால் அப்பிரிவுதன்னையும் ஆற்றிப் பின்னும் இருந்து உயிர்வாழும் மகளிர் உலகத்துப் பலர்.

உரை விளக்கம்

பண்டை இற்சிறப்பத் தலையளிபெற்று இன்புறுகின்ற எல்லைக் கண்ணே, அஃது இழந்து துன்புறுதற்கு உடம்படுதல் அரியது ஒன்றாகலின், அரியதனைச்செய்து என்றும், செல்லும் தேயத்து அவர்க்கு யாது நிகழுமென்றும், வருந்துணையும் யாம் ஆ்றறியிருக்குமாறு என் என்றும், அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்து எய்தும் என்றும், இவ்வாற்றான் நிகழும் கவலை மனத்து நீங்காது ஆகலான் 'அல்லல் நோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழும் காமவேதனையும், புறத்து யாழிசை மதி தென்றல் என்று இவைமுதலாக வந்து அதனை வளர்ப்பனவும் ஆற்றல் அரியவாகலின் 'பிரிவாற்றி' என்றும், தம்காதலரை இன்றியமையா மகளிருள் இவையெல்லாம்

பொறுத்துப் பின்னும் இருந்து உயிர்வாழ்வார் ஒருவரும் இல்லை என்பது குறிப்பால் தோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என்றும் கூறினாள். 'அரிது' என்பது, வினைக்குறிப்புப்பெயர். பிரிவின்கண் நிகழ்வனவற்றைப் 'பிரிவு' என்றாள். 'செய்து', 'நீக்கி', 'ஆற்றி' என்பன, ஓசைவகையான் அவ்வவற்றது அருமை உணரநின்றன. சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. யானும் இறந்துபடுவல் என்பது கருத்து.

# திருக்குறள் காமத்துப்பால்-கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **117.**படர்மெலிந்து இரங்கல்

அதிகார முன்னுரை

அது படரான் மெலிந்து இரங்கல் எனவிரியும். அஃதாவது பிரிவாற்றாளாய தலமகள் தான் உறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின், அந்நினைவான் மெலிந்து இரங்குதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1161 (** மறைப்பேன்மன்**)**

**(**காம நோயை வெளிப்படுத்தல் நின் நாணுக்கு ஏலாது என்ற தோழிக்குச் சொல்லியது. **)**

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க் ( )

மறைப்பேன் மன் யான் இஃதோ நோயை இறைப்பார்க்கு

கூற்றுநீர் போல மிகும். (01) ஊற்று நீர் போல மிகும்.

[தொடரமைப்பு: நோயை யான் மறைப்பேன், இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போல மிகும்.
]

இதன்பொருள்

நோயை யான் மறைப்பேன்= இந்நோயைப் பிறர் அறிதல் நாணி யான் மறையாநின்றேன்;

இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போல மிகும்= நிற்பவும், இஃது அந்நாள்வரை நில்லாது நீர் வேண்டும் என்று இறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறு போல் மிகாநின்றது.

உரைவிளக்கம்

அம்மறைத்தலாற் பயன் என் என்பதுபட நின்றமையின்,'மன்' ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வர்க்கு ஒத்தனென்யான்" என்புழிப்போல ஈண்டுச் சுட்டுப்பெயர் ஈறுதிரிந்து நின்றது. இஃதோர் நோயை என்று பாடம் ஓதுவாரும் உளர். அஃது பாடம் அன்மை அறிக. இனி, அதற்கு அடுத்தது நீசெயல் வேண்டும் என்பதாம்.

# குறள் 1162 ( கரத்தலுமா)

( ஈண்டை அறியாமல் மறைத்தல், ஆண்டையார் அறியத் தூதுவிடுதல் என்னும் இரண்டனுள் ஒன்று செயல்வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.)

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க் ( ) கரத்தலும் ஆற்றேன் இந் நோயை நோய் செய்தார்க்கு

குரைத்தலு நாணுத் தரும். (02) உரைத்தலும் நாணுத்தரும்

[தொடரமைப்பு: இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன், நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத்தரும்.
]

இதன்பொருள்

இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன்= இந்நோயை ஈண்டையார் அறியாமல் மறைத்தலும் வல்லேன் ஆகின்றிலேன்;

நோய் செய்தவர்க்கு உரைத்தலும் நாணுத்தரும்= ஆகாக்கால், நோய்செய்தார்க்கு உரைக்கவெனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது, இனி என்செய்கோ?

உரை விளக்கம்

ஒருகாலைக்கு ஒருகால் மிகுதலின் 'கரத்தலும் ஆற்றேன்' என்றும், சேயிடைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூது விட்டால், இன்னுமிருந்தேன் என்பது பயக்கும் என்னும் கருத்தால் 'நாணுத்தரும்' என்றும் கூறினாள்.

# குறள் **1163 (** காமமு**)**

**(**இதுவுமது **)**

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென் ( ) காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும் என்

னோனா வுடம்பி னகத்து. (03) நோனா உடம்பின் அகத்து.

[தொடரமைப்பு: காமமும் நாணும், நோனா என் உடம்பின்

அகத்து, உயிர் காவாத் தூங்கும்.
]

இதன்பொருள்

காமமும் நாணும்= காமநோயும் அதனைச் செய்தவர்க்கு உரைக்கல் ஒல்லாத நாணும்;

நோனா என் உடம்பின் அகத்து= தம்மைப் பொறாத என் உடம்பின்கண்ணே;

உயிர் காவாத் தூங்கும்= உயிர் காத் தண்டாக அதன் இருதலையினும் தூங்காநின்றன.

உரை விளக்கம்

பொறாமை மெலிவான்ஆயது. 'தூங்கும்' என்பது, ஒன்றின் ஒன்று மிகாது இரண்டும் ஒத்தசீர என்பது தோன்றநின்றது. தூதுவிடவும், ஒழியவும் பண்ணுவனவாய காம, நாண்கள் தம்முள் ஒத்து உயிரினை இறுவியாநின்றன. யான் அவற்றுள் ஒன்றின்கண் நிற்கமாட்டாமையின் இஃது இற்றே விடும் என்பதாம்.

# குறள் **1164 (** காமக்கடன்**)**

**(** தலைவியர் காமக்கடற்படார், படினும் அதனை ஏற்ற புணையான் நீந்துக் கடப்பர் என்ற தோழிக்குச் சொல்லியது.**)**

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து ( ) காமக் கடல் மன்னும் உ ் ண்டே அது நீந்தும்

மேமப் புணைமன்னு மில். (04) ஏமப் புணை மன்னும் இல்.

[தொடரமைப்பு: உண்டு காமக் கடலே, அது நீந்தும் ஏமப் புணை இல்.
]

இதன்பொருள்

உண்டு காமக்கடலே மன்னும்= யாவர்க்கும் உளவாய் வருகின்ற இவ்விரண்டன்உள்ளும், எனக்குண்டாகின்றது காமக்கடலே;

அது நீந்தும் ஏமப்புணை மன்னும் இல்= அதனை நீந்தும் அரணாகிய புணை இல்லை.

உரை விளக்கம்

இருவழியும் 'மன்'னும் 'உம்'மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலை என்பது கருத்து.

# குறள் **1165 (** துப்பினெவ**)**

**(**தூதுவிடாமை நோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது. **)**

துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு **( )** துப்பின் எவன் ஆவர் மன் கொல் துயர் வரவு

நட்பினு ளாற்று பவர். (05) நட்பினுள் ஆற்றுபவர்.

[தொடரமைப்பு: நட்பினுள் துயர் வரவு ஆற்றுபவர், துப்பின் எவன் ஆவர் கொல் மன்
]

இதன்பொருள்

நட்பினுள் துயர் வரவு ஆற்றுபவர்= இன்பம் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்ப வரவினைச் செய்யவல்லவர்;

துப்பின் எவன் ஆவர் கொல்= துன்பம் செய்தற்கு உரிய பகைமைக்கண் என்செய்வர் கொலோ?

உரை விளக்கம்

துப்புப் பகையும் ஆதல் "துப்பெதி்ர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மைய/ னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" (புறநானூறு, 380) என்பதனானும் அறிக. அப்பகைமை ஈண்டுக் காணாமையின் அவர்செய்வதும் அறியப் பெற்றிலேம் என்பதுபடநின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலை எனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கியும், பிறளாக்கியும் கூறினாள்.

# குறள் **1166** (இன்பங்கடன் )

( காமத்தான் இன்பமுற்றார்க்கு அதனினாய துன்பமும் வரும் என்ற தோழிக்குச் சொல்லியது. )

இன்பங் கடன்மற்றுக் காம மஃ்தடுங்காற் ( ) இன்பம் கடல்மற்றுக் காமம் அஃ்து அடுங்கால்

றுன்ப மதனிற் பெரிது. (06) துன்பம் அதனின் பெரிது.

[தொடரமைப்பு: காமம் இன்பம் கடல், மற்று அஃ்து அடுங்கால் துன்பம் அதனின் பெரிது.
]

இதன்பொருள்

காம இ்ன்பம் கடல்= காமம் புணர்வால் இன்பம் செய்யுங்கால், அவ்வின்பம் கடல்போலப் பெரிதாம்;

மற்று அஃது அடுங்கால் துன்பம் அதனின் பெரிது= இனி அதுதானே பிரிவால் துன்பம் செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம்.

உரை விளக்கம்

மற்று வினைமாற்றின்கண் வந்தது. அடுங்கால் எனவந்தமையின், மறுதலையெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்ற இன்பத்தோடு ஒத்துவரின் ஆற்றலாம்; இஃது அதனது அளவன்று என்பது கருத்து.

# குறள் **1167 (** காமக்கடும்**)**

**(**காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படும் என்றாட்குச் சொல்லியது.**)**

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன் ( ) காமக் கடும் புனல் நீந்திக் கரை காணேன்

யாமத்தும் யானே யுளேன். (07) யாமத்தும் யானே உளன்.

[தொடரமைப்பு:காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன், யாமத்தும் யானே உளேன்.
]

இதன்பொருள்

காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன்= காமம் ஆகிய கடலை நீந்தாதேன் அல்லேன், நீந்தியும் அதற்குக் கரை காண்கின்றிலேன்;

யாமத்தும் யானே உளேன்= அக்காணாமைக் காலம்தான் எல்லாரும் துயிலும் அரையிருள் ஆயிற்று; அவ் அரையிருட்கண்ணும் அதற்கொரு துணையின்றி யானே ஆயினேன்; ஆயும் இறந்துபட்டு உய்ந்துபோகாது உளேனாகாநின்றேன், ஈதொரு தீவினைப்பயன் இருந்தவாறு என்!

உரை விளக்கம்

கடுமை ஈண்டு மிகுதிக்கண் நின்றது. உம்மை முன்னும் கூட்டப்பட்டது. யானே யாயினேன் என்பது, நீ துணையாயிற்றிலை என்னும் குறிப்பிற்று.

## குறள் 1168 ( மன்னுயிரெல்)

( இரவின் கொடுமை சொல்லியிரங்கியது. )

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா ( ) மன் உயிர் எல்லாம் துயிற்றி அளித்து இரா

வென்னல்ல தில்லை துணை. (08) என் அல்லது இல்லை துணை.

[தொடரமைப்பு: இரா அளித்து, மன் உயிர் எல்லாம் துயிற்றி என் அல்லது துணை இல்லை.
]

இதன்பொருள்

இரா அளித்து= இவ்விரா அளித்தாய் இருந்தது; மன் உயிர் எல்லாம் துயிற்றி என்னல்லது துணை இல்லை= உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாம் தானே துயிலப்பண்ணுதலான் என்னை அல்லது வேறு துணை

உடைத்தாயிற்றில்லை.

உரை விளக்கம்

'துயிற்றி' எனத்திரிந்து நின்ற வினையெச்சம், அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோடு ஒன்றுகின்ற உயிர்கள் எல்லாம் விட்டு, இறந்துபடும் எல்லையேன் ஆகிய என்னையே துணையாகக்கோடலின் அறிவின்று என்பது பற்றி 'அளித்து' என்றாள்; இகழ்ச்சிக்குறிப்பு.

# குறள் **1169** **(** கொடியார்**)**

**(** இதுவுமது **)**

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா ( ) கொடியார் கொடுமையின் தாம் கொடிய இந்நாள்

ணெடிய கழியு மிரா. (09) நெடிய கழியும் இரா.

[தொடரமைப்பு: இந்நாள் நெடிய கழியும் இரா, கொடியார் கொடுமையின் தாம் கொடிய.
]

இதன்பொருள்

இந்நாள் நெடிய கழியும் இரா= காதலரொடு நாம் இன்புற்ற முன்னாள்களில் குறியவாய் அவர் பிரிவு ஆற்றேமாகின்ற இந்நாள்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்;

கொடியார் கொடுமையின் தாம் கொடிய= அக்கொடியாரது கொடுமைக்கு மேலே தாம் கொடுமை செய்யாநின்றன.

உரை விளக்கம்

தன் ஆற்றாமை கருதாது பிரிதலின், 'கொடியார்' என்றாள். கொடுமை- கடிதின் வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும், நீட்டிப்பானும் உளதாய ஆற்றாமைக்குக் கண்ணோடாமை மேலும், பண்டையின் நெடியவாய்க் கொடியவாகா நின்றன என்பதாம்.

## குறள் **1170 (** உள்ளம்போன்**)**

**(**நின் கண்கள் பேரழகு அழிகின்றவாகலின் அழற்பாலையல்லை என்றாட்குச் சொல்லியது.**)**

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர் () உள்ளம் போன்று இள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்

நீந்தல மன்னோவென் கண். (10) நீந்தல மன்னோ என் கண்.

**[**தொடரமைப்பு**:** உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின்**,** என் கண் வெள்ளநீர் நீந்தல.
**]**

இதன்பொருள்

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின்= மனம்போலக் காதலர் உள்ள தேயத்துக் கடிதின் செல்லவல்லனவாயின்;

என்கண் வெள்ளநீர் நீந்தல மன்னோ= என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா.

உரை விளக்கம்

அது மாட்டாமையின், இனி அவற்றிற்கு நீந்துதலே உள்ளது

என்பதுபட நின்றமையின் 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. மனத்திற்குச் செலவாவது நினைவேயாகலின் 'உள்ளம்போன்று' என்றும், மெய்க்கு நடந்துசெல்லவேண்டுதலின் கண்கள் அதனொடு சென்று காதலரைக் காண்டல் கூடாது என்னும் கருத்தான் 'செல்கிற்பின்' என்றும் கூறினாள். இதனான் வருகின்ற அதிகாரமுந் தோற்றுவாய் செய்யப்பட்டது.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **118.** கண்விதுப்பு அழிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, கண்கள் தம் காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சிவிதுப்பு- தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்து இரங்கலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **1171 (** கண்டாங்**)**

**(**நின்கண்கள் கலுழ்ந்து தம் அழகு இழவாநின்றன**;** நீ ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **)**

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய் ( ) கண் தாம்

கலுழ்வது எவன் கொலோ தண்டா நோய்

தாங்காட்ட யாங்கண் டது. (01) தாம் காட்ட யாம் கண்டது.

[தொடரமைப்பு: தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட, கண் தாம் கலுழ்வது எவன் கொல்.]

இதன்பொருள்

தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட= இத்தணியா நோயை யாம் அறிந்தது, தாம் எமக்குக் காதலரைக் காட்டலான் அன்றோ? கண்தாம் கழுல்வது எவன்கொல்= அன்று அத்தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச்சொல்லி அழுகின்றது என்கருதி?

உரைவிளக்கம்

'காட்ட' என்பதற்கு ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றும் தாமே காட்டுதல்அல்லது, யாம் காட்டுதல் யாண்டையது என்பதாம்.

# குறள் 1172 ( தெரிந்துணரா)

(இதுவுமது )

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப் ( ) தெரிந்து உணரா நோக்கிய உண் கண் பரிந்து உணராப்

பைத லுழப்ப தெவன் (02) பைதல் உழப்பது எவன்.

[தொடரமைப்பு: தெரிந்து உணரா நோக்கிய உண்கண், பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன். ]

இதன்பொருள்

தெரிந்து உணரா நோக்கிய உண்கண்= மேல்விளைவதனை ஆராய்ந்து அறியாது அன்று காதலரை நோக்கிநின்ற உண்கண்கள்;

பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன்= இன்று இது நம்மால் வந்ததுஆகலின் பொறுத்தல் வேண்டும் எனக் கூறுபடுத்து உணராது துன்பமுழப்பது என்கருதி?

உரை விளக்கம்

விளைவது- பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கு அரியராய் வருத்துதல். முன்னே வருவதுஅறிந்து அது காவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்தலன்றே உள்ளது; அதுவும் செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை என்பதாம்.

# குறள் **1173 (** கதுமெனத்**)**

**(**இதுவுமது **)**

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு ( ) கதும் எனத் தாம் நோக்கித் தாமே கலுழும்

மிதுநகத் தக்க துடைத்து. (03) இது நகத்தக்கது உடைத்து.

[தொடரமைப்பு**:**
தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது**,** நகத்தக்கது உடைத்து. ]

இதன்பொருள்

தாம் கதுமென நோக்கித் தாமே கழுலும் இது= இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றும் தாமே இருந்து அழுகின்ற இது;

நகத்தக்கது உடைத்து= நம்மால் சிரிக்கத்தக்க இயல்பினை உடைத்து.

உரை விளக்கம்

கண்கள் என்பது அதிகாரத்தான் வந்தது. 'இது'வென்றது, மேற்கூறிய கழிமடச்செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகைவிளைக்குமாகலின், 'நகத்தக்கதுடைத்து' என்றாள்.

# குறள் 1174 ( பெயலாற்றா)

( இதுவுமது)

பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா ( ) பெயல் ஆற்றா நீர் உலந்த உண் கண் உயல் ஆற்றா

வுய்விநோ யென்க ணிறுத்து. (04) உய்வு இல் நோய் என் கண் நிறுத்து.

[தொடரமைப்பு:
உண்கண், உயல் ஆற்றா உய்வு இல் நோய் என்கண் நிறுத்து, பெயல் ஆற்றா நீர் உலந்த]

இதன்பொருள்

உண்கண்= உண்கண்கள்;

உயல் ஆ◌்ற்றா உய்வுஇல் நோய் என்கண் நிறுத்து= அன்று யான் உய்யமாட்டாமைக்கு ஏதுவாய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி;

பெயலாற்றா நீர் உலந்த= தாமும் அழுதலைமாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன.

உரை விளக்கம்

நிறுத்தல்- பிரிதலும் பின் கூடாமையும் உடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச்செய்தல். முன் எனக்கு இன்னாதன செய்தலாற் பின் தமக்கு இன்னாதன தாமே வந்தன என்பதாம்.

# குறள் 1175 ( படலாற்றா)

(இதுவுமது )

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக் ( ) படல் ஆற்றா பைதல் உழக்கும் கடல் ஆற்றாக்

காமநோய் செய்தவென் கண். (05) காம நோய் செய்த என் கண்.

[தொடரமைப்பு:
கடல்ஆற்றாக் காமநோய் செய்த என்கண், படல் ஆற்றாப் பைதல் உழக்கும். ]

இதன்பொருள்

கடல் ஆற்றாக் காமநோய் செய்த என்கண்= எனக்குக்கடலும் சிறிதாகும்வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என்கண்கள்; படல் ஆற்றாப் பைதல் உழக்கும்= அத்தீவினையாற் தாமும் துயில்கிலவாய்த் துன்பத்தையும் உழவாநின்றன.

உரை விளக்கம்

காமநோய் காட்சியான் வந்ததாகலின், அதனைக் கண்களே நோய்செய்ததாக்கிக் கூறினாள். துன்பம் அழுதலானாயது.

# குறள் **1176 (** ஓஒவினிதே**)**

**(**இதுவுமது **)**

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண் ( ) ஓஒ இனிதே எமக்கு இந்நோய் செய்த கண்

டாஅ மிதற்பட் டது. (06) தாஅம் இதற்பட்டது.

**[**தொடரமைப்பு**:**
எமக்கு இந்நோய் செய்த கண் தாஅம் இதற்பட்டது**,** ஓஒ இனிதே.**]**

இதன்பொருள்

எமக்கு இந்நோய் செய்த கண் தாஅம் இதற்படடது= எமக்கு இக்காமநோயினைச் செய்த கண்கள் தாமும், இத்துயிலாது அழுதற்கண்ணேபட்டது;
ஓஒ இனிதே= மிகவும் இனிதாயிற்று.

உரை விளக்கம்

ஓ வென்பது, மிகுதிப்பொருட்கண் வந்த குறிப்புச்சொல். தம்மால் வருத்தமுற்ற எமக்கு அது தீர்ந்தாற்போன்றது என்பதாம்.

# குறள் **1177 (** உழந்துழந்து**)**

**(**இதுவுமது **)**

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து ( ) உழந்து உழந்து உள் நீர் அறுக விழைந்து இழைந்து

வேண்டி யவர்க்கண்ட கண். (07) வேண்டி அவர்க் கண்ட கண்.

[தொடரமைப்பு:
விழைந்து இழைந்து வேண்டி அவர்க் கண்ட கண், உழந்து உழந்து உள்நீர் அறுக. ]

இதன்பொருள்

விழைந்து விழைந்து வேண்டி அவர்க்கண்ட கண்= விழைந்து உண்ணெகிழ்ந்து, விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள்;
உழந்து உழந்து உள்நீர் அறுக= இன்று இத்துயிலாது அழுங்கலாய துன்பத்தினை, உழந்து உழந்து தம் அகத்துள்ள நீர் அற்றே போக!

உரை விளக்கம்

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது.

# குறள் 1178 ( பேணாது)

(காதலர் பிரிந்து போயினாரல்லர், அவர் ஈண்டு உளர், அவரைக் காணும் அளவும் நீ ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. )

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க் ( ) பேணாது பெட்டார் உளர் மன்னோ மற்று அவர்க்

காணா தமைவில கண். (08) காணாது அமைவில கண்.

[தொடரமைப்பு:
பேணாது பெட்டார் உளர் மன்னோ, மற்று அவர்க் காணாது கண் அமைவில.]

இதன்பொருள்

பேணாது பெட்டார் உளர்= நெஞ்சத்தால் விழையாது வைத்துச் சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தே உளர்;
மற்று அவர்க் கண் காணாது அமைவில= அவ்வுண்மையாற் பயன் யாது? அவரைக் கண்கள் காணாது அமைகின்றன இல்லையாயின.

உரை விளக்கம்

செயலாற் பிரிந்து நின்றமையிற் 'பேணாது என்றும், முன்நலம் பாராட்டிப் பிரிவச்சமும், வன்புறையும் கூறினார் ஆகலின், 'பெட்டார்' என்றும் கூறினாள். 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. 'ஓ'காரம் அசைநிலை. யான் ஆற்றவும், கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன என்பதாம். இனிக் கொண்கனை என்பது பாடமாயின், என் கண்கள் தம்மைக் காணாது அமைகின்ற கொண்கனைத் தாம் காணாது அமைகின்றனவில்லை; இவவாறே தம்மை ஒருவர் விழையாதிருக்கத் தாம் அவரை விழைந்தார் உலகத்து உளரோ என்று உரைக்க. இதற்கு 'மன்' அசைநிலை.

# குறள் **1179 (** வாராக்கால்**)**

(நீயும் ஆற்றி நின் கண்களும் துயில்வனவாதல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. )

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை ( ) வாராக்கால் துஞ்சா வரின் துஞ்சா ஆயிடை

யாரஞ ருற்றன கண். (09) ஆர் அஞர் உற்றன கண்.

[தொடரமைப்பு:

வாராக்கால் துஞ்சா, வரின் துஞ்சா, ஆயிடைக் கண் ஆரஞர்

உற்றன. ]

இதன்பொருள்

வாராக்கால் துஞ்சா= காதலர் வாராத ஞான்று அவர் வரவுபார்த்துத் துயிலா;

வரின் துஞ்சா= வந்த ஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா;

ஆயிடைக்கண் ஆர் அஞர் உ◌ற்றன= ஆதலால் அவ்விரு வழியும் என் கண்கள் பொறுத்தற்கு அரிய துன்பத்தினை உடைய.

உரை விளக்கம்

'ஆயிடை எனச் சுட்டுநீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒருஞான்றும் இல்லை என்பதாம்.

## குறள் **1180 (** மறைபெற**)**

**(**காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர்கொடுமையை மறைக்க வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.**)**

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ**ல ()** மறை பெறல் ஊரார்க்கு அரிது அன்றால் எம் போல்

லறைபறை கண்ணா ரகத்து. (10) அறை பறை கண்ணார் அகத்து.

[தொடரமைப்பு:

எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறைபெறல், ஊரார்க்கு அரிதன்று. ]

இதன்பொருள்

எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறை பெறல்= எம்மைப்போலும் அறைபறையாகிய கண்ணினை உடையார் தம்

நெஞ்சின்கண் அடக்கிய மறையை அறிதல்;
ஊரார்க்கு அரிதன்று= இவ்வூரின்கண் உள்ளார்க்கு எளிது.

உரை விளக்கம்

மறை என்றது, ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்து நிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமை உண்மையின், 'அறைபறை' யாகிய கண்ணென்றாள். இங்ஙனம் செய்யுள்விகாரம் ஆக்காது, அறைபறைக் கண்ணார் என்று பாடம் ஓதுவாருமுளர், யான்மறைக்கவும் இவை வெளிப்படுத்தாநின்றன என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **119.** பசப்புறுபருவரல்

அதிகார முன்னுரை

அது பசப்புற்ற பருவரல் என விரியும். அஃதாவது, பசப்புறுதலானாய வருத்தம். இதனைப் "பந்தெறிந்த வயா" என்பது போலக் கொள்க. பசப்பாவது, பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு. இது தலைமகனைக் காணப் பெறாதவழி நிகழ்வதாகலின் கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **1181 (** நயந்தவர்க்கு**)**

**(**முன்பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றாது பசந்தவழித் தன்னுள்ளே சொல்லியது. **)**

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென் ( ) நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்த என்

பண்பியார்க் குரைக்கோ பிற. (01) பண்பு யார்க்கு உரைக்கோ பிற.

[தொடரமைப்பு:
நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன், பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ பிற.]

இதன்பொருள்

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்= என்னை நயந்தவர்க்கு அதுபொழுது பிரிவை உடம்பட்ட நான்;
பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ= அதனை ஆற்றாது இதுபொழுது பசந்த என் இயல்பினை யார்க்குச் சொல்வேன் எ-று.

உரைவிளக்கம்

'பிற'வென்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப் பிரிவு உணர்த்தினர் ஆகலின், அவர் அன்புடையர் என்னும் கருத்தான் 'நயந்தவர்' என்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவுநிகழுமாகலின், இனி அவரைக் கூடுதல் அரிது என்னும் கருத்தான் 'நல்காமை'யென்றும், முன்னர் உடம்படுதலும், பின்னர் ஆற்றாது பசத்தலும் பிறர் செய்தன அல்ல என்பாள் 'பசந்த என்பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனி ஒருவர்க்குச் சொல்லலும் பழியாம் என்னும் கருத்தால் 'யார்க்கு உரைக்கோ' என்றும் கூறினாள்.

# குறள் **1182 (** அவர்தந்தா**)**

**(**ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு**,** ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது. **)**

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென் ( ) அவர் தந்தார் என்னும் தகையால் இவர்தந்து என்

மேனிமே லூரும் பசப்பு. (02) மேனி மேல் ஊரும் பசப்பு.

[தொடரமைப்பு: ]பசப்பு, தந்தார் அவர் என்னும் தகையால், என் மேனிமேல் இவர்தந்து ஊரும்.

இதன்பொருள்

(யான் ஆற்றியுளேன் ஆகவும்) பசப்பு= இப்பசப்புத்தான்;
அவர்தந்தார் என்னும் தகையால்= என்னைஉண்டாக்கினார் அவர் என்னும் பெருமிதத்தான்;
என்மேனிமேல் இவர்தந்து ஊரும்= என்மேனியை மேற்கொண்டு செலுத்தாநின்றது, எ-று.

உரை விளக்கம்

"குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா இவர்தந்து செல்ல" (சீவகசிந்தாமணி, விமலையார் இலம்பகம், 1.) என்புழியும் இப்பொருட்டாதல் காண்க. இஃது உரிமைபற்றி ஊர்கின்றது, இதற்கு நீ கவலல் வேண்டா என்பதாம்.

# குறள் **1183 (** சாயலு**)**

(அழகும் நாணும் அழியாமல் நீ ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. )

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா ( ) சாயலும் நாணும் அவர் கொண்டார் கைம்மாறா

நோயும் பசலையுந் தந்து. (03) நோயும் பசலையும் தந்து.

**[**தொடரமைப்பு**:**
கைம்மாறா நோயும் பசலையும் தந்து**,** சாயலும் நாணும் அவர் கொண்டார். **]**

இதன்பொருள்

கைம்மாறா நோயும் பசலையும் தந்து= பிரிகின்ற ஞான்றே அவ்விரண்டற்கும் தலைமாறாக இக்காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து;
சாயலும் நாணும் அவர் கொண்டார்= என் மேனியழகினையும், நாணினையும் அவர் கொண்டுபோயினார், எ-று.

உரை விளக்கம்

எதிர்நிரல்நிறை. அடக்கும்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாறாயிற்று. இனி அவர் தந்தால் அல்லது அவை உளவாகலும், இவையிலவாகலும் கூடா என்பதாம்.

# குறள் **1184 (** உள்ளுவன்மன்**)**

**(** பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும்**,** அவர் நற்றிறங்களையும் அறிதிஆகலின்**,** நீட்டியாது வருவர் என்றவழிச் சொல்லியது.**)**

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற் ( ) உள்ளுவன் மன் யான் உரைப்பது அவர் திறமால்

கள்ளம் பிறவோ பசப்பு. (04) கள்ளம் பிறவோ பசப்பு.

**[**தொடரமைப்பு**:**
யான் உள்ளுவன்**,** உரைப்பது அவர்திறம்**,** பசப்புக் கள்ளம் பிறவோ. **]**

இதன்பொருள்

யான் உள்ளுவன்= அவர் சொற்களை யான் மனத்தால் நினையாநிற்பேன்;

உரைப்பது அவர்திறம்= வாக்கால் உரைப்பதும், அவர் நற்றிறங்களையே;

பசப்புக் கள்ளம்= அங்ஙனம் செய்யாநிற்கவும், பசப்பு வந்துநின்றது, இது வஞ்சனையாய் இருந்தது, எ-று.

உரை விளக்கம்

'பிற'வும் 'ஓ'வும் அசைநிலை. மெய், மற்றை மனவாக்குக்களி ் ன் வழி ் ததாகலின், அதன்கண்ணும் வரற்பாற்றன்றாய் இருக்க வந்தமையின், இதன்செயல் கள்ளமாய் இருந்தது எனத் தான் ஆற்றுகின்றமை கூறியவாறாயிற்று.

# குறள் 1185 ( உவக்காணெங்)

(காதலர் பிரி ் ந்து அணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை என்ற தோழிக்கு, முன்நிகழ்ந்தது கூறியது. )

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென் ( ) உவக்காண் எம் காதலர் செல்வார் இவக்காண் என்

மேனி பசப்பூர் வது. (05) மேனி பசப்பு ஊர்வது.

[தொடரமைப்பு:
எம் காதலர் உவக்காண் செல்வார், என் மேனி பசப்பூர்வது இவக்காண். ]

இதன்பொருள்

எம் காதலர் உவக்காண் செல்வார்= பண்டும் காதலர் உங்கே

செல்வாராக;

என்மேனி பசப்பூர்வது இவக்காண்= என்மேனி பசப்பூர்வது இங்கேயன்றோ, அப்பெற்றியது இன்று பிறிதொன்றாமோ, எ-று.

உரை விளக்கம்

'உவக்காண்' 'இவக்காண்' என்பன, ஒட்டிநின்ற இடைச்சொற்கள். தேயவண்மையாற் காலவண்மை கருதப்படடது. அவர் செலவும் பசப்பினதுவரவும், பகல்இரவுகளின் செலவும்வரவும் போல்வது அறிந்துவைத்து, அறியாதாய்போல நீ சொல்லுகின்றது என்னை என்பதாம்.

## குறள் **1186** ( விளக்கற்றம்)

**(** இதுவுமது **)**

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன் ( ) விளக்கு அற்றம் பார்க்கும் இருளே போல் கொண்கன்

முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. (06) முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு.

**[**தொடரமைப்பு**:**

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல், கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு. **]**

இதன்பொருள்

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல்= விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இருளேபோல;

கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு= கொண்கன் முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இப்பசப்பு, எ-று.

உரை விளக்கம்

பார்க்கும் என்பன இலக்கணைச்சொல். முன்பிரியாது இருக்கவும், தனக்கு அவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவு பெற்றால் என்செய்யாது என்பதாம்.

# குறள் 1187 (புல்லிக்கிடந்தேன் )

(இதுவுமது )

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி ( ) புல்லிக் கிடந்தேன் படை பெயர்ந்தேன் அவ் அளவில்

லள்ளிக்கொள் வற்றே பசப்பு. (07) அள்ளிக் கொள்வற்றே பசப்பு.

[தொடரமைப்பு:
புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன், அவ்வளவில் பசப்பு அள்ளிக் கொள்வற்றே. ]

இதன்பொருள்

புல்லிக்கிடந்தேன், புடைபெயர்ந்தேன்= முன்ஒருஞான்று காதலரைப் புல்லிக்கிடந்த யான் அறியாது புடைபெயர்ந்தேன்; அவ்வளவில் பசப்பு அள்ளிக்கொள்வற்றே= அப்புடைபெயர்ந்த அளவிலே பசப்பு அள்ளிக்கொள்வதுபோல வந்து செறிந்தது, எ-று.

உரை விளக்கம்

'கொள்வது' என்பது குறைந்துநின்றது. அள்ளிக்கொள்வது- அள்ளிக்கொள்ளப்படும் பொருள். அப்புடைபெயர்ச்சி மாத்திரத்துக்கு அவ்வாறாயது, இப்பிரிவின்கண் ஆமாறு சொல்லவேண்டுமோ என்பதாம்.

# குறள் **1188 (** பசந்தாளிவ**)**

**(** நீ இங்ஙனம் பசக்கற்பாலை அல்லை என்ற தோழியொடு புலந்து சொல்லியது. **)**

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத் ( ) பசந்தாள் இவள் என்பது அல்லால் இவளைத்

துறந்தா ரவரென்பா ரில். (08) துறந்தார் அவர் என்பார் இல்.

**[**தொடரமைப்பு**:**
இவள் பசந்தாள் என்பது அல்லால்**,** இவளை அவர் துறந்தார் என்பார் இல். **]**

இதன்பொருள்

இவள் பசந்தாள் என்பது அல்லால்= இவள் ஆற்றியிராது பசந்தாள் என்று என்னைப் பழிகூறுவதல்லது;
இவளை அவர் துறந்தார் என்பார் இல்= இவளை அவர் துறந்து போயினார் என்று அவரைக் கூறுவார் ஒருவரும் இல்லை**,** எ-று.

உரை விளக்கம்

'என்பார்' என வேறுபடுத்துக் கூறினாள், தன்னையே நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின்.

# குறள் **1189 (** பசக்கமற்**)**

**(**இதுவுமது **)**

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார் ( ) பசக்கமன் பட்டாங்கு என் மேனி நயப்பித்தார்

நன்னிலைய ராவ ரெனின். (09) நல் நிலையர் ஆவர் எனின்.

[தொடரமைப்பு:
நயப்பித்தார் நன்னிலையர் ஆவர் எனின், என் மேனி பட்டாங்கு பசக்க. ]

இதன்பொருள்

நயப்பித்தார் நன்னிலையார் ஆவர் எனின்= இப்பிரிவை யானே உடம்படும்வகை சொல்லியவர் இன்று நின் கருத்தான் நல்லநிலையினர் ஆவராயின்;
என்மேனி பட்டாங்கு பசக்க= என்மேனி பட்டதுபடப் பசப்பதாக, எ-று.

உரை விளக்கம்

நன்னிலையராதல்- நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல். பட்டாங்காக என ஆக்கம் விரித்துரைக்க. முன் இப்பிரிவின் கொடுமை அறியாத என்னை, இதற்கு உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என்மேனியும் பசப்பும் யாதுசெய்யின் என் என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது.

# குறள் 1190 (பசப்பெனப் )

( தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி, அவள் இயற்பட மொழிந்தது. )

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார் () பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே நயப்பித்தார்

நல்காமை தூற்றா ரெனின். (10) நல்காமை தூற்றார் எனின்.

[தொடரமைப்பு:
நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின், பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே. ]

இதன்பொருள்

நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின்= அன்று, தாம் குறைநயப்பித்துக் கூடினவர்க்கு இன்று நல்காமையை நட்டார் தூற்றார் ஆயின்;
பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே= பசப்புற்றாள் என வேற்றுமையான் அன்றிப் பசப்புத்தான் ஆயினாள், என ஒற்றுமையால் தாம் சொல்ல அஃபெயரைப் பெறுதல் எனக்கு நன்று, எ-று.

உரை விளக்கம்

நட்டார் என்பது அவாய்நிலையான் வந்தது. இயற்பழித்தல் பொறாது புலக்கின்றாள் ஆகலின், இகழ்ச்சிக்குறிப்பாற் கூறினாள். அவரை அருளிலர் என்னாது, இன்னும் பசந்தாள் இவள் என்கையே யான் ஆற்றுநெறியாவது என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **120.** தனிப்படர் மிகுதி

அதிகார முன்னுரை

அது தனியாகிய படர்மிகுதி என விரியும். அஃதாவது, படர் மிகுதி தலைவன்கணின்றித் தன்கண்ணேயாதல் கூறுதல். அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலின் அவன்கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட்கு உரியதாகலின், பசப்புறுபருவரலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1191 (** தாம்வீழ்வார்**)**

**(**காதலரும் நின்னினும் ஆற்றாராய்க் கடிதின்வருவர் நீ அவரொடு பேரின்ப நுகர்தி என்ற தோழிக்குச் சொல்லியது. **)**

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே ( ) தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் பெற்றாரே

காமத்துக் காழில் கனி. (01) காமத்துக் காழ் இல் கனி.

[தொடரமைப்பு:
தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர், பெற்றாரே காமத்துக் காழில் கனி. ]

இதன்பொருள்

தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர்= தம்மாற் காதலிக்கப்படும் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர்;
பெற்றாரே காமத்துக் காழ் இல் கனி= பெற்றார் அன்றே, காமநுகர்ச்சி என்னும் பரல் இல்லாத கனியை, எ-று.

உரைவிளக்கம்

காமம்- ஆகுபெயர். அத்து அல்வழிக்கண் வந்தது. முன்னை நல்வினை இல்வழிப் பெறப்படாமையின் பெற்றார் என்றும், அவரான் தடையின்றி நுகரப்படுதலின் காழ்இல் கனி என்றும் கூறினாள். நங்காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையும் உடைமையின், அக்கனி யாம் பெற்றிலேம் என்பதாயிற்று.

# குறள் 1192 ( வாழ்வார்க்கு)

(இதுவுமது )

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு ( ) வாழ்வார்க்கு வானம் பயந்து அற்றால் வீழ்வார்க்கு

வீழ்வா ரளிக்கு மளி. (02) வீழ்வார் அளிக்கும் அளி.

[தொடரமைப்பு:
வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி, வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால். ]

இதன்பொருள்

வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி= அறமும் பொருளும் நோக்கிப் பிரிந்தால் தம்மை இன்றியமையா மகளிர்க்கு அவரை இன்றியமையாக் கணவர் அளவறிந்து வந்துசெய்யும் தலையளி;

வாழ்வார்க்கு வானம் பயந்தற்று= தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அளவறிந்து பெய்தாற்போலும், எ-று.

உரை விளக்கம்

நங்காதலர் நம்மை விழையாமையின், அத்தலையளி இல்லையாகலான், மழை வறந்துழி அதனான் வாழ்வார்போல இறந்துபடுதலே நமக்கு உள்ளது என்பதாம்.

# குறள் 1193 (வீழுநர் )

( இதுவுமது)

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே ( ) வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமை

வாழுந மென்னுஞ் செருக்கு. (03) வாழுநம் என்னும் செருக்கு.

[தொடரமைப்பு:
வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே, வாழுநம் என்னும் செருக்கு. ]

இதன்பொருள்

வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே= தாம் விழையும் கணவரான் விழையப்படும் மகளிர்க்கு ஏற்புடைத்து;

வாழுநம் என்னும் செருக்கு= காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவர், வந்தால் நாம் இன்புற்று வாழ்தும் என்றிருக்கும் தருக்கு, எ-று.

உரை விளக்கம்

நாம் அவரான் வீழப்படாமையின் நமக்கு அமைவது இறந்துபாடு என்பதாம்.

## குறள் **1194 (** வீழப்படுவார்**)**

(காதலரை இயற்பழித்தலை அஞ்சி அவர் அருளின்மை மறைத்த நீ கடவுட் கற்பினையாகலிற் கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுதி என்ற தோழிக்குச் சொல்லியது. )

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார் ( ) வீழப்படுவார் கெழீஇஇலர் தாம் வீழ்வார்

வீழப் படாஅ ரெனின். (04) வீழப்படாஅர் எனின்.

[தொடரமைப்பு:

வீழப்படுவார், தாம் வீழ்வார் வீழப்படாஅரெனின் கெழீஇயிலர் ]

இதன்பொருள்

வீழப்படுவார்= கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும்;

தாம் வீழ்வார் வீழப்படார் எனின் கெழீஇ இலர்= தாம் விரும்பும்

கணவரான் விரும்பப்படாராயின் தீவினையாட்டியர், எ-று.

உரை விளக்கம்

சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. கெழீஇயின்மை- நல்வினையின்மை; அஃது அருத்தாபத்தியான் தீவினையுடைமையாயிற்று. தீவினை உடையேற்கு அந்நன்கு மதிப்பாற் பயனில்லை என்பதாம்.

# குறள் **1195 (** நாங்காதல்**)**

**(**அவர்மேற் காதலுடைமையின் அவர் கருத்தறிந்து ஆற்றினாய் என்ற தோழிக்குச் சொல்லியது. **)**

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ ( ) நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்பவோ

தாங்காதல் கொள்ளாக் கடை. (05) தாம் காதல் கொள்ளாக்கடை.

**[**தொடரமைப்பு**:**
நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்பவோ**,** தாம் காதல் கொள்ளாக்கடை. **]**

இதன்பொருள்

நாம் காதல் கொண்டார் நமக்கு எவன்செய்பவோ= நம்மாற் காதல் செய்யப்பட்டவர் நமக்கு என்ன இன்பத்தைச் செய்வர்;
தாம் காதல் கொள்ளாக் கடை= அவ்வாறே தாமும் நங்கண் காதல் செய்யாவழி, எ-று.

உரை விளக்கம்

எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. அக்காதல் உடைமையால்

நாம் பெற்றது துன்பமே என்பதாம்.

# குறள் **1196 (** ஒருதலையா**)**

**(**இதுவுமது **)**

ஒருதலையா னின்னாது காமங்காப் போல ( ) ஒருதலையான் இன்னாது காமம் காப் போல

விருதலை யானு மினிது. (06) இருதலையானும் இனிது.

**[**தொடரமைப்பு**:**
காமம் ஒருதலையான் இன்னாது**,** காப்போல இருதலையானும் இனிது. **]**

இதன்பொருள்

காமம் ஒருதலையான் இன்னாது= மகளிர் ஆடவர் என்னும் இருதலையினும் வேட்கை ஒருதலைக்கண்ணேயாயின் அஃது இன்னாது;
காப்போல இருதலையானும் இனிது= காவினது பாரம்போல இருதலைக்கண்ணும் ஒப்பின்**,** அஃது இனிது**,** எ-று.

உரை விளக்கம்

மூன்றன் உருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. கா- ஆகுபெயர். என்மாட்டு உண்டாய வேட்கை அவர்மாட்டும் உண்டாயின்**,** யான் இவ்வாறு துன்பம் உழத்தல் கூடுமோ என்பதாம்.

# குறள் **1197 (** பருவரலும்**)**

**(**இதுவுமது **)**

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம ( ) பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்

னொருவர்க ணின்றொழுகு வான். (07) ஒருவர்கண் நின்று ஒழுகுவான்.

**[**தொடரமைப்பு**:**
ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன்**,** பருவரலும் பைதலும் காணான் கொல். **]**

இதன்பொருள்

ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன்= காமம் நுகர்தற்குரிய இருவரிடத்தும் ஒப்பநிற்றல் ஒழித்து, ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக்கடவுள்;
பருவரலும் பைதலும் காணான்கொல்= அவ்விடத்துப் பசப்பானாய பருவரலும் படர்மிகுதியும் அறியான்கொல்லோ, எ-று.

உரை விளக்கம்

விழைவும் வெறு◌ப்பும் இன்றி எல்லார்கண்ணும் நிகழ்ந்தன அறிதற்குரிய கடவுளும் என்கண் வேறுபட்டான், இனி யான் உய்யுமாறு என்னை என்பதாம்.

# குறள் **1198 (** வீழ்வாரின்**)**

(தலைமகன் தூது வரக் காணாது சொல்லியது. )

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து ( ) வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து

வாழ்வாரின் வன்கணா ரில். (08) வாழ்வாரின் வன்கணார் இல்.

[தொடரமைப்பு:
வீழ்வாரின் இன்சொல் பெறாது வாழ்வாரின், வன்கணார் உலகத்து இல். ]

இதன்பொருள்

வீழ்வாரின் இன்சொல் பெறாது வாழ்வாரின்= தம்மால் விரும்பப்படும் காதலர் திறத்துநின்று ஓர் இன்சொல்லளவும் பெறாதே பிரிவாற்றி உயிர்வாழ்கின்ற மகளிர்போல;
வன்கணார் உலகத்து இல்= வன்கண்மையுடையார் இவ்வுலகத்து இல்லை, எ-று.

உரை விளக்கம்

காதலர் திறத்துச் சொல் யாதானும் எனக்கு இனிது என்னும் கருத்தால், 'இன்சொல்' என்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. யான் வன்கண்ணேன் ஆகலின், அதுவும் பெறாது உயிர்வாழாநின்றேன் என்பதாம்.

# குறள் 1199 ( நசைஇயார்)

( இதுவுமது )

நசைஇயார் நல்காரெனினு மவர்மாட் ( ) நசைஇயார் நல்கார் எனினும் அவர் மாட்டு

டிசையு மினிய செவிக்கு. (09) இசையும் இனிய செவிக்கு.

[தொடரமைப்பு:
நசைஇயார் நல்கார் எனினும், அவர் மாட்டு இசையும் செவிக்கு இனிய ]

இதன்பொருள்

நசைஇயார் நல்கார் எனினும்= என்னால் நச்சப்பட்ட காதலர் என்மாட்டு அன்பிலரே ஆயினும்;
அவர் மாட்டு இசையும் செவிக்கு இனிய= அவர் திறத்து யாதானும் ஓர் சொல்லும் என் செவிக்கு இனியவாம், எ-று.

உரை விளக்கம்

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலர் என்னும் சொல்லாயினும் அமையும் என்பதுபட நின்றது. அதுவும் பெற்றிலேன் என்பதாம்.

# குறள் 1200 ( உறார்க்குறு)

( தலைமகன் தூது வரப்பெறாது தான் தூதுவிடக் கருதியாள் நெஞ்சொடு சொல்லியது )

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச் () உறாஅர்க்கு உறு நோய் உரைப்பாய் கடலைச்

செறாஅய் வாழிய நெஞ்சு. (10) செறாஅஅய் வாழிய நெஞ்சு.

[தொடரமைப்பு:
உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு, கடலைச் செறாஅஅய் வாழிய. ]

இதன்பொருள்

உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு= நின்னொடு உறாதார்க்கு நின்னுறுநோயை உரைக்கலுற்ற நெஞ்சே;

கடலைச் செறாய்= நீ ஆற்றாய் ஆயினும் அரிதாய அதனையொழிந்து, நினக்குத் துயரம்செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக, அஃது எளிது, எ-று.

உரை விளக்கம்

உரைக்கலுற்றது அளவிறந்தநோய் ஆகலானும், கேட்பார் உறவிலர் ஆகலானும், அது முடிவது ஒன்றன்று, முடிந்தாலும் பயனில்லை என்பது கருதாது, முயலாநின்றாய் என்னும் குறிப்பான் 'வாழிய' என்றாள்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **121.** நினைந்தவர் புலம்பல்

அதிகார முன்னுரை

அஃதாவது, முன்கூடிய ஞான்றை இன்பத்தினை நினைந்து தலைமகள் தனிமைஎய்தலும், பாசறைக்கண் தலைமகன் தனிமை எய்தலுமாம்,

## குறள் **1201 (** உள்ளினுந்**)**

**(**தூதாய்ச் சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது. **)**

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற் ( ) உள்ளினும் தீராப் பெரு மகிழ் செய்தலால்

கள்ளினுங் காம மினிது. (01) கள்ளினும் காமம் இனிது.

[தொடரமைப்பு: உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால், கள்ளினும் காமம் இனிது.]

இதன்பொருள்

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்= முன் கூடியஞான்றை இன்பத்தினைப் பிரி ்ந்துழி நினைந்தாலும், அதுபொழுது பெற்றாற்போல நீங்காத மகிழ்ச்சியைத் தருதலால்;
கள்ளினும் காமம் இனிது= உண்டுழியல்லது மகிழ்ச்சி செய்யாத கள்ளினும் காமம் இன்பம் பயத்தலுடைத்து, எ-று.

உரைவிளக்கம்

தன் தனிமையும் தலைவனை மறவாமையும் கூறியது.

# குறள் 1202 (எனைத்தொன் )

(இதுவுமது )

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார் ( ) எனைத்து ஒன்று இனிதே காண் காமம் தாம் வீழ்வார்

நினைப்ப வருவதொன் றில். (02) நினைப்ப வருவது ஒன்று இல்.

[தொடரமைப்பு: தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல், காமம் எனைத்து இனிது ஒன்றேகாண்.]

இதன்பொருள்

தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல்= தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கண் நினைத்தால் அந்நினைவார்க்கு அப்பிரிவான் வருவதோர் துன்பம் இல்லையாம்;

காமம் எனைத்து இனிது ஒன்றேகாண்= அதனாற் காமம் எத்துணையும் இனிதுஒன்றேகாண், எ-று.

உரை விளக்கம்

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப இனிது என்பான், எனைத்தும் இனிது என்றான். சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. தான் ஆற்றியவகை கூறியவாறு.

# குறள் **1203 (** நினைப்பவர்**)**

(தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள், தோழிக்குச் சொல்லியது. )

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல் ( ) நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்

சினைப்பது போன்று கெடும். (03) சினைப்பது போன்று கெடும்.

[தொடரமைப்பு: தும்மல் சினைப்பது போன்று கெடும், நினைப்பவர் போன்று நினையார்கொல்.]

இதன்பொருள்

தும்மல் சினைப்பது போன்று கெடும்= எனக்குத் தும்மல் எழுவது போன்று தோன்றிக் கெடாநின்றது;

நினைப்பவர் போன்று நினையார்கொல்= அதனாற் காதலர் என்னைநினைப்பார் போன்று நினையார் ஆகல்வேண்டும், எ-று.

உரை விளக்கம்

சினைத்தல்- அரும்புதல். சேய்மைக்கண்ணராய் கேளிர் நினைந்துழி, அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றும் என்னும் உலகியல்பற்றித் தலைமகன் எடுத்துக்கொண்ட

வினைமுடிவது போன்று முடியாமை உணர்ந்தால் சொல்லியதாயிற்று.

# குறள் 1204 (யாமுமுளேங் )

(இதுவுமது )

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத் ( ) யாமும் உளேம்கொல் அவர் நெஞ்சத்து எம் நெஞ்சத்து

தோஒ வுளரே யவர். (04) ஓஒ உளரே அவர்.

[தொடரமைப்பு: எம் நெஞ்சத்து அவர் ஓஒ உளரே, அவர் நெஞ்சத்து யாமும் உளேம்கொல்.]

இதன்பொருள்

எம் நெஞ்சத்து அவர் ஓஒ உளரே= எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுதும் உளரேயாய் இராநின்றார்;
அவர்நெஞ்சத்து யாமும் உளேங்கொல்= அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமும் உளம் ஆதுமோ, ஆகேமோ, எ-று.

உரை விளக்கம்

ஓகாரவிடைச்சொல் ஈண்டு இடைவிடாமை உணர்த்திநின்றது. உளமாயும் வினைமுடியாமையின் வாரார்ஆயினாரோ, அது முடிந்தும் இலம் ஆகலின் வாரார் ஆயினாரோ என்பது கருத்து.

# குறள் 1205 ( தந்நெஞ்சத்)

(இதுவுமது )

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ () தம் நெஞ்சத்து எம்மைக் கடி கொண்டார் நாணார் கொல்

லெந்நெஞ்சத் தோவா வரல். (05) எம் நெஞ்சத்து ஓவா வரல்.

[தொடரமைப்பு: தம் நெஞ்சத்து எம்மைக் கடி கொண்டார், எம்நெஞ்சத்து ஓவா வரல் நாணார்கொல்.]

இதன்பொருள்

தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார்= தம்முடைய நெஞ்சின்கண்ணே யாம் செல்லாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர்;

எந்நெஞ்சத்து ஓவா வரல் நாணார்கொல்= தாம் எம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணார் கொல்லோ, எ-று.

உரை விளக்கம்

ஒருவரைத் தங்கண் வருதற்கு ஒருகாலும் உடம்படாது, தாம் அவர்கட் பலகாலும் சேறல் நாணுடையார் செயல் அன்மையின், நாணார்கொல் என்றாள்.

# குறள் 1206 ( மற்றியானென்)

(அவரோடு புணர்ந்த ஞான்றை இன்பத்தை நினைத்து இறந்துபாடு எய்தாநின்றாய், அது மறத்தல் வேண்டும் என்றாட்குச் சொல்லியது. )

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா ( ) மற்று யான் என் உளேன் மன்னோ அவரொடு யான்

னுற்றநா ளுள்ள வுளேன். (06) உற்ற நாள் உள்ள உளேன்.

[தொடரமைப்பு: யான் அவரொடு உற்றநாள் உள்ள உளேன், மற்று யான் என் உளேன்.]

இதன்பொருள்

யான் அவரோடு உற்றநாள் உள்ள உளேன்= யான் அவரோடு புணர்ந்தஞான்றை இன்பத்தை நினைதலான் இத்துன்ப வெள்ளத்தும் உயிர்வாழ்கின்றேன்;

மற்று யான் என்னுளேன்= அது இன்றாயின், வேறு எத்தால் உயிர்வாழ்வேன், எ-று.

உரை விளக்கம்

நாள்-ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுள, அவை பெற்றிலேன் என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன்தூது வருதல், தன் தூது சேறன் முதலாயின. அவையாவும் இன்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடு இல்லை என்பது கருத்து.

# குறள் 1207 ( மறப்பினெவ)

( இதுவுமது )

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே ( ) மறப்பின் எவன் ஆவன்மன் கொல் மறப்பு அறியேன்

னுள்ளினு முள்ளஞ் சுடும். (07) உள்ளினும் உள்ளம் சுடும்.

[தொடரமைப்பு: மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும், மறப்பின் எவன் ஆவன்மன்கொல்.]

இதன்பொருள்

மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும்= அவ்வின்பத்தை மறத்தல் அறியேனாய் இன்று உள்ளாநிற்கவும், பிரிவு என் உள்ளத்தைச் சுடாநின்றது;
மறப்பின் எவன் ஆவன்= அங்ஙனம் பிரிவு ஆற்றாத யான் மறந்தால் இறந்துபடாது உளேன் ஆவது எத்தால், எ-று.

உரை விளக்கம்

மறக்கப்படுவது அதிகாரத்தான் வந்தது. மன் ஈண்டும் அதுபட நின்று ஒழியசை ஆயிற்று. கொல்-அசைநிலை.

# குறள் **1208 (** எனைத்துநினைப்**)**

**(**இத்துன்பம் அறிந்து வந்து காதலர் நினக்கு இன்பஞ் செய்வர் என்றாட்குச் சொல்லியது. **)**

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ ( ) எனைத்து நினைப்பினும் காயார் அனைத்து அன்றோ

காதலர் செய்யுஞ் சிறப்பு. (08) காதலர் செய்யும் சிறப்பு.

**[**தொடரமைப்பு**:** எனைத்து நினைப்பினும் காயார்**,** காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ. **]**

இதன்பொருள்

எனைத்து நினைப்பினும் காயார்= தம்மை யான் எத்துணையும் மிகநினைந்தாலும் அதற்கு வெகுளார்;
காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ= காதலர் எனக்குச் செய்யும் இன்பமாவது அவ்வளவன்றோ, எ-று.

உரை விளக்கம்

வெகுளாமை- அதற்கு உடன்பட்டு நெஞ்சின்கண் நிற்றல். தனக்கு அவ்வின்பத்திற் சிறந்தது இன்மையின், அதனைச் சிறப்பு என்றாள். காதலர் தம்மாட்டருள் என்றும், செய்யுங்குணம் என்றும் பாடம் ஓதுவாரும் உளர். தோழி கூறியவதனைக் குறிப்பான் இகழ்ந்து கூறியவாறு.

# குறள் **1209 (** விளியுமென்**)**

**(** தலைமகன் தூதுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியது. **)**

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா ( ) விளியும் என் இன் உயிர் வேறு அல்லம் என்பார்

ரளியின்மை யாற்ற நினைந்து. (09) அளி இன்மை ஆற்ற நினைந்து.

**[**தொடரமைப்பு**:** வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து**,** என் இன் உயிர் விளியும். **]**

இதன்பொருள்

வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து= முன்பெல்லாம் நாம் இருவரும் வேறல்லம் என்று சொல்லுவாரது அளியின்மையை மிகவும் நினைந்து;

என் இன் உயிர் விளியும்= எனது இனியவுயிர் கழியாநின்றது, எ-று.

உரை விளக்கம்

அளியின்மை- பின் வருவர்ஆகலுமாய்ப் பிரிதலும், பிரிந்து வாராமையும், ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல்வேண்டும் என வற்புறுத்தாட்கு, என்னுயிர்

கழிகின்றது பிரிவிற்கு அன்று, அவர் அன்பின்மைக்கு என எதிரழிந்து கூறியவாறு.

## குறள் 1210 ( விடாஅது)

(வன்புறை எதிரழிந்தாள் காமம் மிக்க கழிபடரான் சொல்லியது. )

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப் () விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்

படாஅதி வாழி மதி. (10) படாஅதி வாழி மதி.

**[தொடரமைப்பு: மதி வாழி, விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்படாஅதி.]**

இதன்பொருள்

மதி வாழி= மதியே;

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப் படாஅதி= என் நெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப்போயினாரை, யான் என் கண்ணளவாயினும் எதிர்ப்படும்வகை நீ படாது ஒழிவாயாக, எ-று.

உரை விளக்கம்

கண்ணளவானே எதிர்ப்படுதலாவது, மதி இருவரானும் நோக்கப்படுதலின் இருவர்கண்ணும் அதன்கண்ணே சேர்தல். முதலோடு சினைக்கு ஒற்றுமையுண்மையின் 'சென்றாரைக் காண' என்றும், குறையுறுகின்றாள் ஆகலின் 'வாழி' என்றும் கூறினாள். இனிப் படாது என்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதிபடுகின்றதுஇல்லையென, அதனால் துயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு வாழி

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **122.** கனவுநிலை உரைத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நனவின்கண் நினைவு மிகுதியாற் கண்டதாகலின் இது நினைந்தவர் புலம்பலின்பின் வைக்கப்பட்டது.

## குறள் **1211 (** காதலர்**)**

**(**தலைமகன் தூதுவரக் கண்டாள் சொல்லியது. **)**

காதலர் தூதொடு வந்த கனவினுக் **( )** காதலர் தூதொடு வந்த கனவினுக்கு

கியாதுசெய் வேன்கொல் விருந்து. (01) யாது செய்வேன்கொல் விருந்து.

**[**தொடரமைப்பு**:** காதலர் தூதொடு வந்த கனவினுக்கு**,** விருந்து யாது செய்வேன்கொல்.**]**

இதன்பொருள்

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு= யான் வருந்துகின்றது அறிந்து**,** அது தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என்மாட்டு வந்த கனவினுக்கு;
விருந்து யாது செய்வேன்= யான் விருந்தாக யாதனைச் செய்வேன்**,** எ-று.

உரைவிளக்கம்

விருந்து என்றது விருந்திற்குச் செய்யும் உபசாரத்தினை. அது கனவிற்கொன்று காணாமையின்**,** யாது செய்வேன் என்றாள்.

# குறள் **1212 (**கயலுண்கண் **)**

**(**துதுவிடக் கருதியாள் சொல்லியது. **)**

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க் ( ) கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு

குயலுண்மை சாற்றுவேன் மன். (02) உயல் உ◌ண்மை சாற்றுவேன் மன்.

**[**தொடரமைப்பு**:** கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின்**,** கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன்மன் **]**
]

இதன்பொருள்

கயல் உண்கண் யான் இரப்பத்துஞ்சின்= துஞ்சாதுவருந்துகின்ற என் கயல்போலும் உண்கண்கள் யான் இரந்தால் துஞ்சுமாயின்; கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன்மன்= கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால் அவர்க்கு யான் ஆற்றியுளேனாய தன்மையை யானே விரியச் சொல்வேன், எ-று.

உரை விளக்கம்

'கயலுண்கண்' என்றாள், கழிந்த நலத்திற்கு இரங்கி. உயல்- காமநோய்க்குத் தப்புதல். தூதர்க்குச் சொல்லாது யாம் அடக்குவனவும், சொல்லுவனவற்றுள்ளும் சுருக்குவனவற்றின் பரப்பும் தோன்றச் சொல்வேன் என்னும் கருத்தால் சாற்றுவேன் என்றாள். இனி, அவையும் துஞ்சா, சாற்றலும் கூடாது என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. முன்னுங்கண்டாள் கூற்றாகலின், கனவுநிலையுரைத்தல் ஆயிற்று.

# குறள் 1213 ( நனவினான்)

(ஆற்றாளெனக் கவன்றாட்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது. )

நனவினா னல்கா தவரைக் கனவினாற் ( ) நனவினான் நல்காதவரை கனவினாற்

காண்டலி னுண்டென் னுயிர். (03) காண்டலின் உண்டு என் உயிர்.

[தொடரமைப்பு: நனவினான் நல்காதவரை, கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டு. ]
]

இதன்பொருள்

நனவினான் நல்காதவரை= நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை;

கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டு= யான் கனவின்கட் கண்ட காட்சியானே என் உயிருண்டாகாநின்றது, எ-று.

உரை விளக்கம்

மூன்றன் உருபுகள் ஏழன் பொருண்மைக்கண் வந்தன. அக்காட்சியானே, யான் ஆற்றியுளேனாகின்றேன், நீ கவலல் வேண்டா வென்பதாம்.

# குறள் **1214 (** கனவினானுண்**)**

(இதுவுமது )

கனவினா னுண்டாகுங் காம நனவினா ( ) கனவினான் உண்டாகும் காமம் நனவினான்

னல்காரை நாடித் தரற்கு. (04) நல்காரை நாடித் தரற்கு.

**[**தொடரமைப்பு**:** நனவினான் நல்காரை நாடித் தரற்கு**,** கனவினான் காமம் உண்டாகும்.**]**

இதன்பொருள்

நனவினான் நல்காரை நாடித் தரற்கு= நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை அவர்சென்றுழி நாடிக்கொண்டுவந்து கனவு தருதலான்;

கனவினாற் காமம் உண்டாகும்= அக்கனவின்கண்ணே எனக்கு இன்பம் உண்டாகாநின்றது, எ-று.

உரை விளக்கம்

காமம்-ஆகுபெயர். நான்காவாது மூன்றன்பொருண்மைக்கண் வந்தது. இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயம் அறிந்துசென்று கொண்டுவந்து தந்து நல்குவித்த கனவால் யான் ஆற்றுவல் என்பதாம்.

# குறள் **1215** **(** நனவினாற்கண்ட**)**

**(**இதுவுமது **)**

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான் ( ) நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான்

கண்ட பொழுதே யினிது. (05) கண்ட பொழுதே இனிது.

**[**தொடரமைப்பு**:** நனவினால் கண்டதூஉம் **(**இனிதே**)** ஆங்கே**,** கனவுந்தான் கண்ட பொழுதே இனிது. **]**

இதன்பொருள்

நனவினாற் கண்டாதூஉம் (இனிது) ஆங்கே= முன் நனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்த இன்பந்தானும் இனிதாயிற்று அப்பொழுதே;

கனவுந்தான் கண்டபொழுதே இனிது= இன்று கனவின்கட் கண்டு நுகர்ந்த இன்பமும் அக்கண்டபொழுதே இனிதாயிற்று, அதனான் எனக்கு இரண்டும் ஒத்தன.

உரை விளக்கம்

இனிது என்பது முன்னும் கூட்டப்பட்டது. கனவு- ஆகுபெயர். முன்னும் யான்பெற்றது இவ்வளவே, இன்னும் அதுகொண்டு ஆற்றுவல் என்பதாம்.

# குறள் **1216 (**நனவென **)**

**(** இதுவுமது **)**

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற் ( ) நனவு என ஒன்று இல்லையாயின் கனவினான்

காதலர் நீங்கலர் மன். (06) காதலர் நீங்கலர் மன்.

**[**தொடரமைப்பு**:** நனவென ஒன்று இல்லையாயின்**,** கனவினாற் காதலர் நீங்கலர்மன். **]**

இதன்பொருள்

நனவென ஒன்று இல்லையாயின்= நனவு என்று சொல்லப்படுகின்ற ஒரு பாவி இல்லையாயின்;

கனவினாற் காதலர் நீங்கலர்மன்= கனவின்கண் வந்துகூடிய காதலர் என்னைப் பிரியார்**,** எ-று.

உரை விளக்கம்

ஒன்று என்பது**,** அதன்கொடுமை விளக்கிநின்றது. அஃது இடையே புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்தது என்பதுபட நின்றமையின்**,** மன் ஒழியிசைக்கண் வந்தது. கனவிற் பெற்று ஆற்றுகின்றமை கூறியவாறு.

# குறள் **1217 (** நனவினானல்**)**

**(** விழித்துழிக் காணாளாயினாள் கனவிற் கூட்ட நினைந்து ஆற்றாளாய்ச் சொல்லியது. **)**

நனவினா னல்காக் கொடியார் கனவினா ( ) நனவினான் நல்காக் கொடியார் கனவினான்

னென்னெம்மைப் பீழிப் பது. (07) என் எம்மைப் பீழிப்பது.

[தொடரமைப்பு: நனவினான் நல்காக் கொடியார், கனவினான் எம்மைப் பீழிப்பது என். ]

இதன்பொருள்

நனவினான் நல்காக் கொடியார்= ஒருஞான்றும் நனவின்கண் வந்து தலையளி செய்யாத கொடியவர்;
கனவினான் எம்மைப் பீழிப்பது என்= நாள்தோறும் கனவின்கண் வந்து நம்மை வருத்துவது எவ்வியைபுபற்றி, எ-று.

உரை விளக்கம்

பிரிதலும், பின் நினைந்து வாராமையும் நோக்கிக் 'கொடியார்' என்றும், கனவில் தோள்மேலராய், விழித்துழிக் கரத்தலின் அதனானும் துன்பமாகாநின்றது என்பாள், 'பீழிப்பது' என்றும் கூறினாள். நனவின் இல்லது, கனவினும் இல்லையென்பர், அது கண்டிலம் என்பதாம்.

# குறள் 1218 ( துஞ்சுங்காற்)

( தான் ஆற்றுதற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்தாட்கு இயற்பட மொழிந்தது. )

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா ( ) துஞ்சும்கால் தோள் மேலர் ஆகி விழிக்குங்கால்

னெஞ்சத்த ராவர் விரைந்து. (08) நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.

[ தொடரமைப்பு: துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி, விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்தர் ஆவர்.]

இதன்பொருள்

துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி= என்நெஞ்சு விடாது உறைகின்ற காதலர் யான் துஞ்சும்பொழுது வந்து என் தோள்மேலராய்;
விழி்க்குங்கால் விரைந்து நெஞ்சத்தராவர்= பின் விழிக்கும்பொழுது, விரைந்து பழைய நெஞ்சின்கண்ணராவர், எ-று.

உரை விளக்கம்

கலவிவிட்டு மறையும் கடுமைபற்றி விரைந்து என்றாள். ஒருகாலும் என்னின் நீங்கி அறியாதாரை நீ நோவற்பாலையல்லை என்பதாம்.

# குறள் 1219 ( நனவினானல்)

(இதுவுமது )

நனவினா னல்காரை நோவர் கனவினாற் ( ) நனவினான் நல்காரை நோவர் கனவினான்

காதலர்க் காணா தவர். (09) காதலர்க் காணாதவர்.

[தொடரமைப்பு: கனவினாற் காதலர்க் காணாதவர், நனவினான் நல்காரை நோவர். ]

இதன்பொருள்

கனவினான் காதலர்க் காணாதவர்= தமக்கொரு காதலர் இன்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர்;
நனவினான் நல்காரை நோவர்= தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலர் என நோவா நிற்பர், எ-று.

உரை விளக்கம்

இயற்பழித்தது பொறாது புலக்கின்றாள் ஆகலின், அயன்மை தோன்றக் கூறினாள். தமக்கும் காதலர் உளராய் அவரைக் கனவிற் கண்டு அறிவாராயின், நம் காதலர் கனவின்கண் ஆற்றி நல்குதல் அறிந்து நோவார் எ்னபதாம்.

# குறள் 1220 ( நனவினானந்)

( இதுவுமது )

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற் () நனவினான் நம் நீத்தார் என்பர் கனவினால்

காணார்கொ லிவ்வூ ரவர். (10) காணார்கொல் இவ் ஊரவர்.

**[**தொடரமைப்பு**:** இவ்வூரவர் நனவினான் நம்நீத்தார் என்பர்**,** கனவினால் காணார் கொல்.**]**

இதன்பொருள்

இவ்வூரவர் நனவினான் நம்நீத்தார் என்பர்= இவ்வூரின்மகளிர் நனவின்கண் நம்மை நீத்தார் என்று நம்காதலரைக் கொடுமைகூறாநிற்பர்;
கனவினாற் காணார்கொல்= அவர் கனவின்கண் நீங்காதுவருதல் கண்டறியாரோ, எ-று.

உரை விளக்கம்

என்னோடு தன்னிடை வேற்றுமையின்றாயின், யான்கண்டது தானும் கண்டு அமையும், அதுகாணாது அவரைக் கொடுமை கூறுகின்றமையின் அயலாளேயாம் என்னும் கருத்தால, 'இவ்வூரவர்' என்றாள்.

# திருக்குறள் காமத்துப்பால்-கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **123.** பொழுது கண்டு இரங்கல்

அதிகார முன்னுரை

அஃதாவது, மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகள் இரங்குதல். 'கனா முந்துறாத வினையில்லை' என்பது பற்றிப் பகற்பொழுது ஆற்றியிருந்தாட்கு உரியதாகலின், இது கனவுநிலையுரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1221 (** மாலையோ**)**

**(**பொழுதொடு புலந்து சொல்லியது. **)**

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும் ( ) மாலையோ அல்லை மணந்தார் உயிர் உண்ணும்

வேலைநீ வாழி பொழுது. (01) வேலை நீ வாழி பொழுது.

**[**தொடரமைப்பு**:** பொழுது**,** நீ மாலையோ அல்லை**,** மணந்தார் உயிர் உண்ணும் வேலை.**]**

இதன்பொருள்

பொழுது= பொழுதே!

நீ மாலையோ அல்லை= நீ முன்னாள்களின் வந்த மாலையோவெனின், அல்லை;

மணந்தார் உயிர் உண்ணும் வேலை= இருந்தவாற்றான் அந்நாட்காதலரை மணந்த மகளிர் உயிரை உண்ணும் இறுதிக்காலமாய் இருந்தாய், எ-று.

உரைவிளக்கம்

முன்னாள்= கூடியிருந்தநாள். அந்நாள் மணந்தார் எனவே, பின் பிரிந்தாரதல் பெறுதும். வாழி என்பது குறிப்புச்சொல். "வாலிழை மகளிர் உயிர்ப்பொதி அவிழ்க்குங் காலை" (கலித்தொகை, நெய்தற்கலி-2)என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. வேலை என்பது ஆகுபெயர். வேலை என்பதற்கு வேலாய் இருந்தாய் என்பாரும் உளர்.

# குறள் **1222 (** புன்கண்ணை**)**

(தன்னுட் கையாற்றை அதன் மேலிட்டுச் சொல்லியது. )

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல் ( ) புன்கண்ணை வாழி மருள் மாலை எம் கேள் போல்

வன்கண்ண தோநின் றுணை. (02) வன்கண்ணதோ நின் துணை.

**[**தொடரமைப்பு**:** மருள்மாலை**,** புன்கண்ணை**,** நின் துணை

எம் கேள் போல் வன்கண்ணதோ.]

இதன்பொருள்

மருண்மாலை= மயங்கிய மாலாய்;
புன்கண்ணை= நீயும் எம்போலப் புன்கண் உடையாய் இருந்தாய்;
நின் துணை எம் கேள் போல் வன்கண்ணதோ= நின் துணையும் எந்துணை போல வன்கண்மையுடையதோ, கூறுவாயாக, எ-று.

உரை விளக்கம்

மயங்குதல் பகலும் இரவும் தம்முள்ளே விரவுதல்; கலங்குதலும் தோன்ற நின்றது. புன்கண்-ஒளியிழத்தல். அதுபற்றித் துணயும் உண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. எமக்குத் துன்பம் செய்தாய், நீயும் இன்பம் உற்றிலை என்னும் குறிப்பால் வாழி என்றாள்.

# குறள் **1223** **(** பனியரும்பிப்**)**

**(** ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.**)**

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித் ( ) பனி அரும்பிப் பைதல் கொள் மாலை துனி அரும்பித்

துன்பம் வளர வரும். **(03)** துன்பம் வளர வரும்.

**[**தொடரமைப்பு**:** பனி அரும்பிப் பைதல் கொள் மாலை**,** துனி அரும்பித் துன்பம் வளர வரும்.**]**
]

இதன்பொருள்

பனி அரும்பிப் பைதல்கொள் மாலை= காதலர் கூடிய

நாளெல்லாம் என்முன் நடுக்கம் எய்திப் பசந்து வந்த மாலை;
துனி அரும்பித் துன்பம் வளர வரும்= இந்நாள் எனக்கு இறந்துபாடு வந்துதோன்றி அதற்குளதாம் துன்பம் ஒருகாலைக்கொருகால் மிக வாரா நின்றது, எ-று.

உரை விளக்கம்

குளிர்ச்சி தோன்ற மயங்கி வருமாலை என்னும் செம்பொருள் இக்குறிப்புணர நின்றது. துனி-உயிர்வாழ்தற்கண் வெறுப்பு. அதனால் யான் ஆற்றுமாறு என்னை என்பது குறிப்பெச்சம்.

# குறள் **1224 (** காதலரில்வழி**)**

**(** இதுவுமது**)**

காதல ரில்வழி மாலை கொலைக்களத் **( )** காதலர் இல்வழி மாலை கொலைக் களத்து

தேதிலர் போல வரும். **(04)** ஏதிலர் போல வரும்.

**[**தொடரமைப்பு**:** மாலை**,** காதலர் இல்வழி**,** கொலைக்களத்து ஏதிலர் போல வரும். **]**

இதன்பொருள்

மாலை= காதலர் உள்ளபொழுதெல்லாம் என்னுயிர் தளிர்ப்ப வந்தமாலை;
காதலர் இல்வழி= அவரி ்ல்லாத இப்பொழுது;
கொலைக்களத்து ஏதிலர் போல வரும்= அஃது ஒழிந்துநிற்றலேயன்றிக் கொல்லுங் களரியிற் கொலைஞர் வருமாறு போல அவ்வுயிரைக் கோடற்கு வாராநின்றது, எ-று.

உரை விளக்கம்

ஏதிலர்- அருள்யாதும் இல்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பம் செய்து வந்தபொழுதும், இன்று என்மேல் பகையாய்த் துன்பம்செய்து வாராநின்றது. இனி, யான் ஆற்றுமாறு என்னை என்பதாம்.

# குறள் 1225 ( காலைக்குச்)

(இதுவுமது )

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான் ( ) காலைக்குச் செய்த நன்று என்கொல் எவன்கொல் யான்

மாலைக்குச் செய்த பகை. (05) மாலைக்குச் செய்த பகை.

[தொடரமைப்பு: யான் காலைக்குச் செய்த நன்று என்கொல், மாலைக்குச் செய்த பகை எவன்கொல்.]

இதன்பொருள்

யான் காலைக்குச் செய்த நன்று என்கொல்= (காலையும், மாலையும் அவர் கூடியஞான்று போலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன அவற்றுள்) யான் காலைக்குச் செய்த உபகாரம் யாது;

மாலைக்குச் செய்த பகை எவன்= மாலைக்குச் செய்த அபகாரம் யாது, எ-று.

உரை விளக்கம்

கூடியஞான்று பிரிவர் என்று அஞ்சப்பண்ணிய காலை, அஃது ஒழிந்து இஞ்ஞான்று கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வாராநின்றது என்னும் கருத்தால்' 'நன்று என்கொல்' என்றும்,

கூடியஞான்று இன்பம் செய்துவந்த மாலை, அஃதொழிந்து இஞ்ஞான்று அளவில் துன்பம் செய்யாநின்றது என்னும் கருத்தால், 'பகையெவன்கொல் என்றும் கூறினாள். பகை- ஆகுபெயர் தன்னோடு ஒத்த காலைபோலாது மாலை தன் கொடுமையால் துன்பம் செய்யாநின்றது என்பதாம்.

# குறள் **1226 (** மாலைநோய்**)**

**(**இன்று இன்னையாகின்ற நீ**,** அன்று அவர் பிரிவுக்கு உடம்பட்டது என்னை என்றாட்குச் சொல்லியது.**)**

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத ( ) மாலை நோய் செய்தல் மணந்தார் அகலாத

காலை யறிந்த திலேன். (06) காலை அறிந்தது இலேன்.

**[**தொடரமைப்பு**:** மாலை நோய் செய்தல்**,** மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன்.**]**

இதன்பொருள்

மாலை நோய் செய்தல்= முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பம் செய்துபோந்த மாலை இன்று பகையாய்த் துன்பம்செய்தலை;

மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன்= காதலர் பிரிதற்குமுன்னே அறியப்பெற்றிலேன், எ-று.

உரை விளக்கம்

இங்ஙனம் வேறுபடுதல் அறிந்திலேன், அறிந்தேனாயின் அவர் பிரிவிற்கு உடம்படேன் என்பதாம்.

# குறள் 1227 ( காலையரும்பி)

(மாலைப்பொழுதின்கண் இனையை ஆதற்குக் காரணம் என்னை என்றாட்குச் சொல்லியது.)

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி ( ) காலை அரும்பிப் பகல் எல்லாம் போது ஆகி

மாலை மலருமிந் நோய். (07) மாலை மலரும் இந் நோய்.

**[**தொடரமைப்பு**:** இந்நோய்**,** காலை அரும்பிப்**,** பகல் எல்லாம் போது ஆகி**,** மாலை மலரும்.**]**

இதன்பொருள்

இந்நோய்= இக்காமநோயாகிய பூ;
காலை அரும்பி= காலைப்பொழுதின்கண் அரும்பி;
பகல் எல்லாம் போதாகி= பகற்பொழுதெல்லாம் பேர்அரும்பாய் முதிர்ந்து;
மாலைமலரும்= மாலைப்பொழுதின்கண் மலராநிற்கும், எ-று.

உரை விளக்கம்

துயில் எழுந்தபொழுதாகலின், கனவின்கண் கூட்டம்நினைந்து ஆற்றுதல் பற்றிக் 'காலையரும்பி' என்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவு உ்ளளி ஆற்றாளாதல் பற்றிப் 'பகல்எல்லாம் போதாகி' என்றும், தத்தம் துணையை உள்ளிவந்து சேரும் விலங்குகளையும், மக்களையும்கண்டு, தான் அக்காலத்தில் நுகர்ந்தஇன்பம் நினைந்து ஆற்றாமை மிகுதிபற்றி 'மாலைமலரும்' என்றும், கூறினாள். பூப்போல இந்நோய் காலவயத்தது ஆகாநின்றது என்பது உருவகத்தாற் பெறப்பட்டது. ஏகதேச உருவகம்.

# குறள் 1228 ( அழல்போலு)

(இதுவுமது )

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன் ( ) அழல் போலும் மாலைக்குத் தூது ஆகி ஆயன்

குழல்போலுங் கொல்லும் படை. (08) குழல் போலும் கொல்லும் படை.

[ தொடரமைப்பு: ஆயன் குழல், அழல் போலும் மாலைக்குத் தூதாகி, கொல்லும் படைபோலும்.]

இதன்பொருள்

ஆயன் குழல்= முன்னெல்லாம் இனியதாய்ப் போந்த ஆயன்குழல்;
அழல்போலும் மாலைக்குத் தூதாகி= இதுபொழுது அழல்போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய்;
கொல்லும்படை= அது வந்து என்னைக் கொல்வுழிக் கொல்லும் படையும் ஆயிற்று, எ-று.

உரை விளக்கம்

பின்னின்ற போலும் என்பது உரையசை. முன்னரே வரவுணர்த்தலின் தூதாயிற்று. கோறற்கருவியாகலின் படையாயிற்று. தானே சுடவல்ல மாலை இத்துணையும் பெற்றால் என்செய்யாது என்பதாம்.

# குறள் 1229 ( பதிமருண்டு)

( இதுவுமது )

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு ( ) பதி மருண்டு பைதல் உழக்கும் மதி மருண்டு

மாலை படர்தரும் போழ்து. (09) மாலை படர்தரும் போழ்து.

[தொடரமைப்பு: மதி மருண்டு மாலை படர்தரும் போழ்து, பதி மருண்டு பைதல் உழக்கும். ]

இதன்பொருள்

மதி மருண்டு மாலைபடர்தரும் போழ்து= (இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழந்தேன்) இனிக் கண்டாரும் மதி மருளும்வகை மாலை வரும்பொழுது;
பதி மருண்டு பைதல் உழக்கும்= இப்பதி எல்லாம் மயங்கி நோயுழக்கும், எ-று.

உரை விளக்கம்

மதிமருள என்பது, மதிமருண்டு எனத் திரிந்து நின்றது. கூற்றமாகக் கருதிக் கூறினாள் ஆகலின், 'மாலைபடர்தரும் போழ்து' என்றாள். யான் இறந்து படுவல் என்பதாம். மாலை மயங்கி வரும்போழ்து, என் பதி மதி நிலைகலங்கி நோய் உழக்கும் என்று உரைப்பாரும் உளர்.

# குறள் 1230 ( பொருண்மாலை)

(இதுவுமது )

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை () பொருள்மாலையாளரை உள்ளி மருள் மாலை

மாயுமென் மாயா வுயிர். (10) மாயும் என் மாயா உயிர்.

**[**தொடரமைப்பு**:** மாயா என் உயிர்**,** பொருள்மாலையாளரை உள்ளி மருள்மாலை மாயும்.**]**

இதன்பொருள்

மாயா என் உயிர்= காதலர் பிரிவைப் பொறுத்து இறந்துபடாதிருந்த என் உயிர்;

பொருண்மாலையாளரை உள்ளி மருண்மாலை மாயும்= இன்று பொருள் இயல்பே தமக்கு இயல்பாக உடையவரை நினைந்து**,** இம்மயங்கும் மாலைக்கண்ணே இறந்துபடாநின்றது**,** எ-று.

உரை விளக்கம்

குறித்த பருவம் கழியவும் பொருள்முடிவு நோக்கி வாராமையின்**,** சொல் வேறுபடாமையாகிய தம் இயல்பு ஒழிந்தவர் அ்பபொருளியல்பே தம் இயல்பு ஆயினார்**,** காலம் இதுவாயிற்று**,** இனி**,** நீ சொல்கின்றவாற்றாற் பயனில்லை என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்-கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **124.** உறுப்பு நலன் அழிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகள் தன் கண்ணும், தோளும், நுதலும் முதலாய அவயவங்கள் தம் அழகு அழிதல். இஃது இரக்கம் மிக்குழி நிகழ்வதாகலின், பொழுதுகண்டிரங்கலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1231 (** சிறுமைநமக்**)**

**(**ஆற்றாமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **)**

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி ( ) சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி

நறுமலர் நாணின கண். (01) நறு மலர் நாணின கண்.

[தொடரமைப்பு: சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி, கண் நறுமலர் நாணின.]

இதன்பொருள்

சிறுமை நமக்கு ஒழியச்சேட்சென்றார் உள்ளி= இவ்வாற்றாமை நம்கண்ணே நிற்பத் தாம் சேணிடைச் சென்ற காதலரை நீ நினைந்து அழுதலால்;

கண் நறுமலர் நாணின= நின்கண்கள் ஒளியிழந்து முன் தமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன, எ-று.

உரைவிளக்கம்

நமக்கு என்பது வேற்றுமை மயக்கம். உள்ள என்பது, உள்ளி எனத் திரிந்துநின்றது. உள்ளுதல் என்பது, காரணப்பெயர் காரியத்திற்காய ஆகுபெயர். இவைகண்டார் அவரைக் கொடுமைகூறுவர், நீ ஆற்றல் வேண்டும் என்பது கருத்து.

# குறள் 1232 ( நயந்தவர்)

(இதுவுமது )

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் ( ) நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்

பசந்து பனிவாருங் கண். (02) பசந்து பனிவாருங் கண்.

[தொடரமைப்பு: பசந்து பனிவாரும் கண், நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும். ]
]

இதன்பொருள்

பசந்து பனிவாரும் கண்= பசப்பெய்தன்மேல் நீர் வார்கின்ற நின்கண்கள்;

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்= நம்மான் நயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலாநின்றன. இனி, நீ ஆற்றல் வேண்டும், எ-று.

உரை விளக்கம்

சொல்லுவபோறல்- அதனை அவர்உணர்தற்கு அனுமானமாதல். நயந்தவர்க்கு என்று பாடம் ஓதுவாரும் உளர்.

## குறள் 1233 (தணந்தமை )

(இதுவுமது )

தணந்தமை சால வறிவிப்ப போலு ( ) தணந்தமை சால அறிவிப்ப போலும்

மணந்தநாள் வீங்கிய தோள். (03) மணந்த நாள் வீங்கிய தோள்.

[தொடரமைப்பு: மணந்த நாள் வீங்கிய தோள், தணந்தமை சால அறிவிப்ப போலும்.]

இதன்பொருள்

மணந்த நாள் வீங்கிய தோள்= காதலர் மணந்த ஞான்று இன்பம் மிகுதியாற் பூரித்த நின்தோள்கள்;

தணந்தமை சால அறிவிப்ப போலும்= இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவபோல மெலியாநின்றன, இது தகாது, எ-று.

உரை விளக்கம்

அன்றும் அவ்வாறு பூரித்து, இன்றும் இவ்வாறு மெலிந்தால் இரண்டும் கண்டவர் கடிதின் அறிந்து, அவரைத் தகவின்மை கூறுவர் என்பதாம்.

# குறள் **1234** ( பணைநீங்கிப்)

**(**இதுவுமது **)**

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித் ( ) பணை நீங்கிப் பைந் தொடி சோரும் துணை நீங்கித்

தொல்கவின் வாடிய தோள். (04) தொல் கவின் வாடிய தோள்.

**[**தொடரமைப்பு**:** துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள்**,** பணை நீங்கிப் பைந் தொடி சோரும். **]**

இதன்பொருள்

துணை நீங்கித் தொல்கவின் வாடிய தோள்= அன்றும் துணைவர் நீங்குதலான் அவராற்பெற்ற செயற்கை அழகேயன்றிப் பழைய இயற்கை அழகும் இழந்த இ்ததோள்கள்;
பணை நீங்கிப் பைந்தொடி சேரும்= இன்று அதற்கும்மேலே தம் பெருமையிழந்து வளை கழலாநின்றன. இவை இங்ஙனம் செயற்பாலன அல்ல, எ-று.

உரை விளக்கம்

பெருமையிழத்தல்- மெலிதல். பைந்தொடி-பசிய பொன்னாற் செய்த தொடி. 'சோரும்' என்னும் வளைத்தொழில், தோள் மேல் நின்றது. அன்றும், பிரிந்தார் என்று அவர் அன்பின்மை உணர்த்தி, இன்றும் குறித்த பருவத்து வந்திலர் என்று, அவர் பொய்மை

உணர்த்தாநின்றன. இனி அவற்றைக் கூறுகின்றார் மேல் குறையுண்டோ என்பதாம்.

# குறள் **1235 (** கொடியார்**)**

**(**இதுவுமது **)**

கொடியார் கொடுமை உரைக்குந் தொடியொடு **( )** கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு

தொல்கவின் வாடிய தோள். **(05)** தொல் கவி ன் வாடிய தோள்.

**[**தொடரமைப்பு**:** கொடியார் கொடுமை உரைக்கும்**,** தொடியொடு தொல் கவின் வாடிய தோள்.**]**

இதன்பொருள்

கொடியார் கொடுமை உரைக்கும்= கவவுக்கை நெகிழினும் ஆற்றாதாட்கு**,** இக்கால நீட்டத்து என்னாம் என்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன**;**
தொடியொடு தொல்கவின் வாடிய தோள்= வளைகளும் கழன்று**,** பழைய இயற்கை அழகும் இழந்த இத்தோள்கள்**,** இனி அதனை யாம் மறைக்குமாறு என்னை**,** எ-று.

உரை விளக்கம்

'உரைக்கும்' என்பது**,** அப்பொருண்மை தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'ஒடு' வேறுவினைக்கண் வந்தது. அவரொடு கலந்த தோள்களே சொல்லுவனவானால்**,** அயலார் சொல்லுதல் வேண்டுமோ என்பதாம்.

# குறள் **1236 (** தொடியொடு**)**

**(**தான் ஆற்றுதற் பொருட்டு இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **)**

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக் **( )** தொடியொடு தோள் நெகிழ நோவலவரைக்

கொடிய ரெனக்கூற னொந்து. **(**06**)** கொடியர் எனக் கூறல் நொந்து.

**[**தொடரமைப்பு**:** தொடியொடு தோள் நெகிழ**,** அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து நோவல்.**]**

இதன்பொருள்

தொடியொடு தோள் நெகிழ=யான் ஆற்றவும்**,** என் வயத்தவன்றித் தொடிகள் கழலுமாறு தோள்கள் மெலிய**;**
அவரைக்கொடியர் எனக் கூறல் நொந்து நோவல்= அவற்றைக்கண்டு நீ அவரைக் கொடியர் எனக் கூறுதலைப் பொறாது யான் என்னுள்ளே நோவாநின்றேன்**,** எ**-**று.

உரை விளக்கம்

ஒடு**-** மேல்வந்த பொருண்மைத்து. யான் ஆற்றேனாகின்றது அவர் வாராததற்கு அன்று**,** நீ கூறுகின்றதற்கு என்பதாம்.

# குறள் **1237 (**பாடுபெறு **)**

**(** அவ்வியற் பழிப்புப் பொறாது**,** தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **)**

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென் **( )** பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கு என்

வாடுதோட் பூச லுரைத்து. (07) வாடு தோள் பூசல் உரைத்து.

[தொடரமைப்பு: நெஞ்சே, கொடியார்க்கு என் வாடுதோள் பூசல் உரைத்து, பாடு பெறுதியோ.]

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே;

கொடியார்க்கு என் வாடுதோள் பூசல் உரைத்து= இவள் கொடியார் என்கிறவர்க்கு, நீ சென்று என் மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி;

பாடு பெறுதியோ= ஒரு மேம்பாடு எய்த வல்லையோ, வல்லையாயின் அதனை ஒப்பது இல்லை, எ-று.

உரை விளக்கம்

கொடியார்க்கு என்பது, கொடியரல்லர் என்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'வாடுதோள்' என்பதும் அவை தாமே வாடா நின்றன என்பது தோன்றநின்றது. பூசல்- ஆகுபெயர். அஃது அவள் தோள்நோக்கி இயற்பழித்தன்மேலும், அதனல் தனக்கு ஆற்றாமை மிகன்மேலும் நின்றது. நின்னுரை கேட்டலும் அவர் வருவர், வந்தால் இவையெல்லாம் நீங்கும்; நீங்க அஃது எனக்குக் காலத்தினாற் செய்த நன்றியாம் ஆகலின், அதன்பயன் எல்லாம் எய்துதி என்னும் கருத்தால் 'பாடுபெறுதியோ' என்றாள்.

# குறள் 1238 (முயங்கிய )

( வினைமுடித்து மீடலுற்ற தலைமகன், முன்நிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது. )

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது ( ) முயங்கிய கைகளை ஊக்கப்

பசந்தது

பைந்தொடிப் பேதை நுதல். (08) பைந் தொடிப் பேதை நுதல்.

[தொடரமைப்பு: முயங்கிய கைகளை ஊக்க, பைந்தொடிப் பேதை நுதல் பசந்தது.]

இதன்பொருள்

முயங்கிய கைகளை ஊக்க= தன்னை இறுக முயங்கிய கைகளை, இவட்கு நோகும் என்று கருதி ஒருஞான்று யான் நெகிழ்த்தேனாக; பைந்தொடி பேதை நுதல் பசந்தது= அத்துணையும் பொறாது, பைந்தொடிகளை அணிந்த பேதையது நுதல் பசந்தது, அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கு யாது செய்யுமோ, எ-று.

உரை விளக்கம்

இனிக் கடிதின் செல்லவேண்டும் என்பது கருத்து.

# குறள் 1239 (முயக்கிடைத் )

(இதுவுமது )

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற ( ) முயக்கு இடைத் தண் வளி போழப் பசப்பு உற்ற

பேதை பெருமழைக் கண். (09) பேதை பெரு மழைக்கண்.

[தொடரமைப்பு: முயக்கிடைத் தண்வளி போழ, பேதை பெருமழைக்கண் பசப்புற்ற. ]

இதன்பொருள்

முயக்கிடைத் தண்வளி போழ= அங்ஙனம் கைகளை ஊக்குதலான்

அம்முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக;

பேதை பெருமழைக்கண் பசப்புற்ற= அத்துணை இடையீடும் பொறாது, பேதையுடைய பெரிய மழைக்கண்கள் பசப்புற்றன; அத்தன்மையவான கண்கள் மலைகளும், காடும், நாடுமாய இவ்விடையீடுகளை எல்லாம் யாங்ஙனம் பொறுத்தன, எ-று.

உரை விளக்கம்

தன்மை ஈண்டு மென்மைமேல் நின்றது. போழ என்றது, உடம்பிரண்டும் ஒன்றானது தோன்ற நின்றது. மழை-குளிர்ச்சி.

# குறள் **1240** **(** கண்ணின்**)**

**(** இதுவுமது **)**

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே () கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே

யொண்ணுதல் செய்தது கண்டு. (10) ஒள் நுதல் செய்தது கண்டு.

**[**தொடரமைப்பு**:** கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே**,** ஒண்ணுதல் செய்தது கண்டு.**]**

இதன்பொருள்

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்று= தண்வளி போழவந்த கண்ணின் பசப்புத் துன்பம் உற்றது; ஒ்ணணுதல் செய்தது கண்டு= தனக்கு அயலாய ஒண்ணுநல் விளைத்த பசப்பைக்கண்டு, எ-று.

உரை விளக்கம்

அது கைகளை ஊக்க அவ்வளவிற் பசந்தது, யான் கைகளையும்

ஊக்கி மெய்களும் நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்கும் துணையும் பசந்திலன் எனத் தன் வன்மையும், அதன் மென்மையும் கருதி வெள்கிற்று என்பதாம்; ஆகவே, அவள் உறுப்புக்கள் ஒன்றின்ஒன்று முற்பட்டு நலன் அழியும், யாம் கடிதின் சேறும் என்பது கருத்தாயிற்று.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **125.** நெஞ்சொடு கிளத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது ஆற்றாமை மீதூரத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைமகள்**,** தன் நெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல். இஃது**,** உறுப்புக்கள் தம் நலன் அழிந்தவழி நிகழ்வதாகலின் உறுப்புநலனழிதலின் பின்வைக்கப்பட்டது.

## குறள் **1241 (** நினைத்தொன்று**)**

**(**தன் ஆற்றாமை தீரும் திறன் ஆடியயது. **)**

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று ( )
நினைத்து ஒன்றும் சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்

மெவ்வநோய் தீர்க்கு மருந்து. (01) எவ்வநோய் தீர்க்கும் மருந்து.

[தொடரமைப்பு: நெஞ்சே, எவ்வநோய் தீர்க்கும் மருந்து ஒன்று, எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாயோ.]

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே;

எவ்வநோய் தீர்க்கும் மருந்து ஒன்று= இவ் எவ்வநோயினைத் தீர்க்கும் மருந்தாவது ஒன்றனை;

எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாய்= யான் அறியும் ஆ்றறல் இலன், எத்தன்மையது யாதொன்றாயினும் நீ அறிந்து எனக்குச் சொல், எ-று.

உரைவிளக்கம்

எவவம்- ஒன்றானும் தீராமை. உயிரினும் சிறந்த நாணினைவிட்டுச் செய்வது யாது ஒன்றாயினும் என்பாள், 'எனைத்தொன்றும்' என்றாள்.

# குறள் 1242 ( காதலவரில)

(தலைமகனைக் காண்டற்கண் வேட்கைமிகுதியாற் சொல்லியது. )

காத லவரில ராகநீ நோவது ( ) காதல் அவர் இலராக நீ நோவது

பேதைமை வாழியென் னெஞ்சு. (02) பேதைமை வாழி என் நெஞ்சு.

[தொடரமைப்பு: என் நெஞ்சு வாழி, அவர் காதல் இலராக நீ நோவது, பேதைமை. ]

இதன்பொருள்

என் நெஞ்சு வாழி= என் நெஞ்சே வாழ்வாயாக;

அவர் காதல் இலராக நீ நோவது= அவர் நம்கண் காதல் இலராகவும் நீ அவர் வரவு நோக்கி வருந்துதற்கு ஏது;
பேதைமை= நின் பேதைமையே பிறிதில்லை, எ-று.

உரை விளக்கம்

நம்மை நினையாமையின் நம்கண் காதல் இலர் என்பதறியலாம், அஃதறியாமை மேலும் அவர்பாற்செல்லக் கருதாது, அவர் வரவுபார்த்து வருந்தாநின்றாய், இது நீ செய்துகொள்கின்றது என்னும் கருத்தாற் பேதைமை என்றாள். வாழி- இகழ்ச்சி் க்குறிப்பு. யாம் அவர்பாற் சேறலே அறிவாவது என்பதாம்.

# குறள் **1243 (**இருந்துள்ளி **)**

**(**இதுவுமது **)**

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல் **( )** இருந்து உள்ளி என் பரிதல் நெஞ்சே பரிந்து உள்ளல்

பைதனோய் செய்தார் கணில். (03) பைதல் நோய் செய்தார்கண் இல்.

**[**தொடரமைப்பு**:** நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என்**,** பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல்.**]**

இதன்பொருள்

நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என்= நெஞ்சே**!** அவர்பாற் செல்வதும் செய்யாது, ஈண்டு இறந்துபடுவதும் செய்யாது இருந்து அவர் வரவுநினைந்து நீ வருந்துகின்றது என்னை;
பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல்= இப்பையுள்

நோய் செய்தார்மாட்டு நமக்கு இரங்கி வரக்கருதுதல் உண்டாகாது, எ-று.

உரை விளக்கம்

நம் மாட்டு அருள் உடையர் அன்மையின் தாமாக வாரார், நாம் சேறலே இனித் தகுவது என்பதாம்.

# குறள் 1244 ( கண்ணுங்கொளச்)

(இதுவுமது )

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத் ( ) கண்ணும் கொளச் சேறி நெஞ்சே இவை என்னைத்

தின்னு மவர்க்காண லுற்று. (04) தின்னும் அவர்க் காணல் உற்று.

**[**தொடரமைப்பு**:** நெஞ்சே கண்ணும் கொளச் சேறி, இவை அவர்க் காணல் உற்று என்னைத் தின்னும்.**]**

இதன்பொருள்

நெஞ்சே கண்ணும் கொளச் சேறி= நெஞ்சே, நீ அவர்பால் சேறலுற்றாயாயின் இக்கண்களையும் உடன் கொண்டு செல்வாயாக;

இவை அவர்க்காணல் உற்று என்னைத் தின்னும்= அன்றி நீ சேறியாயின், இவைதாம் காட்சிவிதுப்பினால் அவரைக் காண்டல்வேண்டி நீ காட்டு என்று என்னைத் தின்பனபோன்று நலியாநிற்கும், எ-று.

உரை விளக்கம்

கொண்டு என்பது, கொள எனத்திரிந்து நின்றது. தின்னும் என்பது,

இலக்கணைக் குறிப்பு. அந்நலிவு தீர்க்கவேண்டும் என்றது, தான் சேறல் குறித்து.

## குறள் **1245 (** செற்றாரென**)**

**(**இதுவுமது **)**

செற்றாரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா **( )** செற்றார் எனக் கைவிடல் உண்டோ நெஞ்சே யாம்

முற்றா லுறாஅ தவர். **(05)** உற்றால் உறாஅதவர்.

**[**தொடரமைப்பு**:** நெஞ்சே**,** யாம் உற்றால் உறாஅதவர்**,** செற்றார் எனக் கைவிடல் உண்டோ. **]**

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே!

யாம் உற்றால் உறாஅதவர்= யாம் நம்மையுறத் தாமுறாத நம் காதலரை;

செற்றார் எனக் கைவிடல் உண்டோ= வெறுத்தார் என்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்கு உண்டோ, இல்லை, எ-று.

உரை விளக்கம்

உறுதல்-அன்புபடுதல். அவ்வலி இன்மையின் அவர்பால் செல்வதே நமக்குத் தகுவது என்பதாம்.

## குறள் **1246 (**கலந்துணர்த்துங் **)**

(தலைமகன் கொடுமை நினைந்து செலவு உடன்படாத நெஞ்சினைக கழறியது. )

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய் ( ) கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்து உணராய்

பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு. (06) பொய்க் காய்வு காய்தி என் நெஞ்சு.

[தொடரமைப்பு: என் நெஞ்சு, கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்து உணராய், பொய்க் காய்வு காய்தி. ]

இதன்பொருள்

என்நெஞ்சு= என்னெஞ்சே!:

கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டாற்புலந்து உணராய்= யான் தம்மொடு புலந்தால், அப்புலவியைக் கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் காண்டாற் பொய்யேயாயினும் ஒருகாற் புலந்து பின்அதனை நீங்க மாட்டாய்;

பொய்க்காய்வு காய்தி= அதுவும் மாட்டாத நீ, இப்பொழுது அவர் கொடியர் எனப் பொய்க்காய்வு காயாநின்றாய், இனி அதனை ஒழிந்து அவர்பால் செல்லத் துணிவாயாக, எ-று.

உரை விளக்கம்

கலத்தலான் என்னும் பொருட்டாய கலக்க என்பது திரிந்துநின்றது. அதனான் உணர்த்தலாவது, கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக்கிப் புலவிக்குறிப்பினை ஒழித்தல். பொய்க்காய்வு- நிலையில் வெறுப்பு. கண்டான் மாட்டாதநீ காணாதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லை என்பதாம்.

## குறள் 1247 ( காமம்விடு)

( நாண் தடுத்தலின் அச்செலவு ஒழிவாள் சொல்லியது. )

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே ( ) காமம் விடு ஒன்றோ நாண் விடு நல் நெஞ்சே

யானோ பொறேனிவ் விரண்டு. (07) யானோ பொறேன் இவ் இரண்டு.

**[**தொடரமைப்பு**:** நல்நெஞ்சே**,** ஒன்றோ காமம் விடு**, (**ஒன்றோ**)** நாண் விடு**,** இவ்விரண்டு யான் பொறேன். **]**

இதன்பொருள்

நன்னெஞ்சே= நல்ல நெஞ்சே;
ஒன்றோ காமம் விடு= ஒன்றின் நாண்விட மாட்டாயாயின் காம வேட்கையை விடு;
(ஒன்றோ) நாண் விடு= ஒன்றின் அது விடமாட்டாயாயின், நாணினை விடு;
இவ்விரண்டு யானோ பொறேன்= அன்றியே இரண்டும் விடாமை நின்கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய இவ்விரண்டனையும் உடன்தாங்கு மதுகை யான்இலன், எ-று.

உரை விளக்கம்

'யானோ' என்னும் பிரிநிலை, நீ பொறுப்பினும் என்பதுபட நின்றது. 'நன்னெஞ்சே' என்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின், நல்லை என்னும் குறிப்பிற்று. அது நன்றே எனினும், என் உயிர் உ்ண்டாதல் சாலாமையின், அதற்கு ஆகின்றிலேன் என்பதாம். முற்றும்மை விகாரத்தான் தொக்கது.

குறள் **1248 (**பரிந்தவர் **)**

( இதுவுமது)

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர் ( ) பரிந்து அவர் நல்கார் என்று ஏங்கிப் பிரிந்தவர்

பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. (08) பின் செல்வாய் பேதை என் நெஞ்சு.

[தொடரமைப்பு: என் நெஞ்சு, அவர் பரிந்து அவர் நல்கார் என்று, பிரிந்தவர் பின் ஏங்கிச் செல்வாய் பேதை. ]

இதன்பொருள்

என் நெஞ்சு= என் நெஞ்சே;

அவர் பரிந்து நல்கார் என்று= அவர் இவ்வாற்றையை அறியாமையின் நொந்துவந்து தலையளி செய்யார் ஆயினார் என்று கருதி;

பிரிந்தவர்பின் ஏங்கிச் செல்வாய் பேதை= அஃது அறிவித்தற் பொருட்டு, நம்மைப் பிரிந்துபோயவர்பின் ஏங்கிச் செல்லலுற்ற நீ யாதும் அறியாய், எ-று.

உரை விளக்கம்

ஆற்றாமை கண்டுவைத்தும், நல்காது போயினாரைக் காணாதவழிச் சென்று அறிவித்த துணையானே நல்கவருவர் என்று கருதினமையின், 'பேதை' என்றாள்.

# குறள் 1249 ( உள்ளத்தார்)

( இதுவுமது )

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ ( ) உள்ளத்தார் காதலவர் ஆக

உள்ளி நீ

யாருழைச் சேறியென் னெஞ்சு. (09) யாருழைச் சேறி என் நெஞ்சு.

[தொடரமைப்பு: என் நெஞ்சு, காதலவர் உள்ளத்தாராக, நீ உள்ளி யாருழைச் சேறி. ]

இதன்பொருள்

என் நெஞ்சு= என்னெஞ்சே;
காதலவர் உள்ளத்தாராக= காதலர் நின் அகத்தாராக;
நீ உள்ளி யாருழைச் சேறி= முன்பு எல்லாம் கண்டுவைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச் செல்கின்றது யாரிடத்து, எ-று.

உரை விளக்கம்

உள்ளம் என்புழி, அம்முப் பகுதிப்பொருள் விகுதி. நின் அகத்து இருக்கின்றவரை அஃது அறியாது புறத்துத்தேடிச் சேறல் நகையுடைத்து, அதனை ஒழி என்பதாம்.

# குறள் 1250 (துன்னாத் )

( அவரை மறந்து ஆற்றல் வேண்டும் என்பதுபடச் சொல்லியது. )

துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா () துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா

வின்னு மிழத்துங் கவின். (10) இன்னும் இழத்தும் கவின்.

[தொடரமைப்பு: துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா, இன்னும் கவின் இழத்தும். ]

இதன்பொருள்

துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா= நம்மைக் கூடாவண்ணம் துறந்துபோயினாரை நாம் நம் அகத்து உடையேமாக;
இன்னும்கவின் இழத்தும்= முன் இழந்த புறக்கவினேயன்றி நின்ற அகக்கவினும் இழப்பேம், எ-று.

உரை விளக்கம்

"குன்றின், நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்"-(குறுந்தொகை-கடவுள்வாழ்த்து) என்புழிப்போல நெஞ்சு என்பது, ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது. அவர் நம்மைத் துன்னாமல் துறந்தாராகவும், நாம் அவரை மறத்தன் மாட்டேமாகவும், போன மெய்க்கவினே அன்றி, நின்ற நிறையும் இழப்பேம் என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **126.** நிறை அழிதல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகள் மனத்து அடக்கற்பாலனவற்றை வேட்கைமிகுதியான், அடக்கமாட்டாது வாய்விடுதல்; "நிறையெனப்படுவது மறைபிறர் அறியாமை" (கலித்.நெய்தல், 16.) என்றார், பிறரும். அஃது அழிதற்காரணம் நெஞ்சொடு கிளந்தமையின், இது நெஞ்சொடுகிளத்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1251 (** காமக்கணிச்சி**)**

**(**நாணும் நிறையும் அழியாமை நீ ஆற்றல்வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **)**

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு ( ) காமக் கணிச்சி உடைக்கும் நிறை என்னும்

நாணுத்தாழ் வீழ்த்த கதவு. (01) நாணுத் தாழ் வீழ்த்த கதவு.

**[**தொடரமைப்பு**:** நாணுத்தாழ் வீழ்த்த நிறை என்னும் கதவு**,** காமக் கணிச்சி உடைக்கும்.**]**

இதன்பொருள்

நாணுத்தாழ் வீழ்த்த நிறை என்னும் கதவு= நாணாகிய தாழினைக் கோத்த நிறையென்னும் கதவினை;
காமக் கணிச்சி உடைக்கும்= காமவேட்கையாகிய கணிச்சி முறியாநின்றது, இனி அவை நிற்றலும் இல்லை, யான் ஆற்றலும் இல்லை,

எ-று.

உரைவிளக்கம்

கணிச்சி- கூந்தாலி. நாண் உள்ளதுணையும், நிறையழியாதாகலின் அதனைத் தாழ் ஆக்கியும், அகத்துக் கிடந்தன பிறர் கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியதாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலின் தன் காமவுடேட்கையைக் கணிச்சியாக்கியும் கூறினாள்.

# குறள் **1252 (** காமமென**)**

**(** நெஞ்சின்கண் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும் என்றாட்குச் சொல்லியது.**)**

காம மெனவொன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை ( ) காமம் என ஒன்றோ கண் இன்று என் நெஞ்சத்தை

யாமத்து மாளுந் தொழில். (02) யாமத்தும் ஆளும் தொழில்.

[தொடரமைப்பு: யாமத்தும் என் நெஞ்சத்தைத் தொழி்ல் ஆளும், காமமென ஒன்றோ கண் இன்று. ]

இதன்பொருள்

யாமத்தும் என் நெஞ்சத்தைத் தொழில் ஆளும்= எல்லாரும் தொழில் ஒழியும் இடையாமத்தும் என் நெஞ்சத்தை ஒறுத்துத் தொழில்கொள்ளாநின்றது;

காமம் என ஒன்றோ கண் இன்று= ஆகலான் காமம் என்று சொல்லப்பட்ட ஒன்று கண்ணோட்டம் இன்றாய் இருந்தது, எ-று.

உரை விளக்கம்

'ஓ' என்பது இரக்கக் குறிப்பு. தொழிலின் கண்ணேயாடல்-தலைமகன்பாற் செலவிடுத்தல். தாயைப்பணிகோடல், உலகியல் அன்மையின் 'காமம் என ஒன்று' என்றும், அது தன்னைக் கொள்கின்றது அளவறியாது கோடலிற் 'கண்ணின்று' என்றும் கூறினாள். அடக்கப்படாமை கூறியவாறு.

# குறள் 1253 ( மறைப்பேன்மன்)

(மகளிர் காமம் மறைக்கப்படும் என்றாட்குச் சொல்லியது. )

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித் ( ) மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பு இன்றித்

தும்மல்போற் றோன்றி விடும். (03) தும்மல் போல் தோன்றி விடும்.

[தொடரமைப்பு: காமத்தை யான் மறைப்பேன்மன், குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றி விடும்.]

இதன்பொருள்

காமத்தை யான் மறைப்பேன்மன்= இக்காமத்தை யான் என்னுள்ளே மறைக்கக் கருதுவேன்;
குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றிவிடும்= அதனால் என், இஃது என்கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டே விடாநின்றது,

எ-று.

உரை விளக்கம்

மன்- ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம்- இரங்கற்கண் வந்தது. தும்மல் அடங்காதாற்போல அடங்குகின்றதில்லை என்பதாம்.

# குறள் **1254 (** நிறையுடையே**)**

(இதுவுமது )

நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம ( ) நிறையுடையேன் என்பேன்மன் யானோ என் காமம்

மறையிறந்து மன்று படும். (04) மறை இறந்து மன்று படும்.

**[**தொடரமைப்பு**:** யான் நிறையுடையேன் என்பேன்மன்**,** என் காமம் மறை இறந்து மன்றுபடும்.**]**

இதன்பொருள்

யான் நிறையுடையேன் என்பேன்மன்= இன்றின் ஊங்கெ்ல்லாம் யான் என்னை நிறையுடையேன் என்று கருதியிருந்தேன்;
என் காமம் மறையிறந்து மன்றுபடும்= அதனால் என், இன்று என்காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண்

வெளிப்படாநின்றது, எ-று.

உரை விளக்கம்

மன்னும் ஒவும் மேலவற்றின்கண் வந்தன. மன்றுபடுதல்- பலரும் அறிதல். இனி என்வரைத்தன்று என்பதாம்.

# குறள் **1255** (செற்றார்பின் )

(நம்மை மறந்தாரை நாமும் மறக்கற்பாலம் என்றாட்குச் சொல்லியது.)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ ( ) செற்றார் பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்

யுற்ற ரறிவதொன் றன்று. (05) உற்றார் அறிவது ஒன்று அன்று.

**[**தொடரமைப்பு**:** செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை**,** காமநோய் உற்றார் அறிவது ஒன்றன்று. **]**

இதன்பொருள்

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை= தம்மை அகன்றுசென்றார் பின் செல்லாது தாமும் அகன்றுநிற்கும் நிறையுடைமை;

காமநோய் உற்றார் அறிவது ஒன்றுஅன்று= காமநோயினை உறாதார் அறிவது ஒன்றன்றி உற்றார் அறிவது ஒன்றன்று, எ-று.

உரை விளக்கம்

இன்பத்தொடு கழியும் காலத்தைத் துன்பத்தொடு கழியுமாறு செய்தலின் செற்றார் என்றாள். பின்சேறல்- மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை ஈண்டு ஆகுபெயர். காமநோயுறாதார்- மானமுடையார். நன்று என உணரார்மாட்டும்

சென்றே நிற்கும், யான் அறிவது ஒன்றன்று என்பதாம்.

# குறள் **1256** (செற்றவர்பின் )

(இதுவுமது )

செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ ( ) செற்றவர் பின் சேறல் வேண்டி அளித்து அரோ

வெற்றென்னை யுற்ற துயர். (06) எற்று என்னை உற்ற துயர்.

**[**தொடரமைப்பு**:** செற்றவர் பின் சேறல் வேண்டி**,** என்னை உற்ற துயர் எற்று அளித்தரோ.**]**

இதன்பொருள்

செற்றவர் பின் சேறல் வேண்டி= என்னை அகன்று சென்றார் பின்னே யான் சேறலை வேண்டுதலான்;

என்னை உற்ற துயர் எற்று அளித்தரோ= என்னை உற்றதுயர் எத்தன்மையது, சால நன்று, எ-று.

உரை விளக்கம்

'செற்றவர்' என்றது, ஈண்டும் அப்பொருட்டு. வேண்ட என்பது வேண்டி எனத்திரிந்து நின்றது. 'அளித்து' என்பது, இகழ்ச்சிக் குறிப்பு. இக்காமநோய் யான் சொல்லவும் கேட்கவும் ஆவதொான்றன்று, சாலக்கொடிது என்பதாம்.

# குறள் **1257** ( நாணென**)**

(பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவான் கூடிய தலைமகள், 'நீ புலவாமைக்குக் காரணம் யாது' என்ற தோழிக்குச் சொல்லியது. )

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற் ( ) நாண் என ஒன்று அறியலம் காமத்தான்

பேணியார் பெட்ப செயின். (07) பேணியார் பெட்ப செயின்.

[தொடரமைப்பு: பேணியார் காமத்தான் பெட்ப செயின், நாண் என ஒன்றோ அறியலம். ]

இதன்பொருள்

பேணியார் காமத்தான் பெட்ப செயின்= நம்மால் விரும்பப்பட்டவர் வந்து, காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுமளவின்;

நாண் என ஒன்றோ அறியலம்= நாண் என்று ஒன்றையும் அறியமாட்டேமாய் இருந்தேம், எ-று.

உரை விளக்கம்

'பேணியார்' எனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. விரும்பியன- வேட்கைமிகவினாற் கருதியிருந்த கலவிகள். நாண்- பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்று என்பது, ஈண்டுச் சிறிது என்னும் பொருட்டு. இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நிறையழிவான் அறியாது கூடிய தன்குற்றம் நோக்கி, அவளையும் உளப்படுத்தாள்.

# குறள் 1258 ( பன்மாயக்)

( இதுவுமது )

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம் ( ) பல் மாயக் கள்வன் பணி மொழி அன்றோ நம்

பெண்மை யுடைக்கும் படை. (08) பெண்மை உடைக்கும் படை.

**[**தொடரமைப்பு**:** நம் பெண்மை உடைக்கும் படை**,** பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோ. **]**

இதன்பொருள்

நம் பெண்மை உடைக்கும் படை= நம் நிறையாகி அவர் அணை அழிக்கும் தானை;

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோ= பல பொய்களை வல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்கள் அன்றோ; ஆனபின் அது நிற்குமாறு என்னை, எ-று.

உரை விளக்கம்

'பெண்மை' ஈண்டுத் தலைமை பற்றி நிறைமேல் நின்றது. வந்தால் புலக்கக்கடவேம் என்றும், புலந்தால் அவன் சொற்களானும், செயல்களானும் நீங்கேம் என்றும், இவை முதலாக எண்ணிக்கொண்டிருந்தன யாவும் காணாது, கலவிக்கண் தன்னினும் முற்படும் வகை வந்து தோன்றினான் என்பாள், 'பன்மாயக் கள்வன்' என்றாள். பணிமொழி- நம்மினும் தான் அன்புமிகுதியுடையனாகச் சொலலும் சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நம் நிறை அழியாது ஒழியுமோ என்பதாம்.

# குறள் **1259 (**புலப்பலெனா **)**

**(**இதுவுமது **)**

புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங் ( ) புலப்பல் எனச் சென்றேன் புல்லினேன் நெஞ்சம்

கலத்த லுறுவது கண்டு. (09) கலத்தல் உறுவது கண்டு.

**[**தொடரமைப்பு**:** புலப்பல் எனச் சென்றேன்**,** நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புல்லினேன். **]**

இதன்பொருள்

புலப்பல் எனச் சென்றேன்= அவர் வந்தபொழுது புலக்கக்கடவேன் என்று கருதி முன் நில்லாது பிறிது ஓர் இடத்துப் போயினேன்;

நெஞ்சம் கலத்தல் உறுவது கண்டு புல்லினேன்= போயும், என்னெஞ்சம் நிறையில்லாது அறைபோய் அவரோடு கலத்தல் தொடங்குதலை அறிந்து, இனி அது வாயாது என்று புல்லினேன், எ-று.

உரை விளக்கம்

வாயாமை- புலத்தற் கருவியாய நெஞ்சுதானே, கலத்தற் கருவியாய் நிற்றலின் அது முடியாமை.

# குறள் **1260** **(**நிணந்தீ **)**

**(** இதுவுமது **)**

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ () நிணம் தீயில் இட்டு அன்ன நெஞ்சினார்க்கு உண்டோ

புணர்ந்தூடி நிற்பே மெனல். (10) புணர்ந்து ஊடி நிற்பேம் எனல்.

**[**தொடரமைப்பு**:** நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு**,**

புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ. ]
]

இதன்பொருள்

நிணம் தீயில் இ◌ட்டன்ன நெஞ்சினார்க்கு= நிணத்தைத் தீயின்கண்ணே இட்டால், அஃது உருகுமாறுபோலத் தம் காதலரைக் கண்டால் நிறையழிந்து உருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு;

புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ= அவர் புணர யாம் ஊடிப் பின்பு உணராது அந்நிலையே நிற்கக்கடவேம் என்று கருதுதல் உண்டாகுமோ, ஆகாது எ-று.

உரை விளக்கம்

புணர்தல்- ஈண்டு மிக நணுகுதல்; எதிர்ப்படலுமாம். புணர என்பது, புணர்ந்து எனத் திரிந்துநின்றது. யான் அத்தன்மையேன் ஆகலின் எனக்கு அஃது இல்லையாயிற்று என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்-கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **127.** அவர் வயின் விதும்பல்

அதிகார முன்னுரை

அஃதாவது, சேயிடைப் பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் வேட்கைமிகவினான், ஒருவரை ஒருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும், தலைமகள் ஆற்றாமையும் அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையும் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலால் கூறினார். பிறரெல்லாம், இதனைத் தலைமகனை நினைந்து, தலைமகள் விதுப்புறல் என்றார். சுட்டுப்பெயர், சொல்லுவான் குறிப்பொடு கூடிய பொருள் உணர்த்துவதல்லது, தான் ஒன்றற்குப் பெயர் ஆகாமையானும், கவிகூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற்பன்மையாற் கூறப்படாமையானும், அஃது உரையன்மை அறிக. இதனுள் தலைமகள்கூற்று நிறையழிவான் நிகழ்ந்தது ஆகலின், அவ்வியைபுபற்றி, நிறையழிதலின்பின் வைக்கப்பட்டது.

# குறள் **1261 (** வாளற்றுப்**)**

**(**தலைமகள் காண்டல் விதுப்பினான் சொல்லியது. **)**

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற ( ) வாள் அற்றுப் புற்கு என்ற கண்ணும் அவர் சென்ற

நாளொற்றித் தேய்ந்த விரல். (01) நாள் ஒற்றித் தேய்ந்த விரல்.

**[**தொடரமைப்பு**:** அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த**,** கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற. **]**

இதன்பொருள்

அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த= அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்கள் சுவரின்கண் இழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலான் என் விரல்கள் தேய்ந்தன;
கண்ணும் வாள் அற்று புற்கென்ற= அதுவேயன்றி, அவர் வரும்வழி பார்த்து என்கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின, இவ்வாறாயும் அவர் வரவு உண்டாயிற்றில்லை, எ-று.

உரைவிளக்கம்

'நாள்'- ஆகுபெயர். புல்லியவாதல்- நுண்ணிய காணமாட்டாமை. ஒற்ற என்பது, ஒற்றி எனத்திரிந்துநின்றது. இனி, யான் காணுமாறு என்னை என்பதாம். நாள் எண்ணலும், வழிபார்த்தலும் ஒருகாற் செய்துஒழியாது, இடையின்றிச்செய்தலான் விதுப்பாயிற்று.

# குறள் **1262 (**இலங்கிழா **)**

**(**ஆற்றாமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை**;** சிறிது மறக்கல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. **)**

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற் ( ) இலங்கு இழாய், இன்று மறப்பின் என் தோள் மேல்

கலங்கழியுங் காரிகை நீத்து. (02) கலம் கழியும் காரிகை நீத்து.

[தொடரமைப்பு: இலங்கிழாய், இன்றுமறப்பின், மேல் காரிகை நீத்து என்தோள் கலம் கழியும். ]

இதன்பொருள்

இலங்கு இழாய்= விளங்காநின்ற இழையினையுடையாய்;
இன்று மறப்பின்= காதலரை யான் இன்று யான் மறப்பேனாயின்;
மேல்காரிகை நீத்து என்றோள் கலங்கழியும்= மேலும், காரிகை என்னை நீப்ப என் தோள்கள் வளை கழல்வனாவாம், எ-று.

உரை விளக்கம்

'இலங்கிழாய்' என்பது, இதற்கு நீ யாதும் பரியலை என்னும் குறிப்பிற்று. இன்று- யான் இறந்து படுகின்றஇன்று. மேலும்- மறுபிறப்பினும். எச்சவும்மை விகாரத்தான் தொக்கது. நீப்ப என்பது நீத்து எனத் திரிந்து நின்றது. கழியும் என்னும் இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. இவ்வெல்லைக்கண் நினைந்தால் மறுமைக்கண் அவரை எய்தி இன்புறலாம், அதனான் மறக்கற்பாலேன் அல்லேன் என்பதாம்.

# குறள் **1263** (உரனசைஇ )

**(**இதுவுமது **)**

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார் ( ) உரன் நசைஇ உள்ளம் துணையாச் சென்றார்

வரனசைஇ யின்னு முளேன். (03) வரல் நசைஇ இன்னும் உளேன்.

[தொடரமைப்பு: உரன் நசைஇ உள்ளம் துணையாச் சென்றார், வரல் நசைஇ இன்னும் உளேன்.]

இதன்பொருள்

உரன் நசைஇ உள்ளம் துணையாச் சென்றார்= இன்பம் நுகர்தலை நச்சாது, வேறலை நச்சி நாம் துணையாதலை இகழ்ந்து நம் ஊக்கம் துணையாகப் போயினார்;

வரல் நசைஇ இன்னும் உளேன்= அவற்றை இகழ்ந்து ஈண்டு வருதலை நச்சுதலான், யான் இவ் எல்லையினும் உளேன் ஆயினேன், எ-று.

உரை விளக்கம்

உரன் என்பது, ஆகுபெயர். அந்நசையான் உயிர் வாழாநின்றேன், அஃது இல்லையாயின் இறந்துபடுவல் என்பதாம்.

# குறள் **1264 (** கூடியகாமம்**)**

**(**இதுவுமது **)**

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக் ( ) கூடிய காமம் பிரிந்தார் வரவு உள்ளிக்

கோடுகொ டேறுமென் னெஞ்சு. (04) கோடுகொடு ஏறும் என் நெஞ்சு.

[தொடரமைப்பு: பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி, என் நெஞ்சு கோடுகொடு ஏறும்.]

இதன்பொருள்

பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி= நீங்கிய காமத்தராய்

நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூறிய காமத்துடனே தங்கண் வருதலை நினைந்து;
என் நெஞ்சு கோடுகொடு ஏறும்= என்செஞ்சு வருத்தம் ஒழிந்து மேன்மேல் பணைத்து எழாநின்றது, எ-று.

உரை விளக்கம்

வினைவயின் பிரிவுழிக் காமவின்பம் நோக்காமையும், அது முடிந்துழி அதுவே நோக்கலும் தலைமகற்கு இயல்பாகலின், 'கூடிய காமமொடு' என்றாள். ஒடு உருபு விகாரத்தான் தொக்கது. கோடு கொண்டு ஏறலாகிய மரத்ததுதொழில், நெஞ்சின்மேல் ஏற்றப்பட்டது. கொண்டு என்பது குறைந்து நின்றது. அஃது உள்ளிற்றிலேன் ஆயின் இறந்துபடுவல் என்பதாம்.

# குறள் **1265** (காண்கமற் )

(தலைமகன் வரவுகூறி ஆற்றாயாய்ப் பசக்கற்பாலையல்லை என்ற தோழிக்குச் சொல்லியது. )

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி ( ) காண்கமன் கொண்கனைக் கண் ஆரக் கண்டபின்

னீங்குமென் மென்றோட் பசப்பு. (05) நீங்கும் என் தோள் பசப்பு.

**[**தொடரமைப்பு**:** கண்ணாரக் கொண்கனைக் காண்க**,** கண்டபின் என் மென் தோள் பசப்பு நீங்கும். **]**

இதன்பொருள்

கண்ஆரக் கொண்கனைக் காண்க= என் கண்கள் ஆரும் வகை என்கொண்கனை யான் காண்பேனாக;
கண்டபின் என் மென்தோள் பசப்பு நீங்கும்= அங்ஙனம்

கண்டபின் என் மெ்ல்லிய தோளின்கண் பசப்புத்தானே நீங்கும், எ-று.

உரை விளக்கம்

'காண்க' என்பது, ஈண்டு வேண்டிக்கோடற்பொருட்டு. அது வேண்டும் என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. கேட்ட துணையான் நீங்காது என்பதாம்.

# குறள்**1266 (** வருகமற்**)**

**(**இதுவுமது **)**

வருகமற்கொண்க னொருநாட் பருகுவன் ( ) வருகமன் கொண்கன் ஒரு நாள் பருகுவன்

பைதனோ யெல்லாங் கெட. (06) பைதல் நோய் எல்லாம் கெட.

**[**தொடரமைப்பு**:** கொண்கன் ஒருநாள் வருக**,** பைதல் நோயெல்லாம் கெடப் பருகுவன்.**]**

இதன்பொருள்

கொண்கன் ஒருநாள் வருக= இத்துணைநாளும் வாராக் கொண்கன் ஒருநாள் என்கண் வருவானாக;

பைதல் நோய் எல்லாம் கெடப் பருகுவன்= வந்தால் பையுளைச் செய்கின்ற இந்நோய் எல்லாம் கெட அவ்வமிழ்தத்தை வாயில் களைந்தானும் பருகக் கடவேன், எ-று.

உரை விளக்கம்

'வருக' என்பதற்கும், 'மன்' என்பதற்கும், மேல் உரைத்தவாறே கொள்க. அக்குறிப்பு, அவ் ஒருநாளைக்குள்ளே இனி வரக்கடவ

நோய்களும் கெடுப்பல் என்பதாம்.

# குறள் 1267 ( புலப்பேன்கொல்)

( இதுவுமது )

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல் ( ) புலப்பேன் கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன் கொல்

கண்ணன்ன கேளிர் வரின். (07) கண் அன்ன கேளிர் வரின்.

[தொடரமைப்பு: கண் அன்ன கேளிர் வரின், புலப்பேன்கொல், புல்லுவேன்கொல்லோ, கலப்பேன்கொல்]

இதன்பொருள்

கண் அன்ன கேளிர் வரின்= கண்போற் சிறந்த கேளிர் வருவராயின்;

புலப்பேன்கொல்= அவர் வரவு நீட்டித்தமை நோக்கி யான் புலக்கக்கடவேனோ;

புல்லுவேன்கொல்= அன்றி என் ஆற்றாமைநோக்கிப் புல்லக்கடவேனோ;

கலப்பேன்கொல்= அவ்விரண்டும் வேண்டுதலான் அவ்விருசெயல்களையும் விரவக்கடவேனோ, யாது செய்யக்கடவேன், எ-று.

உரை விளக்கம்

புலவியும் புல்லலும் ஓர் பொழுதின்கண் விரவாமையின் 'கலப்பேன் கொல்' என்றாள். மூன்றனையும் செய்தல் கருத்தாகலின் விதுப்பாயிற்று. இனிக் 'கலப்பேனகொல்' என்பதற்கு, ஒருபுதுமைசெய்யாது பிரியாத நாட்போலக் கலந்து

ஒழுகுவேனோ என்று உரைப்பாரும் உளர்.

# குறள் **1268 (** வினைகலந்து**)**

**(** வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித்துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது. **)**

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து ( ) வினை கலந்து வென்று ஈக வேந்தன் மனை கலந்து

மாலை யயர்கம் விருந்து. (08) மாலை அயர்கம் விருந்து.

**[**தொடரமைப்பு**:** வேந்தன் வினைகலந்து வென்றீக**,** மனைகலந்து மாலை அயர்கம் விருந்து.**]**

இதன்பொருள்

வேந்தன் வினை கலந்து வென்று ஈக= வேந்தன் வினைசெய்தலைப் புரிந்து வெல்வானாக;

மனைகலந்து மாலை விருந்து அயர்கம்= யாமும் மனைவியைச் சென்று கூடி ஆண்தை மாலைப்பொழுதிற்கு விருந்து அயர்வோமாக, எ-று.

உரை விளக்கம்

மனை என்பது, ஈண்டு ஆகுபெயர். "மங்கலம் என்ப மனைமாட்சி" (குறள், 60) என்புழிப்போல. வினைசெய்தற்கண் வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தல் முதலிய இன்மையின், 'மனைகலந்து மாலைக்கு விருந்து அயர்கம்' என்றான். நான்கன் உருபு விகாரத்தான் தொக்கது. இது வினைமுடியாமுன் கூறலான் விதுப்பாயிற்று. பிறர் எல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி உரைத்தார். தலைமகனைக்

கூறாது, 'வேந்தன் வெல்க' என்றும், 'மனைகலந்து' என்றும், மாலைப்பொழுதின்கண் 'விருந்து அயர்கம்' என்றும் வந்த அவ்வுரை தானே அது கூடாமைக்குக் கரியாயிற்று.

# குறள் 1269 ( ஒருநாளெழு)

( இதுவுமது )

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார் ( ) ஒரு நாள் எழு நாள் போல் செல்லும் சேண் சென்றார்

வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. (09) வரு நாள் வைத்து ஏங்குபவர்க்கு.

[தொடரமைப்பு: சேண் சென்றார் வரு நாள் வைத்து ஏங்குபவர்க்கு, ஒருநாள் எழுநாள்போல் செல்லும்.]

இதன்பொருள்

சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு= சேணிடைச் சென்ற தங்காதலர் மீண்டுவரக்குறித்த நாளையுட்கொண்டு, அது வருந்துணையும் உயிர்தாங்கி வருந்தும் மகளிர்க்கு;
ஒருநாள் எழுநாள்போல் செல்லும்= ஒருநாள் பலநாள் போல நெடிதாகக்காட்டும், எ-று.

உரை விளக்கம்

ஏழ் என்பது, அதற்கும் மேலாய மிக்கபன்மை குறித்து நின்றது, "ஒருவர் கூறை எழுவர் உடுத்து" என்றாற் போல. தலைமகள் வருத்தம் பிறர்மேல் இட்டுக் கூறியவாறு. இதனான் இதுவும் தலைமகள் கூற்று ஆகாமை அறிக. இருநாள் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

# குறள் **1270 (** பெறினென்னாம்**)**

**(** இதுவுமது **)**

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா () பெறின் என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின் என்னாம்

முள்ள முடைந்துக்கக் கால். (10) உள்ளம் உடைந்து உக்கக்கால்.

**[**தொடரமைப்பு**:** உள்ளம் உடைந்து உக்கக்கால்**,** பெறின் என்னாம்**,** பெற்றக்கால் என்னாம்**,** உறின் என்னாம்.**]**

இதன்பொருள்

உள்ளம் உடைந்து உக்கக்கால்= காதலி நம் பிரிவினை ஆற்றாது, உள்ளம் உடைந்து இறந்துபட்டவழி;
பெறின் என்னாம்= நம்மைப் பெறக்கடவள் ஆனால் என்;
பெற்றக்கால் என்னாம்= அதுவன்றியே பெற்றால் என்;
உறின் என்= அதுவன்றியே மெய்யுறக் கலந்தால்தான் என், இவை ஒன்றானும் பயனில்லை எ-று.

உரை விளக்கம்

இம்மூன்றும் உடம்பொடுபுணர்த்திக் கூறப்பட்டன. அதன்மேலும், முன்னை வழக்கு உண்மையின். அதற்குமுன்னே யான் செல்லவேண்டும் என்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகள் கூற்றாயவழி இரங்கல் ஆவதல்லது, விதுப்பாகாமை அறிக.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **128.** குறிப்பு அறிவுறுத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகன், தலைமகள், தோழி என்றிவர் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல். இது, பிரிந்துபோய தலைமகன் வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின் விதும்பலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1271 (** கரப்பினுங்**)**

**(** பிரிந்து கூடிய தலைமகன் வேட்கை மிகவினாற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இதுவொன்று உடைத்து என அஞ்சியவழி, அதனை அவள் குறிப்பான் அறிந்து அவன் அவட்குச் சொல்லியது.**)**

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க ( ) கரப்பினும் கை இகந்து ஒல்லா நின் உண்கண்

ணுரைக்க லுறுவதொன் றுண்டு. (01) உரைக்கல் உறுவது ஒன்று உண்டு.

[தொடரமைப்பு: கரப்பினும் ஒல்லா கையிகந்து, நின் உண்கண் உரைக்கலுறுவது ஒன்று உண்டு.]

இதன்பொருள்

கரப்பினும்= நீசொல்லாது மறைத்தாய் ஆயினும்;
ஒல்லா கையிகந்து= அதற்கு உடம்படாதே நின்னைக் கைகடந்து;
நின் உண்கண் உரக்கலுறுவது ஒன்று ஒண்டு= நின் கண்களே எமக்குச் சொல்லல் உறுவது ஒருகாரியம் உண்டாய் இராநின்றது, இனியதனை நீயே தெளியச்சொல்வாயாக, எ-று.

உரைவிளக்கம்

கரத்தல்- நாணான் அடக்குதல். தன்கண் பிரிதற்குறிப்பு உளதாகக்கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பான் அறிந்து அவட்குத் தன் பிரியாமைக்குறிப்பு அறிவுறுத்தவாறு.

# குறள் 1272 ( கண்ணிறைந்த)

( நாணால் அவள் அது சொல்லாளாயவழி அவன் தோழி்க்குச் சொல்லியது.)

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப் ( ) கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோள் பேதைக்குப்

பெண்ணிறைந்த நீர்மை பெரிது. (02) பெண் நிறைந்த நீர்மை பெரிது.

[தொடரமைப்பு: கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோள்

பேதைக்குப், பெண்நிறைந்த நீர்மை பெரிது.]

இதன்பொருள்

கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோள் பேதைக்கு= என்கண்நிறைந்த அழகினையும், வேயை ஒத்த தோளினையும் உடைய நின்பேதைக்கு;

பெண்நிறைந்த நீர்மை பெரிது= பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது, எ-று.

உரை விளக்கம்

இலதாய பிரிவினைத் தன்கண் ஏற்றி அதற்கு அஞ்சுதலான் இவ்வாறு கூறினான்.

# குறள் **1273 (** மணியிற்**)**

**(**இதுவுமது **)**

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை ( ) மணியில் திகழ்தரும் நூல்போல் மடந்தை

யணியிற் றிகழ்வதொன் றுண்டு. (03) அணியில் திகழ்வது ஒன்று உண்டு.

**[**தொடரமைப்பு**:** மணியில் திகழ் தரும்நூல் போல்**,** மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு.**]**

இதன்பொருள்

மணியில் திகழ்தரும் நூல்போல்= கோக்கப்பட்ட பளிக்குமணி யகத்துக் கிடந்து புறத்துப் புலனாம் நூல்போல;

மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு= இம்மடந்தையது

அணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்றதொரு குறிப்பு உண்டு, எ-று.

உரை விளக்கம்

அணி- புணர்ச்சியான் ஆய அழகு. அதனகத்துக் கிடத்தலாவது, அதனோடு உடன் நிகழ்தற்பாலதன்றி வைத்து உடனிகழ்தல். அதனை யான் அறிகின்றிலேன், நீ அறிந்து கூறல் வேண்டும் என்பது கருத்து.

# குறள் **1274** (முகைமொக்கு )

(இதுவுமது )

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற்பேதை ( ) முகை மொக்குள் உள்ளது நாற்றம் போல் பேதை

நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. (04) நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு.

**[**தொடரமைப்பு**:** முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல்**,** பேதை நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு.**]**

இதன்பொருள்

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல்= முகையது முகிழ்ப்பின் உளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல;

பேதை நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு= நின் பேதை என்னொடு நகக்கருதும் நகையது முகிழ்ப்பின் உளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு, எ-று.

உரை விளக்கம்

முகிழ்ப்பு- முதிர்ச்சியாற்புடைபடுதல். நகை-புணர்ச்சியின்பத்தான் நிகழ்வது.

# குறள் 1275 ( செறிதொடி)

(இதுவுமது )

செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர் ( ) செறி தொடி செய்து இறந்த கள்ளம் உறு துயர்

தீர்க்கு மருந்தொன் றுடைத்து. (05) தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து.

[தொடரமைப்பு:செறி தொடி செய்து இறந்த கள்ளம், உறு துயர்தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து. ]

இதன்பொருள்

செறிதொடி செய்து இறந்த கள்ளம்= நெருங்கிய வளைகளை உடையாள் என்கண் இல்லாதது ஒன்றனை உட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு;
உறு துயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து= என் மிக்கதுயரைத் தீர்க்கும் மருந்தாவது ஒன்றனை உடைத்து, எ-று.

உரை விளக்கம்

உட்கொண்டது- பிரிவு. கள்ளம்- ஆகுபெயர். மறைத்தற் குறிப்புத் தானும் உடன்போக்கு உட்கொண்டது. உறுதுயர்- நன்று செய்யத் தீங்கு விளைதலானும், அதுதான் தீர்திறம் பெறாமையானும் உளதாயது. மருந்து- அப்பிரிவின்மை தோழியான் தெளிவித்தல். நீ அது செய்யல்வேண்டும் என்பதாம்.

# குறள் **1276 (** பெரிதாற்றிப்**)**

**(**தலைமகன் குறிப்பறிந்த தலைமகள்**,** அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக்கு அறிவுறுத்தது. **)**

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி ( ) பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிது ஆற்றி

யன்பின்மை சூழ்வ துடைத்து. (06) அன்பு இன்மை சூழ்வது உடைத்து.

**[**தொடரமைப்பு**:** பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல்**,** அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து.**]**

இதன்பொருள்

பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல்= காதலர் வந்து தம்பிரிவினான் ஆய துன்பத்தினை மிகவும் ஆற்றி நாம் மகிழும் வண்ணம் கலக்கின்ற கலவி;

அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து= இருந்தவாற்றான் மேலும் அத்துன்பத்தினை அரிதாக ஆற்றியிருந்து அவர் அன்பின்மையை நினையும் தன்மை உடைத்து எ-று.

உரை விளக்கம்

பிரிதல் குறிப்பினால் செய்கின்றதாகலான், முடிவில் இன்னாதாகநின்றது என்பதாம்.

# குறள் **1277 (** தண்ணந்**)**

**(**இதுவுமது **)**

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு ( ) தண் அம் துறைவன் தணந்தமை நம்மினும்

முன்ன முணர்ந்த வளை. (07) முன்னம் உணர்ந்த வளை.

**[**தொடரமைப்பு**:** தண்ணந் துறைவன் தணந்தமை**,** நம்மினும் வளை முன்னம் உணர்ந்த.**]**

இதன்பொருள்

தண்ணந் துறைவன் தணந்தமை= குளிர்ந்த துறையையுடையவன் நம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை; நம்மினும் வளை முன்னம் உணர்ந்த= அவன் குறி்பபான் அறிதற்குரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே அறிந்தன**,** எ-று.

உரை விளக்கம்

கருத்து நிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' என்றும்**,** யான் தெளிய உணர்தற்கு முன்னே தோள்கண் மெலிந்தன என்பாள் அதனை வளைமேல் ஏற்றி**,** அதுதன்னை உணர்வுடைத்தாக்கியும் கூறினாள்.

# குறள் **1278 (**நெருநற்றுச் **)**

**(** இதுவுமது **)**

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு ( ) நெருநற்றுச் சென்றார் எம் காதலர் யாமும்

மெழுநாளே மேனி பசந்து. (08) எழு நாளேம் மேனி பசந்து.

**[**தொடரமைப்பு**:** எம் காதலர் சென்றார்நெருநற்று**,** நாமும் மேனி பசந்து எழு நாளேம்**]**

இதன்பொருள்

எங் காதலர்சென்றார்நெருநற்று= எங்காதலர் பிரிந்து போயினார் நெருநற்றே;

யாமும் மேனி பசந்து எழுநாளேம்= அப்பிரிவிற்கு யாமும் மேனிபசந்து ஏழுநாளுடையம் ஆயினேம் எ-று.

உரை விளக்கம்

நெருநற்றுச்செய்த தலையளியான் பிரிவு துணியப்பட்டது என்பாள், 'நெருநற்றுச் சென்றார்' என்றும், அதனை ஐயுற்றுச் செல்கின்றது ஏழுநாள் உண்டாகலின் அன்றே மேனி பசந்து 'எழுநாளேம்' என்றும் கூறினாள். இவ்வாற்றான் தலைமகனது பிரிதற் குறிப்பினை உணர்த்தி நின்றது.

# குறள் **1279 (** தொடிநோக்கித்**)**

**(** தலைமகள் குறிப்பறிந்த தோழி**,** அதனைத் தலைமகற்கு அறிவித்தது. **)**

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி ( ) தொடி நோக்கி மெல் தோளும் நோக்கி அடி நோக்கி

யஃதாண் டவள்செய் தது. (09)

**[**தொடரமைப்பு**:** தொடி நோக்கி**,** மென்தோளும் நோக்கி**,** அடி நோக்கி**,** ஆண்டு அவள் செய்தது அஃது. **]**

இதன்பொருள்

தொடி நோக்கி= (யானது தெளிவித்தவழித் தெளியாது) அவர் பிரிய யான் ஈண்டிருப்பின் இவை நில்லாவெனத் தன் தொடியை நோக்கி;

மென் தோளும் நோக்கி= அதற்கு ஏதுவாக இவை மெலியும்

எனத் தன்மென் தோள்களையும் நோக்கி;
அடி நோக்கி= பின் இவ்விரண்டும் நிகழாமல்நீர் நடந்து காத்தல் வேண்டும் என்த் தன் அடியையும் நோக்கி;
ஆண்டு அவள் செய்தது அஃது= அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காயிருந்தது, எ-று.

உரை விளக்கம்
செய்த குறிப்பு- செய்தற்கு ஏதுவாய குறிப்பு. அஃதென்றாள் "செறிதொடி செய்திறந்த கள்ளம்" என்றான் ஆகலின். பிரிதற்குறிப்பு உண்டாயின் அஃது அழுங்கல் பயன்.

## குறள் **1280** (பெண்ணினாற் )

**(** தலைமகன், பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்கு அறிவுறுத்தது. **)**

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற் () பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப கண்ணினால்

காமநோய் சொல்லி யிரவு. (10) காம நோய் சொல்லி இரவு.

**[**தொடரமைப்பு**:** காமநோய் கண்ணினால் சொல்லி இரவு**,** பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப.**]**

இதன்பொருள்
காமநோய் கண்ணினாற் சொல்லி இரவு= மகளிர், தம் காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணினாற் சொல்லி அது தீர்க்கவேண்டும் என்று அவரை இரவாது உடன்போதல் குறித்துத் தம் அடியினை இரத்தல்;
பெண்ணினால் பெண்மை உடைத்து= தமக்கு இயல்பாகிய பெண்மை மேலும் ஓர் பெண்மைஉடைத்தென்று சொல்லுவர்

அறிந்தோர், எ-று.

உரை விளக்கம்

தலைமகளது உடன்போதல் துணிபு தோழியான் தெளிந்தான் ஆகலின், தன்பிரிவின்மைக் குறிப்பினை அறிவுறுப்பான் அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **129.** புணர்ச்சி விதும்பல்

அதிகார முன்னுரை

அஃதாவது, தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற்புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப்பு அறிவுறுத்த தலைமகள் அவன்மாட்டே நிகழாது வேட்கை மிகவினாற் தன்கண்ணே நிகழ்தலான், இது குறி ்ப்பறிவுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

## குறள் **1281 (**உள்ளக்களி **)**

**(** 'பிரிதற் குறிப்பினன் ஆகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது'**,** என நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**)**

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங் ( ) உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்

கள்ளுக்கில் காமத்திற் குண்டு. (01) கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு.

**[**தொடரமைப்பு**:** உள்ளக் களித்தலும்**,** காண மகிழ்தலும்**,** கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு.**]**

இதன்பொருள்

உள்ளக் களித்தலும்= நினைந்த துணையானே களிப்பு எய்தலும்;
காண மகிழ்தலும்= கண்ட துணையானே மகிழ்வு எய்தலும்;
கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு= கள்ளுண்டார்க்கு இல்லை**,** காமம் உடையார்க்கு உண்டு**,** எ**-**று.

உரைவிளக்கம்

களித்தல்**-** உணர்வு அழியாதது. மகிழதல்**-** அஃது அழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியல்லது இன்மையின் கள்ளுக்குஇல் என்றாள். உண்டு என்பது இறுதிவிளக்கு. அப்பெற்றித்தாய காமம் உடைய யான் புலத்தல் யாண்டையது என்பதாம்.

# குறள் **1282 (** தினைத்துணையும்**)**

**(**இதுவுமது **)**

தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங் ( ) தினைத் துணையும் ஊடாமை வேண்டும் பனைத் துணையும்

காம நிறைய வரின். (02) காமம் நிறைய வரின்.

**[**தொடரமைப்பு**:** காமம் பனைத்துணையும் நிறைய வரின்**,**

தினைத்துணையும் ஊடாமை வேண்டும்.]

இதன்பொருள்

காமம் பனைத்துணையும் நிறைய வரின்= மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிக உண்டாமாயின்;

தினைததுணையும் ஊடாமை வேண்டும்= அவரால், தங்காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை வேண்டப்படும், எ-று.

உரை விளக்கம்

'பனைத் துணையும்' என்புழி, ஐந்தன் உருபு விகாரத்தான் தொக்கது. ஊடின் வருத்தம் மிகும் எனப் பிறர்க்கு உறுதி கூறுவாள் போன்று, தன் விதுப்புக் கூறியவாறு.

# குறள் **1283** **(** பேணாதுபெட்ப**)**

**(**இதுவுமது **)**

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக் ( ) பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்

காணா தமையல கண். (03) காணாது அமையல கண்.

**[**தொடரமைப்பு**:** பேணாது பெட்பவே செய்யினும்**,** கொண்கனைக் காணாது கண் அமையல.**]**

இதன்பொருள்

பேணாது பெட்பவே செய்யினும்= நம்மை அவமதித்துத் தான் வேண்டியனவே செய்யுமாயினும்;

கொண்கனைக் கண் காணாது அமையல= கொண்கனை

என்கண்கள் காணாது அமைகின்றன இல்லை, எ-று.

உரை விளக்கம்

தன்விதுப்புக் கண்கள் மேல் ஏற்றப்படடது. அத்தன்மையேன் புலக்குமாறு என்னை என்பதாம்.

# குறள் **1284 (** ஊடற்கண்**)**

**(**இதுவுமது **)**

ஊடற்கண் சென்றேன்மற் றோழி யதுமறந்து ( ) ஊடற்கண் சென்றேன்மன் தோழி அது மறந்து

கூடற்கட் சென்றதென் னெஞ்சு. (04) கூடல்கண் சென்றது என் நெஞ்சு.

**[**தொடரமைப்பு**:** தோழி ஊடற்கண் சென்றேன்மன்**,** என் நெஞ்சு அது மறந்து கூடற்கண் சென்றது.**]**

இதன்பொருள்

தோழி= தோழீ;

ஊடற்கண் சென்றேன்= காதலரைக் காணாமுன் அவர்செய்த தவற்றைத் தன்னொடுநினைந்து யான் அவரோடு ஊடுதற்கண்ணே சென்றேன்;

என்நெஞ்சு அதுமறந்து கூடற்கண் சென்றது= கண்டபின் என் நெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது எ-று.

உரை விளக்கம்

சேறல்நிகழ்தல் நினைத்த நெஞ்சிற்கும் ஒத்தலின், 'அது மறந்து' என்றாள். அச்செலவாற் பயன் என் என்பதுபட நின்றமையின்

'மன்' ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடிந்ததில்லை என்பதாம்.

## குறள் **1285 (** எழுதுங்காற்**)**

**(** இதுவுமது**)**

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன் () எழுதும்கால் கோல் காணாக் கண்ணே போல் கொண்கன்

பழிகாணேன் கண்ட விடத்து. (05) பழி காணேன் கண்ட இடத்து.

**[**தொடரமைப்பு**:** எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே போல்**,** கொண்கன் பழி கண்டவிடத்துக் காணேன்.**]**

இதன்பொருள்

எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல்= முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதும் காலத்து அஞ்சனக் கோலின்இயல்பு காணமாட்டாத கண்ணேபோல்;

கொண்கன் பழிகண்டவிடத்துக் காணேன்= கொண்கனது தவறு, காணாதவிடத்தெல்லாம் கண்டிருந்து, அவனைக் க்ணடவிடத்துக் காண மாட்டேன், எ-று.

உரை விளக்கம்

கோ்ல ஆகுபெயர். இயல்பு- கருமை. என்னியல்பு இதுவாகலின் மேலும் அது முடியாது என்பதாம்.

## குறள் **1286 (** காணுங்காற்**)**

( இதுவுமது )

காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற் ( ) காணும்கால் காணேன் தவறாய காணாக்கால்

காணேன் றவறல் லவை. (06) காணேன் தவறு அல்லவை.

[தொடரமைப்பு: காணுங்கால் தவறாய காணேன், காணாக்கால் தவறல்லவை காணேன்.]

இதன்பொருள்

காணுங்கால் தவறாய காணேன்= கொண்கனை யான் காணும்பொழுது அவன் தவறாயவற்றைக் காண்கின்றிலேன்;
காணாக்கால் தவறல்லவை காணேன்= காணாதபொழுது அவையேயல்லது, பிறவற்றைக் காண்கின்றிலேன், எ-று.

உரை விளக்கம்

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னொடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையின் புலந்திலேன் என்பதாம்.

# குறள் 1287 ( உய்த்தலறிந்து)

(இதுவுமது )

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற் ( ) உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரே போல்

பொய்த்த லறிந்தென் புலந்து. (07) பொய்த்தல் அறிந்து என் புலந்து.

[தொடரமைப்பு: உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரே போல், பொய்த்தல் அறிந்து புலந்து என்.]

இதன்பொருள்

உய்த்தல் அறிந்து புனல்பாய்பவரே போல்= தம்மை ஈர்த்துக்கொண்டு போதல் அறிந்துவைத்து, ஒழுகுகின்ற புனலுட் பாய்வார் செயல் போல;

பொய்த்தல் அறிந்து புலந்து என்= புலவி முடிவுபோகாமை அறிந்து வைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென், எ-று.

உரை விளக்கம்

பாய்பவர் என்பது ஆகுபெயர். பொய்த்தல் புரைபடுதல். புலந்தாலும் பயனில்லை என்பதாம். பொய்த்தலறிந்தேன் என்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடுநீருள்பாய்வார்போல், முடிவறியப் பண்டொருகாற் புலந்து முடியாமை அறிந்தேன், இனி அது செயற்பாற்றன்று என உரைக்க.

## குறள் 1288 ( இளி ்த்தக்க)

( தலைமகள் புணர்ச்சி விதுப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது. )

இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக் ( ) இளி ்த்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்

கள்ளற்றே கள்வநின் மாார்பு. (08) கள் அற்றே கள்வ நின் மாார்பு.

[தொடரமைப்பு: கள்வ களித்தார்க்கு இளித்தக்க இன்னா செயினும் கள் அற்றே, நின் மாார்பு.]

இதன்பொருள்

கள்வ= வஞ்சகா;

களித்தார்க்கு இளித்தக்க இன்னாசெயினும் கள்ளற்றே= தன்னை உண்டு களித்தார்க்கு இளிவரத்தக்க இன்னாதவற்றைச்

செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய கள்ளுப்போலும்;
நின் மார்பு= எங்கட்கு நின்மார்பு, எ-று.

உரை விளக்கம்

அவ்வின்னாதன- நாண் இன்மை, நிறை இன்மை, ஒழுக்கம் இன்மை, உணர்வு இன்மை என்று இவைமுதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும், எங்களால் மேன்மேல் விரும்பப்படாநின்றது என்பதாம். கள்வ என்றதும் அதுநோக்கி.

# குறள் **1289 (** மலரினுமெல்**)**

**(**உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது. **)**

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன் ( ) மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்

செவ்வி தலைப்படு வார். (09) செவ்வி தலைப்படுவார்.

**[**தொடரமைப்பு**:** காமம் மலரினும் மெல்லிது**,** அதன் செவ்வி தலைப்படுவார் சிலர்.**]**

இதன்பொருள்

காமம் மலரினும் மெல்லிது= காமவின்பம் மலரினும் மெல்லிதாய் இருக்கும்;
அதன்செவ்வி தலைப்படுவார் சிலர்= அங்ஙனம் மெல்லிதாதலை அறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச்சிலர் எ-று.

உரை விளக்கம்

தொட்டதுணையானை மணச்செவ்வி அழிவதாய மலர், எல்லாவற்றினும் மெல்லிது என்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண் வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒருகாலத்தின்கண்ணே ஒத்து நுகர்தற்குரியார் இருவர்,அதற்கு ஏற்ற இடனும் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடி நுகரவேண்டுதலின், 'அதன் செவ்விதலைப்படுவார் சிலர்' என்றும், அவற்றுள் யாதானும் ஒன்றான் சிறிது வேறுபடினும் வாடுதலின், 'மலரினும் மெல்லிது காமம்' என்றும் கூறினான். குறிப்பு ஒவ்வாமையின் யான் அது பெறுகின்றிலேன் என்பதாம். தலைமகள் ஊடல் தீர்வது பயன்.

# குறள் 1290 ( கண்ணிற்)

( இதுவுமது )

கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத () கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்

லென்னினுந் தான்விதுப் புற்று. (10) என்னினும் தான் விதுப்பு உற்று.

**[**தொடரமைப்பு**:** கண்ணின் துனித்தே**,** புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினாள்.**]**

இதன்பொருள்

கண்ணின் துனித்தே= காதலி முன்னொருஞான்று, புல்லல் விதுப்பினாற் சென்ற என்னோடு தன்கண் மாத்திரத்தான் ஊடி; புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினாள்= புல்லுதலை என்னினும்தான் விதும்பலால், அதுதன்னையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள்; அதனால், நான்

இத்தன்மையேன் ஆகவும், விதுப்பின்றி ஊடிநிற்கின்ற இவள் அவள் அல்லள் எ-று.

உரை விளக்கம்

கண் மாத்திரத்தான் ஊடல்- சொல் நிகழ்ச்சி இன்றி அது சிவந்ததுணையே ஆதல். அவளாயின், இங்ஙனம் ஊடற்கண் நீடாள் என்பது பயன்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **130.** நெஞ்சொடு புலத்தல்

அதிகார முன்னுரை

அஃதாவது, காரணம் உண்டாயவழியும் புலக்கக்கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலுமாம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1291 (** அவர்நெஞ்**)**

**(**தலைமகன்கண் தவறு உண்டாயவழியும், புலவிகருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. **)**

அவர்நெஞ் சவர்க்காதற் கண்டு மெவனெஞ்சே ( ) அவர் நெஞ்சு அவர்குக ஆதல் கண்டும் எவன் நெஞ்சே

நீயெமக் காகா தது. (01) நீ எமக்கு ஆகாதது.

**[** தொடரமைப்பு**:** நெஞ்சே**,** அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும்**,** நீ எமக்கு ஆகாதது எவன்**? ]**

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே;

அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும்= அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய்நிற்றல் கண்டு வைத்தும்;

நீ எமக்கு ஆகாதது எவன்= நீ எமக்காய் நில்லாது அவரை நினைத்தற்காரணம் யாது, எ-று.

உரைவிளக்கம்

'அவர்க்காதல்'- அவர் கருதியதற்கு உடம்படுதல். 'எமக்கு ஆகாதது' என்றது, புலவிக்கு உடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக அறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினும் செய்வர், நீ அதுவும் செய்கின்றிலை என்பதாம்.

# குறள் **1292 (** உறாஅதவர்க்**)**

**(**இதுவுமது **)**

உறாஅதவர்க் கண்ட கண்ணு மவரைச் ( ) உறாஅதவர்க் கண்ட கண்ணும் அவரைச்

செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. (02) செறாஅர் எனச் சேறி என் நெஞ்சு.

**[**தொடரமைப்பு**:** என் நெஞ்சு**,** உறாஅதவர்க் கண்ட கண்ணும்**,** செறாஅர் என அவரைச் சேறி.**]**

இதன்பொருள்

என் நெஞ்சு= என் நெஞ்சே;

உறாஅதவர்க் கண்ட கண்ணும்= மேலும் நாம்மாட்டு அன்புடையர் ஆகாதவரை உள்ளவாறு அறிந்தவிடத்தும்;

செறாஅர் எனச் அவரைச் சேறி= நாம் சென்றால் வெகுளார் என்பதுபற்றி நீ அவர் மாட்டுச் செல்லா நின்றாய், இப்பெற்றியது மேலும் ஓர் அறியாமை உண்டோ, எ-று

உரை விளக்கம்

அவரை என்பது, வேற்றுமை மயக்கம். பழங்கண்ணோட்டம் பற்றி வெகுளார் என்பது கந்தாகச் சென்றாய், நீ கருதியது முடியுமோ, எ-று.

# குறள் **1293** ( கெட்டார்க்கு )

**(** இதுவுமது**)**

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ ( ) கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ நெஞ்சே நீ

பெட்டாங் கவர்பின் செலல். (03) பெட்டாங்கு அவர்பின் செலல்.

**[**தொடரமைப்பு**:** நெஞ்சே நீ பெட்டாங்கு அவர்பின் செலல்**,** கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ.**]**

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே;

நீ பெட்டாங்கு அவர்பின் செலல்= என்மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர் மாட்டுச் செல்லுதற்குக் காரணம்;

கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ= கெட்டார்க்கு நட்டார்

உலகத்து இல்லை என்னும் நினைவோ, நின்னியல்போ, கூறுவாயாக, எ-று.

உரை விளக்கம்

என்னை விட்டு அவர்மாட்டுச் சேறல், நீ பண்டே பயின்றது என்பாள் 'பெட்டாங்கு' என்றும், தான் இதுபொழுது மானம் இலள் ஆகலின், 'கெட்டார்க்கு' என்றும் கூறினாள். 'பின்' என்பது ஈண்டு இடப்பொருட்டு, செலவு என்பது ஆகுபெயர். "ஒல்கிடத்து உலப்பிலா உணர்விலார் தோடர்பு" ஆயிற்று (கலித்தொகை, பாலைக்கலி- 25.) நின்தொடர்பு என்பதாம்.

# குறள் 1294 ( இனியன்ன)

(இதுவுமது )

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே ( ) இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் நெஞ்சே

துனிசெய்து துவ்வாய்காண் மற்று. (04) துனி செய்து துவ்வாய்காண் மற்று.

[தொடரமைப்பு: நெஞ்சே, துனி செய்து மற்றுத் துவ்வாய்காண், இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார்.]

இதன்பொருள்

நெஞ்சே= நெஞ்சே;

துனி செய்து மற்றுத் துவ்வாய்காண்= நீ அவரைக் கண்டபொழுதே இன்பம் நுகரக் கருதுவது அல்லது, அவர் தவறுநோக்கி முன் புலவியை உண்டாக்கி அதனை அளவறிந்து பின் நுகரக் கருதாய்;

இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார்= ஆகலான், இனி

அப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடு எ்ண்ணுவார் யார், யானது செய்யேன், எ-று.

உரை விளக்கம்

அப்பெற்றிப்பட்டன- புலக்கும்திறங்கள். 'காண்' என்பது, உரையசை. 'மற்று'- வினைமாற்றின்கண் வந்தது. முன் எல்லாம் புலப்பதாக எண்ணியிருந்து, பின் புணர்ச்சி விதும்பலின், இவ்வாறு கூறினாள்.

# குறள் **1295 (** பெறாஅமை**)**

**(**வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது. **)**

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு **( )** பெறாஅமை அஞ்சும் பெறின் பிரிவு அஞ்சும்

மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. **(05)** அறாஅ இடும்பைத்து என் நெஞ்சு.

**[**தொடரமைப்பு**:** பெறாஅமை அஞ்சும்**,** பெறின் பிரிவு அஞ்சும்**,** என் நெஞ்சு அறாஅ இடும்பைத்து.**]**

இதன்பொருள்

பெறாமை அஞ்சும்= காதலரைப் பெறாத ஞான்று அப்பெறாமைக்கு அஞ்சாநின்றது;

பெறின் பிரிவு அஞ்சும்= பெற்றக்கால் வரக்கடவ பிரிவினை உட்கொண்டு அதற்கு அஞ்சா நின்றது;

என்னெஞ்சு அறாஅ இடும்பைத்து= ஆகலான், என்னெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காத இடும்பையை உடைத்தாயிற்று, எ-று.

உரை விளக்கம்

காதலரைப் பெற்றுவைத்துக் கலவியிழத்தல் உறுதியன்று என்னும் கருத்தான், வாயில் நேர்கின்றாள் ஆகலின், 'பெறாமை அஞ்சும்' என்றும், கலவியாராமையின் இன்னும் இவர் பிரிவராயின், யாது செய்தும் என்பது நிகழ்தலின் 'பெறிற் பிரிவு அஞ்சும்' என்றும், இவ்விரண்டும் அல்லது பிறிதின்மையின் 'எஞ்ஞான்றும் அறாஅ இடும்பைத்து' என்றும் கூறினாள்.

# குறள் 1296 ( தனியே)

( இதுவுமது )

தனியே விருந்து நினைத்தக்கா லென்னைத் ( ) தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்

தினிய விருந்ததென் னெஞ்சு. (06) தினிய இருந்தது என் நெஞ்சு.

**[**தொடரமைப்பு**:** என் நெஞ்சு இருந்தது**,** தனியே இருந்து நினைத்தக்கால்**,** என்னைத் தினிய.**]**

இதன்பொருள்

என்னெஞ்சு இருந்தது= என்னெஞ்சு ஈண்டு இருந்தது;

தனியே இருந்து நினைத்தக்கால்= காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான் தன்னொடு நினைத்தக்கால்;

என்னைத் தினிய= அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பம் செய்தற்கே எ-று.

உரை விளக்கம்

எ◌ம்மாட்டு இருந்தது அன்று, அவர் கொடுமைகளை உட்கொண்டு எனக்கு ஆற்றாமை செய்தற்கே, இன்று

அவைநோக்கி அவரொடு புலத்தற்கு அன்று என்பதாம்.

# குறள் 1297 ( நாணுமறந்)

( இதுவுமது )

நாணுமறந்தே னவர்மறக் கல்லாவென் ( ) நாணும் மறந்தேன் அவர் மறக்கல்லா என்

மாணா மடநெஞ்சிற் பட்டு. (07) மாணா மட நெஞ்சிற் பட்டு.

[தொடரமைப்பு: அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சிற் பட்டு, நாணும் மறந்தேன்.]

இதன்பொருள்

அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சிற் பட்டு= தன்னைமறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என் மாட்சிமை இல்லாதமட நெஞ்சுடனே கூடி;

நாணும் மறந்தேன்= என் உயிரினும் சிறந்த நாண் தன்னையும், மறந்துவிட்டேன், எ-று.

உரை விளக்கம்

மாணாமை- ஒருநிலையின் நில்லாமை. மடமை- கண்டவழி நினைந்து, காணாதவழி மறக்குந் தவற்றைக் காணாவழி நினைந்து கண்டவழி மறத்தல். நாண்- எஞ்ஞான்றும் கூடி ஒழுகினும், அஞ்ஞான்று கண்டார்போன்று ஒடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையும் மறந்தேன் என்றாள்.

# குறள் 1298 (எள்ளினிளி)

( இதுவுமது )

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற ( ) எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி அவர் திறம்

முள்ளு முயிர்க்காத னெஞ்சு. (08) உள்ளும் உயி ர்க் காதல் நெஞ்சு.

[தொடரமைப்பு: உயிர்க்காதல் நெஞ்சு, எள்ளின் இளிவாம் என்று எண்ணி, அவர் திறம் உள்ளும்.]

இதன்பொருள்

உயிர்க்காதல்நெஞ்சு= உயிர்மேல் காதலை உடைய என் நெஞ்சு;
எள்ளின் இளிவு ஆம் என்று எ ண்ணி= நம்மை எள்ளிச்சென்றார் என்று நாமும் எள்ளுவேமாயின், பின் நமக்கு இளிவாம் என்று கருதி;
அவர்திறம் உள்ளும்= அவர் திறத்தினையே நினையாநின்றது, எ-று.

உரை விளக்கம்

எள்ளுதல்- வாயின்மறுத்தல். இளிவு- வழிபடாமையானும், பிரிவாற்றாமையானும், நாணும் நிறையும் முதலிய இழத்தலானும் உளதாவது. திறம்- வாயில்நேர்தலும், வருதலும், கூடலும் முதலாயின. இளிவிற்கு அஞ்சுதலானும், இறந்துபட மாட்டாமையானும், கூடக் கருதாநின்றது என்பதாம்.

# குறள் 1299 (துன்பத்திற் )

( உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது. )

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய ( ) துன்பத்திற்கு யாரே துணை ஆவார் தாம் உடைய

னெஞ்சந் துணையல் வழி. (09) நெஞ்சம் துணை அல்வழி.

**[ தொடரமைப்பு: துன்பத்திற்கு, தாம் உடைய நெஞ்சம் துணை அல்வழி, துணையாவார் யாரே.]**

இதன்பொருள்

துன்பத்திற்கு= ஒருவர்க்குத் துன்பம் வந்துழி, அது நீக்குதற்கு;
தாம் உடைய நெஞ்சம் துணையல்வழி= தாம் உரித்தாகப்பெற்ற தம்முடைய நெஞ்சம் துணையாகாவழி;
துணையாவார் யாரே= வேறுதுணையாவார் ஒருவரும் இல்லை, எ-று.

உரை விளக்கம்

ஈண்டுத் துன்பமாவது, ஊடல் உணர்ப்புவயின் வாராமை. அதற்கு நெஞ்சம் துணையாகாமையாவது, அவளை அன்பிலள் என்று ஒழியாது கூடற்கண்ணே விதும்பல். ஒருதுணையும் இன்மையின், இஃது உற்று விடுதலே உள்ளது என்பதாம்.

# குறள் **1300** (தஞ்சந் )

( இதுவுமது )

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய () தஞ்சம் தமர் அல்லர் ஏதிலார் தாம் உடைய

நெஞ்சந் தமரல் வழி. (10) நெஞ்சம் தமர் அல்வழி.

**[தொடரமைப்பு: தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி,**

ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம்.]

இதன்பொருள்

தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி= தாம் உரித்தாகவுடைய நெஞ்சம், ஒருவர்க்குத் தமர் அல்லாவழி;

ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம்= அயலார் தமர் அல்லராதல் சொல்லவேண்டுமோ, எ-று.

உரை விளக்கம்

பிறள் ஒருத்தியைக் காதலி என்று கருதி, என்நெஞ்சே என்னை வருத்தாநின்றபின், அப்பிறள் புலக்கின்றது எளிது என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **131.** புலவி

அதிகார முன்னுரை

அஃதாவது, இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கருதியவழி, ஒருவரோடு ஒருவர் புலத்தல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1301 (** புல்லாதிரா**)**

**(** வாயிலாகச் சென்ற தோழி**,** தலைமகள் வாயில் நேர்தற்பொருட்டு அவளொடு நகையாடிச் சொல்லியது.**)**

புல்லா திராஅப் புலத்தை யவருறு **( )** புல்லாது இராப் புலத்தை அவர் உறும்

மல்லனோய் காண்கஞ் சிறிது. (01) அல்லல் நோய் காண்கம் சிறிது.

[தொடரமைப்பு: அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம், புல்லாது இராப் புலத்தை.]

இதன்பொருள்

அவர் உறு அல்லல் நோய் சிறிது காண்கம்=அங்ஙனம் புலந்தால் காதலர் எய்தும் அல்லல் நோயினை யாம் சிறிது காணக்கடவேம்; புல்லாது இராஅப் புலத்தை= நீ அவரை விரைந்து சென்று புல்லாதே இத்தொழிலை மேலிட்டுக்கொண்டிருப்பாயாக, எ-று.

உரைவிளக்கம்

'அல்லல் நோய்'- துன்பத்தைச்செய்யும் காமநோய். 'சிறிது' என்றாள், புலவியை நீளவிடலாகாது என்பது பற்றி. 'புலத்தை' என்புழி ஐகாரம், "கடம் பூண்டு ஒருகால் நீ வந்தை" (கலித்தொகை, குறிஞ்சிக்கலி-27) என்புழிப்போல முன்னிலைவினை விகுதி. புலத்தி என்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக்கண்டு அவள்வழியளாய் நின்று, நாமுற்ற வருத்தம் அவரும் சிறிது உற்றறிதல் வேண்டும் என நகையாடி நேர்வித்தவாறு.

# குறள் **1302 (** உப்பமைந்**)**

**(** புலவியொழிந்து வாயில்நேரும் வகை அவள் சொல்லியது.**)**

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது ( ) உப்பு அமைந்து அற்றால் புலவி அது சிறிது

மிக்கற்றா னீள விடல். (02) மிக்கற்றால் நீள விடல்.

[தொடரமைப்பு: புலவி உப்பு அமைந்தற்று, சிறிது

நீளவிடல் அது மிக்கற்று. ]

இதன்பொருள்

புலவி உப்பு அமைந்தற்று= புலவி கலவி இன்பம் செயற்கு வேண்டும் அளவிற்றாதல் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவைய ஆக்கற்கு வேண்டும் அளவிற்றாதல் போலும்;

சிறிது நீளவிடல் அது மிக்கற்று= இனி அதனை அவ்வளவில் சிறிது மிகவிடுதல் அவ்வுப்பு அளவின் மிக்காற்போலும், எ-று.

உரை விளக்கம்

'நீளவிடல்'- அளவறிந்து உணராது, கலவிமேல் எழுந்த குறிப்பு, அழுங்கும் அளவும் செய்தல். சிறிது நீளவிடலாகாது என்றாள், நேர்விக்கின்றாள் ஆகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்று ஆனாற்போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்பம் இன்றாம் என்றமையின், இது பண்புவமை.

# குறள் **1303 (**அலந்தாரை **)**

**(**பரத்தையரிடத்து நின்றும் வந்த தலைமகனொடு தலைமகள் புலந்து சொல்லியது. **)**

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப் ( ) அலந்தாரை அல்லல் நோய் செய்து அற்றால் தம்மைப்

புலந்தாரைப் புல்லா விடல். (03) புலந்தாரைப் புல்லா விடல்.

**[**தொடரமைப்பு**:** தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல்**,** அலந்தாரை அல்லல் நோய் செய்தற்று.**]**

இதன்பொருள்

தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல்= தம்மைப் பெறாது

புலந்தமகளிரைப் புலவிநீக்கிக் கலவாது ஆடவர் சேறல்;
அலந்தாரை அல்லல் நோய் செய்தற்று= பண்டே துன்பமுற்று அழிந்தாரை அதன்மேலும் மிக்கதுன்பத்தினைச் செய்தாற்போலும், எ-று.

உரை விளக்கம்

பிறர்பாற் சேறலின், நும்மைப் பெறாது புலந்து ஊடியிருக்கின்ற பரத்தையரைப் போய்ப் புலவிநீக்கிப் புல்லீராயின், அவர் ஆற்றார் என்பதாம்.

## குறள் **1304** (ஊடியவரை )

**(**இதுவுமது **)**

ஊடி யவரை யுணராமை வாடிய ( ) ஊடியவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. (04) வள்ளி முதல் அரிந்தற்று.

**[**தொடரமைப்பு**:** ஊடியவரை உணராமை**,** வாடிய வள்ளி முதல் அரிந்தற்று.**]**

இதன்பொருள்

ஊடியவரை உணராமை= நும்மோடு ஊடிய பரத்தையரை ஊடல் உணர்த்திக் கூடாது ஒழிதல்;
வாடிய வள்ளி முதல் அரிந்தற்று= பண்டே நீர்பெறாது வாடிய கொடியை அடியிலே அறுத்தாற்போலும் எ-று.

உரை விளக்கம்

நீர் பரத்தையர் இடத்து இராவழி, எம்புதல்வரைக் கண்டு ஆற்றி இருக்கற்பாலமாய யாம், நும்மோடு ஊடுதற்கு உரியம் அல்லம்,

அன்மையின் எம்மை உணர்த்தல்வேண்டா, உரியராய் ஊடிய பரத்தையரையே உணர்த்தல் வேண்டுவது, அதனால் ஆண்டுச் சென்மின் என்பதாம்.

# குறள் **1305 (** நலத்தகை**)**

**(**தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது. **)**

நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை **( )** நலத்தகை நல்லவர்க்கு ஏளர் புலத்தகை

பூவன்ன கண்ணா ரகத்து. (05) பூ அன்ன கண்ணார் அகத்து.

**[**தொடரமைப்பு**:** நலத்தகை நல்லவர்க்கு ஏளர்**,** பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை.**]**

இதன்பொருள்

நலத்தகை நல்லவர்க்கு ஏளர்= நற்குணங்களாற் தகுதியுடையராய தலைவர்க்கும் அழகாவது;

பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை= தம் பூவன்ன கண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவி மிகுதியன்றே, எ-று.

உரை விளக்கம்

சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. தவறு இல்லார்க்கும் புலவி இனிது என்பான், 'நலத்தகை நல்லவர்க்கும்' என்றான். அழகு- இன்பப்பயனைத் தலைப்படுதல். தான் நுகர்ந்த இன்பத்திற்கு ஏதுவாகிய புலவியை, வியந்து கூறியவாறு.

# குறள் **1306 (** துனியும்**)**

( இதுவுமது )

துனியும் புலவியு மி◌்ல்லாயிற் காமங் ( ) துனியும் புலவியும் இல்லாயின் காமம்

கனியுங் கருக்காயு மற்று. (06) கனியும் கருக்காயும் அற்று.

**[**தொடரமைப்பு**:** துனியும் புலவியும் இல்லாயின்**,** காமம் கனியும் கருக்காயும் அற்று.**]**

இதன்பொருள்

முதிர்ந்த கலாம் ஆகிய துனியும், இளைய கலாம் ஆகிய புலவியும் இல்லையாயின்;

காமம் கனியும் கருக்காயும் அற்று= காமம் செவ்விமுதிர்ந்த பழமும் இளங்காயும் பொலும் எ-று.

உரை விளக்கம்

மிக முதிர்ந்து இறும் எல்லைத்தாய கனி, நுகர்வார்க்கு மிகவும் இனிமை செய்யாதாகலின் துனி இல்லையாயின் கனியற்று என்றும், கட்டிளமைத்தாய காய் நுகரும் செவ்வித்து அன்று ஆகலின், புலவி இல்லையாயின் கருக்காய் அற்று என்றும் கூறினான். இவ்விரண்டும் வேண்டும் என்று வியந்து கூறியவாறு.

# குறள் **1307 (** ஊடலினுண்**)**

(இதுவுமது )

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது ( )

நீடுவ தன்றுகொ லென்று. (07)

[தொடரமைப்பு: புணர்வது நீடுவது (கொல்) அன்று கொல் என்று, ஊடலின் ஓர் துன்பம் உண்டு.]

இதன்பொருள்

புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று= இனிப்புணர்ச்சி நீட்டிக்குமோ, நீட்டியாதோ என்று கருதலான்;
ஊடலின் ஓர் துன்பம் உண்டு= இன்பத்திற்கு இன்றியமையாத ஊடலின்கண்ணேயும் ஒருதுன்பம் நிகழும், எ-று.

உரை விளக்கம்

என்று என்னும் எச்சத்திற்குக் கருதலான் என்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது. கொல் என்பதனை நீடுவது என்பதுடனும் கூட்டுக. ஆங்கு என்பது, அசைநிலை. ஊடல், கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு.

## குறள் **1308 (** நோதலெவன்**)**

( உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தலைமகளோடு புலந்து சொல்லியது. )

நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங் ( ) நோதல் எவன் மற்று நொந்தார் என்று அஃது அறியும்

காதல ரில்லா வழி. (08) காதலர் இல்லாவழி.

[தொடரமைப்பு: நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லாவழி, நோதல் மற்று எவன்.]

இதன்பொருள்

நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லாவழி= இவர் நம்பொருட்டாக நொந்தார் என்று, அந்நோவினை அறியும் அன்பு

உடையாரைப் பெறாவழி;
நோதல் மற்று எவன்= ஒருவர் நோகின்றதனால் பயன் என், எ-று.

உரை விளக்கம்

அறிதல்- ஈண்டு ஊடலை இனிது உணர்தல். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. இவள்நம் காதலியல்லள், அன்மையின் இந்நோவு அறியாள், அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயன் இல்லையெனத் தன் ஆற்றாமை உணர்த்தியவாறு.

# குறள் 1309 ( நீருநிழல)

(இதுவுமது )

நீரு நிழல தினிதே புலவியும் ( ) நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. (09) வீழுநர் கண்ணே இனிது.

[தொடரமைப்பு: நீரும் நிழலதே இனிது, புலவியும் வீழுநர் கண்ணே இனிது.]

இதன்பொருள்

நீரும் நிழலதே இனிது= உயிர்க்கு இன்றியமையாத நீரும் நிழலின்கண்ணே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது;
புலவியும் வீழுநர்கண்ணே இனிது= அது போலக் கலவிக்கு இன்றியமையாத புலவியும், அன்புடையார்கண்ணே இனிதாவது, ஏனை அன்பிலார்கண் ஆகாது, எ-று.

உரை விளக்கம்

நிழற்கண் இருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகம் தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் ஆற்றாமைக்கு நோதலும், கூடுதற்கண் வேட்கையும் உடையராவர். இவள், நம்மாட்டு அவ்விரண்டும் இன்மையின், இப்புலவிதானும் இன்னாதாகாநின்றது என்பதாம்.

## குறள் 1310 (ஊடலுணங்க )

( இதுவுமது)

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங் () ஊடல் உணங்க விடுவாரோடு என் நெஞ்சம்

கூடுவே மென்ப தவா. (10) கூடுவேம் என்பது அவா.

[தொடரமைப்பு: ஊடல் உணங்க, விடுவாரோடு கூடுவேம் என்பது என் நெஞ்சம் அவா.]

இதன்பொருள்

ஊடல் உணங்க= தாம் ஊடற்கண்ணே மெலியாநிற்கவும்;
விடுவாரோடு கூடுவேம் என்பது என் நெஞ்சம் அவா= விட்டிருக்க வல்லாரோடு கூடக்கடவேம் என்று என் நெஞ்சம் முயறற்கு ஏது, தன் அவாவே, பிறிதில்லை, எ-று.

உரை விளக்கம்

அன்பும் அருளும் இல்லாதாரை உடையர் என்றும், அவரொடு யாம் கூடுவம் என்றும் கருதி அதற்கு முயறல், அவாவுற்றார் செயல்ஆகலின், 'கூடுவேம் என்பது அவா' என்றாள். காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாது என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **132.** புலவி நுணுக்கம்.

அதிகார முன்னுரை

அது புலவியது நுணுக்கம் என விரியும். அஃதாவது**,** தலைமகனுந் தலைமகளும் ஓர் அமளிக்கண் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரணம் இல்லையாகவும்**,** காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணம் உளதாகவும் உட்கொண்டு அதனை அவன்மேல் ஏற்றி அவள் புலத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1311 (** பெண்ணியலா**)**

**(**உலாப்போய்வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது. **)**

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர் ( ) பெண் இயலார் எல்லாரும் கண்ணில் பொது உண்பர்

நண்ணேன் பரத்தநின் மார்பு. (01) நண்ணேன் பரத்த நின் மார்பு.

**[**தொடரமைப்பு**:** பரத்த **,** பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்**,** நின் மார்பு நண்ணேன்.**]**

இதன்பொருள்

பரத்த= பரத்தமையுடையாய்;

பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்= நின்னைப் பெண் இயல்பின் உடையார் யாவரும் தம் கண்ணால் பொதுவாக உண்பர்;

நின்மார்பு நண்ணேன்= அதனால் அவர் மிச்சிலாய நின் மார்பினைப் பொருந்தேன், எ-று.

உரைவிளக்கம்

கற்பு நாண் முதலிய நற்குணங்கள் இன்மையின் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே என்னும் கருத்தான் பெண்ணியலார் என்றாள். பொதுவாக உண்டல்- தம் சேரிச்செலவின் முறையான் அன்றி, ஒருகாலத்து ஒருங்கு நோக்குதல். அதுவும் ஓர்குற்றம். தான் நோக்கி இன்புற்றவாறே அவரும் நோக்கி இன்புறுவர் என ஆசங்கித்து, அவர்பால் பொறாமை எய்துதலின், நுணுக்கமாயிற்று.

# குறள் **1312 (**ஊடியிருந்தேமா **)**

**(**தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது. **)**

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை ( ) ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம் தம்மை

நீடுவாழ் கென்பாக் கறிந்து. (02) நீடு வாழ்க என்பாக்கு அறிந்து.

[தொடரமைப்பு: ஊடி இருந்தேமாத் தும்மினார், யாம் தம்மை நீடுவாழ்கென்பாக்கு அறிந்து. ]

இதன்பொருள்

ஊடி இருந்தேமாத் தும்மினார்= யாம் தம்மோடு ஊடி உரையாடாது இருந்தேமாகக் காதலர் தும்மினார்;
யாம் தம்மை நீடு வாழ்க என்பாக்கு அறிந்து= அது நீங்கித் தம்மை நீடுவாழ்க என்று உரையாடுவேமாகக் கருதி, எ-று.

உரை விளக்கம்

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற்று என்பதாம். இயல்பான் நிகழ்ந்த தும்மலைக் குறிப்பான் நிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று.

# குறள் **1313** (கோட்டுப்பூ )

(தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு, நீவிர் கூடி ஒழுகாநிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாது என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது. )

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக் ( ) கோட்டுப் பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்

காட்டிய சூடினீ ரென்று. (03) காட்டிய சூடினீர் என்று.

[தொடரமைப்பு: கோட்டுப் பூச் சூடினும், ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று.]

இதன்பொருள்

கோட்டுப் பூச் சூடினும்= யான் கோடுதலைச் செய்யும் மாலையைச் சூடினேன் ஆயினும்;

ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும்= நும்மால் காதலிக்கப் பட்டாள் ஒருத்திக்கு இப்பூவணி காட்டல் வேண்டிச் சூடினீர் என்று வெகுளாநிற்கும், இத்தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ? எ-று.

உரை விளக்கம்

கோடு என்பது, முதனிலைத் தொழிற்பெயர். பூ- ஆகுபெயர். வளையமாகச் சூடினும் என்பதாம். "கோட்டம் கண்ணியும் கொடுந்திரை ஆடையும்" (புறநானூறு, 275.) என்றார் பிறரும். இனி, அம்மருத நிலத்துப் பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேன் ஆயினும், ஈண்டையாள் பிறள் ஒருத்திக்கு அவ்வேற்றுப் பூவணிகாட்டல் வேண்டிச் சூடினீர் என்று வெகுளும் எனினும் அமையும்.

# குறள் **1314 (** யாரினுங்**)**

**(**இதுவுமது **)**

யாரினுங் காதல மென்றேனா வூடினாள் ( )

யாரினும் யாரினு மென்று. (04)

**[**தொடரமைப்பு**:** யாரினும் காதலம் என்றேனா**,** யாரினும் யாரினும் என்று ஊடினாள். **]**

இதன்பொருள்

யாரினும் காதலம் என்றேனா= காமம் நுகர்தற்குரிய

இருவராயினார் யாவரினும் மிக்க காதல் உடையேம் என்பது கருதி யாரினும் காதலம் என்றேனாக;
யாரினும் யாரினும் என்று ஊடினாள்= நின் தோழி அது கருதாது, என்னால் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கண் காதலுடையேன் என்றேனாகக் கருதி, அம்மகளிர் யாரினும் என்கண் காதலுடையர் ஆனீர் என்று சொல்லிப் புலந்தாள், எ-று.

உரை விளக்கம்
தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யான் அன்பு மிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறுபடக்கொண்டதல்லது பிறிது காரணம் இல்லை என்பதாம்.

# குறள் **1315 (** இம்மைப்**)**

**(** இதுவுமது**)**

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக் **( )** இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்

கண்ணிறை நீர்கொண் டனள். (05) கண் நிறை நீர் கொண்டனள்.

**[**தொடரமைப்பு**:** இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**,** கண் நிறை நீர் கொண்டனள்.**]**

இதன்பொருள்
(இதுவும் அது) இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனா= காதல் மிகுதியான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேம் என்று சொன்னேனாக;
கண் நிறை நீர் கொண்டனள்= அதனான் ஏனை மறுமையாகிய பிறப்பின்கண் பிரிவல் என்னும் குறிப்பினேனாகக் கருதி, அவள்

தன் கண்நிறைந்த நீரினைக் கொண்டாள்

உரை விளக்கம்

'வெளிப்படுசொல்லைக் குறிப்புச் சொல்லாகக் கொள்கின்றதல்லது என்பால் தவறில்லை', என்பதாம்.

## குறள் **1316** (உள்ளினேனென் )

( இதுவுமது )

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப் ( ) உள்ளினேன் என்றேன் மற்று என் மறந்தீர் என்று என்னைப்

புல்லாள் புலத்தக் கனள். (06) புல்லாள் புலத்தக்கனள்.

**[**தொடரமைப்பு**:** உள்ளினேன் என்றேன்**,** மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள்.**]**

இதன்பொருள்

உள்ளினேன் என்றேன்= பிரிந்தகாலத்து நின்னை இடையின்றி நினைந்தேன் என்னும் கருத்தால், யான் உள்ளினேன் என்றேன்;
மற்று என்மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள்= என, அதனை ஒருகான் மறந்து பின்நினைந்தேன் என்றதாகக் கருதி, என்னையிடையே மறந்தீர் என்று சொல்லி, முன் புல்லுதற்கு அமைந்தவள் அஃது ஒழிந்து புலத்தற்கு அமைந்தாள், எ-று.

உரை விளக்கம்

மற்று வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்திவகையான் மறத்தலை உட்கொண்டு புலந்தாள் என்பதாம்.

# குறள் **1317 (**வழுத்தினா **)**

**(** இதுவுமது **)**

வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள் ( ) வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்து அழுதாள்

யாருள்ளித் தும்மினீ ரென்று. (07) யார் உள்ளித் தும்மினீர் என்று.

**[**தொடரமைப்பு**:**தும்மினேனாக வழுத்தினாள்**,** அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள். **]**

இதன்பொருள்

தும்மினேனாக வழுத்தினாள்= கூடியிருக்கின்றவள் யான் தும்மினேனாகத் தன் இயற்கைபற்றி வாழ்த்தினாள்;

அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள்= அங்ஙனவாழ்த்திய தானே மறித்து, நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலான் தும்மினீர் என்று சொல்லிப் புலந்து அழுதாள், எ-று.

உரை விளக்கம்

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின், 'அழித்து' என்றான். அன்புடையார் நினைத்தவழி, அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றும் என்பது மகளிர் வழக்கு. இல்வழக்கை உள்வழக்காகக் கருதிப் புலந்தாள் என்பதாம்.

# குறள் **1318 (** தும்முச்செறுப்ப**)**

**(**இதுவுமது **)**

தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள ( ) தும்முச்செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல்

லெம்மை மறைத்திரோ வென்று. (08) எம்மை மறைத்திரோ என்று.

[தொடரமைப்பு: தும்முச் செறுப்ப, நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள்.]

இதன்பொருள்

தும்முச் செறுப்ப= எனக்குத் தும்மல் தோன்றியவழி யாருள்ளித் தும்மினீர் என்று புலத்தலை அஞ்சி, அதனை யான் அடக்கினேன், அங்ஙனம் அடக்கவும்;
நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள்= நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்கல் உற்றீரோ என்று சொல்லிப் புலந்து அழுதாள், எ-று.

உரை விளக்கம்

'தும்மு' என்பது, முதனிலைத் தொழிற்பெயர். 'செறுப்ப' என்புழி, இறந்தது தழீஇய எச்சஉம்மை விகாரத்தான் தொக்கது. 'எம்மை' என்பது, நும்மோடு யாதும் இயைபு இல்லாத எம்மை என்பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகு என்ப. தும்மினும் குற்றம், ஒழியினும் குற்றம் ஆயக்கால் செயற்பாலது யாது என்பதாம்.

# குறள் 1319 (தன்னை )

( இதுவுமது)

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ ( ) தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்கு நீர்

ரிந்நீர ராகுதி ரென்று. (09) இந் நீரர் ஆகுதிர் என்று.

[தொடரமைப்பு: தன்னை உணர்த்தினும் காயும், பிறர்க்கும் இந்நீரர் ஆகுதிர் என்று.]

இதன்பொருள்

தன்னை உணர்த்தினும் காயும்= இவ்வாற்றான் ஊடிய தன்னை, யான் பணிந்து உணர்த்துங்காலும் வெகுளாநிற்கும்;
பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர் என்று= பிறமகளிர்க்கும் அவர் ஊடியவழி, இவ்வாறே பணிந்து உணர்த்தும் நீர்மையை உடையீர் ஆகுதிர் என்று சொல்லி, எ-று.

உரை விளக்கம்

இவள் தெளிவித்தவழியும் தெளியாள் என்பது பற்றி மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன்; பணிய அதுதானும், புலத்தற்கு ஏதுவாய் முடிந்தது, இனி இவள்மாட்டுச் செய்யத்தகுவது யாது என்பதாம்.

# குறள் 1320 ( நினைத்திருந்து)

( இதுவுமது )

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர் () நினைத்து இருந்து நோக்கினும் காயும் அனைத்து நீர்

யாருள்ளி நோக்கினீ ரென்று. (10) யார் உள்ளி நோக்கினீர் என்று.

[தொடரமைப்பு: நினைத்து இருந்து நோக்கினும் காயும், அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று.]

இதன்பொருள்

நினைத்து இருந்து நோக்கினும் காயும்= என் சொற்களும் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றை ஒழிந்திருந்து, தன் அவயவங்களது ஒப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும்;

அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று= என் அவயவம் அனைத்தும் நோக்கினீர், அவற்றது ஒப்புமையான் எம்மகளிரை நினைந்து என்று சொல்லி, எ-று.

உரை விளக்கம்

யான் எல்லா அவயவங்களானும் ஒருத்தியோடு ஒத்தல் கூடாமையின், ஒன்றால் ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும்; அவர் எல்லாரையும் யான் அறியச் சொல்லுமின் என்னும் கருத்தால், அனைத்துநோக்கினீர் யார் உள்ளி என்றாள். வாளாவிருத்தலும் குற்றமாயிற்று என்பதாம்.

# திருக்குறள் காமத்துப்பால்- கற்பியல்

## பரிமேலழகர் உரை

## அதிகாரம் **133.** ஊடல் உவகை

அதிகார முன்னுரை

அஃதாவது, அப்பெற்றித்தாய ஊடலால் தமக்குக் கூடல் இன்பம் சிறந்துழி அச்சிறப்பிற்கு ஏதுவாய அவ்வூடலைத் தலைமகள் உவத்தலும், தலைமகன் உவத்தலும்ஆம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

## குறள் **1321 (** இல்லை**)**

**(**தலைமகள்**,** காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி**,** அங்ஙனம் நீ புலக்கின்றது என்னை என்றாட்கு அவள் சொல்லியது.**)**

இல்லை தவறவர்க் காயினு மூடுதல் ( ) இல்லை தவறு அவர்க்கு

ஆயினும் ஊடுதல்

வல்ல தவரளிக்கு மாறு. (01) வல்லது அவர் அளிக்குமாறு.

[தொடரமைப்பு: அவர்க்குத் தவறுஇல்லையாயினும், அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது.]

இதன்பொருள்

அவர்க்குத் தவறு இல்லையாயினும்= அவர்மாட்டுத் தவறு இல்லையாயினும்;
அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது= நமக்கு அவர் தலையளி செய்கின்றவாறு, அவரோடு ஊடுதலை விளைக்கவற்றாகின்றது, எ-று.

உரைவிளக்கம்

அவர்க்கு என்பது, வேற்றுமை மயக்கம். அளவிறந்த இன்பத்தர் ஆகலின் யான் எய்தற்பாலதாய இத்தலையளி ஒழிந்தாரும் எய்துவர் எனக்கருதி அது பொறாமையான் ஊடல் நிகழாநின்றது என்பதாம்.

# குறள் 1322 (ஊடலிற் )

(புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க, அஃது இழந்து புலவியான் வருந்துவது என்னை என்றாட்கு அவள் சொல்லியது. )

ஊடலிிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி ( ) ஊடலின் தோன்றும் சிறு துனி நல் அளி

வாடினும் பாடு பெறும். (02) வாடினும் பாடு பெறும்.

[தொடரமைப்பு: ஊடலின் தோன்றும் சிறு துனி, நல்லளி

வாடினும் பாடு பெறும்.]

இதன்பொருள்

ஊடலில் தோன்றும் சிறுதுனி= ஊடல் ஏதுவாக நம்கண் தோன்றுகின்ற சிறிய துனி தன்னால்;

நல்லளி வாடினும் பாடுபெறும்= காதலர் செய்யும் நல்ல தலையளி வாடுமாயினும் பெருமை எய்தும் எ-று.

உரை விளக்கம்

தவறின்றி நிகழ்கின்ற ஊடல், கடிதின் நீங்கலின் அத்துன்பமும் நில்லாது என்பாள், 'சிறுதுனி' என்றும், ஆராமைபற்றி நிகழ்தலின், அதனான் நல்லளி வாடாது என்பாள், 'வாடினும்' என்றும், பின்னே பேரின்பம் பயக்கும் என்பாள், 'பாடுபெறும்' என்றும் கூறினாள். அது வருத்தம் எனப்படாது என்பதாம்.

# குறள் **1233** (புலத்தலிற் )

(இதுவுமது )

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு ( ) புலத்தலி ின் புத்தேள் நாடு உண்டோ நிலத்தொடு

நீரியைந் தன்னா ரகத்து. (03) நீர் இயைந்து அன்னார் அகத்து.

[தொடரமைப்பு: நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்துப் புலத்தலின், புத்தேள் நாடு உண்டோ.]

இதன்பொருள்

நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்துப் புலத்தலின்= நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர்

மாட்டுப் புலத்தல் போல;

புத்தேள் நாடு உண்டோ= நமக்கு இன்பந்தருவது ஒரு புத்தேள் உலகமும் உண்டோ, இ◌ல்லை எ-று.

உரை விளக்கம்

நீர், தான் நின்ற நிலத்து இயல்பிற்றாம் ஆமாறுபோலக் காதலரும், தாம் கூடிய மகளிர் இயல்பினர் ஆகலான், அதுபற்றி அவரோடு புலவிநிகழும் என்பாள், 'நிலத்தொடு நீர் இயைந்தன்னாரகத்து' என்றும், அவர் நமக்கும் அன்னர் ஆகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றது என்பாள், 'புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ' என்றும் கூறினாள். உவமம் பயன்பற்றி வந்தது.

# குறள் **1324** (புல்லிவிடா )

( அப்புலவி இனி யாதான் நீங்கும் என்றாட்குச் சொல்லியது.)

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென் ( ) புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும் என்

னுள்ள முடைக்கும் படை. (04) உள்ளம் உடைக்கும் படை.

**[**தொடரமைப்பு**:** புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்**,** என் உள்ளம் உடைக்கும் படை.**]**

இதன்பொருள்

புல்லி விடாப் புலவியுள் தோன்றும்= காதலரைப் புல்லிக்கொண்டு, பின்விடாமைக்கு ஏதுவாகிய அப்புலவிக்கண்ணே உளதாம்;

என் உள்ளம் உடைக்கும் படை= அதன்மேற்சென்ற என் உள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம், எ-று.

உரை விளக்கம்

'புலவியுள்' என்னும் ஏழாவது, வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. 'என்னுள்ளம் உடைக்கும் படை'க்கலம் என்றது, வணக்கத்தையும், பணிமொழியையும். படைக்கலம் என்றாள், அவற்றான் அப்புலவி உள்ளம் அழிதலின். புலவிநீங்கும் திறம் கூறியவாறு.

## குறள் **1325** (தவறில )

**(** தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது.**)**

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ **( )** தவறு இலராயினும் தாம் வீழ்வார் மெல் தோள்

ளகறலி னாங்கொன் றுடைத்து. (05) அகறலின் ஆங்கு ஒன்று உடைத்து.

**[**தொடரமைப்பு**:** தவறு இலராயினும்**,** தாம் வீழ்வார் மென்றோள் அகறலின்**,** ஆங்கு ஒன்று உடைத்து.**]**

இதன்பொருள்

தவறு இலராயினும், தாம் வீழ்வார் மென்றோள் அகறலின்= ஆடவர் தங்கண் தவறு இலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பும் மகளிருடைய மெல்லியதோள்களைக் கூடப்பெறாத எல்லைக்கண்;

ஆங்கு ஒன்று உடைத்து= அவர்க்கு அப்பெற்றியதோர் இன்பம் பயத்தலுடைத்து, எ-று.

உரை விளக்கம்

உடையராயக்கால், இறந்த இன்பத்தோடு வரும் இன்பமும்

எய்துவர் ஆகலின், அது மிகநன்று. மற்றை இலர் ஆயக்காலும், வரும் இன்பத்தை இகழ்ந்தது இல்லை என்னும் கருத்தால், 'தவறு இலராயினும் ஆங்கு ஒன்று உடைத்து' என்றான். ஊடலினாய இன்பம், அளவிறத்தலின், கூறற்கு அரிது என்பான், அப்பெற்றியது 'ஒன்று' என்றான். தவறின்றி ஊடியதூஉம், எனக்கு இன்பம் ஆயிற்று என்பதாம்.

# குறள் **1326 (**உணலினு **)**

**(** இதுவுமது **)**

உணலினு முண்ட தறலினிது காமம் **( )** உணலினும் உண்டது அறல் இனிது காமம்

புணர்தலி னூட லினிது. (06) புணர்தலின் ஊடல் இனிது.

**[**தொடரமைப்பு**:** உணலினும் உண்டது அறல் இனிது**,** காமம் புணர்தலின் ஊடல் இனிது.**]**

இதன்பொருள்

உணலினும் உண்டது அறல் இனிது= உயிர்க்கு மேல் உண்பதனினும் முன் உண்டது அறுதல் இன்பந்தரும்;
காமம் புணர்தலின் ஊடல் இனிது= அதுபோலக் காமத்திற்கு மேற்புணர்தலினும், முன்னைத் தவறுபற்றி ஊடுதல் இன்பந்தரும், எ-று.

உரை விளக்கம்

காமத்திற்கு என்புழிச் சாரியையும், நான்கன் உருபும் விகாரத்தான் தொக்கன. பசித்துண்ணும்வழி, மிக உண்ணலுமாய் இன்சுவைத்துமாம். அதுபோல அகன்று கூடும்வழி,

ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாம் எனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு.

# குறள் 1327 ( ஊடலிற்)

( இதுவுமது )

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும் ( ) ஊடலின் தோற்றவர் வென்றார் அது மன்னும்

கூடலிற் காணப் படும். (07) கூடலில் காணப்படும்.

**[**தொடரமைப்பு**:** ஊடலின் தோற்றவர் வென்றார்**,** அது மன்னும் கூடலில் காணப்படும்.**]**

இதன்பொருள்

காம நுகர்தற்குரிய இருவருள் ஊடலின்கண் தோற்றவர் வென்றார் ஆவர்;

அது கூடலில் காணப்படும்= அஃது அப்பொழுது அறியப் படாதாயினும், பின்னைப் புணர்ச்சியன்கண் அவரால் அறியப்படும், எ-று.

உரை விளக்கம்

தோற்றவர்- எதிர்தல் ஆற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கண் பேரின்பம் எய்தலின் வென்றார் ஆயினார். மன்னும் உம்மும் அசைநிலை. யான் அதுபொழுது சாய்தலின், இதுபொழுது பேரின்பம் பெற்றேன் என்பதாம்.

# குறள் 1328 ( ஊடிப்பெறு)

(இதுவுமது )

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக் ( ) ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல் வெயர்ப்பக்

கூடலிற் றோன்றிய வுப்பு. (08) கூடலில் தோன்றிய உப்பு.

**[**தொடரமைப்பு**:** நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு**,** ஊடிப் பெறுகுவம் கொல்லோ **]**

இதன்பொருள்

நுதல் வெயர்ப்பக் கூடலி்ல் தோன்றிய உப்பு= இதுபொழுது இவள் நுதல் வெயர்க்கும்வகை கலவியின்கண் உளதாய இனிமையை;

ஊடிப் பெறுகுவம் கொல்லோ= இன்னுமொருகால் இவள் ஊடி யாம்பெறவல்லேமோ, எ-று.

உரை விளக்கம்

கலவியது விசேடம்பற்றி 'நுதல் வெயர்ப்ப' என்றான். இனிமை- கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதலான் ஆய இன்பம். இனி அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு.

# குறள் **1329** (ஊடுகமன் )

( இதுவுமது )

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப ( ) ஊடுக மன்னோ ஒளி இழை யாம் இரப்ப

நீடுக மன்னோ விரா. (09) நீடுக மன்னோ இரா.

**[**தொடரமைப்பு**:** ஒளி இழை ஊடுக மன்னோ**,** யாம் இரப்ப இரா நீடுக மன்னோ. **]**

இதன்பொருள்

ஒளியிழை ஊடுகமன் = ஒளியிழையினை உடையாள், இன்னும் எம்மோடு ஊடுவாளாக;

யாம் இரப்ப இரா நீடுகமன்= அங்ஙனம் அவள் ஊடிநிற்றற்கும், அதனை உணர்த்துதல் பொருட்டு யாம் இரந்து நிற்றற்கும், காலம்பெறும் வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டுக எ-று.

உரை விளக்கம்

'ஊடுக' 'நீடுக' என்பன வேண்டிக்கோடற் பொருள். மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஒகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலே அமையும் என்பதாம்.

# குறள் **1330 (**ஊடுதல்காமத் **)**

**(** இதுவுமது **)**

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங் **()** ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்

கூடி முயங்கப் பெறின். **(10)** கூடி முயங்கப் பெறின்.

**[**தொடரமைப்பு**:** காமத்திற்கு இன்பம் ஊடுதல்**,** அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின்.**]**

இதன்பொருள்

காமத்திற்கு இன்பம் ஊடுதல்= காமநுகர்ச்சிக்கு இன்பமாவது,

அதனை நுகர்தற்கு உரியார், ஆராமைபற்றித் தம்முள் ஊடுதல்; அதற்கு இன்பம் கூடி முயங்கப்பெறின்= அவ்வூடுதற்கு இன்பமாவது, அதனை அளவறிந்து நீங்கித் தம்முள் கூடி முயங்குதல் கூடுமாயின் அம்முயக்கம், எ-று.

உரை விளக்கம்

கூடுதல்- ஒத்த அளவினராதல். முதிர்ந்த துனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிது என்பதுபற்றிக் 'கூடிமுயங்கப்பெறின்' என்றான். அவ்விரண்டின்பமும் யான் பெற்றேன் என்பதாம்.

ஈண்டுப் பிரிவினை வடநூன் மதம்பற்றிச் செலவு, ஆற்றாமை, விதுப்பு, புலவி என நால்வகைத்தாக்கிக் கூறினார். அவற்றுள் செலவு பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை, படர்மெலிந்திரங்கன் முதல் நிறையழிதல் ஈறாயவற்றுள்ளும், விதுப்பு, அவர்வயின்விதும்பல் முதல் புணர்ச்சி விதும்பல் ஈறாயவற்றுள்ளும், புலவி, நெஞ்சொடுபுலத்தல் முதல் ஊடலுவகை ஈறாயவற்றுள்ளும் கண்டுகொள்க. அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாபத்தினான் ஆய நீக்கத்தினையும் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாரால் எனின், அஃது, அறம்பொருளின்பம் என்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவு இன்மையானும், முனிவர் ஆணையான் ஒருகாலத்து ஓர் குற்றத்து உளதாவதல்லது உலகு இயல்பாய் வாராமையானும், ஈண்டு ஒழிக்கப்பட்டது என்க.

கற்பியல் முற்றிற்று

## காமத்துப்பால் முற்றிற்று

திருக்குறள் பரிமேலழகர் உரை முற்றுப்பெற்றது

# இந்த மின்னூலைப் பற்றி

உங்களுக்கு இம்மின்னூல், இணைய நூலகமான, விக்கிமூலத்தில் இருந்து கிடைத்துள்ளது[1].

இந்த இணைய நூலகம் தன்னார்வலர்களால் வளருகிறது. விக்கிமூலம் பதிய தன்னார்வலர்களை வரவேற்கிறது. தாங்களும் விக்கிமூலத்தில் இணைந்து மேலும் பல மின்னூல்களை அனைவரும் படிக்குமாறு செய்யலாம்.

மிகுந்த அக்கறையுடன் மெய்ப்பு செய்தாலும், மின்னூலில் பிழை ஏதேனும் இருந்தால் தயக்கம் இல்லாமல், விக்கிமூலத்தில் இம்மின்னூலின் பேச்சு பக்கத்தில் தெரிவிக்கலாம் அல்லது பிழைகளை நீங்களே கூட சரி செய்யலாம்.



இம்மின்னூல் சாத்தியமாவதற்கு பங்களித்தவர்கள் பின்வருமாறு:

---

1. ↑ http://ta.wikisource.org
2. ↑ http://creativecommons.org/licenses/by-sa/3.0/
3. ↑ http://www.gnu.org/copyleft/fdl.html